புதிய
புத்தகம் பேசுது



# அறியப்படாத தமிழ் உலகம்

பரமார்த்தகுருவின கதை.

இந்தியா.
சனிக்கிழமைதோறும் வெளியாகும்.

ஸ்ரீ ஞானபோதயம்

உண்மை விளக்கம்
எனும்
சித்தாந்த தீபிகை.

சமயஞானம் தத்துவஞானம், கலைஞானம், பூதபௌதிக முதலிய சாஸ்திர
இவற்றைப்பற்றி விவகரிக்கும் மாதாந்தப் பத்திரிகை.

1897ஆ மகாராணியாரின் வைர ஜுபிலி தினத்
ஆரம்பிக்கப்பட்டது.

புத்தகம் 1897ஆ ஆகஸ்டுமீ 21உ சனிக்கிழமை.

Facsimile of Siddhanta Deepika, Tamil Monthly Founded on 21st Augus

தேசபக்தன்
தினப்பதிப்பு.
THE DESABAKTAN

ஜநவிநோதிநி.

ஈரோடு தமிழன்பன் | வீ.அரசு | பொ.வேல்சாமி | ய.மணிகண்டன்
பெருமாள்முருகன் | ஆ.சிவசுப்பிரமணியன் | க.பஞ்சாங்கம்
ஆ.தனஞ்செயன் | கமலாலயன் | கீரனூர் ஜாகிர்ராஜா | க.நெடுஞ்செழியன்
மு.ராஜேந்திரன் | இரா.அறவேந்தன் | ஆ.பத்மாவதி | மு.வளர்மதி | ப.சரவணன்
லெனின் மதிவானம் | மு.வையாபுரி | அ.சதீஷ் | இளங்கோ
கல்பனா சேக்கிழார் | இரா.ஜானகி | வெ.ராஜேஷ் | சு.பிரபாவதி
இரா.வெங்கடேசன் | சி.இளங்கோ | மு.நஜ்மா | கு.கலைவாணன்
க.செந்தில்ராஜா | த.தென்னவன் | ர.குமார் | கு.பிரகாஷ் | மா.பரமசிவன்

தொகுப்பாசிரியர்கள்
பா. இளமாறன்
ஜ. சிவகுமார்
கோ. கணேஷ்




# அறியப்படாத தமிழ் உலகம்

## சமூக இடைவெளிகளை இட்டு நிரப்பும் முயற்சி

தொகுப்பு
பா. இளமாறன் | ஐ. சிவகுமார் | கோ. கணேஷ்

புதிய புத்தகம் பேசுது

ARIYAPPADADHA THAMIZH ULAGAM
Samuga Idaiveligalai Ittu Nirappum Muyarchi
Complied by: B. Ilamaran, J. Sivakumar, G. Ganesh
Published: 2011

**Published by**
**Puthiya Puthakam Pusuthu**
*im print of Bharathi Puthakalayam*
421, Anna Salai,
Teynampet, Chennai - 600 018
Email: thamizhbooks@gmail.com
www.thamizhbooks.com

**அறியப்படாத தமிழ் உலகம்**
சமூக இடைவெளிகளை இட்டு நிரப்பும் முயற்சி
தொகுப்பு: பா. இளமாறன், ஜ. சிவகுமார், கோ. கணேஷ்
பதிப்பு: 2011
வெளியீடு
புதிய புத்தகம் பேசுது
421, அண்ணாசாலை, தேனாம்பேட்டை, சென்னை - 600 018.
தொலைபேசி : 044 24332424, 24339024
வெளியிடுபவர்:
க. நாகராஜன்
ஆசிரியர் குழு
இரா. நடராசன் (ஆசிரியர்) ச. தமிழ்ச்செல்வன், கமலாலயன், அ. வெண்ணிலா,
இரா.தெமுத்து, ஆதவன் தீட்சண்யா, வெ. ராஜேஷ், எஸ்.வி. வேணுகோபாலன்,
ரமேஷ் பாபு, முத்தையா வெள்ளையன், கீரனூர் ஜாகிர்ராஜா
நிர்வாகம்
சிராஜுதீன், உத்திரகுமார்




விற்பனை நிலையம்
7, இளங்கோ சாலை, தேனாம்பேட்டை, சென்னை - 600 018 தொலைபேசி: 044 24332924
**திருவல்லிக்கேணி:** 48, தேரடி தெரு | **திருவான்மியூர்:** 1, 100அடி சாலை, தரமணி
**பெரம்பூர்:** 52, கூக்ஸ் ரோடு | **ஈரோடு:** 39, ஸ்டேட் பாங்க் சாலை
**திண்டுக்கல்:** 3சி18, எல்.பி.ஜி. காம்பவுண்ட் | **நாகை:** 1, ஆரியபத்திரபிள்ளை தெரு
**திருப்பூர்:** 447, அவினாசி சாலை | **திருவாரூர்:** 35, நேதாஜி சாலை
**சேலம்:** 36/1 அத்வைத ஆஸ்ரமம்சாலை | **மயிலாடுதுறை:** 147, பட்டமங்கலத் தெரு
**அருப்புக்கோட்டை:** 31, அகமுடையார் மகால் | **புதுக்கோட்டை:** வடக்கு ராஜா வீதி
**மதுரை:** 37A, பெரியார் பேருந்து நிலையம் | **மதுரை:** சர்வோதயா மெயின்ரோடு,
மகபூப்பாளையம் | **குன்னூர்:** N.K.N வணிகவளாகம் பெட்போர்ட்
**செங்கற்பட்டு:**1 டி., ஜி.எஸ்.டி சாலை | **விழுப்புரம்:** 26/1, பவானி தெரு
**திருநெல்வேலி:** 25A, ராஜேந்திரநகர் முதல் தெரு, | **விருதுநகர்:** 131, கச்சேரி சாலை
**கும்பகோணம்:** 352, பச்சையப்பன் தெரு | **வேலூர்:** S.P. Plaza 264, பேஸ் II , சத்துவாச்சாரி
**நெய்வேலி:** பேருந்து நிலையம் அருகில், சிஐடியு அலுவலகம் **தஞ்சாவூர்:** காந்திஜி வணிக
வளாகம் காந்திஜி சாலை LIC கோட்ட அலுவலகம் எதிரில்) தஞ்சாவூர் - 613001.
**தேனி:** 12.பி, மீனாட்சி அம்மாள் சந்து, இடமால் தெரு
**கடலூர்:** புதூர், ஜீவா மார்க்கெட், பழைய அண்ணா பாலம்
**நாகர்கோவில்:** ரப்ஷா காம்ப்ளக்ஸ், தெற்குதோப்பு வணிகர்தெரு, மீனாட்சிபுரம்
**கோவை:** 77, மசக்காளிபாளையம் ரோடு, பீளமேடு
**திருச்சி:** வெண்மணி இல்லம், கரூர் புறவழிச்சாலை
**திருவண்ணாமலை:** முத்தம்மாள் நகர், ITI opp. வேங்கிக்கால்

ரூ. 225/-

அட்டை வடிவமைப்பு, வடிவமைப்பு Spacess
அச்சு : மணிஆப்செட், சென்னை - 5

அரிய ஆவணங்களைச் சேகரிப்பதையே தம் வாழ்நாள் பணியாகக் கொண்ட
**மா.சு. சம்பந்தன்** அவர்களுக்கு...

# உள்ளே...

## ஆளுமைகள்

## துறைகள்



## ஆவணங்கள்

# அறியப்படாத ஆவணங்களிலிருந்து
## சமூக வரலாற்றைத் தேடி...

'புதிய புத்தகம் பேசுது' இதழ் ஆண்டுதோறும் சிறப்பு மலர் ஒன்றை வெளியிட்டு வருகிறது. இந்த வகையான மலர்கள் தமிழியலையும் தமிழ்ச் சமூகத்தையும் புரிந்துகொள்வதற்கான / மீள்வாசிப்பு செய்வதற்கான ஆவணங்களாகத் திகழ்கின்றன. கடந்த இரு ஆண்டுகளில் முறையே 'தமிழ்ப் பதிப்புலகம்' (1800 - 2009), 'தமிழ் நூல் தொகுப்பு வரலாறு' (சங்ககாலம் முதல் சமகாலம் வரை) ஆகிய மலர்கள் வெளிவந்தன. இவை கல்வியாளர்கள் மற்றும் தமிழ்ச் சமூக வரலாற்றில் அக்கறை கொண்டவர்களிடையே பரவலாக வாசிக்கப்பட்டு விவாதிக்கப்பட்டன. அந்த வகையில் இன்னுமொரு சமகால வரலாற்று ஆவணமாக 'அறியப்படாத தமிழ் உலகம்' (சமூக இடைவெளிகளை இட்டு நிரப்பும் முயற்சி) வெளிவருகிறது. கடந்த இரண்டு மலர்களின் வெற்றிக்குக் காரணம் அரிய தரவுகளைச் சமூகவியல் நோக்கில் ஆவணப்படுத்தியமையே. எனவே அடுத்த மலரை அறியப்படாத / அறிய வேண்டிய அரிய தரவுகளைச் சமூகவியல் நோக்கில் ஆவணப்படுத்தும் முயற்சியாகத் திட்டமிட்டோம்.

'அறியப்படாத தமிழ் உலகம்' எனும் தலைப்பை முடிவு செய்யும்போதே யாருக்கு அறியப்படாதது, எந்த வகையில் அறியப்படாதது முதலானவை குறித்த விவாதங்களோடுதான் முடிவு செய்தோம். பல்வேறு புலங்களில் இருந்து பெரிதும் அறியப்படாத ஆளுமைகள், அறியப்பட்ட ஆளுமைகளின் / பனுவல்களின் அறியப்படாத பக்கங்கள் முதலியவற்றைச் சமூகவியல் நோக்கில் ஆவணப்படுத்தும் விதமாக எழுபத்தெட்டுத் தலைப்புகளைத் தெரிவு செய்தோம். இத்தலைப்புகளை மரபிலக்கியங்கள், இலக்கணங்கள், பதிப்புகள், இருபதாம் நூற்றாண்டு இலக்கியங்கள், நாட்டார் வழக்காற்றியல், மானுடவியல், தனிமனித ஆளுமைகள் (இலக்கியவாதிகள் மற்றும் சமூகப் போராளிகள்) எனப் பல்வேறு புலங்களின் குறியீடுகளாக அமைத்துக் கொண்டோம். பேராசிரியர்கள், படைப்பாளிகள், ஆய்வாளர்கள் எனப் பல்வேறு தரப்பினரைத் தொடர்புகொண்டு கட்டுரைகளைப் பெற முயற்சித்தோம். அம்முயற்சியின் விளைவே இம்மலர். இம்மலரில் உள்ள கட்டுரைகள் அறியப்படாத தமிழ் உலகம் குறித்த அறிமுகங்களாக, அரிய ஆவணங்களாக, சமூகவியல் விமர்சனங்களாக பல நிலைகளில் தொடர் வாசிப்பைச் சாத்தியப் படுத்துகின்றன.

மிக நீண்டகாலத் திட்டமிடலோடே இம்மலர் உருவாக்கம் நடைபெற்றபோதும் ஒரு சிலரால் தவிர்க்க முடியாத காரணங்களால் கட்டுரை களைத் தர முடியவில்லை. எனவேதான் இத் தொகுப்பில் சில புலங்கள் சார்ந்த கட்டுரைகள் அதிகமாகவும் சில புலங்கள் சார்ந்த கட்டுரைகள் குறைவாகவும் இடம்பெற்றுள்ளன. எத்துணை நேர்த்தியான, நீண்டகாலத் திட்டமிடலும் கூட முழுமையை நோக்கிய முதலடியாக மட்டுமே அமையும் என்பதைக் கடந்த இரண்டு மலர்களின் அனுபவமும் உணர்த்துகின்றது. இந்த மலரிலும் பேராசிரியப் பெருமக்களோடும் படைப்பாளர் களோடும் ஆய்வு நண்பர்களோடும் இணைந்து நாம் முழுமையை நோக்கிய சில அடிகளை எடுத்து வைக்கிறோம். அடுத்தடுத்த பதிப்புகள் இன்னும் சில அடிகள் நம்மை இட்டுச் செல்லும் என்னும் நம்பிக்கை இருக்கிறது. மேலும் தமிழ்ச் சமூகத்தின் இடைவெளிகளை இட்டு நிரப்பும் இம்முயற்சியின் நிறை குறைகள் குறித்துக் கல்வியாளர்களும் அறிஞர்களும் வாசகர்களும் விவாதித்து எங்களைத் தொடர்ந்து இயங்கச் செய்வார்கள் என்றும் நம்புகிறோம்.

இத்தொகுப்பிற்கு தங்களின் கட்டுரைகளைத் தந்து இம்மலர் வெளிவரத் துணையாய் இருந்த கட்டுரையாளர்கள் அனைவருக்கும்; இத்தொகுப்பு வெளிவர அனைத்து நிலைகளிலும் ஆலோசனை வழங்கிய பேரா. வீ. அரசு அவர்களுக்கும், இத் தொகுப்பில் இடம்பெற்றுள்ள அரிய ஆவணங்களையும் குறிப்புகளையும் தந்துதவிய அ. சதீஷ், கமலாலயன் ஆகியோருக்கும், எங்களின் முயற்சிகளுக்கு உறுதுணையாக இருந்து ஊக்கப்படுத்தி வரும் கவிஞர் ஈரோடு தமிழன்பன், பொ. வேல்சாமி, பேரா. பெருமாள்முருகன், பேரா. கி. நாச்சிமுத்து ஆகியோருக்கும் எங்கள் மனமார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறோம். மேலும் இந்நூல் வெளிவர தட்டச்சு, பிழைதிருத்தம், வடிவமைப்பு எனப் பல்வேறு நிலைகளில் உதவி புரிந்த அனை வருக்கும் எங்கள் நன்றியை உரித்தாக்குகிறோம்..

# செங்கோட்டை ஸ்ரீ ஆவுடை அக்காள்



மு. நஜ்மா

சென்னைப் பல்கலைக்கழகத் தமிழ் இலக்கியத்துறையில் 'சங்க இலக்கியங்களில் தமிழர் இனவரைவியல் மரபு' என்ற தலைப்பில் முனைவர்பட்ட ஆய்வினை மேற்கொண்டு வருகிறார். மாற்றுவெளி இதழ் ஆசிரியர் குழுவில் ஒருவர்.

தமிழில் தோன்றிய சமய இலக்கியங்களை வைதிகம் X அவைதிகம் என்னும் இரு பெரும் எதிர்மைகளுக்குள் அடக்கிவிடமுடியும். வைதிக சமயம் ஒவ்வொரு காலச்சூழலுக்கேற்ப பழைய தத்துவங்களைப் புதுப்பித்துக்கொண்டும் புதிய தத்துவங்களை உள்வாங்கிக்கொண்டும் தன்னைத் தகவமைத்துக் கொண்டு வந்துள்ளது. கி.பி. எட்டாம் நூற்றாண்டில் வாழ்ந்த ஆதிசங்கரரின் அத்வைதக் கோட்பாடு அவ்வாறு உருவாக்கப்பட்ட ஒன்று. இது வைதிகச் சமய வரலாற்றில் குறிப்பிடத்தக்க புலமைப் பாரம்பரியத்தை உருவாக்கியது. தமிழில் உருவான அத்வைத இலக்கியப் பரப்பில் 'செங்கோட்டை ஸ்ரீ ஆவுடை அக்காள்' பற்றிய பதிவுகள் குறைவாகவே உள்ளன. பெண்சார்ந்த பதிவுகள் வரலாற்றில் மழுங்கடிக்கப்பட்ட சூழலில் ஆவுடை அக்காள் குறித்த இந்தப் பதிவு அவசியமாகின்றது.

திருநெல்வேலி மாவட்டம் செங்கோட்டையைச் சேர்ந்தவர் ஆவுடை அக்காள். அவருடைய காலம் கி.பி. பதினேழாம் நூற்றாண்டு ஆகும். இவர் பிராமண சாதியைச் சேர்ந்தவர். இளம் வயதிலேயே திருமணமாகி விதவையானவர். பருவம் எய்திய பின்பு அவருக்குக் கட்டாய விதவைக் கோலம் பூணப்பட்டது. 'விதவை' என்பது குறித்த சிந்தனையற்ற வயதில் கணவனை இழந்ததும் காலம் கடந்து தன்னுடைய நிலையை உணர்ந்ததும் அவர் வாழ்வை திசை திருப்பியது. ஆவுடை அக்காள் ஆன்மீக வாழ்வில் ஈடுபடலானார். அவருடைய குருவாகத் தஞ்சை மாவட்டத்து திருவிசைநல்லூரைச் சேர்ந்த வேங்கடேச ஸ்ரீதர அய்யர் விளங்கினார். இவர் 'ஸ்ரீதர அய்யர்வாள்' என அறியப்பட்டவர். அத்வைதக் கருத்துக்களை ஆவுடை அக்காளுக்குப் போதித்தவர். இதன் விளைவாக இவர் பல வேதாந்தப் பாடல்களைப் பாடியுள்ளார். தன்னுடைய குருவின் ஆணைப்படி தீர்த்த யாத்திரை மேற்கொண்டு பின்பு தன்னுடைய ஊருக்கே மீண்டும் வந்து அத்வைதக் கருத்துக்களைப் போதித்து வந்தார். குற்றால மலையின் மீது சென்ற ஆவுடை அக்காள் பின்பு மீண்டு வரவில்லை. அவர் உடலும் காணப்பெறவில்லை என்று அவரைப்பற்றிய செய்திகளை அவர்தம் வாழ்க்கைக் குறிப்புகளிலிருந்து அறிய முடிகிறது.

ஆவுடை அக்காளின் பாடல்கள் குறித்து இலக்கிய வரலாற்று நூல்களில் காணப்பெற வில்லையெனினும் வாய்மொழி வழக்காறுகளில் காணப்படுகின்றன. இவர்தம் பாடல்களை நெல்லை மாவட்டத்தில் குறிப்பாகச் செங்கோட்டை, ஆம்பூர், கடையம், சாம்பூர், வடகரை, ஆழ்வார் குறிச்சி, கல்லிடைக் குறிச்சி முதலிய பகுதிகளில் பிராமணப் பெண்கள் கர்ண பரம்பரையாகக் கேட்டு திருவிழாக் காலங்களிலும் திருமணத்தின் போதும் பாராயணப் பாடல்களாகவும் பஜனைப் பாடல்களாகவும் பாடிவருகின்றனர். அந்தணர் குல விதவைப் பெண்கள் ஆவுடை அக்காள் பாடல்களைத் தினமும் மதிய வேளைகளில் கூடிப் பாடி துயரை ஆற்றிக்கொள்ளும் வழக்கமும் இருந்து வருகின்றது.

ஆவுடை அக்காள் பற்றிய பதிவுகள் பரவலாக அறியப்படவில்லை எனினும் பிராமணர் சாதியைச் சேர்ந்த சிலர் தம்முடைய வட்டத்திற்குள் வைத்திருந்தனர். ஆவுடை அக்காள் பாடல்கள் பத்தொன்பதாம் நூற்றாண்டில் தொகுக்கப்பட்டு சிறு சிறு வெளியீடுகளாக வெளிவந்தன. 1890இல் தஞ்சாவூர் திருவாதியில் ஸ்ரீ வைத்தியநாத பாரதி என்பவர் அக்காளுடைய சில தொடர் பாடல்களையும் சிறு பாடல்களையும் நூலாக வெளியிட்டார். 1910இல் இராமசந்திர தீட்சிதர் 'பிரம்மம் ஏகம்' எனும் பகுதியினையும் வாழ்க்கைக் குறிப்பினையும் சேர்த்து வெளியிட்டுள்ளார். சிறு சிறு பகுதிகளாக வெளியான பாடல்களையும் மேலும் தொகுக்கப்பட்ட பாடல்களையும் சேர்த்து ஆய்க்குடி வெங்கடராம சாஸ்திரியார் 1953ஆம் ஆண்டு வெளியிட்டார். 2002ஆம் ஆண்டு நித்யானந்த சுவாமிகள் 'ஆவுடை அக்காள் பாடல் திரட்டு' என்னும் தலைப்பில் செம்பதிப்பாக வெளியிட்டுள்ளார்.

ஆவுடை அக்காள் பாடல்களையும் வாழ்க்கைக் குறிப்புகளையும் தொகுத்ததில் கோமதி ராஜாங்கம் (1908-1992) என்பவரின் பங்கு குறிப்பிடத்தக்கதாகும். திருநெல்வேலி மாவட்டம் கடையம் பகுதியைச் சேர்ந்த கோமதி ராஜாங்கம் ஆவுடை அக்காள் பற்றிய குறிப்புகளைச் செங்கோட்டை, சுந்தர பாண்டியபுரம், சாம்பூர் வடகரை, ஆம்பூர், ஆழ்வார்குறிச்சி, கல்லிடைக்குறிச்சி, முன்னீர் பள்ளம், நாகர்கோவில், வடவீச்சுரம் முதலிய பகுதிகளில் பல ஆண்டுகளாகக் களஆய்வு மேற்கொண்டு திரட்டினார். சென்னை ஸ்ரீ ராமகிருஷ்ண மடத்திலிருந்து வெளிவரும் 'ஸ்ரீ ராமகிருஷ்ண விஜயம்' என்னும் இதழில் ஆவுடை அக்காள் வரலாற்றை எழுதியுள்ளார். மீண்டும் 1964இல் (நவம்பர்) 'ஸ்ரீ சங்கரக்ருபா' என்னும் இதழில் 'ஸ்ரீ ஆவுடை அக்காள்' என்ற பெயரில் சரித்திரக் குறிப்புகளையும் 1965இல் (நவம்பர்) சூடாலைக்கதை மற்றும் ஸ்ரீ வித்தை சோபனம் என்னும் பகுதியினையும் பின்பு 1966இல் சூடாலைக்கும்மியையும் விளக்கங்களுடன் எழுதியுள்ளார்.

1904 ஜனவரி மாதம் 'விவேக சிந்தாமணி' இதழில் ஆவுடை அக்காளின் பகவத்கீதை வசனம் என்னும் ஸ்ரீ பகவத் கீதா ஸாரஸங்கிரஹம் என்னும் தொடர் பாடல் காணப்படுகிறது. 1940களில் 'இண்டியன் இல்லஸ்டிரேட் வீக்லி' என்னும் ஆங்கில இதழில் 'ஸிஸ்டர் ஆவுடை' என்ற தலைப்பில் கட்டுரை வெளிவந்ததாகவும் அதைத் தான் படிக்க நேர்ந்ததாகவும் கோமதி ராஜாங்கம் குறிப்பிட்டுள்ளார் (2002: xix). ரிஷிகேசம் ஸ்ரீ சிவானந்த ஸரஸ்வதி சுவாமிகள்

மஹாத்மாக்கள் சரித்திரங்கள் என்ற நூலில் ஆவுடை அக்காளின் வரலாற்றை எழுதியுள்ளார் எனும் குறிப்பு 2002ஆம் ஆண்டு பதிப்பில் காணக்கிடைக்கிறது. 2002ஆம் ஆண்டு மார்ச் மாதம் 'கலைமகள்' இதழில் "செங்கோட்டை ஞானி ஆவுடையக்கா எனும் தலைப்பில் மு. ஸ்ரீநிவாசன் கட்டுரை ஒன்றை எழுதியுள்ளார். இதில் அவர்தம் பாடற்சிறப்புகளை எடுத்துக்காட்டியுள்ளார். அறியப்படாத தமிழ் இலக்கிய வரலாறு (2004) என்னும் நூலில் சு. வேங்கடராமன் 'ஆவுடையக்காள் வேதாந்தப் பாடல் திரட்டு' என்னும் தலைப்பில் இவரைப் பற்றிய குறிப்புகளையும் பாடற்சிறப்புகளையும் விளக்கமாக எழுதியுள்ளார். இவருடைய இக்குறிப்புகளை அடிப்படையாகக் கொண்டு பெண்மொழி இயங்கியல் (2010) என்னும் நூலில் மகாராசன் 'தமிழில் பெண்மொழி மரபு வெள்ளிவீதியார் முதல் ஆவுடையக்கா வரை' என்ற தலைப்பில் சில செய்திகளைக் குறிப்பிட்டுள்ளார். இவ்வாறு பத்தொன்பதாம் நூற்றாண்டு வரை பிராமண சாதி வட்டத்திற்குள் மட்டும் புழங்கப்பட்டு வந்த ஆவுடை அக்காள் பாடல்கள் இருபதாம் நூற்றாண்டு இறுதிக்காலத்தில் பரவலாக அறியப்பட்டன.




செம்பதிப்பாகக் கூறப்படும் நித்யானந்தர் பதிப்பித்த பாடல்திரட்டில் கீழ்க்கண்ட பாடல்கள் இடம்பெற்றுள்ளன.

1. பண்டிதன் கவி 2. அத்வைத மெய்ஞான ஆண்டி 3. வேதாந்த அம்மானை 4. வேதாந்த ஆச்சே போச்சே 5. மனம் புத்தி ஸம்வாதம் அன்னே பின்னே எனும் வேதாந்தஸார பிரத்தியோத்திரக் கும்மி 6. மெய் பொய் விளக்கம் 7. சூடாலை கதை 8. சூடாலைக் கும்மி 9. வேதாந்த கும்மி 10. கோலாட்ட பாட்டு 11. வேதாந்த ஞான ரஸ கப்பல் 12. வேதாந்த கப்பல் 13. கண்ணிகள் 14. குரு 15. கிளிக் கண்ணி 16. குயில் கண்ணி 17. பராபரக்கண்ணி 18. பிரம்மம் ஏகம் 19. ஸ்ரீ தக்ஷிணாமூர்த்தி படனம் 20. அத்வைத ஏலேலோ 21. வேதாந்தப் பள்ளு 22. வேதாந்த நொண்டிச் சிந்து 23. ஞானக்குறவஞ்சி நாடகம் 24. வாலாம்பிகை பந்து 25. ஸ்ரீ வித்தை சோபனம் 26. அனுபோக ரத்னமாலை (அனிருத்த மாலை) 27. ஞானரஸக் கீர்த்தனைகள் (74) 28. வேதாந்த வண்டு 29. பிரம்ம ஸ்வரூபம் 30. அத்வைத தாலாட்டு 31. தொட்டில் பாட்டு 32. ஊஞ்சல் 33. பகவத்கீதை வசனம் என்னும் ஸ்ரீ பகவத்கீதா ஸாரஸங்கிரஹம் 34. ஸ்ரீமத் பகவத்கீதாஸாரம் 35. மங்களம்.

ஆவுடை அக்காளின் வாழ்க்கைக் குறிப்புகளும் பாடல்களும் அவர் வாழ்ந்த சமூகச் சூழலைத் தெளிவாக விளக்குகின்றன. அவர்தம் வாழ்க்கைக் குறிப்புகளிலிருந்தும் அது சார்ந்து கட்டப்பட்ட தொன்மங்களிலிருந்தும் ஆவுடை அக்காளைப் புரிந்துகொள்வதை விட அவர் பாடிய பாடல்களுக்குள்ளிருந்து புரிய முற்படுவது சரியானதாக இருக்கும். ஆவுடையக்காளின் பாடற்பொருண்மைகளைக் கீழ்க்கண்டவாறு பகுத்துக் கொள்ளலாம்.

- சைவ வைணவ ஒருமைப்பாடும் அத்வைதக் கோட்பாடுகளும் உள்ளடங்கிய வேதாந்தம்.

- குரு சீடர் நிலையில் தனக்கும் குருவிற்குமான உறவு, வேதாந்த நிலையடைவதில் குருவின் பங்கு.

- பெண்களுக்கு முக்தி இல்லை என்று கூறும் வைதிக சமயத்திற்குள்ளிருந்து பெண் முக்தி அடைவதற்கான வழிகாட்டுதல்.

- ஆண் பெண் எனும் பாகுபாடுகளைத் தாண்டிய பால்நிலையற்ற அத்வைதம்.

- சமூகப் படிநிலைக் காரணிகளில் ஒன்றான சாதி சார்ந்த மேல் X கீழ் பாகுபாடுகளைக் கடந்த சமதர்மம்

கி.பி. பதினேழாம் நூற்றாண்டில் பிறந்த ஆவுடையக்காள் அத்வைத வேதாந்தக் கருத்துக்களடங்கிய பாடல்களைப் பாடியுள்ளார். தமிழில் அத்வைத வேதாந்த இலக்கியங்களின் வரவு கி.பி. பதிமூன்றாம் நூற்றாண்டிலிருந்து தொடங்குகிறது. 'அத்வைதத்தை அறிவாளிகள் வேதாந்தம் (Scholastic Vedanta) என்றும்,

ஆவுடை அக்காள் பாடிய வேதாந்தம் சைவ வைணவத்தை உள்ளடக்கிய அத்வைத வேதாந்தம். சிவன் வேறு, திருமால் வேறு என்ற நிலை தாண்டி இரண்டும் ஒன்று எனவும் அது பிரம்மமாக உயிராக உள்ளது எனவும் மாயையை நீக்கினால் உயிர் பிரம்மமாகும் எனவும் தன் தத்துவ நிலைப்பாட்டினைப் பாடியுள்ளார்.

பொதுமக்கள் வேதாந்தம் (Popular Vedanta) என்றும் இரண்டு வகையாகத் தெ.பொ.மீ. குறிப்பிடுகின்றார்.

'ஆதிசங்கரர் விளக்கிய வேதாந்தம் அனைவராலும் புரிந்துகொள்ள முடியாது. அது அறிவாளிகள் வேதாந்தம். பொதுமக்கள் வேதாந்தம் என்பது சாதாரண மக்களுக்குப் புரியுமாறு நடைமுறை வாழ்க்கைக்கும் சமுதாயத் தேவைக்கும் ஏற்ப ஜனசமூகம் முழுமைக்கும் பொருந்துவதாக உள்ள கருத்தாக்கம் என விளங்கிக் கொள்ளலாம்' என்கிறார் சு.வேங்கடராமன் (2004: 50). பொதுமக்கள் வேதாந்தம் என்னும் கருத்துநிலை பட்டனார், தத்துவராயரைத் தொடர்ந்து ஆவுடையக்காளிடம் காணப்படுகின்றது. பாடிய வேதாந்தம் சைவ வைணவத்தை உள்ளடக்கிய அத்வைத வேதாந்தம். சிவன் வேறு, திருமால் வேறு என்ற நிலை தாண்டி இரண்டும் ஒன்று எனவும் அது பிரம்மமாக உயிராக உள்ளது எனவும் மாயையை நீக்கினால் உயிர் பிரம்மமாகும் எனவும் தன் தத்துவ நிலைப்பாட்டினைப் பாடியுள்ளார்.

'உன்தெய்வ மென்தெய்வமென் றுழன்றதும்
போரும் போரும்
தன்னுள் தெய்வமென்றெண்ணி
தானாயிருப்பதை பாரும் பாரும்'
(பிரம்மம் ஏகம், 2002 : 94)

'சிவபூஜை விஷ்ணுபூஜைகள் அடியோ ஸகி
செய்துவந்த பலன் தானோடி'

(ஞானரஸ கீர்த்தனை, 2002 : 209)

என்று பாடியுள்ளார்.

சமயத் தூய்மையைப் பேணிவந்த முதல்கட்ட பக்திக்காலம் மிகவும் இறுக்கமானதாக இருந்தது. இரண்டாம் பக்திக்காலமான கி.பி. 1318ஆம் நூற்றாண்டுகளில் பேரரசுகளின் வீழ்ச்சி, முகலாயர் படையெடுப்பு, இஸ்லாமியர் வருகையையொட்டி நிகழ்ந்த மதமாற்றம் ஆகியவற்றால் ஏற்கனவே இருந்த சமயங்கள் தம் இறுக்கங்களைத் தளர்த்தி மக்கள் செல்வாக்கைத் திரட்ட வேண்டிய அவசியத்தில் இருந்தன. சைவ வைணவமாகப் பிரிந்து கிடக்கும் சமூகத்திற்குள் ஒருமைப்பாடு தேவைப்பட்டது. இந்தச் சூழலில் அத்வைதம் முன்னெடுக்கப்பட்டது. இரண்டையும் ஒன்றுபடுத்துவதாகக் கூறிய அத்வைதம் சைவ வைணவத்தை உள்ளடக்கி விஸ்வரூபம் எடுத்தது. சைவ வைணவ ஒருமைப்பாட்டையொட்டி தமிழ்நாட்டுக் கோயில்களில் சிவன் திருமால் இணைந்த சங்கர நாராயண வடிவம் திருமேனிகளாக வைக்கப்பட்டன. திருமால் மைத்துனனாக உமையருகே நிறுத்தப்பட்டான். இது குறித்த விரிவான தகவல்களை சு. வேங்கடராமன் தன் நூலில் (2004) பேசியுள்ளார். இவ்வாறு பரவலாக்கப்பட்ட அத்வைதக் கோட்பாடுகள் ஆவுடையக்காள் பாடல்களிலும் விளக்கமுற்றன. பண்டிதன் கவி என்னும் பாடலின் கடவுள் வாழ்த்தில்,

'பார்வதியார் திருமகனே பரமேச்வரனார்
புத்திரரே
பண்டாலிலையில் பள்ளிகொண்டார்
மருமகனே' (2002: 1)

என்று கணபதியைத் திருமாலின் மருமகனாகப் பாடியுள்ளார்.

ஆவுடையக்காள் வாழ்க்கையினை மடைமாற்றம் செய்ததில் அவருடைய குருவிற்கு முக்கியப் பங்கு உண்டு. பண்டிதன் கவி என்னும் பாடலில் குரு தனக்கு அருளியவற்றைத் தனது தோழிக்குச் சொல்வது போலப் பாடியுள்ளார்.

'நெடுநாளாய் அகழில் கிடந்த என்னை
விடுவித்து விடுதலை கண்டாப்போல்
தீப்பட்டமாளிகையில் அகப்பட்ட பேர்களை
கையைபிடித்து வெளியேற்றி விட்டாப்போல்
ஆற்றிலே பெருகிவரும் ஜலத்தில்
அமிழ்ந்துவரும் பேர்களை
கையை பிடித்து கரையேற்றி விட்டாப்போல்
சோகமென்னுமிந்த வடவாமுகாக்கினியில்
பற்றி தீப்படுகிற வேளையிலே
கிருபையினாலே உத்தாரணம்
பண்ணிவைத்தீர்கள், ஈதொன்றே
போறாதோ?' (2002: 6)

என்று தன் வாழ்வைக் காப்பாற்றிக் கொடுத்ததாகப் பாடியுள்ளார். ஞானம் பெறுவதற்குக் குரு அவசியம் எனவும் அந்தக் குரு பொய்யில்லாதவனாக இருக்கவேண்டும் எனவும் பாடியுள்ளார். இவருடைய குரு ஒருமுறை மாவிலை கொண்டு பல்தேய்த்து அதைத் தூக்கியெறிய அதே மாவிலையை எடுத்து ஆவுடை வாயில் வைத்துக்கொண்டதாகவும் இதை வினவச் சென்ற குருவிடம் "சித்தம் தெளிந்தவர் சேடம் பருகிடின் முத்தியாம்" என்று பதிலளித்தாராம் (2002: xiv). இது அவருடைய சரித்திரக் குறிப்பில் உள்ளது. ஆவுடையின் இது போன்ற செயல்கள்

## செங்கோட்டை ஸ்ரீ ஆவுடை அக்காள்

**(பக்தி, யோக, ஞான, வேதாந்த, ஸமரஸ)**
**பாடல் திரட்டு**

ஆத்மார்த்தமாக விளக்கப்படுகிறது. குரு - சீடர் நிலையில் உள்ள புனிதத்தன்மை விளக்கப்பட்டாலும் ஆவுடையக்காள் மீறல் சார்ந்த சில நடவடிக்கைகளுக்காகச் சமூகத்தினரால் இழிவாகக் கருதப்பட்டுள்ளார் என்பதை

'உள்ளிருக்கும் ஜோதி ஒளியை விசாரியாதே
கள்ள அவிசாரி என்று கவிசொல்லுவார்
கண்டத்தி லாத்மாவை கண்டு விசாரியாதே
வண்ட அவிசாரி என்று வைவார்'
(பராபரக்கண்ணி, 2002 : 92)

என்னும் பாடல் விளக்குகிறது. பெண்களின் தன்னிச்சையான போக்கு எக்காலத்தும் அங்கீகரிக்கப்பட்டதில்லை. அதிலும் ஆவுடை விதவை எனும்போது இது போன்ற இழிவுகளைச் சந்தித்தாக வேண்டிய சூழல் இருந்தது.

ஆவுடை இளம் வயதிலேயே விதவைக்கோலம் பூண்டதும் சமூகம் அவரை இழிவுபடுத்தியதும் பெண் எனும் காரணத்தால் தன்னுடைய வேதாந்தப் பாடல்களில் பாலின சமத்துவத்தைப் பாட விழைந்தார். பெண் எனும் காரணத்தால் முக்தி இல்லை என்னும் போக்கிற்கு முரணாக உடல் என்பது ஆணும் அல்ல, பெண்ணும் அல்ல. அது பிரம்மம் என்ற ஏகநிலையுடைத்து என்கிறார். சூடாலைக் கும்மியில் மனைவியே குருவாக நின்று கணவனை ஆன்மீக வழிநடத்துவதாகப் பாடியுள்ளார்.

'ஆணென்றும் பெண்ணென்றும் மலைந்து
திரிந்ததும் போச்சே
அசையாமல் ஞானஸ்தலத்தி லிருக்கவுமாச்சே'
(வேதாந்த ஆச்சே போச்சே, 2002 : 26)

என்கிறார். தன்னுடைய தத்துவார்த்த விவாதங்களைத் தாய் மகளுக்கிடையிலான உரையாடலாகப் பிரத்திரக்கும்மியில் பாடியுள்ளார். மதவாதிகளைச் சாடுவதும் சாதிபேதங்களைத் தூற்றுவதும் பெண்குரலாகவே உள்ளது. சோபனப் பாட்டில் பாடும் பெண்கள், கும்மியடிக்கும் பெண்கள், மூத்த பள்ளி, இளைய பள்ளி என்று ஆவுடையக்காள் பாடல்களில் பெண்குரல் மிகுதியாக உள்ளது. பெண்ணைக் கீழாகக் கருதும் காரணிகளில் ஒன்று 'தீட்டு'. தீட்டு எனும் சிந்தனைக்கு எதிரான கருத்துக்களை மிக விரிவாகப் பாடியுள்ளார். தீட்டு என்று எதைச் சொல்லி விலக்குகிறாயோ அந்த தீட்டையே தொட்டிலில் முத்துகிறாய் என்றும் உள்ளே இருக்கும் தீட்டு மூன்று நாள் கழிந்ததும் விட்டுப்போமோ என்பதை,

காமதீட்டுரைந்து கைக்குழந்தையாயிருந்து
ஆமையைப்போலே முழுக சுத்தியாச்சோ
(பராபரக்கண்ணி, 2002 : 91)

தீட்டென்று மூன்று நாள்
வீட்டைவிட்டு விலகி
திரிந்துவிட்டு சித்கனத்தை மறந்து மதியிழந்து
நாலாநாள் உதயத்தில் நன்றாயுடல் முழுகி
நடுவீட்டில் வந்திருப்பாய் நான் சுசி
என்றுரைத்து
தீட்டென்றும் பெண்ணினுடைய
தேகத்துக்குள்ளிருக்க
தேகமேல் முழுகிவிட்டால்
தீட்டோடிப்போமோ
(ஞானக்குறவஞ்சி நாடகம், 2002 : 145)

என்றும் பாடியுள்ளார். "தமிழ் இலக்கிய மரபில் இப்படியான பெண் மொழியையும் (பெண்ணின் மாதவிலக்கு அது தீட்டு என்பவை) அதை எதிர்த்துப் பெண் எழுப்பும் கலகக் குரலையும் ஆவுடையக்காள் பாட்டில்தான் முதன் முதலாகக் கேட்கிறோம்" என்கிறார் சு. வேங்கடராமன் (2004: 111).

பிராமணர் சாதி பெண்ணான ஆவுடையக்காள் சாதி, வர்ணம், குலம், கோத்திரம் ஆசிரமாதிகள் யாவும் பொய்யடா என்கிறார். மேலும் "ஜாதி வர்ணாசிரமங்கள் நாறும் உடல்தன்னை நானென்ற மூடர்க்கு நகைத்துக் கும்மியடி'' என்றும்

ஆவுடையக்காளின் வேதாந்தப் பாடல்கள் தன் சுய அனுபவங்களை உள்ளடக்கியதாகவும் தன்னுடைய வாழ்க்கைச் சீரழிகளுக்குக் காரணமான சமூகக்காரணிகளைச் சாடுவதாகவும் உள்ளன. இளம் விதவை வாழ்க்கை தரும் துன்பங்களுக்கான வடிகாலாக ஆவுடை ஆன்மீகத்தைத் தேர்வு செய்தார். அவருடைய குருவின் அரவணைப்பும் அத்வைத வேதாந்தம் தரும் அரவணைப்பும் ஆவுடையைச் சிறந்த அத்வைத ஞானியாக்கியது.

பாடியுள்ளார். சாதி வர்ணாசிரமும் போச்சே என்பதோடு வேத சாஸ்திரங்களும் வெறும் பேச்சே என்கிறார். அத்வைத அனுபவ நிலையின் கீழ் இதுபோன்ற பிரிவினைகள் எதுவும் இல்லை என்கிறார். சாதிபேதங்களைச் சாடும் ஆவுடையக்காள் ஊர்க்காரர்களால் சாதிப்பிரஷ்டம் (சாதி விலக்கு) செய்யப்பட்டவர் என்பது குறிப்பிடத்தக்கது.

சாதி குறித்து எதிர்ப்புக் குரல் எழுப்பிய ஆவுடை சூடாலைக் கும்மியில் அத்வைத ஞானம் புகட்டும் அரசி "வர்ணாசிரமங்கள் தப்பாமல் அவள் வல்லமையாக நடத்திவந்து" என்று வர்ணாசிரம நெறிப்படி வாழ்பவளாகக் காட்டியுள்ளார். மேலும் ஞானக்குறவஞ்சி நாடகத்தில் தான் குறப்பெண்ணாக இருந்து கைப்பிடித்தது தீட்டு என்று கூறும் பெண்ணொருத்திக்குத் தீட்டைப் பற்றி விரிவான மறுமொழி கூறுகிறாள். சாதித்தீட்டுக்கு முரணிய கருத்துடைய அதே குறத்தி தன்னுடைய சாதியைப்பற்றிக் கூறும்போது

ஒரு குலத்தில் பெண்கொடுத்து
ஒரு குலத்தில் கொள்ளோம்
உறவு வைத்தால் விடமாட்டோம்
உயர்குறவர் நாங்கள்
(ஞானக்குறவஞ்சி நாடகம், 2002 : 146)

என்று குலப்பெருமை பேசுவது முரணாக உள்ளது.

ஆவுடை அக்காளின் வேதாந்தப் பாடல்கள் தன் சுய அனுபவங்களை உள்ளடக்கியதாகவும் தன்னுடைய வாழ்க்கைச் சீரழிவுகளுக்குக் காரணமான சமூகக்காரணிகளைச் சாடுவதாகவும் உள்ளன. இளம் விதவை வாழ்க்கை தரும் துன்பங்களுக்கான வடிகாலாக ஆவுடை ஆன்மீகத்தைத் தேர்வு செய்தார். அவருடைய குருவின் அரவணைப்பும் அத்வைத வேதாந்தம் தரும் அரவணைப்பும் ஆவுடையைச் சிறந்த அத்வைத ஞானியாக்கியது.

அதனை அடிப்படையாகக் கொண்டு பல பாடல்களைப் பாடியுள்ளார். அவருடைய பாடல் மொழி வாய்மொழி மரபை ஒட்டியது. பூடகமாகப் பேசும் பரிபாஷைகளை அவர் புறந்தள்ளிவிட்டு நினைத்ததை வெளிப்படையாக அனைவருக்கும் புரியும் மொழியில் பாடியுள்ளார். பாடல்களுக்கு அவர் எடுத்துக்கொண்ட வடிவமும் பொதுமக்கள் இலக்கிய வடிவமான நாட்டார் வழக்காற்று வடிவங்கள். எனவே ஆவுடையக்காளின் நோக்கம் தான் மட்டும் ஞானம் பெறுவது என்பதல்ல. தான் கண்ட ஞான அனுபவங்களைப் பொதுமக்கள் வேதாந்தமாகப் பகிர்ந்து கொள்வது என்பதையே நோக்கமாகக் கொண்டுள்ளார். ஆவுடையக்காள் பாடல்களைத் தொகுத்த கோமதி ராஜாங்கத்தின் தாயார் பாரதி மனைவி செல்லம்மாளின் உடன்பிறந்த சகோதரி ஆவார். எனவே ஆவுடை பற்றிய செய்திகளைப் பாரதி வழியாகவும் தான் தெரிந்து கொண்டதாகக் குறிப்பிட்டுள்ளார் (2002: xix). பாரதி ஆவுடை பாடல்களை விரும்பிக் கேட்பார் எனவும் ஆவுடையக்காள் பாடல்களின் தாக்கம் பாரதியின் வேதாந்தப் பாடல்களில் உள்ளன என்றும் கோமதி குறிப்பிடுகின்றார். எனவே பாரதிக்கு முன்னோடியாக ஆவுடை கருதப்படுகிறார். ஆவுடை அக்காளைப் பதிவு செய்வது அவசியமாகிறது.

**துணைநூற்பட்டியல்**


1. செங்கோட்டை ஸ்ரீ ஆவுடை அக்காள் பாடல்திரட்டு, நித்யானந்த கிரி ஸ்வாமிகள் (பதிப்), ஸ்ரீ ஞானாநந்த நிகேதன், விழுப்புரம், 2002.
2. அறியப்படாத தமிழ் இலக்கிய வரலாறு, சு.வேங்கடராமன், மீனாட்சி புத்தக நிலையம், 2004.
3. பெண்மொழி இயங்கியல், மகாராசன், தோழமை வெளியீடு, சென்னை, 2010.




# காலின் மெக்கன்சி (1754-1821)

## தென்னிந்திய வரலாறெழுதியலுக்கான தேடல்




தே. சிவகணேஷ்

சென்னைப் பல்கலைக்கழகத் தமிழ் இலக்கியத்துறையில் 'தமிழியல் வரலாறு: மெக்கன்சி சுவடிகள்' என்ற தலைப்பில் முனைவர்பட்ட ஆய்வினை மேற்கொண்டு வருகிறார். மாற்றுவெளி இதழ் ஆசிரியர் குழுவில் ஒருவர். இவரின் நூல்: The collected papers on classical Tamil Literature In the Journal of Tamil Culture


ஐரோப்பியர்களுடைய வருகையின் ஊடாக இந்தியக் கல்விப்புலத்தில் மிகப் பல துறைகள் உருவாகி பல நிலைப்பட்ட மாற்றங்கள் நிகழ்ந் துள்ளன. ஐரோப்பியக் கல்விப் பின்புலத்தில் இந்தியாவிற்கு வருகை தந்த அறிஞர்கள் பலர் இங்கிருந்த அரசியல், பொருளாதார, பண்பாட்டுத் தளங்களின் மீது தங்களின் ஐரோப்பிய காலனிய கண்ணோட்டத்தின் அடிப்படையில் பல்முனைப் பட்ட ஆய்வுகளை நிகழ்த்தியுள்ளனர். இவ் வாய்வுகள் ஐரோப்பியர்களை இம்மண்ணில் நிலைகொள்ளச் செய்திருக்கின்றன. இதற்காகவே முதன்மையாக இவ்வாய்வுகள் முன்னெடுக் கப்பட்டன என்றபோதிலும் இவற்றைத் தாண்டி நம் அரசியல், பொருளாதார பண்பாட்டுப் போக்குகளில் அவை மிகப்பெரிய அளவில் வினையை நிகழ்த்தியுள்ளன.

இன்றைய எல்லா நிலையிலான சமூக நடைமுறைகளுக்கும் அடிப்படைகளை அவை உருவாக்கித் தந்துள்ளன. குறிப்பாக, நம் சமூகத்துக்கான வரலாற்றைக் கட்டமைப்பதில் ஐரோப்பியர்களின் ஆய்வும் அணுகுமுறையும் நம்முடைய மொழி, இனம், பண்பாடு போன்ற பல்வேறு கூறுகளில் இருந்த தனித்துவத்தை அடையாளப்படுத்தியிருக்கின்றன. தமிழ்ச் சமூகத்துக்கான இன்றைய வரலாற்று மீட்டுருவாக்கம் என்பது இதன்வழியாக நிகழ்ந்தவையே. எனினும் அவ்வரலாற்றை வலிமைப் படுத்துவதற்கும் நேர்செய்வதற்குமான தேவை தொடர்ந்து நீடித்து வருகின்றது. பலவகைப் பட்ட தரவுகளின் வழியாகவே இது நிகழ்வுறும். அத்தகையத் தரவுகளைக் காலின் மெக்கன்சியினுடைய சுவடி, கல்வெட்டு, செப்பேடு, வரைபடம், நாணயம் உள்ளிட்ட பல வகையிலான தொகுப்புகள் கொண்டிருக்கின்றன. மெக்கன்சி குறித்தும், அவர் மேற்கொண்ட தொகுப்புகள் குறித்தும் எக்கண்ணோட்டத்தின் அடிப்படையில் அத்தொகுப்புகள் மெக்கன்சியால் மேற் கொள்ளப் பட்டன என்பது குறித்தும் தெளிவுபடுத்துவதாக இக்கட்டுரை அமையும்.



### காலின் மெக்கன்சி

ஸ்காட்லாந்தில் உள்ள லூவித் தீவில் பிறந்தவர். தந்தையின் பெயர் மர்டாக் மெக்கன்சி, தாயார் பெயர் பார்பரா மெக்கன்சி, மனைவியின் பெயர் பெட்ரோ னெல்லா ஜாகோயினா பார்டேல்ஸ். கி.பி. 1783இல் மெக்கன்சி தன்னடைய 29ஆவது வயதில் இந்தியாவிற்குப் புறப்படுகிறார். கி.பி. 1784இல் சென்னை மாகாண கிழக்கிந்தியப் படையின் பொறியாளராக நியமனம் பெறுகிறார். கி.பி. 1796 வரை கிழக்கிந்தியப் படையின் பல்வேறு போர் நடவடிக்கைகளில் ஈடுபடுகிறார். குறிப்பாக, திருவரங்கப்பட்டினத்தில் திப்பு சுல்தானுக்கு எதிரான கிழக்கிந்தியக் கம்பெனியின் போரில் ஒரு படைப்பிரிவின் தலைவராகச் செயல்படுகிறார். கி.பி. 1799இல் திப்பு சுல்தானைக் கிழக்கிந்தியக் கம்பெனியின் படை வெற்றிகொண்ட பிறகு மெக்கன்சி முழுநேர நில அளவையாளர் பணியில் ஈடுபடுகிறார். கி.பி. 1806 வரையில் தக்காணத்தின் புவியியல் அமைப்பை ஆய்வுக்கு உட்படுத்தி படம் வரையும் பணியில் ஈடுபடுகிறார். கி.பி. 1810இல் சென்னை மாகாணத் தலைமை நில ஆய்வாளராகப் பொறுப்பேற்கிறார். கி.பி. 1811இல் கிழக்கிந்தியக் கம்பெனி ஜாவா தீவிற்குப் படையெடுத்தது. அப்படையெடுப்பில் மெக்கன்சி தலைமைப் பொறியாளராகப் பணியாற்றுகிறார். கி.பி. 1813இல் மீண்டும் இந்தியா திரும்பிய மெக்கன்சி நில அளவைப் பணியில் ஈடுபடுகிறார். சென்னை மாகாணம் மற்றும் ஜாவாவில் மெக்கன்சியின் ஒழுங்கு படுத்தப் பட்ட நில அளவையைக் கருத்தில் கொண்டு கிழக்கிந்தியக் கம்பெனி இந்தியாவின் தலைமை நில ஆய்வாளராக மெக்கன்சியை கி.பி. 1818இல் நியமனம் செய்கிறது. இந்தியத் தலைமை நில ஆய்வாளராகப் பணியாற்ற கல்கத்தாவிற்குச் சென்ற மெக்கன்சிக்கு அச்சமயத்தில் உடல்நலக் குறைவு ஏற்படுகிறது. தன்னுடைய 67ஆவது வயதில் கி.பி. 1821இல் ஹுக்ளி நதிக்கரையில் மெக்கன்சி மரணமடைகிறார்.

### தொகுப்புப் பணி

தன்னார்வத்தின் அடிப்படையில் தொல்பொருள் தொகுப்புப் பணியில் ஈடுபட்ட மெக்கன்சி அலுவலகப் பணியினூடாகத் தொகுப்புப் பணியை மேற்கொள்கிறார். கி.பி. 1817ஆம் ஆண்டில் மெக்கன்சி தன்னுடைய நண்பரான அலெக்சாண்டர் ஜான்ஸ்டன் அவர்களுக்கு எழுதியிருக்கும் கடிதத்தின் மூலமாகத் தான் மிக விரிவான அளவில் தொகுப்புப் பணியில் ஈடுபட்டிருப்பதன் நோக்கம் குறித்தும் அத்தொகுப்புகளின் வழியாகத்

தென்னிந்திய வரலாற்றினை எத்தகைய வகையில் கட்டமைக்க முடியும் என்ற கருதுகோளினையும் வெளிப்படுத்துகிறார். "இந்தியாவில் 1783 முதல் 1796 வரைக்குமான என்னுடைய 13 ஆண்டுகால தொடக்க வாழ்வில் இந்துக்களுடைய வரலாறு, பழக்கவழக்கங்கள் தொடர்பாகக் கண்டுணர்ந்தவற்றைச் சேகரிக்கத் தொடங்கினேன். மேலும் சேகரித்த ஆவணங்களுக்கு வலுசேர்க்கும் வகையில் அமைந்த பிற ஆவணங் களையும் சேகரித்தேன். இவ்வாறே சேகரிப்பு விரிவடைந்தது. ஆனாலும், கிழக்கிந்தியப் படைப்பணியில் முழுவதுமாக ஈடுபடவேண்டிய சூழல் உருவானது. இது தொகுப்புப் பணியின் வேகத்தைக் குறைத்தது.



ஆனாலும், இத்தீபகற்பத்தில் வழங்கப்படும் பல்வேறு மொழிகளின் தன்மைகள் குறித்து அறிய வேண்டிய எண்ணம் தொடர்ந்து இருந்தது. அதற்கு உகந்தாற்போல் கிழக்கிந்தியப் படையும் ஓரிடத்தில் நிலையில்லாத வகையில் தொடர்ச் சியான இடமாற்றத்தைச் செய்து கொண்டிருந்தது. கிடைத்த ஓய்வு நேரங்கள் அனைத்தையும் இதற்காகச் செலவிட்டேன்." (1834:pg. 334) என மெக்கன்சி தன் தொகுப்புப் பணி குறித்து குறிப்பிட்டிருப்பதைக் காணமுடிகிறது. மேலும், "கிருஷ்ணா நதிக்குத் தெற்கில் உள்ள எல்லாப் பகுதியிலும் நான் பயணித்தேன். நான் கண்ட பல்வேறு விஷயங்கள் குறித்து பின்னர் ஆராய வேண்டும் என்ற எண்ணமும் இப்பகுதியில் வாழும் மக்களின் பழக்கவழக்கங்கள் குறித்து விரிவான புரிதலைப் பெறவேண்டும் என்ற எண்ணமும் உருவானது. 1796இல் நான் இலங்கையிலிருந்து மீண்டும் வந்த பிறகே இம்முயற்சி வேகம் கொண்டது. இம்முயற்சியின் விளைவாகத் தென்னிந்திய அமைப்பு வரலாறு மற்றும் அதன் தொல்பொருட்கள் குறித்த மிக ஆழமான புரிதலை என்னால் பெறமுடிந்து." (1834, pg. 334) என்று தன் பயணம் மற்றும் சேகரிப்பின் வாயிலாகப் பெற்ற தென்னிந்திய வரலாறு குறித்த புரிதலைப் பதிவு செய்கிறார்.

"15 மொழிகளில் 24 வரி வடிவங்களில் தரவுகள் சேகரிக்கப்பட்டன. தற்கால வரி வடிவம் மட்டுமல்லாமல் பண்டைய சாசனம் மற்றும் கல்வெட்டுகளிலிருந்தும் தரவுகள் திரட்டப்பட்டன. இவை இந்துக்கள் குறித்த அறிவைப் பெறுவதற்குப் புதிய மார்க்கத்தை உருவாக்கியது. வெங்கட போரியா மற்றும் அவருடைய சீடர்கள் உதவியுடன் சிறிது சிறிதாக இந்த மாகாணம் முழுமைக்கான தேடலும் தரவுத்தொகுப்பும் தொடர்ந்து நடந்து வருகிறது. என்னுடைய திட்டத்தின் அடிப்படையில் இந்நிலப்பகுதிக்கான புவியியலமைப்பு, புள்ளி விவரங்கள் மற்றும் வரலாற்றினை முறைப்படி உருவாக்க வேண்டும் என்பதே என் நோக்கமாக உள்ளது" (1834, pg.336) என்று தான் கொண்டிருந்த திட்டம் குறித்துத் தெரியப்படுத்துகிறார்.

"என்னுடைய தொகுப்புப் பணிக்குக் கிழக்கிந் தியக் கம்பெனி பொருளுதவி வழங்காத நிலையில் என்னுடைய சொந்த பொருட்செலவில் தொகுப்புப் பணியை மேற்கொள்ள முடிவெடுத்துச் செயல்பட்டு வருகிறேன். இதில் என்னுடைய உதவியாளர்களின் பங்கு பெரிதும் உள்ளடங்கியிருக்கிறது. இத் தொகுப்பும் ஆய்வும் மேற்கொண்டதன் அடிப்படையில் தெளிவாக அறியப்பட்ட செய்தி யாதெனில் இரண்டு மலைத் தொடர்களுக்குக் கீழே அமைந்துள்ள நிலப்பகுதிக்கான வரலாற்றுத் தெளிவைப் பெறமுடியும் என்பதே. இதனை நிறைவேற்றுவதற்கான தரவுகள் மிகப்பல அளவில் அதிகரிக்கத் தொடங்கின." (1834, pg. 338 ) இவற்றின் அடிப்படையில் கீழக்காணும் வகையிலான பொருண்மைகள் குறித்த விரிவான புரிதலைப் பெறமுடியும்.

1. சமண மதத்தையும் அதன் தத்துவம் மற்றும் மேன்மையையும் கண்டறிதல்.

2. பண்டைய கால பல்வேறு வகைப்பட்ட மதங்கள் குறித்தும் அதன் உட்பிரிவுகள் குறித்தும்

கண்டறிதல். உதாரணமாக, லிங்காயத் சைவம், பண்டாரம், மடங்கள் போன்றவை.

3. தாமிரம் மற்றும் கல்லில் பொறிக்கப்படும் சாசனம் மற்றும் கல்வெட்டின் தன்மை அதன் பயன்பாடு குறித்து அறிதல். இவை இந்துக்களைப் பற்றி அறிவதற்கு முதன்மையான தரவாக அமையும். எனவே இதன் முக்கியத்துவம் கருதி கி.பி. 1800 வரைக்குமான கால கட்டத்திற்குள்ளாகவே சுமார் 3000 நம்பத்தகுந்த கல்வெட்டுகள் சேகரிக்கப்பட்டன.

4. கன்னியாகுமரி முதல் டெல்லி வரைக்குமான நிலப்பகுதியில் கிடைக்கப்பெற்ற ஏராளமான நினைவுக் கற்கள் மற்றும் அடையாளச் சின்னங்கள் தொகுக்கப்பட்டுள்ளன. இவை வீரக்கல் என்றும் மாஸ்தி கல் என்றும் அழைக்கப்படுகின்றன. இவை பண்டைய கால மனிதர்களுடைய வாழ்க்கை முறையை எடுத்துக்காட்டும் விதமாக அமைந்துள்ளன. அநேகமாய் இது மேற்கத்திய நாடுகளுடன் ஒப்பிடும் வகையில் அமைந்துள்ளன.

5. பழங்குடிகளுடைய சில நடவடிக்கைகள் அடக்கம் செய்யும் முறை போன்றவை ஆசிய மற்றும் ஐரோப்பா கண்டம் முழுமைக்கும் ஒப்புமையுடையதாகவே உள்ளன. இவை பல்வேறு தொல்பொருட்களின் வாயிலாக வெளிப்பட்டுள்ளன." (1828:pg. XI) என்று அவர் பதிவு செய்திருப்பதன் அடிப்படையில் மேற்கண்ட பொருண்மைகள் குறித்து விரிவாக ஆராயும் திட்டத்தினைக் கொண்டவராக மெக்கன்சி செயல்பட்டிருப்பது தெரிய வருகிறது. குறிப்பாக, சமண சமயம் குறித்தும் பழங்குடிகள் குறித்தும் தன் முதன்மையான கவனத்தைச் செலுத்தியிருக்கிறார் என்பதை அவர் தொகுத்த சுவடிகளின்வழி அறிய முடிகின்றது. உதாரணமாக, சமண சமயம் குறித்து மெக்கன்சி சேகரித்த சுவடிகளின் பட்டியல் கீழ்வருமாறு அமைகின்றது.

- சமண மதத்திலிருந்து உண்டான மதங்கள் (D. 3418)
- சமண மதத்திலிருந்து சாங்கியம் முதலானவை தோன்றிய வரலாறு (D. 3143)
- சமண மதத்திலிருந்து சைவ, பௌத்த, வைணவ மதங்கள் உண்டான வரலாறு (D. 3126)
- சைன ஊர்களின் அட்டவணை (D. 2743)
- சைன கண வரலாறு (D. 3042)
- சைன கணோத்பத்தி வரலாறு (D. 3032)
- சைன சம்ஹார சரித்திரம் (D. 3078)
- சைன பண்டிதர் வரலாறு (D. 2977)
- சைன புத்தகங்களின் அட்டவணை (D. 3417)
- சைன மதப் பூர்வாபர கர்ம அட்டவணை (D. 2975)
- சைன மதயுகப் பிரவயக் கைபீது (D. 3441)
- சைண மார்க்க விரோதி மன்னர் வரலாறு (D. 2973)
- சைன முனீசுவரர் கவீசுவரர்கள் பெயரும் காலமும் (D. 3419)
- சைன முனீசுவர் சந்ததியும் அவரது கிரந்த ஜாபிதாவும் (D. 2792)
- சைன முனீசுவரர் சந்ததி விவரம் (D. 2996)
- சைனர்கள் வரலாறும் ஜினாலயங்கள் அறுபத்தாறின் பெயரட்டவணையும் (D. 3185)
- சைனர்கள் பூர்வகருமமும் அபகருமமும் (D. 3145)
- சைனர்கள் விண்ணப்பம் (D. 2997)
- சைனாலயங்களின் ஜாபிதா (D. 3002)

(அடைப்புக் குறிக்குள் உள்ள எண் சுவடியின் எண்ணைக் குறிக்கும்) எனச் சமண சமயம் குறித்து மெக்கன்சி தொகுத்த சுவடிகளின் பட்டியல் நீள்கிறது. இச்சுவடிகள் மிக விரிவான அளவில் சமண சமயத்தின் மீதான வரலாற்றுப் புரிதலைத் தருவதாக உள்ளன. இதுபோன்றே பழங்குடிகள் வம்சாவளி, தலபுராணம், வட்டார வரலாறுகள், கல்வெட்டுகள், பட்டயங்கள், தாமிர சாசனங்கள், வரைபடங்கள், நாணயங்கள் போன்ற பல வகையிலான தரவுகள் மிக விரிவான நிலையில் தொகுக்கப்பட்டுள்ளன. இவை அனைத்தையும்

ஆய்வுக்கு உட்படுத்துகிறபொழுது, தென்னிந்தியாவைப் பற்றிய மிக விரிவான வரலாற்றினைப் புதிய தளத்தில் கட்டமைக்க முடியும் என்ற நம்பிக்கையைக் கொண்டவராக மெக்கன்சி இருந்திருக்கிறார் என்பதை அறிய முடியும். எதிர்பாராத நிலையில் கி.பி. 1821இல் அவரின் மரணம் காரணமாக அவரின் தொகுப்புகளை முன்வைத்த வரலாற்று உருவாக்கப்பணி தொடங்காமலேயே போனது.

கி.பி. 1822இல் கிழக்கிந்தியக் கம்பெனி மெக்கன்சி சேகரித்த தொகுப்புகளை அவரின் மனைவியிடமிருந்து விலைக்கு வாங்கிகொள்கிறது. அத்தொகுப்புகளுக்கான விளக்க அட்டவணையைத் தயாரிக்கும் பணியைக் கிழக்கிந்தியக் கம்பெனி எச்.எச். வில்சனிடத்தில் ஒப்படைக்கிறது. அட்டவணையில் கீழ்க்காணும் வகைமையில் மெக்கன்சியின் தொகுப்புகள் உள்ளன என்று வில்சன் பட்டியலிடுகிறார்.

**இலக்கியம்**

| மொழி | வரிவடிவம் | சுவடிகளின் எண்ணிக்கை |
|---|---|---|
| சமஸ்கிருதம் | தேவநாகரி | 115 |
| ” | நந்திநாகரி | 103 |
| ” | தெலுங்கு | 285 |
| ” | கன்னடம் | 28 |
| ” | துளு | 10 |
| ” | மலையாளம் | 10 |
| ” | கிரந்தம் | 96 |
| ” | வங்காளம் | 02 |
| ” | ஒரிசா | 18 |
| ” | பழைய கன்னடம் | 14 |
| தமிழ் | தமிழ் | 274 |
| தெலுங்கு | தெலுங்கு | 176 |
| | பழைய கன்னடம் | |
| | கன்னடம் | 144 |
| கன்னடம் | கன்னடம் | 32 |
| | கன்னடம்(சமணர்கள்) | |
| | கன்னடம் | 31 |
| மலையாளம் | மலையாளம் | 06 |
| ஒரிசா | ஒரிசா | 23 |
| மராத்தி | மராத்தி | 16 |
| இந்தி | தேவநாகரி | 20 |
| பெர்சியன் மற்றும் அரபிக் | | |
| நாஷாலிக் மற்றும் பிற | | 114 |
| இந்துஸ்தானி | | 08 |
| ஜாவானீஸ் | ஜாவானீஸ் | 37 |
| பர்மன் | பர்மன் | 06 |
| | மொத்தம் | 1568 |

(பொருள் அடிப்படையிலான பட்டியலும் உள்ளது. விரிவு கருதி தரப்பெறவில்லை.)

வில்சனுடைய அட்டவணையில் (pgXXII) மொத்த இலக்கியச் சுவடிகளின் எண்ணிக்கை 1568 என்று சரியாகக் குறிப்பிடப்பட்டுள்ளது. ஆனால் 'காலின் மெக்கன்சி வரலாறும் சுவடிகளும்' எனும் நூலில் கணக்கிடப்பட்டு 1488 சுவடிகள்தான் உள்ளன என்று குறிப்பிடப்பட்டுள்ளது.

**வட்டார வரலாறுகள்**

| நாடு | மொழி | தொகுதி | எண்ணிக்கை |
|---|---|---|---|
| தெலுங்கு | தெலுங்கு கன்னடம் மற்றும் பல | 64 | 462 |
| திராவிடம் | தமிழ் | 43 | 358 |
| | தனிநிலை மாவட்டங்கள் தெலுங்கு மற்றும் பல | 69 | 619 |
| மைசூர் | தமிழ் மற்றும் கன்னடம் | 20 | 147 |

> தென்னிந்தியாவைப் பற்றிய மிக விரிவான வரலாற்றினைப் புதிய தளத்தில் கட்டமைக்க முடியும் என்ற நம்பிக்கையைக் கொண்டவராக மெக்கன்சி இருந்திருக்கிறார். எதிர்பாராத நிலையில் கி.பி. 1821இல் அவரின் மரணம் காரணமாக அவரின் தொகுப்புகளை முன்வைத்த வரலாற்று உருவாக்கப்பணி தொடங்காமலேயே போனது.

| | | | |
|---|---|---|---|
| கன்னட கடற்கரை | தமிழ் மற்றும் கன்னடம் | 09 | 115 |
| மலையாளம் | தமிழ், தெலுங்கு மற்றும் பல | 19 | 274 |
| மராத்தி | மராத்தி | 40 | 95 |
| | மொத்தம் | 264 | 2070 |

கல்வெட்டுகள் 8076, மொழிபெயர்ப்பு 2156, திட்டங்கள் 79, வரைபடங்கள் 2630, நாணயங்கள் 6218, உருவங்கள் 106, தொல்பொருட்கள் 40 என வில்சனின் அட்டவணை பதிவு செய்கிறது. இதன் பிறகு மெக்கன்சியின் தொகுப்புகளுக்கு விரிவான அறிக்கை அளிக்கும்படி வில்லியம் டெய்லர் ஆணையிடப்படுகிறார். அதனைத் தொடர்ந்து ஆறு அறிக்கைகளை அவர் தமிழ், தெலுங்கு, கன்னடம், மலையாளம், மராத்தி சமஸ்கிரும் என்ற முறையில் அம்மொழிகளிலுள்ள சுவடிகள் குறித்த செய்திகளைத் தொகுத்து வெளியிடுகிறார்.

மெக்கன்சியின் தொகுப்புகள், அத்தொகுப்புகளுக்கு உருவாக்கப்பட்ட அட்டவணைகள், அறிக்கைகள் உள்ளிட்ட பிற தரவுகளின் அடிப்படையில் பல்முனைப்பட்ட ஆய்வுகளை நிகழ்த்துவற்கான களங்கள் மிகுதியும் உள்ளன. அவை அனைத்தும் தென்னிந்திய வரலாறு குறித்துப் புதிய தளத்திலான புரிதலை ஏற்படுத்துவதாக அமையும்.

"மெக்கன்சியின் உழைப்பின் பயனாகக் கிடைத்தவை தாம் இப்போதுள்ள வரலாற்றுக் கையெழுத்துப் பிரதிகளும் பிறவுமாய் இருக்கின்றன. இந்தத் தொகுப்பைப் போல் ஐரோப்பாவிலும் இந்தியாவிலும் இதுவரைக்கும் யாரும் செய்ததில்லை." (ம.இராஜேந்திரன், ப.31) என்ற வரலாற்றாசிரியர் வி.ஆர்.ஆர். தீட்சிதர், மெக்கன்சி தொகுப்புகள் குறித்துப் பதிவுசெய்திருப்பது இங்குக் குறிப்பிடத்தக்கது.

**துணைநூற்பட்டியல்**


- இராசேந்திரன், ம. காலின் மெக்கன்சி வரலாறும் சுவடிகளும், கணையாழி படைப்பகம், 2002.
- Jennifer Howe's , Illustrating India , Oxford University Press, 2010.
- Wilson, H.H., Descriptive catalogue of Mackenzie manuscripts, Asiatic press, Calcutta, 1828.
- The Journal of Royal Asiatic Society of Great Britain and Ireland, Vol. -I, 1834.




# பண்பாட்டுப் பதிவாளர்

# அபே. ஜெ. எ. துபுவா



சி. இளங்கோ

சென்னைப் பல்கலைக்கழகத் தமிழ் இலக்கியத்துறையில் விருந்துநிலை விரிவுரையாளராகப் பணியாற்றி வருகிறார், தொல்லியல், சமூகவியல், மார்க்சிய ஆய்வுகளில் ஈடுபாடுடையவர். இவரின் நூல்கள்: 'தமிழ்ச் சமூகவியல் ஆய்வுகள்', 'ராஜராஜ சோழனின் காந்தளூர் சாலைப்போர்' முதலியன.

இந்த எளிமையான, சுயநலமற்ற மத போதகரின் வாழ்க்கையைப் பற்றித் தெரிந்துகொள்ள மிகக் குறைவான தகவல்களே இருந்தாலும், அவருடைய எழுத்துகள் பற்றி நம்பிக்கையுடன் கூறப் போதுமான விஷயங்கள் உள்ளன. அவர் கண்ட, தெரிந்துகொண்ட பலவற்றைப் பேராசிரியர் வில்சன் சரியே என்கிறார். ஆனால், புராணம், தத்துவம், தென்னிந்திய வரலாறு ஆகியவை பற்றி அவருக்கு அவ்வளவாகத் தெரியாது. ஆனால், இதுபற்றிய நூல்கள் நிறையவே உள்ளன. அபேயினுடைய எழுத்துகளைப் படித்தபோது, அவர் கூறியுள்ளவை உண்மையே என்று கூற முடியும்.

– ஜி. யு. போப்

அபே. ஜெ. எ. துபுவா (1765 - 1848) என்ற கிறித்துவப் பாதிரியார் பிரஞ்சு நாட்டைச் சேர்ந்தவர். இவர் பிரஞ்சுப் புரட்சி நடைபெற்ற காலத்தில் அங்கிருந்து தப்பி இந்தியா வந்து சேர்ந்தார். சுதந்திரம், சமத்துவம், சகோதரத்துவம் என்ற கோட்பாட்டை முன்வைத்து நடத்தப் பட்ட பிரெஞ்சுப் புரட்சியில் மதகுருமார்கள் தூக்கியெறியப்பட்டனர். இந்தச் சூழலில் புரட்சிக்குப் பயந்து தப்பி ஓடி வந்தவரான துபுவா ஐரோப்பியக் காலனி நாடான இந்தியாவிற்குள் நுழைவது மிக எளிதான ஒன்றாக இருந்தது. இந்தியாவில் தஞ்சம் புகுந்த இவர் கிறித்துவ மத போதனைப் பணியைத் தொடர ஆரம்பித்தார்.

துபுவா இந்தியாவின் தென்னகப் பகுதிகளிலேயே தன் மதப்பரப்பல் வேலைத் திட்டத்தை அமைத்துக் கொண்டார். இந்தியாவின் வடக்குப் பகுதிகளுக்கு அவர் செல்லவில்லை. தென்னகத்தில் குறிப்பாகக் கர்நாடகம், தமிழ்நாடு, ஆந்திரா, கேரளா ஆகிய பகுதிகளிலேயே மதப்பரப்பலை மேற்கொண்டார். இவர் நிலையாகக் கர்நாடகாவில் தங்கியிருந்தார். இந்தியாவின் வடபகுதி குறித்து இவர் அறியவில்லை என்பதை இவரது எழுத்துக்களினூடாக அறியலாம். இவரை மக்கள் 'டோடா சன்னியாசி' என்று அழைத்தனர்.

இந்திய மக்களின் பண்பாடு, பழக்கவழக்கங்கள், நம்பிக்கைகள், சடங்குகள், சமய நிறுவனங்களின் செயல்பாடுகள் குறித்துத் துபுவா தான் மேற்கொண்ட பயணங்களின் மூலம் அறிந்துகொண்டார். வேற்று மதத்தவரும் அந்நிய நாட்டவருமான அவருக்கு இந்திய மக்களின் வாழ்க்கைமுறை புதுமையாகக் காணப்பட்டது. இங்குச் சமயப் பரப்பலைத் துபுவாவினால் நிறைவாகச் செய்யமுடியவில்லை. தென்னிந்திய மக்களிடம் அவர் சந்தித்த மிகப் பெரிய சவாலாக அது இருந்தது. இது போன்றே ஆட்சியாளர்களுக்கும் மக்களை நிர்வாகம் செய்வதில் சிக்கல்கள் இருந்தன. இந்திய மக்களின் பண்பாடு, பழக்கவழக்கங்கள் பற்றியெல்லாம் அறியாத அவர்கள் இது குறித்து அறிந்து கொள்ள பத்திரிகையில் விளம்பரம் ஒன்றைச் செய்தனர். இவ்விளம்பரமே துபுவாவை இந்திய மக்களின் பண்பாடு, சமயம், நம்பிக்கை, சடங்கு முதலானவற்றைப் பற்றி விரிவாக அறியும் சூழலுக்குத் தள்ளியது. இதன் தொடர்ச்சியாகத் தென்னிந்தியச் சமூகம் குறித்த அவரின் தேடல் அவரைப் பண்பாட்டு ஆய்வாளராக மாற்றியது.

கிறித்துவ சமய போதகர் தென்னகப் பண்பாட்டு ஆய்வாளராக மாறிய பின் தாம் கண்டவற்றையும் கேட்டவற்றையும் பதிவு செய்யும் செயல்பாடுகளில் ஈடுபட்டார். துபுவாவின் இப்பண்பாட்டுப் பதிவை எட்கர் தஸ்டனுக்கு முந்தைய தொடக்க நிலை ஆய்வாக மதிப்பிடலாம். துபுவா போன்றே அவருக்கு முன் வந்த மதபோதகர்களும், அடுத்தடுத்து வந்த மதபோதகர்களும் மதப் பரப்பலில் பல சிக்கலைச் சந்தித்தாலும் அதற்கான காரணத்தைத் துபுவா போன்று விளக்கமாக ஆராயவில்லை. அவர்கள் மிஷனரி நிறுவனங்கள் மதமாற்றம் செய்ய முடியாமைக்கான காரணத்தை அறிக்கைகளாக (Reports) மட்டுமே தம் மேலிடத்திற்கு அனுப்பினர். ஒரு சிலர் இதில் இருந்து மாறுபட்டு இங்குள்ள பிராமண மத குருமார்கள் போன்று தங்கள் வேடங்களை மாற்றியமைத்துக் கொண்டு தமிழ், வடமொழி கற்று, இலக்கியம் படைத்து, மக்களை அணுகி மதப்பரப்பலைச் செய்தனர். தென்னகத்தில் சமயப் பரப்பலில் ஈடுபட்ட பாதிரியார்கள் விவரம் :

*ராபர்ட் - டி - நொபிலி (1577-1656)*
*வீரமாமுனிவர் (1680-1742)*
*சீகன்பால்கு (1683-1719)*
*இரேனியுஸ் (1790-1838)*
*போப் (1820-1903)*
*கால்டுவெல் (1814-1891)*

துபுவாவிற்கு முன்பு வந்த இராபர்ட் - டி - நொபிலி தென்னக மக்களை எவ்வாறு எதிர்கொண்டார் என்று பார்ப்பதன் மூலம்

துபுவா போன்றே அவருக்கு முன் வந்த மதபோதகர்களும், அடுத்தடுத்து வந்த மதபோதகர்களும் மதப் பரப்பலில் பல சிக்கலைச் சந்தித்தாலும் அதற்கான காரணத்தை துபுவா போன்று விளக்கமாக ஆராயவில்லை.

துபுவாவின் செயல்பாட்டைப் புரிந்துகொள்ள முடியும்.

பதினேழாம் நூற்றாண்டின் தொடக்கத்தில் நொபிலி தான் மேற்கொண்ட செயல்பாடுகள் மூலம் தமிழ்ச் சமூகத்தை எதிர்கொண்ட விதம் சுவையானது. இவர் மக்களிடம் தம்மை 'நான் உரோமை க்ஷத்திரியன்' என்றும் 'இராஜரிஷி' என்றுமே அறிமுகம் செய்து கொண்டார். மேலும் அவர் இந்திய பிராமணர் சமய மரபிற்குள் தன்னை இணைத்துக்கொண்டு தான் ஓர் 'உரோம பிராமணன்' என்றும், தன் சமயம் 'ஏசுரவேதம்' என்றும் விளக்கினார்.



ஆரம்பகால கிறித்தவப் பாதிரியார்களின் மதப்பரப்பல் உத்தி இதுதான். இது மட்டுமல்லாமல் சாதி ஆசாரங்களைக் கடைபிடித்துக் கொண்டே கிறித்துவ மதத்தைப் பிராமணர்கள் தழுவலாம் என்ற தந்திர வழிமுறையில் நொபிலி மதமாற்றம் செய்தார். இவர் மதப்பரப்பல் பிராமண குருக்களை மையப்படுத்தியதாகவே இருந்தது.

நொபிலியின் சமகாலத்தில் அவரைப் போன்று மற்றொரு சேசுசபை குருவான பெர்னான்டெஸ் ஒடுக்கப்பட்ட மக்களிடம் மதப்பரப்பல் முயற்சியை மேற்கொண்டு வந்தவர். இவருக்கும் நொபிலிக்கும் நெருக்கமான உறவு இல்லை. நொபிலியின் செயல்பாட்டை விமர்சித்து மேலிடத்துக்குப் புகார்களை இவர் அனுப்பினார்.

மக்கள் பெர்னான்டஸ் பாதிரியாரைப் 'பண்டார சுவாமி' என்றும், நொபிலியைச் 'சந்நியாசி சுவாமி' என்றும் அழைத்தனர். இரு பிரிவு மக்களும் தங்களுக்கான தனித்தனி கோயிலைக் கட்டிக் கொண்டு வழிபாடு செய்தனர்.

நொபிலி காலத்தில் வந்த பாதிரியார் 'ராபின்' என்பவர் 1609இல் தன் மேலிடத்திற்குக் கடிதம் ஒன்றை எழுதினார். அவர் அதில் பெர்னான்டஸ் பாதிரியாரை விமர்சித்திருந்தார். இங்குள்ள மக்களை மதமாற்றம் செய்ய முடியாமைக்கு, பெர்னான்டஸ் போன்ற பாதிரிகளின் செயல்பாடுகளில் உள்ள குறைகளை விளக்கினார். இதன் தொடர்ச்சியாக ரோமில் இருந்து கத்தோலிக்க பாதிரியார்கள் வந்து இங்குள்ள சூழலை ஆராய்ந்தனர். மதமாற்றம் செய்ய முடியாமைக்கான காரணத்தை அவர்கள் பட்டியலிட்டனர். அதன் விவரம் வருமாறு :

1. போர்ச்சுக்கீசிய மதத்தினர் மாட்டிறைச்சி உண்டனர்.
2. 'மது' அருந்தும் பழக்கத்தையும் கொண்டிருந்தனர்.
3. கறுப்பு உடையை அணிந்திருந்தனர்.
4. போர்ச்சுக்கீசிய வீரர்கள் இந்தியப் பெண்களைப் பலவந்தமாகத் திருமணம் செய்துகொண்டு தங்கள் மனைவியாக்கிக் கொண்டனர்.
5. கிறித்துவ மதத்தைத் தழுவும் எந்த ஓர் இந்தியனும் தன் பண்பாட்டை, பழக்கவழக்கங் களைக் கைவிட்டு போர்ச்சுக்கீசியர்களின் செயல்பாட்டின் வழி நடக்க வேண்டும்.
6. தீண்டப்படாத பரதவர்கள் மட்டுமே கிறித்துவத்தைத் தழுவினர்.
7. மாமிசம் உண்ணுதல், மது அருந்துதல் போன்ற காரணங்களால் கிறித்துவ மதபோதகர்கள் மக்களிடையே தங்கள் நன்மதிப்பையும் மரியாதையையும் பெற முடியவில்லை.

இக்காரணங்களைக் கருத்தில் கொண்டுதான் நொபிலி தன் செயல்பாட்டினை வகுத்துக் கொண்டார். இதன் தொடர்ச்சியாகப் பிற்காலகட்டத்தில் வந்த துபுவா தென்னகப் பண்பாடு பற்றி விரிவாக ஆராய்ந்தார். 1789 - 1828 வரையிலான காலகட்டத்தில் இந்தியாவில் வாழ்ந்தபொழுது அவர் பதிவு செய்த

கையெழுத்துப் பிரதியை 1806இல் கிழக்கிந்தியக் கம்பெனியைச் சேர்ந்த வில்லியம் பெண்டிங் பிரபு 8,000 ரூபாய் கொடுத்து விலைக்கு வாங்கினார். துபுவாவால் பிரெஞ்சு மொழியில் எழுதப்பட்டிருந்த அப்பிரதி பின்னர் ஆங்கிலத்தில் மொழிமாற்றம் செய்யப்பட்டது.

1816இல் A Description Of The Character, Manners, And Customs Of The People of India; And Of Their Institutions, Religious And Civil என்ற பெயரில் அது நூலாக வெளியிடப்பட்டது. இதுபோன்றே மற்றொரு நூலும் அக்கையெழுத்துப் பிரதியைக் கொண்டே உருவாக்கப்பட்டு வெளியிடப்பட்டது. அந்நூல் Hindu Manners, Customs and Ceremonies என்பதாகும்.



துபுவாவின் ஒரு கையெழுத்துப் பிரதி இருவேறு நூல்களாக உருவாக்கப்பட்டது ஏன் என்ற கேள்வி இங்கு முக்கியமான ஒன்றாகும். துபுவாவின் கையெழுத்துப் பிரதியை Beauchamp, Henry K. ஆகியோரே மொழியாக்கம் செய்தனர். அவர்கள் செய்த சில பதிப்பு வேலைகளே இவ்விரு நூல்களின் உருவாக்கத்திற்கான காரணமாக அமைகின்றது. இன்று துபுவா நூல்கள் சிற்சில தலைப்பு மாற்றத்துடனேயே வெளியிடப் படுகின்றன. இதன் விரம் வருமாறு :

1. Hindu Manners, Customs and Ceremonies, The Classic First-Hand Account of India in the Early Nineteenth Century - Dubois, Abbe J. A. & Beauchamp, Henry K.
2. Moeurs, Institutions et Ceremonies Des Peuples De L`Indie.two Volume Set in Need on Rebinding. - Dubois. M. l`Abbe J.A.
3. Description Of The Character, Manners, And Customs Of The People Of India; And Of Their Institutions, Religious And Civil, Volume I (One) - Dubois, Abbe J.A.
4. A Descriptive of the Character, Manners, and Customs of the People of India. - Abbe J.A.Dubois and G.U.Pope
5. Hindu Manners, Customs and Ceremonies - Dubois, Abbe J. A.
6. Hindu Manners, Customs and Ceremonies: The Classic First-Hand Account of India in the Early Nineteenth Century - Dubois, Abbe J. A.;Beauchamp, Henry K.
7. Hindu Manners, Customs and Ceremonies - Dubois Abbe J.A. & Henry K Beauchamp

துபுவாவால் எழுதப்பட்ட பிற இரண்டு நூல்கள் வருமாறு,

1. Earlier Diplomatic History 1492- 1713 - Dubois, Abbe J. A.
2. Letters on the State of Christianity in India - Dubois, Abbe J. A.

இதில் முதல்நூல் குறித்து அறியமுடியவில்லை. இரண்டாவதாகவுள்ள கடிதத் தொகுப்பு நூல் முக்கியமான ஆவணமாக அமைகின்றது. இந்தியப் பண்பாட்டை, நாகரிகத்தைக் கற்றுணர்ந்த துபுவா `இந்தியர்களை மதமாற்றம் செய்வது கடினம்' என்ற முடிவுக்கு வருகின்றார். இதன் சாராம்சமாகவே இந்நூல் அமைகின்றது.

1816இல் A Description Of The Character, Manners, And Customs Of The People Of India; And Of Their Institutions, Religious And Civil என்ற பெயரில் வெளிவந்த இந்நூல் 1862இல் புதிய பின்புலத்தில் வெளிவந்தது. இதனை அளித்தவர் ஜி.யு. போப். இவர் இந்நூலுக்கு அடிக்குறிப்பை அமைத்து அதன் உள்ளடக்கத்திற்கு மேலும் விளக்கத்தை அளித்தார். துபுவா அறியாத சில செய்திகளை எடுத்துக்காட்டி போப் விளக்கினார். போப்பால் இந்நூல் செழுமைப் படுத்தப்பட்டது.

இந்திய மக்கள் குறித்து துபுவா எவ்வகையிலான கருத்தைக் கொண்டிருந்தார் என்பதை அவரது முன்னுரை தெளிவாக்குகின்றது :

"ஆப்பிரிக்கக் காட்டுமிராண்டி இன மக்கள் பற்றி நம்மிடம் நிறைய விவரங்கள் இருக்கின்றன. உலகில் பல பாகங்களில் பரவிக் கிடக்கும் பல இனங்கள் பற்றியும் நமக்குத் தெரியும். அங்கு

வாழும் மக்கள் இயற்கையோடு பிறந்து, வாழ்ந்து, மனித இனத்துக்கு அவமதிப்பை ஏற்படுத்தும் வகையில் வாழ்ந்திருக்கின்றனர். ஆனால், இங்கே ஒரு நாடு இருக்கிறது. புராதனக் காலந்தொட்டு காட்டுமிராண்டி வாழ்க்கை வாழாத ஓர் இனம், பண்பாடுகள் நிறைந்த ஓர் இனம், அனைவரின் கவனத்தையும் கவரக்கூடிய இனம் வாழும் ஒரு நாடு இருக்கிறது. இந்த நாட்டின் மக்களினம், கலை, விஞ்ஞானம் ஆகியவற்றில் சிறந்து, சமூகத்தில் ஓர் ஒழுங்கு, அமைதி காத்த இனம், தனி மனித வாழ்க்கையிலும் இவற்றைக் கடைப்பிடிக்கும் ஓர் இனம் இங்குள்ளது. இந்த நாட்டின் புகழ் உலகெங்கும் பரவிக் கிடக்கிறது. இதனுடைய புகழை மற்றவர்கள் ஏற்றுக் கொள்ளும் வகையில் இது செயல்பட்டுள்ளது. கிரேக்க தத்துவ ஞானிகளின் கவனத்தை யெல்லாம் ஈர்த்துள்ளது. கிரேக்க தத்துவ ஞானிகள் தங்களின் பெருமை, கர்வம் ஆகியவற்றை யெல்லாம் விடுத்து இந்தியாவுக்குப் பயணம் செய்து, அங்குள்ள பிராமணர்களிடமிருந்து அறிவைப் பெற முயன்றுள்ளனர். இவர்கள் தலைமுறை தலைமுறையாக இந்த ஞானத்தைப் பெற்று, பேணி வளர்த்து பின்னர் ஐரோப்பா வரைக்கும் பரப்பியுள்ளனர். இப்படிப்பட்ட ஒரு நாட்டை எப்படி ஐரோப்பியர்கள் சரிவரப் புரிந்து கொள்ளவில்லை என்பது வியப்பிற்குரியதே. அந்த நாட்டில் வசித்துக்கொண்டே, அதை ஆட்சி புரிந்துகொண்டே அது பற்றி அறியாமல் இருப்பது ஆச்சரியமே!" (அபே.ஜெ.ஏ. துபுவா, 2008: 19)

ABBÉ J. A. DUBOIS

Hindu Manners Customs and Ceremonies

BY

HENRY K. BEAUCHAMP

THIRD EDITION

ஐரோப்பியப் புலமைவாதிகள் இந்தியாவை சமஸ்கிருதத்தின் ஊடாகவே பார்த்தனர். இப்பார்வையே துபுவாவிடமும் இருந்தது. சாதியத்தின் மேல் அடுக்கில் உள்ள பிராமணியம் பிற சாதிகளை வழிநடத்தும் நடைமுறையைக் காலந்தோறும் கொண்டுள்ளது. இந்நடைமுறையில் உருவாக்கப்பட்ட இந்தியச் சமூக அமைப்பு பல உள்முரண்பாடுகளுடனேயே இயங்கிக் கொண்டிருக்கின்றது. இவ்வுள் முரண்பாடு பற்றியெல்லாம் விரிவாக ஐரோப்பிய ஆய்வாளர்கள் ஆராயவில்லை.

வடபுலம் குறித்துத் தன் ஆய்வை நிகழ்த்திய மாக்ஸ் முல்லர் தென்னகம் குறித்தும், திராவிடம் குறித்தெல்லாம் விரிவாகப் பேசவில்லை. இவ்வரிசையில் முயர், வில்சன், கிரிஃபித் ஆகியோரைக் கூறலாம். ஆனால் தென்னகம் வந்த கிறித்துவப் பாதிரியார்கள் இதில் இருந்து மாறுபட்டே இருந்தனர். அவர்கள் வடமொழி மரபில் இருந்து மாறுபட்ட தனித்தன்மையுடைய தமிழ் இனத்தை அடையாளப்படுத்தி அதற்கு 'திராவிடர்' என்று பெயர் கொடுத்தனர். மொழி அடிப்படையில் அவர்கள் மேற்கொண்ட ஆய்வு இனத்தையும், பண்பாட்டையும் வேறுபடுத்திக் காட்டியது. எல்லீசும், கால்டுவெல்லும் செய்த இந்த ஆய்வு ஆரிய மரபில் இருந்து மாறுபட்ட இனம் திராவிடம் என்பதை நிறுவியது. இந்தியா குறித்து வடபுலத்தில் செயல்பட்ட ஐரோப்பியர்கள் வெளியிட்ட கருத்துகளுக்கு மாற்றாகத் தென்னிந்திய ஐரோப்பியர்களின் கருத்துகள் இருந்தன.

இவ்வாறான விவாதங்கள் நடைபெறுவதற்கு முன்பே இந்தியா வந்த துபுவாவுக்கு இவையெல்லாம் புரியாத ஒன்றாகவே இருந்தது. அவர் ஆரியத்தின் ஊடாகவே தென்னகத்தைப் பார்க்கின்றார். அவர் தென்னகத்தைக் 'கிருஷ்ணா நதிக்குத் தெற்கேயுள்ள பகுதி மக்கள் குறித்த பதிவு என்றே தம் நூலில் குறிப்பிடுகின்றார்.

துபுவா இங்குள்ள மக்களிடம் கலந்து பழகித் தரவு சேகரிப்பதில் பல்வேறு சிக்கல்களை எதிர்கொண்டார். இது குறித்து அவர் கூறுகையில்:

"இந்திய சாதிய முறைகள் பற்றி நான் எழுதும்போது ஒரு குறிப்பிட்ட குணாம்சத்தை நான் கூறியுள்ளேன். அது தவறாகப் புரிந்துகொள்ளப்பட்டிருக்கிறது. இந்தியா வரும் ஐரோப்பியர்கள் பிராமணர்களுடன் கலந்து பழகுவதில் சிரமங்கள் இருக்கும். மற்ற சாதியினரிடமிருந்து பிராமணர்கள் வெகுதூரம் தள்ளியே வாழ்கின்றனர். வெளிநாட்டினர் மீது அவர்களுக்குள்ள வெறுப்பு தெரிந்ததே. தங்களது குடும்ப வாழ்க்கை, மதம், பழக்கவழக்கங்கள் ஆகியவற்றைக் குறிப்பாக ஐரோப்பியரிடம் பகிர்ந்து கொள்ள அவர்கள் விரும்புவதில்லை."

(அபே.ஜெ.ஏ. துபுவா, 2008 : 24)

துபுவா சேகரித்த தகவல்கள் அனைத்தும் பிராமணர்கள் குறித்தவையாகவே இருந்தன. ஒரு சில இடங்களில் பிராமணர் அல்லாதவர்கள் பற்றி பேசினாலும் அது குறைவே.

- பிராமணர்களின் பெயர்கள்
- சைவ, வைணவ பிராமணர்கள்
- புரோகிதர்கள், சடங்குகள் செய்பவர்கள்
- பிராமணப் பெண்கள்
- பிரமச்சரியம், நடத்தைகள், பூணூல் அணிதல்
- பிராமணர்களின் திருமணங்கள்
- உபவாசங்களும் பண்டிகைகளும்
- பிராமணர்களின் சில உபதொழில்கள்
- திருமணமான பிராமணப் பெண்கள், ஆடை ஆபரணங்கள்
- உடன்கட்டைப் பழக்கம்
- பிராமணர்களின் கடிதம் எழுதும் முறை
- இறப்பு, ஈமக்கிரியைகள், பிராமணர் பழக்க வழக்கங்கள்
- சன்னியாசிகளின் கடமைகள்
- இந்துக்களின் முக்கியப் பண்டிகைகள்
- இந்துக்களின் நீதிக் கதைகள்
- பறையர்கள் மற்றும் தாழ்த்தப்பட்ட சாதி இந்துக்கள்
- ஜைனர்களும், பிராமணர்களும், அவர்களிடையே உள்ள வேறுபாடுகளும்

ஆரிய மரபின் ஊடாக அமைந்த துபுவாவின் இப்பதிவு இன்று முக்கிய ஆவணமாக உள்ளது. 200 ஆண்டுகளுக்கு முந்தையச் சமூகஅமைப்பில் பிராமணியத்தின் செயல்பாடுகள் குறித்து விரிவான ஆய்வுக்கு உட்படுத்தக்கூடிய தரவுகளாக இவை அமைகின்றன. காலனிய காலத்தில் பிராமணர்களின் செயல்பாடுகள் குறித்து அறிந்துகொள்ளக் கூடிய இத்தரவினைக் கொண்டு முந்தைய மன்னராட்சிக் காலத்திலிருந்து எவ்வாறு இவர்கள் மாறியுள்ளனர் என்று புரிந்துகொள்ள முடியும். இந்நூல் ஆங்கிலத்தில் வெளிவந்து 50 ஆண்டுகள் கழித்து இதற்கு ஜி. யு. போப் விளக்கக் குறிப்பு எழுதும் பொழுது இந்நூல் இன்று பயன்படுமா? என்ற கேள்வியை எழுப்பி, அதற்கான பதிலையும் அவரே அளிக்கின்றார் :

“ஐம்பதாண்டுகளுக்கு முன்பு எழுதப்பட்ட நூல் தற்போது உபயோகமானதாக இருக்குமா என்ற ஐயம் ஏற்படலாம். பல்வேறு தகவல்கள் வெளிவந்துள்ள பின்னணியில் வேறு பல நூல்களும் வெளிவந்த பின்னணியிலும் இந்நூலின் தேவைபற்றி கேள்வி எழலாம். உண்மை என்னவென்றால் Dr. Graul's Reise nach Ostindien எழுதியுள்ள நூலின் நான்காம் பகுதியும் சில பாதிரிமார்கள் எழுதியுள்ள சிறிய நூல்களையும் தவிர தென்னிந்திய மக்களின் வாழ்க்கைமுறை பற்றி எழுதப்பட்ட நூல்கள் குறைவே. அதோடு, இந்துக்களின் குணமும், பழக்க வழக்கங்களும் சென்ற நூற்றாண்டில் பெருமளவு மாறவும் இல்லை.

கிறிஸ்தவம் ரோம சாம்ராஜ்யத்தில் பரவிய காலத்தில், பல சிறிய இனங்கள் தங்கள் கொள்கையை அப்படியே வைத்திருந்தது போலவே, தென்னிந்தியாவிலும் மக்கள் அவர்களுடைய முன்னோர்களின் பழக்க வழக்கங்களை மாற்றாமல் அப்படியே வைத்திருந்தனர். அரசில் எந்த மாற்றங்கள் வந்தபோதும், கிராம மக்கள் சடங்குகளைத் தொடர்ந்து செய்தனர். ஐந்து நூற்றாண்டுகளுக்கு முன்பு எப்படி இருந்ததோ அப்படியே தான் அவர்களுடைய சிந்தனைப் போக்கும் இருந்தது.”(அபே.ஜெ.ஏ. துபுவா, 2008 : 26)

ஜி. யு. போப் மதிப்பீடு செய்தது போல் இந்நூலின் தேவை இன்றளவும் உள்ளது. துபுவா இந்தியாவில் நிலவும் சாதி முறையை ஆதரிக்கின்றார்.

சாதியமுறை குலைந்துவிட்டால் தொழில் உறவுகள் பாதிக்கும் என்ற கருத்தை அவர் கொண்டிருந்தார். பிரெஞ்சுப் புரட்சியின் காலகட்டத்தில் அங்கிருந்து வெளியேறிய அவருக்கு, மக்கள் புரட்சியில் ஒன்று சேராமல் இருக்க, இந்திய சாதிமுறை சரியானதாகத் தோன்றியிருக்கலாம்.

"சாதிய அமைப்பினுள் இந்துக்கள் ஓரளவு ஒழுங்குடனும் கட்டுப்பாட்டுடனும் வாழ்கின்றனர். அதில் ஒவ்வொருவனுக்கும் அவனவனுக்குரிய வேலை தரப்படுகிறது. இந்த முறை இல்லை யெனில் அனைவரும் தாழ்த்தப்பட்ட சமூகத்தினர் போல் மோசமாக நடக்க முற்படுவர். நாடு முழுவதும் அராஜகத்தில் மூழ்கி, இன்று உலகில் சிறந்து விளங்கும் இந்திய நாடு மோசமான காட்டுமிராண்டி வாழ்க்கைக்குத் தள்ளப்படும் என்பதில் நான் உறுதியாக இருக்கிறேன்." (அபே.ஜெ.ஏ. துபுவா, 2008 : 51)

பிராமணர்கள் இல்லையெனில் இங்குவாழும் பிற மக்கள் காட்டுமிராண்டி வாழ்க்கைக்குச் சென்று விடுவார்கள் என்ற அவரின் தவறான மதிப்பீடு சாதியம் குறித்துப் புரிதலற்ற ஒருவரின் கூற்றாகவே உள்ளது. ஒடுக்கப்பட்டவர்களைத் தொழில் ரீதியாகவும், சாதிய அடிப்படையிலும் கீழ்நிலையில் பார்ப்பனியமே வைத்திருந்தது என்பதை அவர் உணர மறுக்கின்றாரா? அல்லது திட்டமிட்டு மறைக்கின்றாரா?

சமூகத்தை மதகுருமார்களே வழிநடத்தமுடியும் என்ற கருத்தின் ஊடாக வளர்ந்த பாதிரியார்கள், தங்களைப் போன்றுள்ள பிராமண குருமார்களையும் அவர்களின் சாதிய சட்டதிட்டங்களையும் அறிந்தே ஆதரித்திருக்க வேண்டும். ஆனால் துபுவாவின் சாதியக் கருத்தாக்கங்களை ஜி. யு. போப் ஏற்க மறுக்கின்றார். போப் பழகிய சமூக மக்கள் வேறானவர்கள், துபுவா பழகிய சமூகத்தினர் வேறானவர்கள் என்பதே இதற்கான அடிப்படைக் காரணமாக அமைகின்றது.

இந்துக்கள் என்ற பெயரில் ஐரோப்பியர்கள் இந்தியர்களை அடையாளப்படுத்தியது அவர்களின் நிர்வாக வசதிக்காகவே என்றாலும், இப்பார்வையிலேயே துபுவா ஜைனர்களை மதிப்பிடுகின்றார். ஜைனர்களை இந்து மதத்தின் ஒரு பகுதியினராகவே அவர் கருதுகின்றார். பிராமணர்களிடம் இருந்து பிரிந்து வந்தவர்களே ஜைனர்கள் என்ற தவறான வாதத்தை முன்வைக்கின்றார்.

"ஜைனர்களும் இந்து மதத்தின் ஒரு பகுதியினரே. ஆனால், பிராமணர்களுடன் வெளிப்படையான மோதலில் ஈடுபட விரும்பவில்லை. ஆனால், ஆரம்பகாலம் முதலே, அவர்கள் புகுத்திய ஆபத்தான மாற்றங்களை எதிர்த்தே வந்துள்ளனர். ஆனால், பரிசுத்தமான மதத்தில் புகுத்தப்பட்ட மாற்றங்களைத் தாங்கள் எதிர்த்த போதிலும், பிராமணர்கள் தொடர்ந்து வெகு வேகமாகச் சிந்தனையற்ற மக்களிடையே புகுத்தி வரும் நிலையில், வெளிப்படையாகவே எதிர்க்க வேண்டிய நிர்ப்பந்தம் ஜைனர்களுக்கு ஏற்பட்டது. ஒரு நிலையில் பிராமணர்கள் நரபலியையே புகுத்த முயன்றனர். இந்து மதக் கொள்கைகள் அப்படிப்பட்ட நரபலியைக் கடுமையாக எதிர்த்தன. நரபலியை நியாயப்படுத்த எந்தக் காரணமும் இல்லை. இந்தப் பிரச்சனையின் காரணமாக, ஜைனர்கள் இப்பெயரைத் தங்களுக்கு வைத்துக் கொண்டனர். அதிலிருந்து அவர்கள் பிராமணர்களைக் கடுமையாக எதிர்க்கத் தொடங்கினர். பிராமணர்களிடம் இருந்து விலகி க்ஷத்திரியர்கள், வைசியர்கள், சூத்திரர்கள் உட்பட அனைவரும் தனியாக வெளியேறினர். இக்குழுவினர் பிராமணர்களுடைய எல்லாக் கொள்கைகளையும் எதிர்த்து, நாட்டின் புராதன மதத்தின் பரிசுத்தத்தை மீண்டும் கொண்டுவர நடவடிக்கை எடுத்தனர்.

பிராமணர்களிடமிருந்து பிரிந்து வந்ததிலிருந்து அவர்களுடைய கொள்கைகளை எதிர்ப்பது வெறும் வாதப்பிரதிவாத அடிப்படையில் இருந்தது. ஆனால், பின்னர் இது வெளிப்படையான மோதலாக வெடித்தது. பிராமணியக் கொள்கைகளை ஆதரிப்பவர்கள் நான்கு வருணங்களிலும் பெரும்பான்மையாக இருந்ததால், அவர்கள் ஜைனர்கள் மீது தாக்குதலைத் தொடுத்தனர். ஜைனர்களுடைய இடங்கள், தொழும் இடங்கள், பணியாற்றும் இடங்கள் ஆகிய அனைத்தும் அடித்து நொறுக்கப்பட்டன.

அவர்களுடைய மத, சமூக உரிமைகள் பறிக்கப் பட்டன. இதனால், நாட்டின் பல மாகாணங்களில் ஜைனர்களே இல்லாத நிலைமை ஏற்பட்டது." (அபே.ஜெ.ஏ. துபுவா, 2008 : 443)

தமிழகத்தில் சைவ சமயம் வளர்ச்சியுற்ற காலத்தில் சமணர்கள் கழுவில் ஏற்றப்பட்ட வரலாற்றை மேற்கண்ட பகுதிகள் நமக்கு நினைவூட்டுகின்றன. அன்றைய அவ்வன்முறையான போக்கு, பிற்காலத்தில் வேறு வடிவம் எடுத்திருந்ததை உணரமுடிகின்றது.

துபுவா தான் கேட்ட பல்வேறு வரலாற்றுச் சம்பவங்களையும் கதைகளையும் பதிவு செய்கின்றார். இதுவே அவரது பதிவின் பலமாக உள்ளது. அவற்றைக் கொண்டு அன்றைய சமூகத்தின் முழுப் பரிமாணத்தையும் புரிந்துகொள்ள முடிகின்றது. முந்தைய சமூகம் குறித்து அன்றைய மக்கள் கொண்டிருந்த கதையாடல்களின் ஊடாகப் பெறும் அறிவு எதிர்கால ஆய்வுகளுக்கும் உதவுகின்றன.

துபுவாவால் உருவாக்கப்பட்ட இந்நூல் ஐரோப்பிய ஆட்சியாளர்களுக்கு இந்தியச் சமூகம் குறித்த ஒரு கையேடாகவே பயன்பட்டது. ஐரோப்பிய ஏகாதிபத்தியம் தன் நிர்வாக வசதிக்காகத் தம் ஆட்சியின் கீழ் உள்ள மக்களை அறிந்துகொள்ள இந்நூலைப் பயன்படுத்தியது. மக்களைச் சட்டங்கள் மூலம் கட்டுப்படுத்துவது ஒருபுறம் என்றால், அவர்களின் பண்பாட்டு அடையாளங்களை மாற்றியமைப்பதன் வழி கட்டுப்படுத்துவது வேறு ஒரு வழிமுறையாகும். ஒவ்வொரு பகுதி மக்களின் பண்பாட்டு அடையாங்களை அறிந்துகொள்வதன் மூலம் அவர்களிடம் நெருங்கிச் செல்வது ஆட்சியாளர்களுக்கு வசதியாக இருந்தது. இப்பின்புலத்தின் ஊடாகத் துபுவாவையும் அவரது எழுத்துக்களையும் புரிந்து கொள்ளலாம்.

துபுவாவின் இறுதிக் காலம் பற்றி ஜி. யு. போப் கூறுவது :

"அபே இந்தியாவில் இருந்தபோது இந்துக்களுடன் பல்லாண்டுகள் வாழ்ந்திருக்கிறார். ஐரோப்பாவுக்குத் திரும்பியதும் அவர் ஒரு கடிதத்தைப் பிரசுரித்தார். இந்துக்களை மதமாற்றம் செய்வது நடவாத காரியம் என்று அவர் அதில் கூறினார். கப்பலில் பிரான்சுக்குத் திரும்பியபோது, அவர் கப்பலிலிருந்து இந்தியாவைத் திரும்பிப் பார்த்தார். அங்குதான் மீண்டும் திரும்பி வர வேண்டுமென்று உணர்ச்சிப் பூர்வமாகக் கூறினார். அவர் அதைச் செய்யவில்லை. ஆனால், அவர் பிரெஞ்சு அமைப்பு ஒன்றின் தலைவரானார். அதற்கு மதத்தைப் பரப்புவதே நோக்கம். அந்த அமைப்பிலிருந்து பல ரோமன் கத்தோலிக்க பாதிரிமார்களும் இந்தியாவுக்கு வந்தனர். சில காலம் கழித்து அவர் கி.பி. 1853இல் மரணமடைந்தார்.'

(அபே.ஜெ.ஏ. துபுவா, 2008 : 25)

**துணைநூற்பட்டியல்**

1. அபே.ஜெ.ஏ. துபுவா, இந்திய மக்கள் பழக்கவழக்கங்கள் சடங்குகள் நிறுவனங்கள், 2008, அலைகள் வெளியீட்டகம், சென்னை 600 024.

2. சி. இளங்கோ, தமிழகப் பண்பாட்டு அமைப்புகள் வரலாறும் செயல்பாடும், 1850-1950 (அச்சிடப்படாத முனைவர் பட்ட ஆய்வேடு) 2007, சென்னைப் பல்கலைக்கழகம்.



# மகாவித்துவான் மீனாட்சி சுந்தரம் பிள்ளை (1815-1876)

## அறியப்பட்ட ஆளுமையின் அறியப்படாத செயல்பாடுகளை முன்வைத்து...



கோ. கணேஷ்

உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத்தில் 'பதினெண் கீழ்க்கணக்கு நூல்களின் பதிப்பு வரலாறு' என்ற தலைப்பில் முனைவர்பட்ட ஆய்வினை மேற்கொண்டு வருகிறார். 'உ.வே.சா. பதிப்புரைகளின் தொகுப்பு' என்ற நூல் வெளிவர உள்ளது.

அச்சு ஊடகத்தின் வருகையால் கி.பி. 19ஆம் நூற்றாண்டில் தமிழ்ச் சூழலில் மிகப் பெரிய மாற்றங்கள் நிகழ்ந்தன. பதிப்பு சார்ந்த இயங்கு வெளி பரந்த அளவில் உருவானது. கடந்த மூன்று நூற்றாண்டுகளில் வளம் பெற்ற துறையான பதிப்புத்துறையின் வரலாறு குறித்த முழுமையான தரவுகள் நம்மிடம் இல்லை. எனவே பதிப்பாசிரியன் சார்ந்த வரலாறு, பதிப்பான நூல்கள் சார்ந்த வரலாறு, பதிப்பான முறைமைகள் சார்ந்த வரலாறு, பதிப்பித்த நிறுவனங்கள் சார்ந்த வரலாறு எனப் பதிப்புச் செயல்பாடுகள் சார்ந்த அனைத்துவிதமான வரலாறுகளும் எழுதப்பட வேண்டிய தேவை இன்று நமக்குள்ளது. மேலும் வரலாறு எழுதுதலில் உள்ள நேர்மை, தற்சார்பற்றத் தன்மை, தனிமனிதப் போற்றுதல் X தூற்றுதல் அற்ற நடுநிலைத்தன்மை போன்றவை பிரதானமாக முன்வைக்கப்பட வேண்டிய ஒன்று. ஆனால் துரதிருஷ்டவசமாக நமக்கு இன்று கிடைக்கும் வரலாறுகள் அவ்வாறில்லை.



இந்தப் பின்புலத்தில் கி.பி. 19ஆம் நூற்றாண்டில் வாழ்ந்து பெரிதும் அறியப்பட்ட ஆளுமைகளில் ஒருவரான திரிசிரபுரம் மகாவித்துவான் மீனாட்சி சுந்தரம் பிள்ளையின் பதிப்புச் செயல்பாடுகள் பதிப்பு வரலாற்றில் கவனப்படுத்தப்படாதது குறித்தும், அவரின் வரலாற்றெழுதியலில் உள்ள நுண் அரசியல் குறித்தும் இக்கட்டுரை விவாதத்திற்கான சில மையப்புள்ளிகளைத் தொட்டுச் செல்கிறது.

### மீனாட்சிசுந்தரம் பிள்ளையின் பன்முகச் செயல்பாடுகள்

கி.பி. 19ஆம் நூற்றாண்டின் நடுப்பகுதியில் வாழ்ந்த மீனாட்சிசுந்தரம் பிள்ளை பன்முக பரிணாமம் கொண்டவராக அறியப்படுகிறார். இவரைப்பற்றிக் குறிப்பிடும் உவேசா. "இச்சரித்திரத் தலைவர் பலவகையான சிறப்பை உடையவர்; ஆசுகவி முதலிய நால்வகைக் கவிஞராகவும், நூலாசிரியர், உரையாசிரியர், போதகாசிரியர் என்னும் மூவகை ஆசிரியராகவும் வித்தியா வீரராகவும் இருந்தனர்" என்று குறிப்பிடுகிறார். (மீனாட்சிசுந்தரம் பிள்ளையவர்கள் சரித்திரம் முகவுரை, பக். XVIII)

மேலே குறிப்பிடப்பட்டுள்ள இக்கூற்று கவனத்திற்குரியது. உ.வே.சா., பிள்ளையவர்களை நூலாசிரியர், உரையாசிரியர், போதகாசிரியர் என்ற நிலைகளிலேயே கருதியுள்ளார். இது குறித்துப் பின்னர் காண்போம்.

- பிள்ளையவர்கள் தலபுராணங்கள், பதிகங்கள், அந்தாதிகள், பிள்ளைத்தமிழ், கலம்பகம், கோவை, உலா, தூது, குறவஞ்சி முதலான 80க்கும் மேற்பட்ட நூல்களை இயற்றியதனால் நூலாசிரியராகவும்,
- கம்பரந்தாதி, முல்லையந்தாதி, காஞ்சிப்புராணம், தணிகைப்புராணம், திருவானைக்காபுராணம் போன்றவற்றிற்கு உரையெழுதியதனால் உரையாசிரியராகவும்,
- சோடசாவதானம் தி.சு. சுப்பராய செட்டியார் தொடங்கி உ.வே.சா. வரை பலருக்கும் அரிய நூல்களைப் போதித்ததனால் போதகாசிரியராகவும்,

பல்வேறு செயல்பாடுகளின் ஊடாக மகாவித்துவான் மீனாட்சிசுந்தரம் பிள்ளை அறியப்பட்டவர் என்பது அனைவரும் அறிந்ததே. மேலும் சுவடிகள் பலவற்றைப் பாதுகாத்தும், பல நூல்களைத் தாமே ஏட்டில் எழுதியும் வைத்திருந் துள்ளார். அத்தகைய சுவடிகள் பலவற்றைப் பிள்ளையவர்கள் உ.வே.சா. போன்றவர்களுக்கு அளித்துள்ளார்.

பிள்ளையவர்கள் உ.வே.சா.விற்கு அளித்த சுவடிகளின் விவரம்:

1. பத்துப்பாட்டு
2. புறப்பொருள் வெண்பாமாலை.
3. சீவக சிந்தாமணி
4. சிலப்பதிகாரம்

ஆகிய சுவடிகளைப் பிள்ளையவர்கள் உவே.சா . விற்கு அளித்துள்ளார். பின்னாளில் உ.வே.சா. பதிப்பித்த நூல்களுக்கு இச்சுவடிகளே மூலச்சுவடிகளாக இருந்துள்ளன என்பதை உவே. சா. பதிப்புரைகளின் மூலம் அறியமுடிகிறது.

### மீனாட்சிசுந்தரம் பிள்ளையின் பதிப்புப் பணிகள்

இவ்வாறாகப் பல நிலைகளில் அறியப்பட்ட பிள்ளையவர்கள் ஒரு நூலைக்கூடப் பதிப்பிக்கவில்லையா? என்ற கேள்வி முன்நின்றபோது மீனாட்சிசுந்தரம் பிள்ளையின் சரித்திரத்தில் உவேசா:

"இவர் இயற்றிய உறையூர்ப் புராணத்தின் நயத்தையும், அதனை யாவரும் வாசித்து

இன்புறுவதையும் அறிந்த திரிசிரபுரத்திலிருந்த தமிழபிமானிகளும், செல்வர்களும் திரிசிரபுரத்திற்கு வடமொழியில் சாது அத்தியாயங்களுடன் இருந்த புராணத்தைத் தமிழிற் செய்யுளாக மொழிபெயர்க்க வேண்டுமென்று கேட்டுக் கொண்டார்கள். இவர், "முன்னமே இத்தலத்திற்கு எல்லப்ப நாவலராற் செய்யப்பெற்ற புராணம் ஒன்று உண்டு; அது நல்ல நடையுள்ளது" என்று சொல்லி அதிலுள்ள சில பகுதிகளைப் படித்துக்காட்டினர். கேட்ட திரிசிரபுரவாசிகள், "அதையேனும் அச்சிட்டு வெளிப்படுத்த வேண்டும்" என்று இவரை வேண்டிக்கொள்ள, அவ்வாறே இவர் அதனை எழுதுவோரால் நேர்ந்த **பிழைகளறப் பரிசோதித்து** விரோதிகிருது வருஷத்தில் (1851) அச்சிட்டு வெளியிட்டார்' (மீனாட்சி சுந்தரம் பிள்ளையவர்கள் சரித்திரம் பகுதி I, பக். 144-145) (அழுத்தம் எமது).



என்ற குறிப்பினைத் தந்துள்ளார். மேலும் பிள்ளையவர்கள் 1851இலேயே பிழைகளற்ற சுத்தப் பாடமாக அளித்துள்ளார் என்பது உ.வே.சா.வின் கூற்று வழியே அறியலாம்.

இச்செவ்வந்திப் புராணப் பதிப்பின் முதற் பதிப்பு இன்று காணக்கிடைக்கவில்லை. இருப்பினும் மீனாட்சிசுந்தரம் பிள்ளையின் பிரதிக்கிணங்க 1887ஆம் ஆண்டில் திருமயிலை. வித்துவான் சண்முகம் பிள்ளையவர்களின் பதிப்பித்த நூலே கிடைக்கிறது. அதன் குறிப்பின் வழியாகவே மீனாட்சிசுந்தரம் பிள்ளையின் செவ்வந்திப் புராணப் பதிப்பு குறித்த தகவல்களை அறிய முடிகிறது.

### காஞ்சிப் புராணப் பதிப்பு (1868)

கி.பி. 1868ஆம் ஆண்டு காஞ்சிப் புராணத்தின் முதற்பாகத்தைப் பிள்ளையவர்கள் அச்சிட்டதாக 'அச்சும் பதிப்பும்' நூலில் மா.சு. சம்பந்தன் குறிப்பிடுகிறார். இத்தரவின் வழியாக காஞ்சிப் புராணப் பதிப்பைத் தேடியபோது 1868ஆம் ஆண்டு பதிப்பு காணக் கிடைக்கவில்லை. ஆனால் 1878ஆம் ஆண்டில் பதிப்பிக்கப்பட்ட காஞ்சிப் புராணப் பதிப்பின் வழியாக மீனாட்சி சுந்தரம் பிள்ளை பதிப்பித்த "முதற்பாகத்தோடு பிற்பாகமும், இராமநாதபுரம், இராமசுவாமிப் பிள்ளையால் பல பிரதிருபங்களைக் கொண்டு பரிசோதித்து தேவகோட்டை வீர. ராம. வெ. இலட்சுமணச் செட்டியார் சகாயம் பெற்றுப் புங்கத்தூர். கந்தசாமி முதலியார் அவர்களால்...." என்று இப்பதிப்பின் வழியாகப் பிள்ளை அவர்களின் காஞ்சிப்புராணப் பதிப்பு விவரத்தை அறியமுடிகிறது.

### திருவானைக்காப் புராணப் பதிப்பு (1868)

திருவானைக்காப் புராணத்தினைப் பிள்ளையவர்கள் 1868இல் பதிப்பித்துள்ளதாக மா.சு. சம்பந்தன் குறிப்பிட்டுள்ளார். 'நூல் பதிப்பும் நுண் அரசியலும்' என்ற நூலில் அ.சதீஷ் 'மகாவித்துவான் மீனாட்சிசுந்தரம் பிள்ளை 'திருவானைக்கா புராணம்' என்னும் நூலைப் பதிப்பித்துள்ளார். இந்நூலும் **அடிபிரித்துப் பதிப்பிக்கப்பட்டுள்ளது'** (பக். 26) (அழுத்தம் எமது) என்று குறிப்பிட்டுள்ளார்.



1906ஆம் ஆண்டு திருவானைக்காப் புராணப் பதிப்பொன்றில் 'திரிசிரபுரம் மஹாவித்துவான் மீனாட்சிசுந்தரம் பிள்ளையவர்கள் முன் பதிப்பித்த பிரதிக்கிணங்க' என்று முகப்புப் பகத்தில் உள்ள செய்திகளைக் கொண்டும் அதன் பதிப்பு விவரத்தை அறிந்துகொள்ள முடிகிறது.

### கல்லாடப் பதிப்பு (1868)

கல்லாடத்தைப் பிள்ளையவர்கள் 1868இல் பதிப்பித்துள்ளார். இதுவே கல்லாடத்திற்கு வந்த முதல் பதிப்பு என்பது குறிப்பிடத்தக்கது. இதனைப் பிழைகளறப் பரிசோதித்து திருத்தப் பாடமாகப் பதிப்பித்துள்ளார். இதன் முதல் பதிப்பின் பிரதி ரோஜா முத்தையா ஆராய்ச்சி நூலகத்தில்



காணக்கிடைக்கிறது. (அதன் முகப்புப் பக்கமும் இக்கட்டுரையில் இணைக் கப்பட்டுள்ளது.)

இவ்வாறாகப் பிள்ளையவர்கள் நான்கு நூல்களைப் பதிப்பித்துள்ளார். அதே சமயம் பல பிரதிகளை ஒப்பிட்டுப் பரிசோதித்து, அடி பிரித்து பிழைகளற்ற சுத்த பாடமாக, மிகச்சிறந்த பதிப்பாசிரியருக்கான பதிப்பியல் நுணுக்கங்களைக் கொண்டே தன் நூல்களைப் பதிப்பித்துள்ளார். ஆனால் முன்னர் குறிப்பிட்ட உ.வே.சா. அவர்களின் முகவுரைக் குறிப்பை இங்கே நினைவில் கொள்க. போதகாசிரியர், உரையாசிரியர், நூலாசிரியர் என்ற பல செயல்பாடுகளைக் கொண்டிருந்தாலும் பதிப்பாசிரியராகவும் அடையாளப்படுத்தப்பட வேண்டியவர் மீனாட்சிசுந்தரம் பிள்ளை. ஏனோ தமிழ்ச் சூழலில் தலபுராணங்களைப் பாடுபவராக மட்டுமே முன்நிறுத்தப்படுகிறார்.

## உ.வே.சா.வின் மீனாட்சி சுந்தரம் பிள்ளையவர்களின் சரித்திரம் – நம்பகத்தன்மை

முன்னர் குறிப்பிட்டது போன்று உ.வே.சா. மீனாட்சிசுந்தரம் பிள்ளையவர்களின் சரித்திரத்தின் முதற்பாகத்தை 1934இல் வெளியிட்டார். மீண்டும் விடுபட்ட செய்திகளுடன் இரண்டாம் பாகத்தை 1940இல் வெளியிட்டார். இவ்விரண்டிலுமே செவ்வந்திப்புராணப் பதிப்பைத் தவிர பிற நூல்களின் பதிப்புகளையும், அதிலுள்ள பதிப்பியல் நுணுக்கங்களையும் ஒரு வரலாறு எழுதும் ஆசிரியர் குறிப்பிடாதுவிட்டது ஆச்சரியமான விடயமாகும். அதுவும் தன் ஆசிரியரின் வரலாற்றை எழுதிய உ.வே.சா.வின் செயல்பாடுகளை எவ்வாறு புரிந்துகொள்வது? அல்லது சரித்திரத்தின் நடுநிலைத்தன்மையை எவ்வாறு உள்வாங்கிக் கொள்வது. அதோடு மட்டுமில்லாமல் 1887இல் உ.வே.சா.வின் சீவகசிந்தாமணியை நச்சினார்க்கினியர் உரையுடன் பதிப்பித்து வெளியிடும்பொழுது அப்பதிப்பு அக்காலத்தைய பதிப்பு நுட்பங்களை உள்வாங்காத பதிப்பாகவே அமைந்துள்ளதாக அ. சதீஷ் தன் நூலில் குறிப்பிட்டுள்ளார். (பக். 26) ஆனால் பிள்ளையவர்கள் தான் பதிப்பித்த நூல்கள் அனைத்தையும் அடி பிரித்துச் சுத்தபாடமாகப் பதிப்பித்துள்ளார் என்பது கவனிக்கத்தக்கது.

மேலும் பிள்ளையவர்கள் தன்னிடமிருந்த சுவடிகளைப் பதிப்பித்திருந்தால் அவை கி.பி. 19ஆம் நூற்றாண்டின் இடைப்பகுதியிலேயே பதிப்பியல் நுணுக்கங்களைப் பெற்று வெளிவந்திருக்கக்கூடும். ஆனால் துரதிருஷ்டவசமாக அப்படியொன்றும் நிகழவில்லை.

இவ்வாறாக மீனாட்சிசுந்தரம் பிள்ளையின் பதிப்புகளின் வரலாற்றையும் அவரின் வரலாற்றெழுதியலில் உள்ள குறையையும் காணவேண்டிய அதே நேரத்தில் தமிழ்ப் பதிப்பு வரலாற்றில் இன்னும் கவனப்படுத்தப்படாத பதிப்புக்களில், கி.பி. 18, 19ஆம் நூற்றாண்டுகளில் எழுதிக் குவிக்கப்பட்ட தலபுராணங்களை வெறுமனே வைதீக சமயத்தின் பாற்பட்டதாகக் கருதி ஒதுக்குதல் என்பதும், அவை உள்ளூர் வரலாறு உருவாக்குதலுக்கான சான்றாதாரமாகத் திகழ்வதையும் கருதத் தவறிவிட்டோம். அத்தலபுராணங்களின் பதிப்பு வரலாற்றைச் சமூக இயங்கியல் பார்வையோடும் எழுத வேண்டிய அவசியமுள்ளது. இதில் மகாவித்துவான் மீனாட்சி சுந்தரம் பிள்ளை போன்றவர்களின் பங்களிப்பினையும் அக் காலகட்டத்திற்கான சமூக வரலாற்றையும் ஒருவாறாக உருவாக்க முடியும்.

(குறிப்பு: இக்கட்டுரைக்குப் பயன்பட்டுள்ள நூல்களின் முகப்புப் பக்கங்கள் ரோஜா முத்தையா மற்றும் மறைமலையடிகள் நூலகத்திலிருந்து எடுக்கப்பட்டவை.)

## துணைநூற்பட்டியல்


1. அச்சும் பதிப்பும் - மா.சு. சம்பந்தன், மணிவாசகர் பதிப்பகம், சென்னை, 1997.
2. நூல் பதிப்பும் நுண் அரசியலும் - அ. சதீஷ், புலம் வெளியீடு, சென்னை, 2010.
3. ஸ்ரீ மீனாட்சிசுந்தரம் பிள்ளையவர்களின் சரித்திரம் - பாகம் 1, 2 - உ.வே.சாமிநாதையர், தமிழ்ப் பல்கலைக்கழகம், தஞ்சாவூர், 1986.




# அத்திப்பாக்கம் வேங்கடாசல நாயகர்:

## 19ஆம் நூற்றாண்டின் தொண்டை மண்டல நில உறவுகள்



வீ. அரசு

சென்னைப் பல்கலைக்கழகத் தமிழ் இலக்கியத்துறையின் தலைவர். வ.உ.சி., ப. ஜீவானந்தம், சங்கரதாஸ் சுவாமிகள் மற்றும் புதுமைப்பித்தன் ஆகியோரின் ஆக்கங்களைப் பதிப்பித்துள்ளார். ரிக்வேதம் – ஆங்கில மொழிபெயர்ப்பு, தமிழ் மொழிபெயர்ப்பு ஆகியவற்றை உள்ளடக்கிய தொகுதிகள் உருவாக்கத்தில் செயல்பட்டவர். இவரது ஆய்வுக் கட்டுரைகள் மூன்று தொகுதிகளாக வெளிவந்துள்ளன. 'கங்கு' மற்றும் 'மாற்று' வெளியீட்டு வரிசையின் ஒருங்கிணைப்பாளர். அவ்வரிசையில் 'சிறுபத்திரிகையின் அரசியல்' என்ற நூலை எழுதியுள்ளார். சாகித்திய அகாடமியின் இந்திய இலக்கியச் சிற்பிகள் வரிசையில் 'மயிலை சீனி. வேங்கடசாமி' பற்றிய நூலை எழுதியுள்ளார். 'கட்டியம்', 'மாற்றுவெளி' ஆகிய இதழ்களின் சிறப்பாசிரியர்.

பதினைந்தாம் நூற்றாண்டின் இறுதிக் காலம் தொடங்கி பதினெட்டாம் நூற்றாண்டின் இறுதிவரை இந்தியாவின் தென்பகுதி நிர்வாகம் பல்வேறு குழப்பங்களுக்கு உட்பட்டதாக அமைந்திருந்தது. பல்வேறு சிற்றரசுகள், பாளையக்காரர்கள், பிரித்தானியக் கிழக்கிந்தியக் கம்பெனி ஆகிய பிறரின் அதிகாரத்திற்கு இந்நிலப்பகுதி ஆட்பட்டிருந்தது. விஜயநகர மன்னர்கள், மராட்டியர்கள், பிரெஞ்சுக்காரர்கள், டச்சுக்காரர்கள், ஆங்கிலேயர் என்று பலரும் அரசதிகாரத்தைப் பங்கு போட்டுக் கொண்டிருந்தார்கள்.

இச்சூழலில் கிராம அளவிலான நிர்வாகத்தில் இருந்தவர்களுக்கும் அரசாங்க அளவில் நிர்வாகம் செய்தவர்களுக்கும் இடையில் இடைவெளி உருவானது. நேரடியாக வரி வசூல் செய்வதில் சிக்கல்கள் உருவாயின. இந்தப் பின்புலத்தில், நிலம் தொடர்பான உறவுகளில் பல புதிய தன்மைகள் உருவாயின. நிலத்தில் யார் பயிரிடுவது? நிலத்தின் மூலம் கிடைக்கும் வருவாயை எப்படிப் பகிர்வது? நிலத்தை எப்படி அளப்பது? ஆகிய பிற கேள்விகள் எழுந்தன. அவ்வப்போது ஏற்பட்ட பஞ்சங்கள், இக்கேள்விகளின் முக்கியத்துவத்தை அதிகரிக்கச் செய்தன. இச்சூழலில், பிரித்தானியரின் கிழக்கிந்தியக் கம்பெனிக்கும் திப்பு சுல்தானுக்குமான இறுதிப் போர் நடந்து கொண்டிருந்தது.

1792இல் கிழக்கிந்தியக் கம்பெனி தென்னிந்திய நிலப்பகுதியை விடுவித்து, அவர்களின் அதிகாரத்தில் கொண்டு வந்தனர். 1799இல் திப்பு சுல்தான் மறைவோடு, அவர்கள் நிம்மதியாகச் செயல்படத் தொடங்கினர். பதினெட்டாம் நூற்றாண்டு முழுவதும் வெவ்வேறு இடங்களில் வெவ்வேறு வகையில் போர் நடந்து கொண்டிருந்தது. 18ஆம் நூற்றாண்டின் இறுதியில் மதறாஸ் இராஜதானியைப் பிரித்தானியர்கள் உருவாக்கியதின் மூலம் போர்கள் நின்றன.

இவ்விதம் சுமார் 250 ஆண்டுகளின் தொடர்ச்சியான போரில், பிரித்தானியர்கள் வெற்றியடைந்த பின் பல்வேறு நிர்வாக அமைப்புகளை உருவாக்கத் தொடங்கினர். ரெவின்யூ போர்டு ஒன்றை 1794இல் உருவாக்கினர். சுங்க இலாகா ஒன்றை 1806இல் உருவாக்கினர். பஞ்சங்களால் ஏற்பட்ட விளைவுகள் குறித்து விரிவான அறிக்கைகளைத் தயாரித்தனர். ஒய்.டபில்யூ. எல்லீஸ் 1874இல் 'மிராசுதாரி' முறை குறித்த விரிவான ஆய்வறிக்கையைச் சமர்ப்பித்தார். அரசர்கள், ஜமீன்தாரர்கள், பாளையக்காரர்கள் ஆகியோருடன் கொள்ளும் உறவுமுறை குறித்தும் விரிவான திட்டங்கள் வகுக்கப்பட்டன. அதிகமான வரிவசூலிப்பு, கொள்ளை மற்றும் திருட்டு ஆகியன மிகுதியாக உருவாகி இருந்தன.

பல கிராமங்களில் வாழ்ந்த மக்கள், மேற்குறித்த நிலைமைகளுக்கு அஞ்சி, தாம் குடியிருந்த இடங்களைக் காலிசெய்துவிட்டுக் காடுகளில் சென்று வாழ்க்கையைத் தொடங்கினர். இவ்வகையில் 'கர்நாடகம்' மற்றும் 'மலபார்' என்று அழைக்கப்பட்ட இன்றைய தென்னிந்தியப் பகுதிகளின் அரசியல் வரலாறு பலரால் விரிவாகப் பதிவு செய்யப்பட்டிருப்பதைக் காண்கிறோம். ஆனால் பொருளாதார வரலாறு பதிவு செய்யப்பட்டிருப்பதாகக் கூற முடியாது. 'மதறாஸ்' இராஜதானியின் ஒரு பகுதியான தொண்டை மண்டலப் பகுதியில் வாழ்ந்த அத்திப்பாக்கம் வேங்கடாசல நாயகர் என்பவர் குறித்த நமது உரையாடல் மூலம், தொண்டை மண்டலப் பகுதியின் 19ஆம் நூற்றாண்டுப் பொருளாதார வரலாற்றைப் புரிந்துகொள்ள முயலலாம். இம்மனிதர் குறித்த உரையாடலைப் பின்கண்ட வகையில் அமைத்துக் கொள்ளலாம்.

- 1872இல், அத்திப்பாக்கம் வேங்கடாசல நாயகர் எழுதிய *'பாயக்காரிகளுக்கும் மிராசுதாரர்களுக்கும் உண்டாகியிருக்கிற விவாதம்'* என்னும் நூல் அடிப்படையில் தொண்டை மண்டலப் பொருளாதார வரலாற்றைப் புரிந்துகொள்ளல்.
- 1883இல் 'தத்துவ விவேசினி' இதழ் மூலம் கிடைக்கும் அவரது கடிதங்கள் வழி அறியப்படும் செய்திகள்.
- 1882இல் இவர் எழுதி வெளியிட்டுள்ள 'இந்துமத ஆசார ஆபாச தரிசினி எனும் நூல் மூலம் பெறப்படும் செய்திகள்.

'கர்நாடகம்' மற்றும் 'மலபார்' என்று அழைக்கப்பட்ட இன்றைய தென்னிந்தியப் பகுதிகளின் அரசியல் வரலாறு பலரால் விரிவாகப் பதிவு செய்யப்பட்டிருப்பதைக் காண்கிறோம். ஆனால் பொருளாதார வரலாறு பதிவு செய்யப்பட்டிருப்பதாகக் கூற முடியாது. 'மதறாஸ்' இராஜதானியின் ஒரு பகுதியான தொண்டை மண்டலப் பகுதியில் வாழ்ந்த அத்திப்பாக்கம் வேங்கடாசல நாயகர் என்பவர் குறித்த நமது உரையாடல் மூலம், தொண்டை மண்டலப் பகுதியின் 19ஆம் நூற்றாண்டுப் பொருளாதார வரலாற்றைப் புரிந்துகொள்ள முயலலாம்.

அத்திப்பாக்கம் வேங்கடாசல நாயகர் மறைந்தபோது 'அக்னிகுல க்ஷத்திரிய மித்திரன்' (18-09-1857) எனும் இதழ் வெளியிட்ட செய்தியின் சில பகுதிகளைக் கீழே தருகிறேன். இதன் மூலம் இவர் குறித்துப் புரிந்துகொள்ள வாய்ப்பாக அமையும்.

“வேங்கடாசல நாயகர் செங்கற்பட்டு மாவட்ட, அத்திப்பாக்கத்தில் சுமார் கி.பி. 1800ஆம் ஆண்டில் பிறந்து, சென்னையில் வளர்ந்து, தமிழ்மொழியை நன்கு கற்று முதலில் மிஷினெரிப் பள்ளியில் உபாத்திமைத் தொழிலில் அமர்ந்து மிக்க சிறப்புற்று யாவராலும் நன்கு மதிக்கப்பட்டு வந்தார். பின்பு மூலக் கொத்தளம் சுண்ணாம்புக் காளவாயில் பெரிய வியாபாரஞ் செய்து பொருளீட்டினார். அவர் வியாபாரக் கூட்டத்தினர்க்கு இவர் தலைவராயிருந்து அவர்களுக்கும் நலஞ் செய்தனர்”. (வே. ஆனைமுத்து, 1993: xxxiv)


MADRAS—SUNDAY, NOVEMBER 2,

இவ்வகையில் பத்தொன்பதாம் நூற்றாண்டின் தொடக்கத்தில் ஆங்கிலக் கல்விபெறும் வாய்ப்பு பெற்றவர். நமது கட்டிடக்கலை வரலாற்றில், சுண்ணாம்பு பயன்படுத்துதல் எப்போது தோன்றியது என்ற விவரம் அறிய வேண்டும். பிற்காலச் சோழர் காலங்களில் (கி.பி. 9ஆம் நூற்றாண்டுக்குப் பின்) காரைக்கட்டிடங்கள் கட்டப்பட்டுள்ளன. இவ்விதம் சுண்ணாம்புக் காரையைச் சாதாரண மக்களும் பயன்படுத்திக் கட்டிடங்கள் கட்டும் வழக்கம் பதினெட்டாம் நூற்றாண்டு இறுதி மற்றும் பத்தொன்பதாம் நூற்றாண்டில் பரவலாயிருக்க வேண்டும். இன்றைக்குச் சிமிட்டியைப் பயன்படுத்துவதைப் போல, அன்றைக்குச் சுண்ணாம்பைப் பயன்படுத்தி வந்துள்ளார்கள். இவ்வகையில் சுண்ணாம்பைத் தயாரித்தவர்கள் இன்றைய சென்னையில், சூளை என்று அழைக்கப்படும் பகுதியில் வாழ்ந்து வந்திருக்கிறார்கள். சுண்ணாம்புச் சூளையால் அப்பகுதி சூளை என்று அழைக்கப்பட்டதாகக் கருதலாம்.

சுண்ணாம்பு வணிகத்தை வன்னியர்கள் செய்து வந்திருக்கிறார்கள். அதில் அவர்கள் இலாபம் ஈட்டி வளமுடன் வாழ்ந்து வந்திருப்பதையும் அறிய முடிகிறது. வளமுடன் வாழ்ந்த வன்னிய சமூகத்தில் ஒரு பிரிவினர் ஆங்கிலக் கல்வி பெற்றவர்களாகவும் இருந்தனர். இதன் மூலம் சமயம் மற்றும் சமூக சீர்திருத்த நடவடிக்கைகளில் மேற்குறித்தப் பின்புலத்தில் வாழ்ந்தவர்கள் ஈடுபட்டதை அறிய முடிகிறது. இப்பின்புலத்தில்தான் வேங்கடாசல நாயகர், பு. முனிசாமி நாயகர், சோமசுந்தர நாயகர் ஆகியோர்களைப் புரிந்துகொள்ள வேண்டும். வன்னியர் சமூகம் வணிகத்தில் ஈடுபட்டதையும் அதற்கு வேங்கடாசல நாயகர் உதவியதையும் பின்வரும் குறிப்பு உறுதிப்படுத்துகிறது.

“இத்தரும சீலர் வட நாட்டின்கண் கும்மிடிப்பூண்டி முதலிய இடங்களிலிருந்து வணிகத் துறையில் வண்டிகளில் சரக்குகளை ஏற்றிவரும் ஏழைகளாகிய வன்னியர்களைத் தங்கசாலைக்கு அடுத்து வடபுலத்திலிருக்கும் தம் சொந்த வண்டித் தொட்டியில் இருக்கச் செய்து, உணவு முதலியன தந்து அவர்களுடைய சரக்குகளை உள்ளூர் வியாபாரிகள் ஏமாற்றி மோசம் செய்ய வொட்டாது அவர்களது கஷ்ட நஷ்டங்களைப் பார்த்துத் தாமே முன்னின்று விற்பனை செய்து அவர்களிடம் ஒப்புவித்து எச்சரிக்கையாய்ப் போகும்படி அடிக்கடி அவர்களுக்கு வேண்டிய உதவிகளைச் செய்துவந்தார். இதனால் அவ்வேழைகளும் மிக்க அன்புடன் அவரது வாழ்நாள் முழுவதும் நமக்கு யாதொரு தீங்கும் நேரிடாதென்று வாழ்த்திப் போவார்கள்.'' (மேற்படி:xxxiv)

இவ்வகையில் செயல்பட்டு வந்த அத்திப்பாக்கம் வேங்கடாசல நாயகர் எழுதிய *“பாயக்காரிகளுக்கும் மிராசுதர்களுக்கும் உண்டாயிருக்கிற விவாதம்”* அல்லது செங்கற்பட்டு ஜில்லா றிவினியு ஏர்(ற்)ப்பாட்டைக் குறித்து மேற்படி ஜில்லாவிலிருக்கும் பாயக்காரி சுகவாசிகளுக்கு ஏஜெண்டாகிய அத்திப்பாக்கம் வேங்கடாசல நாயகரால் தமிழில் இயற்றப்பட்டு- இங்லீஷில்- ‘இந்திய அசோசிஎஷன் சபையாருக்கு அப்பீல் செய்த இவ்விஷயங்களை பாயக்காரி சுகவாசி முதலானவர்களுக்கும்... புங்கத்தூர் ம. சபாபதி முதலியாரது கல்வி விளக்க அச்சுக்கூடத்திற் பதிப்பிக்கப்பட்டது’. இந்நூல். இவர் முன்னரே ஆங்கிலத்தில் எழுதியதைத்

தமிழில் மொழிபெயர்த்தது ஆகும். இந்நூலின் செய்தியைப் பின்கண்டவாறு நாம் தொகுத்துக் கொள்ளலாம்.

*-பிரித்தானியர் உருவாக்கிய ரெவின்யூ போர்டு போன்ற அமைப்புகள், சாதாரண மக்கள் பயன்படுத்தி வந்த நிலத்தை அவர்களே பாத்தியம் கொள்ள வாய்ப்புகளை ஏற்படுத்தின.*

*-ஏழை வன்னியர்கள் மற்றும் பறையர்கள் காலம் காலமாகப் பயன்படுத்திய அந்நிலப் பகுதிகளைத் தெலுங்கு மற்றும் மராட்டியப் பார்ப்பனர்களும் பிறரும் எடுத்துக் கொண்டனர்.*

*-சொந்த நிலத்திலேயே அவர்களை உழைக்கச் செய்து, அவர்களுக்குத் தற்காலிகமாகக் குத்தகைக்கு விட்டிருப்பதாக ஆவணங்களை உருவாக்கினர். இவ்வகையில் தற்காலிகமாகப் பயன்படுத்துவதையே 'பாயக்கா' என்றும் குறிக்கின்றனர்.*

*-பாயக்காரிகள் அல்லது சுகவாசிகளுக்கு அவர்களது நிலத்தை மீண்டும் பெறச் செய்வதற்காக, ஏஜெண்டாக வேங்கடாசல நாயகர் செயல்பட்டார்.*

பாயக்காரிகள் மிராசுதார்களோடு
செய்த போராட்டம்

பாயக்காரிகளுக்கும் மிராசுதார்களுக்கும்
உண்டாயிருக்கிற விவாதம்

1860லேயே தலித் இனமக்களின்
முதல் எழுச்சிக்குரல்

பதிப்பாசிரியர்
முனைவர் க. ரத்னம்

தொண்டை மண்டலப் பகுதியின், பத்தொன்பதாம் நூற்றாண்டுப் பொருளாதார வரலாற்றை அறிய உதவும் ஆவணமாக அமைந்திருக்கும் இந்நூல், டிசம்பர் 2000ஆம் ஆண்டில் முனைவர் க. ரத்னம் அவர்களால் பதிப்பிக்கப்பட்டுள்ளது. இதனை ஐந்திணைப் பதிப்பகம் வெளியிட்டுள்ளது. *'பாயக்காரிகள் மிராசுதாரர்களோடு செய்த போராட்டம்' 1860இலேயே "தலித் இனமக்களின் முதல் எழுச்சிக்குரல்"* என்ற தலைப்பில் வெளிவந்துள்ளது. (நூலின் மூலத் தலைப்பு முன்னர் கொடுத்தவாறு.) இந்நூலை மறுஅச்சு செய்த பதிப்பகத்தாரும் பதிப்பாசிரியரும் பெரிதும் பாராட்டுக்குரியவர்கள். வன்னியர்களையும் 'தலித்' என்று பதிப்பாசிரியர் கருதுவது கவனத்தில் கொள்ளத்தக்கது. இச்சிறு நூலின் முக்கியத்துவத்தைப் பின்காணும் வகையில் நாம் தொகுத்துக் கொள்ள முடியும்.

- பத்தொன்பதாம் நூற்றாண்டு தொண்டை மண்டலப் பொருளாதார வரலாறு எழுதுதற்கான அடிப்படைத் தரவு நூலாக அமைகிறது.

- பிரித்தானியர்களின் நிர்வாகச் செயல்பாடுகள் எவ்வகையில் அமைந்திருந்தன என்ற புரிதலுக்கு உதவுகிறது.

பத்தொன்பதாம் நூற்றாண்டுக்கு முன் ஆட்சி புரிந்த தெலுங்கர், மராட்டியர், குறிப்பாக இச்சாதி பார்ப்பனர்கள் மற்றும் ரெட்டி, நாயுடு போன்ற மிராசுதாரர்கள், சாதாரண மக்களை எப்படி அடிமைப்படுத்தினர் என்ற வரலாறு அறிய முடிகிறது. பிரித்தானியர்கள், மிராசுதாரர்களிடமும் சாதாரண மக்களிடமும் எவ்வகையான அணுகுமுறைகளைக் கொண்டிருந்தார்கள் என்ற வினாவை எழுப்பும்போது, பிரித்தானிய அதிகாரிகள், சாதாரண மக்கள் மீது அனுதாபம் செலுத்தியவர்களாக இருந்திருக்கக் கூடுமோ என்ற சந்தேகத்தை இந்நூல் உருவாக்குகிறது. திரு. வேங்கடாசல நாயகர் அப்பகுதி மக்களின் நிலம் தொடர்பான செய்திகளை அரசாங்கத்துக்குத் தெரியப்படுத்தியுள்ளார். இதன்மூலம் பிரித்தானியர் காலத்திற்கு முந்தைய நில உறவிற்கும் பிரித்தானியர் கால நில உறவிற்குமான வேறுபாடுகளை நாம் அறிய முடிகிறது. இந்நூலில் வேங்கடாசல நாயகர் பின்கண்டவாறு எழுதுகிறார்.

1. 1863ஆம் வருஷம் மிராசு நிலம் என்பதை எடுத்துவிட்டு சர்க்கார் நிலத்தைக் குடிகள் கைப்பற்றிச் சாகுபடி பண்ணுகிறபடியால் எல்லா நிலமும் சர்க்காருடையது என்று ஸ்தாபித்தும்,

2. மிராசு பட்டா, பாயக்காரி பட்டா என்றில்லாமல் நெம்பர் பட்டாவாய்ப் போட்டு வைத்தும்,

3. அடிக்கடி தர்காஸ்து ரூலை பிறப்பித்து தர்க்காஸ்தைக் காயப்படுத்தியும், (தர்காஸ்து - அடமானம்)

4. இராசாக் கொடுத்து கொள்ளையிட்டுக் கொண்டு வந்த கிராமங்களை நபாக்தி பட்டா பண்ணியும்,

5. ஒருவன் கைப்பற்றும் நிலத்தைப் பட்டாதாரன் அப்புறப்படுத்தக் கூடாதென்றும்,

6. பட்டாதாரன் குடிகள் கட்டிய தீர்வைப் பணத்தைத் தான் கட்டாமல் குடிகள் கைப் பற்றிய நிலத்தை ஏலம் போட்டு அபகரிக்கிறதைத் தடுக்க மேற்படி கைப்பற்று நிலத்துக்குடைய குடிகள் கட்டினாலும் சர்க்காரில் கட்டிக் கொள்ளும்படி உத்தரவு பண்ணியும்,

7. பலவித வசா பண்ணிக்கொண்டு நிலத்தை கொண்டும் விஸ்தாரம் குடிகளால் சாகுபடியாக்கச் செய்கிறார்கள். அவனவன் கைப்பற்று நிலத்திற்கு நபாகதி பட்டா பண்ண உத்தரவாகியிருக்கிறதை நிறைவேற்றாமல் இருக்கிறதைக் குறித்தும் மிட்டா சுரோத்திரயம், சாகீர் முதலானதைக் குறித்துக் கவர்மெண்டார் ஆலோசனையிலிருக்கிறார்கள். (க. ரத்னம். (பதிப்பு):2000:56)

மேற்குறித்த பகுதியில் வரும் பல சொற்கள் இன்றைய சூழலில் பொருள் விளங்குவதற்குச் சிக்கலாக இருக்கலாம். ஆனால் அவர் கூறியுள்ள செய்திகள் அடிப்படையில் நாம் புரிந்து கொள்வது இதுதான்.

பிரித்தானியர்கள், பிரித்தானியர்களுக்கு முற்பட்ட காலத்து அரசர்கள், பிற பாளையக்காரர்கள், மிராசுதாரர்கள் ஆகிய இரு

> நவீனத் தன்மைகளோடு உருவாகி வந்த காலனியமும் காலம் காலமாக இருந்துவரும் சாதியமும் இங்கு முரண்படுவதைக் காண முடிகிறது. இதில் ஆதிக்க சாதியினர் எல்லாக் காலங்களிலும் தமது ஆதிக்கத்தை எவ்வெவ்வகையில் கட்டமைத்துக் கொள்கிறார்கள் என்பதைப் பத்தொன்பதாம் நூற்றாண்டின் தொண்டை மண்டல நிகழ்வுகள் மூலம் புரிந்துகொள்ள முடிகிறது.

அடக்கட்டிக் கொண்டிருந்ததற்கு யாதொரு வசாவும் கொடாமல் தீர்வை கட்டாவிட்டால் நிலத்தை ராஜினாமா கொடுக்கிறதென்றும்,

8. சொற்ப பாக்கிக்கும் மிராசு பாத்தியம் என்னும் நிலத்தை ஏலத்தில் விற்கவும்,

9. நான்கு வருஷம் ஐந்து வருஷம் பணம் கட்டாமல் நாதாரால் பாக்கியென்று அபகரித்துக்கொண்டு வந்ததற்கு கிஸ்திப் பிரகாரம் பணங்கட்டாவிட்டால் வட்டி டிண்டு படியுடன் உடனுக்குடனே வசூல் பண்ணவும்,

10. பாயக்காரிகள் காட்டில் கொம்பும் புளியன் பனை மர முடியானதில் தொடவொட்டாமல் அதில் ஆயிரம், ஐம்பது நூறு வரும்படி பண்ணிக்கொண்டிருந்த மேற்படி காடு மரம் வகையறாக்களை சர்க்காரில் சேர்த்துக்

பிரிவில், பிரித்தானியர்கள் சாதாரண மக்களுக்கு ஓரளவு ஆதரவாக இருப்பதும், ஆதிக்கச் சாதியைச் சேர்ந்த மிராசுதாரர்கள் போன்றவர்கள் மக்களுக்கு எதிராக இருப்பதையும் தெரிந்துகொள்கிறோம். பிற்காலத்தில் அயோத்திதாசர், பெரியார் ஆகியோர் பிரித்தானியர்களுக்கு ஆதரவாகச் செயல்பட்ட மனநிலையும் வேங்கடாசலநாயகர் பிரித்தானியர்கள் பற்றி எழுதுவதையும் இங்கு இணைத்துப் பார்க்கலாம்.

பாரம்பரியமாகத் தொடர்ந்து வரும் சாதிய ஆதிக்கம் எவ்வகையில் பொருளாதார ஆதிக்கமாக வடிவம் பெறுகிறது என்பதை இதன்மூலம் புரிந்துகொள்ள முடிகிறது. பிரித்தானியர் அணுகுமுறை சாதியச் சட்டங்களைக் கொண்டு செயல்படாமையால் ஏற்படும் விளைவுகளையும் இங்குப் புரிந்துகொள்ளமுடியும். நவீனத் தன்மைகளோடு உருவாகி வந்த காலனியமும் காலம் காலமாக இருந்துவரும் சாதியமும் இங்கு

முரண்படுவதைக் காண முடிகிறது. இதில் ஆதிக்க சாதியினர் எல்லாக் காலங்களிலும் தமது ஆதிக்கத்தை எவ்வெவ்வகையில் கட்டமைத்துக் கொள்கிறார்கள் என்பதைப் பத்தொன்பதாம் நூற்றாண்டின் தொண்டை மண்டல நிகழ்வுகள் மூலம் புரிந்துகொள்ள முடிகிறது. இவ்வகையில் வேங்கடாசல நாயகர் பதிவு காலனியத்தையும் நிலப்பிரபுவத்தையும் இன்றைய வளர்ச்சியோடு புரிந்துகொள்ள உதவும் அரிய ஆவணமாக அமைந்திருக்கிறது. அவர் எழுதும் கீழ்க்காணும் பகுதி நமது கருத்தை உறுதிப்படுத்துகிறது.

"1858ஆம் வருஷத்தில் நம்முடைய அரசி ராணி விக்டோரியம்மன் அவர்கள் இந்த இந்து தேசமெல்லாம் பாடசாலை வைத்து ஏழைப் பிள்ளைகளை வாசிக்கச் செய்கிறதென்று அனுப்பின உத்திரவை மாற்றி இந்தப் பின்புலத்தில் கடைசிப் பக்கத்தில் சொல்கிறபடி முக்கியமாய் நம்முடைய சாதிப்பிள்ளைகளுக்கு உதவவொட்டாமல் செய்து பார்ப்பார் முதலானவர்கள் தங்கள் பிள்ளைகளையே வாசிக்கச் செய்து கொண்டார்கள். அதைப் பற்றி நான் என்ன முயற்சி பண்ணியும் அப்போது நடவாமல் இப்போது கர்த்தாவுக்குத் தயவு பிறந்த மின்ஸ்பால் (முனிசிபல்) கமிசனரவர்களால் கிராமங்கள் தோறும் பாடசாலை ஏற்படுத்தி ஏழைப் பிள்ளைகளும் வாசிக்க உத்தரவாகி முயற்சி நடக்கிறது." (மேற்படி: 34)

இவ்வகையில் பிரித்தானியர்களது செயல்பாடுகளைப் பதிவுசெய்யும் நாயகர், செங்கற்பட்டு பகுதி முழுவதும் இருந்த நிலப்பகுதி குறித்து மிராசுதார், வன்னியர் ஆகிய இரு பிரிவினரிடத்தும் இருந்த முரண்பாடுகளை விரிவாகப் பதிவு செய்துள்ளார். மன்னவேடு, பாயக்காரி, சுகவாசி, உட்குடிகள் ஆகிய சொற்களால் ஏழை வன்னியர்களை நாயகர் குறிப்பிடுகிறார். இவர்களுக்கு நிலம் கிடைக்கவேண்டும் என்பதற்காக இவர் மேற்கொண்ட முயற்சிகளின் பதிவாக அமைந்துள்ள இந்நூலில், பிரித்தானியர்களிடம் அவர் வைத்த கோரிக்கைகள் விரிவாகப் பதிவு செய்யப்பட்டுள்ளன.

பிரித்தானிய அதிகாரிகள், தொன்மையான மரபை உணராமல், மிராசுதாரர்களின் விளக்கங்களை அடிப்படையாகக் கொண்டு சில வேளைகளில் செயல்படுகிறார்கள் என்றும் அவ்விதம் செயல்பட்ட துரைமார்களின் செயல்பாடுகள் குறித்தும் மிக விரிவாகப் பதிவு செய்துள்ளார். செங்கற்பட்டு ஜில்லாவில் 4இல் 3 பங்கு மிராசுதார்களிடத்தில்தான் உள்ளன. மிராசுதாரர்கள் எவ்விதம் நிலத்தைப் பெற்றார்கள் என்பதை வேங்கடாசல நாயகர் பின்வருமாறு பதிவு செய்கிறார்.

"மூன்றாவது சப்ளிமெண்டு மிமோயத்தில் பாயக்காரி ஏஜெண்டு சுருக்கமாய் காண்பிக்கிறதென்னவென்றால்:

1. மிராசுதாரென்று சொல்லப்பட்டவர்களுக்கு ஊழிய மானியம் அல்லது மிராசு நிலங்கள் தவிர பாயக்காரி சுகவாசிகள் காடு கரம்பு திருத்தி சாகுபடிக்குக் கொண்டு வந்த நிலங்களுக்கு எவ்வளவும் பாத்தியமில்லையென்று காண்பித்திருக்கிறார்கள். இந்த மிராசுதாரென்று சொல்லப்பட்டவர்கள் கவர்ன்மெண்டாரை மோசஞ் செய்கிறதுமல்லாமல் பாயக்காரி களிடத்திலிருந்து துண்டு வாரம், தீர்வை, சாஸ்தி, அமிஞ்சி, தெண்டம் முதலானதுகளை வகுத்துப்படுத்தி வசூல் செய்கிறபடியால், அவர்களை மிதித்துத் தூசியாலும் நிர்மூலமாக்கிப் போடுகிறார்கள்.

2. ஏரிகளை மராமத்து செய்கிறதற்கும் சாகுபடிக்கு மேன் காவலாயிருக்கிறதற்கும் நாட்டுவருக்கு சுரோத்தியங்கள் கொடுக்கப்பட்டது. ஆனால் எதற்காகக் கொடுக்கப்பட்டதோ அந்த ஏற்பாடுகளை நிறைவேற்றவில்லை. பாயக்காரிகள் தங்களுடைய இஷ்டமாயிருந்தும் சக்தியை உடைத்தாயிருந்தும் மேற்படி கொள்ளைக்காரர்களால் தடுக்கப்படுகிறார்கள்." (மேற்படி 65- 66).

பிரித்தானிய ஆட்சியாளர்கள், இந்தியா முழுவதும் நடைமுறைப்படுத்தும் நிலம் தொடர்பான அனைத்து நடைமுறைகளையும் விரிவாக அறிந்து வேங்கடாசல நாயகர் பதிவு செய்துள்ளார். தாம் பல்வேறு ஆங்கிலப் பத்திரிகைகளில் எழுதிய தகவல்களையும் தொகுத்துத் தந்திருக்கிறார். மிராசுதாரர்கள் எந்தெந்த வகையில் எல்லாம் அரசாங்கத்தை ஏமாற்றி வரி கொடாமல் இருக்கிறார்கள் என்ற விவரங்களை எழுதியுள்ளார். மாறாக, பாயக்காரிகள் நேர்மையாகச்

செயல்படுவதையும் சுட்டிக்காட்டுகிறார். மிராசுதாரர்கள் நடவடிக்கைகள் பற்றிப் பிரித்தானிய அதிகாரிகள் பதிவு செய்திருப்பதாகக் கூறுகிறார். அவர்கள் பிளேசு, எல்லீசு, ஆட்சன், வாலீசு, ஆரீஸ், லசிங்ட்டனி, தாக்கி, காம்பல், சர் தாமஸ் மன்றோ ஆகியவர்கள்.

நாயகரின் வாதம் என்பது, மிராசுதார்களுக்கும் நிலத்திற்கும் உறவு கிடையாது. இடையில் வந்து தந்திரமாக நிலங்களைக் கைப்பற்றிக் கொண்டவர்கள் பார்ப்பனர்கள். குறிப்பாகத் தெலுங்கு, மராட்டிய பார்ப்பனர்கள், வேளாளர்கள், முதலிகள், ரெட்டிகள், நாயுடுகள். இவர்களிடமிருந்து நிலங்களைப் பிடுங்கி மன்னவேடு வன்னியர்களின் சாகுபடிக்குக் கொடுக்க வேண்டும் என்பதே இதில் உள்ள வரலாற்றுப் பூர்வமான நியாயங்கள். நடைமுறைச் செயல்பாடுகள் ஆகியவற்றை விரிவாகப் பதிவு செய்துள்ளார்.

பார்ப்பாரும் வேளாளரும் பறித்துக்கொண்ட வன்னியரின் மன்னவேடு ஊர்கள்




இந்நியாயங்களை உறுதிப்படுத்தி 'தத்துவவிவேசினி' இதழில் 'கடிதம்' எனும் தலைப்பில் ஒன்பது வாரங்கள் எழுதியுள்ளார். இதனைத் தொகுத்து திரு. வே. ஆனைமுத்து "பார்ப்பாரும் வேளாளரும் பறித்துக்கொண்ட வன்னியரின் மன்னவேடு ஊர்கள்" (1993) என்னும் தலைப்பில் வெளியிட்டுள்ளார். அக்கடிதங் களிலிருந்து ஒரு பகுதி வருமாறு:

"கஞ்ச தேசம் அல்லது செங்கற்பட்டு இந்த ஜில்லா கிராமங்களெல்லாம் அக்கிறாரம், மன்னர்வேடு, நந்தமென்று நாளது வரையிலும் சர்க்கார் ரிக்கார்டுகளினாலும் அந்தக் கிராமக்குடிகள் சாதாரணமாய்ச் சொல்லி வழங்கிக்கொண்டு வருவதினாலும்,

அந்தந்தக் கிராம எல்லைக்கல்லில் பதிந்திருக்கிற சின்னங்களினாலும் காணியாவினாலும் நிலக்குறிப்பினாலும் அக்கிறாரம் பார்ப்பார சாதியாருடையதென்றும், மன்னவேடு வன்னிய சாதியாருடையதென்றும், நத்தம் வெள்ளாழ சாதியாருடையதென்றும் விளங்கும். அப்படி அந்தந்தச் சாதிக்கும் பொதுவாய் அந்தந்தச் சாதியாரே அனுபவித்த கிராமங்களைப் பார்ப்பார் பிடுங்கிக் கொண்டு மிராசு பாத்தியமென்று ஏற்படுத்தி, மிராசு தங்களுடையதென்று வரவரத் தங்கள் சொல் சாமர்த்தியத்தினால் புரட்டி இராஜாங்கத்தாரையும் குடிகளையும் துரோகம் செய்தார்கள் என்று கவர்ன்மெண்டார் சித்தத்துக்கு விசிதமாகும் (வே. ஆனைமுத்து. பதிப்பு 1993: 87 88).

'தத்துவவிவேசினி' இதழ் 1882-1888 ஆண்டுகளில் வெளிவந்த சுயாக்கியானச் சங்கத்தினர் இதழ் ஆகும். இதன் ஆசிரியர் ப. முனுசாமி நாயகர் ஆவார். தமிழில் வெளிவந்த முதல் நாத்திக இதழ் இதுவாகும். இவ்விதழில் வேங்கடாசல நாயகர் எழுதியிருப்பது இங்குக் குறிப்பிடத்தக்கது.

மிராசுதாரர்களுக்கு எதிரான வேங்கடாசல நாயகர் செயல்பாடுகள், பத்தொன்பதாம் நூற்றாண்டில் குறிப்பிடத்தக்கதொரு நிகழ்வே. இதில் இவர் வெளிப்படுத்தும் விவரங்கள். வேறு பலராலும் விவாதிக்கப்பட்டிருப்பதை அறிய முடிகிறது. 1941இல் சென்னைப் பல்கலைக்கழகம் வெளியிட்டுள்ள 'சென்னை இராஜதானியின் பொருளாதார நிலைமைகள் 1800-1850' எனும் ஆங்கில நூல், முனைவர் எ. சாரதா ராஜு அவர்களால் எழுதப்பட்டது. ஆய்வேடு நூலாக வெளிவந்துள்ளது. இந்நூலில் வேங்கடாசல நாயகர் கூறும் பல விவரங்களையும் காண முடிகிறது. குறிப்பாக 'மிராசுதாரி'முறை மூலம் சாதாரண மக்களுக்கு ஏற்பட்ட விளைவுகளை இவ்வாய்வேடு விரிவாகப் பேசியிருப்பதைக் காண்கிறோம்.

யூஜின்.எப். இர்ஷிக் எழுதியுள்ள 'Dialogue and History - constructing South India - (1795-1895) எனும் நூலும் (1994) வேங்கடாசல நாயகர் கூறும் தகவல்களை வேறு கோணத்தில் அணுகி ஆய்வு செய்திருப்பதைக் காணமுடிகிறது. இவ்விரு ஆய்வாளர்களுக்கும் நாயகரது ஆங்கிலம் அல்லது தமிழ் நூலைப் பார்க்கும் வாய்ப்பு கிடைக்கவில்லை. இவர்கள் பிரித்தானியர்களின் ஆவணங்களை அடிப்படையாகக் கொண்டு ஆய்வு செய்திருக்கின்றனர். இவர்கள் ஆய்வுகளும்.

வேங்கடாசல நாயகர் செய்துள்ள பதிவுகளும் பலவகையில் ஒத்த கருத்துடையதாக அமைந்திருப்பதைப் பார்க்கின்றோம். ஆங்கில நூல்களில், செங்கற்பட்டுப் பகுதியில் வாழ்ந்த பறையர்கள் குறித்தும் பேசியிருப்பதைக் காண்கிறோம்.

'பறக்குடிகள்' எனும் தொடர் புழக்கத்தில் இருந்திருப்பதைக் காண்கிறோம். இவர்களுக்கு நிலம் உரிமையுடையதாக அமைந்திருப்பது குறித்தும் ஆங்கில நூல்கள் வழி அறியமுடிகிறது. வேங்கடாசல நாயகர், ஒரு சில இடங்களில் பறையர் குடிகள் பற்றிய குறிப்புகளைக் கொடுத்தாலும் அவர்களுடைய நிலவுரிமை குறித்து எவ்விடத்திலும் பேசாமல் இருப்பதைக் காண்கிறோம். பள்ளிகள் என்று அழைக்கப்பட்ட, வன்னியர்களின் மீதான ஒடுக்குமுறைக்கு எதிராகக் குரல் கொடுத்த இப்பெருமகன், வன்னியர்களைப் போல், ஒரு சில தருணங்களில் அவர்களைவிடவும் கொடுமையாக ஒடுக்கப்பட்ட பறையர் மக்களைப் பற்றி மௌனம் சாதித்திருப்பதைக் காண்கிறோம். நல்ல வேளையாக அவர்களை இழிவாகப் பதிவு செய்யவில்லை. அயோத்திதாசர் சக்கிலியர் மக்களைப் பற்றி இழிவாகப் பேசியதைப்போல் இவர் பேசவில்லை என்று அமைதியடையலாம். அறியப்பட்டதுபோல், வேங்கடாசல நாயகர் பெரிதும் அறியப்படவில்லை. தமிழகச் சாதிப் படிநிலைகளில் ஒடுக்கப்பட்ட சாதிகளில் ஒன்றாக வன்னியர் சமூகம் இருந்ததை நாம் மறப்பதற்கில்லை. சாணார் சமூகம் இவ்விதம் ஒடுக்கப்பட்ட சமூகமே. இவைகள், இருபதாம் நூற்றாண்டின் இடைக்காலம் தொடங்கி தங்களது ஒடுக்குமுறைகளிலிருந்து படிப்படியாக விடுதலை பெற்று வருகின்றன. அந்தந்தச் சமூகம், அவை ஒடுக்கப்பட்ட காலங்களில், அதற்காகப் போராடியவர்கள் பலர். இவ்வகையில் வேங்கடாசல் நாயகர் முக்கியமான ஆளுமையாகவே கருத வேண்டியவர்.

பறையர் மக்களின் நில உறவு குறித்து அண்மைக்காலங்களில் விரிவாக விவாதிக்கப்படுகிறது. 'பஞ்சமி நிலம் அல்லது Depressd Class Land குறித்த விவரங்கள் அறியப்பட்டு, அந்நிலங்களை மீட்கும் போரில் தலித் இயக்கங்கள், தற்போது ஈடுபட்டு வருகின்றன. 1891 இல் செங்கற்பட்டு ஆட்சியாளராக இருந்த ஜே.எச்.ஏ. ட்ரெமென் ஹரே என்பவர் கொண்டு வந்த சட்டத்தின் மூலம் பறையர் சமூகத்திற்கான நிலவுரிமை கிடைத்தது. அதனை ஆதிக்கச் சாதியார் பறித்துக் கொண்டனர். 1844இல் அடிமைமுறை சட்டப்படி ஒழிக்கப்பட்டாலும்,

1891இல் செங்கற்பட்டு ஆட்சியாளராக இருந்த ஜே.எச்.ஏ. ட்ரெமென் ஹரே என்பவர் கொண்டு வந்த சட்டத்தின் மூலம் பறையர் சமூகத்திற்கான நிலவுரிமை கிடைத்தது. அதனை ஆதிக்கச் சாதியார் பறித்துக் கொண்டனர். 1844இல் அடிமைமுறை சட்டப்படி ஒழிக்கப்பட்டாலும், பண்பாட்டுத் தளத்தில் அதனை நடைமுறைப்படுத்தி, பறையர் சமூக மக்களை அடிமைகளாகவே நடத்தினர். அவர்களுக்கு வழங்கப்பட்ட நிலங்களை மீண்டும் அவர்களுக்கே வழங்கக்கோரும் போராட்டங்கள் அண்மைக்காலங்களில் முன்னெடுக்கப்படுகின்றன.

தங்களை ஒடுக்கும் ஆதிக்க சாதிக்கு எதிராகப் போராடியவர்களான வேங்கடாசல நாயகர், அயோத்திதாசர் போன்றவர்கள், தங்களைவிடக் கீழாக உள்ளவர்கள் குறித்து கொண்ட மௌனம், இந்தியச் சாதி அமைப்பின் பரிமாணத்தைப் புரிந்துகொள்ள உதவுகிறது. பிற்காலங்களில் பார்ப்பனர் அல்லாதவர்களின் உரிமைக்குப் போராடிய பெரியாருக்கு முன்னோடியாக ஒடுக்கப்பட்ட பறையர் சமூகத்திற்கு அயோத்திதாசரும் வன்னியர் சமூகத்திற்கு வேங்கடாசல நாயகரும் போராடியிருக்கிறார்கள். அண்மையில் அயோத்திதாசர்

பண்பாட்டுத் தளத்தில் அதனை நடைமுறைப்படுத்தி, பறையர் சமூக மக்களை அடிமைகளாகவே நடத்தினர். அவர்களுக்கு வழங்கப்பட்ட நிலங்களை மீண்டும் அவர்களுக்கே வழங்கக்கோரும் போராட்டங்கள் அண்மைக்காலங்களில் முன்னெடுக்கப்படுகின்றன.

இதே போராட்டத்தை ஒடுக்கப்பட்ட வன்னியர்களை முன்னிருத்தி 1860களிலே செயல்படுத்தியிருக்கிறார் திரு வேங்கடாசல நாயகர். இவ்வகையில் வரலாற்றில் குறிப்பிடத்தக்க செயலைப் புரிந்தவராகவே இருக்கிறார்.

பத்தொன்பதாம் நூற்றாண்டின் இடைக்காலங்களில், தங்களது ஒடுக்குமுறைக்கு எதிராக வன்னியர் சமூகம் விழிப்புற்றதைக் காண்கிறோம். இருபதாம் நூற்றாண்டின் தொடக்கத்தில் பறையர் சமூகம் விழிப்புணர்வு பெற்றதாலும் ஓரளவு அவர்களது உரிமைகள் மதிக்கப்படுகின்றன என்று கூறமுடியும். மன்னவேடு நிலமீட்புப் போராட்டம், பஞ்சமி நிலமீட்புப் போராட்டம் ஆகியவை நமது சாதிய சமூகத்தின் பொருளாதார வேர்களைப் புரிந்துகொள்ள உதவும் செயல்கள் ஆகும். இவை குறித்த மேலும் விரிவான விவரங்களை ஆவணப்படுத்த வேண்டிய தேவை நமக்குண்டு.

வன்னிய மக்களின் நிலவுரிமைக்குப் போராடிய வேங்கடாசல நாயகரின் இன்னொரு பரிமாணம் அவர் எழுதிய 'இந்துமத ஆசார ஆபாச தரிசினி' நூலின் மூலம் அறிந்துகொள்ள முடிகிறது. இந்நூல் பற்றிய அறிவிப்பு ஒன்றை 'தத்துவ விவேசினி' (15.4.1883) இதழில் அ. வேங்கடாசல நாயகர் வெளியிட்டுள்ளார். அப்பகுதி வருமாறு:


இந்துமத ஆசார ஆபாச
தரிசனி

வேங்கடாசல நாயக்கர்

குரு. இராமலிங்கம்
அறிவியக்க நூற்பதிப்பகம்:

விலை ரூ. 2–8–0

"இந்தப் பத்திரிகையைப் பார்வையிடுகிற நமதன்பரெல்லாருக்கும் வந்தனம். இதனடியிற்கண்ட 'இந்துமத ஆசார ஆபாச தரிசினி யென்னும் புத்தகம் விருத்தப்பாவால் வெள்ளிய நடையாய் இயற்றப்பட்டிருக்கின்றது. இதில் கஷ்டப்பட்டு சம்பாதிக்கிற சொத்தை அன்னியர்களுடைய மந்திர தந்திர பகட்டு வேஷங்களாகிய விபரீத சடங்கு முதலானங்களுக்கே அழித்து நாமும் நம்ம குடும்பங்களும் சகல சவுக்கிய சம்பத்தையுமிழந்து நாசப்படுகிறோமென்றும்; மற்ற எந்தத் தேசகண்டத்தாரும் நம்ம தேசத்தாரைப் போலில்லாமல் விவேக மனந்து சகல சவுக்கிய சம்பத்துடனிருக்கிறார்கள் என்றும், நம்முடைய தேசஆதி அரசர்கள் முதல் நம்ம வரையில் சொல்ப வீண் கல்பனை விஷயங்களுக்கெல்லாம் பயந்து ஒடுங்கி திகிலடைந்து எதிலும் துணிவில்லாமல், எதுவும் தோற்றாமல் விதிவினை செயலென்றே முயற்சியில்லாமல் இருக்கிறதினால் நம்முடைய தேச செல்வத்தை அன்னிய தேசத்தார் கைக்கொள்ளவுள்ளாகி வறுமையில் இருக்கிறோமென்றும், அனுபோக திருட்டாந்த பிரத்தியட்சங்களினால் காட்டியிருக்கிறோம். இதை வாங்கி வாசித்துப் பார்ப்பீர்களாகில், அனேக ஆச்சர்ய அனுமான அதிசய ஆபாசங்களை எல்லாங் கண்டு தேர்ச்சியுண்டாகி திட சித்தராய் அல்லலற்று நீடூழி காலம் குடும்பத்தோடு நித்திய சவுக்கியத்தை அடையலாம். (தத்துவ விவேசினி:15.4.1883)

இந்நூல், பத்தொன்பதாம் நூற்றாண்டில் இந்து மதம் குறித்த கடுமையான விமர்சனங்களைப் பாடல் வடிவில் முன்வைத்த நூல். இந்நூலை, திராவிட இயக்கத் தொண்டர் திரு குரு. இராமலிங்கம் அவர்கள் 1948இல் மறுபதிப்புச் செய்துள்ளார். இந்நூலுக்கு மதிப்புரையைக் குடியரசில் (16.02.1930) எழுதிய பெரியார் "50 வருடத்துக்கு முன் சுயமரியாதை இயக்கம்" என்று குறிப்பிட்டுள்ளார். (வே. ஆனைமுத்து: 1993: 8) 'தமது இயக்கக் கொள்கைகளையே முக்கியமாய் வைத்துப் பாடின பாடல்கள்' இந்நூலில் அனேகம் இடம் பெற்றிருப்பதாகவும் பெரியார் எழுதியுள்ளார். (மேற்படி). அ. வேங்கடாசல நாயகர், 1872இல் தாம் வெளியிட்ட நூலின் முகப்பில், 'கடவுள் குறித்த விமரிசனங்கள் அடங்கிய நூலாக இருப்பதைக் காண முடிகின்றது. 1878இல் சென்னையில் உருவான 'Free Thought Association' இலண்டனில் பிராட்லா தலைமையில் இயங்கிய நாத்திக சங்கத்தின், சென்னைக் கிளையாக 'இந்து சுயாக்கியான சங்கம்' எனும் பெயரில் செயல்பட்டது. இவ்வமைப்பின் இதழ்களே 'தத்துவ விவேசினி'யும் 'Thinker' எனும் ஆங்கில இதழும். இவற்றில் நாயகர் தொடர்ந்து எழுதியுள்ளார். இவ்விதழ் தீவிரமான நாத்திக இதழாகச் செயல்பட்டுள்ளது. இவ்வமைப்பின் தாக்கம் அவரிடம் ஏற்பட்டுள்ளது என்று கருத வாய்ப்பிருக்கின்றது. இவரது 'இந்து மத ஆசார ஆபாச தரிசினி' நூலில் காணப்படும் சில பாடல்களைக் கீழே தருகிறேன்:

*"பஞ்சாங்க மொன்று கட்டிப் பலமுறை*
*படித்துக்காட்டி*

*அஞ்சாமல் இதனிற் சொல்வ தனுசத் திடுவோர் நாளும்*

*துஞ்சாமல் வாழ்வா என்று துணிவுடன் பணம் பறித்தற்*

*கொஞ்சாமற் புரட்டுப் பேசி யிரண்டொரு சுலோகஞ் சொல்லி"*

*"வஞ்சகர் மொழியினாலே மாநிலத் துழல்வோ ரெல்லாம்*

*பஞ்சமுற் றிழிதல் நோக்கிப் பதபித்திரங்கி நாளும்*

*நெஞ்சகங் குழைந்து வாழும் நீர்மையால் நெடுநூல் கற்றுப்*

*பஞ்சலட் சணமுந் தேர்ந்த பாவலர் பொறுப்பர் மாதே"*

*(வே. ஆனைமுத்து: 1993: 51. 53)*

இந்நூல் மதங்கள், சோதிடம், பல்வேறு மூடநம்பிக்கைகள், நால்வருணம், புராணக்கதைகள் ஆகியவை குறித்த கடுமையான விமர்சனங்களை முன்வைத்துள்ளது. புதிய கண்டுபிடிப்புகளை வாழ்த்தி வரவேற்றுள்ளார். காலனியம் மூலம் உருவான நவீன தன்மைகள், குறிப்பாக ஆங்கில மொழி அறிவு ஆகியவற்றை விதந்து பேசுகிறார். பத்தொன்பதாம் நூற்றாண்டின் இடைக்காலம் தொடங்கி, காலனியம் மூலம் பல புதிய தன்மைகள் உருவாயின. இதனைச் சமயவாதிகள் எதிர்கொண்ட முறைக்கு முற்றிலும் மாறாக, வேங்கடாசல நாயகர் எதிர்கொண்டார். இவரது இத்தன்மை பெரிதும் கவனத்தில் கொள்ளவேண்டிய செயலாகும்.

பத்தொன்பதாம் நூற்றாண்டின் தொடக்கத்தில் பிறந்து, அந்நூற்றாண்டின் இறுதியில் மறைந்த (1800-1897) அ. வேங்கடாசல நாயகர், பத்தொன்பதாம் நூற்றாண்டின் தமிழ்ச்சமூகம் குறித்த புரிதலுக்குக் குறியீடாய் அமைகிறார். தமிழ்ச்சமூக வரலாற்று மாணவனுக்கு வேங்கடாசல நாயகர் பின்கண்ட கூறுகளில் கவனத்துக்குரியவராக அமைகிறார்.

- பத்தொன்பதாம் நூற்றாண்டுத் தமிழ் நிலப்பகுதியின் பொருளாதார வரலாறு குறித்த புரிதலுக்கு இவரது ஆய்வுகள் அடிப்படை ஆவணங்களாக அமைகின்றன.

- ஒடுக்கப்பட்ட மக்களின் நிலங்களை மிராசுதாரர்கள் மற்றும் ஆதிக்க சாதியினர் பறித்துக்கொண்டனர். இதனை எதிர்த்த போராட்டத்தை முதன்முதல் கையில் எடுத்த பெரியவர்.

- காலனியச் செல்வாக்கால் உருவான நவீன சிந்தனைகளை உள்வாங்கி, நாத்திக மனநிலையில் செயல்பட்டவர். அத்திப்பாக்கம் வேங்கடாசல நாயகர் போன்று, தமிழ்ச் சமூகத்தில் செயல்பட்ட பலர் குறித்த பதிவுகள், அச்சு வடிவில் முடங்கிக் கிடக்கின்றன. இவற்றைத்தேடி எடுத்து மீண்டும் உரையாடலுக்கு உட்படுத்த வேண்டிய தேவை நமக்குண்டு.

**துணைநூற்பட்டியல்**


ஆனைமுத்து. வே. (பதிப்பு), *பார்ப்பனரும் வேளாளரும் பறித்துக்கொண்ட வன்னியன் மன்னவேடு ஊர்கள்,* மார்க்சிய பெரியாரியப் பொதுவுடைமை கட்சி வெளியீடு, சென்னை-14. 1993.

ஆரோக்கிய மணிராஜ், ச.ப. முருகேசன், ஐ.ஜா.ம. இன்பகுமார், *பஞ்சமி நிலமீட்பு: சட்ட நடைமுறைக் கையேடு,* அனித்ரா அறக்கட்டளை, சித்தூர், 2006.

ரத்னம். க. (பதிப்பு), *பாயக்காரிகள் மிராசுதார்களோடு செய்த போராட்டம்,* ஐந்திணைப் பதிப்பகம், சென்னை, 2000.

Irschick.F. Eugene- Dialogue and History constructing South India: 1795-1985,- University of California Press, London- 1994

Sarada Raju. , A-Economic Conditions in the Madras Presidency (1800-1850) , University of Madras,-1941


**இதழ்கள்**

*தத்துவ விவேசினி (1882-1888)*
Thinker *(1882-1885)*

[**குறிப்பு:** கவிதாசரண் 2007, நவம்பர் இதழில் வெளிவந்த இக்கட்டுரை தேவை கருதி மீண்டும் வெளியிடப்படுகிறது.)



# சுன்னாகம்
# அ. குமாரசுவாமிப் புலவர்



த. தென்னவன்

சென்னைக் கிறித்தவக் கல்லூரி தமிழ்த்துறையில் 'தொல்காப்பியப் பொருளதிகார ஆய்வு வரலாறு' என்ற தலைப்பில் முனைவர்பட்ட ஆய்வினை மேற்கொண்டு வருகிறார்.

தமிழ் இலக்கண இலக்கிய ஆய்வுகளில் ஈழத்துத் தமிழ்ப்புலவர்களுக்கென்று தனித்ததோர் அடையாளம் அன்று முதல் இன்று வரை இருந்து வருகிறது. தமிழ்நாட்டுப் புலவர்களைப் போன்றே ஈழத்துத் தமிழ்ப்புலவர்களும் பதிப்புப் பணியையும் ஆய்வுப் பணியையும் செம்மையாகச் செய்தனர். ஆனால் இன்றைய தமிழ்ச்சூழலில் பத்தொன்பதாம் நூற்றாண்டு ஈழத்துத் தமிழ்ப் புலவர்கள் சிலரையே சுட்டிக்காட்ட இயலுகின்றது. பலரைச் சுட்டிக்காட்ட இயலவில்லை.

இதற்கு மிக முக்கியக் காரணம், இவர்களது நூல்கள் மறுபதிப்பு செய்யப்படாமையும் பயன்பாட்டில் இல்லாமையுமே. இந்நிலையில் புலவர்கள் பற்றிய குறிப்பை அறிய வேண்டுமென்றால் நமக்குத் துணை செய்யும் நூல்கள். 'The Tamil Plutarch' (1859) 'பாவலர் சரித்திர தீபகம்' (1886), 'தனிப்பாடற்றிரட்டு' (1897), 'தமிழ் நாவலர் சரிதை' (1916), 'புலவர் புராணம்' (1901), 'தனிச்செய்யுட் சிந்தாமணி' (1908), 'தமிழ்ப்புலவர் சரிதம்' (1916) போன்ற நூல்களாகும். இந்நூல்களில் முன்னோடி நூல்களைக் கருத்தில் கொண்டு ஆராய்ந்து எழுதப்பட்ட நூல் 'தமிழ்ப்புலவர் சரிதம்' ஆகும். இந்நூலைக் கற்கும்போது ஏனைய புலவர் வரலாற்று நூல்களுடன் மாறுபட்டிருப்பது தெரிய வந்தது. எவ்வாறெனில் 'தொண்டை மண்டல சதகம்', 'சோழமண்டல சதகம்', 'தமிழ் நாவலர் சரிதை', 'புலவர் புராணம்', 'தனிச்செய்யுட் சிந்தாமணி', 'பாவலர் சரித்திர தீபகம்', 'ஆழ்வார் சரித்திரம்', 'தனிப்பாடற்றிரட்டு' முதலிய நூல்களை ஆராய்ந்ததுடன் உவே. சா., சி.வை.தா. நூல்களுக்கு எழுதியுள்ள முன்னுரைகளையும் 'செந்தமிழ்' இதழில் வெளியாகியுள்ள சரித்திரக் குறிப்புகளையும் ஆராய்ந்து புலவர்களின் வரலாறு கூறப்பட்டுள்ளதாக முன்னுரைக் குறிப்பு உள்ளது. இந்நூலைச் செய்தவர் சுன்னாகம். அ. குமாரசுவாமிப் புலவர் ஆவார். இவர் தம் நூல்களுக்கு நிதியுதவி வழங்கிய புரவலர்களை இந்நூலில் நினைவுகூர்கின்றார். இவர் குறிப்பிடும் நூல்கள் தமிழ்ச்சூழலில் பெரும்பாலும் யாரும் அறியாத பெயராக உள்ளது. 'தண்டியலங்காரப் புத்துரை', 'யாப்பருங்கலக் காரிகைப் புத்துரை', 'அகப்பொருட் புத்துரை', 'இலக்கியச் சொல்லகராதி', 'நீதிநெறிவிளக்கப் புத்துரை', 'இலக்கண சந்திரிகை', 'இரகுவமிசக் கருப்பொருள்', 'சதாசாரக் கவித் திரட்டு, 'சாணக்கிய சதகம்', 'முத்தக பஞ்ச விஞ்சதி', 'ஏகவிருத்த பாரதாதி, 'வினைப் பகுபத விளக்கம்', 'ஞானக்கும்மி, 'மேகதூதக் காரிகை' போன்ற நூல்களாகும்.



மேலும் இவர் 'பாவலர் சரித்திர தீபகத்தில்' கூறாத 94 புலவர்களின் வரலாற்றைக் கூறுகின்றார்.

சங்கப் புலவர்கள் - 7
17ஆம் நூற்றாண்டுக்கு முற்பட்ட புலவர்கள் - 19
தமிழ்நாட்டுப் புலவர்கள் - 54
ஈழத்துப் புலவர்கள் - 14

இவருடைய இந்நூலைக் கண்டபின் ஏனைய நூல்களைக் காணும்போது ஒவ்வொரு நூலும் புதுமைத்தன்மை வாய்ந்தனவாகக் காணப்பட்டன. அத்துடன் கண்டனங்கள் வரைந்து அறிஞர்களின் பார்வையைத் தன்பக்கம் ஈர்த்தவர் இவர்.

அ. குமாரசுவாமிப் புலவர் 1854ஆம் ஆண்டு தைத் திங்கள் 18ஆம் நாள் சுன்னாகம் அம்பலவாணப் பிள்ளைக்கும் சிதம்பர அம்மையாருக்கும் மகனாய்த் தோன்றினார்; முருகேசப் பண்டிதரிடம் இலக்கண இலக்கியங்களையும் நாகநாதப் பண்டிதரிடம் வடமொழியையும் கற்றுத் தேர்ந்தார்; 1876 முதல் 1898 வரை 'ஏழாலைச் சைவப் பிரகாச வித்தியாசாலை'யிலும் 1902 முதல் ஆறுமுக நாவலருடைய 'சைவப்பிரகாச வித்தியா சாலை'யிலும் ஆசிரியராகப் பணியாற்றினார்; மதுரைத் தமிழ்ச் சங்கத்தில் சங்கப் புலவராகவும் செந்தமிழ் இதழில் அறுபதற்கும் மேற்பட்ட கட்டுரைகளையும் எழுதியுள்ளார்.

இவருடைய கண்டனங்கள் 1878 முதல் 1888 வரை கிறித்தவ மதத்தின் மீதும் மதமாற்றம் செய்யும் போதகர்களின் மீதும் இருந்தன. இவருடைய கண்டனங்கள் அறிஞர்களால் ஏற்பனவாக இருக்கும். இவர் குடும்பவழி நீண்ட அறிவுப் பாரம்பரியத்தைப் பெற்றமையாலும் 'ஆறுமுக நாவலரிடம் சில பாடங்களைக் கல்வி கற்றமையாலும்', (செந்தமிழ்20, பக்153) ஈழத்துத் தமிழ்ச்சூழலில் வளர்ந்தமையாலும் தவற்றைக் கண்டவுடன் கண்டனஞ்செய்தல் இயல்பாயிற்று.

இதற்குச் சிறந்த சான்று சங்கரம்பிள்ளை என்பவர் 'இலக்கணச் சல்லாபம்' என்ற இலக்கண நூலை இயற்றினார். இந்நூலைச் சமகாலப் புலவர்கள் 'நன்னூலின்' வழிநூல் என்று புகழ்ந்தனர். இதைக் கண்ட அ. குமாரசுவாமிப் புலவர் நூலின் தலைப்பிலே பிழையிருப்பது கண்டு கண்டனஞ் செய்தார். தமது கருத்தை 'உதயபானு' இதழில் கண்டனமாக வரைந்தார். மேலும் இந்நூலை நன்னூலின் வழிநூல் என்று கூறியவர்களின் பதில் என்ன என்று வினா எழுப்பினார்.


இலக்கியச்சொல்லகராதி.

அ. குமாரசுவாமிப்பிள்ளையால்

“இலக்கணச் சல்லாபம் என்பது வடமொழிப் புணர்ச்சியா? தென்மொழிப் புணர்ச்சியா? வடமொழிப் புணர்ச்சியாயின் இலக்கண சல்லாபம் என நில்லாது சகர வியஞ்சனம் மிகுந்ததெப்படி? தென்மொழிப் புணர்ச்சியாயின் இலக்கணம் முடிப்பதெப்படி? வடமொழி தென்மொழி வல்ல பண்டிதர்களின் சாட்சியம் யாது? சகரம் அச்சுப்பிழையாய் வந்ததாயின் அது பிழைதிருத்தத்திற் காட்டப்படாத தென்னையோ. அன்றியும் ஓரிடத்தாவது சகாரமின்றி இலக்கண சல்லாபம் என்றெழுதப்படாது எவ்விடத்தும் இலக்கணச் சல்லாபம் என்றெழுதப்பட்டிருப்ப தென்னை” (உதயபானு, 4-10-1880)

இக்கண்டனத்தில் அ. குமாரசுவாமிப் புலவர் ஒரு நூலின் தலைப்பையே வினாவிற் குள்ளாக்கி “நன்னூலின்'' வழிநூல் எனக் கூறப்பெற்றதைத் தவறென்றுணர்த்தினார். அதனால்தான் இவரைப் 'போலி நாவலர்கள் புரைபட வியற்றிய நூலுரைப் பிழைகளை நுண்ணிதினாய்ந்தவர்' (செந்தமிழ் 20, பக். 146) எனப் போற்றினர்.

1888க்குப் பிறகு அ. குமாரசுவாமிப் புலவரின் பார்வை ஈழத்துப் புலவர்களை எதிர்ப்பவர்கள் மீது சென்றது. ஏனெனில் தமிழ்நாட்டில் உள்ள புலவர்கள் சிலர் ஈழநாட்டுப் புலவர்களைப் புலவர்களாக எண்ணுவது கிடையாது; தரம் தாழ்ந்தவர்களாகவும் மதிநுட்பம் இல்லாதவர்களாகவும் கருதினர். இதனை “ஈழநாட்டாரும் சாதாரண இலக்கியவிலக்கணக் கல்வியறி வில்லாத அற்பரும்” “கும்பகோணம் ஸ்கூலின் இரண்டாவது போதகர்” என்ற கூற்றுகளே மெய்ப்பிக்கும். இத்தகைய சூழலில்தான் அ. குமாரசுவாமிப் புலவரின் பார்வை ஈழ எதிர்ப்பாளர்களின் மீது சென்றது. ஈழநாட்டுத் தமிழ்ப்புலவர்களை எவர் ஒருவர் விமர்சிக்கிறாரோ அவருடைய அடுத்த படைப்போ, பதிப்போ இவரால் விமர்சனத்திற்குள்ளாகும்.

1889ஆம் ஆண்டு சி.வை. தாமோதரம் பிள்ளை 'இலக்கண விளக்கம்' நூலைப் பதிப்பித்தார்; இந்நூலின் முகவுரையில் மாதவச் சிவஞானமுனிவர் இயற்றிய இலக்கண விளக்கச் சூறாவளியில் கூறியுள்ள குற்றங்கள் பொருத்தமற்றவை என்றும் அநியாயக் கண்டனம் எனவும் பதிவு செய்தார். இதைக் கண்ணுற்ற சபாபதி நாவலர், சி.வை. தாமோதரம் பிள்ளையை எதிர்த்துக் கண்டனங்கள் வரைந்தார். சபாபதி நாவலர் ஈழத்துப் புலவராக இருந்தபோதும் சி.வை.தா.வை எதிர்த்துக் கண்டனங்கள் கூறியதற்கு இரண்டு காரணங்களைக் கூறலாம்.

1. சிவஞான முனிவரை மானசீகக் குருவாக ஏற்றார்.

2. திருவாடுதுறையில் ஆதீனத்துப் புலவராக இருந்தார்.

இந்நிலையில் சி.வை. தாமோதரம் பிள்ளைக்கு ஆதரவாகவும் சிவஞானமுனிவரையும் சபாபதி நாவலரையும் கண்டித்தும் 'ஸ்ரீலோகரஞ்சினி' இதழில் அ. குமாரசுவாமிப் புலவர் கண்டனங்கள் எழுதலானார். இவர் தொடுத்த கண்டனங்களுக்கும் வினாக்களுக்கும் சபாபதி நாவலரால் விடை கூற

*சாமிநாதையரின் மாணாக்கர் எழுதிய கண்டனமொன்றில் முருகேசப் பண்டிதரை 'ஈழநாட்டாரும் சாதாரண இலக்கியவிலக்கணக் கல்வியறிவில்லாத அற்பரும்' என்றும் 'கும்பகோணம் ஹைஸ்கூலில் இரண்டாவது போதகர்' என்றும் இழிவுபடுத்தினர். இதைக் கண்ட குமாரசுவாமிப் புலவர் சாதாரணக் கல்வியறிவில்லாத அற்பரின் மாணாக்கர் சுட்டுவதாக உ.வே.சா. பதிப்பித்த சீவகசிந்தாமணியுள் முதல் நான்கு இலம்பகங்களில் உள்ள 95 பிழைகளைச் சுட்டி 'சீவக சிந்தாமணியுரைப் பிழைகள்' என்னும் கண்டனத்தை வரைந்தார்.*

இயலவில்லை. இதன் வெளிப்பாடு 1894ஆம் ஆண்டு 'இலக்கண விளக்கப் பதிப்புரை மறுப்பு' என்னும் கண்டனமொன்றில் சி.வை. தாமோதரம் பிள்ளையவர்களைத் தனிப்பட்ட முறையில் விமர்சித்து சபாபதி நாவலர் எழுதினார்.

''ஏழாலைச் சிற்றூர் வழூஉச்சொற் புணர்த்தலாமென்க" (பக். 12)

- "தன் பெயர் எழுதுதற்கே யின்னுங் கற்றுக் கொண்டிருக்கிறார் போலும்" (பக். 12)

- "இலக்கண விளக்கச் சூறாவளியின் பொருணுட்பம் அறிதரற்கேற்கு மதி நுட்ப நூலோடுடையிரல்லாத நீர் மற்றதற்கு மறுப்புரைப்பார் போன்று அபிநயத்துக் குற்றமாகச் சில கூறினீர்" (பக். 1)

"நல்லாசிரியர் வழிபெற்ற தமிழ்க்கல்வி வலியில்லாத நும்மை எதிரெனவைத்து நும் பதிப்புரையைப் பொருட்படுத்து மறுத்திட எழுந்தில மென்றுணர்க"(பக். 1).

(- தமிழ்க் கல்வியறிவில்லாதவர்

- தன் பெயரைச் சரியாக எழுதத் தெரியாதவர்

- சூறாவளியின் பெருநுட்ப மறிதற்கேற்ற மதிநுட்பமில்லாதவர்

- நும் வெள்ளறிவிற்கு ஏழாலைச் சிற்றூர் வழூஉச் சொற்புணர்ந்தவர்.)

இவற்றைக் கண்ட குமாரசுவாமிப் புலவர் சொல்லொணாத் துயரையடைந்தார். இதன் வெளிப்பாடு 1899ஆம் ஆண்டு சபாபதி நாவலர் 'திராவிடப் பிரகாசிகை' என்ற நூலை இயற்றினார். இந்நூலில் உள்ள பிழைகளைச் சுட்டி 'திராவிடப் பிரகாசிகைப் பிழைகள்' என்ற கண்டனமொன்றைக் குமாரசுவாமிப் புலவர் வரைந்தார். இத்துடன் இப்பிரச்சினை ஓய்ந்தது.

அடுத்தது 1888ஆம் ஆண்டு முருகேசப்பண்டிதர் பெருந்தேவனார் பாரதத்தின் உத்தியோக பருவத்திற்கு ஓர் உரையை எழுதி வெளியிட்டார். இவ்வுரையைக் கண்டித்து அதில் உள்ள குற்றங்களைக் கூறி சாமிநாதையரின் மாணாக்கராகிய குடவாயில் நேட்டிவ் ஹைஸ்கூல் தமிழ்ப் பண்டிதர் ஐ. சண்முகம் பிள்ளை "ஞான சூசனி மறுப்பு" "நிராகரதிமிரபானு" என்ற பெயரில் கண்டனங்களை வரைந்தார். முருகேச பண்டிதரும் "முன்னென்னுஞ் சொல்வழக்கு'' என்ற கண்டனமொன்றை வெளியிட்டார். மேலும் சாமிநாதையரின் மாணாக்கர் எழுதிய கண்டனமொன்றில் முருகேசப் பண்டிதரை 'ஈழநாட்டாரும் சாதாரண இலக்கியவிலக்கணக் கல்வியறிவில்லாத அற்பரும்' என்றும் 'கும்பகோணம் ஹைஸ்கூலில் இரண்டாவது போதகர்' என்றும் இழிவுபடுத்தினர். இதைக் கண்ட குமாரசுவாமிப் புலவர் சாதாரணக் கல்வியறிவில்லாத அற்பரின் மாணாக்கர் சுட்டுவதாக உ.வே.சா. பதிப்பித்த சீவகசிந்தாமணியுள் முதல் நான்கு இலம்பகங்களில் உள்ள 95 பிழைகளைச் சுட்டி 'சீவக சிந்தாமணியுரைப் பிழைகள்' என்னும் கண்டனத்தை வரைந்தார்.

இக்கண்டனத்தில் கூறப்பட்டுள்ள பிழைகள் சிலவற்றைச் சீவகசிந்தாமணியின் இரண்டாம் பதிப்பில் உவேசா. மாற்றிப் பதிப்பித்தார். ஆனால் அதைப் பற்றி எவ்விதக் குறிப்பும் தரவில்லை என்பது குறிப்பிடத்தக்கதாகும். இவ்விடத்தில் இரண்டு செய்திகளைப் புரிந்து கொள்ளவேண்டும். முதலாவது உ.வே. சாமிநாதையரின் நேர்மை. அ. குமாரசுவாமிப் புலவர் கூறிய 95 பிழைகளில்

66 இடங்களில் பிழைகளை அப்படியே ஏற்றுக் கொண்டுள்ளார். 3 பிழைகளுக்கு மாற்றங்கள் செய்துள்ளார். 26 பிழைகளை ஏற்றுக் கொள்ளவில்லை. அந்த 26 இடங்களும் வலிமையான சான்றுகள் இல்லாமலும், இருக்கலாம் என்று ஊகித்துக் கூறக்கூடிய இடங்களாகவும் இருக்கின்றன. அதனால்தான் இரண்டாம் பதிப்பின் முன்னுரையில் உ.வே.சா. "இதிற் காணப்படும் தவறுகள் என்னுடைய மறதி முதலியவற்றால் நேர்ந்தனவென்றெண்ணிப் பொறுத்துக் கொள்ளும்படி பெரியோர்களை வேண்டிக் கொள்கிறேன்" (ப.2) என்று கூறினார். சுன்னாகம் அ. குமாரசுவாமிப் புலவர் கண்டனம் எழுதுபவராகவே அனைவராலும் அறியப்பட்டுள்ளார். இவர் சிறந்த உரையாசிரியராகவும், மொழிபெயர்ப்பாளராகவும் இலக்கண ஆராய்ச்சியாளராகவும், பதிப்பாசிரியராகவும் அடையாளம் காணப்படாமல் உள்ளார்.

### உரையாசிரியர்

1876 முதல் 1898 வரை ஏழாலைச் சைவப் பிரகாச வித்தியாசாலையில் பாடம் நடத்தியதால் நூலின் நுண்மைப் பொருளைக் கூறவேண்டிய தேவையையுணர்ந்தார். ஒவ்வொரு நூலுக்கும் எழுதப்படுகின்ற உரைகள் சில கூறவேண்டியவற்றை விட்டு வேறுபொருள் கூறிச் சென்றன. இவற்றைத் தவிர்க்கவும் நுண்மைப் பொருளைக் கூறவும் இவர் புத்துரை, பொழிப்புரை, அரும்பதவுரை, பதவுரை போன்றவற்றை வரைந்தார்.

### புத்துரை

இவர் இலக்கண நூல்கள் மூன்றனுக்கும் இலக்கிய நூல்கள் இரண்டனுக்கும் புத்துரை கண்டுள்ளார். இலக்கண நூல்களாவன: தண்டியலங்காரப் புத்துரை (1903), யாப்பருங் கலக்காரிகைப் புத்துரை (1908) அகப்பொருள் விளக்கப் புத்துரை (1912) போன்ற நூல்களாகும். இலக்கிய நூல்களாவன: நீதிநெறி விளக்கப் புத்துரை (1901), திருவாதவூரர் புராணப் புத்துரை (1904) போன்ற நூல்களாகும்.

### தண்டியலங்காரப் புத்துரை

இந்நூலுக்குப் புத்துரை இயற்றுவதற்கான காரணம் பின்வருமாறு:


தண்டியலங்காரம்
மூலமும் உரையும்.

அ. குமாரசுவாமிப்பிள்ளை

"நூலில் உள்ள பல பிழைகளைக் களைந்தும் மாறனலங்காரத்தோடும் வேறுபட்டுள்ள இடங்களைக் கண்டறிந்து முன்னுள்ள உதாரணகவிகளோடும் பின்னுள்ள பலகவிகளைக் கந்தபுராணம், இராமாயணம் முதலியவற்றினின்றும் எடுத்துக் காட்டியும் முரசபந்த கோட்டம் புதுவதாகத் தீட்டியும் இப்பொழு தெழுதப் பட்டிருத்தலால் இவ்வுரை புதுக்கப்பட்டதாயிற்று"

### யாப்பருங்கலக்காரிகைப் புத்துரை

இந்நூலில் 16 பாடல்களுக்குப் புத்துரை கூறப்பட்டுள்ளது. யாப்பருங்கலக் காரிகை நூலுக்குப் புத்துரை இயற்றியதற்கான காரணம் பின்வருமாறு: "இந்நூலுக்குக் குணசாகரர் கூறிய விருத்தியுரை அதனைத் தழுவி எழுந்த சிற்றுரைகள் சிலவுள. இவ்வுரைகளெல்லாம் நிரல்நிரைப் பொருள்கோளமையக் கூறிய மூலபாடம் போலவே இலக்கண விதிகளும் எடுத்துக்காட்டுகளும் அணிமை பெறாது செல்கின்றன. விடுத்துரைத்தல், சொற்றோறும் பொருளுரைத்தல், சில பாகங்கள் ஆசிரியர் போக்கினையும் நோக்கினையும் நோக்காது வேறு வழியில் செல்கின்றன. 'எழுவாய் யெழுத்தொன்றின் மோனை' 'அந்தமில் பாதம் என்பன முதலியவைகளை ஆராய்ந்து நோக்குக" (முகவுரை 11)

தி.த. கனகசுந்தரம் பிள்ளை செந்தமிழ் இதழில் இவரது யாப்பருங்கலக்காரிகை உரை குறித்து பின்வருமாறு கூறுகிறார்.

அவருரை காரிகைகளைப் பிரித்து முடிபுகளைத் தெரித்துப் பொருளை வரையறுத்து அதற்கின்றி யமையாதவைகளை எடுத்துக் கூறி உதாரணங்கள் இலக்கணமமைந்து இடக்குமாற்றைப் புலப்படக்காட்டி செய்யுளுறுப் பாதியவற்றின் பெயர்க் காரணங்களை விளக்கிச் செல்கின்றது."

(செந்தமிழ் 1907. 490-92)

### அகப்பொருள் விளக்கப் புத்துரை

இந்நூலில் உள்ள சூத்திரங்கள் ஒவ்வொன்றிற்கும் தலைக் குறிப்பு அமைக்கப்பட்டதுடன் பெரும்பான்மையான கிளவிகளுக்கு உதாரணமாகத் தஞ்சைவாணன் கோவைச் செய்யுட்களும் பிறநூற் செய்யுட்களும் காட்டப்பட்டுள்ளன.

### நீதிநெறிவிளக்க மூலம்

"இந்நூலில் உள்ள உரைகள் சிலவிடங்களில் நிகண்டு நூல்களுக்கும் நியாய நூல்களுக்கும் இலக்கண நூல்களுக்கும் வள்ளுவர் குறளின் பரிமேலழகருரை முதலிய உரைகட்கும் மாறுபட்டனவாக நம் புத்திக்குத் தோன்றியபடியால் இப்போது வேறுரை எழுதப்பட்டன'' (முகவுரை)

இந்நூலில் ஒவ்வொரு பாடலின் இறுதியிலும் நீதிநெறி விளக்கக் கருத்துகளை உணர்த்தும் பழம்பெரும் நூல்களின் சான்றுகள் உள்ளன. புத்துரையாக 36 பாடல்களில் 37 இடங்களுக்குக் கூறியுள்ளார்.

### பொழிப்புரை

'திருக்கரைசைப் புராணம் பொழிப்புரை' (1890), 'யாப்பருங்கலப் பொழிப்புரை' (1900) 'வெண்பாப்பாட்டியல் பொழிப்புரை' (1900) 'ஏரெழுபது பொழிப்புரை' (1920) முதலிய நூல்களுக்குப் பொழிப்புரை கூறப்பட்டுள்ளன.

### அரும்பதவுரை

'கலைசைச் சிலேடை வெண்பா' (1901) 'மறைசையந்தாதி' (1901) 'இராமாயணம் பாலகாண்டம்' (1918) முதலிய நூல்களுக்கு அரும்பதவுரைகள் கூறப்பட்டுள்ளன.

### பதவுரை

'கல்வளையந்தாதி' (1921) நூலுக்குப் பதவுரை கூறப்பட்டுள்ளது.

### மொழிபெயர்ப்பாளர்

வடமொழியையும் தமிழ்மொழியையும் கசடறக் கற்றதினால் இவருக்கு மொழிபெயர்ப்பு என்பது எளிதாயிற்று. இவர் தமிழ் பயிலும் மாணவர்களுக்கு வடமொழி நூல்களை அறிமுகம் செய்யும் பொருட்டும், வடமொழிக் கருத்துகளை மாணவர்கள் தமிழ்மொழியில் அறியும் பொருட்டும் மொழிபெயர்ப்புகளைச் செய்தார். அவரின் மொழிபெயர்ப்பு நூல்கள். 'மேகதூதக் காரிகை' (1896) 'சாணக்கிய நீதிவெண்பா' (1919) 'இராமோதந்தம்' (1921) 'இரகுவமிச சரிதாமிர்தம்' (1922) முதலிய நூல்களாகும்.

'மேகதூதக் காரிகை' வடமொழியில் காளிதாசர் இயற்றிய மேகசந்தேசத்தை அடிப்படையாகக் கொண்டு கட்டளைக் கலித்துறையில் 121 பாடல்களில் பாடப்பட்டுள்ளது.

'இரகுவமிச சரிதாமிர்தம்' நூலில் இரகுவினுடைய வரலாறு கூறப்பட்டுள்ளது. இந்நூல் காளிதாசரின் வடமொழி இரகுவமிசத்தையும் அரகேசரியின் தென்மொழி இரகுவமிசத்தையும் இணைத்து மொழிபெயர்க்கப்பட்டுள்ளது.

'சாணக்கிய நீதிவெண்பா' நூல் தமிழில் காணப்பெறாத சில நீதிக் கருத்துக்களைக் கூறுகின்றது; வடமொழியில் சாணக்கிய பண்டிதர் இயற்றிய சாணக்கிய சூத்திரத்தை அடிப்படையாகக் கொண்டு 100 வெண்பாக்களில் மொழிபெயர்க்கப்பட்டுள்ளது.

வடமொழி கற்கும் மாணவர்கள் முதற்பாடமாகக் கொண்டு படிக்கப்பட்டு வரும் நூல் 'இராமோதந்தம்' நூலாகும்.

இவர் வடமொழியில் உள்ள இந்நூலைத் தமிழ்மொழியில் 100 விருத்தப்பாக்களாலும் 18 வெண்பாக்களாலும் மொழிபெயர்த்துள்ளார்.

### இலக்கண ஆராய்ச்சியாளர்

இவருடைய இலக்கணப் புதுமைக்குச் சான்று பகர்வன 'இலக்கண சந்திரிகை' (1897), 'வினைப் பகுபத விளக்கம்' (1913) ஆகிய இரண்டு நூல்களாகும்.

'இலக்கண சந்திரிகை' நூல் வடமொழிச் சொற்கள் தமிழ்மொழியில் வந்து வழங்கும்போது ஏற்படும் மாற்றங்களுக்கு விதி கூறியுள்ளது. இலக்கணச் சுல்லாடம் நூல் பிழைபட விதி இயற்றப்பட்டமையால்

இந்நூல் எழவேண்டிய தேவை உண்டாயிற்று. நன்னூலின் வழி நன்னூல் கூறாத விதிகளைத் தொகுத்துத் தந்துள்ளமையால் இந்நூலை நன்னூலின் வழி நூல் என்றுக் கூறலாம். இலக்கணச் சுல்லாபம் நூலில் உள்ள குறைகளைச் சுட்டிக் காட்டியதால் யாரும் குறை கூறாதபடி இயற்றப்பட்டுள்ளது. அ.குமாரசுவாமிப் புலவர் ஒவ்வொரு விதிக்கும் புராணங்கள் முதல் சிற்றிலக்கியங்கள் வரை உள்ள ஏராளமான தரவுகளைச் சான்று காட்டுகிறார். 'வினைப் பகுபதவிளக்கம்' நூல் நன்னூலில் 'நடவாமடிசீ என்ற சூத்திரத்திற்கு அடியாகப் பிறந்த பல பெயர்ப் பகுபதங்களைத் தொகுத்துக் கூறுகின்றது.

### பதிப்பாசிரியர்

தமிழ் நூல்கள் சிலவற்றைப் பதிப்பிக்கும் பணி இவருக்கு வாய்த்தது. இவர் பல நூல்களுக்குக் கண்டனஞ் செய்தமையால் தனது நூல்கள் ஒவ்வொன்றையும் ஆராய்ந்து பதிப்பிக்க வேண்டிய நிலை ஏற்பட்டது.

1898ஆம் ஆண்டு சி.வை.தா.வின் ஏழாலை சைவப்பிரகாச வித்தியா சாலை மூடப்பட்டதால் அ. குமாரசுவாமிப் புலவருக்கு ஆய்வுப்பணி ஒன்றே முதன்மையான பணியாக அமைந்தது. இவர் 1900, 1901 ஆகிய இரண்டு ஆண்டுகளில் 15க்கும் மேற்பட்ட நூல்களை வெளிக்கொணர்ந்தார். 15 நூல்களில் 6 நூல்கள் பதிப்புநூல்களென்பது குறிப்பிடத்தக்கதாகும்

இவரது பதிப்பு நூல்களாவன 'இதோபதேசம்' (1886) 'சூடாமணி நிகண்டு' 1ஆம் தொகுதி (1895 'நான்மணிக்கடிகை' (1900) 'ஆசாரக்கோவை' (1900) 'சூடாமணி நிகண்டு' 2 ஆம் தொகுதி (1900) 'வெண்பாப்பட்டியல்' (1900) 'யாப்பருங்கலக் காரிகைப் பழையவுரை' (1900) 'ஆத்திசூடி வெண்பா' (1901) 'உரிச்சொனிகண்டு' (1902), 'பழமொழி விளக்கம்' (1903) முதலிய நூல்களாகும்.

### பிற இலக்கியப் பணிகள்

இவர் சிற்றிலக்கியங்கள் தொடர்பாக 9 ஊஞ்சல் நூல்களையும், 4 பதிக நூல்களையும் கும்மி, சிந்து தொடர்பான நூல்களையும் இயற்றியுள்ளார். இவர் தொடக்கக் காலத்தில் சிற்றிலக்கியங்கள் குறித்தே அதிகமாகச் சிந்தித்துள்ளார். 1884 முதல் 1895 வரை சிற்றிலக்கியங்களே அதிக அளவில் இயற்றியுள்ளார். ஊஞ்சல் நூல்களாவன 'வதுளைக் கதிரேசன் ஊஞ்சல்' (1884) 'துணைவை சண்முகர் ஊஞ்சல்' (1887) 'நகுலேசுரர் ஊஞ்சல்' (1896) 'அத்தியடி விநாயகரூஞ்சல்' (1897) 'கைலாய பிள்ளையார் ஊஞ்சல்' (1904) 'விளிசிட்டி பொற்கலந் தம்பை வைரவர் ஊஞ்சல்' (1912) 'தெல்லிப் பேழை தில்லையிட்டி அம்மன் ஊஞ்சல்' (1915) 'பன்னாலை வள்ளிமலைக் கந்தசுவாமி ஊஞ்சல்' (1916) 'அராலி முத்துமாரியம்மன் ஊஞ்சல்' (1921) முதலிய நூல்களாகும்.

பதிக நூல்களாவன 'வதுளைக் கதிரேசன் பதிகம்' (1884) 'வதுளை மாணிக்க விநாயகர் பதிகம்' (1884) 'துணைவை அரசடி விநாயகர் பதிகம்' (1887) 'மாவைப் பதிகம்' (1892) முதலிய நூல்களாகும். மேலும் 'வதுளைக் கதிரேசன் சிந்து' (1884) 'மிலேச்சமதவிகற்பக் கும்மி' (1888) 'நகுலமலைக் குறவஞ்சி நாடகம்' (1895) முதலியன சிற்றிலக்கிய நூல்களாகும்.

இவர் 'சதாசாரக் கவித்திரட்டு (1901) 'சிவதோத்திரக் கவித் திரட்டு' (1911) ஆகிய இரண்டு தொகுப்பு நூல்களைத் தொகுப்பித்துள்ளார்.

மேலும் இலக்கியங்களில் காணப்படும் சொற்களுக்குப் பொருள் கூறி 'இலக்கியச் சொல்லகராதி என்ற அகராதியை 1915 ஆம் ஆண்டு வெளியிட்டுள்ளார்.

'வதுளைக் கதிரேசன் பதிகம்' தொடங்கி 'இரகுவமிச சரிதாமிர்தம்' வரை சுமார் 61 படைப்புகளை வெளிக் கொணர்ந்த சுன்னாகம். அ. குமாரசுவாமிப் புலவர் 1922ஆம் ஆண்டு இறைவனடி சேர்ந்தார். இவர் 1876 தொடங்கி 1922 வரை 46 ஆண்டுகள் தமிழுக்காக தன்னால் இயன்ற பங்களிப்பை ஆற்றியுள்ளார். இவர் தற்போது அறியப்படாமல் போனதற்கு மிக முக்கிய காரணமாக இரண்டைச் சுட்டலாம்.

1. தற்போது கற்கின்ற மாணவர்கள் வடமொழியையும் தமிழையும் இணைத்துக் கற்பதில்லை.

2. செல்வாக்கு பெற்ற தொகை நூல்களையோ தொல்காப்பியத்தையோ பதிப்பிக்கவில்லை.

மேலும் இவரது நூல்கள் எங்குத் தேடியும் 20 நூல்கள் மட்டுமே கிடைக்கின்றன; நூல்கள்

இலங்கையில் அச்சிடப்பட்டதால் சில மட்டுமே தமிழகத்தில் புழக்கத்தில் இருந்துள்ளன. இலங்கையின் அரசியல் சூழலில் இவரது நூல்களைத் தொகுத்தல் என்பது அரியது. ஆதலால் தமிழ்நாட்டில் கிடைக்கின்ற நூல்களையாவது தொகுத்து வெளியிட வேண்டும். இவர் இறந்த காலத்தில் செந்தமிழ் இதழில் சகந்தையபிள்ளை ஒரு கருத்தை முன்வைத்தார்."இவர்கள் பாடிய செய்யுட்கள் முழுவதையும் ஒருங்கு சேர்த்துக் 'குமாரசாமிப் புலவரவர்கள் பிரபந்தம்' என்னும் பெயரோடு அச்சிட்டு வெளிப்படுத்தினால் அது, தமிழுலகிற்குப் பெரும்பயன் தருதலோடு, புலவரவர்கள் தமிழ்ப்புலமைக் காரணமாக அமைக்கப்பட்டுத் தக்க ஞாபகச் சின்னங்களுள் ஒன்றாக நின்று நிலவும் என்பது எமது கருத்து" (செந்தமிழ் 20ப. 152)

அவர் கூறி 90 ஆண்டுகள் ஆகியும் எந்தவொரு பணியும் நடைபெறவில்லை. இணையத்தில் சென்று பார்த்தால் நான்கு நூல்கள் (சிசுபால சரிதம், இலக்கண சந்திரிகை, தண்டியலங்காரம், வினைப் பகுபத விளக்கம்) ஒளி நகலாக உள்ளன. 15 நூல்களுக்குப் பெயரளவில் குறிப்புகள் உள்ளன.

கழுதை தேய்ந்து கட்டெறும்பு ஆகி அதுவும் தேய்ந்து சிற்றெறும்பு ஆவதுபோல, இவரது 61 நூல்கள் இன்று 20 நூல்களாக ஆகிவிட்ட இந்நிலையிலும் விழித்துக் கொள்ளவில்லை என்றால் ஒன்றுமில்லாமல் போய்விடும். என்ன செய்வது தமிழனின் தவக்குறை தமிழறிஞர்களைப் பேணாததும், மறப்பதுமே.

1884 வதுளைக் கதிரேசன் பதிகம்
1884 வதுளைக் கதிரேசன் சிந்து
1884 வதுளைக் கதிரேசன் ஊஞ்சல்
1884 வதுளை மாணிக்க விநாயகர் பதிகம்
1886 இதோபதேசம் மொழிபெயர்ப்பு
1887 துணைவை அரசடி விநாயகர் பதிகம்
1887 துணைவை சண்முகர் ஊஞ்சல்
1887 துணைவை அரசடிவைரவர் தோத்திரம்
1888 மிலேச்சமத விகற்பக் கும்மி
1890 திருக்கரைசைப் புராணம் பொழிப்புரை
1892 மாவைப் பதிகம்
1892 மாவை யிரட்டை மணிமாலை
1895 நகுலமலைக் குறவஞ்சி நாடகம்
1895 சூடாமணி நிகண்டு 1ஆம் தொகுதி பதப்பொருள்
1896 மேகதூதக் காரிகை
1896 நகுலேசுரர் ஊஞ்சல்
1896 ஏகவிருத்த பாரதம்
1897 இலக்கண சந்திரிகை
1897 அத்தியடி விநாயகரூஞ்சல்
1897 அமராவதி பூதூர் பால விநாயகர் பதிகம்
1900 நான்மணிக்கடிகை
1900 ஆசாரக்கோவை
1900 சூடாமணி இரண்டு 2ஆம் தொகுதி பதப் பொருள்களுடன்
1900 சூடாமணி முதல் ஐந்து தொகுதி பதப்பொருள்
1900 கண்ணகி கதை
1900 இரகுவமிசக் கருப்பொருள்
1900 யாப்பருங்கலப் பொழிப்புரை
1900 வெண்பாப்பாட்டியல் பொழிப்புரை
1901 கலைசைச் சிலேடை வெண்பா அரும்பதவுரை
1901 மறைசையந்தாதி அரும்பதவுரை
1901 நீதிநெறிவிளக்கப் புத்துரை
1901 ஆத்திசூடி வெண்பா
1901 சிவஷேத்திர விளக்கம்
1901 சதாசாரக் கவித்திரட்டு
1902 உரிச்சொனிகண்டு
1902 திருவாதவூரர் புராண மூலம்
1903 தண்டியலங்காரப் புத்துரை
1903 பழமொழி விளக்கம்
1904 திருவாதவூரர் புராணப் புத்துரை
1904 கைலாய பிள்ளையார் ஊஞ்சல்
1905 கோப்பாய் வெள்ளெருவை விநாயகரூஞ்சல்
1908 யாப்பருங்கலக்காரிகைப் புத்துரை
1909 முத்தக பஞ்ச விஞ்சதி குறிப்புரை
1911 சிவதோத்திரக் கவித்திரட்டு
1912 அகப்பொருள் விளக்கப் புத்துரை
1912 விளிசிட்டி பொற்கலந்தம்பை வைரவர் ஊஞ்சல்
1913 வினைப் பகுபத விளக்கம்
1914 சாணக்கிய நீதிவெண்பா
1915 தெல்லிப்பேழை தில்லையிட்டி அம்மன் ஊஞ்சல்
1915 இலக்கியச் சொல்லகராதி
1916 பன்னாலை வள்ளிமலைக் கந்தசுவாமி ஊஞ்சல்
1916 தமிழ்ப் புலவர் சரிதம்
1918 இராமாயணப் பாலகாண்டம் அரும்பதவுரை
1920 ஏரெழுபது பொழிப்புரை
1920 இதோபதேசம்
1921 இராமோதந்தம்
1921 சிசுபால சரிதம்
1921 கல்வளையந்தாதி பதவுரை
1921 அராலி முத்துமாரியம்மன் ஊஞ்சல்
1922 இரகுவமிச சரிதாமிர்தம்



# உ.வே.சாமிநாதையர் பதிப்பு முகவுரைகளின் வழி அறியலாகும் சுவடி கொடுத்தோர் வரலாறு


### இரா. ஜானகி

எஸ்.ஆர்.எம். பல்கலைக்கழகத் தமிழ் துறையில் உதவிப் பேராசிரியராகப் பணியாற்றி வருகிறார். நந்திதா என்னும் புனைபெயரில் கவிதைகள் எழுதி வருகிறார். இவரின் நூல்கள் 'நான் இல்லதா என் வீடு', 'சங்க இலக்கியப் பதிப்புரைகள்'.





### பா. இளமாறன்

குருநானக் கல்லூரி தமிழ்த்துறையில் உதவிப் பேராசிரியராகப் பணியாற்றிவருகிறார். மாற்றுவெளி மற்றும் புத்தகம் பேசுது இதழ்களின் ஆசிரியர் குழுவில் உள்ளார். இவரின் நூல்கள் 'பதிப்பும் வாசிப்பும்', 'தொல்காப்பியம்: பன்முக வாசிப்பு' 'இருநூற்றாண்டுப் பதிப்பு வரலாற்றில் தொல்காப்பியம்'. 'தொல்காப்பியப் பதிப்புரைகள்' வெளிவர உள்ளது.




உ.வே.சாமிநாதையரின் பதிப்பு முகவுரைகள் 19 ஆம் நூற்றாண்டு மற்றும் இருபதாம் நூற்றாண்டின் தொடக்ககால வரலாற்று ஆவணங்களாக விளங்குகின்றன. 1887ஆம் ஆண்டு சீவக சிந்தாமணிப் பதிப்பின் வழியாகத் தம் பதிப்புப் பணியைத் தொடங்கிய இவர் தன் வாழ்நாளின் இறுதிக் காலம் ( 1942) வரை பழந்தமிழ்ப் பதிப்புகளை வெளியிடுவதிலேயே கவனம்கொண்டு செயல்பட்டுள்ளார். பிறர் பதிப்பித்தவற்றை மீண்டும் பதிப்பிப்பதில்லை [அவ்வாறு மீண்டும் பதிப்பித்திருந்தாலும் அவை அந்நூல்களின் முதல் பதிப்பிற்கான தரத்தையே (சிலப்பதிகாரம், மணிமேகலை, நன்னூல், குறுந்தொகை) பெறுகின்றன.] என்ற கொள்கையுடைய இவர் பல அரிய நூல்களின் முதல் பதிப்புகளை வெளியிட்டுள்ளார். பதிப்பித்து

வெளியிட்ட நூல்களை அம்முதல் பதிப்போடு நிறுத்திவிடாமல் மீண்டும் மீண்டும் அவற்றைச் செம்மைப்படுத்தி வெளியிடுவதை வழக்கமாகக் கொண்டிருந்தார்.



உ.வே.சா. தான் பதிப்பிக்கத் தொடங்கிய முதல் நூல் தொடங்கி இறுதியாக வெளியிட்ட நூல் வரை அனைத்து நூல்களுக்கான பதிப்புகளிலும் முகவுரைகள் எழுதியிருப்பது (விதிவிலக்காகச் சில சிற்றிலக்கியப் பதிப்புகளில் உ.வே.சா. முகவுரை எழுதவில்லை) குறிப்பிடத்தக்கது. பத்தொன்பதாம் நூற்றாண்டின் பிற்பகுதிக்காலம் வரை தாங்கள் வெளியிடும் பதிப்புகளில் முகவுரை எழுதும் ஒரு வழக்கத்தைப் பதிப்பாசிரியர்கள் கொண்டிருக்கவில்லை. இக்காலங்களில் ஆங்காங்கே ஒரு சிலர் மட்டும் முகவுரைகள் எழுதியிருந்த போதிலும் அம்முகவுரைகளும் விரிவற்றதாகவும், பதிப்பு உருவாக்கப் பின்புலத்தில் செயல்பட்டவற்றை முன்னிறுத்தாததாகவுமே காணப்படுகின்றன.

சி.வை. தாமோதரம்பிள்ளை நூல்களைப் பதிப்பித்து வெளியிடுங்காலத்தில் முகவுரை எழுதும் தன்மையில் சில நெறிமுறைகளைப் பின்பற்றுகின்றார். இவர் எழுதிய முகவுரைகள் அந்நூல் உருவாக்கமுறையினையும், அப்பதிப்பு உருவாக்க முறையினையும் புரிந்துகொள்வதற்குப் பல திறவுகோல்களை உருவாக்கித் தந்தன. சி.வை.தா. வாழ்ந்த காலத்தில் தன் பதிப்புப் பணியைத் தொடங்கும் உ.வே.சா. வளர்ச்சி பெற்ற இப்பதிப்பு முறைகளை உள்வாங்கத் தொடங்கியதோடு மட்டும் நின்றுவிடாமல் அவற்றைச் செழுமைப்படுத்தி அடுத்தகட்ட வளர்ச்சிக்கு நகர்த்திச் சென்றுள்ளார்.

சாற்றுக்கவிகள் வழி வெறும் பாராட்டுரைகளை மட்டுமே வெளிப்படுத்திவந்த பதிப்பாசிரியர்களுக்கு மத்தியில் பதிப்பின் முகவுரைகள் அந்நூலின் பல்வேறுபட்ட சிந்தனைகளை ஒன்றிணைக்கக்கூடிய ஒரு கருவி என்ற கருத்தாக்கத்தைத் தம் முகவுரைகள் வழி நிலைபெறச் செய்தவர் உ.வே.சா. இவரின் பதிப்பு முகவுரைகள் ஒரே அமைப்புக் கொண்டவையாகக் காணப்படுகின்றன. நூலின் சிறப்புகள், நூலைப் பதிப்பிக்க வேண்டியதன் அவசியம், பதிப்பை உருவாக்க ஏற்பட்ட இடர்கள், பதிப்பில் செய்த திருத்தங்கள், மாற்றங்கள், பதிப்பு உருவாகத் துணை நின்றோர், பதிப்பிப்பதற்குத் துணைநின்ற சுவடிகள், பொருளுதவி புரிந்தோர், பதிப்பைக் காணிக்கையாக்கிய தன்மை எனப் பல நிலைகளில் இவர் தம் முகவுரைகளை வடிவமைக்கின்றார்.

இவ்வாறு பல்நிலைப்பட்ட செய்திகளை இவரின் முகவுரைகள் வழங்குகின்ற போதிலும் அவற்றில் இடம்பெற்றுள்ள சுவடிகள் பற்றியான செய்திகள் வரலாற்று முக்கியத்துவம் வாய்ந்தவையாக உள்ளன. உ.வே. சாமிநாதையர் பதிப்புகள் குறித்து ஆய்வு மேற்கொண்ட பலரும் அவரின் பதிப்பு நுட்பங்களை, பதிப்புச் செயல்பாடுகளை முன்னிறுத்தினார்களே தவிர அவரின் சுவடி சேகரிக்கும் முயற்சியைத் தொகுத்துப் பார்க்கவில்லை (கி. நாச்சிமுத்து அவர்கள் தன்னுடைய உ.வே.சா. இலக்கணப் பதிப்புகள் என்னும் நூலில் இலக்கணச் சுவடிகள் குறித்து மட்டும் விரிவான நிலையில் பதிவுசெய்துள்ளார்). இந்தப் பின்புலத்தில் உவே. சா.வின் சங்க இலக்கியப் பதிப்புகள், காப்பியப் பதிப்புகள், இலக்கணப் பதிப்புகள் ஆகியவற்றை மட்டும் முதன்மைத் தரவுகளாகக் கொண்டு அப்பதிப்புகளின் முகவுரைகளில் எழுதப்பட்டுள்ள சுவடிகள் கொடுத்தோர் குறித்த தகவல்களைப் பின்வருமாறு தொகுத்துப் பார்க்கும்போது அரிய சில செய்திகளைத் தெரிந்துகொள்ள முடிகிறது.

1. பதிப்பிற்குப் பயன்படுத்தப்பட்ட சுவடிகள் பற்றிய விவரம்
2. மூலம் மட்டும் உள்ளவை, உரையோடு கூடியவை
3. முழுச் சுவடிகளா? குறைச் சுவடிகளா?
4. சுவடிகள் என்னென்ன ஊர்களிலிருந்து கிடைத்தன
5. சுவடிகள் கிடைக்க உதவியோர்
6. அதிக ஏடுகளைத் தந்துதவியோர்

**உ.வே.சா.வின் சங்க இலக்கியப் பதிப்புகள்:**

### 1. பத்துப்பாட்டு


பத்துப்பாட்டுமூலமும்
நச்சினார்க்கினியருரையும்.

உ.வே.சா. தன் முதல் பதிப்பில்(1889) 11 சுவடிகள் பயன்படுத்தியுள்ளார். இரண்டாம் பதிப்பில் (1918) ஒரு கையெழுத்துச் சுவடியும் சில உரைச் சுவடிகளும் கிடைத்ததாகக் குறிப்பிடுகின்றார். ஆனால் அச்சுவடிகள் பற்றிய முழுவிவரங்களை அளிக்க வில்லை. மூன்றாம் பதிப்பில் (1931) முதல் மற்றும் இரண்டாம் பதிப்பில் தந்துள்ள சுவடிகள் பற்றிய தகவல்களையே மாற்றமின்றி அளித்துள்ளார். இப்பதிப்பில் (1931) புதியதாக எந்தச் சுவடிகளையும் பயன்படுத்தியதாகத் தெரியவில்லை. கீழுள்ளவற்றில் உரை மட்டுமிருந்த பூர்த்தியான சுவடிகள் என 3,4,6 என்ற எண்களுடையவற்றை மட்டுமே உ.வே.சா. தம் மூன்றாம் பதிப்பின் முகவுரையில் குறிப்பிடு கின்றார்.

1. திருவாவடுதுறையாதீனம் மகாவித்துவான் திரிசிரபுரம் மீனாட்சி சுந்தரம் பிள்ளையின் பிரதி.
2. வேலூர் ஸ்ரீ குமாரசாமி ஐயர் பிரதி.
3. ஆறுமுகமங்கலம் குமாரசாமி பிள்ளை பிரதி, பெற்றுத்தந்தவர் திருவாவடுதுறையாதீனத்து ஸ்ரீலஸ்ரீ அம்பலவாண தேசிகர் (திருமுருகாற்றுப்படை, பொருநராற்றுப்படை மூலம் இருந்தன).
4. திருநெல்வேலி ஸ்ரீ கவிராஜ நெல்லையப்பபிள்ளை அவர்களும், அவர் களுடைய தம்பி ஸ்ரீ கவிராஜ ஈசுவரமூர்த்திப் பிள்ளையவர்களும் தந்துதவிய பிரதி.
5. திருநெல்வேலியைச் சார்ந்த வண்ணார்பேட்டை ஸ்ரீ திருப்பாற்கடனாத கவிராயரவர்கள் பிரதி, திருநெல்வேலி கவிராஜ நெல்லையப்பபிள்ளை, கவிராஜ ஈசுவர மூர்த்திப் பிள்ளை தந்துதவியது.
6. ஆழ்வார் திருநகரி திருமேனி கவிராயர் பரம்பரை ஸ்ரீ தேவர்பிரான் கவிராயரவர்கள் பிரதி, பெற்றுத்தந்தவர் மேலகரம் ஸ்ரீ திரிகூடராசப்பக் கவிராயர்
7. பொள்ளாச்சி வித்துவான் ஸ்ரீ சிவன்பிள்ளையவர்கள் பிரதி,
8. தருமபுர ஆதீனம் மடத்துப் பிரதி.
9. திருநெல்வேலி வித்துவச் சிரோமணியாகிய ஸ்ரீ திருவம்பலத்தின்னமுதம் பிள்ளையவர்கள் பிரதி, பெற்றுத்தந்தவர் ஸ்ரீ.வை. விசுவநாத சாஸ்திரி
10. ஸ்ரீ மா. வி. கனகசபைப் பிள்ளையவர்கள் பிரதி.
11. சென்னை சருவகலாச் சாலையைச் சார்ந்த கையெழுத்துப் புத்தக சாலைப் பிரதி (பெரும்பாணாற்றுப்படை மூலமும், முல்லைப் பாட்டு மூலமும் இருந்தன).
12. களக்காடு ஸ்ரீ சாமிநாததேசிகரவர்கள் தந்துதவிய பிரதி.

### 2. புறநானூறு


புறநானூறுமூலமும்
உரையும்.

உ.வே.சா. தன் மூன்று புறநானூற்றுப் பதிப்புகளுக்கும் பயன்படுத்திய சுவடிகளின் எண்ணிக்கை: முதல் பதிப்பில் (1894) 5 மூலச்சுவடிகள், 11 உரைச்சுவடிகள் பயன்படுத்திய உ.வே.சா. இரண்டாம் பதிப்பில் (1923) மேலும் 3 மூலச்சுவடிகளையும், 2 உரைச்சுவடிகளையும் பயன்படுத்தியுள்ளார். மூன்றாம் பதிப்பில் (1935) புதியதாக எந்தச் சுவடிகளையும் பயன்படுத்தியதாகத் தெரியவில்லை

**மூலப்பிரதிகள் – 8**

1. திருவாவடுதுறை ஆதீனத்து ஸ்ரீலஸ்ரீ சுப்பிரமணிய தேசிகரவர்கள் பிரதி, 1-400.
2. திருத்தணிகை சரவணப் பெருமாளையர் பிரதி, யாழ்ப்பாணம் ராவ்பகதூர் சி.வை. தாமோதரம் பிள்ளையவர்கள் தந்துதவியது, 1-400.
3. யாழ்ப்பாணத்து நல்லூர் சதாசிவப்பிள்ளை, திரு. த. கனகசுந்தரம் பிள்ளையவர்கள் பிரதி, சென்னை பா. வாசுதேவ முதலியார்

தந்துதவியது, 267-369.

4. யாழ்ப்பாணம், வி. கனகசபைப் பிள்ளையவர்கள் பிரதி, 1-369.
5. திருமயிலை வித்துவான் சண்முகம் பிள்ளையவர்கள் பிரதி, திருவனந்தபுரம் பி. சுந்தரம்பிள்ளையவர்கள் தந்துதவியது, 3-399.
6. கோயிற்பட்டிக்குப் பக்கத்துள்ள மந்தித்தோப்பு ஸ்ரீ சங்கரபாரதி சுவாமிகளின் ஆதீனகர்த்தர் மஹந்து ஸ்ரீமத் சங்கர சுப்பிரமணிய தத்த சுவாமிகள் பிரதி, 1-400.
7. திருநெல்வேலி ஸ்ரீ கவிராஜ ஈசுவரமூர்த்திப் பிள்ளையவர்கள் பிரதி, 1-400.
8. அரியூர் ஸ்ரீ எஸ். சாமிநாதையரவர்கள் பிரதி.

**உரைப்பிரதிகள் – 13**

1. திருவாவடுதுறை ஆதீனத்து ஸ்ரீலஸ்ரீ சுப்பிரமணிய தேசிகரவர்கள் பிரதி, 1-260
2. திருவாவடுதுறை ஆதீனத்து ஸ்ரீலஸ்ரீ அம்பலவாண தேசிகரவர்கள் பிரதி, 1-107
3. ஆழ்வார் திருநகரி தாயவலந்தீர்த்த கவிராயரவர்கள் பிரதி, ஸ்ரீவைகுண்டம் ஈ. சுப்பராய முதலியாரவர்கள் தந்துதவியது, 1-261
4. மிதிலைப்பட்டி அழகிய சிற்றம்பலக் கவிராயரவர்கள் பிரதி, பிரதிக்குரியவர்களது பரம்பரையோராகிய அழகிய சிற்றம்பலக் கவிராயரவர்கள், 1-266
5. மிதிலைப்பட்டி அழகிய சிற்றம்பலக் கவிராயரவர்கள் பிரதி, பிரதிக்குரியவர்களது பரம்பரையோராகிய அழகிய சிற்றம்பலக் கவிராயரவர்கள், 1-171
6. திருநெல்வேலியைச் சார்ந்த வண்ணார் பட்டை திருப்பாற்கடனாத கவிராயரவர்கள் பிரதி, யாழ்ப்பாணம் சி.வை.தாமோதரம் பிள்ளையவர்கள் தந்துதவியது, 1-260
7. தென்காசி சுப்பையாப் பிள்ளையவர்கள் பிரதி, மேலகரம் திரிகூடராஜப்பக் கவிராயரவர்கள் தந்துதவியது, 1-48
8. தென்காசி சுப்பையாப் பிள்ளையவர்கள் பிரதி (பதவுரை சிதிலம்), மேலகரம் திரிகூடராஜப்பக் கவிராயரவர்கள் தந்துதவியது, 1-57
9. தென்காசி சுப்பையாப் பிள்ளையவர்கள் பிரதி, மேலகரம் திரிகூடராஜப்பக் கவிராயரவர்கள் தந்துதவியது, 7-48
10. தூற்றுக்குடி குமாரசாமிப்பிள்ளையவர்கள் பிரதி, ஆறுமுகமங்கலம் ஏ. சுந்தரமூர்த்திப் பிள்ளையவர்கள் தந்துதவியது, 1-216
11. தூற்றுக்குடி குமாரசாமிப்பிள்ளையவர்கள் பிரதி, ஆறுமுகமங்கலம் ஏ. சுந்தரமூர்த்திப் பிள்ளையவர்கள் தந்துதவியது, 1-196
12. மதுரைத் தமிழ்ச்சங்கத்துப் பிரதி 1
13. யாழ்ப்பாணத்து வண்ணைநகர் ஸ்ரீ சுவாமிநாத பண்டிதரவர்கள் பிரதி 1

**3. ஐங்குறுநூறு**



உ.வே.சா. தன் முதல் பதிப்பில் (1903) 4 சுவடிகள் பயன்படுத்தியுள்ளார். இரண்டாம் பதிப்பில் (1920) முதல் பதிப்பில் தந்துள்ள சுவடிகள் பற்றிய தகவல்களையே மாற்றமின்றி அளித்துள்ளார். புதியதாக எந்தச் சுவடிகளையும் இரண்டாம் பதிப்பில் பயன்படுத்தியதாகத் தெரியவில்லை.

மூலமும் கருத்துரையும் உள்ள பிரதிகள்

1. திருவாவடுதுறை ஆதீனத்துப் பிரதி,
2. ஸ்ரீ.ஜே.எம். வேலுப்பிள்ளை F.M.U. பிரதி,
3. திருமயிலை வித்துவான் சண்முகம்பிள்ளை பிரதி, மூலமும் கருத்துரையும் பழையவுரையும் உள்ள பிரதி
4. ஆழ்வார் திருநகரி ஸ்ரீ.தே. லஷ்மண கவிராயரவர்கள் பிரதி,

**4.பதிற்றுப்பத்து**

உ.வே.சா. தன் முதல் பதிப்பில் (1904) 6 சுவடிகளைப் பயன்படுத்தியுள்ளார். இரண்டாம் பதிப்பிலும் (1920) மூன்றாம் பதிப்பிலும் (1941) முதல் பதிப்பில் தந்துள்ள சுவடிகள் பற்றிய


ROJA MUTHIAH

தகவல்களையே மாற்றமின்றி அளித்துள்ளார். புதியதாக எந்தச் சுவடிகளையும் இவ்விரண்டு பதிப்புகளிலும் பயன்படுத்தியதாகத் தெரியவில்லை. (கிடைத்த இந்நூல் கையெழுத்துப் பிரதிகளுள் ஒன்றிலேனும் கடவுள் வாழ்த்தும் முதற்பத்தும் பத்தாம்பத்தும் அவற்றின் உரையும் காணப்படவில்லை. உள்ள எட்டுப் பத்திலும் கூடச் சிலசில விடத்து மூலங்கள் குறைந்தும் உரைகள் சிதைந்தும் பிறழ்ந்தும் காணப்பட்டன - உ.வே.சா.) மூன்றாம் பதிப்பில் புதிய செய்தியாகப் பயன்படுத்திய சுவடிகளில் இரண்டில் மட்டும் உரை இருந்ததாகக் குறிப்பிட்டுள்ளார். ஆனால் அவ்வுரைச் சுவடிகள் எவையென குறிப்பிட்டுச் சுட்டவில்லை. சுவடி தந்துதவியோர்களின் ஊர்ப்பெயர்களை இரண்டாம் பதிப்பிலும் மூன்றாம் பதிப்பிலும் தரும்போது சிற்சில மாற்றங்கள் செய்துள்ளார்.

1. திருவாவடுதுறை ஆதீனத்துப் பிரதி
2. சென்னையிலுள்ள இராஜாங்கத்துக் கையெழுத்துப் புஸ்தக சாலை பிரதி (Government Oriental Manuscripts library, Madras )
3. ஆழ்வார் திருநகரி ஸ்ரீ தே. லஷ்மண கவிராயரவர்கள் வீட்டுப் பிரதி
4. ஆழ்வார் திருநகரி ஸ்ரீ ஜே.எம். வேலுப்பிள்ளையவர்கள் F.M.U. பிரதி
5. திருமயிலை வித்துவான் ஸ்ரீ சண்முகம் பிள்ளையவர்கள் பிரதி
6. திருமயிலை தி.த. கனகசுந்தரம் பிள்ளையவர்கள் பிரதி

### 5. பரிபாடல்

உவேசா. தன் முதல் பதிப்பில் (1918) 5 சுவடிகளைப் பயன்படுத்தியுள்ளார். இரண்டாம் பதிப்பில் (1935) புதியதாக 2 சுவடிகளைப் பயன்படுத்தியுள்ளார்

1. திருவாவடுதுறை ஆதீனத்துப் பிரதி, மிகவும் சிதைந்தவை, உரையோடு கூடியவை (19-38 அடிவரை மட்டும்).
2. ஆழ்வார் திருநகரி தே. லஷ்மண கவிராயர் வீட்டுப் பிரதி (2). 22 ஆம் பாடலின் பிற்பகுதியும் அதன் உரையின் முதற்பகுதியும் இரண்டு பிரதிகளிலும் காணக் கிடைக்கவில்லை, 2 முதல் 22ஆவது இறுதியாகவுள்ள பாடல்கள் மட்டும் உரையுடன் இருந்தன.


1918.
Copyright Registered.

3. 'பாயிரும் பனிக்கடல்' எனும் 5ஆம் பாடல் மட்டும் எழுதிய இரண்டு ஒற்றை ஏடுகள், தருமபுரவாதீனம்.
4. ஸேது ஸமஸ்தான மகாவித்வான் பாஷாகவிசேகர ஸ்ரீமத் ரா. ராகவையங்காரவர்கள் அன்புடனுதவிய இரண்டு மூல ஒற்றையேடுகள்.

### 6. குறுந்தொகை

உ.வே.சா. அவர்களுக்கு முன்பே குறுந்தொகை பதிப்பிக்கப்பட்டிருந்த போதிலும் பலரின் வேண்டுகோளுக்கு இணங்க குறுந்தொகையை 1937 ஆம் ஆண்டு உ.வே.சா. மீண்டும் பதிப்பித்து வெளியிடுகின்றார்.

திருவாவடுதுறைப் புத்தகசாலையிலிருந்து எட்டுத்தொகையில் கலித்தொகை, பரிபாடல் என்னும் இரண்டொழிய ஏனைய ஆறு நூல்களும் எழுதப்பெற்ற ஏடொன்று கிடைத்தாகக் குறிப்பிடுகிறார். இவை தவிர்த்து வேறு ஒன்பது சுவடிகள் கிடைத்ததையும் அதில் சில முழுமையாகவும் சில குறையுடையதாகவும் இருந்ததாகக் குறிப்பிட்டுள்ளார். ஆனால் அவற்றைப் பற்றிய முழு விவரங்கள் தரப்படவில்லை. மேலும் இச்சுவடிகள் யாவும் ஒரே மூலச்சுவடியின் பிரதிகளாகவே காணப்படுகின்றன என்கிற கருத்தையும் பதிவுசெய்துள்ளார்.

#### ஏட்டுப் பிரதிகள்

1. திருநெல்வேலி ஸ்ரீ அம்பலவாண கவிராயரவர்கள் பிரதி
2. மந்தித் தோப்பு மடத்திற் கிடைத்த பிரதி
3. செங்கோல் மடத்திற் கண்ட குறையான

பிரதி

4. சோடசாவதானம் ஸ்ரீ சுப்பராய செட்டியாரவர்கள் பிரதி
5. தொழுவூர் ஸ்ரீ வேலாயுத முதலியாரவர்கள் பிரதி
6. சென்னை இராசாங்கத்துக் கையெழுத்துப் புத்தகசாலைப் பிரதி

கடிதப் பிரதிகள்

1. திருமயிலை வித்துவான் ஸ்ரீ சண்முகம் பிள்ளையவர்கள் பிரதி
2. புதுக்கோட்டை ஸ்ரீ ராதாகிருஷ்ணையரவர்கள் பிரதி
3. திருக்கோணமலை ஸ்ரீ தி.த. கனகசுந்தரம் பிள்ளையவர்கள் பிரதி

## உ.வே.சா. இலக்கணப் பதிப்புகள்:

### 1. புறப்பொருள் வெண்பாமாலை

உ.வே.சா. தன் முதல் பதிப்பில் (1895) 7 சுவடிகளைப் பயன்படுத்தியுள்ளார். இரண்டாம் பதிப்பு வெளியிடும் போது (1915) புதியதாக எந்தச் சுவடிகளையும் பயன்படுத்தியதாகத் தெரியவில்லை. மூன்றாம் பதிப்பில் (1924) மேலும் இரண்டு சுவடிகள் பற்றிய தகவல்களை அளித்துள்ளார். நான்காம் பதிப்பிலும் (1934) புதிய சுவடிகள் கிடைத்ததாகத் தகவல் இல்லை. புதியதாகக் கிடைத்த 8,9 ஆகிய சுவடிகளால் நூலின் மூலமும் உரையும் பல திருத்தங்கள் பெற்றதாக உ.வே.சா. குறிப்பிடுகின்றார்.

1. திருக்கைலாய பரம்பரைத் திருவாவடுதுறை ஆதீனத்துப் பிரதி
2. மேற்படி ஆதீனத்து மகாவித்துவான் மீனாட்சிசுந்தரம் பிள்ளையவர்கள் பிரதி
3. திருக்குற்றாலத்தைச் சேர்ந்த மேலகரம் திரிகூடராசப்ப கவிராயரவர்கள் பிரதி
4. திருநெல்வேலி திருவம்பலத்தின்னமுதம் பிள்ளையவர்கள் பிரதி
5. ஆழ்வார் திருநகரி தேவர்பிரான் கவிராயரவர்கள் பிரதி
6. திரிசிரபுரம் அண்ணாசாமிப் பிள்ளையவர்கள் பிரதி
7. திருக்கோணமலை தி.த. கனகசுந்தரம் பிள்ளையவர்கள் பிரதி
8. ஆழ்வார் திருநகரி தே. லஷ்மண கவிராயரவர்கள் வீட்டுப் பிரதி
9. திருநெல்வேலி இந்து காலேஜ் தமிழ்ப் பண்டிதர் சுவர்ணம் பிள்ளையவர்கள் பிரதி

### 2. நன்னூல் மயிலைநாதர் உரை

உ.வே.சா. விற்கு முன்பே நன்னூலுக்குப் பல பதிப்புகள் வெளியிடப்பட்டிருப்பினும் மயிலைநாதர் உரையோடு கூடிய நன்னூலுக்கு இவரது பதிப்பே முதல் பதிப்பு. இப்பதிப்பில் (1918) மொத்தம் 15 சுவடிகளைப் பயன்படுத்தியுள்ளார். இதில் முழுமையானவை 6 என்றும், அபூர்த்தியானவை 9 என்றும் உ.வே.சா. குறிப்பிட்டுள்ளாரே தவிர அவை எந்தெந்தச் சுவடிகள் என்று சுட்டவில்லை. இவர் வாழ்ந்த காலத்தில் இதற்கு இரண்டாம் பதிப்பு வெளிவரவில்லை

1. திருவாவடுதுறை ஆதீனத்துப் புத்தக சாலைப் பிரதி - 3
2. சென்னையிலுள்ள இராஜாங்கத்துக் கையெழுத்துப் புத்தக சாலைப் பிரதி - 1
3. மதுரைத் தமிழ்ச்சங்கத்துப் பிரதி - 3
4. மிதிலைப்பட்டி ஸ்ரீ அழகிய சிற்றம்பலக் கவிராயரவர்கள் பிரதி - 1
5. ஆழ்வார் திருநகரி தே. லஷ்மண கவிராயரவர்கள் பிரதி - 1
6. திருநெல்வேலி ஸ்ரீ கவிராஜ ஈசுவரமூர்த்தியா பிள்ளையவர்கள் பிரதி - 1
7. திருநெல்வேலி இந்து காலேஜ் தமிழ்ப் பண்டிதர் சொர்ணம் பிள்ளையவர்கள் பிரதி-1 (இஃது ஆழ்வார் திருநகரி, ஸ்ரீ அரங்கநாத கவிராயரவர்களால் எழுதப்பெற்றது. இதனை ஸேது ஸமஸ்தான வித்துவான் ஸ்ரீமத். உவேரா. இராகவையங்காரவர்கள் வருவித்து உபகரித்தது)
8. சிதம்பரம் சைவப்பிரகாச வித்தியாசாலைத் தருமபரிபாலகர் பொன்னம்பலம்

பிள்ளையவர்கள் பிரதி - 1

9. சென்னைச் சைவ வித்தியானுபாலன யந்திரசாலைத் தலைவர் சாமிநாத பண்டிதரவர்கள் பிரதி - 1
10. திரிசிரபுரம் நாஷனல் ஹைஸ்கூல் வித்துவான் ஸ்ரீமத் உ.வே. A. M. அப்பு சடகோபராமானுஜாசாரியரவர்கள் பிரதி - 1
11. காஞ்சிபுரம் ம. தெய்வசிகாமணி முதலியாரவர்கள் பிரதி - 1

### 3. நன்னூல் சங்கரநமச்சிவாயர் உரை

உ.வேசா. தன் முதல் பதிப்பில் (1925) 2 சுவடிகளைப் பயன்படுத்தியுள்ளார். இரண்டாம் பதிப்பில் (1935) புதியதாக எந்தச் சுவடிகளையும் பயன்படுத்தியதாகத் தெரியவில்லை.

1. திருவாவடுதுறை மடத்துப் பிரதி
2. திருநெல்வேலிச் சொர்ணம் பிள்ளை என்பவராற் கிடைத்த ஆழ்வார் திருநகரி, அரங்கநாத கவிராயருடைய ஏட்டுப் பிரதி. (திருவாவடுதுறைப் பிரதியிலும் ஏனைப் பிரதிகளிலும் முதலேடு கிடைக்கவில்லை. ஆழ்வார் திருநகரி ஏட்டில் அது கிடைத்தது.)

### 4. தமிழ்நெறி விளக்கம்

உ.வே.சாமிநாதையரால் தமிழ்நெறி விளக்கம் முதலில் கலைமகளில் ஏழு பகுதிகளாக வெளியிடப்பட்டது. பின்னர் 1937 இல் தனியாக நூல்வடிவிலும் வெளிவந்துள்ளது.

1. பவானி போர்டு ஹைஸ்கூல் தமிழ்ப்பண்டிதர் ஸ்ரீ குமாரசாமிப் பிள்ளை அவர்களின் ஏட்டுப் பிரதி-1 (கிடைத்த இந்த ஒரே ஏட்டுச் சுவடியில் நூலின் முற்பகுதியும் பிற்பகுதியும் கிடைக்கவில்லை. கிடைத்தவரை அவற்றைப் பதிப்பித்து வெளியிடுவதாக உ.வே.சா. தன் முகவுரையில் குறிப்பிட்டுள்ளார்.)

## உ.வே.சா. காப்பியப் பதிப்புகள்

### 1. சீவக சிந்தாமணி

உ.வே.சா. தன் முதல் பதிப்பில் (1887) 19 உரைச்சுவடிகளையும் 4 மூலச் சுவடிகளையும் பயன்படுத்தியுள்ளார். இரண்டாம் பதிப்பில் (1907) முதல் பதிப்பில் தந்துள்ள சுவடிகள் பற்றிய தகவல்களையே மாற்றமின்றி அளித்துள்ளார். மூன்றாம் பதிப்பில் (1922) சில கையெழுத்துப் பிரதிகள் கிடைத்ததாகவும் அதைக் கொண்டு சில திருத்தங்கள் செய்ததாகவும் குறிப்பிடுகின்றார். ஆனால் விவரம் இல்லை.

**உரைப்பிரதிகள் - 19**

**திருவாவடுதுறையாதீனத்து**

1. ஸ்ரீ ல ஸ்ரீ சுப்பிரமணிய தேசிகமூர்த்திகள் பிரதி-1
2. மேற்படி ஆதீனத்து மஹாவித்துவான் ஸ்ரீ மீனாட்சிசுந்தரம் பிள்ளையவர்கள் பிரதி-1

**திரிசிரபுரம்**

3. ஸ்ரீ சி. தியாகராச செட்டியாரவர்கள் பிரதி-1

**யாழ்ப்பாணம்**

4. ஸ்ரீ சி.வை. தாமோதரம் பிள்ளையவர்கள் பிரதி-2

**சென்னை**

5. ஸ்ரீ ம.மகாலிங்கையரவர்கள் பிரதி-1
6. ஸ்ரீ அஷ்டாவதானம், சபாபதி முதலியாரவர்கள்-1
7. திரு. சின்னசாமி பிள்ளையவர்கள் பிரதி-1
8. ஸ்ரீ சோ. சுப்பராய செட்டியாரவர்கள் பிரதி-1

**சேலம்**

9. ஸ்ரீ இராமசுவாமி முதலியாரவர்கள் பிரதி- 1

**உடையூர்**

10. ஸ்ரீ சுப்பிரமணிய பிள்ளையவர்கள் பிரதி- 1

### திருநெல்வேலி

11. ஸ்ரீ சாலிவாடீசுவரவோதுவாரவர்கள் பிரதி-1

12. ஸ்ரீ ஈசுவரமூர்த்திக் கவிராயரவர்கள் பிரதி-1

### தூத்துக்குடி

13. ஸ்ரீ குமாரசாமி பிள்ளையவர்கள் பிரதி-1

### சிதம்பரம்

14. ஸ்ரீ தருமலிங்க செட்டியாரவர்கள் பிரதி-1

### தஞ்சை

15. ஸ்ரீ மருதமுத்து உபாத்தியாயரவர்கள் பிரதி-1

16. ஸ்ரீ விருஷபதாச முதலியாரவர்கள் பிரதி-1

### கூடலூர்

17. ஸ்ரீ விசயபாலநயினாரவர்கள் பிரதி-1

### விடூர்

18. ஸ்ரீ சந்திரநாத
செட்டியாரவர்கள் பிரதி-1

இவற்றுள் முழுதுமில்லாதனவும் விசேடவுரையில்லாதனவுஞ் சில.

### மூலப்பிரதிகள் – 4

### இராமநாதபுரம்

1. ஸ்ரீ பொன்னுசாமித்
தேவரவர்கள் பிரதி-1

### சேலம்

2. ஸ்ரீ இராமசுவாமி
முதலியாரவர்கள்-1

### விடூர்

3. ஸ்ரீ சந்திரநாத
செட்டியாரவர்கள் பிரதி-2

### 2. சிலப்பதிகாரம்



உ.வே.சா. தன் முதல் பதிப்பில் (1892) 22 சுவடிகளைப் பயன்படுத்தியுள்ளார். இரண்டாம் பதிப்பில் (1920) மேலும் 3 கையெழுத்துப் பிரதிகளைப் பயன் படுத்தியுள்ளார்.

### மூலப்பிரதிகள் – 8

1. ஸ்ரீ வி. மீனாட்சி சுந்தரம் பிள்ளையவர்கள் பிரதி-1
2. மிதிலைப்பட்டி ஸ்ரீ அழகிய சிற்றம்பலக் கவிராயரவர்கள் பிரதி-1
3. திருநெல்வேலி ஸ்ரீ சாலிவாடீசுவர ஓதுவாரவர்கள் பிரதி-1
4. ஆறுமுகமங்கலம் ஸ்ரீ குமாரசாமிப் பிள்ளையவர்கள் பிரதி-1
5. திரிசிரபுரம் ஸ்ரீ அண்ணாஸாமி பிள்ளையவர்கள் பிரதி-1
6. திருமயிலை ஸ்ரீ அண்ணாஸாமி உபாத்தியாயர் பிரதி-1
7. யாழ்ப்பாணம் ஸ்ரீ தி. குமாரசாமிச் செட்டியாரவர்கள் பிரதி-1
8. யாழ்ப்பாணம் ஸ்ரீ வி.கனகசபைப் பிள்ளையவர்கள் பிரதி-1

### உரைப்பிரதிகள் – 14

1. திருவாவடுதுறை ஆதீனத்துப் பிரதி-1
2. மேற்படி ஆதீனத்து மஹாவித்துவான் ஸ்ரீ மீனாட்சிசுந்தரம் பிள்ளையவர்கள் பிரதி-1
3. திரிசிரபுரம் சி. தியாகராஜ செட்டியாரவர்கள் பிரதி-1
4. திருநெல்வேலி சாலிவாடீஸ்வர ஓதுவாரவர்கள் பிரதி-1
5. சேலம் இராமஸாமி முதலியாரவர்கள் பிரதி-1
6. சிதம்பரம் சாமிஐயங்காரவர்கள் பிரதி-1
7. சென்னை தொ. வேலாயுத முதலியாரவர்கள் பிரதி-1
8. சென்னை சூ. அப்பன் செட்டியாரவர்கள் பிரதி-1

9. சென்னை குருஸாமி ஐயரவர்கள் பிரதி-1
10. திருமயிலை அண்ணாஸாமி உபாத்தியாயரவர்கள் பிரதி-1
11. யாழ்ப்பாணம் சி.வை.தாமோதரம்பிள்ளையவர்கள் பிரதி-1
12. யாழ்ப்பாணம் தி. குமாரசாமிச் செட்டியாரவர்கள் பிரதி-2
13. யாழ்ப்பாணம் வி. கனகசபைப் பிள்ளையவர்கள் பிரதி-1

**கையெழுத்துப் பிரதிகள் – 3**

1. கொழும்புத்துறை ஸ்ரீ குமாரசாமிச்செட்டியாரவர்கள் தந்த பிரதி-1
2. ஆழ்வார் திருநகரி ஸ்ரீ பெரியதிருவடிக் கவிராயரவர்கள் தேடித்தந்த பிரதி-1
3. திருத்தணிகை சரவணப் பெருமாளையர் பேரராகிய குருசாமி ஐயர் தந்த பிரதி-1 (இப் பிரதியில் அரும்பத உரையின் சில ஏடுகள் இருந்தன).

**3. மணிமேகலை**

உ.வே.சா.விற்கு முன்பு 1894ஆம் ஆண்டு மயிலை வித்துவான் சண்முகம்பிள்ளை மணிமேகலையைப் பதிப்பித்திருந்தார். இதைத் தொடர்ந்து உ.வே.சா. 1898ஆம் ஆண்டு மணிமேகலையை உரை எழுதி மீண்டும் பதிப்பிக்கின்றார். இப்பதிப்பில் அவர் மொத்தம் 10 சுவடிகளைப் பயன்படுத்தியுள்ளார். இதைத் தொடர்ந்து 1921 ஆம் ஆண்டு மறுபதிப்புக் கொண்டுவரும்போது புதியதாக மூலம் மட்டும் உள்ள இரண்டு சுவடிகளைப் பயன்படுத்தியுள்ளார். மூன்றாம் பதிப்பில் ( 1931) புதியதாக எந்தச் சுவடியையும் பயன்படுத்தியதாகத் தெரியவில்லை

1. திருக்கைலாய பரம்பரைத், திருவாவடுதுறை ஆதீனத்துப் பிரதி-1
2. எட்டையபுரம் பெரிய அரண்மனைப் பிரதி 1, இது திருவாவடுதுறை ஆதீனத்து ஸ்ரீலஸ்ரீ அம்பலவாண தேசிகரவர்கள் வருவித்துத்தந்தது
3. சிவகங்கையைச் சார்ந்த மிதிலைப்பட்டி ஸ்ரீ அழகிய சிற்றம்பலக் கவிராயரவர்கள் பிரதி-1
4. திருமயிலையிலிருந்த திருநெல்வேலி, திருவம்பலத்தின்னமுதம் பிள்ளையவர்கள் பிரதி-1, இந்தப் பிரதி கொடுத்தவர், திருமயிலைப் பார்த்தசாரதிக் கிராமணி யென்பவர்.
5. ஸ்ரீ சேலம் இராமஸாமி முதலியாரவர்கள் பிரதி-1 ( முதலிற் கிடைத்த பிரதி இதுவே)
6. யாழ்ப்பாணத்து நல்லூர் ஸ்ரீ சிற். கைலாசபிள்ளையவர்கள் பிரதி-1
7. ஆறுமுகமங்கலம் ஏ.சுந்தரமூர்த்திப் பிள்ளையவர்கள் பிரதி-1
8. S.P.G. High school, Vepery, தமிழ்ப்பண்டிதர், திருமயிலை சண்முகம் பிள்ளையவர்கள் பிரதி-1
9. சென்னை தி. முத்துக்குமாரசாமி முதலியாரவர்கள் பிரதி-1
10. சென்னையிலுள்ள இராஜாங்கத்துக் கையெழுத்துப் புத்தக சாலைப் பிரதி-1
11. மதுரைத் தமிழ்ச்சங்கத்துப் புத்தகசாலைப் பிரதி-1
12. சென்னை இராயப்பேட்டையிலுள்ள ஸ்ரீ பார்சுவநாத நயினாரவர்கள் பிரதி-1

**4. பெருங்கதை**

உவேசா. தன் முதல் பதிப்பில் (1924) 2 சுவடிகளைப் பயன்படுத்தியுள்ளார். இரண்டாம் பதிப்பில் (1935) புதியதாக எந்தச் சுவடியையும் பயன்படுத்தியதாகத் தெரியவில்லை.

1. திருநெல்வேலி ஸ்ரீ கவிராஜ நெல்லையப்பபிள்ளை, ஸ்ரீ கவிராஜ ஈசுவர மூர்த்திப்பிள்ளை ஆகியோரின் வீட்டுப் பிரதி-1.
2. திருநெல்வேலியைச் சார்ந்த வண்ணார்பேட்டை திருப்பாற்கடனாத கவிராயரவர்கள் பிரதி,

**உ.வே.சா. விற்குச் சுவடி கொடுத்தோரின் ஊர்களும் சுவடிகளின் எண்ணிக்கையும்**

**திருவாவடுதுறை**

- திருவாவடுதுறை ஆதீனம் 1, (ஐங்.), 1 (பதி.), 1 (பரி.), 1 (குறு.), 1 (பு.வெ.), 3 (நன். மயி.), 1 (நன். சங்), 1 (சிலம்.), 1 (மணி)

- திருவாவடுதுறை மகாவித்துவான் மீனாட்சிசுந்தரம் பிள்ளை 5 (பத், பு.வெ., சிலம், சீவக)

- திருவாவதுறை ஆதீனத்து சுப்பிரமணிய தேசிகர் 3 (புற, சீவக)

- திருவாவதுறை ஆதீனத்து அம்பலவாண தேசிகர் 1 (புற)

**தருமபுரம்**

- தருமபுர ஆதீனம் மடத்துப் பிரதி3 (பத், பரி)

**செங்கோல்**

- மடத்துப் பிரதி 1 (குறு)

**மதுரை**

- மதுரைத் தமிழ்ச் சங்கத்துப் புத்தகசாலைப் பிரதி 5 (புற, நன். மயி., மணி)

ரா. ராகவையங்கார் கொடுத்த பிரதி 2 (பரி)

**சென்னை**

- சென்னை இராசங்கத்துப் புத்தகசாலை பிரதி 5 (பத், பதி, குறு, நன். மயி., மணி)

- திருமயிலை வித்துவான் சண்முகம் பிள்ளை 5 (புற, ஐங், பதி, குறு, மணி)

- மயிலை அண்ணாஸாமி உபாத்தியாயர் 2 (சிலம்)

- சென்னை தொ. வேலாயுத முதலியார் 1 (சிலம், குறுந்)

- சென்னை சாமிநாதப் பண்டிதர் பிரதி 1 (நன்.மயி.)

- சென்னை சூ. அப்பன் செட்டியார் பிரதி 1 (சிலம்)

- சென்னை குருஸாமி ஐயர் 1 (சிலம்)

- சென்னை தி. முத்துக்குமாரஸாமி முதலியார் 1 (மணி)

- சென்னை ராயப்பேட்டை பார்சுவநாதர் நயினார் 1(மணி)

- சென்னை ஸ்ரீ ம. மகாலிங்கையரவர்கள் பிரதி 1 (சீவக)

- சென்னை ஸ்ரீ அஷ்டாவதானம் சபாபதி முதலியாரவர்கள் 1 (சீவக)

- சென்னை திரு. சின்னசாமி பிள்ளையவர்கள் பிரதி 1 (சீவக)

- சென்னை ஸ்ரீ சோ. சுப்பராய செட்டியாரவர்கள் பிரதி 2 (சீவக, குறுந்)

**யாழ்ப்பாணம்**

- சதாசிவப்பிள்ளை,த.கனகசுந்தரம் பிள்ளை 1 (புற)

- வி.கனகசபைப் பிள்ளை 4 (புற, சிலம், பத்)

- திருக்கோணமலை தி.த.கனகசுந்தரம் பிள்ளை 3 (குறு, பு.வெ., பதி)

- யாழ்ப்பாணம் தி. குமாரசாமிச் செட்டியார் 3 (சிலம்)

- யாழ்ப்பாணத்து நல்லூர் சிற்.கைலாசப் பிள்ளை 1 (மணி)

- யாழ்ப்பாணம் சி.வை.தாமோதரம்பிள்ளை 2 (சிலம், சீவக))

**திருநெல்வேலி**

- கவிராஜ நெல்லையப்பப்பிள்ளை, கவிராஜ ஈசுவரமூர்த்திப்பிள்ளை 2 (பத், பெருங்கதை)
- கவிராஜ ஈசுவரமூர்த்திப்பிள்ளை 3 (புற, நன்.மயி., சீவக)
- திருநெல்வேலி வண்ணார்ப்பேட்டை திருப்பாற்கடனாத கவிராயர் 3 (பத், புற, பெருங்கதை)
- திருநெல்வேலி திருவம் பலத்தின்னமுதம்பிள்ளை 3 (பத், பு.வெ.,மணி)
- திருநெல்வேலி அம்பலவாண கவிராயர் 1 (குறு)
- திருநெல்வேலி சொர்ணம்பிள்ளை 2 (பு.வெ., நன். மயி.)
- திருநெல்வேலி சாலிவாடீசுவர ஓதுவார் 3 (சிலம், சீவக)

**ஆழ்வார் திருநகரி**

- திருமேனி கவிராயர் பரம்பரை தேவர்பிரான் கவிராயர் 2 (பத், பு.வெ.)
- தாயவலந்தீர்த்த கவிராயர் 1 (புற)
- தே.லஷ்மண கவிராயர் 6 (ஐங், பதி, பரி, - பு.வெ., நன். மயி.)

ஜே.எம்.வேலுப்பிள்ளை 2 (பதி, ஐங்)
அரங்கநாத கவிராயர் 1 (நன்.மயி)
பெரிய திருவடிக் கவிராயர் 1 (சிலம்)

### திரிசிரபுரம்
- அண்ணாஸாமிப் பிள்ளை 2 (பு.வெ., சிலம்)
- ராமானுஜசாரியார் 1 (நன். மயி)
- சி.தியாகராஜ செட்டியார் 2 (சிலம், சீவக)

### ஆறுமுகமங்கலம்
- குமாரசாமிப்பிள்ளை 3 (பத், சிலம், தமிழ்நெறி.விளக்கம்)
- ஏ.சுந்தரமூர்த்திப்பிள்ளை 1 (மணி)

### சிவகங்கையைச் சார்ந்த மிதிலைப்பட்டி
- அழகிய சிற்றம்பலக் கவிராயரவர்கள் 5 (புற, நன். மயி., சிலம், மணி)

### திருத்தணிகை
- சரவணப் பெருமாளையர் 1 (புற)
- சரவணப் பெருமாளையர் பேரர் குருஸாமி ஐயர் 1 (சிலம்)

### பொள்ளாச்சி
- சிவன்பிள்ளை பிரதி 1 (பத்)

### கோயிற்பட்டி பக்கத்திலுள்ள மங்தித்தோப்பு
சங்கரசுப்பிரமணிய தத்த சுவாமிகள் 2 (புறம், குறு)

### சேலம்
- இராமஸாமி முதலியார் 4 (சிலம், மணி, அரியூர்
- எஸ். சாமிநாதையரவர்கள் 1 (புற)
- எட்டையபுரம் பெரிய அரண்மனைப்பிரதி 1

### தென்காசி
- சுப்பையாப்பிள்ளை 3 (புற)

### தூற்றுக்குடி
- குமாரசாமிப்பிள்ளை 3 (புற, சீவக) வீடூர்
- ஸ்ரீ சந்திரநாத செட்டியாரவர்கள் பிரதி 3 (சீவக)

### திருக்குற்றாலத்தைச் சேர்ந்த மேலகரம்
- திரிகூடராசப்பக் கவிராயர் 1 (பு .வெ.)

### சிதம்பரம்
- சைவப்பிரகாச வித்தியாசாலை பொன்னம்பலம்பிள்ளை 1 (நன். மயி.)
- சாமி ஐயங்கார் 1 (சிலம்)
- ஸ்ரீ தருமலிங்க செட்டியாரவர்கள் பிரதி 1 (சீவக)

### தஞ்சை
- ஸ்ரீ மருதமுத்து உபாத்தியாயரவர்கள் பிரதி 1 (சீவக)
- ஸ்ரீ விருஷபதாச முதலியாரவர்கள் பிரதி 1 (சீவக)

### களக்காடு
- சாமிநாத தேசிகர் 1 (பத்)

### காஞ்சிபுரம்
- ம. தெய்வசிகாமணி முதலியார் 1 (நன். மயி)

### புதுக்கோட்டை
- ராதாகிருஷ்ணையரவர்கள் 1 (குறு)

### வேலூர்
- குமாரசாமி ஐயர் 1 (பத்)

கூடலூர்

- ஸ்ரீ விசயபாலநயினாரவர்கள் பிரதி 1 (சீவக)

இராமநாதபுரம்

- ஸ்ரீ பொன்னுசாமித் தேவரவர்கள் பிரதி 1 (சீவக)

உடையூர்

ஸ்ரீ சுப்பிரமணிய பிள்ளையவர்கள் பிரதி 1

## துணைநூற்பட்டியல்


1. என் சரித்திரம், உ.வே. சாமிநாதையர், உ.வே. சா. நூல்நிலையம், சென்னை, மறுபதிப்பு, 2008
2. டாக்டர் உ.வே.சா. இலக்கணப் பதிப்புகள், கி. நாச்சிமுத்து, உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை, 1986
3. டாக்டர் உ.வே.சா. சங்க இலக்கியப் பதிப்புகள், குளோரியா சுந்தரமதி, உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை, 1984
4. டாக்டர் உ.வே.சா. காப்பியப் பதிப்புகள், இரா. காசிராசன், உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை, 1985
5. உ.வே.சா. பன்முக ஆளுமையின் பேருருவம், தொகுப்பு: பெருமாள்முருகன், காலச்சுவடு, சென்னை, 2005
6. உ.வே.சா. ஒரு தமிழ் ஆய்வு, காசிராசன். எஸ்.டி., உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை, 1987
7. டாக்டர் உ.வே.சா. பதிப்புப்பணி ஓர் ஆய்வு, சொல்விளங்கும் பெருமாள், வஞ்சிக்கோ பதிப்பகம், மதுரை, 1981
8. உ.வே.சா. பதிப்புப்பணியும் பன்முக மாட்சியும், முனைவர் செ. இராசு, உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை, 2003
9. தமிழ்நூற் பதிப்புப் பணியில் உ.வே.சா. பாடவிமர்சனவியல் நோக்கு, கார்த்திகேசு சிவத்தம்பி, குமரன் புத்தக நிலையம், கொழும்பு, சென்னை, 2007
10. செம்மொழித் தமிழ்நூல்கள் பதிப்புரைத் தொகுப்பு, கா. அய்யப்பன், காவ்யா வெளியீடு, சென்னை, 2009
11. சங்க இலக்கியப் பதிப்புரைகள், இரா. ஜானகி, பாரதி புத்தகாலயம், சென்னை, 2010
12. பதிப்பும் வாசிப்பும், (தமிழ் நூல்களின் பதிப்பு மற்றும் ஆய்வு), பா. இளமாறன், சந்தியா .பதிப்பகம், சென்னை, 2008
13. பரிபாடல் பதிப்பு வரலாறு (1918-2010) ம. லோகேஸ்வரன், காவ்யா, சென்னை, 2010
14. தொல்காப்பியம், சங்க இலக்கியம்: பதிப்பும் பதிப்பாளரும், பதிப்பாசிரியர்: சிவகாமி, உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை, 2009
15. சுவடிப் பதிப்புத்திறன், தொகுதி 1, 2, (பதிப்பாசிரியர்கள்: முனைவர் சா. கிருட்டினமூர்த்தி, முனைவர் தி. மகாலட்சுமி, முனைவர் கு. நிர்மலாதேவி, திரு. த. பூமிநாகநாதன்), உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை, 2002




# மளிகைக் கடை மகாவித்துவான் கோ.வடிவேலு செட்டியார் (1863–1936)



பொ. வேல்சாமி

புலவர் பட்டம் பெற்றவர். தொழில் நிமித்தம் தஞ்சாவூரிலும் நாமக்கல்லிலும் வாழ்பவர். 'பொற்காலங்களும் இருண்ட காலங்களும்', 'கோவில்-நிலம்- சாதி', 'பொய்யும் வழுவும்' ஆகியவை இவரது ஆய்வு நூல்கள். 'நிறப்பிரிகை' இதழின் ஆசிரியர் குழுவில் முக்கியப் பங்கு வகித்தவர்.

தமிழ் வரலாற்றில் சைவ சித்தாந்த நூல்கள் தனக்கென ஒரு தனி இடத்தைப் பிடித்துக்கொண்டு வளர்ந்ததுபோலவே 'அத்வைதம்' பேசும் நூல்களும் பெருமளவில் எழுதப்பட்டுள்ளன. 'தத்துவராயர்' திரட்டிய சிவப்பிரகாசப் பெருந்திரட்டில் தமிழில் அத்வைதம் பேசும் நூல்கள் ஏராளமாக இருப்பதாக தெ.பொ.மீ. கூறுகின்றார். இந்தியாவில் வழங்கும் மொழிகளிலேயே தமிழ்மொழியில்தான் முதல்முதலாகப் பகவத்கீதை மொழி பெயர்க்கப்பட்டது. பட்டர் என்பவர் மொழிபெயர்த்த அந்த நூலுக்குப் 'பரமார்த்த தரிசனம்' என்று பெயர்.

இத்தகைய அத்வைத நூல்கள் தத்துவச் செறிவுமிக்க மொழியில் மட்டும்தான் இருக்கும் என்று நாம் நம்புவதற்கு மாறாக அஞ்ஞவதைப் பரணி, மோகவதைப் பரணி என்று இலக்கிய நடையிலும் தச்சன் பாட்டு, பள்ளி மெய்ஞானக்கொம்மி, ஞானக் குறவஞ்சி என்று பாமர மக்களுக்கும் புரியும்படி நாட்டுப்புற மொழியிலும் எழுதப்பட்டுள்ளன. கைவல்ய நவநீதம், ரிபுகீதை, பிரபோத சந்திரோதயம் போன்ற புகழ்பெற்ற நூல்களுடன் அத்வைதத்தை முதல்முதலில் பயிலத் தொடங்கும் மாணவர்களுக்கான 'நானா சீவவாதக் கட்டளை' போன்ற எளிய நூல்களும் தமிழ் மொழியில் உள்ளன என்பது குறிப்பிடத்தக்கது. இத்தகைய அத்வைதப் பாரம்பரியத்தை மாணவர்களுக்குப் போதித்து வந்த பல பெரும் புலவர்கள் இருபதாம் நூற்றாண்டின் ஆரம்பக் காலங்களில் புகழுடன் விளங்கி வந்தனர். மறைமலை அடிகளின் ஆசிரியர் சூளை சோமசுந்தர நாயகர் போன்று புகழ்பெற்ற மற்றுமொரு பேராசிரியர் கோ. வடிவேலு செட்டியார். இவர் அத்வைத வேதாந்தம் மட்டுமல்லாது தமிழ் இலக்கண இலக்கியத்திலும் தர்க்கத்திலும் பெரும் புலமை பெற்றவராக விளங்கியதால் 'மகாவித்துவான்' என்று அறிஞர்களால் அன்புடன் அழைக்கப்பட்டார்.




1863ஆம் ஆண்டு சென்னை கோமளேசுவரன் பேட்டை வெங்கடாசல ஆச்சாரி தெருவில் மளிகைக் கடை வைத்திருந்த சுப்பராயச் செட்டியாரின் மகனாகப் பிறந்தார். இவருடைய அன்னை தனகோட்டி அம்மையார். அக்கால வழக்கப்படி இவருடைய ஐந்தாம் வயதில் திண்ணைப் பள்ளிக்கூட மாணவராகச் சேர்ந்து பத்தாம் வயதுவரை கல்வி கற்றார். பின்னர் இவருடைய இருபதாம் வயதுவரையிலும் அதே தெருவிலிருந்த சிறிய மளிகைக் கடையில் தம்முடைய தந்தையாருக்குத் துணையாக வியாபாரத்தைக் கவனித்து வந்தார். இருபதாம் வயதில் இவருக்குத் திருமணம் நடந்தது. இருபத்தாறாம் வயதுவரை வியாபாரம் செய்துகொண்டே தம்முடைய குடும்பத்தைக் கவனித்து வந்தார்.

இவருடைய இருபத்தாறாம் வயதில் அந்தக் கடைக்கு ஒரு புதிய வாடிக்கையாளர் வந்தார். இராமானுச நாயக்கர் என்ற அவர் தாம் ஏற்றிருந்த ஆசிரியப் பணியிலிருந்து ஓய்வு பெற்று அந்தத் தெருவில் குடியேறினார். தமிழில் பெரும் புலவராகிய அவர் அப்பாடல்களைச் செட்டியாரிடம் சொல்லி மகிழ்ந்து வந்தார். அப்பாடல்களைக் கேட்டுச் சுவைத்து வந்த செட்டியாருக்குத் தமிழ் இலக்கியத்தின்மீது பெரும் காதல் ஏற்பட்டது. இராமானுச நாயக்கர் சுருட்டு பிடிப்பதில் பெருவிருப் பமுடையவர். அவர் வரும் வேளைகளில் செட்டியார், அவருக்கு விலை உயர்ந்த சுருட்டுக்களைக் கொடுத்து அதை அவர் ஆர அமரப் புகைக்கும்படி செய்வார். பின்னர் தமிழ்மழை பொழியத் தொடங்கும். இலக்கணம், இலக்கியம், புராணங்கள் என்று அன்றைய நிலையில் புகழ் பெற்றிருந்த எல்லா வகையான நூல்களும் நாயக்கரின் சொற்பொழிவில் வந்து செட்டியாரின் அறிவை நிறைத்தது. இந்தக் கல்வியைச் செட்டியார் ஏழு ஆண்டுகள் பெற்றார்.

தமிழ்க் கல்வியின் மீதான விருப்பம் என்பது செட்டியாரிடத்தில் வணிகத்தின் மீதான விருப்பத்தைக் குறைக்கத் தொடங்கியது. இதன் விளைவாக உடன்பிறந்தவர்கள் உட்பட குடும்ப உறுப்பினர்கள் அவரைக் கண்டித்தும் தடைகள் பல உண்டுபண்ணியும் அவர் உள்ளத்தை வியாபாரத் துறையில் இழுத்து நிறுத்த படாத பாடுபட்டனர். ஆனால் அவர்கள் தோல்வி அடைந்தனர்.

கடைக்குத் தேவையான சரக்குகளைக் கொள்முதல் செய்ய கொத்தவால் சாவடிக்கு வாரம் இருமுறை செல்வார். அப்பொழுது இராமானந்தயோகிகள் என்னும் மகாவித்துவான் இராமசாமி நாயுடு, அப்பன் செட்டியார், மயிலை சண்முகம் பிள்ளை போன்றவர்களிடம் தொடர்பு கொண்டு தமிழ் இலக்கண இலக்கியங்களில் தமக்கு ஏற்பட்ட ஐயங்களைப் பெருமளவில் நீக்கிக் கொண்டு வந்தார். இதுவும் குடும்பத்தினரிடையே கசப்பை உண்டுபண்ணியது. இவர் கொள்முதலுக்குச் செல்லும்போது சிவப்புநிற வேட்டியுடன்தான் செல்வார். உறவினர்களும் இவர் வியாபார வேலையாகச் செல்கிறார் என்று திருப்தி கொள்வர். ஆனால் கொள்முதலுக்கு எடுத்துச் செல்லும் சாக்குப் பையில் வெள்ளை வேட்டியையும்

தேவையான புத்தகத்தையும் மறைத்து எடுத்துச் செல்வார். கூவம் ஆற்றைக் கடந்தவுடன் வெள்ளை வேட்டியை உடுத்திக்கொண்டு மேற்கூறப்பட்ட பெரும் புலவர்களிடம் பாடம் கேட்பார். பின்னர் சரக்கைக் கொள்முதல் செய்துகொண்டு கடைக்குத் திரும்புவார்.

"தமிழ்மீது ஆறாத பற்றுக்கொண்டு செட்டியாருக்கு உறவுகளும் வியாபாரமும் தீராத துன்பத்தைத் தந்தன. இந்த நேரத்தில் ரிப்பன் அச்சக உரிமையாளராகவும் வேதாந்த சாத்திரத்தில் பெரும் புலவராகவும் விளங்கிய சை. ரத்தினச் செட்டியார் அவர்களுடைய தொடர்பு இவருக்கு ஏற்பட்டது. இவருக்கு வேதாந்தம் பயிற்றுவிப்பதில் குருவாக விளங்கிய அவர் குடும்பச் சூழ்நிலையால் செட்டியாருடைய கல்விக்கு இடையூறு ஏற்படுவதை அறிந்து 1896இல் தங்கசாலைத் தெருவில் தொடங்கப்பட்ட இந்து தியாலஜிகல் உயர்நிலைப் பள்ளியில் தலைமைத் தமிழாசிரியர் பதவியை இவருக்கு வாங்கித் தந்தார். அப்போது இவருக்கு வயது 33. இந்த நிகழ்ச்சி செட்டியார் அவர்களின் வாழ்க்கைப் பாதையை முற்றிலும் மாற்றி அமைத்துவிட்டது.

பள்ளியில் மாணவர்களுக்குப் பாடம் நடத்துவதுடன் மற்ற நேரங்களில் தன்னை நாடி வருகின்ற ஆர்வலர்களுக்குத் தமிழும் தத்துவமும் போதித்து வந்தார். அத்தகையவர்களுள் தெ.பொ. மீனாட்சி சுந்தரனார், மொ. அ. துரை அரங்கனார், மு. வரதராசனார் போன்றவர்கள் குறிப்பிடத்தக்கவர்கள்.

பள்ளியில் மாணவர்களுக்குப் பாடம் நடத்துவதுடன் மற்ற நேரங்களில் தன்னை நாடி வருகின்ற ஆர்வலர்களுக்குத் தமிழும் தத்துவமும் போதித்து வந்தார். அத்தகையவர்களுள் தெ.பொ. மீனாட்சி சுந்தரனார், மொ. அ. துரைஅரங்கனார், மு. வரதராசனார் போன்றவர்கள் குறிப்பிடத் தக்கவர்கள். செட்டியார் அவர்களிடம் பாடம் கேட்பதில் பெருவிருப்பம் கொண்ட தெ.பொ. மீனாட்சி சுந்தரம் அவர்கள் தம் ஆசிரியருக்குப் பிடித்தமான காப்பியும் ஜாங்கிரியும் எடுத்துச் செல்வார். ஒருமணி நேரத்திற்கு ஒருமுறை காப்பியும் ஜாங்கிரியும் அருந்திவிட்டால் செட்டியார் அவர்கள் பெருத்த உற்சாகத்துடன் நாலைந்து மணிநேரம் பாடம் சொல்வார். செட்டியாருக்கும் தெ.பொ.மீ.க்கும் இடையே அமைந்த உறவு இராம கிருஷ்ணருக்கும் விவேகானந்தருக்கும் உள்ள உறவைப் போன்றதாகும் என்று துரை அரங்கனார் குறிப்பிடுகின்றார்.

சுமார் நாற்பத்தைந்து நூல்கள்வரை இவர் எழுதியுள்ளார். அதில் குறிப்பிடத்தக்கவை. 1. திருக்குறள் பரிமேலழகர் உரைக்கான விளக்கம் 2. கைவல்ய நவநீதம் மூலம் மூலத்துக்கு இயைந்த வசன வினாவிடை விரிவுரை மேற்கோளுடன் 3. பகவத்கீதை மூலத்துக்கு இயைந்த வசனமும் விருத்தியுரையுடன் 4. சர்வ தரிசன சங்கிரகம். இந்தியத் தத்துவத்தைப் பற்றி நூல்கள் எழுதியுள்ள அறிஞர்கள் அனைவரும் தவறாது குறிப்பிடுகின்ற நூல் சர்வ தரிசன சங்கிரகம் . இந்தியத் தத்துவ தரிசனங்களைப் பதினாறு தலைப்புகளில் பகுத்து விளக்கியுள்ள இந்த வடமொழி நூலை இராமச்சந்திர சாஸ்திரியார் என்பவரைக் கொண்டு மொழிபெயர்த்து நல்ல முன்னுரையுடனும் குறிப்பிடத்தக்க குறிப்புகளுடனும் 1910இல் வெளியிட்டார். வேதத்துக்கு உரை வகுத்த சாயனருடன் பிறந்த வித்யாரண்யர் இந்நூலின் ஆசிரியர் ஆவார். இதேபோன்று திருக்குறள் பரிமேலழகர் உரையிலுள்ள இலக்கண நுட்பங்களையும் தத்துவக் குறிப்புக்களையும் தெளிவாக விளக்கி இவரால் எழுதப்பட்ட குறிப்புகள் அறிஞர்களால் இன்றும் பாராட்டப்படுகின்றன. இந்தத் திருக்குறள் நூலில் எல்லாக் குறள்களுக்கும் ஆங்கில மொழிபெயர்ப்பு கொடுக்கப்பட்டுள்ளது. செட்டியாரின் நண்பர் ஒருவர் இந்த மொழிபெயர்ப்பைச் செய்துகொடுத்து தன் பெயரை வெளியிட வேண்டாம் என்று சொன்னதாகச் செட்டியார் முன்னுரையில் குறிப்பிடுகின்றார். ஆனால் அந்த மொழிபெயர்ப்புப் பகுதிகளில் பெரும்பாலானவை துரு (Drew) பாதிரியாருடைய மொழிபெயர்ப்பு ஆகும் என்பது குறிப்பிடத்தக்கது. சரியான வாய்ப்புகள் கிடைக்கும்பட்சத்தில் எத்தனை இடையூறுகள் ஏற்பட்டபோதும் துறைசார்ந்த ஆர்வம் கொண்ட ஒருவர் அறிஞராக மலர்ச்சிபெற முடியும் என்பதற்கு வடிவேலு செட்டியாரின் வாழ்க்கை சிறந்த எடுத்துக்காட்டாக விளங்குகிறது.

[**குறிப்பு:** பொய்யும் வழுவும் (காலச்சுவடு பதிப்பகம்) என்ற நூலிலிருந்து தேவை கருதி எடுக்கப்பட்டது.]



# ஜே.எம். நல்லசாமிப் பிள்ளை (1864-1920)

## 'சித்தாந்த தீபிகை' வழி கட்டமைத்த சைவப்புலமைத்துவச் செயல்பாடு




கு. கலைவாணன்

சென்னைப் பல்கலைக்கழகத் தமிழ் இலக்கியத்துறையில் 'சைவப் புலமை வரலாறு' என்னும் தலைப்பில் முனைவர்பட்ட ஆய்வினை மேற்கொண்டு வருகிறார். இவர் 'Collected Research papers on Tamil Classics Siddhanta Deepika (1897-1914)' என்னும் நூலினைத் வெளியிட்டுள்ளார்.


இருபத்தோராம் நூற்றாண்டு பல்வேறு நவீன சிந்தனை மற்றும் தொழில்நுட்ப வளர்ச்சியை அடிப்படையாகக் கொண்டு வளர்கிறது. இத்தகைய வளர்ச்சி கொண்டுள்ள இந்த நூற்றாண்டின் உருவாக்கதிற்குக் காரணமான, இதற்கு முந்தைய இருபது நூற்றாண்டுகளைப் பற்றிய நம்முடைய அறிதல் / தேடல் என்பது மிகக் குறுகிய அளவிலேயே பதிவாகியுள்ளது. இதில் இன்னும் தேடிக் கண்டுபிடிக்க வேண்டியவை அதிகமாகவே உள்ளன. பதிவாகியுள்ளவை பற்றிய நமது புரிதல் என்பதும் தொடக்க நிலையிலேயே உள்ளது. இது ஒருபுறம் இருக்க பத்தொன்பதாம் நூற்றாண்டு, காலனித்துவத்தின் பல பரிமாணங்களை உள்வாங்கிய தன்மையுடையது. இந்நூற்றாண்டில் இயங்கிய சமயச்சங்கங்கள் அச்சு ஊடகங்கள்வழி எவ்வாறு செயல்பட்டன என்பதை அடிப்படையாகக் கொண்டு அந்நூற்றாண்டினைப் பற்றிய தேடல் தொடர்கிறது.

குறிப்பாகச் சமயங்கள் ஒவ்வொன்றும் தங்களது கருத்துக்களை எடுத்துரைக்க / பரப்ப இதழ்களை நடத்தின. அந்தப் பின்புலத்தில் சைவ சமய சித்தாந்தக் கருத்துக்களை உலகம் முழுவதும் உள்ளவர்கள் தெரிந்துகொள்ளும் வகையில் ஜே.எம். நல்லசாமிப் பிள்ளையால் தோற்றுவிக்கப்பட்டது - 'Light of Truth or Siddhanta Deepika' உண்மை விளக்கம் (அ) சித்தாந்த தீபிகை என்னும் இருமொழி (ஆங்கிலம் / தமிழ்) மாத இதழாகும். தமிழ்ச் சூழலில் இவ்விதழ் குறித்த அறிதல் என்பது மிகக் குறுகிய வட்டத்திலேயே உள்ளது. அப்படித் தெரிந்தவர்களிடமும் அவ்விதழ் குறித்த முழுமையான வெளிப்பாடு இல்லை. அறியப்படாது உள்ள இவ்விதழின் புலமைத்துவச் செயல்பாடு பற்றிய புரிதலை அடிப்படையாகக் கொண்டது இக்கட்டுரை. இதழைப் பற்றித் தெரிந்து கொள்வதற்கு முன் இவ்விதழை வெளிக்கொணர்ந்த ஜே.எம். நல்லசாமிப் பிள்ளை (ஜே.எம்.என்.) பற்றிய புரிதல் அவசியமானது. ஜே.எம்.என்.இன் புலமைத்துவச் செயல்பாட்டைப் புரிந்துகொண்டால் சித்தாந்த தீபிகையின் புலமைத்துவத்தைப் புரிந்துகொள்வது எளிது. அவருடைய சிந்தனை மரபின் விளைச்சலாகத்தான் சித்தாந்த தீபிகையைப் பார்க்க முடிகின்றது. இன்றைய தமிழியல் ஆய்விற்கு உதவும் எத்தகைய அறிவு மரபினை ஜே.எம்.என். இவ்விதழ்வழி கட்டமைத்துள்ளார் என்பதை மையப்படுத்துவதே இக்கட்டுரையின் நோக்கம் ஆகும். இக்கட்டுரையானது பின்வரும் பகுப்புகளைக் கொண்டு அமைகிறது.

- ஜே. எம். நல்லசாமிப் பிள்ளை புலமைச் செயல்பாடு
- சித்தாந்த தீபிகை இதழ் உருவாக்கம்
- சித்தாந்த தீபிகை வழி கட்டமைக்கப்பட்டுள்ள புலமைச் செயல்பாடு.

கி.பி. பத்தொன்பதாம் நூற்றாண்டுக்கு முற்பட்ட சில காலம் சைவ சமயம் தொய்வடைந்த நிலையில் இருந்தது. சூளை சோமசுந்தர நாயகர், ஆறுமுகநாவலர் ஆகியோரின் முயற்சியால் சைவ சமயம் மீண்டெழுந்தது. அவர்களைப் பின்பற்றி பலர் சைவப் பணிகளை மேற்கொண்டனர். அவர்களுள் ஜே.எம்.என். பிறநாட்டாரும் சைவ சித்தாந்தத்தைப் புரிந்துகொள்ளும் வகையில், மேற்கண்ட இருவரையும் முன்னோடியாகக் கொண்டு தமது சமயப் பணியை மேற்கொண்டார். ஜே.எம்.என். சைவ மரபுகளை முறையாகப் பின்பற்றும் குடும்பத்தில் திருச்சியில் பிறந்து வளர்ந்தவர். எனவே அவருடைய சமய ஈடுபாடு என்பது பிறப்பு முதலேயே தொடங்கியது. அவரது தந்தையார் - மாணிக்கம் பிள்ளை, தாயார் - செல்லத்தா அம்மையார் ஆவர். இவர் தமது இருபதாவது வயதில் இலட்சுமியம்மையைத் திருமணம் செய்துகொண்டார். இவர்க்கு ஒரு மகனும், இரண்டு மகள்களும் இருந்தனர்.

கி.பி. பத்தொன்பதாம் நூற்றாண்டுக்கு முற்பட்ட சில காலம் சைவ சமயம் தொய்வடைந்த நிலையில் இருந்தது. சூளை சோமசுந்தர நாயகர், ஆறுமுகநாவலர் ஆகியோரின் முயற்சியால் சைவ சமயம் மீண்டெழுந்தது. அவர்களைப் பின்பற்றி பலர் சைவப் பணிகளை மேற்கொண்டனர். அவர்களுள் ஜே.எம்.என். பிறநாட்டாரும் சைவ சித்தாந்தத்தைப் புரிந்துகொள்ளும் வகையில், மேற்கண்ட இருவரையும் முன்னோடியாகக் கொண்டு தமது சமயப் பணியை மேற்கொண்டார்.

ஜே.எம்.என். தமிழ்க் கணக்காயனாரிடம் பொதுக்கல்வியும் ஓதுவார் ஒருவரிடம் தமிழ் மறையும் பயின்றார். எஸ்.வி.ஜி. பாடசாலையில் ஆங்கிலம் கற்றார். அரசாங்க பிரசிடென்சி கல்லூரியில் தத்துவ சாத்திரம் படித்து பட்டம் பெற்றார். பின்னர் பி.எல். பட்டம் பெற்று வழக்கறிஞர் பணியைத் தொடங்கினார் (J.M. Nallaswami Pillai and his life - 136) . வழக்கறிஞர் பணியோடு சமயப்பணிகளையும் தொடர்ந்து செய்தார். இவர்க்கு இயல்பாகவே சமயநூல்கள், கந்த புராணம், பாரதம், இராமாயணம், சித்தாந்த நூல்களைப் படிக்கும் ஆர்வம் இருந்தது. இதன் தொடர்ச்சியாகத் திரிசிரபுரத்து நாகநாதசுவாமி கோயிலில் சித்தாந்தசபை ஒன்றினை நிறுவி, அதில் சோமசுந்தர நாயகரின் சொற்பொழிவினை நிகழ்த்துவித்தார்.

சைவ சாத்திர நூல்களை ஆங்கிலத்திலும் மொழிபெயர்த்துள்ளார். இவர் மொழிபெயர்த்த சித்தாந்த சாத்திர நூல்கள்: உண்மை நெறி விளக்கம், சிவஞான போதம் (1895), சிவஞான சித்தியார் (1897), திருவுந்தியார், உண்மை விளக்கம், வினா வெண்பா, கொடிக்கவி, திருவருட்பயன், இருபா இருபஃது ஆகிய நூல்களாகும். சங்க இலக்கியத்தில் கலித்தொகை, பத்துப்பாட்டு ஆகியவற்றில் சில பாடல்களையும் மொழிபெயர்த்துள்ளார். மேலும் இவரது கட்டுரைகள் Indian Patriot, Tamilian Antiquary, Madras Review, The New Reformar, செந்தமிழ் ஆகிய இதழ்களில் வெளிவந்துள்ளன. இவ்விதழில் வெளிவந்த கட்டுரை களைப் படித்து ஜே.எம்.என்.னைப் பாராட்டிய "ஜெர்மனியின் Prof. F. Maxmuller, Prof. Julien Vinsen, Prof. Frazer, Dr. L.D. Bernett 'ஆக்ஸ்போர்டு Rev. Dr. G.U. Pope (The Life of J.M. Nallaswami Pillai - 141)" ஆகியோர் ஆவர். இவர் தனது சொந்த நூலகத்தில் மேலை நாடுகளிலிருந்து வெளிவந்த The Strand, The Person, The windson, Temple Bar, The Champer's Journal ஆகிய ஆங்கில இதழ்களைப் படித்தும் பாதுகாத்தும் வந்தார்.



சைவ சபைகள் ஒவ்வொரு பகுதியிலும் செயல்பட்டு வந்தன. அவற்றை ஒருங்கிணைத்து செயல்படுத்தும் ஒரு அமைப்பை உருவாக்க வேண்டியதன் அவசியத்தை ஜே.எம்.என். உணர்ந்தார். இந்தப் பின்புலத்தில் உருவாக்கப்பட்ட சைவ மஹா சமாஜமானது "சைவ சமயத்தைப் பரப்புவதற்கான சபைகள் பல அவ்வப்போது தோன்றினவாயினும், அப்பணிக்கென ஒரு மத்தியப் பெருங்குழு ஏற்பட வேண்டியதன் அவசியத்தை உணர்ந்து 1906ஆம் ஆண்டில் சைவ சித்தாந்த சமாஜத்தை இலங்கை சொலிசிட்டர் ஜெனரல் கனம் பொருந்திய பொ. ராமநாதன் அவர்களின் தலைமையின்கீழ் கூட்டுவித்தார். அச்சபை இன்றைக்கு நாற்பத்து மூன்று ஆண்டுகளாகச் சைவத்திற்குச் சிறந்த பணியாற்றி வருகிறது. 1897இல் தொடங்கிய சித்தாந்த தீபிகை அதன் நோக்கத்தையும் பணியையும் உலகத்திற்கு அறிவித்து வந்தது. 1911ஆம் ஆண்டில்தான் தமிழில் 'சித்தாந்தம்' என்ற மாத வெளியீடு, சமாஜத்தின் வெளியீடாக அட்டாவதானம் பூவை கலியாணசுந்தர முதலியார் அவர்களை ஆசிரியராகக் கொண்டு வெளிவந்தது" (The life of J.M. Nallaswami Pillai - 142). உருவாக்கப்பட்ட வரலாற்றையும் செயல்பாட்டையும் அறிய முடிகின்றது. இங்கு சைவ மகாசமாஜம் உருவாக்கம் குறித்த மற்றொரு செய்தியையும் பதிவு செய்வது முக்கியமானது. மறைமலையடிகள் வரலாறு என்னும் நூலில் சைவ சமாஜத்தை மறைமலையடிகள் தோற்றுவித்தார் என்றும் ஜே.எம்.என். அப்போது இல்லையென்றும் பின்னர் வந்து தனது பணியை மேற்கொண்டார் என்றும் மறை. திருநாவுக்கரசு அந்த நூலில் பதிவு செய்துள்ளார். மறைமலையடிகள் 1911இல் சைவ சமாஜத்திலிருந்து வெளியேறிவிட்டதாகவும் குறிப்பிட்டுள்ளார். இங்கு நாம் கவனம் கொள்ள வேண்டியது 1911இல் மறைமலையடிகள் வெளியேறியது - சித்தாந்தம் இதழ் தொடக்கம் - இதே ஆண்டு சித்தாந்த தீபிகை தன்னைச் சமயப் பிரச்சார இதழாக அறிவித்துக்கொண்டு வெளிவந்தது. ஏனென்றால், அதற்கு முன்னர் எவ்வித அறிவிப்புமின்றி வெளிவந்தது குறிப்பிடத்தக்கது. மேற்கண்ட மூன்று நிகழ்வுக்குரிய தொடர்பும், சைவ மஹா சமாஜத்தைத் தோற்றுவித்தது யார் என்பதும் ஆய்வுக்குரியது.

தமிழகத்தில் சைவ சமயத்தை ஒருங்கிணைத்து செயல்பட்டதோடு மட்டுமல்லாமல், இவருடன் உரையாடிய சமயத்தைச் சேர்ந்தவர்களும் சைவ சித்தாந்தத்தைப் படிக்கத் துவங்கினர். அதைப் பின்வரும் நிகழ்வுகளை அடிப்படையாகக் கொண்டு புரிந்து கொள்ளலாம்.

*- விவேகானந்தரை சென்னையில் சந்தித்தபோது சைவ சித்தாந்த கருத்துக்கள் குறித்து விரிவாகக் கூறினார். இதைக்கேட்ட விவேகானந்தர் "இவ்வரிய தத்துவஞானம் தென்னிந்தியாவில் இருப்பதாகத் தான் அறிந்ததில்லையே என்று அதன் உண்மைகளைப் பெரிதும் பாராட்டினாராம் (J.M. Nallaswami Pillai and his life - 145) - Ampthill பிரபுவுடன் சமயங்கள் குறித்து உரையாடுகையில் "உங்களுடைய சமய ஆராய்ச்சியைப் பற்றிய பேச்சு என் மனதில் ஒரு கிளர்ச்சியை உண்டாக்கி இருக்கிறது.*

*ஆதலால் இன்று முதல் சமயச் செய்திகளில் எனது மனதைச் செலுத்துவேன்" என்று குறிப்பிட்டாராம். (J.M. Nallaswami Pillai and his life - 145)*

ஆங்கில நாட்டுத் தமிழ் அறிஞரான ஜி.யு. போப்புடன் ஜே.எம்.என். நெருங்கிய நண்பராக இருந்துள்ளார். இவர்கள் இருவரும் ஒருவரையொருவர் எப்போதும் பார்த்ததில்லை. பிசிராந்தையார் - கோப்பெருஞ்சோழன் நட்பைப் போல இவர்கள் இருவருடைய (போப்-ஜே.எம்.என்.) நட்பும் சிறந்து விளங்கியது (J.M. Nallaswami Pillai and his life - 145). கடிதப் போக்குவரத்தின் வழியே இவர்கள் இருவரும் தங்களது கருத்துக்களைப் பரிமாறிக் கொண்டனர். ஜி.யு. போப் சித்தாந்த தீபிகையில் தனது தமிழியல் ஆய்வுப்பணி குறித்துப் பதிவு செய்துள்ளார். ஜே.எம்.என். ஜி.யு. போப்பின் திருவாசக மொழிபெயர்ப்பைத் தனது சொந்தப் பணத்தில் ஆயிரம் பிரதிகளை வாங்கி நண்பர்கள் மற்றும் அறிஞர்களுக்கு இலவசமாக வழங்கினார். ஜி.யு. போப் சித்தாந்த தீபிகையின் செயல்பாட்டைப் பாராட்டி ஜே.எம்.என்.க்குக் கடிதம் எழுதியுள்ளார்.

சமயம் மற்றும் தமிழ் ஆய்வு என்ற நிலைப்பாட்டோடு தன்னைக் குறுக்கிக் கொள்ளாமல் சமகாலச் செயல்பாடுகளோடு தன்னையும் இணைத்துக் கொண்டு ஜே.எம்.என். செயல்பட்டார். இதனைப் பின்வரும் நிகழ்வுகளைக் கொண்டு புரிந்து கொள்ளலாம்.

*பல்கலைக்கழக ஆட்சிமன்ற குழுக்கூட்டத்தில் ஆங்கிலவழிக் கல்விமுறை மட்டுமே போதுமானது என்ற தீர்மானம் கொண்டு வரப்பட்டது. செவ்வியல் மற்றும் வட்டாரம் சார்ந்த பாடங்களை விருப்பப் பாடமாகப் படிக்கவும் அத்தீர்மானம் வலியுறுத்தியது. இதற்கு மக்களிடமும் அன்றைய அறிஞர்களிடமும் பலத்த எதிர்ப்பு காணப்பட்டது. எவ்வித மொழியையும் முன்னிறுத்தாமல் ஜே.எம்.என். செவ்வியல் மற்றும் வட்டார மொழிகளின் முக்கியத்துவத்தை உணர்ந்து தனது எதிர்ப்பைத் தெரிவித்தார். ஆட்சிமன்றக் குழுவில் இடம்பெற்ற சமஸ்கிருதம் சார்ந்த உறுப்பினர்கள் இத்தகைய செயல்பாட்டினைப் பற்றி எந்தக் கருத்துமில்லாமல், சமஸ்கிருதத்தை முக்கியப் படுத்துவது என்ற ஒன்றை மட்டுமே குறிக்கோளாகக் கொண்டு செயல்பட்டனர். இந்தச் சூழலில் தமிழ், தெலுங்கு, மலையாள மொழி சார்ந்த அறிஞர்கள் சேர்ந்து 1899ஆம் ஆண்டு 'திராவிட மகாபாஷ்ய சங்கம்' ஒன்றினை உருவாக்கினர். ஜே.எம்.என். அச்சங்கத்தில் தன்னையும் இணைத்துக் கொண்டார்.*

*- பண்டையத் தமிழ்ப் புலவர்களின் வரலாறுகள் பதிவு செய்யப்பட வேண்டும் என்பதில் அக்கறையுடையவராக ஜே.எம்.என். விளங்கினார். மகாவித்துவான் மீனாட்சி சுந்தரம் பிள்ளையின் வாழ்க்கை வரலாற்றை உ.வே.சா. எழுதுவதற்குத் தன்னால் இயன்ற அனைத்து உதவிகளையும் ஜே.எம்.என். செய்து கொடுத்தார்.*

மேற்கண்ட இந்தப் பின்புலத்தோடு சித்தாந்த தீபிகையின் தோற்றம், நோக்கம் குறித்து விளக்குவதாக இரண்டாம் பகுதி அமைகின்றது.

*- 1893இல் சிகாகோவில் நடைபெற்ற சர்வமத சபையில் வேதாந்த சிங்கமாக விவேகானந்தர் முழங்கினார். மாக்ஸ்முல்லரும் வேதாந்தக் கருத்துக்களை உலகம் முழுவதும் பரப்பினார்.* சைவ சித்தாந்தத்தை வெளிக்கொணர ஒருவர்கூட இல்லையே என எண்ணிய ஜே.எம்.என். சித்தாந்த தீபிகை என்னும் இருமொழி (தமிழ் / ஆங்கிலம்) இதழினைத் தொடங்கினார். மேலும், சிகாகோ சர்வமத சபை மாநாட்டிற்கு சைவமல்லாத பிற சமயத்தினர் தங்கள் சமயம் குறித்த ஆய்வுக் கட்டுரையை அனுப்பியுள்ளனர். இலங்கையிலும் தமிழகத்திலும் ஆங்கிலப்புலமை உள்ள ஒருவரும் கட்டுரை அனுப்பாதிருந்தது ஜே.எம்.என்.க்கு வருத்தமாயிருந்தது (பெசு.மணி, 2004:94). சித்தாந்த தீபிகை தொடங்குவதற்கு இது முக்கியக் காரணமாக அமைந்தது.

- சித்தாந்த தீபிகையின் தமிழ்ப் பிரதியின் முதல் பக்கத்தில் '*உண்மை விளக்கம் எனும் சித்தாந்த தீபிகை - சமய ஞானம், தத்துவ ஞானம், கலை ஞானம், பூத பௌதிக முதலிய சாஸ்திர ஞானம், இவற்றைப் பற்றி விவரிக்கும் மாதாந்திரப் பத்திரிகை. 1897 வருடம் மகாராணியாரின் வைர ஜூபிலி தினத்தில் ஆரம்பிக்கப்பட்டது*' என்று குறிப்பிடப்பட்டுள்ளது. இவ்விதழில் எத்தகைய செய்திகள் இடம்பெறும் என்பதை "இராஜாங்க

விஷயங்களைப் பற்றி இதில் யாதொன்றும் விவரிக்கப்பட மாட்டாது. 'வேந்தனு மோங்குக' என்று பரமாசாரிய சுவாமிகள் வாழ்த்திய வாழ்த்தைச் சிரமேற்கொண்டு நமது மகாராணியவர்கள்பால் நன்றியறிதலும் ராஜ விசுவாசமும் முற்றும் பாராட்டி வருவதே இப்பத்திரிகையின் முக்கிய அங்கமாகும்" (பெசு. மணி, 2004:103) என்ற மேற்கோளிலிருந்து புரிந்து கொள்ள முடிகிறது.

சித்தாந்த தீபிகையின் ஆங்கில இதழ் பதினான்கு தொகுதிகளாக Asian Educational Services மூலமாக வெளிவந்துள்ளது. இதில் முதல் ஒன்பது தொகுதிகளுக்கு ஜே.எம்.என். பதிப்பாளராகவும், அடுத்த ஐந்து தொகுதிகளுக்கு அவருடைய நண்பர் வி.சி. ரமணன் பதிப்பாளராகவும் இருந்துள்ளனர். சித்தாந்த தீபிகையின் தமிழ் இதழ் நாகை வேதாசலம் (மறைமலையடிகள்) அவர்களின் மேற்பார்வையில் ஓராண்டு மட்டுமே வெளிவந்தது. தமிழ் இதழ் நின்றதற்குக் காரணம் அன்றைய தமிழறிஞர்கள் ஆங்கிலப் புலமை பெற்றிருந்தனர், தமிழ்மொழி மட்டும் அறிந்தவர்களிடையே இவ்விதழை வாங்கிப் படிக்கும் ஆரோக்கியமான சூழல் அன்று உருவாகவில்லை.




சித்தாந்த தீபிகை உருவாக்கப் பின்புலம், இவ்விதழில் வெளிவரும் செய்திகள், இவ்விதழின் நோக்கம் ஆகியவற்றை மனதில் கொண்டு சித்தாந்த தீபிகைவழி ஜேஎம்என். கட்டமைத்துள்ள சைவப் புலமைத்துவச் செயல்பாட்டை மையப்படுத்துவதாக பின்வரும் மூன்றாவது பகுதி அமைந்துள்ளது.

சித்தாந்த தீபிகையில் வெளிவந்துள்ள செய்திகளை அடிப்படையாகக் கொண்டு பின்வரும் தலைப்புகளில் பகுத்துக் கொள்ளலாம். அவை

- சமயங்கள்
- பல்துறைக் கட்டுரைகள்
- நூல்கள் குறித்த விவரணங்கள்
- மொழிபெயர்ப்புகள்
- பிற தகவல்கள்

**சமயங்கள்**

சமயங்கள் தொடர்பாக வந்துள்ள கட்டுரைகளை அவற்றின் பொருண்மை அடிப்படையில் சைவ மற்றும் சைவ சித்தாந்தம் - வேதாந்தம் - திராவிட மாகாபாஷ்யம் - வீர சைவம் - சைவ சித்தாந்த மஹா சமாஜம் - சமயங்கள் தொடர்பாகக் கருத்தரங்குகளில் வாசிக்கப்பட்ட கட்டுரைகள் இவை தவிர சமயம் தொடர்பான பிற தகவல்கள் என்று பகுத்துக் கொள்ளலாம்.

சைவம் தொடர்பான கட்டுரைகள் சைவ சமயத்தின் தொன்மை, புராணத்துக்கும் சைவ சமயத்துக்கும் இடையேயுள்ள உறவு நிலை, வேதம் மற்றும் ஆகமங்கள் சைவத்தோடு கொண்டிருக்கும் உறவுநிலை, (அதாவது சைவத்தோடு ஒன்றுபட்டும் வேறுபட்டும் நிற்கும் தன்மை) ஆகியவற்றை விளக்கும் தன்மையில் இடம்பெற்றுள்ளன. சைவ சித்தாந்தக் கருத்துக்களை உலகம் முழுவதும் கொண்டு சேர்க்கும் வகையில் 'சைவ சித்தாந்த இயக்கம்' ஒன்றினை ஏற்படுத்தினர். அதன்மூலம் சித்தாந்தக் கருத்துக்களை ஆங்கிலத்தில் மொழிபெயர்த்து வெளியிட்டனர். மேலும் சித்தாந்தத் தத்துவக் கருத்துக்களை அனைவரும் எளிதில் கற்கும் வகையில் வினா-விடை அமைப்பில் வெளியிட்டனர். இதனை ஆறுமுக நாவலரின் சைவ வினா-விடையின் அடுத்தக்கட்ட நிலையாகக் கருதலாம்.

வேதாந்தத்தைப் பற்றியும் உபநிடதங்கள் பற்றியும் கட்டுரைகள் இவ்விதழில் வெளிவந்துள்ளன. இதன்மூலம் சைவ சித்தாந்தம், வேதாந்தம் இவற்றுக்கிடையேயுள்ள தன்மைகளைப் புரிந்துகொள்ள முடியும். நூற்றியெட்டு உபநிடதங்களில் குறிப்பிட்ட சில உபநிடதங்கள் பற்றிப் பேசப்பட்டுள்ளன.

திராவிட மகாபாஷ்யம் என்னும் தலைப்பில் தனித்த பக்க எண்களைக் கொண்ட தொடர் கட்டுரைகள் வெளிவந்துள்ளன. சைவ சித்தாந்தத்தைப் பிற நாட்டு அறிஞர்களின் கருத்துக்களை விவாதிப்பதான செய்திகளும், சைவ சித்தாந்தம் பல்வேறு கோட்பாடுகளை ஏற்று இயங்கும் தன்மை குறித்தும் விவாதிக்கப்பட்டுள்ளன. வீரசைவத்தின் தோற்றம் பற்றிய கட்டுரைகளும் உள்ளன. அதில் வீரசைவம் - சைவத்திற்கான வேறுபாட்டினையும், வைணவத்துடன் வீரசைவம் ஒத்துப்போகும் இடங்கள் பற்றியும் பேசப்பட்டுள்ளன. சைவ சமயம் தொடர்பாக அக்காலகட்டங்களில் நடைபெற்ற கருத்தரங்குகளில்

வாசிக்கப்பட்ட கட்டுரைகளும் அதற்கான விமர்சனங்களும் இடம் பெற்றிருந்தன.

சமயம் தொடர்பான சித்தாந்த தீபிகையின் செயல்பாடு என்பது சைவ மற்றும் சைவ சித்தாந்த கருத்துக்களைப் பற்றிய முழுமையான புரிதலையும் சைவத்துக்கும் பிற சமயங்களுக்குமான இயங்கியலையும், உறவினையும் வெளிப்படுத்துவதாக உள்ளது. மேலும் அக்காலச் சூழலில் சைவம் சார்ந்த அறிஞர்களின் பங்களிப்பையும் ஆய்வுப் பார்வையினையும் இவ்விதழ் மூலம் புரிந்துகொள்ள முடிகின்றது.

### பல்துறைக் கட்டுரைகள்

பல்துறை சார்ந்த அறிஞர்களின் கருத்துகளும் கட்டுரைகளாக வெளிவந்துள்ளன. இங்குச் சித்தாந்த தீபிகையோடு தொடர்புடைய அறிஞர்களாக வீரபத்ர முதலியார், டி. சவரிராயன், ஜி.யு. போப், டி. செல்வக்கேசவராய முதலியார், போன்றோரைக் குறிப்பிடலாம். இவர்களது கட்டுரைகளும் சம காலத்தில் வாழ்ந்த தமிழ் மற்றும் ஆங்கில அறிஞர்கள் பலரின் கட்டுரைகளும் இடம்பெற்றுள்ளன. இதனை ஜே.எம்.என்.க்கும் அவர் காலத்தில் வாழ்ந்த அறிஞர்களுக்கும் இடையே உள்ள உறவை அடிப்படையாகக் கொண்டு புரிந்து கொள்ளலாம்.

இதில் சங்க இலக்கியம் முதல் இருபதாம் நூற்றாண்டு வரை உள்ள அனைத்துப் பொருண்மைகளைப் பற்றிய கட்டுரைகளும் இடம்பெற்றுள்ளன. அவை அனைத்தையும் குறிப்பிடுவது இயலாது. சான்றாக வீரபத்ர முதலியார் விருத்தப்பாவியலைப் பற்றிய கட்டுரையும், கலிப்பா இனங்களைப் பற்றிய கட்டுரையும் எழுதியுள்ளார். ஜி.யு. போப் புறப்பொருள் வெண்பா மாலை - புறநானூறு இவற்றுக்கிடையேயுள்ள தொடர்புகளைப் பற்றி எழுதிய தொடர் கட்டுரையும் இவ்விதழில் உள்ளன. இன்றைய தமிழியல் ஆய்விற்கு அடிப்படையாக அமையும் பல தரவுகள் இவ்விதழில் இடம்பெற்றுள்ளன.

இலக்கியம் சார்ந்த கட்டுரைகளாக மட்டுமல்லாமல், தமிழகத்தில் நிலவிய கல்விச்சூழல் குறித்து அக்கறையோடும் சிரத்தையோடும் இவ்விதழ் செயல்பட்டுள்ளது. இதை இவ்விதழில் கல்வி தொடர்பாக வெளிவந்துள்ள கட்டுரைகள் மற்றும் அக்கட்டுரைக்கான விமர்சனங்கள் ஆகியவற்றிலிருந்து அறிய முடிகின்றது. அதாவது ஆங்கிலம் மற்றும் சமஸ்கிருதத்திற்கு ஆதரவாகவும் தமிழுக்கு எதிராகவும் எடுக்கப்பட்ட நடவடிக்கைகள் குறித்துப் பதிவு செய்யப்பட்டுள்ளன. அதிலும் குறிப்பாகப் பாடத்திட்டம் மற்றும் தேர்வு எழுதும் முறைமை குறித்து விவாதிக்கப்பட்டுள்ளன.

இவ்விதழில் இடம்பெற்றுள்ள சில கட்டுரைகளில் கட்டுரையாளர் பெயர் குறிப்பிடப்படவில்லை. தமிழ் இலக்கிய வரலாற்றில் ஒவ்வொரு காலகட்டத்திலும் செயல்பட்ட பெயர் தெரியாத புலவர்கள், உரையாசிரியர்கள், வரிசையில் இந்தப் புலமையாளர்களையும் சேர்த்துக் கொள்ளலாம்.

### நூல்கள் குறித்த விவரணங்கள்

சித்தாந்த தீபிகை சமயங்களோடு நின்று விடாமல் சமகால நிகழ்வுகளோடும் தன்னை இணைத்துக் கொண்டது. இதனை அக்காலகட்டத்தில் சித்தாந்த தீபிகையில் நூல்கள் குறித்து வெளிவந்த குறிப்புரை - விமர்சனம் - சுருக்க அறிமுகம் - மதிப்புரை ஆகிய பகுதிகளிலிருந்து புரிந்து கொள்ளலாம். சித்தாந்த தீபிகை வெளிவந்த பதினான்கு ஆண்டுகளில் வெளிவந்துள்ள நூல்கள் குறித்த செய்திகளைத் தொகுத்து நோக்கும்போது சமூகத்துக்கும் நூல்களுக்கும் இடையேயுள்ள தொடர்பினைப் புரிந்துகொள்ள முடியும். அவ்வாறு நூல்கள் பற்றி வெளிவந்துள்ள செய்திகளை நம் புரிதலுக்காகப் பின்வருமாறு பகுத்துக் கொள்ளலாம்.

- *சித்தாந்த தீபிகை இதழ் குறித்த விமர்சனமும் இடம் பெறும்.*
- *புதிதாகப் பதிப்பிக்கப்படும் நூல்கள் குறித்தும் பதிவு செய்யப்பட்டிருக்கும்.*
- *நூல்கள் பற்றிய விமர்சனங்கள் மற்றும் அறிமுகங்கள்.*
- *புதிதாகக் கண்டெடுக்கப்பட்ட சுவடிகள் பற்றிய குறிப்புகள் சிலவும் இடம் பெற்றுள்ளன.*
- *கல்வி குறித்த சமகால விவாதங்கள் குறிப்பிடப்பட்டுள்ளன. சில நிறுவனங்கள்*

*தரமான கல்வியைக் கற்பிப்பதற்கு ஏதுவான நூல்களை உருவாக்கியுள்ளன. அவற்றைப் பற்றிய குறிப்புகளும் இடம் பெற்றுள்ளன.*

- *பல்கலைக்கழக உருவாக்கம் குறித்த செய்திகள்.*
- *பிற இதழ்களில் வெளிவந்த முக்கியச் செய்திகள் மறுபதிப்பாக இவ்விதழில் வெளியிடப்பட்டுள்ளன. பிற இதழ்களில் வெளியிட்ட செய்திகள் இவ்விதழில் வெளியிட்டுள்ளதிலிருந்து அக்காலத்தில் இதழ்களுக்கிடையே நடைபெற்ற பரிவர்த்தனையைப் புரிந்துகொள்ள முடிகின்றது.*
- *தமிழகத்தில் சைவ சித்தாந்த சபைகளில் நடைபெற்ற சொற்பொழிவுகள் பற்றியும், சைவ மகா சமாஜத்தின் செயல்பாடுகள் பற்றியும் இப்பகுதியில் அறிவிக்கப்பட்டிருந்தன.*
- *சித்தாந்த தீபிகையில் இடம்பெற்ற கட்டுரைகள் குறித்த விமர்சனங்களும் இடம்பெற்றுள்ளன. கட்டுரைகளுக்கு விமர்சனம் செய்யும் போக்கு இன்று குறைந்துள்ளது குறிப்பிடத்தக்கது.*

சித்தாந்த தீபிகையில் 'குறிப்புரை விமர்சனம்' என்ற பகுதியானது பதினொன்றாவது தொகுதி முதல் 'ஆகமக் குறிப்புகள்' என்னும் தலைப்பில் நூல், கட்டுரை குறித்த அறிமுகங்கள் மற்றும் மதிப்புரைகள் இடம் பெற்றுள்ளன. அதற்குக் காரணமாக அதுவரை எவ்வித அறிவிப்புமின்றி வெளிவந்த இவ்விதழ் தன்னைச் 'சமயப் பிரச்சார' இதழாக அடையாளப்படுத்திக் கொண்டது காரணமாக இருக்கலாம்.

இன்றைய இதழ்களில் இடம்பெறும் நூல்கள் குறித்த அறிமுகத்துக்கும் சித்தாந்த தீபிகையில் வெளிவந்த நூல்கள் குறித்த அறிமுகத்துக்கும் உள்ள இடைவெளியைப் புரிந்து கொள்வதன் மூலம் 'நூல் விவரணங்கள் குறித்த சித்தாந்த தீபிகையின் நிலைப்பாட்டினைப் புரிந்து கொள்ளலாம்.

**மொழிபெயர்ப்புகள்**

சித்தாந்த தீபிகையின் மொழிபெயர்ப்புப் பகுதியில் சங்க இலக்கியம் மற்றும் சைவ சித்தாந்த பாடல்கள் / கருத்துக்கள் ஆங்கிலத்தில் மொழியாக்கம் செய்யப்பட்டுள்ளன. சங்க இலக்கியத்தை மொழிபெயர்த்தவர்கள் பற்றிய குறிப்புகள் பொருண்மை மொழிபெயர்ப்பாளர் என்னும் அமைப்பில் பின்வருமாறு அமைகிறது. கலித்தொகை - ஜே.எம்.என், வீரபத்ர முதலியார், புறநானூறு - ஜி.யு. போப், திருமுருகாற்றுப் படை - ஜே.எம்.என். ஆகியோரால் குறிப்பிட்ட சில பாடல்கள் மட்டும் மொழி பெயர்க்கப்பட்டுள்ளன. இதனைத் தொடர்ந்து சைவ மற்றும் சித்தாந்தத்தில் உள்ள பாடல்கள் : தாயுமானவர், மாணிக்கவாசகர் பாடல்கள் - ப. அருணாசலம்; சிவஞான சித்தியார், இருபா இருபது - ஜே.எம்.என்., தாயுமானவர் பாடல்கள் - ஆர். சண்முக முதலியார்; திருமந்திரம் - இராமசாமி அய்யர், ஜே.எம்.என்., ஆகியோர் மொழிபெயர்த்துள்ளனர். இது தவிர பிற பாடல்களையும் மொழிபெயர்த்துள்ளனர். அவை வேதாந்த சூத்திரம், ஸ்ரீ கந்தபாஷ்யம், அ. மகாதேவ சாஸ்திரி; வாயு சம்கிதா - ஏ.ஆர், திருவிருத்தம் - ஏ. கோவிந்தாசார்யா; திருநாவுக்கரசர் பதிகம் - என்பி; மிர்கேந்திர ஆகமம் - எம். நாராயணசுவாமி அய்யர்; திருவுந்தியார் - ஆர். எஸ். சுப்ரமணியம்; திருஞானசம்பந்தர் பதிகம் - ஜி.யு. போப் போன்றோரும் மொழிபெயர்த்துள்ளனர். மேற்கண்ட மொழிபெயர்ப்புகள் பின்வரும் அமைப்புகளில் ஏதேனும் ஒரு அமைப்பைக் கொண்டதாக அமையும்.

- *செய்யுள் வடிவத்தில் மொழிபெயர்க்கப்பட்டுள்ள பாடல்கள்*
- *பாடல்கள் தமிழில் கொடுக்கப்பட்டு அதற்கான விளக்கங்கள் ஆங்கிலத்தில் கொடுக்கப்பட்டுள்ள பாடல்கள்*
- *ஒரே பொருண்மை தொடர்பான பாடல்களை மொழிபெயர்த்தல்*
- *சில பாடல்களில் மொழிபெயர்த்தவர் பற்றிய குறிப்புகள் இல்லை.*

மேற்கண்ட தரவுகளை அடிப்படையாகக் கொண்டு சித்தாந்த தீபிகையில் வெளிவந்துள்ள மொழிபெயர்ப்புகள் குறித்து அறிந்து கொள்ளலாம். இந்தப் பகுதிகள் அக்காலகட்டத்தில் மொழிபெயர்க்கப்பட வேண்டியதன் அவசியத்தோடு ஆராயும்போது ஜேஎம்என்-இன் மொழிபெயர்ப்புப் பகுதி குறித்த முழுமையான புரிதலுக்குள் செல்ல முடியும்.

### பிற தகவல்கள்

பொருண்மை சாராத தகவல்களாகவும் பல செய்திகள் இவ்விதழில் வெளிவந்துள்ளன. அவை அன்றைய சமூக இயக்கத்தோடு இவ்விதழ் கொண்டிருந்த நிலையினை விளக்குவதாக அமையும்.

- மனநலம் பாதிக்கப்பட்டோரைப் பாதுகாப்பது குறித்த செய்திகளைப் பதிவு செய்வது, அதற்கான சிகிச்சை மையங்கள் எங்கு உள்ளன என்பதைக் குறிப்பிடுவது.
- சமகாலப் படைப்புகளை அறிமுகப்படுத்துவது
- 'நான் ஒரு தமிழ் மாணவன்' என்று போப் கூறியதைப் பதிவு செய்துள்ளது.
- உடல்நலம் சிறப்பாக அமைய மனநலத்தின் அவசியத்தை உணர்த்துவது.
- ஜோதிடம் குறித்துப் பதிவு செய்வது
- வாழ்த்தகவற்பா
- குழந்தைகள் - பெரியவர்களுக்கிடையேயுள்ள மன உணர்வு இடைவெளியைக் குறிப்பிடுவது
- பண்டிகை குறித்த விவரணங்கள்
- கீழ்த்திசை நூலகம் திருநெல்வேலி நகரத்திற்கு 'சக்தி விலாச சபை' என்னும் பெயரில் விரிவுபடுத்தப்பட்டதைப் பதிவு செய்வது
- தமிழ்ச்சங்கங்கள் குறித்து குறிப்பிடுவது
- அகராதி உருவாக்க முயற்சிகள் குறித்துப் பதிவு செய்வது
- வேர்க்கடலை, சூரியகாந்தி, மாம்பழம் பயிரிடுதல் மற்றும் உற்பத்திமுறை குறித்துக் கூறுவது

எனப் பல்வேறு தகவல்களுள் சான்றுக்காக சில செய்திகள் மட்டும் பதிவு செய்யப்பட்டுள்ளன.

### முடிவாக

- சைவ சித்தாந்த கருத்தை மட்டும் வலியுறுத்தி இதழ்களை வெளியிடுவது என்றில்லாமல், கலை, தத்துவம், அறிவியல் ஆகிய பிற துறைகளோடும் கூடிய 'மொழிப் பண்பாட்டு' இதழாக சித்தாந்த தீபிகையைக் கட்டமைத்துள்ளார். அதில் சைவ சமயக் கருத்துக்கு முக்கியத்துவம் கொடுத்துள்ளார். இதிலிருந்து சமயத்தையும் மொழியையும் எத்தகைய நோக்கோடு ஜே.எம்.என். அணுகியுள்ளார் என்பதைப் புரிந்து கொள்ளலாம்.
- சமயம் என்னும் நோக்கில் வீரசைவம், வேதாந்தம் போன்ற பிற சமயங்களுக்கும் சைவத்துக்கும் இடையேயுள்ள தொடர்பினைப் பதிவு செய்துள்ளதால் சம காலத்தில் செயல்பட்ட சமய வரலாற்றையும் புரிந்துகொள்ள முடிகிறது.
- சங்க இலக்கியம் முதற்கொண்டு இருபதாம் நூற்றாண்டு தொடக்கம் வரையுள்ள காலகட்டத்தை ஆய்வு செய்யும் தற்காலத் தமிழியல் ஆய்வாளருக்கு ஏதேனும் ஒரு வகையில் உதவும் தரவுகளைச் சித்தாந்த தீபிகை கொண்டிருப்பது அவ்விதழின் தனித்துவத்தைச் சுட்டுகிறது.
- 1897-1914 வரையுள்ள காலகட்டத்தில் தமிழ் உலகில் வெளிவந்த நூல்கள் மற்றும் பதிப்பு முயற்சிகள் குறித்து அறியும் அரிய ஆவணமாக இவ்விதழைக் கொள்ளலாம்.
- சங்க இலக்கியப் பதிப்புகள் முழுமையாக வெளிவராத சூழலில் சங்க இலக்கியப் பாடல்கள் மொழிபெயர்க்கப்பட்டு வெளியிடுவது என்பது இவ்விதழ் செயல்பாட்டின் 'உயர்தகுதிப்பாட்டை' உணர்த்துகிறது.
- சைவ சமயத்தை முதன்மைப்படுத்தியும் தமிழைப் பிரதானமாகவும் சமகால நிகழ்வுகளோடு தம்மை இணைத்துக் கொண்ட புலமையாளராகவும் ஜே.எம். நல்லசாமி பிள்ளையைக் கொள்ளலாம்.

### துணைநூற்பட்டியல்


1. தமிழக சமய வரலாறு: சித்தாந்த தீபிகை ஆய்வும், அடைவும் (1897-1914), ஆய்வியல் நிறைஞர் ஆய்வேடு, சென்னை பல்கலைக் கழகம்
2. பெ.சு. மணி, பழந்தமிழ் இதழ்கள்; 2004.
3. Siddhanta Deepika (14 Volums) Asian Education Services Ltd., Chennai. 1998
4. The life of J.M.Nallasami Pillai, K.M. Balasubramaniam Siddhantha Deepika, Asian Educational services, Chennai, Third edition, 1998.




# எம். எஸ். பூரணலிங்கம்பிள்ளை (1866–1947) திராவிட சைவக் கருத்தியலின் முன்னோடி

## அடையாள அரசியலின் வகிபாகம் குறித்த உரையாடல்



ஜ. சிவகுமார்

சென்னைப் பல்கலைக்கழகத் தமிழ் இலக்கியத் துறையில் 'சங்க இலக்கிய வாசிப்பின் அரசியல்' எனும் தலைப்பில் ஆய்வு செய்து வருகிறார். மாற்றுவெளி, புதிய புத்தகம் பேசுது இதழ்களின் ஆசிரியர் குழுவில் உள்ளார். 'சென்னை நூலகங்கள்', 'செவ்வியல் இலக்கிய ஆய்வுகள் - செந்தமிழ் இதழ்க் கட்டுரைகள் (1902-1935)' ஆகிய நூல்களின் தொகுப்பாசிரியர்.

பதினெட்டாம் நூற்றாண்டின் இறுதிப் பகுதியில் சமசுகிருத மொழி இலக்கியங்கள்/ இலக்கணங்கள் ஐரோப்பியர்களால் கவனத்திற்குட்படுத்தப்பெற்றச் சூழலில், கீழ்த்திசை ஆய்வு என்பது அம்மொழியின் அடிப்படையில்தான் நிகழவேண்டும் எனும் கருத்து வலுப்பெற்றது. கொல்கத்தாவில் செயல்பட்ட வில்லியம் கோட்டைக் கல்லூரியும் (1804), மார்க்ஸ்முல்லர் (1823-1900), வில்லியம் ஜோன்ஸ் (1746-1794) முதலான அறிஞர்களும் இத்தகைய போக்குகளை வளர்த்தெடுத்தனர். இவர்கள், இந்திய மொழிகள் அனைத்திற்கும் மூலமொழி சமசுகிருதமே எனும் கருதுகோளை முன்வைத்தனர். பின்னர் இது மொழி சார்ந்து மட்டுமல்லாமல் ஆரிய இனம் சார்ந்த கோட்பாடாகவும் கட்டமைக்கப்பட்டது.

அதே சமயத்தில், ஆசியவியல் கழகத்தின் இன்னொரு வடிவமாகச் சென்னையில் தொடங்கப்பெற்ற ஜார்ஜ் கோட்டைக் கல்லூரியும் சென்னைக் கல்விச் சங்கமும் (1812) தென்னிந்திய மொழிகளை முதன்மைப்படுத்தின. இந்நிறுவனங்கள் தொடங்குவதற்கு முழுமுதல் காரணமாகிய எல்லீஸ் (1777-1819) தமிழ், தெலுங்கு, மலையாளம் முதலான ஆறு மொழிகளுக்கும் சமசுகிருதத்திற்கும் தொடர்பில்லை என உறுதிபடுத்தினார். திராவிடமொழிக் குடும்பம் எனும் கருத்தாக்கத்தைப் பதிவு செய்தார்; ஆனால் அவை அச்சில் வெளிவரவில்லை. பின்னர் 1856இல் கால்டுவெல்லின் (1814-1891) திராவிட மொழிகளின் ஒப்பிலக்கணம் எனும் நூல்தான் திராவிடவியல் கருத்தாக்கத்துக்கான அழுத்தத்தைக் கொடுத்தது. இருபதாம் நூற்றாண்டின் தொடக்கத்திலேயே செவ்விலக்கியங்கள் முழுமையாகப் பதிப்பிக்கப் பட்டுவிட்டன. தொல்காப்பியமும் வெவ்வேறு முறைமைகளில், வெவ்வேறு உரைகளுடன் பதிப்பிக்கப்பட்டு விட்டன. இப்பதிப்புகள் சமசுகிருத மரபுக்கு மாற்றான திராவிட மரபு இயங்கியதற்கான இலக்கியத் தரவுகளாக முக்கியத்துவம் பெற்றன. இத்தகைய தரவுகளைப் பயன்படுத்தி தமிழறிஞர்கள் நிகழ்த்திய ஆய்வுகளும் எழுதிய வரலாறுகளும் வெவ்வேறு கருத்தியல் சார்புடையனவாக இருப்பதனை அவதானிக்க முடிகிறது.


COMPARATIVE GRAMMAR

DRAVIDIAN

SOUTH-INDIAN FAMILY OF LANGUAGES.

THE REV. R. CALDWELL, B.A.,

WILLIAMS AND NORGATE:



இருபதாம் நூற்றாண்டின் தமிழியல் ஆய்வுப்போக்குக் குறித்துக் கீழ்க்கண்டவாறு வகைப்படுத்தலாம்.

- தமிழ்ப் பெருமையை முன்னெடுத்தோர் *சி.வை.தா. (1832-1901), பரிதிமாற்கலைஞர் (1870-1903) முதலானோர்.*

- சைவ சமயம் சார்ந்து செயல்பட்டோர் *ஆறுமுகநாவலர் (1822-1879), ஜே.எம்.நல்லசாமிபிள்ளை (1864-1954) முதலானோர்.*

- திராவிடக் கருத்தாக்கம் சார்ந்து செயல்பட்டோர்

1. திராவிடக் கருத்தாக்கத்திற்குள் சைவம் சார்ந்து செயல்பட்டோர் *எம்.எஸ். பூரணலிங்கம்பிள்ளை (1866-1947), பெ. சுந்தரம்பிள்ளை (1855-1897) முதலானோர்.*

2 கடவுள் மறுப்பை முதன்மைப்படுத்திய திராவிடக் கருத்தாக்கம் சார்ந்து செயல்பட்டோர் *மயிலை சீனி. வேங்கடசாமி (1900-1980), சாத்தான்குளம் அ. இராகவன் (1902-1981) முதலானோர்.*

- இந்திய தேசியக் கருத்தாக்கம் சார்ந்து செயல்பட்டோர் *மு. இராகவையங்கார் (1878-1960), தெ.பொ.மீ. (1901-1980) முதலானோர்.*

- பொதுவுடைமைக் கருத்தாக்கம் சார்ந்து செயல்பட்டோர் *நா. வானமாமலை (1917-1980), க. கைலாசபதி (1933–1982), கோ. கேசவன் (1946–1998), கா. சிவத்தம்பி (1932-2011) முதலானோர்.*

(பக்தி இலக்கியத்தை அணுகுவதில் பொதுவுடைமையாளர்களிடையேயும் கருத்துவேறுபாடுகள் உள்ளன. ஈழத்தறிஞரான க. கைலாசபதி பக்தி இலக்கியத்தை நேர்மறையாக அணுகுகின்றார். இவரைத் தன் வழிகாட்டியாக ஏற்றுக்கொண்ட கோ. கேசவன் பக்தி இலக்கியத்தைக் கடும் விமர்சனத்துடன் அணுகுகிறார். இதற்கு, ஈழத்தில் தமிழர்களுக்கு இருக்கக்கூடிய வாழ்வியல் மற்றும் பண்பாட்டு நெருக்கடிகளும், தமிழகத்தில் தொடர்ச்சியாக வினைபுரியக்கூடிய திராவிடக் கருத்தாக்கமும்தான் காரணம் என்பதைப் புரிந்துகொள்ள முடிகிறது).

இவர்களுள் பெ.சுந்தரம்பிள்ளை, எம்.எஸ்.பூரணலிங்கம்பிள்ளை (இனி எம்.எஸ்.பி.), கா. அப்பாதுரை (1907-1989) முதலானோரைத் திராவிட சைவக் கருத்தாக்கம் சார்ந்து செயல் பட்டவர்களாகவே அடையாளம் காணமுடிகிறது. இவர்களுள் பெ. சுந்தரம்பிள்ளையிடம் சைவக் கருத்தாக்கமே திராவிடக் கருத்தியலைவிட

பன்மடங்கு மேலோங்கி இருந்தது. சுயமரியாதை இயக்கமும் அதன் கடவுள் மறுப்புக் கருத்தியலும் 'திராவிட' அடையாளத்துடன் பெரும்வீச்சை ஏற்படுத்திக் கொண்டிருந்த காலகட்டத்தில் வாழ்ந்த அப்பாதுரையார் சைவ உணர்வைவிட திராவிடக் கருத்தியலுக்கே அதிக முக்கியத்துவ மளித்தார். ஆனால் எம்.எஸ்.பி.யிடம் சைவ, திராவிடக் கருத்தியல்கள் இணைந்தே இருந்தன. எனவேதான் இவர் திராவிட சைவக் கருத்தியலின் முக்கியமான குறியீடாகிறார். இவ்விடத்தில் கருத்தியல் முரண்களுடைய திராவிடமும் சைவமும் இணைந்து எவ்வாறு திராவிட சைவக் கருத்தியல் உருப்பெறும் எனும் கேள்வி எழுவது இயல்புதான். ஏனெனில் தற்போதைய சூழலில் திராவிடக் கருத்தாக்கம் என்பது இந்துத்துவத்திற்கு எதிரானது, கடவுள் மறுப்பை அடித்தளமாகக் கொண்டது என்றே புரிந்துகொள்ளப்படுகிறது. ஆனால், தொடக்கநிலையில் திராவிடக் கருத்தாக்கம் என்பது சமசுகிருத மொழிக் குடும்பத்திற்கு மாற்றான திராவிடமொழிக் குடும்பம் இந்தியாவில் உள்ளதை அடையாளப்படுத்துவதாகவே இருந்தது; இதனைப் பலர் பலவகையில் புரிந்துகொண்டு செயல்பட்டுள்ளனர். இவர்கள் பிற மொழிகளில் இருந்து தமிழ்மொழியில் இல்லாத இலக்கிய வகைமைகளை உருவாக்கவும் முயன்றனர். பெ. சுந்தரம்பிள்ளையின் 'மனோன்மணியம்' நாடகத்தையும் பரிதிமாற்கலைஞரின் 'நாடகவியல்' இலக்கண நூலையும் இப்படியாகத்தான் புரிந்துகொள்ள முடிகிறது.

### தமிழகத்தில் சைவ இயக்கம்

இந்தியா முழுவதும் உயர் சாதியினரும் பிராமணர்களும் இந்து மதத்திற்குப் புத்துயிர் அளித்துவந்த வேளையில் பிராமணருக்கு எதிரான போக்கு வளர்ந்த தமிழகத்தில் அது சைவசமய எழுச்சியாகவும், திராவிட உணர்வாகவும் பரிணாமம் பெற்றது. ஆல்காட்டும் பிளாவட்ஸ்கி அம்மையாரும் திருநெல்வேலியில் பிராமணர்களிடம் பெற்ற ஆதரவு, சைவ வேளாளர்களை எதிரிடையாக செயல்பட வைத்தது. 1883இல் தூத்துக்குடி சைவ சபையும் 1886இல் பாளையங்கோட்டை சைவ சபையும் தொடங்கப் பெற்றன. பிரம்மசமாஜியாக இருந்த மனோன்மணியம் சுந்தரம்பிள்ளைதான் திருவனந்தபுரம் சைவ சபையைத் தொடங்கக் காரணமானவர்களில் ஒருவரானார். அவர்தான் பின்னர் 'ஆரியம் போல் உலக வழக்கழிந்தொழிநும் உன் சீரிளமை திறம் வியந்து செயல் மறந்து வாழ்த்துதுமே' எனத் தமிழை வாழ்த்தினார்; சைவத்தையும் திராவிடத்தையும் இணைத்துப் பார்த்தார். சென்னை கிருஷ்ணாம்பேட்டையில் கூடிய சைவ சித்தாந்த மாநாட்டுப் பந்தலிலேதான் 'ஜஸ்டிஸ்' கட்சித் தோற்றத்தின் அவசியத்தைப் பற்றித் தியாகராய செட்டியார் பேசினார் என்பதும் இங்குக் குறிப்பிடத்தக்கது.

மொத்தத்துவ இந்தியத் தன்மைக்குள்ளிருந்து தென்னிந்தியாவிற்கும் திராவிட மொழிகளுக்குமான தனித்தன்மையையும் அடையாளத்தையும் கண்டறிந்து சொன்னவர்கள் ஐரோப்பியர்கள்தான். பின்னர் இவ்வடையாள அரசியலை முன்னெடுத்தவர்கள் சைவர்களே. இவ்வடையாள அரசியல் சைவ சமயம் X இந்து மதம், திராவிடர் X ஆரியர், தமிழ் X சமஸ்கிருதம், பிராமணரல்லாதோர் X பிராமணர் முதலான முரண்பாடுகளின் அடிப்படையில் முன்னெடுக்கப்பட்டது. சைவ சமயம் இந்து மதத்திலிருந்து வேறானதாகவும் தமிழருக்கான பழம்பெருமை வாய்ந்த சமயமாகவும் அடையாளப்படுத்தப்பட்டது.

சைவர்களின் அடையாள அரசியல் சைவ சமயம் X இந்து மதம், திராவிடர் X ஆரியர், தமிழ் X சமஸ்கிருதம், பிராமணரல்லாதோர் X பிராமணர் முதலான முரண்பாடுகளின் அடிப்படையில் முன்னெடுக்கப்பட்டது. சைவ சமயம் இந்து மதத்திலிருந்து வேறானதாகவும் தமிழருக்கான பழம்பெருமை வாய்ந்த சமயமாகவும் அடையாளப்படுத்தப்பட்டது.

இந்தக் காலகட்டத்தில்தான் திராவிடக் கருத்தாக்கத்தைப் பிராமணரல்லாதார் இயக்கமும் சைவரும் சுயமரியாதை இயக்கத்தினரும் வலுவாகக்

கையிலெடுத்தனர். சைவர்களுக்கும் சுயமரியாதைக் காரர்களுக்கும் கருத்தியல் முரண்கள் இருந்தாலும் பிராமண எதிர்ப்பு, ஆரிய எதிர்ப்பு, வடமொழி எதிர்ப்பு எனும் புள்ளிகளில் ஒன்றுபட்டனர். இதனை, "நான் சைவ சித்தாந்தக் கூட்டங்களிலும் கலந்துகொள்கிறேன். சுயமரியாதைக் கூட்டங் களிலும் கலந்துகொள்கிறேன். இதனால் என்னைச் சிலர் கொள்கையற்றவன், பச்சோந்தி என்று கூடச் சொல்வார்கள். அது தவறு. எனக்கும் பெரியாருக்கும் கொள்கையில் சில வேறுபாடுகளுண்டுதான்... தமிழையும் தமிழரையும் அடிமைப்படுத்தி வரும் சுயநலக்கூட்டத்தை எதிர்க்கப் பெரியார் தோன்றியிராவிடில், நாம் மிகக் கீழான நிலையில், நம்மை வெட்கமில்லாமல் 'சூத்திரன்' என்று அழைத்துக்கொள்ளும் பேதமையில் இருந்திருப்போம்" (ஆ.இரா. வேங்கடாசலபதி, 1994; பக். 2) என்ற அ. வரதநஞ்சைய பிள்ளையினுடைய வார்த்தைகள் விளக்கும். தவிரவும், நீதிக்கட்சியின் காலத்திலேயே திராவிடக் கருத்தாக்கத்திற்கு கருத்தியல் ரீதியான பங்களிப்பு செய்தவர்களுள் சைவர்கள் முக்கியப் பங்கு வகித்தனர். இந்தப் பின்புலத்தில்தான் திராவிட சைவக் கருத்தியலையும் எம்.எஸ்.பி., பெ. சுந்தரம்பிள்ளை, கா. அப்பாதுரை உள்ளிட் டோரையும் புரிந்துகொள்ளவேண்டும்.

சுந்தரம்பிள்ளையை நினைவில் வைத்திருக்கும் தமிழ்ச் சூழல் எம்.எஸ்.பி.யை மறந்துவிட்டது. அல்லது அவருக்கு உரிய மரியாதையைத் தரவில்லை. இத்தனைக்கும் இவர் பரிதிமாற்கலைஞரோடு இணைந்து தமிழை உயர்தனிச் செம்மொழியாக்கப் பாடுபட்டார். தமிழ்மொழியின், தமிழ் இனத்தின் பெருமையைப் பிறநாட்டாரும் தெரிந்துகொள்ள வேண்டுமென எண்ணி, பெரும்பாலும் ஆங்கிலத்திலேயே எழுதியுள்ளார். நவீன அறிவியலை உள்வாங்கி எழுதப்பட்ட முதல் தமிழ் இலக்கிய வரலாறு (A Primer of Tamil Literature -1904) இவருடையதே. இவர் திருக்குறளை ஆங்கிலத்தில் மொழிபெயர்த்துள்ளார். அதேபோல் மாணிக்கவாசகர் தொடங்கி பட்டினத்தடிகள் வரையிலான அடிகளார் குறித்து 'The Tamil Saints' எனும் நூல் எழுதினார். மேலும் ஞானபோதினி (1897) எனும் இதழைத் தொடங்கி அறிவியல் கருத்துக்களையும் தத்துவக் கருத்துக்களையும் பரப்பினார். இவ்விதழ் 1907 வரை வெளிவந்தது. பரிதிமாற்கலைஞர் எழுதிய 'மதிவாணன்' எனும் புதினம் இவ்விதழில்தான் தொடராக வெளிவந்தது. இவர், நீதிக்கட்சி ஆரம்பித்த 'Justice' பத்திரிகையில் நீதிக்கட்சியின் கொள்கைகளுக்கு ஆதரவாக எழுதினார். தவிரவும், பள்ளிகளுக்கும் கல்லூரிகளுக்கும் தேவையான பாடநூல்கள் பலவற்றை எழுதியுள்ளார். 1908இல் கல்லூரி ஒன்றைத் தொடங்கி நான்கு ஆண்டுகள் வரை நடத்தியுள்ளார். இவ்வாறு எம்.எஸ்.பி. தமிழ் மொழி, தமிழ் இனம், தமிழ் இலக்கியம் குறித்த உரையாடலுக்கும் தமிழ்க் கல்வி வரலாற்றுக்கும் குறிப்பிடத்தக்க பங்களிப்பு செய்தவர். தமிழியல் ஆய்வு வரலாற்றில் அவரது தொண்டையும் அரசியலையும் அவரது எழுத்துகளினூடாக அவதானிக்கவும் அடையாளப்படுத்தவுமான தேவை இன்று நம் முன் உள்ளது.


TAMIL LITERATURE

(Revised and Enlarged)

BY

M. S. PURNALINGAM PILLAI, B.A., L.T.

PUBLISHED BY

THE BIBLIOTHECA, MUNNIRPALLAM,

Tinnevelly Dt., South India.

### எம்.எஸ்.பி.யின் பங்களிப்பு

பிரித்தானியர்கள் தங்களுக்குச் சாதகமாக இந்திய வரலாற்றை எழுதுகின்றனர் எனும் குற்றச்சாட்டின் பேரில், 'இந்திய' வரலாற்றை இந்தியர்களே எழுதினர். அவற்றுள் தென்னிந்திய மக்களுக்கும் மொழிகளுக்கும் உரிய கவனம் தரப்படவில்லை. "பண்டைய இந்திய வரலாற்றை எழுதும் ஐரோப்பியர்களும் இந்தியர்களும் தொன்மை வாய்ந்த தென்னிந்தியா மற்றும் அதன் இலக்கியம் குறித்துக் குறிப்பிடுவதில்லை. ஏனெனில் அவர்களுக்கு அதன் இலக்கியப் பரப்பும் தொன்மையும் தெரிவதில்லை" (M.S.P., 1985; Pg.viii) என்றும், "குறிப்பிட்ட மக்களுடைய வரலாறு கேள்விக்குள்ளானால், அம்மக்களின் மரபுகளையும் இலக்கியத்தையுமே முதன்மைத் தரவுகளாகக் கொள்ளவேண்டும்" (M.S.P., 1999; Pg.129) என்றும் எம்.எஸ்.பி. குறிப்பிடுகிறார். எனவே, இச்சூழலைக் கருத்திற்கொண்டு தமிழ்மொழி, இலக்கியம், இனம், பண்பாடு குறித்த ஆய்வுகளில் எம். எஸ்.பி. கவனம் செலுத்துகிறார். மேலும் உலக அறிஞர்களுக்குத் தமிழின், தமிழனின் வளத்தையும் பண்பாட்டையும் அறிமுகப்படுத்தும்

'சமணர்களை ஒடுக்க ஆரியர்களும் தமிழர்களும் இணங்கினர். ஆரியர்கள் ஆகம சிவனை அவர்களின் கடவுளாக ஏற்க சைவமும் வேதமும் கலந்து வைதீக சமயமாயின. எனவேதான் சமயப் பொறையுடைய சைவம் சமயக் காழ்ப்புடையதாக மாறியது' (M.S.P., 1999; Pg. 47-48) எனக் குறிப்பிட்டு, சமயக் காழ்ப்புணர்வுக்குச் சான்றாக சம்பந்தர் பாடல்களைக் குறிப்பிடுகிறார். சமயப் பொறையுடைய பூர்வீக வேள்வி வெறுத்த சைவ சமயத்துக்குச் சான்றாக அப்பர் பாடல்களைக் குறிப்பிடுகிறார்.

வகையில் அவ்வாய்வு நூல்களை (A Primier of Tamil Literature -1904, Tamil India-1927) ஆங்கிலத்தில் வெளியிடுகிறார். இவ்வரலாற்று நூல்களுள் இவர் பதிவு செய்தவற்றின் அடிப்படையிலேயே இவரைத் திராவிட சைவக் கருத்தியலின் முன்னோடி என அடையாளப்படுத்த முடிகிறது.

எம்.எஸ்.பி. எழுதிய இலக்கிய வரலாற்றில் முச்சங்கங்கள் இருந்ததற்கான ஆதாரமாக இறையனார் களவியலுரையையும் அப்பர், சம்பந்தர் ஆகியோர் சங்கம் குறித்துத் தரும் மேற்கோள்களையும் தரவுகளாகக் கொள்கிறார். சிவபெருமான், முருகன், அகத்தியர் முதலானவர்கள் பங்குபெற்றதாக இறையனார் களவியல் குறிப்பிடுவதனை ஏற்கிறார். அதேசமயத்தில் முதற்சங்க காலத்தில் நூல் இயற்றியதாகக் கூறப்படும் அகத்தியருக்கும் ஆரிய முனிவராகக் கூறப்படும் அகத்தியருக்கும் தொடர்பில்லை என்றும் விளக்குகிறார். அதேசமயம் இறையனார் களவியலுரை இயற்றிய நக்கீரரும் திருமுருகாற்றுப்படை பாடிய நக்கீரரும் ஒருவரே எனக் குறிப்பிடுகிறார்; சிவபெருமான் நெற்றிக்கண்ணால் நக்கீரரைத் தண்டித்த கதையை விரிவாக எழுதுகிறார். அதேபோல் ஆரியக் கலப்பற்றுக் கிடந்த தமிழ் இலக்கியத்துக்குள் சமணர்களே வடசொற்களைக் கலக்க விட்டனரென்றும் பௌத்த சமணக் காலத்தை 'இருண்ட' காலமென்றும் பதிவுசெய்கிறார்.

திருவள்ளுவரை "எச்சமயத்தையும் அங்கீகரித்தவரல்ல" (M.S.P., 1999; Pg.12) என்று குறிப்பிடும் எம்.எஸ்.பி., 'மலர்மிசை ஏகினான்' என்னும் தொடரைத் திருவாசகத்தின் 'பூவேறுகோன்' எனும் தொடரோடு ஒப்பிடுகிறார் (மேலது; பக். 16). மேலும் "அனைத்துச் சமயத்தினரும் திருக்குறளைத் தங்களுடையதாகச் சொந்தம் கொண்டாடுகின்றனர். எனினும் முனைவர் போப் தன்னுடைய கட்டுரை ஒன்றில் 'திருவள்ளுவர் கடவுள் நம்பிக்கையாளர்; அவருடைய அறக்கருத்துக்கள் பதி, பசு, பாசம் எனும் அடிப்படையில் அமைந்துள்ளன' எனக் குறிப்பிடுவதாகச்" சுட்டுகிறார். சுயமரியாதைக் காரர்கள் தமது தொன்மையான இலக்கியங் களாக ஆரியக் கலப்பற்ற, சமயச் சார்பற்ற பனுவல்களாகச் சங்க இலக்கியத்தையும் திருக்குறளையும் அடையாளப்படுத்தினர். எம்.எஸ்.பி.யோ சைவ சமயம் சார்ந்த, ஆரியக் கலப்பற்ற பிரதிகளாக இவற்றை அடையாளப் படுத்துகிறார்.

இதேபோல் பக்தி இலக்கியக் காலகட்டத்தைச் சமய மறுமலர்ச்சியாகவும், சைவ சித்தாந்தத்தை இலக்கிய மறுமலர்ச்சியின் மிக முக்கியமான கூறாகவும் அடையாளப்படுத்துகிறார். இவர் தமது 'Tamil India' எனும் நூலில் தமிழர்களே உலகின் தொன்மையான இனம்; கடல்கொண்ட இலெமூரியாவில் வாழ்ந்து பின்னர் வடக்கு நோக்கிச் சென்றவர்கள் தமிழர்களே; தமிழர்கள் ஆரியர்களைப் போல வந்தேறிகள் அல்லர்; தமிழகமே அவர்களின் பூர்வீகம் என்பதனை விரிவான தரவுகளுடன் அழுத்தமாகப் பதிவு செய்துள்ளார். தமிழர்களின் பூர்வீகச் சமயமாக 'சைவ சமயத்தையே' இவர் அடையாளப்ப டுத்துகிறார். "சமணர்களை ஒடுக்க ஆரியர்களும் தமிழர்களும் இணங்கினர். ஆரியர்கள் ஆகம சிவனை அவர்களின் கடவுளாக ஏற்க சைவமும் வேதமும் கலந்து வைதீக சமயமாயின. எனவேதான் சமயப் பொறையுடைய சைவம் சமயக் காழ்ப்புடையதாக மாறியது" (M.S.P., 1999; Pg. 47-48) எனக் குறிப்பிட்டு, சமயக் காழ்ப்புணர்வுக்குச் சான்றாக சம்பந்தர் பாடல்களைக் குறிப்பிடுகிறார். சமயப் பொறையுடைய பூர்வீக வேள்வி வெறுத்த சைவ சமயத்துக்குச் சான்றாக அப்பர் பாடல்களைக் குறிப்பிடுகிறார். சித்தர்களைச் சிவவழி பாட்டாளராகவும் ஆரியச் சடங்குகளைக் கண்டித்தவர்களாகவும் அடையாளப்படுத்தியுள்ளார்.

### பிற வழிபாடுகள்

"வில்லவர் அல்லது மீனவர்கள் கடவுளற்றவர்கள்; நாகர்கள் அச்சமூட்டும் காளியை வழிபட்டு எருமையைப் பலிகொடுப்பர். நாகர்கள் உள்ளிட்ட சில தாழ்ந்த சாதிகள் அற்புத சக்திகள் உறைவதாக நினைத்துக் கல்லையும் மரத்தையும் வழிபடுவர். வேடர்கள் அல்லது குறவர்கள் போர்க் கடவுளான முருகனை வழிபடுவர். ஆயர்கள் கிருஷ்ணனையும் பலராமனையும் வழிபடுவர். உயர்சாதித் தமிழர்கள் தாங்கள் விரும்பும் கடவுளான சிவனை வழிபடுவர். பிராமணர்கள், யாகம் செய்வதில் விருப்பமுடையவர்கள்; முத்தீயை வைத்து வழிபடுவர்" எனும் கனகசபைப்பிள்ளையின் மேற்கோளைக் கொடுத்துவிட்டு சிவனே தமிழர்களின் முழுமுதல் கடவுள் எனக் குறிப்பிடுகிறார். அப்படியானால், இவர் யாரை (மட்டும்) தமிழராகக் கருதுகிறார் எனும் கேள்வி எழுகிறது. ஆரியர் வருகைக்கு முன்பு தமிழ்ச் சமூகம் சமயங்களற்றிருந்தமையால் ஏற்றத்தாழ்வில்லாத சமூகமாக விளங்கியது என்பது சுயமரியாதை இயக்கத்தினரின் கருதுகோள். சைவமே பண்டைத் திராவிடர்களின் சமயம் என்பது எம்.எஸ்.பி. உள்ளிட்ட சைவர்களின் கருதுகோள். இவர்கள் இருவரும் ஆரியர்களின் வரவினால்தான் தமிழ்ச்சமூகம் ஏற்றத்தாழ்வுடையதாக, சாதிகள் மலிந்ததாக மாறிவிட்டன என்று கூறுவதில் மட்டுமே ஒத்தக் கருத்துடைய வர்களாக இருக்கின்றனர்.



நாயன்மார்களின் காலத்தைச் சுட்டி, "இன்று இருப்பதுபோல அன்று சாதிக் கட்டுப்பாடுகள் கடுமையாக இருக்கவில்லை; அவர்களுக்குள் கலப்புமணமும் சமபந்தியும் நடந்துள்ளன. பிராமணரான சுந்தரர் தம்மிலும் தாழ்ந்த சாதியரான பரவையாரையும் சங்கிலியாரையும் திருமணம் செய்துகொண்டார். வேளாளரான திருநாவுக்கரசர் அப்பூதியடிகள் குடும்பத்தினருடன் உணவுண்டார்" (M.S.P., 1985; Pg. 156) எனச் சைவ சமயத்தை நேர்மறையானதாக அடையாளப் படுத்துகிறார். மேலும் "தமிழ் எழுத்துக்கள் மறைபொருளுடையதாகவும் மறைபொருள் குறியீட்டினைக் கொண்டதாகவும் உள்ளது எனக் குறிப்பிட்டு "எட்டுமொன்று மிரண்டு மூன்றாயினார்" எனும் அப்பர் வரிகளைச் சான்றாகக் குறிப்பிடுகின்றார்" (M.S.P., 1999, Pg. 34). தமிழரும் சைவமும் மட்டுமல்ல, தமிழ்மொழியும் சைவமும்கூட பிரிக்கமுடியாததாக உள்ளன என்பதை உணர்த்துகிறார்.

### தத்துவங்கள்

தமிழறிஞர்களின் தத்துவங்களாக நான்மறைகள் இருந்தன. கடல்கோளால் அவை அழிந்தன. ஆனால், அதனைத் தமிழர்கள் தங்கள் நினைவில் வைத்திருந்தனர்; கடல்கோளால் அவை நினைவிலிருந்தும் அழிந்துவிடக் கூடாதென்றெண்ணி வடக்கு நோக்கிச் சென்றனர். அங்குத் தமிழர்களிடமிருந்து நான்மறைகளைக் கற்றுக்கொண்ட ஆரியர்கள் அதனைத் தமிழர்களிடமிருந்து பெற்றுக்கொண்டதாக அறிவிக்காமல் தங்களுடையதாகவே மாற்றிக்கொண்டனர். அதன்பின் எவ்வித சலனமுமற்றிருந்த தமிழர் தத்துவவியலில் இராமானுஜர் சலனத்தை ஏற்படுத்தினார். இதன் உடன் விளைவாக அக்காலத்தில் தமிழரின் தத்துவமான சைவ சித்தாந்தங்கள் எழுதப்பட்டன என்று குறிப்பிடுகிறார். மேலும் "சைவ சித்தாந்தம் தென்னிந்தியாவின் சுதேச தத்துவம்; தமிழர் புலமையின் ஆகச் சிறந்த விளைவு; இது ஆரியர்களின் சிவக்கோட்பாட்டுடன் சேர்ந்தது அல்ல. ஆரியர்களின் கோட்பாட்டின்படி சிவன் அழிக்கும் கடவுளாகச் சித்திரிக்கப்பட்டுள்ளார்; ஆனால், சைவ சித்தாந்தம் ஆக்கல், காத்தல், அழித்தல், அருளல், வீடுபேறு என்னும் ஐந்தொழில் புரிபவனாகச் சிவனைக் காட்டுகிறது" (M.S.P., 1985; Pg. 254) என்று குறிப்பிடுகிறார். மேலும் இஸ்லாமியர் ஆட்சியின்போது தமிழ்க்கல்வி மரபையும் தமிழ்நூல்களையும் சைவ மடங்களே காப்பாற்றின என்றும் குறிப்பிடுகிறார்.

### பிராமணரல்லாதார் சார்பு

"பல்லாண்டுகளாகப் பிராமணரல்லாதார் இயக்கம் தமிழர்களின் தாழ்நிலைக்கான காரணங்களை அவர்களுக்கு எடுத்துச் சொல்லியதன் விளைவாக அவர்களின் அடிமைத்தன்மைகள், அறியாமை, மனவேறுபாடுகள் நீங்கின. அரசியல்ரீதியாகக் கற்பித்ததன் விளைவாகவே அவர்கள் தங்களை

சுயமரியாதை இயக்கத்தினர் ஆரியத்தைப் போற்றி திராவிட மக்களை முட்டாள்களாக்கும் கம்பராமாயணத்தை எரிக்கவேண்டும் எனும் நோக்கில் இயங்கியது நாம் அனைவரும் அறிந்ததே. இதேபோல் சைவர்களும் கம்பராமாயணத்தை எதிர்மறையாகப் பார்த்துள்ளனர்.

மதித்துக்கொள்ளத் தொடங்கினார்கள். அவர்கள் தங்கள் ஆழ்துயிலிலிருந்து விடுபட்டு விழிப்புணர்வு பெற்றனர்" (M.S.P., 1999; Pg. 75) எனக் குறிப்பிடும் எம்.எஸ்.பி. 1919களின் தொடக்க மாதங்களில் 'Justice' இதழின் துணை ஆசிரியராகப் பணியாற்றி பிராமணரல்லாதார் சந்திக்கும் இன்னல்களை வெளிப்படுத்தினார்.

எம்எஸ்பி. பிராமணரல்லாத மாணவர்களுக்குப் புரிந்த நன்மைகளைப் பிஷப் ஹெபர் கல்லூரியின் முதல்வர் ஸிமீஸ். Allen F. Gardiner பாராட்டியுள்ளார். மேலும் தமிழையும் பிராமணரல்லாதாரையும் பெரிதும் பாதிக்கும் கட்டாய இந்தித் திணிப்பை எம்.எஸ்.பி.யும் எதிர்த்தார். சைவக் கோட்டை என்று அறியப்பட்ட திருநெல்வேலியில், 'தமிழ்ப் பாதுகாப்புக் கழகம்' என்ற அமைப்பு உருவாக்கப்பட்டுக் கூட்டங்கள் நடத்தப்பட்டன. 1937 செப்டம்பர் 5ஆம் நாள் நடந்த பொதுக்கூட்டத்தில் மா.வே. நெல்லையப்ப பிள்ளை, மு.சி. பூரணலிங்கம் பிள்ளை, புன்னைவனநாத முதலியார், வ. திருவரங்கம் பிள்ளை, கா. அப்பாதுரை ஆகிய சைவப் பெரும்புள்ளிகள் உரையாற்றினர் (குடிஅரசு, செப்டம்பர் 19, 1937). கட்டாய இந்தித் திணிப்புக்கு எதிராக சைவரான எம்.எஸ்.பி. பங்கு கொண்ட போராட்டத்தினைச் சுயமரியாதை இயக்க இதழான 'குடியரசு' வெளியிட்டுள்ளது. அதே சமயம் சுயமரியாதை இயக்கத்தின் நாத்திகக் கொள்கைக்கு நெருக்கடி கொடுக்கும் வகையில் ஏற்பாடு செய்யப்பட்ட 'அகில இந்தியத் தமிழர் மதமாநாட்டில்' எம்.எஸ்.பி. பங்கேற்றார். சுயமரியாதை இயக்கத்தினருக்கும் சைவர்களுக்கும் பல்வேறு முரண்பாடுகள் இருப்பினும் ஆரிய எதிர்ப்பு, வடமொழி எதிர்ப்பு, இந்தி எதிர்ப்பு, பிராமண எதிர்ப்பு எனும் புள்ளிகளில் ஒருங்கிணைந்து செயல்பட்டுள்ளனர். பெரியாரும் மறைமலையடிகளாரும் அண்ணாவும் சோமசுந்தர பாரதியாரும் இந்தி எதிர்ப்பின்போது ஒருங்கிணைந்து செயல்பட்டுள்ளனர். இதற்குப் பிராமண எதிர்ப்பு மட்டுமல்லாமல் திராவிடக் கருத்தாக்கமும் மிக முக்கியக் காரணம்.

### இராமாயண எதிர்ப்பு

சுயமரியாதை இயக்கத்தினர் ஆரியத்தைப் போற்றி திராவிட மக்களை முட்டாள்களாக்கும் கம்பராமாயணத்தை எரிக்கவேண்டும் எனும் நோக்கில் இயங்கியது நாம் அனைவரும் அறிந்ததே இதேபோல் சைவர்களும் கம்பராமாயணத்தை எதிர்மறையாகப் பார்த்துள்ளனர். மனோன்மணியம் பெ. சுந்தரம்பிள்ளை, வெள்ளக்கால் ப. சுப்பிரமணிய முதலியார் மறைமலையடிகள் எனப் பல சைவப் புலமையாளர்களும் இராமாயணத்தைக் கடுமையாக விமர்சித்துள்ளனர். இ.மு. சுப்பிரமணிய பிள்ளை சந்திரசேகரப் பாவலர் எனும் புனைபெயரில், 'இராமாயணத்தின் ஆபாசம்' பற்றி குடிஅரசில் தொடர்கட்டுரை எழுதினார். இதற்குமுன் தா. பொன்னம்பலம்பிள்ளை, சைவசித்தாந்த சண்டமாருதம் சோமசுந்தரநாயகர் (1879-1959) முதலானவர்களும் கம்பராமாயணத்தை எதிர்மறையாக அணுகியுள்ளனர். எம்எஸ்பியும் Ravana The Great; King of Lanka (1928) எனும் நூலில் இராமாயணத்தில் வினைபுரிந்துள்ள ஆரிய சூழ்ச்சியை வெளிப்படுத்தியதோடு இராவணனை நேர்மறையாகவும் பதிவு செய்துள்ளார்.

### இராவணன் பெருமை

இராக்ஷச குலத்தைச் சேர்ந்தவனாக அடையாளப்படுத்தப்படும் இராவணனை எம்.எஸ்.பி. திராவிட மக்களின் ஒரு பிரிவினரான மறவர்களோடு அடையாளப்படுத்துகிறார். நாகரிகம் பெற்ற குலமாக இவன் குலம் விளங்கியது என்பதை நகர அமைப்பு, சமய ஆர்வம் முதலானவற்றின் அடிப்படையில் எம்.எஸ்.பி. விளக்குகிறார். இராவணன் போர்க்கலை, இசைக்கலை, மந்திரக்கலைகளில் நல்ல தேர்ச்சி பெற்றிருப்பினும் சிவனுடைய அருளையே

பெரிதாக எண்ணினான். "சங்கீதத்தைப் பற்றி இராவணன் எழுதிய 'இராவணீயம்' என்ற நூல் இப்பொழுதும் இசைவல்லோரால் பாராட்டப்பட்டு வருகிறது. இராவணனது இசைத்திறமைக்கு ஞாபகக்குறியாக 'இராவணபத்தியம்' என்ற வேறொரு நூலும் பிற்காலத்தவரால் எழுதப்பட்டிருக்கிறது" (மு.சி. பூரணலிங்கம் பிள்ளை, 2001; பக். 16).

**இராவணன் குற்றமற்றவன்**

"இராவணன் தன் தங்கையின் கணவனைத் தவறாகக் கொன்றுவிட்டதனால் மனம் புழுங்கி அவளுக்குத் தன் ஆளுகையில் இருந்த சில பகுதிகளைக் கொடுத்தான். அவள்மீது மிக்கப் பரிவு காட்டினான். அத்தகைய சூர்ப்பனகையின் மூக்கையரிந்து இலக்ஷ்மணன் அலங்கோலப் படுத்தியதே இராம-இராவண யுத்தத்துக்கு மூலகாரணம். இரிஷிகள் தண்டகாரண்யத்தில் புகுந்து உயிர்களைக் கொன்று யாகம் செய்தது, திராவிடர்களின் இரகசியங்களை அறிந்து ஆரியர்களுக்குச் சொல்லியது முதலானவை துணைக்காரணங்கள். இராவணன் சீதையைத் தூக்கிக்கொண்டு வந்ததைத் தவறு என்பர். ஆனால், எதிரிகளுக்குப் பிரியமான பொருளைக் கைப்பற்றுவது தமிழ்நாட்டுப் போர்முறை. இராமன் சீதையைத் தேடிக்கொண்டு வரும்போது பழிக்குப் பழி வாங்கிவிடலாம் என (இராவணன்) எண்ணினான்" (மேலது, பக். 37-38). ஆனால், "இராமன் உடன் இலங்கை மீது படையெடுக்கவு மில்லை. பிரிவாற்றாமையால் அவன் காட்டில் புலம்பிக்கொண்டு அலைந்தான். அது ஓர் வில் வீரனுக்கு அழகானதா? திராவிட வீரனான அனுமன் இராமனுக்கு உதவி செய்திருக்கா விட்டால் சகோதரத் துரோகியான விபீஷணன் இராமனுக்கு உளவு கூறியிருக்காவிட்டால் இராமன் இலங்கையை அழித்திருக்கவும் மாட்டான்; சீதையை மீட்டிருக்கவும் மாட்டான். எதிரிகளுக்குள் பிரிவினையையுண்டுபண்ணிச் சூழ்ச்சிசெய்து வெற்றி பெறுவதே ஆரியர் போர் முறை. இராவணனும் கும்பகர்ணனும் இந்திரஜித்தும் சுத்த வீரர்களைப் போலப் போர் தொடுத்துப் போர்க்களத்திலே மாண்டார்கள்" (மேலது, பக். 26) என இராவணனது பெருமையையும் இராமனின் சிறுமையையும் ஆரியரின் சூழ்ச்சியையும் பதிவு செய்கிறார். இறுதியில் இராமாயணக் கதைக்கருவையே ஆர்.ஸி. தத்தரின் பின்வரும் மேற்கோள் மூலம் கட்டவிழ்ப்பு செய்கிறார்.

> ஒருபுறம் இராமாயணம் எனும் இதிகாசத்தைக் கட்டவிழ்ப்பு செய்பவர், மறுபுறம் இறையனார் களவியலுரை கூறும் தொன்மக்கதையையே இலக்கிய வரலாறாகக் கட்டமைக்கிறார். தவிரவும், சைவசித்தாந்தத்தைத் திராவிடப் புலமையின் உற்பத்தியாகவும், சைவ சமயத்தைத் தமிழரின் பூர்வீக சமயமாகவும் அடையாளப்படுத்தினார். எனவேதான், ஆய்வாளர் இவரைத் திராவிட சைவக் கருத்தியலின் முன்னோடி என்று அடையாளப்படுத்துகிறார்

"சரித்திர நோக்குடன் பார்த்தால், மகாபாரதத்தைப் போலவே இராமாயணமும் பயனற்றதாகும். இராமாயணமும் மகாபாரதமும் சரித்திரச் சார்பான சம்பவங்களைக் கூறவே இல்லை. மகாபாரதத்திலும், இராமாயணத்திலும் குறிப்பிடப்பட்ட கதாநாயகர்கள் எல்லாம் மனோகற்பிதமானவர்களே. உழுபடைச்சால் எனப் பொருள்படும் சீதை இரிக் வேதத்தில் அதிகமாகப் பாராட்டப்பட்டிருக்கிறாள்; அவள் ஒரு தேவியாக வணங்கப்பட்டிருக்கிறாள். கிருஷி தென்னிந்தியாவில் பரவியதை ஆதாரமாக வைத்துக்கொண்டு சீதையைத் தென்னாட்டரசனான இராவணன் தூக்கிக்கொண்டு போனதாக ஒரு கதை கட்டிவிட்டார்கள். அம்மட்டோ! சீதை ஞானியான ஜனக மகாராஜாவின் புத்திரியென்றும் கூறினார்கள். ஆனால், சீதையின் கணவன் என்றும், கோசலை நாட்டரசன் என்றும் கூறப்படும் இராமன் யார்? இராமன் விஷ்ணுவின் அவதாரமென்று பிற்காலப் புராணங்கள் கூறுகின்றன. ஆனால், அந்தக் காலத்தில் விஷ்ணுவுக்கு அவ்வளவு மதிப்பு ஏற்படவில்லை. பாரஸ்கர கிருஹிய சூத்திரங்களில் சீதை இந்திரன் மனைவி என்று சொல்லப்பட்டிருக்கிறது. எனவே, இராமனே இந்திரன் என்று ஊகிப்பது அவ்வளவு தவறாகுமா!" (மேலது, பக். 55) என்று ஆர்சி. தத்தர் குறிப்பிடுகிறார்.

எம்.எஸ்.பி.க்குப் பிறகு சுயமரியாதை இயக்கத்தினரும் சைவர்களும் கம்பராமாயணத்தில்

உறைந்துள்ள ஆரிய சூழ்ச்சியை வெளிப்படுத்தினர். கம்பராமாயணத்தை எரிக்கவேண்டும் எனும் நிலைகூட வந்தது. இதனைப் பொருண்மைநிலையில் எதிர்கொள்ள முடியாதபோது இலக்கிய அளவுகோல்களைக் காட்டி எரிக்கக்கூடாது எனும் வாதங்களும் நடந்தன. இவை இரண்டையுமே எம்.எஸ்.பி. தன் எழுத்துகளில் பதிவு செய்துள்ளார்.

இராமாயணத்திலுள்ள ஆரிய சூழ்ச்சியைப் பொருண்மை நிலையில் நின்று கட்டவிழ்ப்பு செய்த எம்.எஸ்பி. கம்பனுடைய கவிதைத் தன்மையைப் பாராட்டியுள்ளார். ஆரியப் புராணங்களோடு சேர்ந்து அலங்காரமயமாகிவிட்ட தமிழ் இலக்கியம் கம்பனில்தான் உயிர்த்தெழுகிறது என்று எம். எஸ்.பி. குறிப்பிடுவது கவனிக்கத்தக்கது.

இவ்வாறு ஒருபுறம் இராமாயணம் எனும் இதிகாசத்தைக் கட்டவிழ்ப்பு செய்பவர், மறுபுறம் இறையனார் களவியலுரை கூறும் தொன்மக்கதையையே இலக்கிய வரலாறாகக் கட்டமைக்கிறார். தவிரவும், சைவசித்தாந்தத்தைத் திராவிடப் புலமையின் உற்பத்தியாகவும், சைவ சமயத்தைத் தமிழரின் பூர்வீகச் சமயமாகவும் அடையாளப்படுத்தினார். எனவேதான், ஆய்வாளர் இவரைத் திராவிட சைவக் கருத்தியலின் முன்னோடி என்று அடையாளப்படுத்துகிறார். இவருக்குப் பின் இ.மு. சுப்பிரமணிய பிள்ளை, கா. அப்பாதுரை முதலான பல தமிழறிஞர்களும் கரந்தைத் தமிழ்ச்சங்கம் (1915) போன்ற நிறுவனங்களும் இக்கருத்தியலைப் பின்பற்றினர். எம்.எஸ்.பி. எத்தகைய சார்புடையவராக இருப்பினும் முதன்முதல் தமிழ் இலக்கிய வரலாற்றையெழுதி தமிழின் வளங்களை மேலைநாட்டவரும் அறியச் செய்தார். மேலும் இந்தியத் துணைக்கண்டத்தில் திராவிடர்களின் முக்கியத்துவத்தையும் அடையாளத்தையும் பங்களிப்பையும் பதிவு செய்தார். இருபதாம் நூற்றாண்டின் நடுப்பகுதி வரை தமிழியல் ஆய்வுலகிற்குப் பங்களித்த அறிஞர்களுள் பெரும்பாலானோரும் அடையாள அரசியலை முன்னெடுத்துள்ளனர். அந்த வகையில் எம்.எஸ்.பி. திராவிடம் மற்றும் சைவத்தை இணைத்து அக்கால அடையாள அரசியலின் நெருக்கடிகளுக்கேற்ப வினைபுரிந்துள்ளார். இவரது ஆய்வுகளும் அதற்காக அவர் செய்த உழைப்பும் மிகவும் மதிக்கத்தக்கது. இவரது புத்தகங்களுள் சிலவற்றைத் தஞ்சைத் தமிழ்ப் பல்கலைக்கழகமும் உலகத் தமிழாராய்ச்சி நிறுவனமும் மறுபதிப்பு செய்துள்ளன. இன்றும் அவருடைய பல நூல்கள் பெயரளவில் மட்டுமே அறியப்படுகின்றன. அவற்றை மறுபதிப்பு செய்தால், அவரது எழுத்துக்களை முழுத் தொகுதியாக வெளியிட்டால் தமிழியல் ஆய்வு வளர்ச்சிக்கும் தமிழியல் ஆய்வு வரலாற்றை அறிந்துகொள்வதற்கும் ஆவணமாக அமையும்.

**துணைநூற்பட்டியல்**


- இராசேந்திரன், ம., சிவகாமி,ச., (ப.ஆ.) பேராசிரியர் எம்.எஸ். பூரணலிங்கம்பிள்ளை, உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை-113, முதல் பதிப்பு: 2005.
- பூரணலிங்கம்பிள்ளை, மு.சி., இராவணப் பெரியார், திராவிடர் கழக வெளியீடு, சென்னை-7, முதல் பதிப்பு: 2001.
- வேங்கடாசலபதி, ஆ.இரா., திராவிட இயக்கமும் வேளாளரும், சவுத் ஏசியன் புக்ஸ், சென்னை -2. முதல் பதிப்பு: 1999.
- Purnalingampillai, M.S., Tamil India, International Institute of Tamil Studies, Chennai-113, Reprint:1999.
- Purnalingampillai, M.S., Critical Studies in Kural, International Institute of Tamil Studies, Chennai-113, Reprint:1999.
- Purnalingampillai, M.S., Tamil Literature (Revised and Enlarged), The Tamil University, Thanjavur, India, Photo Reprint:1985.




# வெ.பெரி.பழ.மு. காசிவிசுவநாதன் செட்டியார் – பதிப்புப்பணி



மா. பரமசிவன்

சிவகாசியிலுள்ள ஸ்ரீகாளீஸ்வரி கல்லூரியின் தமிழ்த் துறையில் உதவிப்பேராசிரியராகப் பணியாற்றிவருகிறார். இவரின் நூல்கள்: 'சங்க இலக்கியத்தில் மரையா, குருகு – மீளாய்வு', 'அகநானூறு: பதிப்பு வரலாறு (1918–2010)'.

தமிழ்நூல் பதிப்பிப்பதிலும் வெளியிடுவதிலும் செட்டிநாட்டு நகரத்தார்க்கென்று தனியிடம் உண்டு. ஊழியன், குமரன் போன்ற சிறப்பு வாய்ந்த தொடக்ககால இதழ்களும் செட்டிநாட்டுப் பகுதியிலிருந்து வெளிவந்தவையே ஆகும். இந்நிலையிலான செட்டிநாட்டுத் தமிழ்வளர்ச்சிக் கழகத்தில் ஒன்றுதான்' பாகனேரி தனவைசிய இளைஞர் தமிழ்ச்சங்கம்' ஆகும். இதனை நிறுவியவர் 'பாகனேரி வெ.பெரிபழமு. காசிவிசுவநாதன் செட்டியார்' ஆவார்.

### வெ.பெரி.பழ.மு. காசிவிசுவநாதன் செட்டியார்

சிவகங்கையிலிருந்து நாட்டரசன்கோட்டை வழியாகக் கல்லல் வரும் வழியில் சுமார் 10 கி.மீ தொலைவில் பாகனேரி உள்ளது. தற்காலத்திலும் அவ்வூருக்குப் போக்குவரத்து அரிதாகத்தான் காணப்பெறுகிறது. தற்காலத்திலேயே அந்நிலையெனில் ஒருங்கிணைந்த இராமநாதபுரம் மாவட்டமாக இருந்த அந்தக் காலத்தில் அவ்வூர் எப்படி இருந்திருக்கும் என்பது பற்றிச் சொல்லத் தேவையில்லை.

அத்தகைய மிகவும் பின்தங்கிய ஊரில் 1898 முதல் 1986 வரை வாழ்ந்த காசிவிசுவநாதன் செட்டியார் 1937ஆம் ஆண்டு முதல் தமிழ்நூல்களைப் பதிப்பித்து வெளியிடுவதில் ஆர்வம் காட்டிச் செயல்படுத்தினார். இவரை 'வித்துவான் காவன்னா' என்று குறிக்கும் சோமலெ '(செட்டிநாடும் செந்தமிழும்)' 1921 முதல் 1974 வரை பாகனேரியில் இவரால் தொடங்கப்பெற்று நடத்தப்பெற்ற மிகப்பெரும் நூலகத்தை நூலக இயக்கத்தந்தை எஸ்.ஆர். ரெங்கநாதன் அவர்கள் பெரிதும் பாராட்டியுள்ளார்' என்றும் குறிப்பிடுகிறார்.



பாகனேரித் தமிழ்ப்புரவலர்
வெ. பெரி. பழ. மு. காசிவிசுவநாதன் செட்டியார்

1898 செப்டம்பர் 15இல் பிறந்த அவர் 1905இல் (தம் ஏழாம் வயதில்) நூல்களை வாங்குவதிலும் வாசிப்பதிலும் மிகுந்த ஆர்வம் காட்டி வந்தார் என்று குறிப்பார். 1921இல் தொடங்கிய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தின் ஆட்சிக்குழு உறுப்பினராக இருந்த அவர் 1948 முதல் 1975 வரை அதன் ஆட்சிக்குழுத் தலைவராகவும் விளங்கியுள்ளார். அதுமட்டுமின்றி 40 ஆண்டுகளுக்கும் மேலாக, கழகத்தின் இயக்குனராகவும் பணியாற்றியுள்ளார். 1924இல் காரைக்குடி உறுப்பினராகவும் இணைந்து செயல்பட்டுள்ளார்.

தமிழ்நூல்களைச் சேகரிப்பதிலும் வாசிப்பதிலும் சிறுவயது முதல் ஆர்வம் காட்டியுள்ள காசிவிசுவநாதன் செட்டியார் 1920இல் பாகனேரியில் 'கருணாகடாட்சி வாசகசாலை' எனும் படிப்பகம் ஒன்றைத் தொடங்கியுள்ளார். அப்படிப்பகத்திற்குத் தன்னால் சேர்க்கப்பெற்ற 1,500 அரிய நூல்களை முதற்கண் நன்கொடையாக வழங்கியுள்ளார்.

அதனைத் தொடர்ந்து 1934இல் "திருவள்ளுவர் நூலகம்" என்பதனையும் 'பாகனேரி தனவைசிய இளைஞர் தமிழ்ச்சங்கம்' என்ற அமைப்பையும் தொடங்கினார். இவ்விரண்டையும் முன்னர் தொடங்கப்பெற்ற வாசக சாலையுடன் இணைத்து 3500 நூல்களை அதற்கு நன்கொடையாக அளித்துத் தமிழ்ப்பணி ஆற்றினார்.

காசிவிசுவநாதன் செட்டியாரின் நூல் சேகரிப்பு ஆர்வத்திற்குச் 'சோமலே' ஒரு நிகழ்வைச் சான்றாகக் குறிப்பார். '1913இல் பர்மிய நாட்டின் தலைநகரான இரங்கூனுக்குத் தொழில் நிமித்தமாகக் காசிவிசுவநாதன் செட்டியார் சென்றிருந்தபோது நூல்களை வாங்குவதையும் வாசிப்பதையும் நிறுத்தாது செயல்படுத்திக் கொண்டிருந்தார்' என்பது 'சோமலே' தரும் நிகழ்வுக் குறிப்பின் சாரமாகும்.

காசிவிசுவநாதன் செட்டியாரின் மொழி ஆர்வமும் இங்குக் குறிக்கத்தக்கதாகும். 1937இல் தமிழ்நாட்டில் நடைபெற்ற இந்தி எதிர்ப்புப் போரில் 'இந்தி பொது மொழியா' எனும் மறைமலையடிகளின் நூலை 15000 படிகள் அச்சிட்டு அனைவருக்கும் நன்கொடையாக வழங்கினார். 1938இல் 'தமிழும் இந்தியும்' இந்திமொழிப் பயிற்சியா? 'தமிழுக்கு இந்தி வேண்டுமா?' போன்ற நூல்களையும் பல்லாயிரம் படிகள் அச்சிட்டு மக்களுக்குக் கொடுத்து உதவினார் (நகரத்தார் கலைக்களஞ்சியம்).

இந்நிலையில் நூல்களை நேசித்து அவை பிறருக்கும் தேவை என்பதனை உணர்ந்து அச்சிடத் தொடங்கினார். பாகனேரி சிற்றூராக இருந்த காரணத்தினாலும் சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தின் ஆட்சிக்குழு உறுப்பினர், ஆட்சிக்குழுத் தலைவர், இயக்குநர் ஆகிய நிலைகளில் திகழ்ந்தமையினாலும் தாம் பொருட்செலவழித்துப் பதிப்பித்து வெளியிட்ட நூல்களைச் 'சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தாருக்கு' விற்பனை உரிமையாகக் கொடுத்துள்ளார். இவ்வகையில் காசிவிசுவநாதன் செட்டியாரால் முதற்கண் பதிப்பித்து வெளியிடப்பெற்ற நூல் திருவாசகம் ஆகும்.

இதனைத் தொடர்ந்து வெளியிட்டுள்ள அனைத்து நூல்களிலும், நூல்கள் மூலம் வருகின்ற தொகை திருவள்ளுவர் நூலகத்திற்குச் சொந்தம் என்பதனைத் தெளிவுபடுத்தியுள்ளார். அக்காலகட்டத்தில் தமிழகத்தில் பகுதியான

நூல்கள் வைத்திருந்தவர்களுள் இவரும் ஒருவர் என்று குறிப்பிடுவர். தற்போது இவர் பெயரில் இயங்கி வரும் அந்நூலகத்தில் உள்ள நூல்கள் உரிய பராமரிப்பின்றி அழிந்து வருகின்றது என்பது இங்குக் குறிப்பிடத்தக்கது.

### பதிப்பாளர் – வெளியீட்டாளர்

காசிவிசுவநாதன் செட்டியாரைப் பெரும் பான்மையோர் வெளியீட்டாளர் என்று குறிப்பர். பாகனேரி தனவைசிய இளைஞர் தமிழ்ச்சங்க வெளியீடுகள் ஒவ்வொன்றிலும் காணலாகும் "பாகனேரி வெ.பெரி.பழ.மு. காசிவிசுவநாதன் செட்டியார் அவர்களால் வெளியிடப் பெற்றது" என்ற குறிப்பை முன்வைத்தே இவரை வெளியீட்டாளர் என்று குறிக்கின்றனர். இவர் வெளியீட்டாளராக மட்டுமின்றிப்

> காசிவிசுவநாதன் செட்டியார் வெளியீட்டாளராக மட்டுமின்றிப் பதிப்பாசிரியராகவும் இருந்துள்ளமையினைத் திருவாசகம் (1937), தாயுமான அடிகள் திருப்பாடல்கள் (1938), பட்டினத்துப் பிள்ளையார் திருப்பாடல்கள் (1940), சிவப்பிரகாச சுவாமிகள் பிரபந்தத் திரட்டு (1941) ஆகிய நூல்கள்வழி அறிய முடிகிறது.

பதிப்பாசிரியராகவும் இருந்துள்ளமையினைத் திருவாசகம் (1937), தாயுமான அடிகள் திருப்பாடல்கள் (1938), பட்டினத்துப் பிள்ளையார் திருப்பாடல்கள் (1940), சிவப்பிரகாச சுவாமிகள் பிரபந்தத் திரட்டு (1941) ஆகிய நூல்கள் வழி அறிய முடிகிறது. இதற்குச் சான்றாகத் திருவாசகப் பதிப்பில் அவர் மேற்கொண்டுள்ள பதிப்பு நெறிமுறை குறித்த பின்வரும் பதிவுகளைக் குறிக்கலாம். அவை :

1. பாடவேறுபாட்டுக் குறிப்பு
2. புதிய பாடல்சேர்த்தல் பற்றிய செய்தி.

திருவாசகம் இரண்டாம் பாடலில் வரும்,

"தூசகல் அல்குல்வேய்த தோளிடத் தவனே" என்ற அடிக்குப் பாடவேறுபாடாக,

"(பாடம்) தூசணி நுண்மருங்குற் தோகையிடத்" என்பதனைக் குறித்துச் செல்கிறார்.

இப்பாடவேறுபாடு மட்டுமின்றி இரண்டு இடங்களில் பாடல்களைக் கூடுதலாகச் சேர்த்தமை பற்றியும் அதற்கான காரணத்தையும் முன் வைக்கிறார். 'தில்லையில் அருளிய திருப்பூவல்லி மாயா விலாசம் நீக்குதல்' எனும் பகுதியின் இறுதியில்,

"மாவார வேறி மதுரைநகர் புறந்தருளித்
தேவார்ந்த கோலந் திகழப் பெருந்துறையின்
கோவாகி வந்தெம்மைக் குற்றேவல் கொண்டருளும்
பூவார் கழல்பரவில் பூவல்லி கொய்யாமோ"

எனும் பாடலைச் சேர்த்து, "இச்செய்யுள் பல பதிப்புகளிற் காணப்படுவதால் ஈண்டுச் சேர்க்கப்பட்டது" என்று குறிப்பிடுகிறார். இதே போல், 'தில்லையில் அருளிய திருவந்தியார் ஞானவெற்றி' எனும் பகுதியிலும் கூடுதலாக ஒரு பாடலைச் சேர்த்து அதற்கான காரணத்தையும் (மேற்குறிப்பிட்டுள்ள காரணமே) முன் வைத்துள்ளார். இத்தகு தன்மைகளை முன்வைத்து அவரைப் பதிப்பாசிரியர் என்று குறிக்கலாம். தற்காலப் பதிப்புகளில் மேற்கண்ட நெறிமுறைக் கருத்துகள் இடம்பெறுவதில்லை என்பதும் இங்குக் குறிக்கத்தக்கதாகும்.

மேற்கண்டவாறு தம் சங்கம்வழி வெளியிடப் பெற்றுள்ள பக்தி இலக்கிய நூல்களுக்குப் பதிப்பாசிரியராக இருந்து வெளியிட்ட காசிவிசுவநாதன் செட்டியார் சங்க இலக்கியங்கள், காப்பியங்கள் முதலானவற்றைப் பதிப்பிக்க முற்படுகையில் துறை சான்ற வல்லுநர்களை அழைத்து மூலபாடத்தைச் சோதிக்கச் செய்து, உரை எழுதச் செய்து வெளியிடுகிறார். இவ்வகையில் பதிப்பாசிரியர், வெளியீட்டாளர் எனும் இரு நிலைகளிலும் காசிவிசுவநாதன் செட்டியார் திகழ்ந்துள்ளார்.

### வெளியீட்டு நூல்கள்

பாகனேரி தனவைசிய இளைஞர் தமிழ்ச்சங்கம் வழி வெளிவந்தனவாகத் தற்பொழுது 21 நூல்கள் கிடைக்கின்றன. அவை வெளியீட்டு எண் வரிசைப்படி வருமாறு:

1. 1937: தமிழ்மறையாகிய திருவாசகம் (எட்டாந்திருமுறை), மணிவாசகப்பெருமாள் அருளியது.
2. 1938: சங்கமருவிய எட்டுத்தொகை நூல்களுள் ஆறாவதாகிய கலித்தொகை மதுரையாசிரியர் பாரத்துவாசி நச்சினார்க்கினியருரையுடன்.
3. 1938: தாயுமான அடிகள் திருப்பாடல்கள்
4. 1940: திருமுருகாற்றுப்படை, கந்தர் கலிவெண்பா, சட்ட விரிவுரையாளரும், அண்ணாமலைப் பல்கலைக்கழகத் தமிழ்ப்

பேராசிரியராய் இருந்தவருமாகிய திரு. கா. சுப்பிரமணிய பிள்ளையவர்கள் எம்.ஏ., எம்.எல்., எழுதிய உரை வசனங்களுடன்.

5. 1940: பட்டினத்துப் பிள்ளையார் திருப்பாடல்கள்

6. 1941: ஜெயங்கொண்டார் சதகமும் ஏழு நகரத்தார் பெயராற் பாடிய திருமுக விலாசமும் இவை அழகப்பச் செட்டியார் புதல்வர் முத்தப்பச் செட்டியார் இயற்றியன.

7. 1941: தனவைசியராகிய நாட்டுக்கோட்டை நகரத்தார் சரித்திரம், தேவகோட்டை திரு.வீர.லெ. சின்னையச் செட்டியார் அவர்கள் பார்வையிட்ட படியின் படி

8. 1941: ஜெயங்கொண்டார் சதகமும் திருமுக விலாசமும் நாட்டுக்கோட்டை நகரத்தார் சரித்திரமும்.

8. 1941: சிவப்பிரகாச சுவாமிகள் பிரபந்தத்திரட்டு அரும்பொருள் விளக்கத்துடன்.

9. 1942: ஆசிரியர் இளங்கோவடிகள் இயற்றியருளிய சிலப்பதிகார மூலமும் அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தின் விடுதிபெற்ற தமிழ்ச் சொற்பொழிவாளரும், கரந்தைப் புலவர் கல்லூரியின் தலைவருமாகிய நடுக்காவேரி நாவலர் பண்டித நமு. வேங்கடசாமி நாட்டாரவர்கள் இயற்றிய உரையும்.

10. 1942: பதினெண் கீழ்க்கணக்குகளில் ஒன்றாகிய நாலடியார், மறைமலையடிகள் மாணவரும், சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத் தமிழ்ப்புலவருமாகிய திரு. தி.சு. பாலசுந்தரம் பிள்ளை அவர்கள் (இளவழகனார்) இயற்றிய பொழிப்புரையுடன்.

11. 1943: எட்டுத்தொகையுள் ஒன்றாகிய அகநானூறு களிற்றியானைநிரை திரு. நாவலர் நமு. வேங்கடசாமி நாட்டார், கரந்தைக் கவியரசு ரா. வேங்கடாசலம் பிள்ளை அவர்களால் எழுதப்பெற்ற பதவுரை விளக்கவுரைகளுடன்.

12. 1944: எட்டுத் தொகையுள் ஒன்றான அகநானூறு மணிமிடைபவளம், திரு நாவலர் நமு. வேங்கடசாமி நாட்டார், கரந்தைக் கவியரசு சு. வேங்கடாசலம் பிள்ளை அவர்களால் எழுதப்பெற்ற பதவுரை விளக்கவுரைகளுடன்.

13. 1944: எட்டுத்தொகையுள் ஒன்றான அகநானூறு நித்திலக்கோவை, திரு நாவலர் நமு. வேங்கடசாமி நாட்டார், கரந்தைக் கவியரசு ரா. வேங்கடாசலம்பிள்ளை அவர்களால் எழுதப்பெற்ற பதவுரை விளக்கவுரைகளுடன்.

14. 1946: சீத்தலைச் சாத்தனார் இயற்றிய மணிமேகலை, திருவாளர்கள் நாவலர் பண்டித நமு. வேங்கடசாமி நாட்டார், வித்துவான் ஔவைத் துரைசாமிப்பிள்ளை அவர்களால் எழுதப்பெற்ற பதவுரை விளக்கவுரைகளுடன்.

15. 1947: சிலப்பதிகார மூலம், சிலப்பதிகாரக் கதைச் சுருக்கமும் கதைப் பகுதிகளின் சுருக்கமும் அரும்பத அடிக்குறிப்பும் அடங்கியது.

16. பன்னிருத் திருமுறைத்திரட்டு (இதைத் தொடர்ந்த நூல்கள் கிடைக்கப்பெறவில்லை)

17. வழிபாட்டிற்குரிய தேவாரத்திரட்டு

18. முருகன் புகழ்நூற்கோவை

19. திருமந்திரம்

20. மாணவர் செய்யுட்கோவை, (இந்நூல் கழக வெளியீடாகக் கிடைக்கிறது).

முன்னர் 6, 7ஆம் வெளியீடுகளாகத் தனித்தனியாக இவற்றை வெளியிட்ட காசிவிசுவநாதன் செட்டியார் இவற்றை ஒன்றாகச் சேர்த்து 8ஆம் வெளியீடாக வெளியிடுகிறார். இது ஒரு சேர்க்கை நூல் என்பதால் தனித்த ஒரு நூலுக்கும் 8 என்ற வெளியீட்டு எண்ணைக் குறிக்கிறார்.

மேற்கண்ட நூல்களுள் திருவாசகத்தை ராட்டர், ரெக்சைன் எனும் இரு வடிவமைப்பில்

பன்னிரு திருமுறைத்திரட்டு, திருமுருகாற்றுப்படை, கந்தர் கலிவெண்பா உரையும் வசனமும், ஜெயங்கொண்டார் சதகமும் திருமுக விளாசமும் நாட்டுக்கோட்டை நகரத்தார் சரித்திரமும் ஆகிய நூல்களை ராப்பர், கலிக்கா ஆகிய இரு அட்டைக்கட்டுகளில் (பைண்டுகள்) வெளியிட்டுள்ளார்.

வெளியிட்டுள்ளார். பன்னிரு திருமுறைத்திரட்டு, திருமுருகாற்றுப்படை, கந்தர் கலிவெண்பா உரையும் வசனமும், ஜெயங்கொண்டார் சதகமும் திருமுக விலாசமும் நாட்டுக்கோட்டை நகரத்தார் சரித்திரமும் ஆகிய நூல்களை ராப்பர், கலிக்கோ ஆகிய இரு அட்டைக்கட்டுகளில் (பைண்டுகள்) வெளியிட்டுள்ளார். ஒவ்வொருவரின் பொருளாதார வசதிக்கேற்ப நூல்களை வாங்கிப் பயன்பெற வேண்டும் என்பதை மனதில்கொண்டு இந்த இரு வடிவத்தில் நூல் வெளியிட்டுள்ள காசிவிசுவநாதன் செட்டியாரின் பணி போற்றுதற்குரியதாகும்.

பட்டியலில் கண்ட நூல்களில் பன்னிரு திருமுறைத்திரட்டு, வழிபாட்டிற்குரிய தேவாரத்திரட்டு, முருகன் புகழ்நூற்கோவை, திருமந்திரம் ஆகியன கிடைக்கப்பெறவில்லை. 'மாணவர் செய்யுட்கோவை' எனும் நூல் கருத்து வேறுபாட்டிற்குரியதாக அமைகிறது. இந்நூல் பாகனேரித் தனவைசிய இளைஞர் தமிழ்ச்சங்க வெளியீடு என்பதனைத் 'தாயுமான அடிகள் திருப்பாடல்கள்' எனும் நூலின் இரண்டாம் பதிப்பின் பின்பக்கக் குறிப்பு வழி அறியமுடிகிறது. அக்குறிப்பில் 'எமது நிறுவனத்தின் அடுத்த வெளியீடுகள்' எனும் பகுதியில் 'மாணவர் செய்யுட்கோவை 12 அரையணா வெளியீடுகள் அடங்கியது ரூ.0, அ.6' என்ற குறிப்புக் காணப்பெறுகிறது. ஆனால் தற்பொழுது கிடைக்கும் 'மாணவர் செய்யுட்கோவை' (1947) முதற்பதிப்பில் பாகனேரி தனவைசிய இளைஞர் தமிழ்ச்சங்கக் குறிப்பேதும் இல்லை.' இதன்கண் 11 காலணை வெளியீடுகள் அடங்கியுள்ளன' என்ற குறிப்பும் 'திருநெல்வேலி தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம் லிமிடெட்' என்ற குறிப்பும் காணப்பெறுகின்றன. 1947 கால கட்டத்தில் காசிவிசுவநாதன் செட்டியார் சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தின் ஆட்சிக்குழுத் தலைவராக இருந்த காரணத்தினால் அக்கழகத்தின் வழியாகவே அந்நூலை வெளியிட்டுள்ளாரோ என்று எண்ணத் தோன்றுகிறது.

"பாகனேரி தனவைசிய இளைஞர் தமிழ்ச்சங்கம்வழி வெளிவந்துள்ள மேற்கண்ட நூல்களைப் பின்வருமாறு வகைப்படுத்தலாம். அவை:

1. சங்க இலக்கிய நூல்கள் (கலித்தொகை, அகநானூறு)
2. காப்பிய நூல்கள் (சிலப்பதிகாரம், மணிமேகலை)
3. பக்தி இலக்கிய நூல்கள் (திருவாசகம், திருமந்திரம், தாயுமான அடிகள் திருப்பாடல்கள், திருமுருகாற்றுப்படை, கந்தர் கலிவெண்பா, பட்டினத்துப் பிள்ளையார் திருப்பாடல்கள், பன்னிரு திருமுறைத்திரட்டு, வழிபாட்டிற்குரிய தேவாரத் திரட்டு, முருகன் புகழ்நூற்கோவை)
4. சிற்றிலக்கிய நூல்கள் (ஜெயங்கொண்டார் சதகம், சிவப்பிரகாச சுவாமிகள் பிரபந்தத் திரட்டு)
5. நகரத்தார் பற்றிய நூல்கள் (ஏழு நகரத்தார் பெயராற் பாடிய திருமுகவிலாசம், நாட்டுக்கோட்டை நகரத்தார் சரித்திரம்)

1937இல் தம் பதிப்பு முயற்சிகளைத் தொடங்கும் காசிவிசுவநாதன் செட்டியார் 1938இலேயே பழந்தமிழ் இலக்கியங்களைப் (கலித்தொகை) பதிப்பித்துள்ளார். இவ்வகையிலான கலித்தொகை வெளியீடு பாகனேரி தனவைசிய இளைஞர் தமிழ்ச்சங்கத்தின் இரண்டாம் நூல் என்பதும் நினைவில் கொள்ளத்தக்கது.

**பதிப்பிற்கு உதவியோர்**

வெ.பெரி.பழ.மு. காசிவிசுவநாதன் செட்டியாருக்குப் பொருள் கொடுத்து உதவியதாக எவரையும் கூற இயலவில்லை. ஆனால், நூல்களின் சோதனையாளர்களாகவும் உரையாசிரியர்களாகவும் பிழை திருத்துவோராகவும் பலர் உதவியுள்ளனர். அவர்கள் பற்றிய விவரங்கள் வருமாறு:

- 1938: தருமையாதீன வித்துவான் திரு. காழி. சிவ.கண்ணுசாமி கலித்தொகை, தாயுமான அடிகள் திருப்பாடல்கள் நூல்களின் அச்சுப்பிழைத் திருத்தியமை
- 1938, 42: தமிழ்மலை இளவழகனார் கலித்தொகை மாட்சி, நாலடியார் விளக்கவுரை, பொழிப்புரை எழுதியமை, சிலப்பதிகாரம் மூலம், உரை அச்சுப்பிழை பார்த்தளித்தல்.
- 1940: கா. சுப்பிரமணியபிள்ளை திருமுருகாற்றுப்படை குறிப்புரை, சுந்தர் கலிவெண்பா வசனம் எழுதி அளித்தமை.
- 1941: வித்துவான் மா. இராசமாணிக்கம்பிள்ளை ஜெயங்கொண்டார் சதகம், திருமுகவிலாசம் பார்வையிட்டு உதவியமை
- 1941: வீர.லெ. சின்னையச் செட்டியார் நாட்டுக்கோட்டை நகரத்தார் சரித்திரம் நன்கு பார்வையிட்டு வைத்திருத்தல்.

- 1941: மெ.அரு.அரு. இராமநாதச் செட்டியார், அன.அருராம. அருணாசலச் செட்டியார், நாட்டுக்கோட்டை நகரத்தார் சரித்திரத்தை முதன்முதலில் அச்சிடுதல் (அது கிடைக்கப்பெறாததால் வெ.பெரி.பழ.மு. காசிவிசுவநாதன் செட்டியார் அதனை மீண்டும் வெளியிட்டார்)
- 1941: தி.சு. வேதாசலம் பிள்ளை சிவப்பிரகாச சுவாமிகள் பிரபந்தத்திரட்டின் ஆசிரியர் வரலாறு, பாட்டு முதற்குறிப்பகரவரிசை எழுதி பிழைத்திருத்தம் பார்த்து உதவுதல்.
- 1942: மு. இராசாக்கண்ணு முதலியார் சிலப்பதிகாரம் மூலம், உரை அச்சுப்பிழை பார்த்து உதவுதல்.
- 1942, 46, 47: ந.மு. வேங்கடசாமி நாட்டார் சிலப்பதிகாரம் உரை, மணிமேகலை 26 காதைகளுக்கு உரை, சிலப்பதிகார மூலத்திற்குக் கதைச்சுருக்கம், காண்ட வரலாற்றுப் பகுதிகள் எழுதியமை.
- 1943, 44: ந.மு. வேங்கடசாமி நாட்டார், கரந்தைக் கவியரசு இரா. வேங்கடாசலம்பிள்ளை, அகநானூறு மூன்று பகுதிகளுக்கும் பதிவுரை, விளக்கவுரை எழுதி அளித்தல்.
- 1946: ஔவை சு. துரைசாமிப்பிள்ளை மணிமேகலை இறுதி 4 காதைகளுக்கு உரை எழுதியமை.

மேற்கண்டவாறு புலமை வாய்ந்த, துறை சான்ற பலரை வரவழைத்து, அவர்களின் உதவியுடன் தமிழ்நூல்களைப் பதிப்பித்து வெளியிட்ட பெருமை பாகனேரி வெ. பெரி.பழ.மு. காசிவிசுவநாதன் செட்டியாரைச் சாரும். எல்லாவற்றிற்கும் மேலாக, பாகனேரி தனவைசிய இளைஞர் தமிழ்ச்சங்க வெளியீடுகளை விற்பனை உரிமை பெற்று மக்களிடம் கொண்டு சேர்த்து உதவிய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தாரின் பணியும் இங்குக் குறிப்பிடத்தக்கது.

### பதிப்புப் பின்புலம்

நாட்டுக்கோட்டை நகரத்தார்கள் சிவபக்தியில் ஆழ்ந்தவர்கள். அக்குலத்தைச் சேர்ந்த காசிவிசுவநாதன் செட்டியார் "சைவ இலக்கியங்களில் ஒன்றான திருவாசகம் அனைவருக்கும் கிடைக்க வேண்டும்" என்ற எண்ணப் பின்னணியில் முதன்முதலில் அந்நூலை வெளியிட்டார். அதன்பின்னர், தமிழின் தொன்மை இலக்கியங்களை வெளியிட எண்ணி அவற்றைத் தேர்வு செய்வதிலும் மிகுந்த கவனத்துடன் செயல்பட்டுள்ளார்.

பழந்தமிழ் இலக்கிய வரிசையில் முதலில் கலித்தொகையை நச்சினார்க்கினியார் உரையுடன் பதிப்பித்து வெளியிடும் காசிவிசுவநாதன் செட்டியார் அதில் 'கலித்தொகை மாட்சி' எனும் இளவழகனாரின் கட்டுரையையும் எளிய உரைக்குறிப்பையும் இணைத்து வெளியிடுகிறார். இத்தன்மை இதற்கு முந்தைய கலித்தொகைப் பதிப்புகளில் (1887: சி.வை.தா., 1925 - 31: இ.வை.அ.) இல்லாதனவாகும்.

அகநானூற்றிற்கு 1943,44 வரை முழுமையான உரை இல்லை. அதுவரைக் காணப்பெற்ற அகநானூற்று உரைகளாக,

1. 190 பாடல்களுக்கான பழைய உரை
2. இடையில் 56 பாடல்களுக்குக் குறிப்புரை
3. 91, 160 பாடல்களுக்கு இராஜகோபாலாரின் குறிப்புரை

ஆகியன அமைந்தன. அந்நிலையில் அகம் 400 பாடல்களுக்கும் ஒரு தெளிவான உரை வேண்டும் எனும் எண்ணப் பின்னணியில் அகநானூற்றைப் பதிப்பிக்க முயற்சிக்கிறார். இம்முயற்சியால் ந.மு. வேங்கடசாமி நாட்டார், கரந்தைக் கவியரசு இரா. வேங்கடாசலம்பிள்ளை ஆகியோரை அழைத்து நூல் முழுமைக்கும் உரை எழுதச் செய்து வெளியிடுகிறார். இன்றுவரை வெளிவரும் அனைத்து அகநானூற்று உரைகளும் பெரும்பாலும் இவ்வுரையைத் தழுவியே உள்ளன என்பது இங்குக் குறிக்கத்தக்கது. அரும்பதவுரை, அடியார்க்கு நல்லார் உரை ஆகியவற்றைக் கொண்டு உ.வே.சா. பதிப்பித்த சிலப்பதிகாரத்திற்கும் ஒரு தெளிவான

அகம் 400 பாடல்களுக்கும் ஒரு தெளிவான உரை வேண்டும் எனும் எண்ணப் பின்னணியில் அகநானூற்றைப் பதிப்பிக்க முயற்சிக்கிறார். இம்முயற்சியால் ந.மு. வேங்கடசாமி நாட்டார், கரந்தைக் கவியரசு இரா. வேங்கடாசலம்பிள்ளை ஆகியோரை அழைத்து நூல் முழுமைக்கும் உரை எழுதச் செய்து வெளியிடுகிறார். இன்றுவரை வெளிவரும் அனைத்து அகநானூற்று உரைகளும் பெரும்பாலும் இவ்வுரையைத் தழுவியே உள்ளன என்பது இங்குக் குறிக்கத்தக்கது.

உரை வேண்டும் என்ற நிலையில் அந்நூலை ந.மு.வே. உரையுடன் பதிப்பித்தார். மணிமேகலை, நாலடியார் ஆகிய நூல்களும் இந்த எண்ணப் பின்னணியில் உருவானவையே ஆகும்.

### பதிப்புகளில் காணலாகும் குறிப்புகள்

பாகனேரி தனைவசிய இளைஞர் தமிழ்ச்சங்கம் வழி பதிப்பித்து வெளியிடப்பெற்றுள்ள அனைத்து நூல்களிலும் பின்வரும் குறிப்புகள் காணப்பெறுகின்றன. அவை

1. பாகனேரி வெ.பெரி.பழ.மு. காசிவிசுவநாதன் செட்டியார் அவர்களால் வெளியிடப்பெற்றது.
2. பாகனேரி தனவைசிய இளைஞர் தமிழ்ச்சங்க வெளியீடாகத் திருவாளர் வெ. பெரி.பழ.மு. காசிவிசுவநாதன் செட்டியாரவர்கள் பொருளுதவியால் வெளியிடப்பெற்றது.
3. இவ்வெளியீட்டினால் கிடைக்கப்பெறுகிற ஆதாய மட்டும் இச்சங்கத்தின் ஆதரவிலுள்ள திருவள்ளுவர் நூல்நிலையத்திற்கு உரிமையாக்கப்பெறும்.
4. என் அருமை அன்னையர் திருவாட்டி வள்ளியம்மை ஆச்சி அவர்களின் நினைவுக்காக, இஃது அச்சிட்டு வெளியிடப்பெற்றது.

இக்குறிப்புகளைக் கொண்டு வெளிவரும் பாகனேரி தனவைசிய இளைஞர் தமிழ்ச்சங்க வெளியீடுகள் தமிழ்நூல்களை அனைவருக்கும் கிடைக்கச்செய்யும் நல்லெண்ணத்துடன் வெளிவந்துள்ளன.

இந்நூல்களை மறுபதிப்புகளாக வெளியிட்ட பதிப்பகங்கள் இந்நூல்களில் காணலாகும் முகப்புப் பக்கக் குறிப்பினை, "வெபெரிபழமு. காசிவிசுவநாதன் செட்டியார் அவர்களால் வெளியிடப்பெற்றது" என்ற குறிப்பினை நீக்கிவிட்டுப் பதிப்பிக்கின்றன. அதனால் அவரின் நூல்கள் மறுபதிப்பாக வரும்போது எந்தப் பதிப்பகம் அந்நூலை வெளியிடுகிறதோ அந்தப் பதிப்பகத்திற்கு உரியதாக மாறிவிடுகிறது. இத்தன்மையே இந்நூல்களைக் கண்டறிவதற்குச் சவாலாக அமைந்தது.

கலித்தொகை, அகநானூறு ஆகியன 2008, 2009ஆம் ஆண்டுகளில் சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தாரால் மறுபதிப்புச் செய்யப்பெற்றுள்ளன. அப்பதிப்புகளில் பாகனேரி தனவைசிய இளைஞர் தமிழ்ச்சங்க வெளியீட்டு நூல்களின் முகப்புப் பக்கக் குறிப்புக் காணப்பெறவில்லை. 2007ஆம் ஆண்டு தமிழ்மண் அறக்கட்டளை வழி வெளியிடப்பெற்ற அகநானூற்றிலும் அக்குறிப்பு காணப்பெறவில்லை.

ஒரு நூலுக்கான முதற்பதிப்பு கிடைக்காத காலக் கட்டத்தில் அந்நூல் பற்றிய செய்தியினை அறிய உதவுவது, அந்நூலின் மறுபதிப்பாகும். ஆனால் காசிவிசுவநாதன் செட்டியாரால் வெளியிடப்பெற்ற நூல்கள் பிற பதிப்பகங்கள் வழி மறுபதிப்பாக வெளிவரும்போது முதற்பதிப்புக் குறிப்புகளைக் காண இயலவில்லை. அகநானூற்றைப் பொறுத்தவரை 1968 வரை, "வெ.பெரி.பழ.மு. காசிவிசுவநாதன் செட்டியார் அவர்களால்" வெளியிடப்பெற்றது எனும் குறிப்பு காணப்பெறுகிறது. அதற்குப் பின்னர் வெளிவந்தவற்றில் இக்குறிப்பு காணப்பெறவில்லை. 2005இல் ராமையா பதிப்பகம் வெளியிட்ட சிலப்பதிகாரம் ந.மு.வே. உரையில் முகப்புப்பக்கக் குறிப்பு காணப்பெறவில்லை. ஆனால் பதிப்புரையில் காசிவிசுவநாதன் செட்டியார் பற்றிய குறிப்பு உள்ளது. இதுபோல் பதிப்புரையில் மட்டும் குறிக்கப்பெற்றாலும் கூடப் போதுமானது என்று எண்ணத்தோன்றுகிறது.

போக்குவரத்து வசதியற்ற, மிகவும் பின்தங்கிய சிற்றூரில் இருந்துகொண்டு பல்வேறு அமைப்புகளுடன் தொடர்பு கொண்டு துறைசான்ற வல்லுநர்களை அழைத்துவந்து அவர்கள் உதவியுடன் தமிழ் நூல்களைப் பதிப்பித்த பாகனேரி வெ.பெரி.பழ.மு. காசிவிசுவநாதன் செட்டியாரின் பதிப்புப்பணி போற்றத்தக்கதாகும்.



# இலந்தையடிகள் வித்வான் இரா.ஜ.சிவ. சாம்பசிவசர்மா



இரா. அறவேந்தன்

பாரதிதாசன் பல்கலைக்கழகம் பெரியார் உயராய்வு மையத்தின் துறைத்தலைவர். 112 ஆய்வுக் கட்டுரைகளையும் பதினைந்து ஆய்வு நூல்களையும் எழுதி வெளியிட்டுள்ளார்.

எட்டுத்தொகை நூல்களுள் ஒன்றான குறுந்தொகை 1915இல் முதன்முதலில் அச்சாக்கம் செய்யப்பெற்றது. இப்பணியை அரும்பாடுபட்டு, தன் தனி வாழ்க்கைச் சோகங்களை எல்லாம் தள்ளிவைத்துச் செய்தளித்த பெருந்தகையர் திருமாளிகைச் சௌரிப்பெருமாளரங்கன் (தி.சௌ. அரங்கன்) ஆவார். வயிற்றுக்குச் சோறு இன்றி வறுமை வாட்டியது ஒரு பக்கம்; இல்லத்தில் அடுக்கடுக்காக உயிர் இழப்புகள் மற்றொரு பக்கம்; அச்சகத்தார் செய்த துரோகம் மலையளவு. இவற்றுக்கு அப்பால் தமிழ் கற்று, குறுந்தொகை கற்று உரை எழுதிப் பதிப்பித்து அளித்த பெருமைக்கு உரியவர் தி.சௌ. அரங்கனார் ஆவார். பாக்களுக்கு உரை எழுதுகையில் பொருள் தெளிவு பெறா நிலையில் தன் இயலாமையை அப்படியே பதிவு செய்யும் நேர்மைமிகு அரிய பதிப்பாசிரியர் அரங்கனார்.

ஆனால், இவர்தம், பதிப்பாக்க முயற்சியில் தமிழ்ச்சான்றோர் உலகம் முழு மனநிறைவு கொள்ளவில்லை. இதனால், அடுத்த சில பத்தாண்டுகளில் இராமரத்னம் ஐயர் கலாநிலையம் எனும் வார இதழில் குறுந்தொகைப் பாக்கள் அனைத்திற்கும் உரை எழுதி முடித்தார் (1930). அருணாசல தேசிகர் குறுந்தொகைப் பாக்களை மூலம் மட்டும் எனும் நிலையில் பதிப்பித்து அளித்தார் (1933). இவர்களைத் தொடர்ந்து செந்தமிழ்ச் செல்வியில் விரிவான நிலையில் குறுந்தொகைப் பாக்களுக்கு உரை எழுதும் முயற்சியை மேற்கொண்டவர் 'இலந்தையடிகள் வித்வான் இராசசிவ. சாம்பசிவ சர்மா' ஆவார்.

சாம்பசிவ சர்மாவின் உரையாக்க முயற்சி 1934 வைகாசித் திங்கள் முதல் 1937 புரட்டாசித் திங்கள் வரையினதாக அமைகின்றது. சிலசில மாதங்கள் இடையீடுபட்டு 33 மாதங்களில் உரைப்பணி முற்றுப் பெற்றுள்ளது. குறுந்தொகையின் முதல் 50 பாடல்களுக்கும் கடவுள் வாழ்த்துப் பாவிற்கும் உரியதாகச் சர்மாவின் உரைப்பணி அமைகின்றது.

சர்மா தன்னுடைய பெயரை எழுதுவதில் ஒருமித்த மொழிக் கொள்கையைப் பின்பற்றவில்லை. 46, 48 ஆகிய பாடல்களுக்குரிய உரைப் பகுதிகள் வெளிவந்தபோது 'வித்வான் இரா.சிவ. சாம்பசிவசர்மா' என்றும், 47ஆம் பாடலுக்கான உரை வெளிவந்தபோது 'வித்வான் இரா.சிவ. சாம்பசிவன்' என்றும் தம் பெயரைக் குறிப்பிட்டுள்ளார். ஏனைய பாடல்களுக்கான உரைப்பகுதிகள் வெளிவந்த போதெல்லாம் 'இலந்தையடிகள் வித்வான் இராசிவ. சாம்பசிவன்' என்று விரிவாகப் பதிவு செய்துள்ளார். செந்தமிழ்ச் செல்வி இதழில் 'புதுக்கவி - Original Poetry' எனும் பகுதிக்குக் கவிதை எழுதும்போதெல்லாம் இலந்தையடிக் கவுணியன் இரா. சிவ. சாம்பசிவ சர்மன் என்றும் (சிலம்பு 13 பரல் 8) வித்வான் இரா. சிவ. சாம்பசிவன் என்றும் (சிலம்பு 14, பரல் 9) தம் பெயரைக் குறிப்பிட்டுள்ளார். சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம் 1940இல் நிகழ்த்திய குறுந்தொகை மாநாட்டில் நெய்தல் திணைப்பாக்கள் தொடர்பாக விரிவான நிலையில் கட்டுரை ஒன்றினை வித்வான் இரா. சிவ. சாம்பசிவசர்மா எனும் பெயரில் வாசித்துள்ளார். இதேபோன்றே சாம்பசிவசர்மா எனும் பெயரின் மொழிநிலையில் ஒருமித்த தன்மையின்றிச் சில நூல்களும் அக்காலத்தில் வெளிவந்துள்ளன. விவரம் வருமாறு:

| ஆண்டு | நூல் பெயர் | பதிவு முறை |
|---|---|---|
| 1933 | திருமாவளவன் (சோழர் குலக்கொழுந்து) | முகப்புப் பக்கத்தில் கவுணிய இரா.சிவ. சாம்பசிவசர்மா. முகவுரை இறுதியில் இரா.சிவ. சாம்பசிவசர்மா |
| 1947<br>1950 (மபதி) | ஆலமரத்துப் பொற்கிளி | இரா. சிவ. சாம்பசிவசர்மா |
| 1949<br>1950(மூபதி.) | தமிழ் வளர்த்த பெரியார்கள் | முகப்புப் பகுதியில் வித்வான் எனும் அடைமொழியுடனும் முகவுரையின் இறுதியில் அடைமொழியின்றி இராஜ. சிவ. சாம்பசிவசர்மா என்றும் பதிவாகி உள்ளது. |
| 1951<br>1952(இபதி) | உமாவாசகம் | முகப்புப் பகுதியில் வித்வான் எனும் அடைமொழியுடனும் முகவுரையின் இறுதியில் அடைமொழியின்றி இராஜ. சிவ. சாம்பசிவசர்மா என்றும் பதிவாகி உள்ளது. |
| 1950<br>(நாபதி) | கதை மணிக்கோவை | முகப்புப் பக்கத்தில் வித்வான் இராசசிவ. சாம்பசிவசர்மா என்றும் முகவுரையின் இறுதியில் ஆர்.எஸ். சர்மா என்றும் குறிக்கப் பெற்றுள்ளது. |
| 1930 | சிவாஜி | முன்னுரைப் பகுதியின் இறுதியில் இரா.சிவ.சர்மா என்றும் முகப்புப் பக்கத்தில் இரா.சிவ. சாம்பசிவசர்மா என்றும் பதிவாகி உள்ளது. |



சர்மாவின் பெயர் எழுதுமுறையில் காணவாகும் மொழிநிலை வேறுபாட்டை அவர்தம் பணியிடம் தொடர்பான பெயர் எழுதுமுறையிலும் காணமுடிகின்றது. சிவாஜி, திருமாவளவன் ஆகிய நூல்களில் சர்மாவின் பணியிடம் அர்ச் காபிரியேல் உயர்தரக் கலாசாலைத் தலைமைத் தமிழ்ப் பண்டிதர் என்று குறிப்பிடப் பெற்றுள்ளது. தமிழ் வளர்த்த பெரியார்கள், கதை மணிக்கோவை, உமாவாசகம் எனும் நூல்களிலும் குறுந்தொகை மாநாட்டுக் கட்டுரையிலும் கிறித்துவக் கல்லூரி உயர்நிலைப் பள்ளித் தமிழாசிரியர் என்று குறிப்பிடப்பெற்றுள்ளது. இப்பதிவு தமிழாசிரியர் சென்னை கிறிஸ்டியன் காலேஜ் ஸ்கூல், தமிழாசிரியர் கிறிஸ்டியன் காலேஜ் உயர் கலா சாலை, கிறித்தவக் கல்லூரி உயர்நிலைப்பள்ளி எனப் பல்வேறு மொழிநிலைகளில் அமைந்துள்ளது.

இதுவரை அளிக்கப்பெற்ற விளக்கங்கள் எல்லாம் சாம்பசிவசர்மா எனும் பெயரில் இருவர் வாழ்ந்தனரோ என்ற ஐயத்தை நீக்குவனவாக அமைகின்றன. அதாவது, சர்மா தம் பெயரை எழுதுவதிலும், பணியிடப் பெயரைக் குறிப்பதிலும் ஒத்த மனநிலை உடையவராக இல்லை என்பதனைத் தெளிவாக்குகின்றன. கிரந்த எழுத்துக்களையும் ஆங்கிலச் சொற்களையும் அப்படியே பயன்படுத்தும் சர்மாவின் மனநிலையில் தனித்தமிழ் இயக்க வளர்ச்சி ஒருவகையான பாதிப்பை உருவாக்கி இருத்தல் வேண்டும் என்பதனைத் தெளிவாக்குகின்றன.

இன்றைய நிலையில் சென்னை கிறித்தவக் கல்லூரி உயர்நிலைப் பள்ளியிலும், அர்ச் காபிரியேல் உயர்நிலைப் பள்ளியிலும் சர்மா தொடர்பான எவ்வகையான பதிவுகளையும் கண்டெடுக்க இயலவில்லை. கிறித்தவக் கல்லூரி உயர்நிலைப் பள்ளியில் உதவித் தலைமை ஆசிரியராகப் பணியாற்றி ஓய்வு பெற்றுள்ள தமிழாசிரியர் திருமிகு பி. செயராமன் அவர்கள் சாம்பசிவசர்மா 1960களில் பணி ஓய்வு பெற்றதை நினைவூட்டுகிறார். திரு. பி. ஜெயராமன் 1960-61இல் அப்பள்ளியில் பணியில் இணைந்தபோது சர்மா ஓய்வுபெறும் நிலையில் இருந்துள்ளார். அக்காலங்களில் ஓய்வு பெறும் வயது 60. நிர்வாகம் விரும்பினால் மேலும் இரண்டு ஆண்டுகள் பணியாற்றும் வாய்ப்பை அளிக்க இயலும். எனவே, 1960களில் சர்மாவின் வயது 62 ஆக இருத்தல் வேண்டும் என்று திரு. பி. செயராமன் குறிப்பிடுகின்றார். இந்தப் பணி ஓய்வுக்குப் பிந்தைய சர்மாவின் வாழ்வியல் பற்றியோ பிறப்பு, குடும்பம் பற்றியோ அறிய எவ்வகையான தரவுகளும் கிடைக்கப்பெறவில்லை.

சர்மா தாம் வாழ்ந்த காலத்தில் புகழ்வாய்ந்த தமிழ் அறிஞராகவே வாழ்ந்துள்ளார். 1940களில் புகழ்பெற்று இருந்த அறிஞர்கள் கதிரேசஞ் செட்டியார், ஔவை துரைசாமிப்பிள்ளை, இராசமாணிக்கனார் முதலானவர்களுடன்

சங்க இலக்கியப் பாக்களுக்கு உரை எழுதுதல், சங்க இலக்கியப் பாக்களை அடிப்படையாகக் கொண்டு ஆய்வுக்கட்டுரை எழுதுதல் எனும் நிலைகளுக்கு அப்பால் பள்ளி மாணவர்களுக்குப் பாடநூல் எழுதும் திறம் வாய்ந்தவராகவும் சர்மா திகழ்ந்துள்ளார். திறனாய்வாளர், உரையாசிரியர், பாடநூலாசிரியர் எனும் பரிணாமங்களுக்கு அப்பால் கவிதை இயற்றுவதிலும் வல்லவராகத் திகழ்ந்ததைப் புதுக்கவிகள் பகுதியில் வெளிவந்துள்ள கவிதைகள் தெளிவாக்குகின்றன.

ஆய்வுரை வழங்கும் அளவிற்கு அவர்தம் புலமைத்திறம் உயர்ந்து இருந்துள்ளது. சங்க இலக்கியப் பாக்களுக்கு உரை எழுதுதல், சங்க இலக்கியப் பாக்களை அடிப்படையாகக் கொண்டு ஆய்வுக்கட்டுரை எழுதுதல் எனும் நிலைகளுக்கு அப்பால் பள்ளி மாணவர்களுக்குப் பாடநூல் எழுதும் திறம் வாய்ந்தவராகவும் சர்மா திகழ்ந்துள்ளார். திறனாய்வாளர், உரையாசிரியர், பாடநூலாசிரியர் எனும் பரிணாமங்களுக்கு அப்பால் கவிதை இயற்றுவதிலும் வல்லவராகத் திகழ்ந்ததைப் புதுக்கவிகள் பகுதியில் வெளிவந்துள்ள கவிதைகள் தெளிவாக்குகின்றன.

சாம்பசிவசர்மா குறுந்தொகை உரை எழுதுவதற்கு முன்பு எழுதப்பெற்ற குறுந்தொகை உரைகள் இரண்டும் தெளிவுரை என்ற நிலையில் அமைந்தவை. சர்மாவின் உரையோ விளக்க வுரையாக அமைகின்றது. உ.வே.சா. குறுந்தொகை விரிவான நிலையில் உரை எழுதுவதற்கு முன்னர் அத்தகு முயற்சியை மேற்கொண்ட பெருமை சர்மாவிற்கே உரியது. சர்மாவின் உரைப்பகுதியில் காணலாகும் உட்கூறுகளாக 23ஐக் குறிப்பிடலாம். அவை :

1. தலைப்பிடுதல். 2. புலவர் பெயர் குறித்தல் 3. பாட வேறுபாடு குறித்தல் 4. அருஞ்சொற்பொருள் அளித்தல் 5. பாடலைத் தொடர் தொடராகப் பகுத்துப் பொருள் அளித்தல் 6. மாற்று விளக்கம் அளித்தல் 7. வரலாறு வழக்காறு குறித்தல் 8. இலக்கணக் குறிப்பு அளித்தல் 9. உள்ளுறை இறைச்சி குறித்தல் 10. மெய்ப்பாடு குறித்தல் 11. பயன் குறித்தல் 12. திணை குறித்தல் 13. சான்று காட்டல் 14. கூற்று வரையறுத்தல் 15. திறனாய்வு நூல் கருத்துகளை எடுத்தாளுதல் 16. சொற்களை அடைப்பிற்குள் அளித்தல் 17. பழங்குடி, பிற பண்பாட்டுடன் ஒப்பிடல் 18. ஆய்வுத் தன்மையுடன் அமைத்தல் 19. ஒற்றைச் சொல்லுக்கு விரிவான விளக்கமளித்தல் 20. பிறர் உரையை எடுத்தாளுதல் 21. தம் உரைப் பகுதியுடன் தொடர்புபடுத்தல் 22. இலக்கண அடிப்படையில் விளக்குதல் 23. பாடல்சொல்லின் மொழி நிலையைக் குறித்தல்

இவற்றில் பெரும்பாலானவை சர்மாவால் அறிமுகம் செய்யப்பெற்றவை : உ.வே.சா.வால் தொடர்ந்து பின்பற்றப் பெற்றவை.

இவ்வளவு புலமையும் ஆற்றலும் நிறைந்த அறிஞர் சர்மா தம் உரைப்பணியை முழுமையாக்காமல் 50 பாடல்களுடன் நிறைவு செய்துள்ளார். இதற்கு வெளிப்படையான காரணங்களை அறிய முடியவில்லை என்றாலும், உ.வே.சா.வின் குறுந்தொகைப் பதிப்பு சர்மா உரை எழுதிக்கொண்டு இருந்த காலகட்டத்திலேயே வெளிவந்ததால் (1937) தம் உரைப்பணியைத் தொடராமல் விட்டிருக்க வாய்ப்பு உண்டு எனலாம். 1940இல் உ.வே.சா.வின் பதிப்புப் பணி பற்றிச் சர்மா உயர்வாகக் குறிப்பிடுவதைக் குறுந்தொகை மாநாட்டுக் கட்டுரையில் காண முடிவதும் இவண் நினைக்கத்தக்கது.



# வேங்கடராஜுலு ரெட்டியார்: சில நினைவுகள்



பண்டித வித்வான்
தி.வே. கோபாலையர்

சென்ற இருபதாம் நூற்றாண்டில் வாழ்ந்த தமிழ்ப்பெரும் புலவருள் ஒருவர் வே. வேங்கடராஜுலு ரெட்டியார் ஆவார். 1893இல் தோன்றிய இப்பெருமகனார் அரிதின் முயன்று தமிழை முறையாகக் கற்றவர்; பிற்காலத்தில் ஆங்கிலம், வடமொழி, தெலுங்கு, கன்னடம், மலையாளம் ஆகிய மொழிகளையும் முறையாகக் கற்று உண்மையான பன்மொழிப் புலவராகத் திகழ்ந்தவர்.

சிதம்பரம் மீனாட்சி கல்லூரியில் உ.வே.சா. ஐயர் அவர்கள் முதல்வராய் இருந்த காலத்து, 1925இல் அவரால் தம் கல்லூரி ஆசிரியருள் ஒருவராக அமர்த்தப்பட்டவர் ரெட்டியார் அவர்கள். எழுபது பிராயத்தைத் தாண்டிய ஐயர் அவர்கள் தாம் பாரதம் ஒன்றுமே பாடஞ் சொல்லுவார். எஞ்சிய பாடங்கள் ஏனைய ஆசிரியர்களாலேயே நடத்தப்பெற்றன.

பெரும்பாலும் இலக்கண நூல்களைப் பாடம் சொல்லும் வாய்ப்பு ஆண்டில் இளையராகிய ரெட்டியார் அவர்களுக்கே வழங்கப்பட்டது. ரெட்டியாருடைய கூர்த்த மதியைக் கண்டு ஐயரவர்கள் பெரு மகிழ்வுறுவார்.

ரெட்டியார் ஒருநாள் நன்னூல் விருத்தியில் 'ஒன்றே இருதிணை தன்பால் ஏற்கும்' என்ற நூற்பாவினைப் பாடம் சொல்லிக் கொண்டிருந்தார். தொல்காப்பியனார் காலத்தில் பன்மை விரவுப்பெயர் எங்ஙனம் இருந்தது என்பதனையும் பிற்காலத்துப் பன்மை விரவுப்பெயர் எவ்வாறு விரிவடைந்தது என்பதனையும் விளக்கி, தம் காலத்து வழக்காற்றை ஒட்டி நன்னூலார் நூற்பா அமைத்த சிறப்பினையும், அதற்குச் சங்கர நமசிவாயர் வரைந்த நேரிய உரையினையும் எடுத்துக்காட்டி, சிவஞானமுனிவர், தமிழ் பேச்சுவழக்கில் இருப்பதால் காலந்தோறும் விரிவடையும் இயல்பினது என்பதனை மனங்கொள்ளாமல், நன்னூல் குறிப்பிடும் செய்தியும் ஒன்றாகவே இருத்தல் வேண்டும் என்று உட்கொண்டு, சங்கரநமசிவாயர் உரைக்குமேல் அவர் வரைந்த விளக்கம் நன்னூலாருக்கோ, தொல்காப்பியனாருக்கோ உடன்பாடன்று என்பதனையும் விளக்கமாகத் தெரிவித்துப் பாடம் சொல்லிய திறத்தைச் சற்றுத் தூரத்தில் அமர்ந்திருந்த ஐயரவர்கள் செவிமடுத்துப் பெரிதும் மகிழ்ந்தவாறு இருந்தார்.




தொல்காப்பியனார் தம் காலத்தில் கள் ஈறு உயர்திணைப் பன்மைக்கு ஏலாது என்ற கருத்தான் பன்மை விரவுப்பெயர் பல்லோர் படர்க்கைக்கு ஏலாது என விடுத்து ஆண்பால், பெண்பால், ஒன்றன்பால், பலவின்பால் என்ற நான்கு பாற்களுக்குமே உரியது என்று கொண்டார். ஆனால் நன்னூலார் காலத்துக்கு முன்பே கள் ஈறு பலர்பாலுக்கும் பயன்படுத்தப்பட்டதால் அவர் காலத்தில் பன்மை விரவுப்பெயர் பலர்பாலுக்கும் பலவின் பாலுக்கும் உரியதாயிற்று. ஆகவே, கோதைகள் இவர், கோதைகள் இவை - என்ற எடுத்துக்காட்டு நன்னூலார் காலத்துக்கு ஏற்குமேயன்றி, தொல்காப்பியனார் காலத்துக்கு ஏலாது என்று அவர் தந்த விளக்கத்தைச் சுவைத்துப் பயனுறும் மனங்கொள்ளாது, சைவப்பெருந்துறவியாகிய சிவஞான சுவாமிகளுடைய பேரறிவை ரெட்டியார் குறை கூறுகிறாரே என்ற எண்ணமே மேலிட்ட மாணாக்கர் சிலர் சிதம்பரத்தில் வாழ்ந்த செப்பறை சுவாமிகள் என்ற சைவத் துறவியாரிடம் ரெட்டியார் சிவஞானசுவாமிகளைப் பற்றிக் குறைவாகப் பேசுகிறார் என்று தெரிவித்து அவரைக் கண்டித்துவைக்கச் செப்பறை சுவாமிகளுடைய உதவியை நாடினர்.

தமக்குச் சைவத்திலிருந்த முறுகிய பற்றினால் சிவஞான முனிவரைத் தெய்வத் திருவவதாரமாகக் கருதி வந்த செப்பறை சுவாமிகள், ரெட்டியாரைப் பற்றி வேறு எதுவும் அறியாதவராய் அவர் வைணவர் என்பது ஒன்றனை அறிவிக்கப்பட்டவர் ஆதலின், சைவ சமயத்தைக் குறை கூறும் வைணவர் என்று ரெட்டியாரைத் தவறாக உட்கொண்டு, சைவ சமயத்தில் ஆழ்ந்த பற்றுடைய ஐயரிடம் சொல்லி ரெட்டியாரை நன்கு கண்டிக்கலாம் என்ற எண்ணத்தோடு மீனாட்சி கல்லூரிக்கு வந்து, ஐயர் அவர்களைக் கண்ட அளவில் "சாமி! இங்கு ரெட்டி ஒருவன் ஆசிரியராக இருக்கிறானாமே? அவன் நம் சிவஞான சுவாமிகளைப் பற்றித் தவறாக வகுப்பில் உளறுகிறானாமே? அவனையெல்லாம் ஆசிரியராக வைத்துக்கொண்டால் தங்கள் பெயர் கெட்டுவிடும்" என்றாற்போலத் தம் மனத்தில் தோன்றியவற்றை யெல்லாம் பேசி முடித்தார். ஐயர் அவர்களுக்குத் துறவிகளிடம் எப்பொழுதும் பெருமதிப்பு உண்டு. ஆனால், அன்று, ஐயர் அவர்களுக்குச் செப்பறை சுவாமிகளிடம் அளவு கடந்த கோபம் ஏற்பட்டு விட்டது. "ஏன் ஐயா, ரெட்டியார் உங்கள் சுவாமிகளைப் பற்றி என்ன குறை கூறினார்?" என்று வினவினார். செப்பறை சுவாமிகள் "சிவஞான சுவாமிகள் எழுதியவை தவறு என்கிறான்" என்றார். ஐயருக்குச் சினம் ஏற்பட்டது. "உங்கள் சிவஞான சுவாமிகள் கடவுளா? சர்வக்ஞரா! அவர் எழுதியவை எல்லாம் வேதவாக்கியங்களா? அவர் தவறாக ஒன்றனையும் எழுதமாட்டாரா? எத்தனையோ இடங்களில் அவர் மகாமேதாவிகளாகிய நச்சினார்க்கினியர் முதலியவர்கள் கூறியதை மறுத்திருக்கின்றாரே? அவர்களைவிட இவர் அறிவில் விஞ்சியவரா? இவர் எழுதியன யாவும் உண்மைக்குப் புறம்பானவை என்று முனிவருடைய பாயிர விருத்தியைச் சண்முகனார் மறுத்திருப்பதை நீர்

கேள்விப்படவில்லையா? ரெட்டியார் ஆண்டில் இளையராயினும் நல்ல ஆராய்ச்சித் திறனோடு மிக நுணுக்கமான செய்திகளை அழகாகப் பாடஞ் சொல்வதைக் கேட்டு நான் நாள்தோறும் மகிழ்ந்து கொண்டிருக்கிறேன். இனி அவரைப்பற்றி ஏக வசனத்தில் பேசுவதனையும், குறை கூறுவதனையும் விட்டுவிடுங்கள். உங்களுக்குச் சம்பந்தம் இல்லாத இத்தகைய செயல்களில் தலையிடுவதை இன்றோடு விட்டுவிடுங்கள்" என்று சற்று உரத்த குரலில் கடுமையாகப் பேசிச் செப்பறை சுவாமிகளை வெளியேற்றினார். ஐயர் அவர்களுக்குக் கோபம் வந்ததனையும், அவர் கடுமையாகப் பேசியதனையும் அதற்கு முன் தாம் பார்த்ததே இல்லை என்று அக்கல்லூரியில் ரெட்டியார் அவர்களோடு தாமும் ஆசிரியராகப் பணியாற்றி வந்த எங்கள் ஆசிரியர் புருஷோத்தம நாயடு அவர்கள் எனக்கு இந்நிகழ்ச்சியைக் கூறி, ரெட்டியாருடைய ஆராய்ச்சி வன்மையைப் பெரிதும் பாராட்டினார். ரெட்டியார் எழுதியுள்ள தொல்காப்பிய எழுத்ததிகார ஆராய்ச்சி, இலக்கணக்கட்டுரைகள், கபிலர், பரணர் என்ற நூல்கள் ஆகியவற்றை அவசியம் படித்துப் பல நுணுக்கமான செய்திகளை அறிந்து கொள்ள வேண்டும் என்று எனக்கு நல்லுரை நல்கினார்.

திருவையாற்று அரசர் கல்லூரி பழைமையான மொழிக் கல்லூரிகளில் ஒன்று. அண்மைக் காலம் வரை பெரும் புலவர்கள் அங்கு ஆசிரியர்களாகவும் முதல்வர்களாகவும் அமர்ந்து தமிழையும், வடமொழியையும் சிறந்த முறையில் பயிற்றியுள்ளனர். கல்லூரியில் உள்ள திருவள்ளுவர் மாணவர் கழகத்தின் ஆண்டுவிழா பிப்ரவரித் திங்களில் நிகழும். அதற்குச் சிறந்த புலவர்கள் தலைமை தாங்குவதற்கும் சிறப்புச் சொற்பொழிவு ஆற்றுவதற்கும் அழைக்கப்பெறுவர். பெரும்பாலும் சொற்பொழிவாளர்களுடைய பேச்சுக்கள் இலக்கணச் செய்தி பற்றியவையாகவே அமைந்திருக்கும். 1938ஆம் ஆண்டு தலைமை தாங்கக் கார்மேகக்கோனாரும், சொற்பொழிவாற்ற ரெட்டியாரும் அழைக்கப்பட்டனர். 1925இல் மீனாட்சி கல்லூரியில் ஆசிரியராகப் பணியாற்றி வந்த ரெட்டியார் அவர்கள், இரண்டாண்டுகளில் ஐயர் அவர்கள் அக்கல்லூரியை விடுத்துச் செல்ல தாமும் அதனை விடுத்துச் சென்னைப் பல்கலைக்கழகத்தில் உதவி விரிவுரையாளராகப் பதவி ஏற்று, 1948 வரையில் அங்குத் தொடர்ந்து பணியாற்றி ஓய்வு பெற்றார். கார்மேகக்கோனார் அமெரிக்கன் கல்லூரியில் தமிழ் ஆசிரியர். ரெட்டியார் அவர்கள் ஆண்டு விழாவில் 'இறைச்சி என்ற தலைப்புப் பற்றிச் சிறந்த எடுத்துக்காட்டுகளுடன் நீண்டதோர் சொற்பொழிவாற்றினார். இறைச்சி என்பது ஐவகை உள்ளுறைகளுள் ஒன்று. தம்முடைய பேச்சுக்களிடையே இவ்விறைச்சியைப் பற்றி விரிவாக அறிவதற்கு வடமொழியில் உள்ள தொன்யாலோகம் என்ற நூல் பெரிதும் துணை செய்யும் எனவும், அதனைத் தமிழாக்கம் செய்து தமிழ்மொழிக்கு ஏற்ற வகையில் அதனைப் பயன்படுத்திக் கொள்ள வேண்டும் எனவும், இறைச்சியைப் பற்றி முழுமையாக அறிவதற்கு அந்நூல் துணை தேவையே எனவும் குறிப்பிட்டபோது, தலைவர் இடைமறித்து "எனக்கு வடமொழி தெரியாது. நான் இறைச்சியைப் பற்றிய செய்திகளைத் தமிழ்நூல்களின் துணைகொண்டு முழுமையாக அறிந்தவன் அல்லன் என்று நினைக்கின்றீரா? என்று வினவ, ரெட்டியார் அவர்கள் "தாங்கள் வடமொழியையும் பயின்று அங்குள்ள தொன்யாலோகம் முதலிய நூல்களையும் கற்றிருந்தால் எந்த அளவு இறைச்சியைப் பற்றி அறியக்கூடுமோ அந்த அளவு இப்பொழுது அறிந்துகொள்ளாமல்தான் இருக்கின்றீர்கள் என்று நினைக்கிறேன்" என்று அமைதியாக விடையிறுத்தார். தலைவர் தம் முடிவுரையில் இறைச்சியைப் பற்றி இருவர் கருத்துக்களையும் இலக்கிய ஏடுகளில் கட்டுரையாக எழுதித் தரம் காணலாம் என்று குறிப்பிட்டார். கரந்தைத் தமிழ்ச்சங்க வெள்ளிவிழா இதழில் ரெட்டியார் அவர்கள் இறைச்சி பற்றிய தம் கருத்துக்களை அரிய கட்டுரை வடிவில் வெளியிட்டுள்ளார். அக்கட்டுரை அறிஞர் பலருக்குப் பேருதவியாக உள்ளது. தமிழ் மொழிக்கு ஏனைய மொழிகளையும் பயின்று அவற்றில் காணப்படும் தமிழுக்கு ஏற்ற செய்திகளாக உள்ளவற்றை ஆக்கம் தரும் வகையில் இணைத்து அணி செய்ய வேண்டும் என்பது ரெட்டியார் கருத்தாகும். இக்கருத்தை அடிப்படையாகக் கொண்டே அவருடைய பன்மொழி அறிவை அவர் தமிழின் ஆக்கத்துக்குப் பயன்படுத்தியவர் ஆவார்.

1944ஆம் ஆண்டு அவர் மீண்டும் திருவள்ளுவர் மாணவர் கழக ஆண்டு விழாவிற்குச் சிறப்புச் சொற்பொழிவாளராக அழைக்கப்பட்டார். அதற்கு முதல் ஆண்டு விழாவில் சொற்பொழிவாற்ற வந்த ஞா. தேவநேயப்பாவாணர் குற்றியலுகரம் என்ற தலைப்பில் பேச வந்து சுமார் 25 பக்க அளவுள்ள கட்டுரையை வெகு நேரம் படித்து, இவ்வாறு குற்றியலுகரம் உயிரீறாக இருக்கவும் ரெட்டியார் அதனை மெய்யீறு என்று இலக்கணம் உணராமல்

பேசுகிறார் என்று குறிப்பிடவே, அங்கு இல்லாத ஒருவரைப் பற்றிப் பேசுவது தக்கதன்று என்று கூட்டத்திலிருந்து குரல்கள் புறப்பட்டன. எங்கள் ஆசிரியர் நாயுடு அவர்கள் பாவாணர் மறுநாளும் அங்குத் தங்கிக் குற்றியலுகரத்தைப் பற்றி ஒரு முடிவான கருத்தை விவாதித்து முடிவு செய்து கொள்ளலாம் என்று கூறினார். தலைமை தாங்கிய ச.சோ. பாரதியார் அவர்கள் "குற்றியலுகரம் உயிரீறோ, மெய்யீறோ, நமக்குக் கவலையில்லை. தொல்காப்பியனார் அதனைச் சார்பெழுத்தென்று கூறியுள்ளார். எனவே, அது முதலெழுத்தன்று" என்ற தம் முடிவுரையில் கூறி இரு திறத்தவரையும் சமாதானம் செய்து வைத்தார். பாவாணர் மறுநாள் தங்க வசதியில்லை என்று கூறி உடனே புறப்பட்டு விட்டார். பாவாணர் கருத்தைச் செவிமடுத்தவர்கள் குற்றியலுகரம் பற்றி ரெட்டியார் கருத்தையும் நன்கு விளங்கிக் கொள்ள வேண்டும் என்ற கருத்தால் 1944இல் ரெட்டியாரைக் குற்றியலுகரம் பற்றிப் பேசுமாறு அழைத்தனர். திங்கட்கிழமையன்று ஆண்டுவிழா. ஞாயிற்றுக்கிழமை காலையிலேயே திருவையாற்றுக்கு வந்த ரெட்டியார் அவர்கள் எங்கள் ஆசிரியர் நாயுடு அவர்கள் இல்லத்தில் தங்கியிருந்தார். நாடோறும் ஆசிரியர் இல்லத்துக்குச் சென்று வரும் இயல்புடைய நான் அன்று காலை ஒன்பது மணி அளவில் அவர் இல்லத்துக்குச் சென்றேன். ரெட்டியார் அவர்கள் நீராடி நெற்றியில் நாமம் தரித்துச் சிற்றுண்டியை முடித்த நிலையில் இருந்தார். சற்றுத் தொலைவில் நின்று கொண்டிருந்த என்னை அன்போடு 'தம்பி' என்று அழைத்து யான் படித்துக்கொண்டிருந்த வகுப்பைப் பற்றியும் நடத்தப்படும் பாடங்களைப் பற்றியும் வினவினார். அப்பொழுது வித்துவான் மூன்றாமாண்டு வகுப்பில் பயின்று கொண்டிருந்த யான் எங்களுக்கு நடத்தப்பட்ட பாடங்களைப் பற்றிக் குறிப்பிட்டுப் பெரும்பான்மையான பாடங்கள் முடிக்கப்பட்டு விட்ட செய்தியைக் கூறினேன். சேனாவரையம் நன்கு பயின்றுள்ளாயா என்று வினவி, அந்நூலிலுள்ள நுணுக்கமான நூற்பாக்கள் சிலவற்றிற்குச் சேனாவரையர் யாது விளக்கம் கூறியுள்ளார் என்பதனையும் அவர் கூற்றுப் பற்றி என் கருத்து என்ன என்பதனையும் ஒன்றன்பின் ஒன்றாகத் தொடர்ந்து வினவினார். நச்சினார்க்கினியரிடத்தில் பெரிதும் ஈடுபாடு கொண்ட யான், சேனாவரையர் கூறிய விளக்கங்களை எல்லாம் குறிப்பிட்டு அந்நூற்பாக்களுக்கு நச்சினார்க்கினியர் உரைத்த விளக்கங்களே எனக்கு உகப்பானவை என்பதனையும் தெரிவித்தேன். தேர்வுக்கு ஓர் உரையே இருப்பினும் ஒவ்வொரு நூற்பாவிற்கும் ஏனைய உரையாளர்களுடைய உரையையும் ஒப்பு நோக்கிப் பயிலுதலே தக்கது எனவும், யான் விருப்பு வெறுப்பின்றி எல்லா உரைகளையும் ஆராய்ச்சிக் கண்ணோடு நோக்கி உண்மை காண வேண்டும் என்றும் அறிவுறுத்தினார். மலையாளத்திலுள்ள கேரள பாணினீயம் என்ற நூலின் சிறப்புக்கள் சிலவற்றை எடுத்துக்கூறித் தமிழாராய்ச்சிக்கு எல்லாத் திராவிட மொழிகளிலும் ஓரளவு அறிவைத் தேடிக் கொள்ள வேண்டும் என்ற செய்தியை வற்புறுத்தி உரைத்தார். ஆனால் எளியேனுக்கு ஏனைய திராவிட மொழிகளைக் கற்றல் வேண்டும் என்ற ஊக்கமும் எழவில்லை; கற்றற்குரிய வாய்ப்பும் கிட்டவில்லை.

மலையாளத்திலுள்ள கேரள பாணினியம் என்ற நூலின் சிறப்புக்கள் சிலவற்றை எடுத்துக்கூறித் தமிழாராய்ச்சிக்கு எல்லாத் திராவிட மொழிகளிலும் ஓரளவு அறிவைத் தேடிக் கொள்ள வேண்டும் என்ற செய்தியை வற்புறுத்தி உரைத்தார். ஆனால் எளியேனுக்கு ஏனைய திராவிட மொழிகளைக் கற்றல் வேண்டும் என்ற ஊக்கமும் எழவில்லை; கற்றற்குரிய வாய்ப்பும் கிட்டவில்லை.

திங்களன்று மாலை ரெட்டியார் அவர்கள் தம் சொற்பொழிவில், தனக்கெனப் பிறப்பிடம் என்பது ஒன்று இன்றித் தான் சார்ந்த எழுத்தின் பிறப்பிடம் எதுவோ அதனையே தன் பிறப்பிடமாகக் கொள்வதனால் குற்றியலுகரம் சார்பெழுத்தாயிற்று எனவும்,

மெய்யீ றெல்லாம் புள்ளியொடு நிலையல்
(தொல். எழுத்து புண - 2)
குற்றிய லுகரமும் அற்றென மொழிப (,3)

என்பதனால் குற்றியலுகரம் மெய்யீறு போலப் புள்ளி பெறும் எழுத்து எனவும்,

புள்ளி யீற்றுமுன் உயிர்தனித் தியலாது
மெய்யொடும் சிவணும் அவ்வியல் கெடுத்தே
(தொல். எழுத்து. புண - 36)

என்பதனால் புள்ளியீற்றுள் ஒன்றாகிய குற்றியலுகரமும் மெய்யீறு போல் உயிர் ஏற இடம் கொடுக்கும் எனவும்,

அல்லது கிளப்பினும் வேற்றுமைக் கண்ணும்
எல்லா இறுதியும் உகரம் நிறையும்
(தொல். எழுத்து. குற் - 3)

என்பதனால் தொடர்மொழிக்கண் குற்றியலுகரம் முற்றியலுகரமாகவே ஒலிக்கப்படுதலின் முற்றியலுகரம் ஆகிவிடும் எனவும்,

வல்லொற்றுத் தொடர்மொழி
வல்லெழுத்து வருவழித்
தொல்லை இயற்கை நிலையலும் உரித்தே
(தொல். எழுத்து. குற் - 4)

என்பதனால், வன்றொடர் மொழிக் குற்றியலுகரம், வருமொழி முதலில் வல்லெழுத்துவரின், முற்றியலுகரமாகாது தன் பழைய நிலையாகிய குற்றியலுகர நிலையிலேயே இருக்கும் எனவும்,

தொல்காப்பியனார் யாண்டும் குற்றியலுகரம் கெட்டு முடியும் என்று குறிப்பிடவில்லை எனவும்,

நூறு என் கிளவி ஒன்றுமுதல் ஒன்பாற்கு
ஈறுசினை ஒழிய இனவொற்று மிகுமே
(தொல். எழுத்து. குற் - 66)

என்ற இடத்து ஒழிய என்பதற்குக் கெட என்பது பொருளன்று, தான் நிலைத்திருக்க என்பதே பொருள். குற்றியலுகரம் கெட்டதாயின் நூறு+மூன்று நூற்று மூன்று எனவும், நூறு+நான்கு என்பது நூற்று நான்கு என்றும் இருத்தல் வேண்டும் நிலை ஏற்பட்டுவிடும். எனவே முதற்சூத்திர விருத்தியில் சிவஞானமுனிவர் இந்நூற்பாவினைக் காட்டி இதன்கண் உகரம் கெடும் என்று கூறுதல் பொருந்தாது எனவும் குறிப்பிட்டுச் செய்யுளியலில் குற்றியலுகரம் ,முற்றியலுகரம் இரண்டும் நேர்பு நிரைபு அசைகளை உண்டாக்கவும் தேமா புளிமா என்ற சீர்களை உண்டாக்கவும் பயன்படும் இடங்கள் பலவற்றையும் எடுத்துக்காட்டுகளால் விளக்கி, குற்றியலுகரத்தை உயிரீறு என்று கொள்ள முடியாது; அஃது உயிரிலிருந்து தோன்றித் தன் நிலையில் மெய்யீறு போல உயிரேற இடங்கொடுப்பது ஆதலின் 'உயிர் வரின் உக்குறள் மெய்விட்டு ஓடும்' என்ற நன்னூலார் கருத்து தொல்காப்பியத்துக்கு முரண்பட்டது என்பனவற்றை அமைதியான நிலையில், எந்தவிதக் குறிப்பேடுகளின் உதவியும் கொள்ளாது, யார் மனமும் நோகுமாறு எந்தச் சொல்லையும் பயன்படுத்தாது தம் நீண்ட சொற்பொழிவைச் சுவைபட ஆற்றினார். இடையே ஆங்கனம், யாங்கனம் என்பனவே பழைய சொற்கள்; கனம் என்பது தனம் என்பதன் திரிபு; தனம் என்பது தன்மையை உணர்த்தும். எனவே ஆங்கனம் அத்தன்மை என்ற பொருளிலும், யாங்கனம் எத்தன்மை என்ற பொருளிலும் வருவன.

'ஆங்கனம் விரிப்பின் அளவு இறந்தனவே'
பாங்குற உணர்ந்தோர் பற்றுங் காலை'
(தொல்.பொருள். செய் - 49)

'யாங்கனம் ஒத்தியோ வீங்குசெலல்
மண்டிலம்'
(புறநா - 8)

'ஆங்கனம் ஆகிய ஆயிழை கையால்
பூங்கொடி நல்லாய் பிச்சை பெறுகென'
(மணிமேகலை - (10: - 128, 129)

என்றாற் போன்ற இடங்களிலெல்லாம் ககரமே இட்டு எழுதுதலே நேரிது என்பது தொடை நோக்கி உணரப்படும் எனவும், அங்ஙனம் எங்ஙனம் போன்ற சொற்கள் பிற்கால வழக்கின எனவும், அவற்றைப் பார்த்தே ஆங்ஙனம் யாங்ஙனம் என்ற திரிந்த சொற்கள் உண்டாயிருக்கக் கூடும் எனவும் விளக்கிக் காட்டினார்.

தம் புலமையில் அழுத்தமான நம்பிக்கையுடைய இப்பெருமகனார், தம் மேலே பணியாற்றும் சான்றோர்களை அணுகி அவர்களுடைய பரிவைப் பெற ஒருபோதும் விரும்பியதில்லை. தாம் உதவி விரிவுரையாளராகவே இறுதிவரை பணிபுரிந்தார். அப்பொழுதிருந்த துணைவேந்தரிடம் சற்று வேண்டியிருந்தால் இவருக்குப் பல ஆண்டுகள் தொடர்ந்து வேலை நீட்டம் கிட்டியிருக்கும். அச்செயற்கு இவர் மனம் ஒருப்படாமையால் தம் 55ஆம் அகவையிலேயே பல்கலைக்கழகத்திலிருந்து ஓய்வு பெற்றார். பிரமச்சாரியாகவே இறுதிவரை வாழ்ந்த இப்பெருமகனார் பாடப் புத்தகங்கள் எழுதுவதிலேயே தம் பிற்பட்ட ஆண்டுகள் பலவற்றைச் செலவிட்டார்.

யசோதர காவியத்துக்கு ஔவை சு. துரைசாமிப் பிள்ளையவர்கள் ஓர் உரை எழுதினார். அந்நூல் சைவ சித்தாந்தக் கழகத்தாரால் வெளியிடப்பட்டு வித்துவான் இடைநிலைத் தேர்வுக்குப் பாடப்புத்தமாகவும் குறிப்பிடப்பட்டது. சமண சமயத்தைச் சார்ந்த அந்நூலுக்குச் சமண சமயத்தை ஒட்டிய கொள்கை விளக்கங்கள் தரப்பெறவில்லை. இதனை உட்கொண்ட சமணப் பெரியார் ஒருவர் ரெட்டியாரை அணுகி அவர் துணைகொண்டு சமணசமய நெறி பிறழா உரை ஒன்றை எழுதி வெளியிட்டார். அப்பெரியாருக்கு ரெட்டியார் அவர்கள் செய்திகளைச் சொல்லிக்கொண்டிருக்கும் பல நேரங்களில் எனக்கேற்பட்ட ஐயங்களை நீக்கிக் கொள்ள, அப்பொழுது திருப்பனந்தாள் கல்லூரியில் ஆசிரியனாகப் பணிபுரிந்து கொண்டிருந்த நான், ரெட்டியாரை அணுகும் நிலை ஏற்பட்டது. பக்கத்தில் ஒருவர் கேரள

பாணினியம் பற்றிய ஐயங்களை அறுத்துக்கொள்ள அமர்ந்திருப்பார். மற்றொருவர் சப்த மணிதர்ப்பணம் பாடம் கேட்க வந்திருப்பார். அனைவரிடமும் இன்முகம் காட்டித் தாம் இருமலால் துன்புற்றுக் கொண்டிருந்த அந்நிலையிலும் ஐயங்களை அவரவர் உளங்கொளப் போக்கும் திறனும், நினைவாற்றலும் அப்பெருமகனாரிடம் குடிகொண்டிருந்தன.

விருப்பு வெறுப்பின்றி எதையும் ஆராய்ச்சிக் கண்கொண்டு அணுகும் இவருடைய பேராற்றலும், சமண சமய நூலாகிய ஸ்ரீபுராணத்தை அச்சமயத்தவரும் ஒருமுகமாகப் போற்றும் வகையில் பதிப்பித்த இவர் திறனும் எதிர்காலப் புலவர்களுக்கு வழிகாட்டிகளாக அமையும்.

இவருடைய தொல்காப்பிய எழுத்ததிகார ஆராய்ச்சியும், திராவிட மொழியின் மூவிடப்பெயர் என்ற ஆராய்ச்சி நூலும் மொழிநூல் வல்லார்க்குப் பெரிதும் உதவுவன. படர்க்கையின் அடிப்படை எழுத்து ஆ. முன்னிலையின் அடிப்படை எழுத்து ஈ, தன்மையின் அடிப்படை எழுத்து ஏ - என்ற கருத்தைத் தாம் திராவிட மொழிகள் பலவற்றிலும் கொண்ட புலமைத் திறத்தால் நிறுவிய இவர் ஆராய்ச்சி பெரிதும் பாராட்டுதற்குரியது.

இவருடைய இலக்கணக் கட்டுரைகளில் குற்றியலுகரம், அசை, சீர் என்பன பற்றிய மிக நுணுக்கமான முன்னோர் கருத்துக்கள் விளக்கப்பட்டுள்ளன.

இவர் இயற்றிய கபிலர், பரணர் என்ற ஆராய்ச்சி நூல்கள் புலவர்களுடைய பாடல்களை ஆய்வு முறையில் அணுகுவாருக்குச் சிறந்த வழிகாட்டிகளாகும்.

இவர் இறைச்சி, வியங்கோள் முதலிய தலைப்புகளில் எழுதி வெளியிட்ட சிறு நூல்கள் அரிய கருவூலங்களாகும்.

இவர் 1963இல் வெளியிட்ட நுண்பொருள் விளக்கம் என்ற அரிய சொல்லிலக்கணம் பற்றிய செய்திகளின் தொகுப்பாகிய நூல் தமிழ்ப்புலவர் ஒவ்வொருவரிடமும் இருக்க வேண்டிய சிறந்த நூலாகும். பல்லாண்டுகள் செய்த ஆராய்ச்சியின் பயனாக அந்நூல் வெளிவந்துள்ளது. இதன்கண் காணப்படும் கட்டுரைகள் பலவும் அவ்வப்போது தனித்தனி இதழ்களில் வெளிவந்தவை. ரெட்டியார் அவர்கள் தொல்காப்பிய எழுத்ததிகார ஆராய்ச்சி எழுதியதுபோலச் சொல்லதிகார ஆராய்ச்சி எழுதாது விடுத்த குறையை இத்தொகுப்பு நூல் ஓரளவு நிறைவு செய்துள்ளது எனலாம்.

'இன்னான்' - தொல். சொல். வேற் - 13 என்பதன் பொருளைப் பாணினியச் சூத்திரங்களைக் கொண்டு நிறுவி இளம்பூரணர் குறிப்பிட்டதே ஆசிரியர் கருத்து என்று சுட்டியுள்ளார் ரெட்டியார்.

ஏவல் - வியங்கோள் - என்பன பற்றிய தொல்காப்பியர் கருத்தினை ஏனைய திராவிட மொழிகளையும் துணையாகக் கொண்டு விளக்கியுள்ளார்.

வடநூல் கடலை நிலைகண்டுணர்ந்த சேனாவரையர் இயைபின்மை நீக்கலும், பிறிதின் இயல்பு நீக்கலும் என விசேடித்தல் இருவகைத்து என்று குறிப்பிட்டுள்ள செய்தி விசேடனத்தின் வகையன்று; ஏகாரத்தின் பொருளே என்று விளக்கியுள்ளார்.

உந்து ஈற்றுச் சொற்கள் பல முறை அடுக்கியே வரும்; அவை வினைமுற்றாயினும் பெயரெச்சமாயினும் யாண்டும் பல முறை அடுக்கியே வருதல் இல்லை. காலமொடு வரும் உம்மை இடைச்சொல் எண்ணுப்பொருளில் வரும்வழி உந்து என்றாகும் என்பதே ஆசிரியர் கருத்து என்பதனை இடையியலில் எண்ணுப் பொருளைக் குறித்து வரும் சொற்களைக் குறித்து இலக்கணம் கூறுமிடத்தே உந்து என்பதனைக் குறிப்பிட்டிருத்தலால் அறியலாம் என்ற கருத்தை நிறுவியுள்ளார். பின் உந்து என்ற சொல் அமைப்பையும் விளக்கியுள்ளார்.

இங்ஙனம் பழுத்த புலமையும், எதனையும் கூர்ந்து நோக்கும் நுண்ணறிவும், எடுத்த செயலை விருப்பு வெறுப்பின்றிச் செயல்பட்டு முடிக்கும் திறனும், தம்மை வேண்டிவந்தவர் எல்லோருக்கும் இன்முகத்தோடு ஐயங்களைப் போக்கி, அவர்களை மகிழ்வோடு செல்லுமாறு விடுக்கும் அருந்திறனும், யாரிடமும் பரிந்துரையை நாடா ஆண்மையும், மனத்துப் பட்டதனை பிறர் கருத்துப் பற்றி கவலையுறாமல் குறிப்பிடும் பெருமிதமும், காட்சிக்கு எளிமையும், நேரிய உயரிய வாழ்க்கையும் கொண்ட ரெட்டியார் அவர்கள் சென்ற நூற்றாண்டின் தொடக்கத்தில் வாழ்ந்த அரசஞ்சண்முகனாரை அடுத்து எண்ணத்தக்க இலக்கணப் பெரும் புலவராவர் என்பது.

இத்தகைய பெருமகனாரைக் காண்டற்கும் அவரிடம் உரையாடி ஐயங்களைத் தீர்த்துக் கொள்ளுதற்கும் எற்கு வாய்ப்பளித்த பால் வாழ்க மன்னோ!

[**குறிப்பு**: இக்கட்டுரை 'பண்டித வித்வான் தி.வே.கோபாலையர் கட்டுரைகள்-I' (தமிழ் மண் பதிப்பகம்) என்ற நூலில் இருந்து தேவை கருதி தரப்பட்டுள்ளது.]

# அறிஞர் நீ. கந்தசாமிப் பிள்ளை



ஈரோடு தமிழன்பன்

சாகித்திய அகாடமி விருது பெற்ற 'வணக்கம் வள்ளுவ' உட்பட 44 கவிதைத் தொகுப்புகளும் 21 உரைநடை நூல்களும் வெளிவந்துள்ளன. அண்மை வெளியீடுகள்: 'நெருதா கவிதைகள்' (மொழிபெயர்ப்பு), 'ஜப்பானிய ஹைக்கூ கவிதைகள் குறிப்புகளுடன்' (மொழிபெயர்ப்பு), 'கனவின் சில பக்கங்கள்', 'கதை முடியவில்லை'.

இருபதாம் நூற்றாண்டில் வாழ்ந்த தமிழ்ப் பேரறிஞர்களுள் குறிப்பிட்டுச் சொல்லத் தகுந்த ஒருவர் பள்ளியகரம் நீ. கந்தசாமிப் பிள்ளை. அவர் கரந்தைத் தமிழ்ச் சங்கத்தின் செயலாளராவும், அச்சங்கம் நடத்தி வந்த தமிழ்ப்பொழில் இதழின் ஆசிரியராகவும் பணியாற்றியவர். தம் காலத்தில் வாழ்ந்த மிகச்சிறந்த தமிழ் அறிஞர்களோடும் அமைப்புகளோடும் தொடர்பு கொண்டிருந்தார். அடிப்படையில் அவர் ஒரு நிலக்கிழார்; கட்டடங்களை எடுத்துக்கட்டும் ஒப்பந்தகாரர். ஆவல் மீதூரப் பெற்று இவர் திரைப்படத்துறையில் ஈடுபட்டதும் உண்டு.

தமிழ்மொழியின் தக்க அறிஞரிடம் பாடம் கேட்டதால் வந்த புலமைக்கல்விச் செழிப்பும், தாமாகப் படித்துத் தேர்ந்த பன்முகப் பரிமாணம் கொண்ட அறிவுவளமும் உடையவர். ஆங்கிலம், கிரேக்கம், பிரெஞ்சு, வடமொழி ஆகிய மொழிகளிலும் தேர்ச்சி பெற்றவர்.

கடந்த நூற்றாண்டில் ஐம்பதுகளில் தமிழ்ப்புலமைக் கல்வி பெறுவதற்காகக் கரந்தைத் தமிழ்ப்புலவர் கல்லூரியில் சேர்ந்த எனக்கு அவரை அறிந்துகொள்கிற வாய்ப்பும், அவரோடு பழகுகிற வாய்ப்பும் நேர்ந்ததை மிகப்பெரிய பேறாக நான் கருதுகிறேன். அவருடைய இல்லத்துக்கே சென்று அவரைப் பலமுறை காண்கிற வாய்ப்பையும் அவர் கல்வி வளத்தை அறியும் வாய்ப்பையும் எனக்குக் கரந்தைத் தமிழ்ச்சங்கம் வழங்கியது.

தஞ்சையையொட்டிய பள்ளியகரத்தில், கரந்தையிலிருந்து காவேரியாற்றைக் கடந்து சென்றதும் சட்டென்று நாம் காலடிபடுகிற இடத்தில் இருப்பது "பள்ளியக்கிரகாரம்". இதன் "பள்ளியகரம்" என்ற தமிழாக்கம் நீ.க. காலத்தின் விளைவு என்று நாம் கருதவேண்டும்.

மிகப்பெரிய வளமனை மாடியில் மிக நீண்ட அகன்ற கூடம் முழுக்க வரிசை வரிசையாக அணிவகுக்கும் புத்தகப்பேழைகள்; தமிழிலும் ஆங்கிலத்திலுமாக மிகப்பெரியனவும் இடைத்தரமானவும் சிறியனவும் சின்னஞ் சிறியனவுமாக எண்ணிலடங்காப் புத்தகங்கள்; எல்லாவற்றிலுமே அவரின் கண்கள் பட்டிருக்கின்றன என்பதற்குத் தடயங்கள் உண்டு. பருத்ததும் உயரம் குறைந்ததுமான உடலைக் கொண்ட நீ.க. அவர்கள் நினைத்த போதெல்லாம் மாடியேறுவதைக் குறைத்துக் கொள்வதற்காகவோ என்னவோ மாடியின் கீழேயும் மிகப்பெரிய அறையில் புத்தகப் பேழைகளும் அவர்க்குரிய மேசை நாற்காலிகள் முதலியனவும் உண்டு.



நான் அவரை முதன்முதலில் சந்தித்தபோது 'உன்னுடைய ஊர் எது' என்பதை முதல் வினவாக வைத்தார். சென்னிமலை என்று நான் சொன்னதும் ஏன் அந்தப் பெயர் வந்தது என்று அடுத்த வினாவை வைத்தார். மலைகளுக்கெல்லாம் சென்னி போன்றது என்று சொன்னதும், "நீ சொல்லுக்குப் பொருள் சொல்லுகிறாய், காரணம் இருக்குமா? இல்லையா? அதைப் பார்க்க வேண்டாமா? என்றார். நான் சென்னிமலைத் தலபுராணம் ஒன்று உண்டு என்றேன். அதை எழுதியவர் எனக்குத் தாத்தா முறையினர் என்று நான் சொன்னதும்," நல்லது. அடுத்தமுறை புராணத்தைக் கொண்டு வா என்றார். ஏன் இதைக் குறிப்பிடுகிறேன் என்றால் அவருக்கு எந்த ஊரை எடுத்துக் கொண்டாலும் அந்த ஊருக்குக் கதை இருக்கும் என்ற கருத்துண்டு.

அவரே கூடப் 'பள்ளியகரப் பழங்கதை' என்ற நூலொன்றை எழுதி, அதிலுள்ள செய்யுள்களுக்கு எல்லாம் உரையும் வரைந்துள்ளார். அங்கதத் தன்மை வாய்ந்த அந்நூல் படிப்பதற்கு மிகவும் சுவை பயப்பது.

பள்ளியகரப் பழங்கதை என்பது, தலபுராணம் என்னும் தலைப்பில் புனையப் பெற்றவை. பெரும்பாலும் பொருளோடு புணராப் பொய்மொழிப் புணர்ப்புகளாகவே இருப்பதை நயமான முறையில் நையாண்டி செய்து எழுதப்பட்ட ஒரு சிறு பனுவல். நூலாசிரியர் பெயர் மெய்யறியா முனிவர் என்று சொல்லி அதற்கு உரைகாரர் (உரைகாரர் கயவா முனிவர்) தரும் விளக்கம் எள்ளல் சுவையின் எல்லைக்கே இட்டுச் செல்லுமாறு காட்டியிருப்பது, நீ.க. பிள்ளையின் புலமைத் திறத்தையும் அங்கத ஆற்றலையும் காட்டும். (நூலாசிரியரும் உரையாசிரியரும் ஒருவரே; அவர்தான் நீ.க)

இனி விளக்கம் பார்க்கலாம். அந்த முனிவருக்கு மெய்யறியா முனிவர் என்று பெயர்வரக் காரணம், அவர் யோக நிலையில் இருக்கும்போது தமக்கு மெய் (உடம்பு) என்று ஒன்றிருப்பதே அவருக்குத் தெரியாதாம். மெய்-என்றால் உண்மை என்று ஒரு பொருள் உண்டல்லவா? அதனால் யாரேனும் இவர் உண்மையை அறியாத முனிவர் என்று சொன்னால் அது பெருங்குற்றமாகப் போய்விடுமாம். அப்படிச் சொல்கிறவர் நரகத்திற்குத்தான் போவார்கள் என்று இப்படித் தமிழ் இலக்கிய இடைக்காலப் படைப்புகள் உரைகள் எனக் காணப்படுவனவற்றை எடை போடுகிற முயற்சியையும் இலக்கியச் சுவையோடு நீ.க. நிகழ்த்துகிறார். 'பள்ளியகரப் பழங்கதை' முப்பதுகளில் வெளிவந்த தமிழ்ப்பொழில் இதழில் இடம் பெற்றுள்ளது. இது தனி நூலாகவும் வெளியிடப்பட்டது.

அடுத்தமுறை புலவர் கல்லூரி மலருக்காகக் கட்டுரை ஒன்று தர வேண்டும் என்று நீ.க. பிள்ளையிடம் கல்லூரி

முதல்வர் வேண்டுகோள் வைத்தார். யாராகிலும் வாருங்கள் நான் சொல்லச் சொல்ல எழுதிக் கொள்ளலாம் என்று நீகபிள்ளை சொல்ல, யார் பள்ளியகரம் செல்வது என்று பேராசிரியர்களிடையே கலவரம் தரும் வினா எழுந்தது. காரணமில்லாமல் இல்லை; தம்மிடம் வருபவர்களுக்கு எல்லாம் எதிர்பாராத வினாக்களை வைத்து, தேர்வு நடத்தக் கூடியவர் அவர். எனவே பேராசிரியர்கள் தம்முள் ஒருவர் செல்வதைக் காட்டிலும் தகுதியான ஒரு மாணவனை அனுப்பி வைக்கலாம் என்று முடிவு செய்து, என்னை அதற்குத் தேர்ந்தெடுத்தனர்.

அச்சத்தோடும் என்னென்ன கேட்பார் என்ற தவிப்போடும்தான் நான் பள்ளியகரத்திற்குச் சென்றேன். அவர் அப்போது ஒரு ஆங்கிலப் பேராசிரியரிடம் பேசிக் கொண்டிருந்தார். என்னைத் தம் பக்கத்தில் இருக்கும் நாற்காலியில் உட்காரும்படி சைகை செய்தார். வந்திருந்த ஆங்கிலப் பேராசிரியர் ஜான் ரஸ்கின் எழுதிய நூலிலிருந்து ஒரு ஐயம் தெளிவாக்கும்படி நீ.க. பிள்ளையிடம் கேட்டார். உடனே நீ.க. பிள்ளை நீங்கள் மாடிக்குச் சென்று குறிப்பிட்ட எண்ணுள்ள பேழையைச் சொல்லி இந்த அடுக்கிலிருக்கும் இந்த நூலை எடுத்து இந்தப் பக்கத்தைப் பார்த்து வாருங்கள் என்றார். வந்திருந்தவருக்கும் எனக்கும் ஒரே அதிர்ச்சி. எப்படி இந்த மனிதர் இவ்வளவு துல்லியமாகப் பேழையில் புத்தக வரிசை எண், பக்கம், பத்தி, வரி என்றெல்லாம் சொல்ல முடிகிறது. அவர் மாடிக்குப் போனார்.

உனக்கு அவரசமில்லையே உட்கார் என்றார். இங்கேயே உணவு அருந்திவிட்டுக் கட்டுரையுடன் திரும்பிப் போகலாம் என்று கூறிவிட்டார். மாடியிலிருந்து வந்த பேராசிரியர் நீகவிடம் தெளிவு பெற்று அவர் சொன்ன புத்தகத்தின் பகுதிகளைப் படியெடுத்துக் கொண்டு திரும்பிப் போனார்.

அப்புறம் நீ.க. பிள்ளையிடம் எனது முறை. அப்பொழுது புலவர் கல்லூரியில் இரண்டாமாண்டு மாணவன் நான். எங்களுக்குப் பாடமாக இருந்த 'அழகர்கிள்ளைவிடுதூது' என்னும் சிற்றிலக்கியத்தை அப்படியே சொல்லு பார்ப்போம் என்றார். எனக்கும் ஓரளவு மனப்பாட ஆற்றல் அப்போது உண்டு. சொல்லிக் கொண்டே வந்தேன். நிறுத்தச் சொன்னார். முழுவதும் சொல்வாயா என்றார். இல்லை கொஞ்சம் மனப்பாடம் பாக்கி. இருபத்து நான்கு வரிகள், என்றேன். இருபத்து நான்கு வரிகளுக்கு உனக்கு நேரம் கிடைக்கவில்லையா என்றார். தயக்கத்தோடு ஐயா மலர்க் கட்டுரை... என்றேன்.

சரி சொல்லுகிறேன் என்று தொடங்கி மொழிபெயர்ப்புக் கலை பற்றி அப்படியே மளமளவென்று கருத்துகளைத் தொடர்ந்து சொல்லிக் கொண்டே வந்தார். நான் எழுதிக் கொண்டே வந்தேன். மொழிபெயர்ப்பு வரலாற்றின் தோற்றம், வளர்ச்சி, பன்முகத்தன்மை எல்லாவற்றையும் நிரல்பட நேரிய தொடர்களில் சொல்லிக் கொண்டே வந்தார்.

அப்பாசியாக்கள் காலத்தில் மொழிபெயர்ப்புக்கென எப்படிச் செலவு செய்தார்கள் என்பதைச் சுவைபடச் சொல்லிக் கொண்டே வந்தார். இடையிடையே இலக்கண விதிகளாகக் கருதத்தக்கனவற்றைத் தாமே வெண்பாவாக என்னிடம் சொல்லி, எழுதிக்கொள்ளச் சொன்னார். அவ்வப்போது இடையில் நிறுத்தி உனக்குப் புரிகிறதா இல்லையா? புரியவில்லை என்றால் மாற்றி நான் எளிமையாக, வெண்பாவிலேயே சொல்லி விடுவேன் என்றார்.

இப்படி அவர் சொல்லச் சொல்ல நான் எழுதிய கட்டுரைதான் "நாட்டுப்புற இடுகாட்டில் எழுதப்பெற்ற இரங்கற்பாக்கள்". என்னும் தலைப்பில் அவர் மொழிபெயர்த்த தாமஸ் கிரே என்பாரது 'An elogy written with a country church yard' என்னும் புகழ்பெற்ற சிறுகாப்பியத்திற்கான தமிழ்மொழிபெயர்ப்பின் முன்னுரையாக அமைந்தது. இந்நூல் சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தால் (1961ஆம்ஆண்டு) வெளியிடப்பட்டுள்ளது.

நீ.க.பிள்ளை புதுவையில் பிரெஞ்சு அரசாங்கத்தின் சார்பில் நிறுவப்பெற்ற இந்தியக் கலை ஆய்வுக் கழகத்தில் பணியாற்றிய காலம் குறிப்பிடத்தக்கது. 13.06.1963 அன்று இந்தியாவின் பிரதமர் பண்டித நேரு அந்த நிறுவனத்திற்கு முற்பகல் 11.30 மணிக்கு வந்து சேர்ந்தார். பண்டித நேருவிடம் தமிழின் அருமை பெருமைகள் குறித்து அவர் உரையாடிய திறன் நேருவையே மகிழ்ச்சியிலும் வியப்பிலும் ஆழ்த்தியது. அப்பொழுது "சங்கச்சொல் அகராதித் தொகுப்பிற்கு அடிப்படையான ஆக்கப் பணிகளை நான் இங்கு செய்து வருகிறேன்" என்று ஆய்வு நெறிப்படியான முயற்சிகளை ஆவணங்களோடு எடுத்துக்காட்டி விளக்கி நீ.க. பிள்ளை நேருவிடம் கூறினார். அது அவரிடம் தொடர்ந்து உரையாடும் ஆவலை நேருவுக்கு ஏற்படுத்தியது. மிக முறையாகச் செய்து கொண்டு இருக்கிறீர்கள் என்று சொன்ன நேரு எவ்வளவு தமிழ்ச்சொற்கள் இருக்கின்றன என்று ஆர்வத்தோடு கேட்டார்.

அதற்குப் பதிலளித்த நீ.க. பிள்ளை எங்களிடம் முறையாகத் தொகுக்கப் பெற்ற அகராதிகள் இல்லை என்றாலும் நாங்கள் கணக்கெடுத்திருக்கிற வகையில் சங்க இலக்கியம் என்பது 51,708 வரிகள் என்றும், 3,13,788 சொற்களைக் கொண்டது

> பதிப்புமுறை நுட்பங்களில் மிகச் சிறந்த ஆற்றல் பெற்றவர் நீக. பிள்ளை என்பதைக் கம்பராமாயணப் பதிப்பும் நிலைமையும் என்ற தலைப்பில் அவர் எழுதித் தமிழ்ப் பொழிலில் வெளிவந்த கட்டுரை நமக்கு உணர்த்துவதோடு பதிப்பு முயற்சிகளில் ஈடுபடுவாருக்கு ஒரு கையேடு போல உதவ வல்லதாகவும் உள்ளது.

என்றும் நாங்கள் அளவிட்டிருக்கிறோம் என்றார். அடுத்த கேள்வியாக ஆங்கிலத்தில் எத்தனை சொற்கள் இருக்கின்றன, தெரியுமா என்று கேட்டார் பண்டிதநேரு. சற்றும் தாமதிக்காமல் நீக. பிள்ளை நேருவுக்கு சொன்னார். 1928 ஆம் ஆண்டுக் கணக்குப்படி ஏறக்குறைய ஐந்து இலட்சம் சொற்கள்; இப்பொழுது சிறிது கூடி இருக்கலாம். வியப்பின் விளிம்பில் இருந்த நேரு அது என்ன 1928ஆம் ஆண்டுக் கணக்கு என்றார். ஆக்ஸ்போர்டு பல்கலைக்கழக ஆங்கிலப் பேரகராதி முற்றுப்பெற்ற ஆண்டு 1928 என்பதை மனதில் வைத்துக்கொண்டு சொல்கிறேன்" என்றார் நீக.

இந்த உரையாடலின் தொடர்ச்சியில் சொற்களின் மிகை குறை என்பதை வைத்து மொழியின் வளத்தை மதிப்பிடலாமா என்ற கேள்வியை நேருவிடம் எதிர்கொண்ட நீகபிள்ளை, சொற்களின் பயில்வு எண் (Frequency of words) என்னும் கோட்பாட்டை விளக்கி தமிழ்வளத்தை நேருவிடம் நிலைநாட்டினார்.

பதிப்புமுறை நுட்பங்களில் மிகச் சிறந்த ஆற்றல் பெற்றவர் நீ.க.பிள்ளை என்பதைக் கம்பராமாயணப் பதிப்பும் நிலைமையும் என்ற தலைப்பில் அவர் எழுதித் தமிழ்ப் பொழிலில் வெளிவந்த கட்டுரை நமக்கு உணர்த்துவதோடு பதிப்பு முயற்சிகளில் ஈடுபடுவாருக்கு ஒரு கையேடு போல உதவ வல்லதாகவும் உள்ளது. இது குறித்த விரிவான பதிப்புமுறைத் திட்டத்தை அவர் ஆங்கிலத்தில் எழுதி அண்ணாமலைப் பல்கலைக்கழகத்திற்கு அனுப்பி வைத்தார். அது இக்கட்டுரையின் பின் இணைப்பாக உள்ளது. எதனால் பதிப்பு முயற்சிகளில் அவர்மனம் ஈடுபட்டது என்பதை அறிய தமிழ்ப்பொழில் கட்டுரையிலிருந்து ஓர் பக்கத்தை இங்குச் சுட்டிக்காட்டலாம்.

"இரண்டு ஆண்டுகளுக்கு முன்னர், என் அன்பர் ஜே.எம். சோமசுந்தரம் பிள்ளையவர்கள், கம்பராமாயணக் கட்டளைப் பதிப்பு ஒன்றை வெளியிடும் முயற்சியில் அண்ணாமலைப் பல்கலைக்கழகம் ஈடுபட்டிருக்கும் நற்செய்தியை எனக்குத் தெரிவித்தார்கள். நீண்ட நாட்களாக இவ் விருப்பமும் இதில் ஓரளவு முயற்சியுமுடைய எனக்கு, பெருமகிழ்ச்சியும் நன்முறையில் இது வரவேண்டும் என்ற ஆசையும் உண்டாயின. கம்பராமாயணப் பாட்டுகளையும், பா வேறுபாடுகளையும் பற்றிப் பல பெரியோர்கள் சுமார் இருபதாண்டுகளாகத் தமிழ்நாட்டில் பேசி வருவதையும், அவர்கள் பாடங்களையும் பாட்டுக்களையும் கொள்ளுவதும் தள்ளுவதுமான முறைகளையும், பாடங்களையும் திட்டம் செய்து மேற்கொள்ளுவதற்காக அறிவுடை உலகம் வகுத்துள்ள நெறிகளில் ஒன்றையும் கையாளாது தங்கள் எஃகுச் செவியும் அஃகிய உணர்வும் கண்ட இவையே கம்பர் பாடல் என ஆணையிட்டு வரையறை செய்து, தப்பும் தவறுமாகச் சில பாடல்களைச் செய்துகொண்டு முழக்கம் செய்வதும் அவ்வாறு முழக்கம் செய்பவர்களுக்கும், அவர்களைப் பின்பற்றுபவர்களுக்கும், வேறு பல துறைகளால் ஏற்பட்டுள்ள செல்வாக்கையும் பெருமையையும் கொண்டு பேசிவருவதையும் கண்டு உளமழுங்கி வரும் எனக்கு, ஒருக்கால் அப்போலி முறைகள், அண்ணாமலைப் பல்கலைக் கழகப் பதிப்பு முயற்சியிலும் புகுந்து விடுமோவென ஐயம் பிறந்தது. இந்நிலையில் வாளாவிருத்தல் தமிழ்மொழிக்குத் தீங்கிழைத்த பழியைச் சேர்ப்பிக்கும் என்று உளச்சான்று தூண்ட உடனே நொடியும் காலந் தாழ்த்தாது, கம்பராமாயணப் பதிப்பின் நோக்கமும் பதிப்பிக்கும் முறைகளும் எவ்வாறு அமைய வேண்டுமென்று பலவாண்டுகள் சிந்தித்துக் கழகத் துணைவேந்தர், அறிஞர் சண்முகம் செட்டியார் அவர்களுக்கு 15.10.1952இல் எழுத்து மூலமாகத் தெரிவித்தேன். அவர்கள் 29.11.1952இல் எழுதிய மறுமொழியில், என் கருத்துக்கள் போற்றத்தக்கனவாயிருக்கின்றன என்றும், ஆவன செய்யும் வண்ணம், என் கடிதத்தை, ஆராய்ச்சி பகுதி உதவித் தமிழ்ப் பேராசிரியர் திரு. ஜி. சுப்பிமணியப் பிள்ளையிடம் அனுப்பியிருப்பதாகவும் தெரிவித்தார்கள்" (தமிழ்ப் பொழில், 1954, சூலை) .

அந்நீண்ட கட்டுரையில் பல்வேறு விதமான பதிப்புத்துறைக்கு தேவையான கருத்துக்களை எடுத்து வைத்துள்ளார். இது குறித்து ஆங்கிலத்திலும் அவர் அண்ணாமலைப் பல்கலைக்கழகத்திற்குச் செயல்முறை திட்டத்தை நிரல்படுத்தித் தந்திருக்கும் பாங்கு இன்றும் நூல்களைப் பதிப்பிக்க முன் வருபவர்கள் கருதத்தக்கவையாக உள்ளன.



# மறைக்கப்பட்ட ஆளுமைகள்: திருமதி மீனாட்சியம்மாள் நடேசய்யரை முன்னிறுத்தி...!




லெனின் மதிவானம்
ஆய்வாளர்,
இலங்கை.


மனித சமூக வளர்ச்சிப் போக்கிலே ஒவ்வொரு சமூகமும் காலத்தின் தேவைக்கேற்றவகையில் இயக்கங்களையும் அறிஞர்களை புத்திஜீவிகளை சமூக செயற்பாட்டாளர்களையும் உருவாக்கிக் கொள்கின்றது. காலத்தின் தோற்றுவாயிகளான இயக்கங்கள், அதனடியாக உருவாகின்ற ஆளுமைகள் காலத்தின் உற்பத்தி பொருளாக மட்டுமன்று காலத்தை உட்குவிப்பவையாகவும் அமைந்திருக்கின்றன. தம் காலத்து உள்ளியல்புகளை உறுதியாகப் பிரதிப்பலிக்கும் ஆளுமைகளே காலத்தைக் கடந்து நிற்கும் ஆற்றலினையும் பெற்றுவிடுகின்றன. இவ்வகையான சமூக ஆளுமைகள் தமது விசேட ஆற்றல், செயற்திறன் போன்றவற்றால் சமூக வளர்ச்சிக்கு விசைகொடுத்துத் தகுந்த பங்களிப்பையும் வழங்கிச் செல்கின்றனர்.

அந்தவகையில் இருபதாம் நூற்றாண்டின் ஆரம்பத்தில் இலங்கையின் மத்திய மலைநாட்டில் தோன்றிய சிந்தனையாளர், சமூகச் செயற்பாட்டாளர் வரிசையில் தனித்துவமான முத்திரையைப் பதித்துச் சென்றவர் திருமதி மீனாட்சியம்மாள் நடேசய்யர். ஆற்றல்மிக்க அரசியல்வாதியாக, கவிஞராக, பத்திரிக்கையாளராக, வெளியீட்டாளராக இருந்ததுடன் களத்தில் இறங்கிச் செயற்பட்ட வீரருமாவார். இவர் குறித்த கட்டுரைகள் அவ்வப்போது வெளிவந்துள்ளன என்ற போதினும் அவை அம்மையாரின் ஆளுமையை முழுமையாக வெளிக்கொணரவில்லை என்றே கூறவேண்டும்.

மீனாட்சியம்மாளும் அவரது கணவர் கோ. நடேசய்யரும் ஒரே அரசியல் அணியில் செயற்பட்ட அபூர்வமான தம்பதிகளாவர். 1905 ஆம் ஆண்டளவில் இந்தியாவில் வங்கப் பிரிவினைக்கான போராட்டம் நடந்தது. வங்கப் பிரிவினையை ஆட்சேபித்துத் தீவிரவாதிகளின் பகிஷ்காரம், சுதேசிய இயக்கம் ஆகியவற்றின் தாக்கம் இந்தியாவெங்கும் பரவியது. அத்தகைய தேசிய உணர்வினால் உந்தப்பட்டு அரசியலுக்குள் நுழைந்தவர் நடேசய்யர். இளமைக்காலம் முதலாகவே வணிகத் துறையில் ஆர்வமும் தேர்ச்சியும் பெற்றிருந்த நடேசய்யர் "வர்த்தகமித்திரன்'' என்ற சஞ்சிகையை நடத்தியுள்ளார். அச்சஞ்சிகைக்கு ஆதரவு தேடியே இலங்கை வந்தார். இவரது இலங்கை வருகை அவரது வாழ்வில் முக்கிய திருப்புமுனையாக அமைந்தது.

இருபதாம் நூற்றாண்டின் ஆரம்பத்தில் இலங்கையின் மத்திய மலைநாட்டில் தோன்றிய சிந்தனையாளர், சமூகச் செயற்பாட்டாளர் வரிசையில் தனித்துவமான முத்திரையைப் பதித்துச் சென்றவர் திருமதி மீனாட்சியம்மாள் நடேசய்யர். ஆற்றல்மிக்க அரசியல்வாதியாக, கவிஞராக, பத்திரிக்கையாளராக, வெளியீட்டாளராக இருந்ததுடன் களத்தில் இறங்கிச் செயற்பட்ட வீரருமாவார்.

பிரித்தானிய காலனித்துவ ஆட்சியின் போது தமது காலனித்துவத்திற்குட்பட்ட நாடுகளில் பெருந்தோட்டப் பயிர்ச் செய்கையை அறிமுகம் செய்தனர். அப்பயிர்ச் செய்கையை மேற் கொள்வதற்குத் தேவையான தொழிலாளர்களைத் தமது காலனித்துவத்திற்கு உட்பட்ட நாடுகளிலிருந்து இறக்குமதி செய்தனர். இவ்வாறு ஒப்பந்த பிணைப்புச் செய்து கொண்டு தென்னிந்தியாவிலிருந்து இலங்கையில் வந்து குடியேறிய தொழிலாளர்களும் அவர்களுடன் இணைந்து வந்த வர்க்கமுமே 'மலையகத் தமிழர்கள்' என்ற பதம் கொண்டு அழைக்கப்படுகின்றனர். மலையகத் தொழிலாளர்கள் சந்திக்க நேர்ந்த துன்ப துயரங்களைக் கண்டு கொதிப்படைந்த நடேசய்யர் அம்மக்களின் விடுதலைக்கான பயணத்தில் தம்மையும் அர்ப்பணித்துக் கொண்டார். மலையக மக்களின் துன்பம் தோய்ந்த வாழ்வை எண்ணி அவர்களிடையே விடுதலையுணர்வை ஏற்படுத்தியதுடன் அம்மக்களை ஸ்தாபனமயப்படுத்தும் பணியிலும் ஈடுபாடு கொண்டு உழைத்தார். இவ்வாறு சமூக வாழ்வையும் தமது சொந்த வாழ்வையும் ஒன்றாகச் சேர்த்து நேசிக்கின்ற பண்பினை நாம் நடேசய்யரில் காண்கின்றோம். இத்தகைய செயற்பாடுகளுக்கு ஆதர்சனமாக அமைந்த நடேசய்யரின் காதலியே இரண்டாவது மனைவி மீனாட்சியம்மாள் ஆவார். இவர் உடுமலை முத்துசாமி கவிராயர் பரம்பரையில் வந்தவர். இவர் சாதியடிப்படையில் முதலியார் வம்சத்தைச் சேர்ந்தவர் என்பதாக அறிய முடிகின்றது(தகவல்: அந்தனி ஜீவா). நடேசய்யர் பிராமணச் சாதியைச் சார்ந்தவர். அவ்வகையில் இவ்விருவரின் இணைவு ஒரு கலப்புத் திருமணத்தின் ஊடாகவே நடந்தேறியது. இவ்விடத்தில் இவர்களது திருமண வாழ்வு எவ்வாறு சமுதாயம் சார்ந்ததாக அமைந்திருந்தது என்பதனை நோக்குவதற்கு இந்தியப் பழங்குடி மக்களிடையே செயற்பட்டுப் பாரிய புரட்சிக்குத் தலைமை தாங்கிய சாம்ராவ் பாருலேகர் - கோதாவரி தம்பதிகளின் வாழ்கையுடன் ஒப்புநோக்குவது பொருத்தமானதாக அமையும். சமூக வாழ்வில் நேர்மையுடனும் சமூகவுணர்வுடனும் செயற்படுவோர்களுக்கு;பீ சாதி ஒரு தடையாக இருக்காது என்பதற்கு இவர்களது வாழ்வு உதாரணமாக அமைகின்றது. சாதி இறுக்கமடைந்திருந்ததொரு காலத்தில் இத்தகைய மரபு மீறல் பழமைவாதிகளையும் பிற்போக்காளர்களையும் ஆத்திரம் வெறிக் கொள்ளச் செய்திருக்கும் என்பதில் ஐயமில்லை. இந்தச் சூழலும் நடேசய்யர் - மீனாட்சியம்மாள்

தம்பதிகள் இலங்கை நோக்கி வருவதற்கு ஏதுவான காரணங்களாக அமைந்திருக்கும் எனக் கருத இடமுண்டு. பாருலேகர்- கோதாவரி தம்பதிகள் ஏற்படுத்திய தாக்கத்துடன் ஒப்பிடுகின்றபோது நடேசய்யர் - மீனாட்சியம்மாள் தம்பதியினர் அத்தகைய தாக்கத்தை ஏற்படுத்தவில்லை என்ற போதினும் பல ஒற்றுமைகள் இவ்விரு தம்பதிகளிடமும் இருப்பதை அவதானிக்கலாம். அக்காலச் சூழல், இயக்கங்களின் வளர்ச்சி, என்பனவும் சமூகப் போராட்டத்தில் தாக்கம் செலுத்தும் என்பதனையும் இவ்விடத்தில் மனங்கொள்ளல் வேண்டும். இருப்பினும் இவ்வகையான ஒப்பியல் ஆய்வுகள் செய்யப்படல் வேண்டும். அவை சுவை பயப்பதாக மட்டுமன்று, பயன்மிக்கதாகவும் அமையும்.

கோ. நடேசய்யர் மலையகத்தில் தமது அரசியல் தொழிற்சங்கப் பணிகளை முன்னெடுத்தபோது அவருக்குப் பக்க பலமாகச் சிலர் வந்தமைந்தனர். அவ்வாறு அரசியல் தொழிற்சங்க பணிகளை முழுநேர தொழிலாகக் கொண்டு செயற்பட்டவர்களில் முதன்மையானவர் மீனாட்சியம்மாள்.

மலையக மக்களிடையே அரசியல் தொழிற்சங்க பணிகளில் ஈடுபட்ட மீனாட்சியம்மாள் தவிர்க்க முடியாதவகையில் இலக்கியத் துறையிலும் பிரவேசித்தார். அரசியல் களத்திலிருந்து தமது படைப்புகளைப் பட்டைத்தீட்ட முனைந்த நாகரிகத்தை அவரது கவிதைகள் எடுத்துக்காட்டுகின்றன. மீனாட்சியம்மையாருக்கு இந்த ஆற்றல் எங்கிருந்து வந்தது என்பதும் சுவாரசியமானதொரு தேடலாகும். அம்மையாருக்கு ஆரம்பகால முதலாகவே பாரதியின் கவிதைகளில் ஈடுபாடு இருந்து வந்திருக்கின்றது என்பதை அவரது அரசியல் தொழிற்சங்க இலக்கியச் செயற்பாடுகள் உணர்த்தி நிற்கின்றன.

மலையகத்தில் பாரதியார் பாடல்கள் முப்பதுகளின் பிற்பகுதியிலும் நாற்பதுகளின் ஆரம்பத்திலும் பரவத்தொடங்கியிருந்தன. தமிழகத்தில் தேசப்பற்று உணர்வுமிக்க சிலர் பிரித்தானிய எதிர்ப்புணர்வு கொண்டு தேசபக்திப் பாடல்களை இசைத்தனர். அவர்கள் பொதுவாகவே பாரதியாரின் பாதிப்பிற்கு உட்பட்டிருந்தனர். பாரதியாரின் பாடல்களையோ அல்லது பாரதி பாடல்கள் மெட்டில் தாம் இயற்றிய பாடல்களையோ மக்கள் மத்தியில் பாடி வந்தனர். அத்தகையவர்களில் முக்கியமாகக் குறிப்பிட வேண்டியவர் என். என். விஸ்வநாததாஸ். "தேசவிரோத பாடல்களினால் மக்கள் மத்தியில் பிரபல்யம் பெற்றவர்" என பிரித்தானிய அரசினால் அடையாளப்படுத்தப்பட்டவர். தமிழக மக்களிடையே பிரபல்யம் அடைந்திருந்த பாஸ்கரதாஸின் பாடல்களை மக்கள் மத்தியில் பரப்பியதில்; விஸ்வநாததாஸிற்கு முக்கிய இடமுண்டு. பாரதியின் பாடல்கள் மற்றும் விடுதலையுணர்வு கூடிய பாடல்கள் இலங்கைக்கு வருகை தந்த யாத்திரிகள் பக்தர்கள் மூலமாக மலையகத் தோட்டங்களில் பரவியிருந்தன.

1930களுக்கு முன்னர் இலங்கையில் வெளிவந்த தமிழ்ச் சிறுபத்திரிகைகள் விரல்விட்டு எண்ணக் கூடியவையாகவே காணப்பட்டன. தமிழ் நாட்டிலிருந்து வெளிவந்த தாகூர், சரோஜினி, பாரதி, நாமக்கல் கவிஞர் போன்றோர் பாடிவந்த சுதந்திர உணர்வுமிக்கப் பாடல்கள் மற்றும் வேதநாயகம்பிள்ளை, சங்கரதாஸ் சுவாமி, உடுமலைக் கவிராயர் முதலானோரின் படைப்புகள் மலையகத்தில் ஓரளவு வசதியும் வாய்ப்பும் பெற்றவர்களையே வந்தடைந்தன. மலையக தோட்டத் தொழிலாளர்களைப் பொறுத்தமட்டில் எழுத்தறிவு மிகக் குறைவாகக் காணப்பட்டமையால் இவ்வாக்கப் படைப்புகள் அவர்களை எட்டவில்லை. இதற்கு மாறாக மலையக மக்களிடையே செல்வாக்குப் பெற்று விளங்கிய நாட்டார் பாடல்களும் கதைப்பாடல்களுமே அவர்களிடத்தில் செல்வாக்குப் பெற்றிருந்தன. இந்தச் சூழலில் மலையக தோட்டத் தொழிலாளர்களிடையே பாரதியின் பாடல்கள் மற்றும் விடுதலை உணர்வுமிக்க பாடல்களைக் கொண்டு சென்றதில் மீனாட்சியம்மாளுக்கு முக்கிய இடமுண்டு. ஈழத்தில் மலையக மக்களின் சமூக எழுச்சிக்கு இலக்கியத்தை ஊடகமாகப் பயன்படுத்தி மக்கள் நலன் சார்ந்த அரசியல் தொழிற்சங்க இயக்கத்தின் முன்னோடி பெண் ஆளுமையாகத் திகழ்ந்தவர் மீனாட்சியம்மாள் என்பதில் இருநிலைப்பட்ட கருத்துகளுக்கு இடமில்லை. ஈழத்துச் சிறுகதை முன்னோடியாகக் கோ. நடேசய்யர் திகழ்ந்தது போன்று ஈழத்தின் முதல் பெண்கவிஞர் என்ற பெருமைக்குரியவர் மீனாட்சியம்மாள் என்பது ஆய்வாளர்களால் எடுத்துக் காட்டப்பட்டுள்ளது.

> தமது தொழிற்சங்க அரசியல் கூட்டங்களின்போது அம்மையார் பாரதியாரின் பாடல்களைப் பாடிய பின்னரே அக்கூட்டங்கள் ஆரம்பிக்கப்பட்டுள்ளதைப் பலர் பதிவாக்கியுள்ளனர். அத்துடன் தாம் இயற்றிய பாடல்களையும் மக்கள் மத்தியில் பாடி அவர்களை விழிப்புக் கொள்ளச் செய்துள்ளார்.

(செ. யோகராசா 'ஈழத்து முதல் பெண் கவிஞர்' என்ற கட்டுரையில் இது குறித்து எழுதியுள்ளார்).

மீனாட்சியம்மாளின் செயற்பாடுச் சிந்தனை என்பன மலையக, தோட்டத் தொழிலாளர்களை மையமாகக் கொண்டே அமைந்திருந்தமையால் அவரது கவிதைகளும் மக்களைத் தழுவியதாக மக்களின் மொழியில் அமைந்திருந்தமை குறிப்பிடத்தக்கது. கலை இலக்கியத்தைச் சமுதாய முரண்பாடுகளினின்றும் பிரச்சனைகளினின்றும் பிரித்துப் பார்த்தவர்கள் கலை இலக்கியத்தை "உயர்தோர் மேற்றே'' எனக் கொண்டு இலக்கியத்தினின்றும் பொதுமக்களைத் தூர விலக்கி வைத்தனர். கலை இலக்கியம் யதார்த்தத்திற்கு அப்பாற்பட்டது எனவும் கலைஞன் தமது சுய சிந்தனையால் உணர்வால் இலக்கியத்தைச் சிருஷ்டிக்கின்றான் என்பதை அழகியல்வாதிகள் ஆரம்ப முதலாகவே கூறி வந்துள்ளனர்; வருகின்றனர். இதற்கு நேர்மாறான கண்ணோட்டமும் உண்டு. கலை இலக்கியம் என்பது மனித வாழ்வில் இருந்து தோன்றி அது மனித வாழ்வைச் செழுமைப்படுத்துகின்றது. ஆகவே இலக்கியம் என்பது பரந்துப்பட்ட வெகுசனங்களைத் தழுவியதாக இருப்பதுடன் அது அம்மக்களுக்குச் சமூகம், பற்றிய புரிதலை உணர்த்தி வைக்கும் ஆற்றலினையும் பெற்றிருக்க வேண்டும் என்பதாகும். இது பற்றி மக்கள் இலக்கியத்தின் முன்னோடிகளில் ஒருவரான பாரதியின் பின்வரும் கூற்று கவனத்தில் கொள்ளத்தக்கது.

"எளிய பதங்கள், எளிய நடை, எளிதில் புரிந்துக் கொள்ளக் கூடிய சந்தம், பொதுசனங்கள் விரும்பும் மெட்டு இவற்றினையுடைய காவியமொன்று தற்காலத்தில் செய்து தருவோன் நமது தாய் மொழிக்குப் புதிய உயிர் தருவோனாகின்றான். ஓரிரண்டு வருஷசத்து நூற்பழக்கமுள்ள தமிழ் மக்கள் எல்லோருக்கும் நன்கு விளங்கும்படி எழுதுவதுடன் காவியத்தினுடைய நயங்கள் குறைப்படாமலும் நடத்துதல் வேண்டும்."

பொதுமக்கள் சார்பும் ஜனரஞ்சகத் தன்மையுமே இலக்கியத்தின் உயிர்நாடி எனக் கொண்டு செயற்பட்டவர் பாரதியார். "அதாவது இலக்கியச் சிறப்பும் ஜனரஞ்சகத் தன்மையும் ஒன்றுக்கொன்று முரணாகவோ, ஒன்றையொன்று விலக்குவதாகவோ இருக்கவேண்டியதில்லை. ஆனால் இலக்கிய உலகில் கடந்த சில காலங்களாக இப்பிளவு இருந்து வருகின்றது. நமது சமுதாயத்திற் கைப்பணிக்கும் கலைக்கும் உடல் உழைப்பாளர்களுக்கும் புத்தி ஜீவிகளுக்கும், பேதமும் ஏற்றத்தாழ்வுகளும் இருப்பதைப் போலவே இதுவும் சமுதாய அமைப்பில் காணப்படும் சிற்சில முரண்பாடுகளின் பிரதிபலிப்பேயாகும்." (கைலாசபதி, க. 1986, ஈழத்து இலக்கிய முன்னோடிகள், மக்கள் வெளியீடு, சென்னை. ப. 50)

பாரதியில் மீனாட்சியம்மாள் முழு ஈடுபாடு கொண்டிருந்தார் என்பதற்குப் பல சான்றாதாரங்கள் உள்ளன. அவற்றில் ஒன்று தான் மத்தியதர வர்க்கத்தைச் சார்ந்த பெண்ணொருவர் தமது மரபு சார்ந்த தடைகளையெல்லாம் தகர்த்துக் கொண்டு மக்கள் மத்தியில் தொழிற்ச்சங்க அரசியல் பணி புரிவதைத் தமது வாழ்க்கையாகக் கொண்டு செயற்பட்டமை. தான் தேர்தெடுத்துக் கொண்ட வாழ்க்கைக்குப் பொருத்தமான கணவரைக் காதல் திருமணம் கொண்டமை என்பன பாரதி கண்ட புதுமைப் பெண்ணாக அம்மையார் வாழ முற்பட்டுள்ளமையை எடுத்துக்காட்டுகின்றன.

தமது தொழிற்சங்க அரசியல் கூட்டங்களின் போது அம்மையார் பாரதியாரின் பாடல்களைப் பாடிய பின்னரே அக்கூட்டங்கள் ஆரம்பிக்கப்பட்டுள்ளதைப் பலர் பதிவாக்கியுள்ளனர். அத்துடன் தாம் இயற்றிய பாடல்களையும் மக்கள் மத்தியில் பாடி அவர்களை விழிப்புக் கொள்ளச் செய்துள்ளார். இவ்வாறாக மலையக மக்கள் பற்றியும் பல பாடல்களை இயற்றி மக்கள் மத்தியில் பாடி வந்திருக்கின்றார். "இந்தியர்களது இலங்கை வாழ்க்கையின் நிலைமை" என்ற தலைப்பில் அவர் இயற்றிய பாடல்களின் தொகுப்பைப் பெண்கள் ஆய்வு வட்டத்தினர் மீள் பதிப்பித்து வெளியிட்டுள்ளனர். அம்மையார்

பற்றிய ஆய்வுகளுக்கு இத்தொகுப்பு பெரிதும் துணையாக அமைந்துள்ளது.

மலையக மக்கள் என்போர் எங்கிருந்தோ வந்து தயாராக இருந்த பொருளாதாரத்தைக் கபளீகரம் செய்துக் கொண்டவர்கள் அல்லர். மாறாக, மலைகளில் மதர்த்து தளர்த்து நிற்கும் தேயிலைச் செடிகள், அவை பலிக் கொண்ட அப்பாவி மக்கள் தான் மலையகத் தொழிலாளர்கள். ஒரு புறமான காலனித்துவ ஆதிக்கமும் மறுபுறமான இன அடக்கு முறைகளும் தேசிய சிறுப்பான்மை என்ற உணர்வு இம்மக்களிடையே வளர்வதற்கு ஏதுவாக அமைந்தன. இந்நாட்டின் அதிகார வர்க்கமும் பேரினவாதிகளும் இம்மக்களை அடிமைக் கூலிகளாகவும் இந்தியாவிலிருந்து வந்தேறு குடிகளாகவும் கருதியதுடன் இவர்களின் இனத்தனித்துவத்தைச் சிதைக்கும் வகையிலான சட்டங்களையும் கொண்டு வந்தனர். இவ்வாறானதோர் சூழலில் அரசியல் தொழிற்சங்க இலக்கியச் செயற்பாடுகளை முன்னெடுத்த அம்மையாரின் கவிதைகளில் தொழிலாளர்களுக்கு இழைக்கப்படும் அநீதி, தொழிலாளர் ஒற்றுமை, தொழிலாளர் உரிமைகள் என்பன குறித்துத் தம் கவி வரிகளைத் தீட்டியுள்ளார்.




யாவற்றுக்கும் மேலாக, இலங்கையில் பேரினவாதத்தைச் சாடிய முதல் பெண், அம்மையார் ஆவார். இக்காலப் பகுதில் வட கிழக்குச் சார்ந்த அரசியல் தலைவர்களும் புத்தி ஜீவிகளும் இலங்கைத் தேசியம் குறித்துக் கவனம் செலுத்தியிருந்தமையினால் பேரினவாதம் பற்றிச் சிந்திக்கத் தவறிவிட்டனர். சேர்.பொன். அருணாசலம் போன்றோர் பேரினவாத்தை அடையாளம் கண்டிருந்த போதும் அதற்கு எதிரான செயற்பாடுகளை முன்னெடுப்பதற்கு முன்னர் அவர் இறந்துவிடுகின்றார். பின் வந்த தலைவர்கள் அதனைக் கவனத்திலே எடுக்கவில்லை. உயர் மத்தியதர வர்க்க வாழ்க்கை முறைகள், அரசியல் சிந்தனைகள், அரச சலுகைகள் காரணமாகப் பேரினவாதம் குறித்து அவர்கள் சிந்திக்கத் தவறிவிட்டனர். பேரினவாதத்தை அரசியல் தளத்தில் சரியாக அடையாளம் கண்டவர்கள் நடேசய்யர் மீனாட்சியம்மாள் தம்பதிகளாவர். இந்தப் போக்கு மீனாட்சியம்மாளின் பாடல்களிலும் காணக் கூடியதாக உள்ளது. அந்தவகையில் மலையக சமூக வரலாறு குறித்த ஆய்வில் அதன் வளர்ச்சிக்கு முன்னோடியாகத் திகழ்ந்த திருமதி மீனாட்சியம்மாள் பற்றியும் அக்காலகட்டத்து சமூக இயக்கங்கள் குறித்தும் ஆய்வு செய்ய வேண்டியது காலத்தின் தேவையாகும்.

மீனாட்சியம்மாள் பற்றிய ஆய்வுகள் ஆங்காங்கே சிறுசிறு குறிப்புகளாகவும் கட்டுரைகளாகவும் வெளிவந்துள்ளன. சாரல் நாடன், கோ. நடேசய்யர் பற்றிய ஆய்வின்போது மீனாட்சியம்மாளின் பங்களிப்பு பற்றியும் எழுதியுள்ளார். மீனாட்சியம்மாளை நடேசய்யரின் துணைவியாக, அல்லது அவருடைய ஒரு அங்கமாகப் பார்க்கின்ற பார்வையே சாரல் நாடனின் எழுத்தில் முனைப்புற்றிருக்கின்றது. திருமதி. சித்திரலேகா மௌனகுரு 'திருமதி. மீனாட்சியம்மாள் நடேசையர்' என்ற தலைப்பிலும் மற்றும் பெண் ஆளுமைகள் குறித்து எழுதிய பல கட்டுரைகளிலும் அம்மையாரின் பங்களிப்பு குறித்துச் சுட்டிக் காட்டத் தவறவில்லை. மு. நித்தியானந்தன் 'மீனாட்சியம்மாளும் மேடைப்பாடல்களும்' என்ற தலைப்பில் அம்மையாரின் மேடைப்பாடல்களின் முக்கியத்துவம் பற்றி எழுதியிருக்கின்றார். பேராசிரியர் செ. யோகராசா 'ஈழத்து முதல் பெண் கவிஞர்' என்ற தலைப்பில் எழுதியுள்ளார். இவை தவிர திரு. அந்தனி ஜீவா தமது உரைகளிலும் கட்டுரைகளிலும் மீனாட்சியம்மாளின் பங்களிப்பினை வெவ்வேறு வகையில் வெளிக்கொணர்ந்துள்ளார். அண்மையில்; லெனின் மதிவானம் எழுதி 'காலந்தோறும் அவர் பெயர் நிலைத்து நிற்கும்' என்ற மீனாட்சியம்மாள் பற்றி கட்டுரை 'இனியொரு' இணையதளத்தில் வெளிவந்தது. இது போன்று பலர் மீனாட்சியம்மாள் பற்றி எழுதியுள்ளனர்.

திருமதி மீனாட்சியம்மையார் எழுதிய அனைத்தும், குறிப்பாகப் பத்திரிகைகளில் அவர் தமது சொந்த பெயரிலும் புனைபெயரிலும் (இதுவரை எந்தத் தகவலும் இல்லை) எழுதிய கட்டுரைகள் யாவும் இதுவரை நூலுருப் பெறவில்லை. மீனாட்சியம்மாள் எழுதிய நூல்களான 'இந்தியத், தொழிலாளர் துயரச்சிந்து இரண்டு பாகங்கள் (1931 சகோதரி அச்சகம்,

அட்டன்), இந்தியர்களது இலங்கை வாழ்க்கையின் நிலைமை (1940 கணேஸ் பிரஸ், அட்டன்) இரண்டாவது நூல் பெண்கள் ஆய்வு வட்டத்தினரால் மறுப்பதிப்பு செய்யப்பட்டுள்ளது. இந்த இரண்டாவது தொகுப்பே இன்றைய ஆய்வாளர்களின் கவனத்தைப் பெற்றது. இதனை ஆதாரமாகக் கொண்டே மீனாட்சியம்மாளின் ஆளுமையை மதிப்பிட முனைந்தனர். இவர்களின் ஆய்வுகள் கவனத்தில் கொள்ளத்தக்கது என்ற போதினும் அம்மையாரை வெறும் கவிஞராக மட்டுமே கண்டு அமைதி காணும் மயக்கம் தொடர்ந்து நிலவி வருவதை அவ்வெழுத்துக்கள் எடுத்துக் காட்டுகின்றன. சாரல் நாடன், சித்திரலேகா மௌனகுரு, லெனின் மதிவானம் முதலானோர் மீனாட்சியம்மாள் பற்றி எழுதிய கட்டுரைகளில் தேசபக்தன் பத்திரிகையில் வெளிவந்த அம்மையாரின் கட்டுரைகளையும் ஆதாரமாகக் கொண்டு அமைந்திருந்தமையினால் அவரைக் கவிஞராகப் பார்ப்பதற்கு அப்பால் தொழிற் சங்கவாதியாக, அரசியல்வாதியாக, பத்திரிகையாளராக, சமூக செயற்பாட்டாளராக பார்க்கப்பட வேண்டியதன் அவசியத்தை உணர்த்தி நிற்கின்றன. அண்மையில் இக்கட்டுரையாசிரியர் கலாநிதி ந. இரவீந்திரனின் வழிகாட்டலின் கீழ் மீனாட்சியம்மையார் தேசபக்தனில் எழுதிய கட்டுரைகளில் தேர்ந்தெடுக்கப்பட்ட சிலவற்றினைத் தொகுத்து நூலாக்கும் முயற்சியில் ஈடுபட்டுள்ளார். இத்தொகுப்பு மீனாட்சியம்மாள் பற்றிய ஆய்வுகளுக்குப் பங்களிப்பினை நல்கும் என்ற போதினும் இதுவே முடிந்த முடிபாகவும் ஆகிவிடாது என்பதும் கவனத்தில் கொள்ளத்தக்கது.

இவற்றை ஆதாரமாகக் கொண்டு நோக்குகின்ற போது மீனாட்சியம்மாளின் முழு ஆளுமையையும் வெளிக்கொணரத்தக்க வகையிலாக பன்முக ஆய்வொன்று இதுவரை வெளிவராமை துரதிர்ஷ்டவசமானதொன்றே. நடேசய்யரின் பங்களிப்புகள் வெளிக்கொணரப்பட்ட அளவு அம்மையாரின் பங்களிப்பு வெளிக் கொணரப்படவில்லை என்றே கூற வேண்டும். அந்த வகையில் மீனாட்சியம்மாள் பற்றிய ஆய்வுகள் தொடக்கநிலையில் கூட இல்லை என்றே கூறத் தோன்றுகின்றது. எனவே மீனாட்சியம்மாள் மறைக்கப்பட்ட ஆளுமையாகவே உள்ளார். இது தொடர்பில் நாம் சிந்திக்க வேண்டியது காலத்தின் தேவையாகும். அத்தகைய தேடுதல் முயற்சியும் சிந்தனையும் மறைக்கப்பட்ட மறக்கப்பட்ட பல ஆளுமைகளை வெளிக் கொணருவதற்கான உந்துதலாகவும் அமையும்.

அரசியல் பொருளாதாரத் துறையில் எவ்வாறு ஆதிக்கச் சக்திகளின் ஆதிக்கம் நிலவுகின்றதோ அவ்வாறே சிந்தனைத் துறையிலும் பண்பாட்டுத் துறையிலும் அதன் பாதிப்பினைக் காணலாம். ஒவ்வொரு காலகட்டத்திலும் ஆதிக்கச் சிந்தனைகள் பொருளாதார அரசியல் பலத்தினைக் கொண்டு அவை தமது சிந்தனைகளைப் பண்பாடுகளை மக்கள் மத்தியில் நிலைநிறுத்தி வருகின்றனர். மனித வரலாற்றில் தனிச் சொத்துரிமையுடன் தோன்றிய பின்னர் வர்க்கச் சமுதாயத்தில் அதன் பக்க விளைவுகளான சுரண்டலும் வர்க்க முரண்பாடுகளும் தோன்றிச் சிந்தனைத் துறையிலும் தாக்கம் செலுத்தியது. அதிகார வர்க்கம் பொருளாதார பலத்தினைக் கொண்டு தமக்குச் சாதகமான கல்வெட்டுகளையோ சாசனங்களையோ ஆக்கினார்கள். இந்தச் சூழலில் இலக்கிய கர்த்தாவோ அரசியல் பொருளாதார சிந்தனையாளனோ தமது தேவைகளை நிறைவேற்றிக் கொள்ளும் வகையில் அரச பொருள் படைத்தவர்களின் நிழலில் நின்று தமது இலக்கிய அரசியல் பணிகளை முன்னெடுத்தனர். இது தொடர்பில் சுவாரசியமான கதையொன்றும் உள்ளது.

சங்க காலத்தில் இடம்பெற்றதாகக் கூறப்படும் கதையொன்றில் நாட்டில் போர் தலை விரித்தாட அதனையொட்டிய ஊர்கள் எரியூட்டப்பட்டு அதன் வெளிச்சத்தில் கொள்ளையடிக்கப்படுகின்றது. அரண்மனைகளை அலங்கரிப்பதற்காகக் குடும்பக் கொழுந்து களையெல்லாம் இழுத்துச் செல்லும் காட்சிகள் ஒருபுறம்; கூடவே பிள்ளைகளின் கதறல்கள், விதவைகளின், மக்களின் மரண ஓலங்கள்; இவை யாவற்றையும் கண்ணால் பார்க்க முடியாத செவியால் கேட்க முடியாத புலவனொருவன் ஏனையோரையும் கூட்டி மன்னனின் மனைவியின் கூந்தலில் நறுமனம் உண்டா? இல்லையா? என தமிழாராய்ச்சி செய்து கொண்டிருந்தானாம். இன்றுவரை இவ்வாராய்ச்சிகள் வெவ்வேறு வடிவங்களில் நடந்து கொண்டிருப்பதை அறியலாம். இதற்கு மாறாகப் பொதுமக்கள் சார்பான எழுத்தாளர்களும் கலைஞர்களும் காலத்திற்கு காலம் தோன்றாமலில்லை. கல்வெட்டுகளும் சாசனங்களும் மக்களுக்கு எதிரானவையாகத் தோன்றியபோது அவற்றை ஆர்ப்பாட்டம் செய்து உடைத்தும் உள்ளார்கள். ஒவ்வொருக் காலகட்டத்திலும் எத்தனையோ எழுத்தாளர்கள் கலைஞர்கள்

பத்திரிகையாளர்கள் படுகொலை செய்யப் பட்டுள்ளார்கள். இந்துப் பின்னணியில் தான் மனித குலத்தின் பயணங்கள் தொடர்கின்றது ஓர் இடைவிடாத போராட்டமாய்!

இத்தகைய புரிதலுடன் மக்கள் சார்பாகத் தமது வாழ்நாளை அர்ப்பணித்த ஆளுமைகள் குறித்து நோக்குகின்றபோது அவை வெறும் நாமம் மட்டுமல்ல; இயங்கு சக்திகளாகும். ஒவ்வொரு காலகட்டத்திலும் உழைக்கும் மக்கள் நலன்சார்ந்த பதாகைகளை உயர்த்திய அவர்களின் வெற்றிகள், சவால்கள், விருப்பு வெறுப்புகள், தோல்விகள் இன்னும் இது போன்ற எண்ணக் கணக்கற்ற அனுபவங்கள் அடுத்த தலைமுறையினருக்கு ஆதர்சமாக அமைந்திருக்கின்றன. இவ்விடத்தில் நாம் பிறிதொரு விடயம் குறித்தும் தெளிவு பெற வேண்டியுள்ளது. அதாவது இவ்வாளுமைகளின் பலத்தை மட்டுமே கருத்தில் கொள்வது பின்னடைவிற்கும், அவற்றின் பலவீனத்தை மட்டும் கருத்திற் கொள்வது விரக்திக்கும் இட்டுச் செல்லும் என்பதை வரலாறு எமக்கு உணர்த்தி நிற்கின்றது. இவ்வகையான ஆய்வுகளை ஆழமான நுட்பமான மார்க்சிய ஆய்வுகளின் ஊடாகவே வெளிக்கொணர முடியும்.

இலங்கையுடன் இந்தியாவை ஒப்பிட்டு நோக்குகின்றபோது சமூக ஆளுமைகள் ஓரளவு வெளிக்கொணரப்பட்டுள்ளனர் என்றே கூறத் தோன்றுகின்றது. அம்பேத்கர், அயோத்திதாச பண்டிதர், இரட்டைமலை சீனிவாசன், கோதாவரி பாருலேகர், பாரதி முதலான ஆளுமைகள் பற்றிய தேடுதல்கள் இடம்பெற்றுள்ளன. இதனூடாகப் பல விடயங்களை அறிந்து கொள்வதற்கான வாய்ப்புகள் ஏற்பட்டுள்ளன.

அந்தவகையில் மலையக ஆளுமைகள் குறித்து நோக்குகின்றபோது அவை முறையாக மேற்கொள்ளப்படவில்லை என்ற எண்ணமே தோன்றுகின்றது. மலையக சமூக வளர்ச்சியில் தாக்கம் செலுத்தியர்களான கோ. நடேசய்யர், திருமதி மீனாட்சியம்மையார், அமரர்கள் கே. இராஜலிங்கம், சௌமிய மூர்த்தி தொண்டமான், அஸிஸ், இளஞ்செழியன், சி.வி வேலுப்பிள்ளை, வீ. கே. வெள்ளையன், வீரி. தர்மலிங்கம் இன்னும் இது போன்ற ஆளுமைகள் குறித்த கனதியான ஆய்வுகள் இதுவரை தோன்றாமை பெரும் துரதிஷ்டமே. இவற்றுக்கு அப்பால் மலையக சமூகம் பற்றிய ஆய்வுகள் வெளிவந்திருப்பினும் அவை இவ்வாளுமைகள் குறித்து ஆழ்ந்த கரிசனை காட்டத் தவறிவிட்டன என்றே கூறத் தோன்றுகின்றது. அரசியல், கலை இலக்கிய த்துறையில் காணப்படுகின்ற குழு இழுபறி நிலையும் இவ்வாளுமைகளை ஆய்வு செய்வதில் பல தடைகளை ஏற்படுத்தியுள்ளன. இது இவ்வாறிருக்க இன்று இவ்வாளுமைகள் படிப்படியாக மறக்கப்பட்டு வருகின்றனர். மலையகத் தோட்டங்களில் மூத்த தலைமுறையைச் சேர்ந்த சிலர் வீட்டில் தான் அமரர் தொண்டமான் அவர்களின் படங்கள் காணப்படுகின்றன. அதுவும் மிகக் குறைவு.

*மலையக சமூக வளர்ச்சியில் தாக்கம் செலுத்தியவர்களான கோ. நடேசய்யர், திருமதி மீனாட்சியம்மையார், அமரர்கள் கே. இராஜலிங்கம், சௌமிய மூர்த்தி தொண்டமான், அஸிஸ், இளஞ்செழியன், சி.வி வேலுப்பிள்ளை, வீகே. வெள்ளையன், வீரி. தர்மலிங்கம் இன்னும் இது போன்ற ஆளுமைகள் குறித்த கனதியான ஆய்வுகள் இதுவரை தோன்றாமை பெரும் துரதிர்ஷ்டமே.*

இந்தச் சூழல் மலையகத்திற்கு மாத்திரம் உரித்தான ஒன்றல்ல. பொதுவாக நூல் பதிப்பில் முக்கியக் கவனமெடுத்து வந்த இலங்கையின் வடக்கில் கூட சில ஆளுமைகள் மறைக்கப்பட்டவையாகவே காணப்படுகின்றன. நீர்வை பொன்னயன் அவர்களின் வழிகாட்டலுடன் இலங்கை முற்போக்குக் கலை இலக்கிய மன்றம் 'வடபுலத்து இடதுசாரி முன்னோடிகள்' என்ற நூலை எழுதி வருகின்றனர். இந்நூலாக்க முயற்சியில் ஈடுபட்டபோது வடபுலத்தைக் களமாகக் கொண்டு இயங்கிய சில இடதுசாரி முன்னோடிகள் குறித்த தகவல்களைப் பெறமுடியாது உள்ளது என நீர்வை பொன்னயன் இக்கட்டுரையாசிரியரிடம் வேதனையோடு தெரிவித்துக்கொண்டார். திரு அமிர்தலிங்கம், யாழ்ப்பாண மத்தியக் கல்லூரியில் ஆசிரியராக இருந்தவர். இராமசாமி ஐயர், எஸ். கே. கந்தையா இவ்விருவரும் தான் 'கம்யூனிஸ்ட் கட்சி அறிக்கை' என்ற நூலை முதன்முதலில் (இந்தியாவிலும் மொழிமாற்றம் செய்திருக்கவில்லை.) தமிழில் மொழிமாற்றம் செய்தவர்கள். காதர், இவர்

இன்னொரு இடசாரி இயக்க முன்னோடியாகத் திகழ்ந்தவர். இலங்கையில் இடதுசாரிகளால் முன்னெடுக்கப்பட்ட தீண்டாமை வெகுசன இயக்கப் போராட்டத்தில் முக்கியமான தாக்கத்தை ஏற்படுத்தியவர் கே. ஏ. சுப்பிரமணியம். இலங்கையின் வடபுலத்து சமுதாயச் சூழலை உணர்ந்து அதற்கேற்றவகையிலான போராட்டங்களை மார்க்சிய நிலைப்பாட்டில் நின்று முன்னெடுத்ததில் தோழர் கே.ஏ. சுப்ரமணியம் அவர்களுக்கு முக்கிய இடமுண்டு. அவர் பொருட்டு வெளிவந்த நினைவு மலர்; அவருடைய பங்களிப்பைக் கூறினும் அது முழுமையடையவில்லை என்றே கூறவேண்டும். பேராசிரியர் க. கைலாசபதியின் பல்துறை சார்ந்த பங்களிப்பு தமிழகத்திலும் இலங்கையிலும் ஓரளவு அறியப்பட்டிருக்கின்றன. இருப்பினும் அவர் உள்ளூர்(இலங்கை) அரசியல் தொடர்பாகத் தமது புனை பெயரில் எழுதிய கட்டுரைகள் இதுவரை நூலுருப் பெறாமையினால் தமிழ்த் தேசியம் பற்றி கைலாசபதியின் நிலைப்பாடு தவறாகவே அர்த்தம் கொள்ளப்பட்டு வருகின்றது. கைலாசபதி செம்பதாகை பத்திரிகையில் 'உதயன்' என்ற பெயரில் ஒரு பக்கத்தில் சர்வதேச அரசியல் குறித்து எழுதிவந்த அதேசமயம் அதன் இன்னொரு பக்கத்தில் 'ஜனமகன்' என்ற பெயரில் "கருத்தும் கண்ணோட்டமும்" என்ற தலைப்பின் கீழ் உள்நாட்டு அரசியல் பற்றியும் எழுதி வந்திருக்கின்றார். இக்கட்டுரைகள் கைலாசபதியின் தமிழ்த் தேசியம் பற்றிய புரிதலை ஏற்படுத்தவும், தமிழ்தேசியத்தின் இருவழிப் பாதை குறித்த ஆய்வுகளைத் தொடரவும் அவசியமானவையாக உள்ளன. அந்தவகையில் கைலாசபதியின் உள்ளூர் அரசியல் பற்றிய ஆளுமை மறைக்கப்பட்டதாகவே இருந்து வருகின்றது. இவ்வாறே கிழக்கைத் தளமாகக் கொண்டு இயங்கிய சில இடதுசாரி முன்னோடிகளின் ஆய்வுகளும் நம்மிடையே இல்லை. கேரளாவைச் சேர்ந்த தோழர் கேவி. கிருஷ்ணக்குட்டி, சுபத்திரன், சாருமதி முதலானோர் குறித்த தேடுதல் இன்று அவசியமானவையாக இருக்கின்றன. இவ்வகையில் பார்க்கின்றபோது மானுட நலனுக்காகத் தம்மை அர்ப்பணித்துக் கொண்ட பல ஆளுமைகள் மறைக்கப் பட்டவர்களாகவே உள்ளனர். இந்தப் புரிதலோடு மீனாட்சியம்மாள் பற்றிய தேடுதல்களை முன்னெடுக்கின்றபோது பின்வரும் அம்சங்கள் கவனத்தில் கொள்ளத்தக்கவையாகக் காணப் படுகின்றன.

1. மலையக ஆளுமைகள் பற்றிய முழுமையான விபரப் பட்டியலோ, சுருக்கமான வாழ்க்கைக் குறிப்புகளோ பூரணத்துவமாக இல்லை.

2. மலையக எழுத்தாளர்களின் படைப்புகளில் அனேகமானவை நூலுருப் பெறவில்லை. மூத்த எழுத்தாளர் பலரின் ஆக்கங்கள் கூட இதுவரை நூலுருப் பெறவில்லை. அவ்வாறு நூலுருப் பெற்ற படைப்புகளைக் கூட இன்று பெற முடியாத நிலை காணப்படுகின்றது.

3. மலையக ஆளுமைகள் தொடர்பாகச் சேகரித்து வைத்திருந்த பல ஆக்கங்கள், ஆய்வுகள் என்பன மலையகத்தில் இடம் பெற்ற இன வன்முறைகளின்போது அழிந்து விட்டன.

4. மலையக ஆளுமைகள்; தொடர்பாகச் சேகரித்து வைத்துள்ள பத்திரிகைத் துணுக்குகளைத் தேடிப் பெறுவதில் ஏற்படும் நடைமுறை சிக்கல்கள்.

5. மலையக படைப்புகள், எழுத்தாளர்களின் விபரங்களை உள்ளடக்கிய ஆவணக் காப்பகம் ஒன்றில்லாமை.

6. மலையகத்திலுள்ள பெரும்பாலான வாசகசாலைகள் ரமணிச்சந்திரன், பாலகுமாரன் போன்றோர்களின் நூல்களினால் நிரப்பப்பட்டுள்ளன. மலையகம் சார்ந்த நூல்களை இங்குப் பெற முடியாது உள்ளது.

7. மலையக அரசியல், சமூக, இலக்கிய வரலாறு பற்றிய பூரணத்துவமான ஆய்வு நூல் ஒன்று இதுவரை காலமும் எழுதப்படவில்லை.

இந்நிலையில் மீனாட்சியம்மாள் பற்றிய தேடுதலுக்கு ஏற்ற இடமாக இலங்கையின் தேசிய சுவடிகள் திணைக்களம் மாத்திரமே அமைந்து காணப்படுகின்றது. இலங்கையைப் பொறுத்தமட்டில் எழுத்தாளர்கள் ஆய்வு அறிஞர்கள் தே.சு.தி. உபயோகிக்கின்ற நிலை மிக மிக அரிதாகவே காணப்படுகின்றது. தே.சு.தி.த்தைப் பிரயோகித்துக் கனதியான தகவல்களை வெளிக் கொணர்ந்ததில் சாரல் நாடனுக்கு முக்கிய இடமுண்டு. இத்தகைய அனுபவங்களுடன் மீனாட்சியம்மாள் குறித்த தேடுதலை

இக்கட்டுரையாசிரியர் மேற்கொண்டபோது ஏற்பட்ட சில அனுபவங்களையும் பகிர்ந்து கொள்வதும் அவசியமானதாகும்.

தே.சு.தி. இல் தமிழ் அலுவலகர்கள் (அடிநிலை ஊழியர்கள்கூட) இல்லாத நிலையில் தமிழறிவையோ ஆங்கில அறிவையோ மட்டும் கொண்டிருப்பவரால் சில சமயங்களில் சிறிதளவு சிங்கள அறிவுடையவர்களாலும் இத்திணைக் களத்தில் தொழில் புரியும் அலுவலகர்களுடன் கலந்துரையாடி ஆவணங்களைப் பெறமுடியாத நிலை காணப்படுகின்றது. சட்டதிட்டங்களும் கடுமையானதாக இருப்பதனால் ஆய்வு அல்லது தகவல்களைத் தொகுக்கும் ஆர்வமோ கொண்டவர்கள் யாவரும் இந்நிறுவனத்திற்குள் செல்லமுடியாத நிலை காணப்படுகின்றது. அத்துடன் இங்குள்ள ஆவணங்கள் மிகவும் பழுதடைந்து எளிதில் சேதப்பட்டு அழிந்து போகும் நிலையில் காணப்படுகின்றன. எனவே அவற்றை வாசிக்கின்றபோதும் அவற்றைப் பிரதியெடுக்கும்போதும் காணப்படுகின்ற தெளிவின்மைகள் காரணமாகவும் உரிய தகவல்களைத் தேடிப் பெறமுடியாத நிலை உள்ளது. இதற்கு அப்பால் இத்துறையில் தேடலையும் ஆய்வுகளையும் மேற்கொண்டவர்கள் தங்கள் மீது கொண்ட அளவுக்கதிகமான காதல் காரணமாக, தமக்குப் பின் இத்துறையில் வேறு யாரும் ஆய்வுகளைத் தொடரக் கூடாது என்ற எண்ணத்தில் பழுதடைந்திருக்கின்ற அந்த ஆவணங்களைச் சிதைத்து, அதன் பக்கங்களை மாற்றி அல்லது சில பக்கங்களே இல்லாதளவிற்கு அவற்றை மறைத்துவிடுகின்ற பணியினையும் செய்திருக்கின்றார்கள். மீனாட்சியம்மாள் போன்ற மறைக்கப்பட்ட ஆளுமைகள் தொடர்பில் ஆவணங்களைப் பெறக் கூடியதாக உள்ள ஒரே இடமான தே.சு.தி.இலும் இவ்வாவணங்களைப் பெற முடியாதுள்ளது.

நடேசய்யர் இலங்கைக்குக் குடியேறிய பின்னர் ஒன்பது தமிழ் நூல்களையும் இரண்டு ஆங்கில நூல்களையும் எழுதிப் பிரசுரித்தார். இவைகளுள் 'அழகிய இலங்கை' என்ற நூல் இந்தியாவில் அச்சிடப்பட்டது. மலையகத்தில் அட்டன் நகரில் கணேஸ் பிரஸ், சகோதரி அச்சகம் என்ற இரு நிறுவனங்களை ஏற்படுத்தி, தனது மனைவியை வெளியீட்டாளராகக் கொண்டு இவைகளை வெளியிட்டிருந்தார். இவைகளுள் 'நரேந்திரபதியின் நரக வாழ்க்கை' என்ற நூல் 226 பக்கங்களில் இரண்டு ரூபா விலைக்கு அச்சிடப் பட்டிருந்தது குறிப்பிடத்தக்கது. 1933இல் வெளியான இந்த நூல் பிரசுரத் துறையில் ஒரு சாதனையாகும் ( சாரல் நாடன் (1997), மலையகம் வளர்த்த தமிழ், துறைவி வெளியீட்டகம், கொழும்பு, ப. 44) இவ்வாறு வெளிவந்த நூல்கள் யாவற்றையும் இப்போது பெற முடியாதுள்ளது. மேலும் இது தொடர்பான தகவல் தெரிந்தவர் களைத் தேடியறிவதும் சிரமமாக உள்ளது. அவர்களில் சிலர் இன்று மறைந்தும் விட்டனர். அம்மையாரின் புனைபெயர்கள் பற்றிய எந்தவிதமான தகவல்களும் இதுவரை கிடைக்கவில்லை. நூலகவியலாளர் என். செல்வராஜா கைலாசபதி, செ.கணேசலிங்கம் முதலானோரின் ஆக்கங்கள் வெளிவந்த பிரசுரங்கள், காலம், வெளியீட்டாளர்கள் சில சமயங்களில் ஆக்கங்கள், நூல்கள் பற்றிய தகவல்களுடன் தொகுத்துள்ளார். இவை சமூக ஆளுமைகள் பற்றிய ஆய்வுகளுக்குப் பெரிதும் உதவியுள்ளன. மீனாட்சியம்மாள் உட்பட மலையக எழுத்தாளர்களின் எழுத்துக்கள் இவ்வாறு பட்டியல்படுத்தப்படவில்லை.

மீனாட்சியம்மாள் 'தேசபக்தன்' பத்திரிக்கையில் எழுதிய கட்டுரைகள் அம்மையாரின் எண்ணங்களையும் கருத்துக்களையும் பிரதிபலிக்கின்றன. அந்தக் கால அரசியல் தொழிற்சங்க நடைமுறைகளையும் அரசியல் தலைவர்களின் ஒழுக்கத்தையும் , நேர்மையையும் படம் பிடித்துக் காட்டுவனவாக அமைந்துள்ளன. மற்றும் சமூகத்தில் பெண்களுக்குரிய ஸ்தானம் எத்தகையது என்பதையும் பெரியாங்கங்காணி சம்மேளனத்துக்கு எதிரான போராட்டங்கள், தொழிலாளர் நலன் சார்ந்த முன்னெடுப்புகள், சர்வசன வாக்குரிமை பற்றிய அம்மையாரின் பார்வையைத் தெள்ளத்தெளிவாக எடுத்துக் காட்டுகின்றன சில கட்டுரையின் கருத்துக்கள். அவர் தேசபக்தன் பத்திரிகை ஆசிரியராகவும் சில காலம் கடமையாற்றிருக்கிறார். பத்திரிகை யாளருக்குரிய நேர்மை, அர்ப்பணிப்பு, திறமை எவ்வாறு அம்மையாரிடம் காணப்பட்டது என்பதையும் இவ்வாறான தேடுதல்களின் மூலமாக அறியக் கூடியதாக உள்ளது.

சமூக ஆளுமைகள் குறித்த தேடுதலை மேற்கொள்கின்றபோது கவனத்தில் கொள்ளத்தக்க விடயங்கள் பற்றியும் இவ்விடத்தில் சிந்தித்தல் அவசியமானதாகின்றது.

அம்மையாரின் ஆக்கங்களைத் தொகுப்பதற்கு முன்னர் அவரது புனைபெயர்கள்( இருந்திருப்பின்), அவரது ஆக்கங்கள் வெளிவந்த பிரசுரங்கள் பற்றிய தேடுதல் அவசியமானதும் பயன்மிக்கதாகும். அதன் பின்னணியில் அவரது ஆக்கங்களைத் தொகுப்பதற்கான 'மீனாட்சியம்மாள் பதிப்புக் குழு' ஒன்றினை அமைத்தல் காலத்தின் தேவையாகும். தனியொருவரின் முயற்சியை விட கூட்டு முயற்சி பயன்மிக்கதாகவும் பணியை இலகுபடுத்துவதாகவும் அமையும். இத்துறையில் ஈடுபாடு கொண்டுள்ள ஆர்வலர்கள், அறிஞர்கள் ஒன்று கூடி இம் முயற்சியினை மேற்கொள்ளவது சிறப்பானது. 1950ஆம் ஆண்டு சென்னை அரசாங்கத்தால் நிறுவப்பட்ட ' பாரதி பதிப்புக் குழு' பாரதி பற்றிய ஆக்ககளைத் தொகுப்பதில் பங்காற்றியுள்ளமையை நாம் முன்னுதாரணமாக எடுத்துக் கொள்ளலாம்.

அந்தவகையில் அம்மையாரின் ஆக்கங்கள் அனைத்தும் தொகுக்கப்பட்டு அடக்கத் தொகுப்பொன்று வெளிவருகின்றபோது காலக் குறிப்பும் பின்குறிப்பும் அவசியமானதொன்றாகும். ஒரு ஆளுமையின் ஆத்ம விகர்சிப்பைப் புரிந்து கொள்வதற்கும் காலச் சூழலில் வைத்து அவ்வாளுமைகளை ஆய்வு செய்வதற்கும் அத்தகைய பதிப்புகள் அவசியமானவையாகின்றன. பதிப்பு முயற்சிகளின்போது முந்திய பதிப்புகள் மட்டுமன்றிக் கையெழுத்துப் பிரதிகள் வெளிந்த பத்திரிகைத் துணுக்குகள் என்பனவும் கவனத்திலெடுக்கப்பட வேண்டும். மீனாட்சியம்மையாரின் படைப்புகளைப் பொறுத்த மட்டில் கையெழுத்துப் பிரதிகளைப் பெறுவது சாத்தியமற்றதாகவே உள்ளது. ஆனால் ஏனைய விடயங்களைக் கவனத்தில் கொள்ளல் முக்கியமானதாகும்.

மீனாட்சியம்மாள் போன்ற ஆற்றல்மிக்க ஆளுமைகளின் எழுத்துக்கள் பல நிலைகளில் பயன்படுவன. எனவே பலவகையான பதிப்புகள் அவசியமாகின்றன. இவை யாவற்றுக்கும் மூலாதாரமான "சுத்தப் பதிப்பு" ஒன்று முதலிலே வரவேண்டியது மிக மிக அவசியமானதாகும். மேலும் பல வகையான பதிப்புகளும் வேண்டப்படுவனவாகும். ஆராய்சியாளருக்குப் பெரிதும் பயன்படும் வகையிலான கால அடைவுப் பதிப்புகள், பாடபேத வளப் பதிப்புகள், பொருளடிப்படையிலான பதிப்புகள், இலக்கியச் சுவைஞர்களுக்கான தேர்ந்தெடுத்த பதிப்புகள் பொதுமக்களுக்கு ஏற்றவாறு பொருள் விளங்கும் படியிலான பதிப்புகள் வெளி வரவேண்டியது அவசியமானதாகும். இப்பதிப்புகளைத் தொடர்ந்து சொல்லடைவு, அகராதிகள் போன்ற அடிப்படை நூல்களை ஆக்கலாம்.

இவ்வாறு புதிதாய்க் கண்டெடுக்கப்படும் மீனாட்சியம்மாளின் படைப்புகள் தக்கபடி பரிசோதிக்கப்பட்டும், அவற்றின் நம்பகத்தன்மை ஐயத்திற்கிடமின்றி நிறுவப்பட்டும் ஏற்றுக் கொள்ளப்படல் வேண்டும். வரலாற்றுச் சுருக்கங்கள், குறிப்புரைகள், சில முக்கிய தகவல்கள் என்றவகையில், சில தகவல்கள், பயனுள்ள சங்கதிகளையும், செய்திகளையும் தொகுத்தளித்தலும் வேண்டப்படுவதாகும். இவ்விடத்தில் பிறிதொரு முக்கிய விடயம் பற்றிச் சற்று அழுத்திக் கூற வேண்டியுள்ளது. 'பழந்தமிழ் இலக்கியங்களைப் பதிப்பிக்கும் முன்னோடி முயற்சிகள் மேற்கொள்ளப்பட்ட வேளையில் சி. வை. தாமோதரம்பிள்ளை, உ.வே. சாமிநாத ஐயர் முதலியோருக்கே பழந்தமிழ் நூல்கள் சிலவற்றின் பெயர்கள் சரிவரத் தெரியாத நிலையிலே, சில தமிழ் 'ஆர்வலர்கள்' வினோதமான பெயர்களுடன் சில பல 'பழந்தமிழ்' நூற் பிரதிகளைப் பற்றி பேசலாயினர். உதாரணமாக, த.மு. சொர்ணம் பிள்ளை என்பவர் 'இன்னிலை', 'ஊசிமுறி' முதலிய நூல்களைத் தாமே இயற்றிப் பழந்தமிழ் நூல்கள் எனப் பறைசாற்றினார். பிற்பட்ட ஆராய்ச்சிகளினால் இப்பொய்மை ஐயத்திற்கிடமின்றி அம்பலபடுத்துப்பட்டதெனினும், இலக்கிய உலகிலே சிலகாலம் குழப்பத்தையும் மயக்கத்தையும் உண்டாக்கியது என்பதில் ஐயமில்லை. (கைலாசபதி.க. 1974, இலக்கியச் சிந்தனை).

இந்நிலையில் மீனாட்சியம்மையாரின் படைப்புகளைத் தொகுக்கின்றபோதும் மூலப் பிரதிகளை மிகக் கவனமாகப் பரிசீலனை செய்ய வேண்டும். மூலங்களை விபரிக்கும் மனப்பாங்கும் அவசியமானதாகும். எவ்விதத் தகவல்களும் இன்றி மொட்டையாக ஆக்கங்களைப் பிரசுரிப்பது பல மயக்கங்களையும் குழப்பங்களையும் தோற்றுவிக்கும்.

மேலும் இத்தகைய பதிப்புகளை மேற்கொள்கின்ற போது ஏற்படக் கூடிய முக்கிய தவறுகள்தான் அப்பதிப்புகளில் அடங்கியுள்ள ஆக்கங்களைப் பற்றி பல்வேறு கோணங்களிலிருந்தும் நோக்குநிலைகளிலிருந்தும் பலர் கண்டு

காட்டியிருக்கின்றனர். இவ்வகையான பாரதி பற்றிய ஆய்வுகளில் பாரதியின் சொற்களையே ஆதாரமாகக் கொண்டு தமது கருத்துக்களைக் கூறியுள்ளனர். அச்சொற்கள் ஐயத்திற்கிடமானவை என்றால் அதன் முடிவுகள் என்னவாகும்?

' ஒரு சிறு உதாரணம். முப்பெரும் பாடல்களில் ஒன்று குயில் பற்றியது. இப்பாடலின் தலைப்பு குயில், குயில் பாட்டு, குயிலி, குயிலின் கதை, குயிற்பாட்டு என்றெல்லாம் வேறுபடப் பல்வேறு பதிப்புகளிலும் குறிக்கப்பட்டிருத்தலைக் காணலாம். பாரதியார் குறித்த தலைப்பு யாது? 'குயிற் பாட்டு' என்ற தொடர் கவிஞரை 'இலக்கண சுத்தமான' எழுத்தாளராய்க் காட்டும்: 'குயில் பாட்டு' என்ற தொடர் கவிஞரை 'இலகு தமிழ்' எழுத்தாளராய்க் காட்டும். எது சரி? பெரும்பாலான மலிவுப்பதிப்பு நூல்களில் சந்திபிரித்தே பாரதியார் கவிதைகள் அச்சிடப்பட்டுள்ளன. இதனாற் பாரதியாரது மூல பாடத்தைத் திடமாக அறியும் வாய்ப்புப் பலருக்குக் கிடைப்பதில்லை.

மறைக்கப்பட்ட ஆளுமைகளின் படைப்புகளைத் தொகுக்கின்றபோது இத்தகைய குறைபாடுகள் மீண்டும் மீண்டும் தலைகாட்டாத வகையில் பார்த்துக்கொள்ள வேண்டும். பெரும்பாலும் இத்தகைய பதிப்புகளில் ஏற்படுகின்ற தவறுகள் தற்செயற், குறிக்கோட் பிழைகளால் ஏற்படுகின்ற குழப்பங்களாகும். தற்செயற் பிழை என்பது தற்செயலாக ஏற்படுகின்ற எழுத்துப் பிழைகள் அச்சுப் பிழைகளால் ஏற்படுகின்றன. குறிக்கோட் பிழை என்பது ஆசிரியர் இவ்வாறுதான் எழுதியிருப்பார் என்ற நோக்கில் எழுதுவதாகும். உதாரணமாக, கோ. நடேசய்யரின்

"இந்து மக்கள்
சிந்தும் வேர்வை
ரெத்தக்காசு தானே அடா
இரவு பகல்
உறக்கமின்றி"
ஏய்த்துப் பறிக்கலாமா?'

என வரும் கவிதையில் 'இந்து' என்ற சொல்லுக்குப் பதிலாக 'இந்த' என்னும் சொல்லை அந்தனி ஜீவா தமது கட்டுரைகளிலும் தாம் பதித்த சஞ்சிகைகளின் அட்டைகளிலும் பிரசுரித்திருந்தார். இதனை அடியொற்றி எழுதிய ஆய்வாளர்கள் மூல கவிதையைப் பார்ப்பதற்குப் பதிலாக அந்தனி ஜீவாவின் பதிப்பையே ஆதாரமாகக் கொண்டனர். சில வேளைகளில் இந்தத் தவறு தற்செயல் பிழையாக இருந்திருக்கலாம். ஆனால் அவை குறிக்கோட் பிழையாகவே ஆய்வுகளில் இடம் பெற்று வந்திருக்கின்றது. இவ்விடத்தில் பின்வரும் விடயம் தொடர்பிலும் கவனமெடுக்க வேண்டியுள்ளது.' நடேசய்யர் அவர்களிடம் இந்து சமயம் சார்ந்த எதுகை மோனை சார்ந்த சொற்பிரயோகமாகவே இதனைக் கொள்ள வேண்டியுள்ளது. இந்துக்கள் பெரும்பான்மையினர் என்றவகையில் கையாளப்பட்டாலும் இந்து என்ற சொற்பிரயோகம் இந்தியாவைச் சேர்ந்த மக்கள் என்போருக்குக்குரியது. பாரதி கூட இந்துக் கிறிஸ்தவர், இந்து முஸ்லிம் என்ற பிரயோகத்தை இப்பொருளில் பாவித்துள்ளார். மலையக மக்களின் நலன் குறித்த ஆழ்ந்த அக்கறையே இக்கவிதையில் முனைப்பு பெற்றிருக்கின்றது என்பதும் கவனத்தில் கொள்ளத்தக்கது." (லெனின் மதிவானம் (2010), மலையகம் தேசியம் சர்வதேசம், குமரன் புத்தக இல்லம், கொழும்பு)

மீனாட்சியம்மாள் போன்ற சமூக ஆளுமைகளின் எழுத்துக்கள், அவரது சமூக பங்களிப்பு பற்றிய ஆய்வுகள் பல நிலைகளில் பயன்படுத்தப்படுவன. எனவே பலவகையான பதிப்புகளும் அவை பற்றிய ஆய்வுகளும் வேண்டப்படுகின்றன. இதுவரை நடந்த ஆக்கப்பூர்வமான முயற்சிகளை உறுதிப்படுத்தி இனிமேலும் முன்னேறுவது நமது கடமை. இதற்கு மீனாட்சியம்மாளின் ஆக்கங்கள் நேர்மையாகவும் விஞ்ஞானப் பூர்வமானதாகவும் பதிப்பித்து வெளியிடல் முதல் தேவையாகும்.

# சித்தி ஜுனைதா பேகம் (1917–1998)

## அந்தக் காலத்தில் முஸ்லிம் பெண்கள் எழுதுவதில்லை




கீரனூர் ஜாகிர்ராஜா

பழநி வட்டத்திலுள்ள கீரனூரைச் சேர்ந்தவர். இஸ்லாம் சமூகத்து விளிம்புநிலை மக்கள் வாழ்க்கையைச் சித்தரிக்கும் 'மீன்காரத்தெரு', 'கருத்தலெப்பை', 'துருக்கித்தொப்பி', 'வடக்கேமுறி அலிமா', 'மீன்குகை வாசிகள்' ஆகிய நாவல்களை எழுதியவர். புத்தகம் பேசுது இதழ் ஆசிரியர்குழு உறுப்பினர். 'குளத்தங்கரை அரசமரம் முதல் கோணங்கி வரை' என்னும் கட்டுரைத் தொகுப்பு விரைவில் வெளிவரவுள்ளது. 'தேய்பிறை இரவுகளின் கதைகள்' இவரின் சமீபத்திய சிறுகதைத் தொகுப்பு. கல்லூரிப் பாடத் திட்டங்களில் இடம்பெற்றுள்ள இவரது படைப்புகளை ஆய்வு செய்து மாணவர்கள், முனைவர் மற்றும் ஆய்வியல் நிறைஞர் பட்டங்கள் பெற்றுள்ளனர். தஞ்சையில் வசிப்பு. சென்னையில் பத்திரிகைப் பணி. தஞ்சை ப்ரகாஷின் இலக்கிய மாணவர்.


இன்னுமொரு ஐந்தாண்டுகளில் சித்தி ஜுனைதா பேகம் என்னும் ஒரு பெண் எழுத்தாளரின் நூற்றாண்டு தொடங்குகிறது என்று நான் இப்போது சொல்லுவேனேயானால் நூற்றாண்டு விழாக்களைத் தாராளமாகச் சளைக்காமல் வெகு விமர்சையுடன் கொண்டாடிப் பழக்கப்பட்ட நம் தமிழ்ச்சமூகம் என்மேல் வியப்பானதொரு பார்வையை வீசக்கூடும். அவ்வை, ஆண்டாள் தொடங்கி இன்றைக்குப் பெரும் வீச்சுடன் உடலரசியலை எழுதிச் செல்லும் பெண் படைப்பாளிகள் வரை ஒரு பிரும்மாண்டமான பட்டியலொன்று கண்முன் விரிந்திருப்பினும், பெண் எழுதுவது ஏனோ நம்மவர்க்கு வியப்பளிக்கக் கூடிய சங்கதியாகவே இருக்கிறது.

காலகாலமாகப் பெண்களை அகப்பையும் கையுமாக அடுக்களைக்குள் அடக்கி வைத்த ஆணாதிக்க மனோபாவத்தையுமே கூட நான் மேலே குறிப்பிட்ட வியப்புக்கு ஒரு காரணமாகக் கொள்ளலாம். என்னதான் கலை இலக்கியமும், பெண் விடுதலையும் பேசிக் களித்தாலும் பெண்ணை நாம் ஒரு எல்லைக்கோடு வரைக்கும்தான் அனுமதிக்கின்ற மன விசாலத்தைப் பெற்றிருக்கிறோம். வேலைக்குச் செல்லும் பெண்களை வேசைத்தனம் செய்பவர்கள் என்று நாக்கூசாமல் சொல்வதற்கு நம்முடைய ஆன்மீகவாதிகளை அனுமதித்திருக்கிறோம். கற்பு உள்ளிட்ட கலாச்சாரப் பண்பாட்டு வெளியில் பெண் மீதான அடக்குமுறைகள் தொடர்ந்து கொண்டிருக்கின்றன.




இஸ்லாம் மதம் ஒருபடி மேலேபோய் கோஷா, பர்தா, தலாக் என்று விதம் விதமாய்ப் பெண்களை முடக்கி வைப்பதில் நியாயம் கற்பிக்கிறது. சமுதாயக் காவலர்கள் இல்லையென்று மறுப்பர். இஸ்லாம் சமூகப் பெண்கள் வாழையடி வாழையாய் இந்தக் கட்டுப்பாடுகளுக்குப் பழக்கப்பட்டவர்களாகவே மாறிப்போய் மனம் மெய் மொழியால் தம்மை அடங்கிச் செல்பவர்களாகவும், அடிபணிந்தவர்களாகவுமே உணர்ந்திருக்கின்றனர்.

இந்த வாழ்வு அந்தச் சமூகப் பெண்களுக்கான முழுமையான வாழ்வாகாது என்பதை ஒரு சிலர் உணர்ந்திருக்கக்கூடும், ஆனால் மௌனம் தான் இப்போதைக்கு எதிர்வினை. இஸ்லாம் சமூகத்தில் பெண்ணுக்குக் கல்வி மறுக்கப்படுவதிலிருந்து இந்தத் திட்டமிட்ட வன்முறையானது தொடங்குகிறது. கல்வி மறுக்கப்பட்ட இரண்டு மூன்று தலைமுறையைச் சேர்ந்த இஸ்லாமியப் பெண்கள் இன்றைக்கு வாழ்க்கையை எதிர்கொள்வதில் எத்தனை சிக்கல்களுக்கு ஆளாகியுள்ளனர் என்பதை எழுத மனம் கூசுகின்றது.

எல்லோரும் குறிப்பிடுவதுபோல ஒரு மூடுண்ட சமூகமாகவே தங்களை அடையாளப்படுத்திக் கொள்வதில் அம்மக்கள் ஒருவித மறைமுகமான பெருமிதம் கொண்டிருக்கின்றனரோ என்னும் சந்தேகமும் கூடவே எழுகிறது.

அத்தி பூத்தாற்போலவே அங்கிருந்து பெண்கள் எழுத வருகின்றனர். அவர்களும் மதம் வலியுறுத்துகின்ற அறக்கோட்பாடுகளுக்கு உட்பட்ட பேனாக்களோடும், மனநிலையுடனுமே வருகின்றனர். இவை அறிவுத்தளத்தில் என்ன விளைச்சலைத் தந்துவிடப் போகிறது? தமிழ் நவீன இலக்கியச் சூழலில் இஸ்லாம் சமூகத்தைப் பிரதிபலிப்பவர்களாகத் தோப்பில் முஹம்மது மீரான் தொடங்கி குறைந்தது ஐந்தாறு ஆளுமைகளை உடனடியாக நம்மால் அடையாளங் காட்ட முடியும். ஆனால் நானறிந்தவரை கடந்த 25 ஆண்டுகளில் சல்மா மட்டுமே எழுத்துக்கு வந்திருக்கிற இஸ்லாம் சமூகத்துப் பெண்ணாக இருக்கிறார். சல்மாவைத் தொடர்ந்து ஒரு பெண் கூட எழுத முன்வரவில்லை என்பது எத்தனை பெரிய சோகம்? இதன் பின்னணியில் நிலவுகின்ற நீண்டதொரு மௌனத்துக்கு எவர் பொறுப்பு?

இது குறித்து விவாதிக்காமல் பெண்ணெழுத்தின் அடர்த்தி குறித்து சிலாகிப்பதில் பொருளில்லை என்றே கருதுகிறேன். தலித் சமூகம் சார்ந்து எழுத வல்ல பெண் பிரதிநிதிகள் உள்ளனர். பெண்களுக்கான சகல பிரச்சனைகள் குறித்தும் கேள்வி எழுப்ப இன்றைக்கு அவரவர் தரப்பில் பிரதிநிதித்துவங்களுக்குக் குறைவில்லாத நிலையில், பெண்கள் அறிவு சார்ந்த தளத்தில் இயங்குவதற்குக் கட்டுப்பாடுகளையும் கெடுபிடிகளையும் விதிக்கின்ற ஓரிடத்திலிருந்து போதுமான அளவு பதிவுகள் இல்லாமல் பெண் எழுத்து எவ்வாறு பூரணத்துவம் பெறும்? இஸ்லாம் சமூகத்துப் பெண்களை எழுதவிடாமல் தடுக்கின்ற கரங்கள் எவை? இதற்கு மாற்றாக நாம் என்ன எதிர்வினை நிகழ்த்தப் போகிறோம் என்கிற கேள்வியை இக்கட்டுரையின் வாயிலாக உங்களிடம் முன்வைக்கிறேன்.

பெண் எழுதுவதா என்று பிற்போக்குத் தனத்துடன் கேள்வி எழும்பத் தோதான இந்திய சுதந்திரத்திற்கு முற்பட்ட காலத்தில், ஒரு தமிழ் முஸ்லிம் பெண் துணிச்சலாக எழுத வந்தது ஆச்சரியகரமானது. சித்தி ஜுனைதா பேகம் 1917ஆம் ஆண்டு ஒருங்கிணைந்த தஞ்சாவூர் மாவட்டத்தில் நாகூரில் பிறந்தவர். தந்தை ஷரீப் பெய்க் ஒரு பன்மொழி அறிஞராகவும், மேடைப் பேச்சாளராகவும் அறியப்பட்டவர்.

நாகூருக்கு ஒரு நிகழ்ச்சிக்காக வருகை தந்த அறிஞர் சி.என். அண்ணாதுரையின் முன்னிலையில் தைப்பொங்கலைக் குறித்து கவிதை மொழியில் பேசி அவரின் பாராட்டைப் பெற்றிருக்கிறார். மற்றொரு சகோதரரான முஜீன் பெய்க் ஒரு பத்திரிகை ஆசிரியர். காரைக்காலிலிருந்து 'பால்யன்' என்றொரு இதழைப் பதிப்பித்து பல்லாண்டுகள் நடத்தியிருக்கிறார். இவ்வாறு ஒரு இலக்கியப் பின்புலத்துடன் சித்தி ஜுனைதா பேகம் இயங்கி வந்ததையும், முனவ்வர் பெய்க் அவர் எழுதுவதற்கு உந்துதலாக இருந்தவர் என்பதையும் கவிஞர் நாகூர் ரூமியின் மூலமாக நாம் அறிகிறோம். ரூமிக்கு ஜுனைதா பேகம் உறவு முறையில் பெரியம்மா. ஆச்சிமா என்று அவரை ரூமி அன்புடன் விளிக்கிறார்.

'கன்னித் தமிழுக்கு இனிமை சேர்த்த
கவிஞர்களைத் தந்த நாகூராம்...'

என்கிற வரிகளுள்ள காயல்பட்டினம் ஷேக்முகம்மது பாடிய இனிமையான பாடலைக் கேட்டிருக்கிறேன். நாகூருக்கு அப்படிப்பட்ட தனிச் சிறப்பு உண்டு. இஸ்லாம் சமூகத்தின் எண்ணற்ற புலவர்களையும் அறிஞர்களையும் வளர்த்தெடுத்த பூமி அது. நாகூரில் அடக்கம் பெற்றுள்ள சாகுல்ஹமீது வலியுல்லா நபிமுகம்மதுவின் வம்சாவழியைச் சேர்ந்தவர், மெய்ஞானச் சிறப்புள்ளவர் என்பது யாவரும் அறிந்த செய்தி. சாகுல்ஹமீது ஆண்டகையின் பிறந்தநாளை முன்னிட்டு நாகூரில் ஆண்டுதோறும் நடைபெறும் கலாச்சாரத் திருவிழாவில் உலகெங்கிலுமுள்ள இஸ்லாமியர்கள் மட்டுமல்லாமல் பிற சமயத்தினரும் கலந்து கொண்டு சிறப்பிக்கின்றனர். நவீனத் தமிழ் இலக்கியச் சூழலில் சிறுகதைத் தளத்தில் இயங்கி வரும் மற்றொரு எழுத்தாளரான ஆபிதீன் நாகூரைச் சேர்ந்தவர். தமிழில் நன்கறியப்பட்ட எழுத்தாளர் சாருநிவேதிதாவின் பூர்வீகமும் நாகூர்தான். இவற்றைச் சித்தி ஜுனைதாவின் பிறப்பிடம் குறித்த கூடுதல் தகவல்களாகக் கொள்ளலாம்.

- ஆபிதீனின் கையெழுத்து

ஜுனைதா பேகத்தின் கல்வி குறித்து நாம் அவதானிக்கையில் அதிர்ச்சியும் ஆச்சரியமும் கொள்ள வேண்டியுள்ளது. மற்றெல்லா இஸ்லாமியப் பெண்களையும் போலவே ஜுனைதாவும் மூன்றாம் வகுப்புவரை மட்டுமே கல்வி பெற அனுமதிக்கப்பட்டிருக்கிறார். அந்தக் காலத்தில் மூன்றாம் வகுப்புவரை ஒரு பெண்ணுக்கு கல்வியறிவு கிடைத்தால் போதுமானது என்று சமூகம் தீர்மானித்திருக்கிறது. எட்டு வயதுக்குமேல் ஒரு பெண் கல்விச்சாலைக்குச் செல்வது தடுக்கப்பட்டதற்கான பின்னணியை நாம் உளவியல் ரீதியாக அணுகினால், பெண்ணின் ஒழுக்கம் சார்ந்து பெற்றோர் கொள்ளும் அச்சமும், திருமணம் முடிந்து கணவனைப் பராமரிக்கப் போகின்ற பெண்ணுக்குக் கல்வி அவசியமில்லை என்கிற பிற்போக்கு எண்ணமுமே காரணமாக இருக்கமுடியும். இத்தனைக்கும் ஜுனைதாவின் தகப்பனார் கல்வியின் முக்கியத்துவத்தை நன்குணர்ந்தவர்.

மூன்றாம் வகுப்பு என்னும் ஆகக்குறைந்த கல்வித் தகுதியுடன் மட்டுமே 1930களில் ஒரு முஸ்லீம் பெண் புதினங்களும் கட்டுரைகளும் எழுதி, குறிப்பிடத்தக்க ஆளுமையாக உருவெடுத்ததற்குப் 'பரம்பரை வித்து' தான் காரணம். காலகாலமாகத் தொடர்ந்து ஊறிக் கொண்டிருந்த இலக்கிய மற்றும் ஆன்மீக வித்து அது என்கிறார் நாகூர் ரூமி. மேலும் பாவினங்களில் வண்ணம் அதிகமாகப் பாடிக் குவித்த வண்ணக்களஞ்சியப் புலவரின் பரம்பரை என்று தன்னை ஜுனைதா பேகம் கருதியதும் காரணமாக இருக்கலாம்.

வாழ்ந்த காலத்தில் சமூகத்தால் புதுமைப் பெண்ணாகக் கருதப்பட்ட அவருக்குப் பால்ய விவாகம்தான் வாய்த்திருக்கிறது. பன்னிரண்டு வயதில் பகீர்மாலிமார் என்பவருடன் திருமணம் நடந்திருக்கிறது. ஆனால் பகீர் அவர் கற்பனை செய்து வைத்திருந்த மாதிரியான கணவரல்ல என்று தனது அதிருப்தியையும் அவர் வெளிப்படுத்தியதாகவே அறிகிறோம். பன்னிரண்டு வயதில் திருமணம் நடைபெற்று, நான்கு பெண் குழந்தைகளைப் பெற்று, பதினாறு வயதில் விதவைப் பட்டம் சுமந்த வாழ்வு சித்தி ஜுனைதா பேகத்தினுடையது.

இன்றைக்குப் பெண்ணின் திருமண வயது 21 என்று நிர்ணயிக்கப்பட்டுள்ளது. 21 வயதை அடையும்போதுதான் ஒரு பெண் மன, உடல்ரீதியான வளர்ச்சியும் கர்ப்பத்தைத் தாங்குகின்ற சக்தியும் பெறுகிறாள் என்று மருத்துவர்கள் கூறுகின்றனர். 1930களில் மட்டுமல்ல 21ஆம் நூற்றாண்டு தொடங்கிய பின்னும் இஸ்லாமியப் பெண்ணின் திருமண வயது 18க்கும் கீழேயே இருக்கிறது. அவள் பூப்பெய்திய நாளிலிருந்தே மாப்பிள்ளை தேடும் படலம் தொடங்கி, பதினாறே வயதிற்குள் முதல் குழந்தையைப் பெற்று முப்பது வயதுக்குள் பாட்டியாகி முதுமையை இளமையில் வரவேற்கும் அவலம் சபிக்கப்பட்டிருக்கிறது. அவளுடைய அறைக்குள் வெளிக்காற்று நுழைவதற்கான சாத்தியதைகளே இல்லை. உள்ளேறும் பத்திரிகைகள் எல்லாமும் இஸ்லாமிய அறநெறிக் கோட்பாடுகளை வலியுறுத்துவனவே. சிறுபத்திரிகைகள், நவீன இலக்கியம், மாற்றுசினிமா இத்யாதிகளை அவளறியாள்.

முக்கால் நூற்றாண்டுக்கு முன்னால் சித்தி ஜுனைதா பேகம் தன் பிள்ளைகள் உயர்கல்வி (11ஆவது வகுப்பு வரை) பெறுவதற்காக நாகூரிலிருந்து நாகப்பட்டினத்திற்கு இடம் பெயர்கிறார். தனக்குக் கிடைக்காத கல்வியை, தன் பெண் பிள்ளைகள் பெற வேண்டுமென அவர் தீர்மானித்ததை முஸ்லீம் சமூகம் பின்பற்றியிருப்பின், மூடுண்ட சமூகம் என்னும் விமர்சனத்தை எளிதாகத் தவிர்த்திருக்க முடியும்.

சித்தி ஜுனைதா பேகம் தனது கணவர் இறந்த பிறகு தீவிரமாக எழுதத் தொடங்கியிருக்கிறார். கணவனில்லாத வேதனையையும், தனிமையையும் அவர் தனது எழுத்தால் நிராகரித்தார் அல்லது கடந்து சென்றார் என்றும் கொள்ளலாம். பதினாறு வயதில் ஒருத்தி கைம்பெண்ணானது நினைத்துப் பார்க்கவும் கொடுமையான விஷயம். இதை சித்தி அடைந்திருக்கிறார். ஆனால் விதவையென வீட்டினொரு மூலைக்குள் முடங்காது துணிச்சலாக எழுத்துலகில் பிரவேசித்ததுதான் அவரை அக்காலப் பெண்களில் தனித்து மாறுபடுத்திக் காட்டுகிறது.

ஜுனைதா பேகத்திற்கு அந்தக் காலத்திலேயே டைரி எழுதுகின்ற பழக்கம் இருந்திருக்கிறது. இன்றைக்கு யோசித்தாலும் எத்தனை இஸ்லாமியப் பெண்கள் டைரி எழுதும் பழக்கமுள்ளவர்களாக இருக்கிறார்கள். விரல்விட்டு எண்ணிவிட முடியும். டைரியில் தனது மனதைத் தினந்தோறும் பதிவு செய்பவர்கள் இந்தச் சமூகத்துடன் ஏதோ ஒரு விதத்தில் மனந்திறந்து உரையாடத் தயாராக இருக்கிறார்கள் என்பது உளவியல் பகுப்பாய்வு. ஜுனைதா, தான் சமூகத்துடன் பேச விரும்பியதை டைரிக் குறிப்புகளாகவும் கட்டுரை, புதினங்களாகவும் எழுதி வைத்தார். அவர் எழுதத் தொடங்கியதும் எடுத்த எடுப்பில் நாவலுக்குத் தாவிவிட்டதும் ஒரு பேராச்சரியந்தான்.

இலக்கிய வடிவங்களில் நாவல் மிக முக்கியமானது. கவிதைகளும், கதைகளும் தராத வாழ்க்கையின் பக்கங்களை நாவல் தந்து நிற்கிறது. மையக் கதையும் அதன் விரிவும், அங்கிருந்து பிரிகின்ற கிளைக் கதைகளும் குவியலான கதாமாந்தர்களும், தத்துவ தரிசனமும் ஒற்றைத் தன்மையற்ற பன்முகத்தின் பிரதிபலிப்பும் நாவலை சாதாரணத் தன்மையிலிருந்து அசாதாரணத்திற்கு நகர்த்துகிறது. பேரனுபவத்தைத் தருகிற பேரிலக்கிய வடிவம் நாவல். ஆனால் ஜுனைதா பேகம் நாவல் வடிவத்தைக் கையாண்டிருக்கிற விதத்தில் நமக்குச் சில மாற்று அபிப்பிராயங்கள் இருக்கிறது. எனினும் விவாதிக்கும் அளவு அதில் பிரச்சனைகள் இல்லை. 1930களில் தமிழில் நாவல் வடிவம் வளர்ச்சியடைந்திருக்கவில்லை தான். அதே கால கட்டத்தில் ஆங்கில மொழிப் பரிச்சயமுள்ள தமிழ் இலக்கிய ஆர்வலர்களில் சிலர் ஒன்றுகூடி, ஆங்கில இலக்கியங்களைத் தீவிர வாசிப்பிற்குள்ளாக்கி தமிழ்ச் சிறுகதையில் வடிவப்

பரீட்சார்த்தம் செய்து பார்க்கின்றனர். குறிப்பாகப் பி.எஸ்.இராமைய்யா பொறுப்பேற்று நடத்திய மணிக்கொடி இதழில் இது நிகழ்கிறது. மணிக்கொடியின் சிறுகதையாளர்கள் எவரும் நாவல் எழுதுவதில் அப்போதைக்கு ஆர்வம் காட்டவில்லை. நிலைமை இவ்வாறிருக்க, வெளியுலகத் தொடர்புகளற்று வீட்டிலிருந்தவாறே ஆர்வ மேலீட்டால் எழுதத் தொடங்கிய ஜுனைதா பேகம் இந்த அளவிற்கு இயங்கியுள்ளது குறிப்பிடத்தக்கது.

> "நான் என் எழுத்துலக நுழைவிற்கு எனக்கு முன் மாதிரியாக
> யாரையும் பின்பற்றவில்லை. எனது சிறுகதை, நவீனம்
> எல்லாம் இயல்பாக எனக்கமைந்த சொந்த நடை என்றே
> நினைக்கிறேன். நான் முதன் முதலில்
> எழுதிய நெடுங்கதை காதலா? கடமையா?
> என்பது. இந்த நவீனத்தை நான்
> எழுத எந்தக் காரணமும் எனக்கில்லை.
> நான் எழுத வேண்டும் என்ற எனது
> சொந்த அவாதான்"

என்பதாக 1999இல் வெளிவந்த 'முஸ்லிம் முரசு பொன்விழா மலருக்கு' அவரளித்த நேர்காணலில் குறிப்பிடுவதிலிருந்து அவர் தன் எழுத்துக்கு எவரையும் ஆதர்சமாகக் கொள்ளவில்லை என்பதும் புலனாகிறது.

சித்தி ஜுனைதா பேகம் தான் எழுதிய நாவலை நெடுங்கதை என்றே குறிப்பிடுகிறார். ஆயினும் தமிழில் நாவல் எழுதிய முதல் முஸ்லீம் பெண் என்னும் சிறப்பு அவரை இயல்பாகவே வந்தடைகிறது. மட்டுமல்ல; நாவல் எழுதிய முதல் தமிழ்ப் பெண்கள் இருவரில் ஒருவராக அவர் இருக்கக்கூடும். மற்றொருவர் 'தாஸிகளின் மோசவலை அல்லது மதிபெற்ற மைனர்' என்னும் நாவலை எழுதிய மூவலூர் இராமாமிருதம் அம்மாள்.

''பெரியோர் தம் உயர்ந்த நூல்கள் சிலவற்றை யான் படித்தபொழுது உரைநடையில் ஒரு சிறு புதுக்கதை எழுத வேண்டும் என்னும் விருப்பம் என்னை வெகுநாளாகத் தூண்டியது. யான் பத்திரிகைகட்குக் கட்டுரைகள் அடிக்கடி வரைந்து அனுப்பியதைக் கண்ட என் பெற்றோர், உறவினர், என் சினேகிதிகள் அனைவருமே அங்ஙனமே யான் ஒரு புத்தகம் எழுதவேண்டும் என்று பெரிதும் விரும்பினர். அன்னார்தம் விருப்பத்தையும் எமது விழைவையும் நிறைவேற்றுவான் வேண்டி இச்சிறு புத்தகத்தை வெளியிடுகிறேன்'' என்று ஜுனைதா எழுதுவதிலிருந்தும், மேலும் "நச்சுடை நாகங்கள் சிலவற்றைத் தன் குடிகளாய்க் கொண்ட இவ்வூரின் சிலர்தம் தூற்றுதலுக்கு அஞ்சிப் பத்திரிகைகளுக்குப் பெயர்போடாது கட்டுரைகள் அனுப்புமாறு என்னைத் தூண்டியவரும்..." என்று எழுதும் போதும் அவர் எழுத நேர்ந்த பின்னணியும் எழுதியதால் ஊரார் வெளிப்படுத்திய எதிர்ப்பும், அது போன்ற எதிர்ப்புகளைத் தொடர்ந்து பெயர் போடாது எழுதி வந்ததும் தெரியவருகிறது.

"நாவல் வெளிவந்த பிறகு கூட்டம் கூட்டமாக வெள்ளைத் துப்பட்டி அணிந்த பெண்கள் தெருப் பள்ளித் தெரு வீட்டுக்கு வந்து ஆச்சிமாவைப் பார்க்க வந்தார்களாம். சும்மா அல்ல; ஒரு கெட்டுப் போன நல்ல குடும்பத்துப் பெண்ணை விசாரிக்க வருவது போல"

"நாவல் வெளிவந்த பிறகு கூட்டம் கூட்டமாக வெள்ளைத் துப்பட்டி அணிந்த பெண்கள் தெருப் பள்ளித் தெரு வீட்டுக்கு வந்து ஆச்சிமாவைப் பார்க்க வந்தார்களாம். சும்மா அல்ல; ஒரு கெட்டுப் போன நல்ல குடும்பத்துப் பெண்ணை விசாரிக்க வருவது போல"

இந்தத் தகவலை என்னிடம் ஆச்சிமாவே நேரடிப் பேச்சில் இதே வார்த்தைகளில் சொன்னது. அம்மாவும் இதை உறுதிப்படுத்தினார்கள். ஒரு முஸ்லிம் பெண்! நாவல் எழுதுவதா? அதுவும் 'காதல்' என்ற சொல்லுடன்! எவ்வளவு நெஞ் சழுத்தம் வேண்டும்?'' என்று நாகூர் ரூமி விவரிப்பதிலிருந்து ஜுனைதா பேகம் தன் எழுத்துக்காக எதிர்கொண்ட இன்னல்களை மேலும் அவதானிக்கலாம்.

"இந்த எனது சிறு நவீனத்திற்கு 'தாருல் இஸ்லாம்' ஆசிரியரும், நபிகள் நாயக மாண்பினை எழுதிய பெரியாருமான பா. தாவுத்ஷா சாகிபு அவர்களிடம் ஒரு மதிப்புரை கேட்டோம். 'இது ஒரு பெரிய திறமையா? இதற்கு ஒரு மதிப்புரை தேவையா?' என்று ஏளனமாகப் பேசியதாக என் சகோதரர் உசேன் முனவ்வர் பே சொல்லி வருத்தப்பட்டார். பின்னர் மகாமகோபாத்யாய தக்ஷிணாய கலாநிதி டாக்டர் உவே. சாமிநாதையர் அவர்கள் என்னை ஏத்திப் போற்றி ஒரு மதிப்புரை வழங்கினார்கள்".

தனது சமூகத்தைச் சார்ந்த அறிவுலக வாதிகளாலேயே அவர் புறக்கணிப்பிற்கும் ஏளனத்துக்கும் உள்ளானதை மேற்கண்ட நிகழ்விலிருந்து தெரிந்துகொள்ள முடிகிறது. ஆனால் எந்த இதழாசிரியரால் மதிப்புரை தராமல் மறுக்கப்பட்டாரோ அதே தாருல் இஸ்லாம் இதழில் 1995இல் 'முஸ்லிம் பெண்களும் விவாக விலக்கும்' என்றொரு கட்டுரையை சித்தி ஜுனைதா பேகம் எழுதியுள்ளார். இதன் மூலமாகக் காலமாறுதலையும் படைப்பாளியின் போராட்டக் குணத்தையும் வெகுவாகப் புரிந்து கொள்ளலாம்.

"சமீப காலத்தில் நாகூர் சித்தி ஜுனைதா பேகம் என்ற பெண்மணி எழுதிய காதலா? கடமையா? என்ற தலைப்புடன் கூடிய அபிநவ கதையை நான் பார்த்தபோது எனக்கு மிக்க மகிழ்ச்சியும் வியப்பும் உண்டாயின. மகம்மதியர்களுள்ளும் தமிழ் நூல்களைப் பயின்றுள்ள பெண்மக்கள் இருக்கிறார்கள் என்பதை இப்புத்தகம் நன்கு விளக்குகிறது. இதன் நடை யாவரும் படித்தறிந்து மகிழும்படி அமைந்திருக்கிறது. கதைப் போக்கும் நன்றாக உள்ளது. இடையிடையே பழைய நூல்களிலிருந்து மேற்கோள்கள் கொடுத்திருப்பது இந்நூலை எழுதியவருக்குத் தமிழ் இலக்கிய நூல்களில் நல்ல பயிற்சியுண்டென்பதைக் காட்டுகின்றது...."

இது டாக்டர் உ.வே.சா. 1938இல் சித்தி ஜுனைதா பேகத்தின் நாவலுக்கு எழுதிய முன்னுரையின் ஒரு பகுதி. ஊர் ஊராகச் சுற்றியலைந்து, ஓலைச்சுவடிகளைச் சேகரித்து எண்ணற்ற தமிழ் இலக்கியங்களைப் பதிப்பித்த உவேசா.வின் முன்னுரையைப் பெற்றதும் அவரால் ஆசீர்வதிக்கப்பட்டதும் ஜுனைதா பேகத்தின் எழுத்து வாழ்க்கைக்குக் கிடைத்த பெரும் அங்கீகாரம். மட்டுமல்ல; தமிழ்ச்சிறுகதையின் ஒரு குறியீடாக மாறிவிட்ட புதுமைப்பித்தன் "முஸ்லீம் பெண்டிர் எழுத முன்வருவதை நாம் வரவேற்கிறோம்" என்று ஜுனைதா பேகத்தின் நாவல் குறித்து அபிப்ராயம் தெரிவித்திருப்பதும் கருத்தில் கொள்ளத்தக்கது.

என் வாழ்வின் குறிக்கோளே எழுதுவதும் படிப்பதும்தான் என்று குறிப்பிடும் ஜுனைதா பேகத்திற்குப் பழந்தமிழ் இலக்கியங்களில் வளமான பயிற்சி இருந்திருக்கிறது. திருக்குறள், நாலடியார் நளவெண்பா, மணிமேகலை, சிலப்பதிகாரம், மாணிக்கவாசகர், திருமூலர், பாரதி பாடல்கள் வரை அவர் ஊன்றிக் கற்றிருப்பதற்கான வெளிப்பாடுகள் உள்ளன. இதுவரைக்குமான இஸ்லாமியப் பெண்கள் எவருக்கும் இம்மாதிரியான சுதந்திரம் கிடைத்திருப்பதாகத் தெரியவில்லை. ஏனெனில் அவர்களைப் பொறுத்தவரைக்கும் இலக்கிய நூல்கள் யாவும் தீண்டத்தகாத பிரதிகளே. "இடமும் இருப்பும் ஒரு மனிதனின் குணாம்சத்தைத் தீர்மானிக்கின்றது" என்று முன்பு எங்கோ ஒரு கட்டுரையில் நான் குறிப்பிட்டிருப்பேன். சித்தி ஜுனைதா பேகத்தின் சூழல் அவருக்குப் பலவிதங்களில் துணை புரிந்திருக்கிறது. பிறந்து வளர்ந்த ஊரும், பெற்றோரும், வாசிப்பிற்கான சுதந்திரமும் ஜுனைதாவைப் படைப்பாளியாக மலர்த்தியிருக்கிறது. இது அத்தனை எளிதாக எவருக்கும் வாய்த்துவிடாது.

'காதலா? கடமையா?'வை வாசித்துப் பார்க்கையில் எல்லோரும் குறிப்பிடுவதுபோல, நாடோடி மன்னன் தமிழ்த் திரைப்படத்திற்கும் இந்த நாவலுக்கும் கதைப்போக்கில் உள்ள ஒற்றுமையைக் கிரஹித்துக் கொள்ள முடிகிறது. இதுவும் சித்தி ஜுனைதா பேகம் என்கிற படைப்பாளுமையின் வெற்றிகரமான பக்கம்தான். "படம் ஓடினால் நான் மன்னன், இல்லையேல் நாடோடி" என்று படத்தின் கதாநாயகன் அந்தத் திரைப்படத்தைப் பற்றி கருத்துரைத்ததாகச் சொல்வார் உண்டு. பெரும் வெற்றிபெற்ற ஒரு திரைப்படம் - அதுவே அந்த திரைக் கலைஞர் அரசியலில் தனித்து இயங்குவதற்கான அடித்தளம் அமைத்துத் தந்தது என்றெல்லாம் கூட அப்போது

பரபரப்பாகப் பேசப்பட்டது. காதலா? கடமையா? நாவலில், மன்னன் நிறைவேற்றும் மக்கள் நலத்திட்டங்கள் அப்படியே திரைப்படத்தில் எடுத்தாளப்பட்டிருப்பதும், திரைக்கதைக்கும் நாவலுக்குமான ஒற்றுமை அம்சங்கள் வெளிப்படையாகத் தெரிவதும் நம்முடைய நம்பகத் தன்மையை அதிகரிப்பனவாக உள்ளன. பிறகு ஏன் சித்தி ஜுனைதா பேகம் இதற்கு உரிமை கோரவில்லை என்று யோசிக்கையில், ஒரு பெண்ணாக இருந்து அந்தக் காலகட்டத்தில் எதிர்கொள்ள வேண்டிய சங்கடங்கள் பிரச்சனைகள் என்று நாம் இதைப் புரிந்து கொள்ளலாம். மேலும் அந்தத் திரைப்படத்திற்கு வசனம் எழுதியவர்களுள் ஒருவரான காஜாமைதீன் என்கிற இரவிந்தர் நாகூரைச் சேர்ந்தவர் என்பதும் ஜுனைதாபேகம் இது விஷயத்தில் மௌனம் காத்ததற்கான காரணம் என்றும் யூகிக்கமுடிகிறது. அல்லது சித்தியின் கவனத்திற்கு இது செல்லவில்லையோ என்பதும் விளங்கிக் கொள்ள முடியாத ஒரு புதிராக நீடிக்கிறது.

இன்றைக்கு மத அடிப்படைவாதிகளால் புறக்கணிக்கப்படும் தர்கா நேர்ச்சைகளைப் பற்றிச் சித்தி ஜுனைதா பேகம் "நாகூர் கந்தூரி இதோ கதவைத் தட்டுகிறது பக்தி, நம்பிக்கை, வேடிக்கை இது மாதிரி பல்வேறு காரணங்களுக்காக நாகூரைத் தேடிக் கூட்டங் கூட்டமாக மக்கள் இதோ வரமுயன்று கொண்டிருக்கின்றார்கள். ஊரே கோலாகலமாகத் திருவிழாக் கோலம் பூணுகின்றது.'' என்று மகிழ்ச்சி பொங்கக் குறிப்பிடுகிறார். மற்றொரு இடத்தில் "இஸ்லாத்தில் தெளிவாய் வற்புறுத்திப் பெண் கல்வி அனுமதிக்கப்பட்டிருப்பினும் முஸ்லிம் பெண்கள் கல்வியில் மிகவும் பிற்போக் கடைந்திருக்கவும், மற்றைப் பெண்கள் கல்வியில் சிறந்து விளங்கவும் காரணம் என்ன? தந்நலப் பேய் பிடித்த பலர் பொருள் தெரியாது குர்ஆன் ஓதிவிடுதலே அறிவையளிக்குமெனப் பல ஆண்டுகளாய்க் கூறி, இஸ்லாமியப் பெண்களை ஏமாற்றி அவர்களை விலங்குகட்குச் சமமாய் ஆக்கி வைத்திருப்பதே காரணமென்றால் மிகையாமோ?'' என்று

"இஸ்லாத்தில் தெளிவாய் வற்புறுத்திப் பெண்கல்வி அனுமதிக்கப்பட்டிருப்பினும் முஸ்லிம் பெண்கள் கல்வியில் மிகவும் பிற்போக்கடைந்திருக்கவும், மற்றைப் பெண்கள் கல்வியில் சிறந்து விளங்கவும் காரணம் என்ன? தந்நலப் பேய் பிடித்த பலர் பொருள் தெரியாது குர்ஆன் ஓதிவிடுதலே அறிவையளிக்குமெனப் பல ஆண்டுகளாய்க் கூறி, இஸ்லாமியப் பெண்களை ஏமாற்றி அவர்களை விலங்குகட்குச் சமமாய் ஆக்கி வைத்திருப்பதே காரணமென்றால் மிகையாமோ?"

'சித்தி ஜுனைதா பேகம் - பன்னூலாசிரியை' என்று தனது வீட்டின் முகப்பில் பெயர்ப்பலகை மாட்டி வைத்துக்கொண்டு இயங்கியிருப்பவரை இன்றைக்கு நினைத்தாலும் ஆச்சரியங்கொள்ள முடிகிறது. கருத்துக்களை முன்வைப்பதில் அவருக்கு எவ்வித மனத்தடையும் இருந்ததாகத் தெரியவில்லை. 1935களில் தந்தை பெரியார் இந்தி எதிர்ப்புப் போராட்டத்தை முடுக்கிவிட்ட காலகட்டத்தில் சித்தி தாம் எழுதிய காதலா? கடமையா? நாவலில், "தமிழுக்கோர் தாயகமாய் விளங்கும் என் தாய் நாட்டை மீட்பதற்காக உடல் பொருள் ஆவியைத் தத்தஞ் செய்து பெரியாரைப் பின்பற்றுவேன்" என்று எழுதியிருப்பது இவரது தமிழினப் பற்றைக் காட்டுகிறது - என்று கம்பம் சாகுல் அமீது என்பார் 'இஸ்லாமிய முதல் புரட்சிப் பெண் படைப்பாளி' என்கிற தனது கட்டுரையில் குறிப்பிடுகிறார்.

கேட்கிறார். அவர் தனது கட்டுரைகளில் வெளிப்படுத்தியுள்ள புரட்சிகரக் கருத்துகளில் சிலவற்றையேனும் இந்த இடத்தில் குறிப்பிட்டாக வேண்டியுள்ள கட்டாயம் உள்ளது என்றே நான் கருதுகிறேன்.

- பெண்கள் தமக்குப் பிடித்தவரையே மணஞ் செய்து கொள்ள இஸ்லாம் அனுமதியளிக்கின்றது. ஒத்த நலனும், ஒத்த குணமும், ஒத்த பண்பும் அமையாத இருவரை ஆடுமாடுகளைப் பிணைப்பதைப் போல் பிணைத்து விடுவதை வன்மையாகக் கண்டிக்கிறது.

- இஸ்லாமியப் பெண் தன் கணவனின் பெயரோடு தன்னை இணைத்துக் கொள்ளத் தேவையில்லை. ஜபீரா, ஷேக் பரீதை மணந்து கொண்டால்

ஜபிராதான். அவள் மிஸஸ். ஷேக் பரீதாக மாறிவிடுவதில்லை. ஒரு முஸ்லிம் பெண் தன்னில் தானே ஒளி வீசுகின்றாள். அவள் பெயருக்கு அவளே உரிமை பெற்றவள்.

- இஸ்லாம் பலதார மணத்தை ஆதரிக்கின்றது எனக் கூறி உலகை ஏமாற்றப் புகுவது அறியாமை. ஒருவன் ஒருத்தியுடன் வாழ்வதே அறம். பல பெண்களை ஒருவன் மணக்கலாம் என்னும் கட்டுக்கள் நீக்கப்படல் நியாயம்.

- இஸ்லாமியப் பெண்கள் பொம்மைகளல்ல.

- பெண்கள் சினிமா பார்த்தால் ஆகுமா என்றால் ஆகும் என்றுதான் நான் கூறுவேன். ஆணுக்கு ஒரு நீதியும் பெண்ணுக்கு ஒரு நீதியுமன்று. ஆணுக்கு ஆகும் என்றால் பெண்ணுக்கு ஆகும் என்பதுதான் என் கருத்து.

தமிழகத்து முஸ்லீம் பெண்களுக்கு ஒரு முன்மாதிரியே போல, எழுதியும் பேசியும் வாழ்ந்தும் காட்டிய சித்தி ஜுனைதா பேகம் தனது 82ஆவது வயதில் 19.3.1998 அன்று மரணமடைந்தார். மரிப்பதற்கு முன்பு வரை அவர் எழுதிக்கொண்டும், வாசித்துக்கொண்டும் இருந்தார் என்றறிகிறோம். இலக்கியப் பணியில் அவர் ஒருபோதும் சலிப்புற்றதில்லை என்றே அவரைக் குறித்து எழுதியுள்ள பலரும் குறிப்பிட்டுள்ளனர்.

பெண் கல்வி, பெண் விடுதலை என்றெல்லாம் நினைத்துப் பார்க்க முடியாத ஒரு காலகட்டத்தில், இஸ்லாமிய சமூகத்தில் பிறந்த சித்தி ஜுனைதா பேகம் ஒரு எதிர்க்குரலாக வரலாற்றில் பதிவாகியுள்ளார். ஆனால் அவரைக் குறித்த இலக்கியப் பதிவுகள் சொற்பமே. நாகூர் ரூமியின் முயற்சியில் காதலா? கடமையா? நூல் வெளிவந்தது ஒரு முக்கியப்பணி. எனினும் சித்தி ஜுனைதாவின் பிற எழுத்துக்கள் பதிவாகியதாகத் தெரியவில்லை. அதற்கான அவசியமும் தேவையும் உள்ளது என்றே நம்புகிறோம்.

நானறிந்தவரை அ. வெண்ணிலா ஒரு கட்டுரை எழுதியிருக்கிறார். ஆபிதீனின் வலைப்பதிவில் ஜுனைதா இடம் பெற்றிருக்கிறார். தமிழ் இலக்கியச் சூழலில் இனியேனும் அவரைக் குறித்த உரையாடல்களைத் துவக்கலாம். மேதைமைகள் எல்லாக் காலங்களிலும் தோன்றிவிடுவதில்லை. அதற்காக நாம் காத்திருக்க வேண்டியிருக்கிறது. இஸ்லாமியப் பெண்கள் தீவிர இலக்கியத்திற்கு வர வேண்டும். இலக்கியத்துள் அவர்கள் பிரவேசிக்கையில் அவர்களைச் சுற்றியுள்ள எல்லாத் தடைகளும் நீங்கிவிடும் என்றொரு நம்பிக்கை என்னுள் எப்போதும் நீடிக்கிறது. சித்தி ஜுனைதா பேகம் இஸ்லாமியப் பெண்கள் முன்மாதிரியாகக் கொள்ள வேண்டிய ஆளுமை என்று மீண்டுமொருமுறை அழுத்தம் கொடுக்கிறேன்.

**சித்தி ஜுனைதா பேகத்தின் பிற படைப்புகள்**

1. செண்பகவல்லி தேவி (அ) தென்னாடு போந்த அப்பாஸிய குலத் தோன்றல் - வரலாற்று நாவல்.
2. மகிழம்பூ - நாவல்
3. இஸ்லாமும் பெண்களும் - கட்டுரைத் தொகுப்பு
4. மலை நாட்டு மன்னன் — தொடர்கதை.
5. ஹலிமா (அ) கற்பின் மாண்பு
6. பெண் உள்ளம்
7. திருநாகூர் அண்ணலின் திவ்ய மாண்பு
8. காஜா ஹஸன் பசரீ: முஸ்லீம் பெருமக்கள் வரலாறு

**துணைநூற்பட்டியல்**

காதலா? கடமையா?, ஸ்நேகா, 2003



# மேஜர் கிருஷ்ணமூர்த்தி (1919 - 2008)

## அறிமுக நோக்கில் : அறிந்ததிலிருந்து அறியாததைத் தேடி



கல்பனா சேக்கிழார்

அண்ணாமலைப் பல்கலைக்கழகத் தமிழியல் துறையில் உதவிப் பேராசிரியராகப் பணியாற்றி வருகிறார். இவரின் நூல்கள்: 'திருக்குறள்-பரிதியார் உரைத்திறன்', 'புறநானூற்றில் தமிழர் வாழ்வியல்', 'பரிதியார் உரை', 'கனினியும் கன்னித்தமிழும்' ஆகியனவாகும்.

இருபதாம் நூற்றாண்டுத் தமிழியல் ஆய்வில் நிறுவனங்களைச் சார்ந்த கல்வியாளர்களின் பணி முதன்மையானது. குறிப்பாகத் தமிழின் அத்தனை மூல ஆவணங்களைப் பதிவு செய்யும் மனநிலையும் அதனை ஆய்வுக்கு உட்படுத்தும் செயல்முறையும் இக்காலகட்டத்தில் மேலோங்கின. குறிப்பாக இருபதாம் நூற்றாண்டுத் தமிழறிஞர்கள் இரண்டு அல்லது அதற்கு மேற்பட்ட மொழிகளில் புலமையாளர்களாக இருந்துள்ளனர். இதன் காரணமாகத் தமிழுக்கு எப்பொழுதும் பயன்படத்தக்கதான பணிகளைச் செய்துள்ளனர். இத்தகைய பல அறிஞர்களின் பணிகள் இன்னும் மதிப்பிடப்படாமலே இருக்கின்றன. காலனிய ஆட்சியாளர்களால் பல்வேறு நாடுகளுக்குக் கொண்டுசெல்லப்பட்ட, தமிழ் தொடர்பான ஆவணங்கள் பற்றிய பதிவுகளே இல்லாதிருந்த காலத்தில் அதற்கான முயற்சியில் ஈடுபட்டவர் மேஜர் கிருஷ்ணமூர்த்தி என்று அழைக்கப்பட்ட ஆ. கிருஷ்ண மூர்த்தி.

ரஷ்ய மொழியில் திருக்குறளை மொழிபெயர்ந்திருக்கிறார் என்னும் ஒற்றைச் செய்தியை அறிந்துகொண்டு அவரைப் பற்றிய தகவல்களைத் தேடத் தொடங்கும்பொழுது பல்வேறு தகவல்களை அறியமுடிந்தது. பேராசிரியர் அ. தட்சிணாமூர்த்தி, பேராசிரியர் கு.வெ. பாலசுப்பிரமணியம், புலவர் கந்தசாமி இவர்களுடன் நடத்திய உரையாடலில் இருந்தும், பேராசிரியர் ஏ. கிருஷ்ணமூர்த்தி அவர்களுடைய மகன் கி. தம்பிதுரை (M.A.,B.L.,) அவர்களிடம் பெற்ற அவருடைய கையெழுத்துப் பிரதி, சுவடி அட்டவணை, வாழ்க்கைக் குறிப்பு, இதழ்களில் வெளிவந்துள்ள கட்டுரை ஆகியவற்றில் இருந்தும் இக்கட்டுரை ஆக்கம் பெறுகிறது.



தஞ்சாவூர் மாவட்டம் மெலட்டூர் கிராமத்தில் 25.06.1919 அன்று மேஜர் பிறந்தார். அண்ணாமலைப் பல்கலைக்கழகத்தில் பயின்று, சென்னைப் பல்கலைக்கழகத்தில் பேராசிரியர் வையாபுரிப்பிள்ளையின் (1940-1943) கீழ் ஆய்வாளராக ஆய்வு மேற்கொண்டுள்ளார். 1947 இல் கும்பகோணம் அரசுக் கல்லூரியில் பணியைத் தொடங்கி (1948-1963) பொன்னேரி, கடலூர், கிருஷ்ணகிரி, நாமக்கல், திண்டிவனம் ஆகிய இடங்களில் பணிபுரிந்திருந்தாலும், கும்பகோணம் கல்லூரியில் நீண்ட காலம் பணியாற்றியுள்ளார் (1948-1963). குடந்தைக் கல்லூரித் தமிழறிஞர்களைப் பற்றிய விவரங்களைத் தொகுத்த அ.ம. சத்தியமூர்த்தி முழு விவரம் கிடைக்கப்படாத பட்டியலில் இவர் பெயரைக் குறிப்பிட்டுள்ளார்.

The liberator (1945) என்னும் ஆங்கிலப் பத்திரிகையில் துணை ஆசிரியராக ஓர் ஆண்டு பணிபுரிந்துள்ளார். 1944இல் சென்னையில் நடைபெற்ற புறநானூற்று மாநாட்டில் பன்னிருவருள் ஒருவராகப் 'புறநானூறும் போரும்' என்னும் தலைப்பில் கட்டுரை வழங்கியுள்ளார் (1956). பல்கலைக்கழகங்களிலும் கல்லூரிகளிலும் 25க்கும் மேற்பட்ட சொற்பொழிவுகள் நிகழ்த்தியுள்ளார். கரந்தைத் தமிழ்ச் சங்கக் குழுவின் உறுப்பினராக இருந்துள்ளார். தமிழ்ப்பொழிலில் தமிழுக்குத் தனிப் பல்கலைக்கழகம் வேண்டும் என்னும் வேண்டுகோளை முன் வைத்தார். இவருக்குப் பிறகு தமிழ்ப் பல்கலைக்கழகத் தேவை குறித்துப் பேசப்பட்டது. இந்திய தேசியப்படையில் 16 ஆண்டுகள் பல்வேறு பொறுப்புகளில் செயலாற்றியதால் இவருக்கு மேஜர் என்னும் அடைமொழி இணைந்தது. மாகீர்த்தி, திருக்குறள் நெறித்தோன்றல், கரந்தை உமாமகேஸ்வரனார் விருது போன்ற விருதுகள் பெற்றுள்ளார். அவருடைய நெருங்கிய நண்பராக இருந்த வி. சுப்பிரமணியம் (I.A.S) அவர்களுடன் இணைந்து தஞ்சைப் பகுதியில் தஞ்சைத் தமிழ்க் கழகம் தொடங்கி ஒவ்வொரு மாதமும் ஒன்று வீதம் தொடர்ந்து 70 தமிழ் இலக்கியச் சொற்பொழிவினை நிகழ்த்தியுள்ளார். 1957 - 59இல் இந்திய அரசாங்கத்தால் மொழி பரிவர்த்தனை திட்டத்தின் கீழ் மாஸ்கோவிற்கு அனுப்பப் படுகிறார். அப்பொழுது திருக்குறளையும் பாரதியார் பாடல்கள் சிலவற்றையும் அங்கிருந்த யூரி கிலோ சோஷ் என்ற ரஷ்ய அறிஞருடன் இணைந்து ரஷ்ய மொழியில் மொழிபெயர்ப்பு செய்துள்ளார் (1963). மூன்றாண்டுகள், மறைந்த தந்தி என்னும் தலைப்பில் ரஷ்ய மொழியிலிருந்து இரண்டு நூல்களைத் தமிழில் மொழிபெயர்ப்புச் செய்துள்ளார். ஐரோப்பிய நூலகங்களில் சிதறிக்கிடந்த 2000 தமிழ்ச்சுவடிகளை அட்டவணைப்படுத்தியுள்ளது இவரின் குறிப்பிடத்தக்க பணியாகும். இமயம் முதல் குமரி வரை என்னும் மாத இலக்கிய இதழினைத் தொடங்கியுள்ளார். அவ்விதழ் நான்கு இதழ்களோடு நின்றுவிட்டது. (இதழ் நடத்துவதற்கு சந்தா பலரிடம் வாங்கியுள்ளார். திருப்பிக் கொடுக்கமுடியாத நிலை வேறு)

பேராசிரியர் ஆ. கிருஷ்ணமூர்த்தி நுணுக்கமான ஆராய்ச்சித் திறன் உடையவராக அறியப்பட்டாலும், அவரது புத்தகம் எதுவும் வெளிவந்ததாகத் தெரியவில்லை. புத்தகங்கள் எழுதுவார்; ஆனால் வெளியிடமாட்டாராம். (அச்சூழலில் புத்தகம் வெளியிடுவதில் பல்வேறு சிக்கல்கள் இருந்தாலும்

இவர் எப்பொழுதும் பண நெருக்கடி நிலையிலேயே இருந்தார் என்றும் தாம் எழுதும் புத்தகங்களை நல்ல விலை கொடுத்துப் பதிப்பகத்தார் வாங்கி வெளியிடவேண்டும் என்ற எண்ணம் அவரிடம் இருந்ததாகவும் பேராசிரியர் கு.வெ.பா கூறினார்கள்.) அவரின் சமகாலத்தில் இருந்த பல்வேறு அறிஞர்களுடன் கலந்து பழகும் வாய்ப்பும் அவர்களுடன் இணைந்து பல்வேறு ஆய்வுத்திட்டப்பணிகள் மேற்கொள்ளும் திட்டமும் அவரிடம் இருந்ததாகவும் (கலைக்களஞ்சியம் உருவாக்குதல், அகராதி உருவாக்குதல்) ஆனால் அத்திட்டங்கள் நிறைவேறியதா என்பதையும் அறியமுடியவில்லை. மாஸ்கோவில் அவர் இருந்த பொழுது அவருக்குத் தமிழ்ப்பொழில் அனுப்பி வைக்கப்பட்டுள்ளது. அங்கிருந்தபொழுது தமிழ்ப்பொழிலுக்கு அவர் எழுதிய மூன்று கட்டுரைகளும், அவர் பி.பி.சியில் பேசியதும், மயிலை வேங்கடசாமி அவர்கள் எழுதிய கட்டுரைக்கு எழுதிய கடிதமும் கிடைத்துள்ளன.

1. கோழியூர் பற்றிய குறிப்பு
   (1957 - 58 துணர் 33)
2. மருதத்துறை என்பதன் மரூஉ மதுரை
   (1958 - 59 துணர்34)
3. தவறான தமிழ் ஆராய்ச்சிகள்
   (1959 - 60, துணர்35)
4. பிரிட்டனில் தமிழ் (1960 - 61,துணர்36)
5. தமிழகம் பெற்ற பெயர்(1968-69, துணர் 42)

அவரது வீட்டில் கையெழுத்துப் பிரதிகளாக சிலப்பதிகாரம், மணிமேகலை, பத்துப்பாட்டில் திருமுருகாற்றுப்படை, பட்டினப்பாலை போன்ற நூல்களுக்கு உரைகள் கிடைத்தன. இவ்வுரைகள் என்ன நோக்கத்திற்காக எழுதப்பட்டன என்ற குறிப்புகள் எதுவுமில்லை. உரையினைப் பார்க்கும்போது ஆர். கேசண்முகம் செட்டியாருக்கு (1939 - 1953) தமிழிலக்கியங்கள் பாடம் நடத்துவதற்காக எழுதப்பட்டவனவாக இருக்கலாம் என்ற எண்ணம் ஏற்படுகிறது. கோழியூர் குறித்து 1957இல் தமிழ்ப் பொழிலில் எழுதிய கட்டுரையில்,

"17 ஆண்டுக்கு முன்பு, கொச்சி மன்னர்க்குத் திவானாக விளங்கிய சர்.ஆர்.கே. சண்முகஞ் செட்டியார்க்கு நான் தமிழிலக்கியங்களைக் கற்பிக்கும் பேறு பெற்றிருந்தேன். சிலப்பதிகாரத்தைப் பாடம் சொன்னபோது...."

என்று குறிப்பிட்டுள்ளார். இந்தக் காலகட்டத்தில் ஆர்.கே. சண்முகஞ் செட்டியார் சிலப்பதிகாரத்திற்கு உரையெழுதி வெளியிட்டுள்ளார் என்பதும் குறிப்பிடத்தக்கது.

1950களில் தமிழ் ஆராய்ச்சிச் சூழலில் பழந்தமிழ் இலக்கண இலக்கியக் காலம் குறித்த ஆய்வுகள் / விவாதங்கள் காலத்தைப் பின்னுக்குக் கூறியவர்களை தமிழ் விரோதிகளாக / தீமை ஏற்படுத்துபவர்களாக திராவிட/ தனித்தமிழ் இயக்கத்தைச் சார்ந்தவர்கள் பார்க்கும் போக்கு காணப்பட்டது. திராவிட ஈடுபாடுடைய ஆ.கிருஷ்ணமூர்த்தி அவர்களிடம் அப்போக்கினைக் காணமுடிகின்றது. 1959இல் தமிழ்ப்பொழில் (துணர் 3'1) ஒரு கடிதம் வெளியிட்டிருக்கிறது. அக்கடிதத்தில் பின்வரும் செய்தி இடம் பெற்றுள்ளது.

பொழிலின் வைகாசி மாத இதழ் படித்தேன். அதில் மயிலை சீனி. வேங்கடசாமி அவர்கள் சுந்தரமூர்த்தி சுவாமிகள் தேவாரம் என்ற தலைப்பில் கட்டுரை எழுதியுள்ளார். கட்டுரையாளர் கடந்த 20 ஆண்டுகளுக்கு மேலாகத் தமிழ்நாட்டின் இலக்கிய வரலாற்று ஆராய்ச்சியில் தலை சிறந்து விளங்கும் ஓர் அறிஞர். மேற்குறிப்பிட்ட கட்டுரையில், காலஞ்சென்ற திரு. எஸ். வையாபுரிப் பிள்ளையவர்கள் எழுதிய தமிழ்மொழி தமிழ் இலக்கிய வரலாறு என்ற நூலிற் கண்ட சில தவறுகளை எடுத்துக்காட்டியுள்ளார். திரு பிள்ளை அவர்கள் அந்த நூலை History of Tamil Language and Literature என்ற பெயரிட்டு ஆங்கிலத்தில் எழுதியுள்ளார். பிள்ளையவர்களுடைய நூலைப் பற்றி முன்னமே எனக்கு ஏற்பட்டிருந்த மனத்துயர் திரு. வேங்கடசாமி அவர்களின் கட்டுரையில் அப்படியே காணப்பட்டது.........

இந்த நூலைப் படிக்கின்ற வெளிநாட்டவர் தவறான கருத்துக்களை உண்மை எனக் கருதிக் கொள்ளுகின்றனர் என்று குறிப்பிட்டுள்ளார். இந்த வரிகளைப் படிக்கும்போது இவற்றை நானே எழுதியது போல எனக்குப்பட்டது. கட்டுரையாளர் குறிப்பிட்டுள்ள செய்தி நூற்றுக்கு நூறு உண்மை. இதை நான் ஐரோப்பிய நாட்டில் கண்ட அனுபவத்தில் எழுதுகிறேன். குறிப்பாக இந்த நூலுக்கு இரையான மாஸ்கோ நண்பர்கள் பலர். திரு. பிள்ளை அவர்களுடன் எனக்கு நெருங்கிய பழக்கவுணர்வு உண்டு. அவரது ஆராய்ச்சி முடிவுகள் சிலவற்றை அவருக்கு நேராகவே நான்

மறுத்திருக்கிறேன். அவரது ஆராய்ச்சியால் தமிழுக்கு விளைந்த நன்மையை விட தீமையே பலமடங்காகும்.

பத்தொன்பதாம் நூற்றாண்டின் இடைப் பகுதியில் பழந்தமிழ்ச் சுவடிகளைச் சேகரிப்பதும் / பதிப்பதுமான பணிகள் மேற்கொள்ளப்பட்டன. அதே நேரத்தில் இந்தியாவின் பல்வேறு பகுதிகளிலிருந்து குறிப்பாகத் தமிழகம் யாழ்ப்பாணப் பகுதியிலிருந்த தமிழ்ச் சுவடிகளைப் பாதிரிமார்கள், அரசு அதிகாரிகள், சுவடிகளைத் திரட்டுவதே நோக்கமாகக் கொண்டிருந்த ஐரோப்பிய அறிஞர்கள் ஆகியோர் எடுத்துச் சென்ற, பல சுவடிகள் ஐரோப்பாவின் பல பகுதியிலுள்ள நூலகங்களில் பாதுகாக்கப்படுகின்றன . இச்சுவடிகள் குறித்துத் தமிழ்நூல் பதிப்பு மேற்கொண்டோர் பழம் பனுவல்களைப் பதிப்பதிலேயே ஈடுபாடு காட்டிய அளவுக்கு ஆர்வம் காட்டவில்லை. ஐரோப்பிய நாடுகளில் உள்ள தமிழ்ச் சுவடிகளைப் பற்றிய கவனம் / அறியும் முயற்சிகள் காலனிய ஆதிக்கத்திற்குப் பிறகே மேற்கொள்ளப்பட்டன. 1954இல் தனிநாயகம் அவர்கள் தொடக்கநிலையில் சிலவற்றைச் செய்ய உதவினார்கள். 1959இல் ஆ. கிருஷ்ணமூர்த்தி அவர்கள் பல இடங்களிலுள்ள தமிழ்ச் சுவடிகளின் விவரங்களைச் சேகரித்துள்ளார். 1960இல் பிபிசி வானொலிக்கு அளித்த பேட்டியில்,

“பிரிட்டன் உள்பட ஐரோப்பிய நாடுகளில் உள்ள கையெழுத்துச் சுவடிகளைப் பற்றிய விவரமான ஒரு பட்டியல் தொகுக்கவேண்டும் என்று தமிழறிஞரிடையே பரவலான ஓர் எண்ணம் உண்டு. தொகுப்பதற்கான முயற்சிகள் இதுவரை தோன்றியதில்லை. இதைத் தவிர, சிலரிடையே வேறுவிதமான ஒரு கருத்து இருப்பதையும் அறிவேன். அதாவது, தமிழ்ச் சுவடிகள் பெரும்பாலும் முன்பே அச்சாகிவிட்டன. ஐரோப்பாவில் உள்ளவை பெரும்பாலும் பிற்காலத்துச் சிற்றிலக்கியங்களும், பாதிரிமார்கள் எழுதிய கிருத்துவ சமயநூல்களும்தான் என்பது அவர்கள் நினைப்பு. இதே போல ஒவ்வொரு முயற்சிக்கும் ஏதாவது ஒன்றைச் சொல்லிவிட்டு விலகிப் போகும் பழக்கம் தமிழறிஞரிடையே பல காலமாகப் பரவியிருக்கிறது. தமிழர்கள் முன்னேற வேண்டினால். இப்பழக்கத்தை அறவே கைவிடவேண்டும். இந்தச் சுவடிகளைப் புகுந்து ஆராயும்போது, இந்த நூல்களைப் பற்றிய உண்மை மட்டும் அன்று; இவற்றின் வழியாக அங்கங்கு புலப்படும் புதிய எண்ணங்களும் செய்திகளும் அரும்பெரும் மதிப்புக்குரியவை என்பதைத் தெரிவிக்க விரும்புகிறேன்”

என ஐரோப்பிய நூலகங்களில் காணப்படும் சுவடிகளை அட்டவணைப்படுத்துவதன் தேவையையும், அக்காலகட்டத்தில் தமிழறிஞர்களிடையே அச்சுவடிகள் குறித்து காணப்பட்ட எண்ணத்தினையும் குறிப்பிடுகின்றார்.

ஐரோப்பிய நூலகங்களில் சுவடிகளை அட்டவணைப்படுத்தியபோது புதிய உண்மைகள் பல கிடைத்ததாகவும், அறியப்படாத பல குறிப்புகளை எடுத்ததாகவும், அரிய ஏடுகளை சிலவற்றை நிழற்படமாகவும் சில நுண்படச் சுருள்களாகவும் எடுத்திருப்பதாகவும் எல்லாவற்றையும் தமிழுலகுக்கு அளிக்கும் பேறு விரைவில் வாய்க்கும் என்று நம்புகிறேன் என்றும் கூறியுள்ளார். ஆனால் இவர் எடுத்த குறிப்புகள், நிழற்படங்கள் எங்கிருக்கின்றன இவை வெளியிடப்படுள்ளனவா என்பதை அறியமுடியவில்லை. மேலும் தமிழ் உரைநடை வரலாற்றில் வீரமாமுனிவர் எழுதிய பரமார்த்த குருவின்கதை என்ற நூல்தான் பழமையாகக் கிடைக்கக்கூடிய முழு உரைநடை நூல் என்று தமிழிறிஞர்கள் கருதிவருகிறார்கள். இந்தக் கருத்து பொருத்தமானதன்று. எழுதும்போது இதன் விவரங்கள் நன்கு விளங்கும் என்பதோடு நிறுத்திக் கொள்கின்றேன் எனக் குறிப்பிட்டுள்ளார். இது தொடர்பாகக் கட்டுரை எதுவும் எழுதியுள்ளாரா என்பதையும் அறியமுடியவில்லை. மேலும் போப் ஆக்ஸ்போர்டிலுள்ள ஏறத்தாழ 130 சுவடிகளைப் பற்றி 80 ஆண்டுகளுக்கு முன்பு தமது கைப்பட நுணுக்கமாகக் குறிப்புகள் எழுதி வைத்திருக்கிறார். அவர் எழுதியுள்ள அக்கையெழுத்துச் சுவடிகளையும் பார்த்ததாகவும் எடுத்ததாகவும் குறிப்பிட்டுள்ளார் அக்குறிப்புகளெல்லாம் அறியமுடியவில்லை. மேலும் பிரிட்டிஷ் மியூசியத்தில் உள்ள பொருட்களை ஆராய்ந்து வரும்போது ஆசிரீயா, சால்டியா, பாபிலோனியா, எகிப்து முதலிய நாடுகளில் சிற்பங்கள், ஓவியங்கள், புதைபொருள்கள் ஆகியவற்றைப் பார்த்ததாகவும். இவை ஒவ்வொன்றும், நூற்றுக்கணக்கில் இருக்கின்றன. இவற்றைப் பார்க்கும்போதெல்லாம் தமிழ் இலக்கியங்களிலும், தமிழ் மக்களிடையிலும் வழங்கும் பல செய்திகள் நேர் ஒத்திருப்பதைக் கண்டேன். இவற்றைப் பிறகு தெளிவாக விளக்கி

1963இல் இந்தியா திரும்பிய பிறகு அவர் தயாரித்த சுவடி அட்டவணை ஐந்து பகுதிகளாக தமிழக அரசிடம் ஒப்படைக்கப்பட்டுள்ளது. பின்னால் தமிழ்ப் பல்கலைக்கழகத்திடம் ஐந்து தொகுதிகளை கொடுத்திருக்கின்றார். ஆனால் ஐந்து தொகுதிகள் இப்பொழுது எங்கு இருக்கின்றது என்பதை அறியமுடியவில்லை.

எழுதுவேன் என்று குறிப்பிட்டுள்ளார். இச்செய்திகள் குறித்து எழுதினாரா என்பதை அறியமுடியவில்லை.

தமிழ்ப் பல்கலைக்கழகம் வெளியிட்டுள்ள கணினிவழி சுவடி அட்டவணை நூல் தொகுப்பிற்கு இவர் அட்டவணைப்படுத்திய சுவடிகள் பயன்படுத்தப்பட்டுள்ளன. அதன் முன்னுரையில் இவர் பெயரினைக் குறிப்பிட்டு 4000 சுவடி அட்டவணைகள் பெற்றதாகக் குறிப்பிடப்பட்டுள்ளது. ஆனால் இவர் கொடுத்ததோ 2000 சுவடிகள் அட்டவணை மட்டுமே.

1963இல் இந்தியா திரும்பிய பிறகு அவர் தயாரித்த சுவடி அட்டவணை ஐந்து பகுதிகளாக தமிழக அரசிடம் ஒப்படைக்கப்பட்டுள்ளது. பின்னால் தமிழ்ப் பல்கலைக்கழகத்திடம் ஐந்து தொகுதிகளை கொடுத்திருக்கின்றார். ஆனால் ஐந்து தொகுதிகள் இப்பொழுது எங்கு இருக்கின்றது என்பதை அறியமுடியவில்லை. அவருடைய ஐந்தாவது சுவடி அட்டவணைப் பிரதி மட்டும் கிடைத்துள்ளது. அதில் உள்ள சில சுவடிகளைப் பற்றிய குறிப்புகள் தமிழ்ப்பல்கலைக்கழகம் தொகுத்த சுவடி அட்டவணையில் காணப்படவில்லை. 1989இல் தமிழ்ப் பல்கலைக்கழகச் சுவடி அட்டவணைத் தயாரிப்புக்கு இவருடைய அட்டவணை பயன்படுத்தப்பட்டுள்ளது. எனக்குக் கிடைத்த ஐந்தாவது பகுதியுடன் இவ்வட்டவணையை ஒப்புநோக்குகையில் விடுபடல் இருப்பதை அறியமுடிகின்றது. ஆகையின் இவர் தொகுத்த சுவடிகளின் அட்டவணை தனித்து பதிப்பிப்பது அவசியமாகின்றது. பின்னிணைப்பில் சென்று வந்த நாடுகள் குறித்தும் அங்கு நூலகங்களில் கண்ட பல்வேறு தகவல்களையும் கொடுத்துள்ளார். சுவடி பற்றி ஆய்வு மேற்கொள்வோருக்கு இது பயனுள்ளதாக அமையும். பின்லாந்து, டென்மார்க், ஜெர்மனி (கிழக்கு, மேற்கு) ஹாலந்து, பெல்ஜியம், பிரான்ஸ், யுனைட்டட் கிங்டெம், சுவிட்சர்லாந்து, இத்தாலி, யூக்கோசுலோவாகியா, கிரீக், லெபனான், அரேபியா, ஈரான் ஆகிய நாடுகளுக்குச் சென்று அங்குள்ள நூலகங்களில் காணப்பட்ட தமிழ்ச் சுவடிகளைத் தொகுத்துள்ளார். பின்னிணைப்பில் எங்கெங்கு சென்று சுவடிகள் குறித்த தகவல்களைத் திரட்டினார் என்பதையும் அந்நூலகம் குறித்த தகவல்களையும் கொடுத்துள்ளார்.

1. வரிசை எண்
2. நூலக வரிசை எண்; நூலகம்
3. நூலின் பெயர் தமிழில்
4. நூலின் பெயர் ஆங்கிலத்தில் மற்றும் எண்
5. ஆசிரியர் பெயர்
6. நூல் குறித்த விளக்கம்
7. என்ன மொழியில் உள்ளது
8. ஓலைச் சுவடியின் எண்ணிக்கை
9. ஓலைச் சுவடியின் அளவு
10. சுவடியின் தன்மை
11. சுவடி குறித்த வேறு குறிப்புகள்.

சுவடி அட்டவணையை இவர் இந்த அடிப்படையில் உருவாக்கியுள்ளார். சுவடி குறித்த குறிப்பில் சுவடி பற்றிய தகவலைத் தொகுத்து கொடுத்துள்ளார்.

பேராசிரியர் ஆ. கிருஷ்ணமூர்த்தி குறித்த தகவலைத் திரட்டத் தொடங்கும்பொழுது அவருடைய மகன் வீட்டிற்குச் சென்றிருந்தேன் அவர் பயன்படுத்திய நூல்கள் எல்லாம் குவிக்கப்பட்டு குவியலாகக் காட்சியளித்தது. அதனை இன்னும் ஆராய்ந்தால் அவர் குறித்த பல்வேறு தகவல்களை இன்னும் திரட்ட முடியும் என்று நம்புகிறேன். அவருடைய குறிப்பிடத்தக்க பணிகளுள் அயல் நாடுகளில் இருந்த சுவடி சேகரித்தது, ஆனால் கடைசிவரை அவர் அதனை தனித்துப் பதிப்பிக்க முயற்சி எடுத்துள்ளார்; அது முடியாமலே போய்விட்டது. பேராசிரியர்கள் அ.தெட்சிணாமூர்த்தி, கு.வெ.பா. ஆகியோர் அவரைப் பற்றி நினைவு கூறும்போது ஆய்வு நுட்பம் உடையவர்; புத்தகங்கள் வெளியிடவில்லை என்றாலும் இதழ்களில் கட்டுரைகள் எழுதியுள்ளார் என்று கூறினார்கள். அவற்றைத் தொகுக்கும் பணியும் மேற்கொள்ளப்படவேண்டும். அவர் கையெழுத்துப் பிரதியாக வைத்துள்ள பல பிரதிகளை ஆராய்ந்து பதிப்பிக்கும் முயற்சிகள் மேற்கொள்ளலாம்.

# கு.அழகிரிசாமியின் பதிப்புகள்: புலமையும் படைப்புணர்வும்



பெருமாள்முருகன்

நாமக்கல் மாவட்டம் திருச்செங்கோட்டைச் சேர்ந்தவர். 'நிழல்முற்றம்', 'ஏறுவெயில்', 'கூளமாதாரி', 'கங்கணம்', 'மாதொருபாகன்' ஆகிய நாவல்களையும் பல சிறுகதைகளையும் கட்டுரைகளையும் எழுதியுள்ளார். காலச்சுவடு இதழின் ஆசிரியர் குழுவில் ஒருவர். தற்போது நாமக்கல் அறிஞர் அண்ணா அரசு கலைக்கல்லூரியில் தமிழ்ப் பேராசிரியராகப் பணியாற்றுகின்றார்.

நவீனச் சிறுகதை ஆளுமைகளுள் கு. அழகிரிசாமி முக்கியமானவர். அவருடைய ஒட்டுமொத்தச் சிறுகதைத் தொகுப்பு கால வரிசையில் - செம்பதிப்பாகத் தற்போது காலச்சுவடு - பதிப்பகம் வழியாக வெளிவந்திருக்கிறது. இத்தொகுப்பை முன்வைத்து அவரது சிறுகதைத் திறன்கள் குறித்து உரையாடல் நிகழ வாய்ப்பிருக்கிறது. குறிப்பிட்ட துறையில் சாதனையாளராக ஒருவரை இனங்கண்டுவிட்டால் அந்த முத்திரை சார்ந்தே அவரை அணுகும் ஒற்றைப் பார்வை தமிழ்ச் சூழலில் சாதாரணம். அவரது பிறதுறை ஈடுபாடுகள்,

செயல்பாடுகள் புறந்தள்ளப்பட்டு விடுகின்றன. கு. அழகிரிசாமி நவீனச் சிறுகதையாளர் மட்டுமல்லர். நாவல், நாடகம், கட்டுரை ஆகியவற்றிலும் கவனம் கொண்டிருந்தவர். அக்கால நவீனப் படைப்பாளர்கள் பலரைப் போலப் பழந்தமிழ் இலக்கிய ஈடுபாடும் அழகிரிசாமிக்கு மிகுதி.

இலக்கியச் சுவை, இலக்கியத் தேன், இலக்கிய அமுதம், இலக்கிய விருந்து, தமிழ் தந்த கவியமுதம் ஆகிய ஐந்து கட்டுரைத் தொகுப்புகள் அவரது பழந்தமிழ் இலக்கியப் புலமையைக் காட்டுபவை. குறிப்பாகத் 'தனிப்பாடல்கள்' மீது தீராத ஆர்வம் கொண்டவர் என்பதற்கு இவை சான்று. பழந்தமிழ் இலக்கியங்களைக் கற்பதோடும் அவற்றின் சுவையைப் பகிர்ந்துகொள்வதோடும் நின்றுவிடாமல் நவீன இலக்கியப் படைப்பாளர்கள் எவரும் இறங்காத பதிப்புத் துறைக்குள் கால்பதித்துக் குறிப்பிடத்தக்க சாதனையும் புரிந்துள்ளார் அவர். நவீன இலக்கியப் படைப்பாளர்களுக்கும் கல்விப் புலம் சார்ந்தவர்களுக்கும் இடையே நிலவும் பெரும் இடைவெளியின் காரணமாகவோ என்னவோ கு. அழகிரிசாமியின் பதிப்புப் பணிகள் இதுவரை அறியப்படாமலும் பொருட்படுத்திப் பேசப்படாமலும் உள்ளன.

கு.அழகிரிசாமி பதிப்பித்து
வெளிவந்துள்ள நூல்கள் :

1. கம்பராமாயணம்
   முதல் பாகம், பாலகாண்டம்;
   அயோத்தியா காண்டம்.
2. கம்பராமாயணம்
   இரண்டாம் பாகம்,
   ஆரணிய காண்டம்; கிஷ்கிந்தா காண்டம்.
3. கம்பராமாயணம்
   மூன்றாம் பாகம், சுந்தர காண்டம்.
4. அண்ணாமலை ரெட்டியார் காவடிச் சிந்து.

இவற்றில் அண்ணாமலை ரெட்டியார் காவடிச் சிந்து நூலையே முதலில் பதிப்புக்குச் சித்தம் செய்திருக்கிருக்கிறார். 1950ஆம் ஆண்டு தயார் செய்யப்பட்ட இந்நூல் 1961ஆம் ஆண்டுதான் வெளியாயிற்று. '*இந்தப் புத்தகத்தின் கையெழுத்துப் பிரதி என்னிடம் வந்து பத்து வருடங்களாகின்றன. பலப்பல காரணங்களால் இப்பொழுதுதான் என்னால் வெளியிட முடிகிறது*' (ப. 3) என்று அதன் பதிப்பாளர் வை. கோவிந்தன் தம் பதிப்புரையில் குறிப்பிடுகிறார். மேலும் '*பத்து வருடங்களுக்கு முன்பே இந்த நூலின் கையெழுத்துப் பிரதியை நகல் எடுக்கும் முன்பாகக் காலஞ்சென்ற பேரறிஞர் ராவ்சாகிப் எஸ். வையாபுரிப் பிள்ளை அவர்கள் இதனைப் பார்வையிட்டுத் தந்தார்கள்*' (ப. 3) என்றும் அவர் எழுதியுள்ளார். அழகிரிசாமி பதிப்புக்குத் தயார் செய்த முதல் நூலை வையாபுரிப் பிள்ளை பார்வையிட்டுத் தந்திருப்பது மிக முக்கியமான செய்தி.

இந்நூலுக்கு இருபத்து மூன்று பக்கங்களில் விரிவான முன்னுரை எழுதியிருக்கிறார் அழகிரிசாமி. காவடி பற்றிய ஆய்வு, காவடிச் சிந்து வரலாறு, அண்ணாமலை ரெட்டியார் வரலாறு, அவரது கவித்திறன், கழுகுமலை பற்றிய செய்திகள் முதலியவற்றை விவரிக்கும் முன்னுரை இது. தேர்ந்த பதிப்பாசிரியரின் புலமையும் உழைப்பும் வெளிப்படும் வகையில் பல்வேறு புதிய செய்திகளைத் திரட்டித் தருவதோடு மிகச் சிறந்த ஆய்வுரையாகவும் இம்முன்னுரை அமைந்துள்ளது. '*பிழையில்லாத அச்சுப் பிரதியாக இன்று காவடிச் சிந்துப் புத்தகம் கிடைப்பது அரிதாகப் போய்விட்டது*' (ப. 28) என்று கூறும் அவர், '*இயல்தமிழ்ச் செல்வர்களும் இசைத்தமிழ்ச் செல்வர்களும் அநேகமாக மறந்துவிட்ட காவடிச் சிந்து நூலைச் சுத்தமான முறையில் அச்சிட்டு வெளியிட வேண்டும் என்று தீர்மானித்தேன்*' (ப. 29) என்று தம் பதிப்பு நோக்கத்தை வெளிப்படுத்துகின்றார். பல கிராமங்களுக்கும் சென்று ஏடுகள் தேடியும் பலரைப் பாடச் சொல்லிக் கேட்டும் குறிப்புகள் சேகரித்துள்ளார். அச்சுப் பிரதிகள், ஓலைச்சுவடிப் பிரதி ஒன்று, கள ஆய்வில் சேகரித்தவை என மூவகையானவற்றைக் கொண்டு பாட வேறுபாடுகளைக் குறித்துள்ளார். ஏற்கனவே அச்சில் வெளிவந்த 22 சிந்துக்களுடன் தாம் புதிதாகக் கண்டறிந்த இரண்டு சிந்துக்களையும் சேர்த்து இப்பதிப்பை அவர் உருவாக்கியுள்ளார்.

காவடிச் சிந்துப் பாடல்களைக் கொடுத்துள்ள முறை பற்றி அவர் கூறுவது: 'பொருள் எளிதில் விளங்குவதற்காகச் சிந்துகளைச் சந்தி பிரித்து வெளியிட்டிருக்கிறேன். சந்தத்தின் அமைப்பையோ

அழகையோ கெடுத்துவிடக் கூடும் என்று தோன்றும் இடங்களில் மட்டும் சந்தி பிரிக்காமல் அப்படியே வெளியிட்டிருக்கிறேன்' (ப.31)

நூலில் அனுபந்தமாக 'இந்நூலில் எடுத்தாளப் பெற்ற பழமொழிகள், இப்பதிப்பிற்கு உபயோகப்பட்ட காவடிச் சிந்து நூல் பிரதிகள், 1902, 1904 ஆகிய ஆண்டுகளில் காவடிச் சிந்தைப் பதிப்பித்த கல்குளம் குப்புசாமி முதலியார் எழுதிய முகவுரை, அண்ணாமலை ரெட்டியார் பாடிய தனிப்பாடல்கள்' ஆகியன கொடுக்கப்பட்டுள்ளன. 24 காவடிச் சிந்துகளைக் கொண்ட சிறிய நூல் எனினும் மிகவும் நிறைவாகச் செய்யப்பட்ட பதிப்பு இது. நூலைப் பயன்படுத்துவோர் காவடிச் சிந்து குறித்து விரிவான அறிவைப் பெறவும் அவர்களது தேவைகளை எளிதாக அடையவும் உதவும் வகையில் உருவாக்கப்பட்ட பதிப்பு இது. அண்ணாமலை ரெட்டியார் காவடிச் சிந்துக்கு இப்பதிப்பே செம்பதிப்பு என்னும் தன்மை பெற்றுத் திகழ்கிறது.



அண்ணாமலை ரெட்டியார் திருநெல்வேலி மாவட்டத்தைச் சேர்ந்தவர். அங்குள்ள கழுகுமலை முருகன் மீது காவடிச் சிந்து பாடியவர். தம் ஊர்ப் பகுதியைச் சேர்ந்த ஒருவர் பாடிய பிரபல இலக்கிய நூலைப் பதிப்பிக்கும் ஆர்வத்தினால் அழகிரிசாமி இவ்வேலையில் ஈடுபட்டார் எனலாம். ஆனால் கு. அழகிரிசாமியின் மனம் கவர்ந்த பேரிலக்கியம் கம்பராமாயணம். அதன்மீது அவர் காட்டிய ஈடுபாட்டிற்கு அளவில்லை. கம்பர் பற்றி வழங்கும் வாய்மொழிக் கதையை ஆதாரமாகக் கொண்டு அவர் இயற்றிய 'கவிச்சக்கரவர்த்தி' நாடகம் எஸ். வி. ஸஹஸ்ரநாமம் அவர்களின் சேவாஸ்டேஜ் நாடகக் குழுவினரால் நடிக்கப் பெற்றது. 'பல்லாயிரம் மக்களின் உள்ளத்தைக் கவர்ந்த நாடகம்' எனவும் 'படிக்கத் தெவிட்டாத சுவையுடையது' (சுந்தரகாண்டப் பதிப்பு, இறுதிப் பக்கம்) எனவும் தமிழ்ப் புத்தகாலய விளம்பரம் கூறுமளவு அப்போது மிகவும் புகழ்பெற்ற நாடகமாக அது விளங்கியது. வஞ்சமகள், வைகுண்டத்தில் கம்பரும் வால்மீகியும் ஆகியவையும் கம்பராமாயணத் தாக்கத்தில் அவர் எழுதிய நாடகங்கள். 'குழந்தைகளை அடிக்க மாட்டேன். கம்பராமாயணத்தின் மீது சத்தியம்' என்று அழகிரிசாமி தம் நாட்குறிப்பில் எழுதி வைத்திருந்ததை எடுத்துக்காட்டி 'அழகிரிசாமியின் கம்பராமாயணம் மீதான மதிப்பு அந்தரங்க உணர்வுகளுடன் தொடர்புடையது' (ப.14) என்று கூறுகிறார் பழ. அதியமான்.

கம்பராமாயணத்தின் மீது மிகுந்த பற்றும் அதில் ஆழ்ந்த புலமையும் இருந்த காரணத்தால் அதனைப் பதிப்பிக்கும் முயற்சியில் இறங்கியுள்ளார். அவர் இம்முயற்சியில் இறங்க சக்தி வை. கோவிந்தன் மிக முக்கியமான காரணமாக இருந்துள்ளார். கம்பராமாயணம் முழுவதையும் ஆய்வுப் பதிப்பாக முப்பது ரூபாய் விலையில் வெளியிட வேண்டும் என்பது வை.கோவிந்தனின் கனவுத் திட்டம். ஆய்வுப் பதிப்பை வையாபுரிப் பிள்ளை மூலமாகச் செயல்படுத்தும் அவர் திட்டம் நிறைவேறவில்லை. மாற்று ஏற்பாடாக அவர் அழகிரிசாமியைக் கொண்டு மலிவு விலைப் பதிப்பை வெளியிட்டுள்ளார். ஏற்கனவே கு. அழகிரிசாமி காவடிச் சிந்து பதிப்பைத் தயாரித்துக் கொடுத்திருந்ததும் அவர் மீது வை. கோவிந்தனுக்கு நம்பிக்கை உருவாகக் காரணமாக இருந்திருக்கலாம்.

கு. அழகிரிசாமி பதிப்பித்த இரண்டு பாகங்களைச் சக்தி காரியாலயம் வெளியிட்டுள்ளது. பாலகாண்டம், அயோத்தியா காண்டம் ஆகியவை ஒரு நூலாகவும் ஆரணிய காண்டம், கிஷ்கிந்தா காண்டம் மற்றொரு நூலாகவும் வெளிவந்துள்ளன. இரண்டாம் நூலிலேயே சுந்தர காண்டத்தையும் வெளியிடுவதாக அறிவித்திருந்த திட்டம் நடக்கவில்லை. அதற்குக் காரணமாகக் 'காகித விலை ஏற்றத்தை' வை. கோவிந்தன் குறிப்பிட்டுள்ளார். சக்தி காரியாலயம் தொடர்ந்து செயல்படவில்லை. 1959ஆம் ஆண்டோடு வெளியீட்டுப் பணியை நிறுத்திவிட்டதாகத் தெரிகிறது. ஆகவே இரண்டாம் நூலோடு சேர்ந்து வெளிவரும் திட்டத்திற்காகத் தயார் செய்திருந்த சுந்தர காண்டத்தைச் சக்தியால் வெளியிட இயலவில்லை. அது பின்னர் 1965இல் தமிழ்ப் புத்தகாலய வெளியீடாக வந்துள்ளது. சக்தி காரியாலயத்தின் திட்டம் தொடர்ந்திருக்குமானால்

கு. அழகிரிசாமி கம்பராமாயணப் பதிப்புக்கான நெறிமுறைகளை வையாபுரிப் பிள்ளையின் கருத்துக்களில் இருந்தே பெற்றுக்கொண்டுள்ளார். கம்பராமாயணம் குறித்து வையாபுரிப் பிள்ளை எழுதியவற்றை மிக ஆழமாக அவர் பயின்றுள்ளார். 'ஆராய்ச்சிப் பேரறிஞர் ஸ்ரீ எஸ். வையாபுரிப் பிள்ளை' (முதல் பாகம், ப.13) என்று அவரைக் குறிப்பிட்டு ஓரிடத்தில் எழுதுகிறார். வையாபுரிப் பிள்ளையின் கருத்துக்களை முழுமையாக உள்வாங்கிக் கொண்ட காரணத்தினால் தம் பதிப்பின் தன்மை எத்தகையது என்பது குறித்த உணர்வு அழகிரிசாமிக்கு இருந்துள்ளது.

யுத்தகாண்டத்தையும் கு. அழகிரிசாமி பதிப்பித்து முடித்திருக்கக்கூடும். கம்பராமாயணம் முழுமைக்குமான அழகிரிசாமி பதிப்பு இல்லை என்பது குறைதான்.

கம்பராமாயணத்தை ஆய்வுப் பதிப்பாக வெளியிட வேண்டும் என வையாபுரிப் பிள்ளை பெரிதும் முயன்றார். 1950ஆம் ஆண்டு காரைக்குடி கம்பன் கழகத்தின் சார்பில் 'கம்பன் ஆராய்ச்சிப் பதிப்பின் தொடக்க விழா' நடைபெற்றுள்ளது. அப்பதிப்பிற்கு வையாபுரிப் பிள்ளை பொறுப்பேற்றிருந்த காரணத்தால் அவ்விழாவிற்கு அவர் தலைமை தாங்கிக் 'கம்பன் ஆராய்ச்சிப் பதிப்பு எப்படி இருக்க வேண்டும்' என மிக விரிவாகவும் செறிவுடனும் ஆற்றிய உரை அவரது கட்டுரைத் தொகுப்பில் இடம்பெற்றுள்ளது. கம்பன் கழகத்தின் அம்முயற்சி தொடராமல் நின்றுவிட்டது. அதன்பின் அத்தகைய ஒரு பதிப்பைச் சக்தி காரியாலயம் வையாபுரிப் பிள்ளை மூலமாகவே கொண்டுவரச் செய்த முயற்சியும் தடைபட்டுவிட்டது. இந்நிலையில் சக்தி வை. கோவிந்தன் ஏதேனும் ஒரு வகையில் கம்பராமாயணத்தை வெளியிட வேண்டும் என்று விரும்பி அழகிரிசாமி மூலமாக அவ்வேலையில் ஈடுபட்டுள்ளார். 'இந்த மகா காவியத்தை வெளியிட நாங்கள் பலமுறை முயற்சி செய்திருக்கிறோம். ரூ 30 விலையில் கம்பராமாயணம் முழுவதும் வெளியிடுவதாகத்தான் திட்டம் செய்தோம். பற்பல காரணங்களால் அப்போது எங்களால் வெளியிட இயல்வில்லை' (ப3) என்று பதிப்புரையில் வை.கோவிந்தன் குறிப்பிட்டுள்ளார். அவர் திட்டத்தை நிறைவேற்ற கு. அழகிரிசாமி பயன்பட்டுள்ளார்.

கு. அழகிரிசாமி கம்பராமாயணப் பதிப்புக்கான நெறிமுறைகளை வையாபுரிப் பிள்ளையின் கருத்துக்களில் இருந்தே பெற்றுக்கொண்டுள்ளார். கம்பராமாயணம் குறித்து வையாபுரிப் பிள்ளை எழுதியவற்றை மிக ஆழமாக அவர் பயின்றுள்ளார். 'ஆராய்ச்சிப் பேரறிஞர் ஸ்ரீ எஸ். வையாபுரிப் பிள்ளை' (முதல் பாகம், ப.13) என்று அவரைக் குறிப்பிட்டு ஓரிடத்தில் எழுதுகிறார். வையாபுரிப் பிள்ளையின் கருத்துக்களை முழுமையாக உள்வாங்கிக் கொண்ட காரணத்தினால் தம் பதிப்பின் தன்மை எத்தகையது என்பது குறித்த உணர்வு அழகிரிசாமிக்கு இருந்துள்ளது. 'ஆராய்ச்சிப் பதிப்பு ஒன்று தேவை என்று பல சந்தர்ப்பங்களிலும் பலரும் வற்புறுத்திக் கூறிவந்தார்கள். ஆனால் அதேசமயத்தில் சாதாரணப் பதிப்புகூடக் கிடைக்கவில்லை' (ப.10) என்றும் 'எல்லா காண்டங்களுக்கும் ஆராய்ச்சிப் பதிப்புகள் வருகிற காலத்தில் வரட்டும்' (ப.11) என்றும் அவர் தம் முன்னுரையில் கூறியுள்ளார். தம் பதிப்பு 'சாதாரணப் பதிப்பு' என்னும் உணர்வு அவருக்கு ஏற்படக் காரணம் வையாபுரிப் பிள்ளையின் ஆராய்ச்சிப் பதிப்பு பற்றிய கருத்துக்களேயாகும்.

ஆராய்ச்சிப் பதிப்பின் முக்கிய அம்சமாகப் பாட நிர்ணயத்தை வையாபுரிப் பிள்ளை குறிப்பிடுகிறார். 'பிரதிகளில் உள்ள பாடல்களை ஆராய்ந்து இன்னதுதான் உண்மைப்பாடம் என்று வரையறுத்து ஆராய்ச்சியாளருக்குப் பயன்படும்படியாகப் பாடபேதங்கள் முதலியவற்றைத் தருவதே' (ஐந்தாம் தொகுதி, ப334) ஆராய்ச்சிப் பதிப்பு என்பது அவர் கருத்து. 'இடைச்செருகல்களை நீக்கித் திருத்தமான பாடங்களை மேற்கொண்டு பாடங்களையெல்லாம் தொகுத்துக் கொடுப்பதே' (ப.353) ஆராய்ச்சிப் பதிப்பு என்றும் அவர் எழுதியுள்ளார். மேலும் தமிழகத்திலும் திருவிதாங்கூர், ஈழம் போன்ற பிற பகுதிகளிலும் உள்ள ஓலைச் சுவடிகளைச் சேகரித்து அவற்றை ஆதாரமாகக் கொண்டு ஆராய்ச்சிப் பதிப்பு உருவாக்கப்பட வேண்டும் (ப356) என்றும் வையாபுரிப் பிள்ளை குறிப்பிட்டுள்ளார். இவ்விரண்டையும் தாம் செய்யவில்லை என்பதால் தம்முடையது ஆராய்ச்சிப்

பதிப்பல்ல என அழகிரிசாமி உணர்ந்துள்ளார். ஆனால் ஓர் ஆராய்ச்சிப் பதிப்பில் இடம்பெற வேண்டியவை என வையாபுரிப் பிள்ளை கூறுவனவற்றைத் தம் பதிப்பில் கொண்டுவர அழகிரிசாமி பெரிதும் முயன்றுள்ளார்.

'செய்யுட்களை ஓசை கெடாதபடி சந்தி பிரித்தலும் பொருள்விளக்கத்திற்கு வேண்டும் குறியீடுகளை அமைத்தலும்' (ப.358) என்பதை வையாபுரிப் பிள்ளை முக்கியமானதாகக் கருதுகிறார். சந்தி பிரித்தல் தொடர்பான எண்ணம் கம்பராமாயணத்தின் முதல் பதிப்பை 1843இல் வெளியிட்ட வேங்கடாசல முதலியாருக்கே இருந்துள்ளது. எனினும் பழைய இலக்கியங்களைச் சந்தி பிரித்து வெளியிடுவது குறித்துத் தொடர்ந்து சிந்தித்தவரும் அதை நடைமுறைப்படுத்த முயன்றவரும் வையாபுரிப் பிள்ளையே ஆவார். அவர் பதிப்பித்த பதினெண்கீழ்க்கணக்கு நூல்கள் ஐந்திலும் இம்முறையைப் பின்பற்றியுள்ளார். மர்ரே பதிப்புகள் இம்முறையில் வெளியாகக் காரணமும் வையாபுரிப் பிள்ளையாகவே இருந்திருக்கலாம். அழகிரிசாமி தம் பதிப்பில் செய்யுட்களைச் சந்தி பிரித்தே வெளியிட்டுள்ளார். எனினும் தமக்கெனச் சந்தி பிரிப்பில் கொள்கை ஒன்றையும் அவர் கொண்டிருந்திருக்கிறார். கம்பராமாயண முதல் பாக முன்னுரையில் 'படித்துப் பொருள் தெரிந்துகொள்ளுவதற்கு உதவியாக இருக்கும் பொருட்டுச் சந்தி பிரித்துப் பாடல்கள் பிரசுரிக்கப்பட்டிருக்கின்றன. கூடியமட்டிலும் அர்த்தம் விளங்கவேண்டும் என்ற ஒரே நோக்கத்துடனேயே சந்தி பிரிக்கப்பட்டிருக்கிறது. யாருக்கும் எளிதில் விளங்கக் கூடிய இடங்களில் பிரிக்காமலும் விடப்பட்டிருக்கும்' (ப.16) என்று எழுதியுள்ளார். வையாபுரிப் பிள்ளை பொருள் விளக்கத்திற்குத் தேவைப்படும் நிறுத்தற்குறியீடுகளைப் பயன்படுத்துவது குறித்துச் சொல்லியுள்ள கருத்தில் அழகிரிசாமி உடன்படவில்லை எனத் தெரிகிறது. நிறுத்தற்குறியீடுகளைப் பயன்படுத்தாத காரணம் குறித்து இரண்டாம் நூலில் விளக்கமாகவும் அழகிரிசாமி எழுதியுள்ளார்.

கம்பராமாயண ஆராய்ச்சிப் பதிப்பில் கதைச் சுருக்கம் இடம்பெற வேண்டும் என்பதும் வையாபுரிப் பிள்ளையின் கருத்தாகும். 'ஒவ்வொரு காண்டத்தின் முன்பும் கம்பன் அமைத்துள்ளவாறு நயம் தோன்ற எழுதிய கதைச் சுருக்கமும் அவ்வாறே ஒவ்வொரு படலத்தின் முன்பும் அப்படலத்திற்குரிய கதைச் சுருக்கமும் படலப் பொருளின் விவரணமும் சேர்ப்பது வாசகர்களுக்குப் பயன்படலாம் என்று தோன்றுகிறது. அன்றியும் ஒவ்வொரு படலத்திலும் உரிய இடங்களில் தலைப்புக்கள் கொடுத்துக் கதைத் தொடர்ச்சியை எளிதில் அறிந்துகொள்ளுமாறு செய்தலும் அவசியமாம்' (ப.358) என்பது வையாபுரிப் பிள்ளையின் வாசகம். இது பொதுமக்களுக்கும் ஆராய்ச்சிப் பதிப்பு சிறிதளவேனும் பயன்படுதல் வேண்டும் என்னும் நோக்கம் கொண்டது என்பதையும் வையாபுரிப் பிள்ளை தெளிவுபடுத்தியுள்ளார். வையாபுரிப் பிள்ளையின் இக்கருத்துக்களுக்கு இணங்கத் தம் பதிப்பில் கதைச் சுருக்கத்தை அழகிரிசாமி எழுதியுள்ளார். ஒவ்வொரு காண்டத்தின் முன்னும் விரிவான கதைச் சுருக்கத்தைப் படலத் தலைப்புகளின்கீழ் அவர் எழுதியுள்ளார். வையாபுரிப் பிள்ளை சொன்னது போல இக்கதைச் சுருக்கம் கம்பன் அமைத்துள்ளவாறு நயம் தோன்ற எழுதப்பட்டுள்ளது. பழஞ்சொற்களைப் பெருமளவு தவிர்த்துத் தம் கால வழக்கிலுள்ள சொற்களையே பெரிதும் பயன்படுத்தி இக்கதைச் சுருக்கத்தை அவர் அமைத்துள்ளார். அதே சமயம் கம்பனின் சொல், பொருள் நயங்கள் குறைவுபடாமல் எழுத வேண்டும் என்னும் கொள்கையைக் கடைபிடித்துள்ளார். சான்றாக மந்தரை சூழ்ச்சிப் படலக் கதைச் சுருக்கத்தில் சிறுபகுதி: 'மூன்று உலகங்களுக்கும் துன்பம் செய்யப்போகிறவளான அவள் ராமன் சிறு பிள்ளையாய் இருந்தபோது வில்லில் மண் உருண்டையை வைத்துத் தன்மீது தெறித்ததைத் திரும்பவும் தன் நினைவுக்குக் கொண்டுவந்து அந்தக் கடுகடுப்புடனேயே கைகேயியின் மாளிகைக்குச் சென்றாள். அப்போது கைகேயி தூங்கிக்கொண்டிருந்தாள். அவளுடைய பாதங்களைத் தீண்டித் தூக்கத்திலிருந்து எழுப்பினாள்' (ப. 79)

வையாபுரிப் பிள்ளை கூறியது போல ஒவ்வொரு படலத்தின் முன்னும் கதைச் சுருக்கத்தை அழகிரிசாமி தரவில்லை. காண்டத்திற்கான கதைச் சுருக்கம் படல வரிசையில் விரிவாக அமைந்த காரணத்தால் படலத்தின்முன் கொடுப்பது அவசியமாகவில்லை. ஆனால் வையாபுரிப் பிள்ளை கூறியுள்ள முறையில் ஒவ்வொரு படலத்தின் முன்பும் படலப் பொருள் விவரணம்

கம்பராமாயணப் பதிப்புக்கென வையாபுரிப் பிள்ளை உருவாக்கித் தந்த பதிப்பு நெறிமுறைகளை அழகிரிசாமி எடுத்துக்கொண்டிருந்தபோதும் சுயசிந்தனையோடு அவராகவே சிலவற்றையும் பதிப்பில் பின்பற்றியுள்ளார். ஏற்கனவே அச்சில் வந்த கம்பராமாயணப் பதிப்புகளில் சிறந்தவற்றைத் தம் பதிப்புக்கு ஆதாரமாக எடுத்துக்கொண்ட அழகிரிசாமி அந்த அச்சுப் பிரதிகளில் காணப்படும் பாடங்களை ஆராய்ந்து தமக்குச் சிறந்ததெனத் தோன்றிய பாடங்களை இப்பதிப்பில் கையாண்டிருக்கிறார்.

கொடுக்கப்பட்டுள்ளது. நீர் விளையாட்டுப் படலம் என்னும் தலைப்பின்கீழ் பகர அடைப்பிற்குள் 'தசரதனுடைய பரிவாரத்திலிருந்த ஆணும் பெண்ணும் நீர் விளையாடியதைக் கூறும்பகுதி' என்று கொடுக்கப்பட்டுள்ளது. இவ்விதமே எல்லாப் படலத்தின் முன்னும் பொருள் விவரணம் கொடுக்கப்பட்டுள்ளது.

ஒவ்வொரு படலத்திலும் உரிய இடங்களில் தலைப்புகள் கொடுத்தலையும் வையாபுரிப் பிள்ளை குறிப்பிடுகிறார். இதனையும் அழகிரிசாமி தம் பதிப்பில் கடைபிடித்துள்ளார். கைகேயி சூழ்வினைப் படலத்தில் 'முன்பு தருவதாகச் சொன்ன வரங்களைக் கைகேயி கேட்டல், தசரதன் துயரத்தினால் கீழே விழுதல், தசரதன் அயர்ந்து விழுதல், கைகேயிடம் தசரதனின் வேண்டுகோள், கைகேயின் பிடிவாதம்' உள்ளிட்ட பல்வேறு உள்தலைப்புகள் கொடுக்கப்பட்டுக் கதைத் தொடர்ச்சி வாசகர்களுக்கு விளங்குமாறு செய்யப்பட்டுள்ளது. அழகிரிசாமியின் பதிப்பு முழுக்கவும் இம்முறை பின்பற்றப்பட்டுள்ளது.

அனுபந்தப் பகுதியில் அபிதான விளக்கம், செய்யுள் முதற்குறிப்பு முதலிய அகராதிகள் இடம்பெற வேண்டும் என்பதும் வையாபுரிப் பிள்ளையின் கருத்தாகும். அதற்கேற்ப ஒவ்வொரு காண்டத்தின் இறுதியிலும் பாட்டு முதற்குறிப்பு அகராதியையும் அரும்பத உரை அகராதியையும் அழகிரிசாமி கொடுத்துள்ளார். 'இந்த நூலைப் படிக்கும் வாசகர்கள் முதலில் அரும்பத உரை அகராதி முழுவதையும் படித்துவிட வேண்டியது அவசியம். அப்பொழுதுதான் தங்களுக்குச் சாதாரணமாகத் தெரிந்துள்ள பல எளிய வார்த்தைகளுக்கு வேறுபொருளும் உண்டு என்பதை அறிய முடியும். அரும்பொருள் தெரியாவிட்டால் பாட்டைப் புரிந்துகொள்ள முடியாது' (இரண்டாம் பாகம், ப.8) என்று அழகிரிசாமி அரும்பத உரை அகராதியின் முக்கியத்துவம் குறித்துக் குறிப்பிட்டுள்ளது கவனத்தில் கொள்ளத்தக்கதாகும்.

ஆராய்ச்சிப் பதிப்பில் விரிந்த முன்னுரை அமைய வேண்டியது மிக மிக அவசியம் என்பதும் வையாபுரிப் பிள்ளையின் எண்ணமாகும். முன்னுரையில் பல்வேறு தலைப்புகளில் செய்திகள் விளக்கமாக அமையவேண்டும் என்று அவர் கருதியுள்ளார். என்னென்ன தலைப்புகளில் செய்திகள் அமைய வேண்டும் என்பதையும் அவர் விளக்கியுள்ளார். அதற்கேற்ப அழகிரிசாமியின் பதிப்பில் கம்பர் வரலாற்றை உள்ளடக்கிய முன்னுரைப் பகுதி 35 பக்கங்களில் இடம்பெற்றுள்ளது. எல்லா மதத்தினரும் போற்றும் வகையில் சிறப்பிடம் பெற்ற இலக்கியம் கம்பராமாயணம் என்பதையும் தமிழ் இலக்கிய வரலாற்றில் கம்பராமாயணத்தின் இடம் என்ன என்பதையும் செறிவுடன் கூறித் தொடங்குகிறது முன்னுரை. அக்காப்பியம் இன்றுள்ள நிலை பற்றி அடுத்து அவர் விளக்குகிறார். 'ஒரு பாட்டில் 20 பாடபேதங்கள்கூட இருக்கின்றன. அப்படியானால் அந்தப் பாட்டை 400 வகையாகப் பெயர்த்தெழுதலாம். அந்த 400 வகைகளில் கம்பர் பாடிய முறையில் அமைந்துள்ள அசல் செய்யுள் எது என்பதைத் தேர்ந்தெடுக்க வேண்டும். இப்படியே சுமார் 10000 பாடல்களிலும் பல லட்சக்கணக்கான பாடபேதங்கள் உள்ளன' (ப.9) என்று எழுதியுள்ளார். அடுத்துக் காவியத்தின் உண்மை பெயர் எது, காண்டங்களும் படலங்களும், செருகு கவிகள், பாதிக்குமேல் செருகு, திருத்தங்கள், வ.வே.சு. ஐயரும் டி.கே.சியும், இந்தப் பதிப்பு, பாலகாண்டம், அயோத்தியா காண்டம், நக்ஷத்திரக் குறிகள் ஆகிய உள்தலைப்புக்களில் விரிவாகப் பல்வேறு செய்திகளையும் அழகிரிசாமி நுட்பமாகவும் செறிவாகவும் முன்னுரையில் கொடுத்துள்ளார். அதைத் தொடர்ந்துள்ள 'கம்பர் வரலாறு' என்னும் பகுதி அழகிரிசாமியின்

ஆராய்ச்சி மனோபாவத்திற்கு மிகச் சிறந்த எடுத்துக்காட்டாகும்.

இவ்வாறு கம்பராமாயணப் பதிப்புக்கென வையாபுரிப் பிள்ளை உருவாக்கித் தந்த பதிப்பு நெறிமுறைகளை அழகிரிசாமி எடுத்துக் கொண்டிருந்தபோதும் சுயசிந்தனையோடு அவராகவே சிலவற்றையும் பதிப்பில் பின்பற்றியுள்ளார். ஏற்கனவே அச்சில் வந்த கம்பராமாயணப் பதிப்புகளில் சிறந்தவற்றைத் தம் பதிப்புக்கு ஆதாரமாக எடுத்துக்கொண்ட அழகிரிசாமி அந்த அச்சுப் பிரதிகளில் காணப்படும் பாடங்களை ஆராய்ந்து தமக்குச் சிறந்ததெனத் தோன்றிய பாடங்களை இப்பதிப்பில் கையாண்டிருக்கிறார். மேலும் இடைச்செருகல் என்று எந்தப் பாட்டையும் அவர் ஒதுக்கவில்லை. அதேபோல எந்தப் பாட்டிலும் எவ்விதத் திருத்தமும் செய்யவில்லை. ஒரு பாடலுக்கு எந்தப் பாடமும் பொருந்தாது எனத் தோன்றினால் தாமாகவே ஒரு பாடத்தை ஊகம் செய்து அடிக்குறிப்பில் கொடுக்கும் முறையைப் பயன்படுத்தியுள்ளார். ஆரணிய காண்டத்திலுள்ள 514ஆம் பாடலில் அப்படி அவர் கொடுத்துள்ள அடிக்குறிப்பு வருமாறு: '514ம் பாட்டு: இரண்டாவது அடி, "ஈரும் வாட்கொழு என மடுத்து உழுதிரோ எறிபோர்த்" என்று இருந்தால் பொருத்தமாக இருக்குமெனத் தோன்றுகிறது. ஏனெனில், இரண்டாவது அடியிலும், நான்காவது அடியிலும் " வீரவாள்" என்ற ஒரே சொல் வருவது அழகல்ல. "வெறிபோர்'' என்பது சந்தி பிரிக்கும்போது "எறிபோர்'' என்று ஆகும். "எறிபோர்" என்பது "ஈரும் வாட்கொழு" என்பதற்கு மோனையாக அமையும். "வெறிபோர்" என்ற பாடத்தை வைத்துக்கொண்டு உரை எழுதியவர்கள் "வெறிப்போர்'' என்பதற்கான உரையையே எழுதியிருப்பதால், "வெறிபோர்" என்பது சரியான பாடமல்ல என்பதும், அது "எறிபோர்" என்று இருப்பதுதான் சரி என்பதும் தெளிவு.' (ப. 111)

கம்பராமாயணத்தில் ஏராளமான இடைச்செருகல்கள் உள்ளன என்பதுதான் அவர் கருத்தாகும். அசல் கவிகள் என டி.கே.சி. குறிப்பிடும் கருத்துக்களோடு இவருக்கு உடன்பாடு இருப்பினும் பதிப்பில் அப்படிப்பட்ட கருத்து எதையும் புகுத்தவில்லை. 'யார் யார் எந்தெந்த நோக்கத்துடன் கம்பராயாமணத்தைப் படிக்க விரும்பினாலும் அவர்களுக்கெல்லாம் உதவியாக இருக்க வேண்டும் என்பதே எல்லாப் பாடல்களைக் கொண்ட இந்தப் பதிப்பின் நோக்கம்' (ப. 15) என்று தம் பதிப்பு நோக்கத்தை முதல் பாக முன்னுரையில் தெளிவாக்கி உள்ளார். அதேபோலப் பல பாடல்களுக்கு நட்சத்திரக் குறிகள் இட்டுள்ளார். அக்குறியிடப்பட்ட பாடல்கள் சுவை மிகுந்தவை என்பது அவர் கருத்து. கதைச் சுருக்கத்தை முதலில் படித்துவிட்டுப் பின்னர் நட்சத்திரக் குறியிடப்பட்ட பாடல்களை மட்டும் படிக்கும் ஒருவர் கம்பராமாயணத்தின் சுவையை அனுபவிப்பதற்கு உதவியாக இருக்கும் என்பதே இதன் நோக்கம்.

தம் பதிப்பைச் சாதாரணப் பதிப்பு என்றும் எல்லோருக்கும் பயன்படும் பதிப்பு என்றும் அழகிரிசாமி குறிப்பிட்டாலும் இப்பதிப்புக்கான அடிப்படை நோக்கமும் அழகிரிசாமியின் பார்வையும் இலக்கிய நோக்கு கொண்டவை என்பதுதான். 'கம்பராமாயணத்தின் ஒப்பற்ற பெருமையை அறிய வேண்டுமானால் அதை இலக்கிய நோக்குடன் மட்டும் படிக்க வேண்டும்' (ப. 9) என்று அவர் கூறுவது மிகவும் முக்கியமானது. இத்தொடர் அக்காலத்தில் கம்பராமாயணத்தைத் தீயிட்டுக் கொளுத்த வேண்டும் எனத் திராவிட இயக்கம் நடத்திய போராட்டத்துக்கான எதிர்வினை போலத் தோன்றுகிறது. எனினும் இலக்கிய நோக்குத்தான் இவரது பதிப்புக்கு அடிப்படை என்பதையும் விளக்குகிறது.

கம்பராமாயணத்தில் ஏராளமான இடைச்செருகல்கள் உள்ளன. 'கம்பராமாயணத்தைக் கவிதை உணர்ச்சியோடு படிப்பவர்கள் பல பகுதிகளைச் செருகு கவிகள் என்று கூறும் நிலைக்கு வருவார்கள் என்பது திண்ணம். அப்போது புத்தகத்தில் பாதியோ அல்லது பாதிக்கும் அதிகமோ செருகுதான் என்று அவர்கள் கண்டு உணரக் கூடும்' (ப. 11) எனக் குறிப்பிடும் அழகிரிசாமி இவ்விசயத்தில் டிகேசியை ஆதரிக்கக்கூடியவர்தான். ஆயினும் ஒரு பதிப்பாசிரியராகத் தம் வேலையைத் திறம்படச் செய்ய வேண்டும் என்னும் எண்ணத்தில் அனைத்துப் பாடல்களையும் நூலில் கொடுத்துள்ளார். தாம் நட்சத்திரக் குறியிட்ட பாடல்கள் மட்டுமே கம்பர் கவிகள் என்று கொண்டு மற்றவற்றை இடைச்செருகல் என

ஒதுக்கிவிட்டாலும் தமக்கு ஆட்சேபனை இல்லை எனவும் கூறுகின்றார். அவர் படைப்பாளர் என்பதனால் இலக்கியச் சுவை பற்றிய கருத்து வேறுபாடுகளையும் ஒப்புக்கொள்கின்றார். இவ்வாறு வையாபுரிப் பிள்ளையின் கருத்துக்களில் இருந்து மாறுபட்டு அழகிரிசாமியின் பதிப்பு விளங்கும் இடங்கள் பல உள்ளன.

கம்பராமாயணப் பாடவேறுபாடு குறித்து வையாபுரிப் பிள்ளை எழுதியுள்ளவற்றைக் கணக்கில் கொண்டு அவர் சரியான பாடம் எனக் கருதித் தம் கட்டுரைகளில் குறிப்பிட்டுள்ளவற்றை அழகிரிசாமி தம் பதிப்பில் மேற்கொண்டுள்ளார். அழகிரிசாமி பதிப்பின் மற்றொரு சிறப்பு பல அடிக்குறிப்புகளை அவர் தருவதாகும். முதல் நூலில் ஓரளவும் அடுத்த இரண்டு நூல்களில் மிக அதிகமாகவும் இக்குறிப்புகள் இடம்பெற்றுள்ளன. அருஞ்சொல் அகரநிரல் நூலின் இறுதியில் அமைவதால் அடிக்குறிப்பு அதிலிருந்து வேறுபட்டு விளங்குகின்றது. சிறு சிறு விளக்கங்களைக் கொடுத்தால் பாடலின் பொருள் சட்டென விளங்கும் என அவர் கருதும் இடங்களுக்கு அடிக்குறிப்பு விளக்கம் தருகின்றது. சொல் விளையாட்டு இடம்பெறும் சில பாடல்களுக்கு அழகிரிசாமி முழு உரையே எழுதியிருக்கின்றார். வரைக்காட்சிப் படலத்தில் (பாலகாண்டம்) ஒன்பது பாடல்களுக்கு அவரது சிறந்த உரை இடம்பெற்றுள்ளது. தொகைச் சொற்களை விளக்குதல், பாடலைப் பொருள்கொள்வதில் ஏற்படும் சிக்கல்களைக் கூறுதல், சுவடிப் பாடங்கள் எதுவும் பொருந்தாத சமயத்தில் தம் ஊகித்ததைத் தருதல், சிலேடை முதலிய உத்திகளை விளக்குதல் என அவரது அடிக்குறிப்புகள் வாசிப்பவருக்கு மிகவும் பயன்படுவனவாக உள்ளன.

நவீனப் படைப்பிலக்கியவாதியான கு. அழகிரிசாமி கம்பராமாயணப் பதிப்பில் ஈடுபடுவதற்கு மற்றொரு சூழல் பின்னணியும் காரணமாக இருந்திருக்கக்கூடும். 1950களில் மர்ரே எஸ். ராஜம் பதிப்பு வெளிவரத் தொடங்கியது. சங்க இலக்கியம், பதினென்கீழ்க்கணக்கு, காப்பியங்கள், சிற்றிலக்கியங்கள் எனப் பலவற்றை வெளியிட்ட மர்ரே ராஜம் பதிப்பிற்கும் வையாபுரிப் பிள்ளை வகுத்துக் கொடுத்த பதிப்பு நெறிமுறைகளே அடிப்படை என்று சொல்லலாம். சந்தி பிரித்தல், நிறுத்தற்குறியீடுகளைப் பயன்படுத்துதல், பாடங்களைத் தேர்வு செய்தல் எனப் பல நுட்பங்களையும் வையாபுரிப் பிள்ளையிடமிருந்து மர்ரே எஸ். ராஜம் பதிப்பு எடுத்துக்கொண்டுள்ளது. பல தமிழறிஞர்களைப் பதிப்பாசிரியர் குழுவில் கொண்டு இயங்கிய மர்ரே பதிப்பின் தூண்டுதலே அழகிரிசாமியின் பதிப்பு உருவாக ஒருவகையில் காரணமாக இருந்திருக்கலாம்.

சந்தி பிரித்தல், நிறுத்தற்குறியீடுகளைப் பயன்படுத்துதல், பாடங்களைத் தேர்வு செய்தல் எனப் பல நுட்பங்களையும் வையாபுரிப் பிள்ளையிடமிருந்து மர்ரே எஸ். ராஜம் பதிப்பு எடுத்துக்கொண்டுள்ளது. பல தமிழறிஞர்களைப் பதிப்பாசிரியர் குழுவில் கொண்டு இயங்கிய மர்ரே பதிப்பின் தூண்டுதலே அழகிரிசாமியின் பதிப்பு உருவாக ஒருவகையில் காரணமாக இருந்திருக்கலாம்.

சக்தி வை. கோவிந்தன் வையாபுரிப் பிள்ளையைக் கொண்டு கம்பராமாயணம் முழுவதையும் வெளியிடக் கருதியுள்ளார். ஆனால் அத்திட்டம் நிறைவேறவில்லை. 1956இல் வையாபுரிப் பிள்ளை காலமானதும் அதற்கு முக்கியமான காரணமாகும். ஆனால் கம்பராமாயணத்தை முழுமையாக வெளியிட வேண்டும் என்பது வை.கோவிந்தனின் பெரும் கனவு. இச்சூழலில் மர்ரே எஸ். ராஜம் பதிப்பு வெளிவரும்முன் தம் பதிப்பை வெளியிட்டுவிட வேண்டும் என்னும் வேகத்தின் காரணமாக அழகிரிசாமியைக் கொண்டு விரைவாக இப்பதிப்பை அவர் உருவாக்கியுள்ளார். அழகிரிசாமியின் உழைப்பைப் பற்றிப் பதிப்புரையில் அவர் குறிப்பிடும்போது 'கடந்த இரண்டு மாதங்களாக இரவு பகலென்றும் பாராமல்' அழகிரிசாமி இப்பணியில் ஈடுபட்டார் என வியந்து எழுதுகிறார். வையாபுரிப் பிள்ளையைக் கொண்டு பதிப்பிக்க இயலாத குறையை

அழகிரிசாமியின் பதிப்பு நிறைவு செய்துவிடாது. எனினும் தம் பதிப்பகம் மூலமாகக் கம்பராமாயணத்தை வெளியிட்டுவிட வேண்டும் என்னும் அவரது ஆர்வமே இப்பதிப்புக்கு அடிப்படையாக இருக்கலாம்.

மர்ரே பதிப்பு வெளிவருவதற்கு எட்டு மாதங்களுக்கு முன்பாகவே அழகிரிசாமி பதிப்பின் முதல் நூல் வெளியாகி உள்ளது. அதன் முன்னுரையில் ' சமீபகாலமாகக் கம்பராமாயணப் புத்தகம் கடைகளில் கிடைப்பதற்கில்லாமல் போய்விட்டது' (ப. 13) என அழகிரிசாமி குறிப்பிடுகிறார். ஆனால் 1958 டிசம்பரில் மர்ரே ராஜம் பதிப்பில் கம்பராமாயணம் முழுவதும் விற்பனைக்கு வந்துவிட்டது. இச்சூழலில் 1959 ஜனவரியில் அழகிரிசாமி பதிப்பின் இரண்டாம் நூலாக ஆரணிய, கிஷ்கிந்தா காண்டங்கள் வெளிவந்துள்ளன. இந்நூலின் முன்னுரையிலும் மர்ரே பதிப்பு குறிப்பிடப்படவில்லை. எனினும் மர்ரே பதிப்பிலிருந்து தம் பதிப்பு வேறுபடுவது குறித்து இரண்டாம் நூலின் முன்னுரையில் மறைமுகமாக அழகிரிசாமி குறிப்பிட்டு எழுதவேண்டிய தேவை உருவாகி உள்ளது. குறிப்பாகச் சந்தி பிரித்தல் தொடர்பாக அழகிரிசாமி தம் கருத்தை விளக்கமாக எழுதியுள்ளார்.

சந்தி பிரிப்பு குறித்து அவர் கூறியுள்ளதாவது:

'வாசகர்களுக்குப் பாட்டுச் சுலபமாகப் புரியவேண்டும் என்ற ஒரே நோக்கத்துடன்தான் சந்திகள் பிரிக்கப்பட்டிருக்கின்றன. அதனால், பிரிக்காமலே புரியக்கூடிய இடங்களில் அப்படியே விடப்பட்டுள்ளன. பல சந்தர்ப்பங்களில் சந்திகளைப் பிரிக்கும்போது, சீர்களைப் பிரிப்பது சிரமமாகிவிடும். பிரித்துவிட்டாலும் சீர்களின் அளவு கூடிவிடும். இருந்தாலும், சீர்களைப் பொருட்படுத்தாமல், பாட்டு விளங்குவதற்காகப் பல இடங்களில் சந்திகளைப் பிரித்தே பிரசுரித்திருக்கிறோம். அப்படிப்பட்ட இடங்களில், அன்பர்கள் சிறிது முயற்சி எடுத்துக்கொண்டால், சந்திகளைப் பழையபடியும் இணைத்துச் சந்த நயத்துடன் பாட்டைப் பாடிவிடலாம்" (ப. 7)

மர்ரே பதிப்பின் சந்தி பிரிப்பில் சீர் பிரிப்பு கவனம் கொள்ளப்படவில்லை. செய்யுளின் சந்தத்தை அறிவதோ பாவகையைக் கண்டுணர்வதோ இயலாத வகையில் அதன் சந்தி பிரிப்பு அமைந்திருக்கும். சீர் பிரிப்பு குறித்து அழகிரிசாமி பதிப்பு மிகுந்த கவனம் கொண்டுள்ளது. சீர்களின் அளவு கூடாமல் இருக்க வேண்டும், வாசிப்பவர் பாவகையை அறிய வேண்டும், சந்தத்தோடு வாசிக்க வேண்டும் ஆகியன அழகிரிசாமியின் நோக்கம்.

மர்ரே பதிப்பின் சந்தி பிரிப்பில் சீர் பிரிப்பு கவனம் கொள்ளப்படவில்லை. செய்யுளின் சந்தத்தை அறிவதோ பாவகையைக் கண்டுணர்வதோ இயலாத வகையில் அதன் சந்தி பிரிப்பு அமைந்திருக்கும். சீர் பிரிப்பு குறித்து அழகிரிசாமி பதிப்பு மிகுந்த கவனம் கொண்டுள்ளது.

மர்ரே பதிப்பின் மிக முக்கியமான அம்சங்கள் சந்தி பிரிப்பும் நிறுத்தற்குறி பயன்பாடுமே ஆகும். அழகிரிசாமி முதல் நூலில் சந்தி பிரிப்பு குறித்துக் 'கூடிய மட்டிலும் அர்த்தம் விளங்க வேண்டும் என்ற ஒரே நோக்கத்துடனேயே சந்தி பிரிக்கப்பட்டிருக்கிறது. யாருக்கும் எளிதில் விளங்கக்கூடிய இடங்களில் பிரிக்காமலும் விடப்பட்டிருக்கும்' (ப.16) என்று ஓரிரு தொடர்களில் எழுதியுள்ளார். நிறுத்தற்குறிப் பயன்பாடு குறித்து எதுவும் கூறவில்லை. ஆனால் இரண்டாம் நூலில் இவ்விரு விசயங்கள் குறித்தும் விளக்கமாகக் கூறியுள்ளார்.

அதேபோல நிறுத்தற்குறிகளைப் பொருள் விளக்கத்திற்காக மர்ரே பதிப்பில் பயன்படுத்தியுள்ளனர். ஆனால் அழகிரிசாமியின் பதிப்பில் நிறுத்தற்குறி பயன்பாடே கிடையாது. அதைக் குறித்து அவர் எழுதியுள்ள கருத்து மர்ரே பதிப்பின் மீதான அவரது விமர்சனம் என்றும் எடுத்துக்கொள்ள முடியும். அது வருமாறு:

'கால்புள்ளி, அரைப்புள்ளி, கேள்விக்குறி, ஆச்சரியக்குறி போன்றவற்றை இந்தப் பதிப்பில் வேண்டுமென்றே நாம் பயன்படுத்தவில்லை. அந்தக் குறிகளை வைக்கவேண்டுமென்றால், பாட்டின் சந்திகள் எல்லாவற்றையுமே பிரிக்கும்படி நேரும்: சீர்கள் பிரிப்பது சிரமமாகிவிடும். கடைசியில் கம்பருடைய சந்த நயம் மிக்க அழகான கவிகளை ஒரு விசித்திரமான வசனம்போல வாசிக்கும் நிலை ஏற்படும். அத்துடன் அந்தக் குறிகளை வைப்பதால் அநேகப் பாடல்களுக்குப் பதிப்பாசிரியர் கொண்ட பொருள்தான் சரியான பொருள் என்று வரையறுக்கப்பட்டு, வேறு சிறந்த பொருள்களை அறிஞர்கள் கண்டு உணருவதற்கும் வழியில்லாமல் போய்விடும்' (ப. 8)

சீர் பிரிப்புக்கும் சந்த நயம் மிக்க கவிகளைச் சந்தத்தோடே வாசிக்க வேண்டும் என்பதற்கும் அழகிரிசாமி கொடுத்திருக்கும் முக்கியத்துவமே நிறுத்தற்குறி பயன்பாட்டை அவர் தவிர்க்கக் காரணம் என்பது தெளிவாகிறது. அத்தோடு நிறுத்தற்குறியின் பயன்பாடு பாடலுக்குப் பொருள் கொள்வதை ஒற்றைத்தன்மையில் முடக்கிவிடும் என்பதும் அழகிரிசாமியின் எண்ணம். ஒரு பாடலுக்குப் பல்வேறு வகையாகப் பொருள்கொள்ள வாய்ப்பு இருக்க வேண்டும் என்னும் இலக்கிய நோக்கம் அழகிரிசாமியுடையது ஆகும். வையாபுரிப் பிள்ளை போன்ற அறிஞர்கள் கருத்தில்கொள்ளாத இந்த இலக்கிய நோக்கை அழகிரிசாமி கவனத்தில் கொண்டதற்கு முக்கியமான காரணம் அவர் படைப்பாளியாக இருப்பதுதான். மர்ரே பதிப்பின் மீதான விமர்சனம் அழகிரிசாமியின் இலக்கிய நோக்கை எடுத்துக்காட்ட உதவியிருக்கிறது. புலமையோடு கூடிய படைப்புணர்வு அழகிரிசாமியின் பதிப்பில் செயல்பட்டிருக்கிறது என்பதே அவரது பதிப்பின் தனித்தன்மையாகும். அவர் மேற்கொண்டிருக்கும் பாடங்கள் குறித்து விரிவான அளவில் ஆய்வு மேற்கொண்டால் இந்த இலக்கிய நோக்கம் இன்னும் தெளிவாகும்.

**துணைநூற்பட்டியல்:**


1. கு. அழகிரிசாமி (ப.ஆ), 2004, சென்னிகுளம் அண்ணாமலை ரெட்டியார் பாடிய காவடிச்சிந்து, சென்னை, வ.உ.சி. நூலகம், இரண்டாம் பதிப்பு.

2. கு. அழகிரிசாமி (ப.ஆ), 1958, கம்ப ராமாயணம் முதல் பாகம் (பால காண்டம், அயோத்தியா காண்டம்), சென்னை, சக்தி காரியாலயம்.

3. கு. அழகிரிசாமி (ப.ஆ), 1959, கம்ப ராமாயணம் இரண்டாம் பாகம் (ஆரணிய – கிஷ்கிந்தா காண்டங்கள்), சென்னை, சக்தி காரியாலயம்.

4. கு. அழகிரிசாமி (ப.ஆ), 1965, கம்ப ராமாயணம்: சுந்தர காண்டம், சென்னை, தமிழ்ப் புத்தகாலயம்.

5. எஸ். வையாபுரிப் பிள்ளை, 1993, தமிழர் பண்பாடு – கம்பன் காவியம் (ஐந்தாம் தொகுதி), சென்னை, வையாபுரிப் பிள்ளை நினைவு மன்றம்.

6. பழ. அதியமான் (ப.ஆ), 2011, கு. அழகிரிசாமி சிறுகதைகள், நாகர்கோவில், காலச்சுவடு பதிப்பகம்.

7. பதிப்பாசிரியர் குழு, 1958, கம்பராமாயணம் – பாலகாண்டம், சென்னை, மர்ரே அண்டு கம்பெனி.




# சங்க இலக்கிய உருவாக்கம்: அறியப்படாத சில மரபுகள்

அ. சதீஷ்

பாட்டும் தொகையுமாகத் தொகுக்கப்பட்டுள்ள சங்க இலக்கிய ஆக்கங்கள் தமிழ்ச்சமூகத்தின் தொன்மையான இலக்கிய ஆக்கங்களாகும். இவைகள் பழந்தமிழகத்தின் (இன்றைய தமிழகம், கேரளா, கர்நாடகத்தின் தென்கிழக்குப் பகுதியின் சில இடங்கள், ஆந்திரத்தின் தென்கோடிப் பகுதி உள்ளிட்ட பகுதிகள்) பல்வேறு பகுதிகளில் பாடப்பட்ட பாடல்களாகும். இப்பாடல்கள் பாடப்பட்ட காலம் குறித்து அறிஞர்களிடையே கருத்து வேறுபாடு நிலவுகிறது. பண்டைய உரையாசிரியர்கள் கடைச்சங்கத்தில் பாடப்பட்டவை இவை எனக் கொள்ளுகின்றனர். தமிழகத்தில் கிடைக்கின்ற கி.மு. நான்காம் நூற்றாண்டைச்சார்ந்த தொல்லியல் சான்றுகளான கல்வெட்டுகள், புழங்குபொருட்கள், நாணயங்கள், பாறையோவியங்கள் குறியீடுகள் ஆகியன சங்கப்பாடல்களோடு ஒத்துச்செல்வதை வரலாற்று ஆய்வாளர்கள் உறுதிப்படுத்தியுள்ளனர். இதனைக்கொண்டு பாட்டும் தொகையுமான பாடல்கள் கி.மு. 4 முதல் கி.பி. 250 வரையான விரிந்த கால எல்லைக்குள் பாடப்பட்டவை என நவீன ஆய்வுகள் உறுதிப்படுத்துகின்றன.

ஏறக்குறைய 650 ஆண்டுக்கால எல்லையில் பாடப்பட்ட இப்பாடல்கள் தமிழ்ச்சமூகத்தின் பல்வேறு வளர்ச்சி வரலாற்றைப் பதிவுசெய்துள்ளன. மனித வாழ்வின் நுட்பமான பகுதிகளை மொழியால் கலையாக்கம் செய்த இப்பாடல்களை அகம், புறம் என வகைப்படுத்தியது தொல் இலக்கண மரபு. இக்காலகட்டத்தில் தமிழகம் பெருங்கற்காலத்திலிருந்து நுண்கற்காலத்திற்கும் அதிலிருந்து உலோகக் காலத்திற்குமாக வளர்ச்சியடைந்தது. இதனூடான சமூக அமைப்பு என்பது இனக்குழுச் சமூகத்திலிருந்து வேளாண்மைச் சமூகத்திற்கும் அதிலிருந்து வணிக மேலாண்மைச் சமூகத்திற்கும் என முன்னேறியது. ஆனாலும் இச்சமூக வளர்ச்சி ஒரே படிநிலை வளர்ச்சி கொண்டதாக அமையவில்லை வேளாண்மைச் சமூகத்திற்குள்ளேயே பல வேளாண்மைச் சமூகங்கள் நிலவியுள்ளன. இச்சமூக வளர்ச்சியில் கல்வி என்பது எல்லோருக்குமானதாக இருந்ததுடன் எல்லாப் பகுதிகளிலும் பரவியிருந்தது.

இப்பின்புலத்தில் உருவான பாடல்கள் பல்வேறு முறைமைகளில் பாடப்பட்டதுடன் பல்வேறு மரபுகளிலிருந்து கிளைத்ததை நவீன ஆய்வுகள் வெளிப்படுத்துகின்றன.

குறிப்பாகப் பாட்டும் தொகையுமான பாடல்களின் உருவாக்கப் பின்புலத்தினை ஆய்வுக்கு உட்படுத்தும் அறிஞர்களான தமிழண்ணல் மற்றும் ராஜ்கௌதமன் ஆகியோர் மூன்று வகையான மரபுகளை அடையாளப்படுத்துகின்றனர்.

1. நில உடைமைச் சமூக நாகரிகத்திற்கு முந்தைய இனக்குழுச் சமூக நாகரிக காலத்தில் வாய்மொழியாக உருவாகியிருந்த இசைக்குடிகளின் பாணர் மரபு.
2. நிலவுடைமைச் சமூக நாகரிகக் காலத்தில் புரவலர்களைப் போற்றுவதற்காக உருவாக்கப்பட்ட புலவர் மரபு.
3. இந்தியத் துணைக்கண்டத்தில் பெருங்கதையாடலாகப் பரவியிருந்த சாஸ்த்திர மரபினை அடியொற்றித் திணை இலக்கியங்களின் கோட்பாட்டு விதிகளை வகுத்த முந்துநூல் மரபு கொண்ட தொல்காப்பிய மரபும் அது ஏற்படுத்திய தொடர்ச்சியான உரை மரபும் .(2006: 289)

இம்மூன்று மரபுகளைத்தவிர வேறு மரபுகளும் தொழிற்பட்டுள்ளன. குறிப்பாக முதலாவதாகச் சுட்டப்பட்டுள்ள இசைக்குடிகளின் பாணர் மரபு என்பதையே இரண்டாகப் பாகுபடுத்தி அறியவேண்டியுள்ளது. நாட்டார் வாய்மொழிப் பாடல் மற்றும் நிகழ்த்துக்கலை மரபின் தொடர்ச்சியாக உருவான பாடல் மரபு என்றும் தொழில்முறை சார்ந்த நிகழ்த்துக் கலை வல்லுநர்களான பாணர் மரபு என்றும் பகுத்து ஆராய முடியும். பாணர் மரபு என்பது சங்க இலக்கிய உருவாக்கப் பின்புலத்தில் வலுவாகத்



உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத்தில் உதவிப் பேராசிரியராகப் பணியாற்றி வருகிறார். கு.ப.ரா.வின் கதைகள் மற்றும் கட்டுரைகளைத் தொகுத்து ஆய்வுப் பதிப்பைக் கொண்டு வந்துள்ளார். ரஸிகன் படைப்புகளையும் பதிப்பித்துள்ளார். சங்க இலக்கிய உரைகள், நூல்பதிப்பும் நுண் அரசியலும் ஆகிய நூல்களையும் வெளியிட்டுள்ளார். மாற்றுவெளி ஆசிரியர் குழுவில் ஒருவர்.

தொழிற்பட்டுள்ளதை ஏராளமான சான்றுகளுடன் உறுதிப்படுத்த முடியும். ஆனால் நாட்டார் பாடல் மரபையும் பாணர் மரபையும் உட்செறித்து வளர்ந்த கல்வியிற் சிறந்த புலவர் மரபு தன்னைப் பாணராகப் பாவித்துப் பாடிய பாடல்களை நோக்க, எவை பாணர் பாடல்கள், எவை புலவர் பாடல்கள் என வரையறுப்பதில் சிக்கல் நேர்கிறது. சில நேரங்களில் பாணர் வழிவந்த சிலரே புலவராகவும் செயல்பட்டிருக்கக் கூடும். ஔவையாரை அப்படித்தான் பார்க்க வேண்டியுள்ளது. பாட்டும் தொகையுமான பாடல்களை அலகலகாகப் பிரித்து ஆராய்வதன் மூலமே இன்னின்ன பாடல்கள் இன்னின்ன மரபைச்சார்ந்தவை என உறுதியாக அறிய முடியும்.

சங்க இலக்கியப் பாடல் உருவாக்கப் பின்புலத்தில் செயல்பட்ட மற்றுமொரு சிறு மரபு மொழிபெயர்ப்பு மரபாக இருந்திருக்கலாம். பண்டையத் தமிழ்ச்சமூகத்திலிருந்த புலவர்கள் சிலர் சமஸ்கிருதம், பாலி, பிராகிருதம் ஆகிய மொழிகளை அறிந்திருந்ததுடன் பெரும் புலமையாளர்களாகவும் இருந்துள்ளனர்.

“நாடா கொன்றோ காடா கொன்றோ
அவலா கொன்றோ மிசையா கான்றோ
வெவ்வழி நல்லவ ராடவ
ரவ்வழி நல்லை வாழி நிலனே”

என்ற புறநானூற்றின் 187ஆம் பாடல் தம்ம பதத்திலுள்ள

“நாடாக இருப்பினும் காடாக இருப்பினும்
பாதாளமாயினும் மலையுச்சியாயினும் எந்த
இடத்தில்
ஞானியர் வாழ்கின்றனரோ அந்த இடமே
இன்பமயமானது”

(தம்மபதம், அரவந்த வர்கம்).

என்ற பாடலின் நேரடி மொழிபெயர்ப்பாகும். இப்பாடலை மொழிபெயர்த்தவர் ஔவையார்.

இதே போல அதர்வண வேதத்தில் ஒரு பெண் மந்திர உச்சாடனம் செய்வதாக அமைந்துள்ள,

“அன்னை துஞ்சுக; தந்தை துஞ்சுக; நாய்
துஞ்சுக;
வீட்டிலுள்ள முதியோர்கள் துஞ்சுக;
அவளது சுற்றம் துஞ்சுக;

சங்க இலக்கியப் பாடல் உருவாக்கப் பின்புலத்தில் செயல்பட்ட மற்றுமொரு சிறு மரபு மொழிபெயர்ப்பு மரபாக இருந்திருக்கலாம். பண்டையத் தமிழ்ச்சமூகத்திலிருந்த புலவர்கள் சிலர் சமஸ்கிருதம், பாலி, பிராகிருதம் ஆகிய மொழிகளை அறிந்திருந்ததுடன் பெரும் புலமையாளர்களாகவும் இருந்துள்ளனர்.

அவளைச் சுற்றியுள்ள மக்கள் அனைவரும்
துஞ்சுக.”(IV5)

என்னும் பாடலின் கருத்தை உள்வாங்கி எழுதப்பட்ட பாடல்

“இரும் பிழி மகாஅர் இவ் அழுங்கல் மூதூர்
விழவு இன்று ஆயினும் துஞ்சாது ஆகும்
மல்லல் ஆவண மறுகு உடன் மடியின்
வல் உரைக் கடுஞ் சொல் அன்னை துஞ்சாள்
பிணிகோள் அருஞ் சிறை அன்னை துஞ்சின்

இடைக்கால உரையாசிரியர்கள் சங்கப் பாடல்களில் பயின்றுவரும் சில சொற்களை ஆரியச்சிதைவு என்றும் பாகதச்சிதைவு என்றும் குறிப்பிடுகின்றனர். வட இந்திய சமய மரபின் செல்வாக்கு சில சங்கப்பாடல்களில் வெளிப்படையாகவே தெரிகிறது. ஓரிரண்டு சங்கப்பாடல்கள் மொழிபெயர்ப்புப் பாடல்களாகவே இருக்க வாய்ப்பு உள்ளதை பேராசிரியர் வையாபுரிப்பிள்ளை, பன்மொழிப்புலவர் மு.கு. ஜகந்நாதராஜா ஆகியோர் எடுத்துக்காட்டுகின்றனர்.

"துஞ்சாக் கண்ணர் காவலர் கடுகுவர்
இலங்குவேல் இளையர் துஞ்சின், வை
எயிற்று
வலம் சுரித் தோகை ஞாளி மகிழும்..."

என்னும் அகநானூற்றின் 129ஆம் பாடல். ஆக இப்பாடல்களை நோக்க மிக அருகிய வழக்காக, ஒரு சிறு மரபாக சங்கப் பாடல்களின் உருவாக்கப் பின்புலத்தில் மொழிபெயர்ப்பின் வகிபாகத்தையும் ஆழ்ந்து நோக்க வேண்டியுள்ளது.

பண்டைய இந்திய துணைக்கண்டத்தில் தமிழகம் தனித்த ஓடையாக விளங்கவில்லை. பல்வேறு நிலப்பகுதிகளில் உருவான அறிவு மரபுகள் ஒன்றோடொன்று ஊடாடித் தொழிற்பட்டுள்ளன. குறிப்பாகத் தமிழின் தனித்துவமான இலக்கிய மரபான அகம், புறம் என்ற சமயச் சார்பற்றதும் மக்களின் வாழ்க்கையை அடிப்படையாகக் கொண்டதுமான பாடல் மரபும்; வட இந்திய நிலப்பரப்பில் உருவான அறம், பொருள், இன்பம், வீடு என்னும் சமய மரபை அடிப்படையாகக் கொண்ட நூல் மரபும் ஒன்றோடொன்று ஊடாடியுள்ளன. இவை இணைகின்ற காலத்தில் தமிழின் தனித்துவமான அறிவு மரபை அடையாளப்படுத்தவும் நிலைநிறுத்தவுமே தொல்காப்பியம் முயன்றுள்ளது. அதற்காக அன்று இந்தியத் துணைக்கண்டம் முழுவதிலும் நடைமுறையிலிருந்த அறிவாளர்களால் ஏற்றுக்கொள்ளப்பட்டிருந்த சமஸ்கிருத மரபுகளைப் பகைப்புலனாக்கித் தமிழின் தனித்துவமான பாடல் மரபுகளை இனங்கண்டது. இதனால்தான் தமிழின் களவு மணத்தினை கந்தர்வ மணத்தோடு ஒப்பிட்டுக் கூறமுடிந்தது. இது ஒரு பண்பாட்டினைப் பிறிதொரு பண்பாட்டிற்கு அடையாளப்படுத்தும் செயல். களவு என்னும் தமிழ் மரபை இந்திய மரபுக்கு அடையாளப்படுத்துகிறது. அதற்காக அது பயன்படுத்தும் சொல் **யாழோர் கூட்டம்** என்பது. மெய்ப்பாடுகளில் பேசப்படும் களவுக்கான மெய்ப்பாடு, கற்புக்கான மெய்ப்பாடு ஆகியனவும் மரபியலில் பேசப்படும் அனைத்தும் இத்தன்மையில் புரிந்துகொள்ளப்படுபவையே. தமிழின் அசலான ஆக்க இலக்கிய மரபுகளின் நுட்பமான பகுதிகளை வெளிப்படுத்துவதால்தான் தொல்காப்பியத்தைத் தமிழின் தலையூற்றாகக் கொள்ள வேண்டியுள்ளது. ஆனால் சங்கப் பாடல்களைத் தொகுக்கும் பொழுது தொல்காப்பியத்தை மட்டுமே அடிப்படையாகக் கொள்ளவில்லை என்பதைக் கவனத்துடன் நோக்க வேண்டியுள்ளது. தொகுப்பாசிரியர்கள் தம் காலத்திலிருந்த வேறுசில இலக்கணங்களையும் தொகுப்பிற்கான அடிப்படைகளாகக் கொண்டுள்ளனர். தொல்காப்பியம் குறிப்பிடும் அகத்திணை ஏழினுள் கைக்கிளைப் பாடல்களையும் பெருந்திணைப் பாடல்களையும் சங்க இலக்கிய அகப்பாடல் மரபினுள் தொகுக்காமல் விட்டுள்ளனர். குறிப்பாகக் கலித்தொகை தவிர பிற அகநூல்களில் இப்பாடல்கள் இடம்பெறவில்லை. இவை புறநானூற்றில் தொகுக்கப்பட்டுள்ளதாக ஆய்வாளர்கள் எடுத்துக்காட்டுகின்றனர். ஆனால் புறநானூற்றிலும் மிகச்சில பாடல்களே இடம்பெற்றுள்ளன. ஆக தொகுப்பாசிரியர்களின் கருத்தியல் சட்டகத்திற்குப் பொருந்தாத பல பாடல்கள் தொகுக்கப்படாமலே விடுபட்டுள்ளன என்பதுதான் உண்மை. நச்சினார்க்கினியர் தொல்காப்பிய அகத்திணை உரையில் சுட்டி ஒருவர் பெயர் கொள்ளப்பட்ட கைக்கிளைக்கும் பெருந்திணைக்கும் கொடுக்கும் உதாரணங்கள் தொகுக்கப்படாத சங்கப் பாடல்களோ என்ற ஐயத்தைக் கிளப்புகின்றன. மொழியியல் நோக்கில் இப்பாடல்களை மீளாய்வு செய்ய வேண்டிய தேவையுள்ளது.

சங்கப் பாடல்களின் தொகுப்புகள் பேணப்பட்ட முறைகளும் பல்வேறு விவாதங்களை மேற்கிளப்புகின்றன. உரையாசிரியர்களால் சுட்டப்பெறும் குறுந்தொகைப்பாடல்கள் சில, இன்று வெளிவந்துள்ள குறுந்தொகையில் இடம்பெறவில்லை (1995; 105) என்று குறிப்பிடும் மு.வை. அரவிந்தன் சில பாடல்களை எடுத்துக் காட்டுகின்றார்.

நச்சினார்க்கினியர் குறிஞ்சிக்கலியின் இரண்டாவது பாட்டு உரையில் நன்றே என்னும் குறுந்தொகையும் அது' என்று கூறுகிறார். 'நன்றே' என்று தொடங்கும் குறுந்தொகைப் பாடல் இன்று கிடைக்கவில்லை தக்கயாகப்பரணி உரையாசிரியர், "சிலம்பிபொதி செங்காய்இது குறுந்தொகை"(தக்க 54) என்று கூறுகின்றார். இப்பாடல் மறைந்துவிட்டது.

அ. குமாரசுவாமிப்பிள்ளை பதிப்பித்த நம்பியகப்பொருள் விளக்கவுரை, பாங்கி தலைமகளைத் தலைமகற்குக் கையடை கொடுத்தற்கு உதாரணச் செய்யுளாக,

"இவளே நின்னல திலளே யாயும்
குவளை உண்கண் இவளல திலளே
யானும் ஆயிடை யேனே
மாமலை நாட மறவாதிமே"

என்பதைக் காட்டி "இது குறுந்தொகைச் செய்யுள்"

என்று கூறுகின்றது. இதுவும் குறுந்தொகையில் இடம்பெறவில்லை.(மேலது)

ஆனால் இன்று கிடைக்கக் கூடிய குறுந்தொகை கடவுள் வாழ்த்து உட்பட 401 பாடல்களுடன் முழுமையாக உள்ளது. அப்படியென்றால் மேலே உரையாசிரியர்களால் சுட்டப்பெற்றுள்ள பாடல்களுக்குப் பதிலாக வேறு பாடல்கள் இடம்பெற்றுள்ளனவா? அப்படி இடம்பெற்றுள்ளதெனில் அப்பாடல்கள் சங்கப் பாடல்கள்தானா? அல்லது பிற்காலத்துப் பாடல்கள் சில சங்க இலக்கியத் தோல் போர்த்தி உலா வருகின்றனவா? என்ற கேள்விகள் எழுகின்றன.

புறநானூற்றின் 41, 78, 151ஆம் பாடல்களின் உரை மேற்கோளாக வந்துள்ள பாடலின் முழுவடிவம்

> "நிரையிற் செல்லு மோவென நேர்ந்து
> புலைய னெறிந்த பூசற் றண்ணுமை
> ஏவ விளையர் தாய்வயிறு கரிக்கு
> மின்னா வருஞ்சுர மென்ப
> வென்னோ தோழியவர் சென்ற வாறே"

என்பதாகும். இதனை ஒரு பழஞ்சுவடியின் துணைகொண்டு ஆய்ந்து பதிப்பித்த உ.வே.சா., இஃது எந்த நூலின் கண்ணதோ தெரியவில்லை என்று குறிப்பிடுகிறார். அவரே புறநானூற்றின் மூன்றாம் பதிப்பில் உரையின் தன்மையை விளக்கும்பொழுது இந்நூலுரையாசிரியர் மேற்கோளாக எடுத்துக்காட்டிய நூல்கள் தொல்காப்பியம், கலித்தொகை, குறுந்தொகை, சீவக சிந்தாமணி, பெரும்பாணாற்றுப்படை என்பன என்று குறிப்பிடுகிறார். இக்குறிப்பினைக்கொண்டும் உரை முழுமையும் ஆராய்ந்ததைக் கொண்டும் பார்க்கும் பொழுது இவ்வுரையாசிரியர் பிற்காலப் பாடல்களை மேற்கோள் காட்டவில்லை. எனவே இப்பாடலும் தொகுக்கப்படாத சங்கப்பாடலாக இருக்குமோ என்று எண்ணத்தோன்றுகிறது.

ஐங்குறுநூற்றைப் பதிப்பித்த உ.வே.சா., அந்நூலின் இறுதியில் தனிப்பாடல்கள் என்னும் தலைப்பிட்டு ஆறு பாடல்களைப் பதிப்பித்துள்ளார். அதற்கு அவர் தரும் குறிப்பு,

அடியிலுள்ள பாடல்கள் ஐங்குறுநூற்றுக் கையெழுத்துப் பிரதிகள் பலவற்றிற் காணப்படவில்லை; தென்காசி சுப்பையாப் பிள்ளையவர்கள் வீட்டுப் பிரதியொன்றில் மட்டும் இருந்தமையின், தனியே பதிப்பிக்கப்பெற்றன. (1949:206)

இதிலுள்ள ஆறு பாடல்களில் நான்கு பாடல்கள் 'உள்ளார் கொல்லோ தோழி' எனத் தொடங்குகிறது. இரண்டு மற்றும் ஐந்தாம் பாடல் பல்வேறு உரையாசிரியர்களால் மேற்கோள் காட்டப்பட்டுள்ளன. இப்பாடல்களை எந்த அடிப்படையில் வைத்துப் புரிந்துகொள்வது என்பதும் முக்கியம்.

ஆக சங்கப்பாடல்கள் எவ்வாறு முழுமையாகத் தொகுக்கப்படவில்லையோ அதேபோல தொகுக்கப்பட்ட பாடல்களும் இன்று முழுமையாகக் கிடைக்கவில்லை என்ற கவனத்துடனேயே சங்க இலக்கியங்களை அணுகவேண்டியுள்ளது.

இவ்விவாதத்தினை மேலும் முன்னெடுத்துச்செல்ல பல்வேறு உரையாசிரியர்கள் மேற்கோளாகக் காட்டியுள்ள சங்கப்பாடல்களை முழுமையாகத் தொகுத்து நோக்க வேண்டியுள்ளது. அதற்கு சங்க இலக்கிய மேற்கோள் விளக்கம் தயாரிக்க வேண்டிய அவசியமான பணி நம்முன் நிற்கின்றது.

### துணைநூற்பட்டியல்


1. அரவிந்தன், மு.வை, உரையாசிரியர்கள், மணிவாசகர் பதிப்பகம், சென்னை, மூன்றாம் பதிப்பு, 1995.
2. சாமிநாதையர், உவே. (ப.ஆ), எட்டுதொகையுள் எட்டாவதாகிய புறநானூறு மூலமும் உரையும், கமர்ஷியல் அச்சுக்கூடம், சென்னை, இரண்டாம் பதிப்பு, 1923.
3. சாமிநாதையர், உவே. (ப.ஆ), எட்டுத்தொகையில் மூன்றாவதாகிய ஐங்குறுநூறு மூலமும் பழைய உரையும், கபீர் அச்சுக்கூடம், சென்னை, நான்காம் பதிப்பு, 1949
4. ராஜ் கௌதமன், பாட்டும் தொகையும் தொல்காப்பியமும் தமிழ்ச்சமூக உருவாக்கமும், தமிழினி, சென்னை, 2006.
5. ஜகந்நாத ராஜா, மு.கு, தமிழும் பிராகிருதமும், உலகத்தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை, 1992.




# களப்பிர அரசர்கள் வைதீக சமய எதிர்ப்பாளர்கள்

ஆ. பத்மாவதி

சங்க கால மூவேந்தர்கள் ஆட்சியைத் தொடர்ந்து சில நூற்றாண்டுகள் கடந்த பின்னர், கி.பி 6ஆம் நூற்றாண்டில் பாண்டிய நாட்டில் பாண்டியர்களும், கி.பி 5ஆம் நூற்றாண்டுவாக்கில் தொண்டை மண்டலத்தில் பல்லவர்களும் தங்கள் அரசை நிறுவி ஆட்சி செய்தனர் என்பது தெரியவருகிறது. ஆனால் கி.பி. 5, 6ஆம் நூற்றாண்டிற்கும் சங்ககால வேந்தர்கள் காலத்திற்கும் இடையில் நடந்தது என்ன? ஏன் வரலாற்று ஆதாரங்கள் ஏதும் கிடைக்கவில்லை? என்று வரலாற்றறிஞர்களிடையே கேள்விகள் எழுந்தன. விடை கிடைக்கவில்லை என்ற காரணத்தினால் அந்தக் குறிப்பிட்ட கால கட்டத்தை இருண்டகாலம் என்றழைத்தனர்.[1] அக்காலகட்டத்திற்கு ஒளி பாய்ச்சும் வாசகங்களுடன் கூடியதாக வேள்விக்குடிச் செப்பேடு என்றொரு வரலாற்று ஆவணம் கிடைத்தது.

### வேள்விக்குடிச் செப்பேட்டுச் செய்தி

1. சங்ககால மூவேந்தர்களுக்குப்பிறகு களப்பிரர் என்னும் கலி அரசர்கள் தமிழ்நாட்டைக் கைப்பற்றி ஆட்சி செய்திருந்தனர்.
2. அளவரிய ஆதிராசரை அதாவது பழைய மன்னர்களையெல்லாம் நீக்கிவிட்டுக் களப்பிரர் என்னும் கலியரசர் தமிழ்நாட்டைக் கைப்பற்றி ஆட்சி செய்தனர்.
3. அவர்களது ஆட்சியை, படுகடல் முளைத்த பருதி போன்ற பாண்டியாதிராசனாகிய கடுங்கோன் என்னும் மன்னன் அகற்றி மீண்டும் பாண்டியர் ஆட்சியை நிறுவினான்.

என்ற செய்திகளைத்தான் வேள்விக்குடிச் செப்பேடு கூறியது. இதன் பிறகே தமிழ்நாட்டு வரலாற்றில் புதிய ஒளிவீச ஆரம்பித்தது.

இச்செப்பேட்டை வெளியிட்ட ஜடிலவர்மன் பராந்தக நெடுஞ்சடையன் என்ற மன்னன் களப்பிரரிடமிருந்து கி.பி. 6ஆம்ம் நூற்றாண்டின் இடைப்பகுதியில் நாட்டைக் கைப்பற்றிய கடுங்கோன் வழியில் வந்த 7ஆவது அரசனாவான். இவன் இச்செப்பேட்டை வெளியிடுவதற்கு அமைந்த காரணம்தான் நாம் மேலே கூறியபடி அமைந்த புதிய ஒளியாகும். இம்மன்னன் கி.பி 768 முதல் கி.பி. 811 வரை அரசாண்டவன்.

### இச்செப்பேட்டை வெளியிட்டதற்கான காரணம்

சங்க கால மன்னன் முதுகுடுமிப் பெருவழுதி என்பவன், தனது நாட்டிலுள்ள பாகனூர்க் கூற்றத்தில், சோலைகள் சூழ்ந்திருந்த ஓரிடத்தில் கொற்கைக் கிழான் நற்கொற்றன் என்ற வேதியர் மூலமாக வேள்வி வேட்டதாகவும், அந்தவேள்வி நடந்த இடத்திற்கு வேள்விக்குடி எனப் பெயரிட்டு அவ்வேதியனுக்குப் பிரமதேயமாக நீர்வார்த்துக் கொடுத்திருந்ததாகவும், கொற்கைக் கிழான் நற்கொற்றன் குடும்பம் அதனை நீண்ட காலம் அனுபவித்து வந்தனர் என்றும் கூறுகிறது. பின்னர் களப்பிரர் என்ற ஆட்சியினர் பாண்டிய அரசர்களை அகற்றிவிட்டு ஆட்சியைப் பிடித்து அரசாண்டபோது முதுகுடுமிப் பெருவழுதி தானமாகக் கொடுத்த அந்தப் பிரமதேய நிலம் களப்பிரர்களால் கைப்பற்றப்பட்டு விட்டது என்ற செய்தியை, கொற்கைக் கிழான் நற்கொற்றன் வழிவந்த கொற்கைக் கிழான் காமக்காணி நற்சிங்கன் என்பவன் மன்னவனிடம் தெரிவித்திருக்கிறான்.

பாண்டிய மன்னன் நன்று நன்று எனப் புன் முறுவல் பூத்து இதற்கான பழைய ஆவணத்தை நீ வைத்திருந்தால் அதனைக் காட்டிப் பெற்றுக்கொள் என்று கூற, வந்தவன் அங்கு அப்பொழுதே காட்ட, மன்னவனும் அங்கு அப்பொழுதே 'மேனாள் என் குரவரால் பான்முறையிற் தரப்பட்டதை எம்மாலும்



தமிழ்நாடு அரசு தொல்லியல் துறையில் கல்வெட்டாய்வாளராகப் பணியாற்றி ஓய்வு பெற்றுள்ளார். 15 மேற்பட்ட நூல்களைப் பதிப்பித்துள்ளார். இவரின் நூல்கள்: 'சோழர் ஆட்சியில் அரசும் மதமும்', 'சோழர் கால சமயம்', 'சைவத்தோற்றம்'.

தரப்பட்டது' என்று நீர்வார்த்துக் கொடுத்து விட்டான், என்ற இச்சம்பவம்தான் வேள்விக்குடிச் செப்பேட்டில் கூறப்பட்டிருக்கிறது.

இத்தகைய ஒரு சம்பவம் நடைபெற்ற காரணத்தினால்தான் செப்பேடு வழங்கப்பட்டது. அக்காரணத்தினால்தான் களப்பிரர் ஆட்சி செய்ததும், அந்தணர்களுக்குக் கொடுக்கப்பட்டிருந்த நிலங்கள் மீண்டும் களப்பிர அரசால் எடுத்துக் கொள்ளப்பட்டதும் தெரியவந்தது.

களப்பிரர் என்ற புதிய ஆட்சியினர் தமிழகத்தைக் கைப்பற்றி ஆட்சி செய்திருந்தனர் என்பதோடு, அவர்கள் பிரமதேய நிலத்தைக் கைப்பற்றிக் கொண்டதால், அவர்கள் வைதீகத்திற்கு எதிரானவராக இருந்திருக்கலாமோ என்றும் எண்ணத் தோன்றுகிறது.

சங்ககாலத்தில் புலவர்களின் அறிவுரைகளையும் ஆலோசனைகளையும் மதித்து வாழ்ந்த அரசர்கள் தடம்மாறி வேள்வி அந்தணர்கள் வழி நடக்கலாயினர். அதனால் அவர்களை வீழ்த்திப் புதிய அரசாகிய களப்பிரர் அரசு சில நூற்றாண்டுகள் கோலோச்சியது. தங்கள் நாட்டைக் கைப்பற்றி, பாண்டியராட்சியை மீண்டும் அமைத்த பாண்டியர்கள் சங்ககால மன்னர்கள் செய்தது போல, மீண்டும் வைதீகசமயத்தையும், வைதீகர்களையும் ஆதரிக்கலாயினர்.

எனவே சங்க அரசர்களும் 6ஆம் நூற்றாண்டுப் பாண்டிய அரசர்களும் ஒரே கொள்கையை உடையவர்களாகக் காணப்படுவதால் இடையில் வந்த களப்பிரர்கள் இக்கொள்கைக்கு எதிரானவராகத் தானே இருந்திருக்க முடியும்? அதனால்தான் வேத பிராமணர்களுக்குக் கொடுக்கப்பட்ட நிலத்தை மீட்டு அரசு நிலமாக்கியிருக்கின்றனர் எனத் தெரிகிறது. அதே சமயம் வேள்விக்குடிச் செப்பேட்டில் கூறப்பட்டுள்ள ஒரு சம்பவத்தைக் கொண்டு மட்டும் தீர்மானித்து விடமுடியாது என்பதும் நாம் கவனத்திற் கொள்ளத்தக்கதுதான். இக்கருத்து உறுதிப்பட வேண்டுமானால் மேலும் பல சான்றுகள் தேவைப்படுமாதலால் அத்தகைய சான்றுகள் உள்ளனவா என்பதையும் ஆராய்தல் அவசியம்.

### தளவாய்புரச் செப்பேடு

வேள்விகுடிச் செப்பேட்டை வெளியிட்ட ஜடிலவர்மன் பராந்தக நெடுஞ் சடையனுக்குப்பின் அவன் மகன் ஸ்ரீமாறன் ஸ்ரீவல்லபவன் ஆட்சிப் பொறுப்பேற்றிருந்தான். அவனுக்குப்பின் இரண்டாம் வரகுணனும் அவன் தம்பி பராந்தக வீரநாராயணனும் இணைந்து ஆட்சிப் பொறுப்பேற்று ஆண்டு வந்தனர். தம்பி பராந்தக வீரநாராயணன் தனது 45ஆம் ஆட்சியாண்டில் (கி.பி 911) வெளியிட்ட செப்பேடுதான் தளவாய்புரச் செப்பேடு.

இச்செப்பேடும் களப்பிரர்கள் வேதியர்க்கு எதிரானவர்கள் என்பதை உறுதிபடுத்துகிறது. அச்செப்பேடு கூறுகின்ற செய்தியும் சுவையானதுதான். களப்பிரரிடமிருந்து பாண்டி நாட்டை மீட்டு, மீண்டும் ஆட்சியை நிறுவியவன் கடுங்கோன் என்ற மன்னவன் என்பதைப் பார்த்தோம். அம்மன்னன் மறையோர்கள் பன்னிருவர்க்குத் திருமங்கலம் என்ற ஊரைப் பிரமதேயமாகக் கொடுத்திருந்தான். கழுதூரில்

சித்தி செய்த பாண்டியன் ஒருவனும் காடக சோமயாஜி என்ற அந்தணனுக்குச் சோமாசி குறிச்சி என்ற ஊரை ஏக போக பிரமதேயமாக அளித்திருந்தான். ஆனால் அவ்விரு ஊர்களும் பராந்தக விரநாராயணன் ஆட்சி காலத்திலோ அல்லது அதற்குச் சற்று முன்னரோ மீண்டும் குடிமக்கள் நிலமாக்கப்பட்டு விட்டது. இவ்விரு ஊர்களும் பிரமதேயமாகக் கொடுக்கப்பட்ட போது வழங்கிய செப்பேட்டு ஆவணங்களும் ஒரு மறக்கேட்டில் தொலைந்துபோய் விட்டன என்ற இச்செய்திகளையெல்லாம், பிரமதேயமாகப் பெற்று அனுபவித்த குடும்பத்தின் வழிவந்த ஒரு மறையவன் மன்னனிடம் கூறி, மீண்டும் அப்பிரமதேய ஊர்களை ஒரே ஊராக எல்லை அமைத்துத் தங்களுக்குத்தர வேண்டும் என வேண்டுகோள் விடுத்ததின் பேரில், மன்னன் அவ்வாறே செய்த சம்பவத்தைத்தான் தளவாய்புரச் செப்பேடும் கூறுகிறது.




இதில் முக்கியச் செய்தி என்னவெனில் கருங்கோன் என்ற மன்னன் பன்னிரு பிராமணர்களுக்குப் பிரமதேயமாக ஒரு ஊரைக் கொடுத்தது எதற்காக என்பதுதான். அதாவது 'கற்றறிந்தோர் திறல்பரவ களப்பாழரைக் களை கட்ட' கடுங்கோன் இக்கொடையைச் செய்ததாகக் கூறுகிறது செப்பேடு.[2]

களப்பிர அரசர்களைப் போரிட்டு வென்று பாண்டிய நாட்டில் ஆட்சியை அமைத்தவன் கடுங்கோன் என்ற பாண்டியன் தான். தோற்ற களப்பிர அரசர்கள் மீண்டும் தலைதூக்காமலிருக்க, வேரோடு அவர்களைக் களை எடுக்க வேண்டும் என்பதற்காகத்தான் பிரமதேயத்தை வழங்கியிருக்கிறான். கடுங்கோன் யாருக்கு எதற்காகப் பயந்தானோ அது நடந்தே விட்டது. கொடையளித்த பிரமதேய நிலமும், பிரமதேய சாசனங்களும் அவர்களிடமிருந்து பிடுங்கப் பட்டிருக்கிறது. கடற்றிருக்கைக் கிழவன் என்பவர், மதுரதர நல்லூர் என்ற பெயரில் அந்தப் பிரமதேய நிலங்களைக் குடிமக்கள் நிலனாக மாற்றியிருக்கிறார் எனத் தெரிகிறது. இத்தனைக்கும் தொடர்ந்து பாண்டியர் ஆட்சி நடந்து கொண்டுதானிருந்தது. அத்தகைய சூழலிலும் இவ்வாறு தொடர்ந்து பிரமதேயத்திற்கு வலுவான எதிர்ப்பு இருந்து கொண்டேயிருந்து என்பது தெரிகிறது.

**நின்றசீர் நெடுமாறன்**

கடுங்கோனுக்குப் பிறகு அவன் மகன் மாறவர்மன் அவனி சூளாமணியும், அவன் மகன் செழியன் சேந்தனும் ஆண்டபின் அவன் மகன் மாறவர்மன் அரிகேசரி ஆட்சிப்பொறுப்பேற்றான். இவன் தான் கூன் பாண்டியன் என்றும் நின்ற சீர் நெடுமாறன் என்றும் அழைக்கப்பட்டவன். இவன் வெளியிட்ட செப்பேடு ஒன்று சமீபத்தில் கண்டுபிடிக்கப்பட்டு வெளியிடப்பட்டுள்ளது.[3] மாறவர்மன் அரிகேசரி கி.பி 624 முதல் கி.பி. 674 வரை ஆட்சி செய்தவன், தேவாரம்பாடிய திருஞானசம்பந்தருக்குச் சமகாலத்தவன்.

இவன் வெளியிட்டுள்ள இச்செப்பேட்டில் கூறும் செய்தி என்னவெனில், நாராயணபட்டர் சோமயாஜி என்பவருக்கு இளையான் புதூர் என்ற ஊரைக் கொடையளித்திருந்ததையும் அதை எதிர்த்துக் கம்பலை என்ற மறவர் கலகம் செய்ததையும் அவரை அடக்கி மறக்கேட்டை எதிர்த்து நின்று வென்று மீண்டும் அந்த அந்தணருக்கு இளையான்புதூரை அளித்ததையுமே அச்செப்பேடு கூறுகிறது. தளவாய்புரச் செப்பேட்டில் கூறப்பட்டுள்ள சம்பவத்தைப் போல அதற்கு முன்னரே நடைபெற்றிருக்கிறது என்பதால்

களப்பிர அரசர்களைப் போரிட்டு வென்று பாண்டிய நாட்டில் ஆட்சியை அமைத்தவன் கடுங்கோன் என்ற பாண்டியன் தான். தோற்ற களப்பிர அரசர்கள் மீண்டும் தலைதூக்காமலிருக்க வேரோடு அவர்களைக் களை எடுக்க வேண்டும் என்பதற்காகத்தான் பிரமதேயத்தை வழங்கியிருக்கிறான்.

தொடர்ந்து பிரமதேய எதிர்ப்பு இருந்து கொண்டேயிருந்தது என்பது தெரிகிறது.

### அந்தணர் உறவு

இதுமட்டுமல்ல, வேத பிராமணர்களுக்கும் பாண்டிய மன்னர்களுக்கும் உள்ள உறவின் நெருக்கமும் செப்பேடுகளில் மிக விரிவாகக் கூறப்பட்டிருப்பதைக் கீழ்க்கண்டவாறு காண முடிகிறது.

1. வேள்விக்குடிச் செப்பேட்டில் சங்ககால மன்னனால் கொடுக்கப்பட்ட தானம் கி.பி. 8ஆம் நூற்றாண்டு மன்னன் ஜடிலவர்மன் பராந்தகனால் மீண்டும் வழங்கப்பட்டது. அவன் கொற்கைக்குக் கிழான் ஆகத் திகழ்ந்தவன்.[4]
2. இதே மன்னன், ஸூஜ்ஜதபட்டன் என்ற யஜ்ஞவித்யையோடு அஞ்சாத சாஸ்திரங்களையும் கரைகண்ட ஓர் அந்தணனுக்கு ஸ்ரீவரமங்கலம் என்ற ஊரை காராண்மை, மீயாட்சி உள்ளடங்க சர்வபரிகாரங்களுடன் பிரமதேயமாக நிலத்தை அளித்திருக்கிறான். இச்செய்தி இவன் வெளியிட்ட மற்றோர் செப்பேடாகிய ஸ்ரீவரமங்கலச் செப்பேட்டில் காணப்படுகிறது.[5]



3. இதே மன்னன் வெளியிட்டுள்ள இன்னுமொரு செப்பேடாகிய சின்னமனூர் சிறிய செப்பேடு, இவன் அந்தணர்களது இடர் நீக்க அவர்களுக்கு முகில் போல் பொன்மழை பெய்வதையே நோன்பாகக் கொண்டும் துலாபாரம் ஏறியும் இருமுறை ஹிரண்ய கர்ப்பம் புகுந்தும், கோஸஹஸ்ரம் முதலான பெரிய தானங்களைச் செய்தும் இந்திரன் போல வீற்றிருந்தான் என்கிறது.[6]
4. மறக்கேட்டில் தொலைந்து போன ஆவணங்களைப் புதுப்பித்துப் பிரமதேயமாக்கித் தரவேண்டும் என விண்ணபப்ஞ் செய்தவன் நாராயணகேசவன். இவன் சத்திரிய தர்மங்களை நன்குணர்ந்து பாண்டியன் வீரநாராயணனுடைய நம்பிக்கைக்குப் பாத்திரமான அதிகாரியாக விளங்கினான் என்கிறது தளவாய்புரச் செப்பேடு. இச்செப்பேட்டை வெளியிட்டவன் பாண்டியன் பராந்தக வீரநாராயணன் என்பதை முன்னரே கண்டோம்.
5. சின்னமனூர்ப் பெரிய செப்பேட்டை வெளியிட்ட ராஜசிம்ம பாண்டியன் என்பவன் பராந்தக வீரநாராயணனின் மகன் ஆவான். இச்செப்பேட்டின் சமஸ்கிருதப் பகுதியில் பராந்தகன் என்ற அந்தணன் பற்றி 8 சுலோகங்களில் மிகவும் பாராட்டிக் கூறப் பட்டிருக்கிறது. இவனுக்கு மந்தரகௌரவ மங்கலம் என்று தனது பெயரில் ஏற்படுத்தப் பட்ட பிரமதேய ஊரை வழங்கியிருக்கிறான்.[7]
6. ராஜசிம்ம பாண்டியனின் மகன் வீரபாண்டியன் வெளியிட்டுள்ள செப்பேடு சிவகாசிச் செப்பேடு. இச்செப்பேட்டில் கோவிந்தசாமி பட்டசோமயாஜி குலத்தைச் சேர்ந்த வாசுதேவ பீதாம்பரபட்டன் என்ற கவிஞன் எழுதிய அநுஷ்டுப் சுலோகத்தைக் கேட்டு மகிழ்ந்த மன்னன் அவனுக்கு நிலதானம் வழங்கியிருக்கிறான். ஒரு அக்ரஹாரத்தையும் செய்திருக்கிறான் என்ற செய்தி காணப்படுகிறது.[8]

கடுங்கோன் என்ற முதல் பாண்டிய மன்னனும், கழுதூரில் சித்தி செய்த பாண்டியன் ஒருவனும் பிராமணர்க்குப் பிரமதேயம் வழங்கியிருந்தனர். இரண்டாமவர் கொடுத்தது, காடக சோமயாஜி என்பவருக்கு.

காடகம் - என்றால் படைவீடு; போர்க்கருவிகளும் வீரர்களும் நிறைந்த பகுதி.

சோமயாஜி - என்பவர்கள் போர்த்தொழிலிற் சிறந்தவர்கள்.

இவர்களுக்கு மன்னர்கள் கொடுத்த ஊர்களும் நிலங்களும் சோமாசி குறிச்சி, சோமாசி அட்டகம் என்ற பெயர்களில் அழைக்கப்பட்டிருப்பதைக் காணமுடிகிறது.

பெரியபுராணத்தில் 63 நாயன்மார்களின் ஒருவரான சோமாசிமாற நாயனார், சூதம் என்கிற சூத சம்ஹிதையையும் வேதத்தையும் பயின்றவர். சோழநாட்டு அம்பர் மாகாளத்தில் பிறந்தவர். சோமாசி என்பது சோமயாஜி என்ற வடமொழிச்

சொல்லின் தமிழ்த் திரிபாகும். இவர் சிறந்த போர்த் தொழில்கள் கற்றவராகவே இருந்திருத்தல் வேண்டும். கி.பி.6 ஆம் நூற்றாண்டில் திருவண்ணாமலை மாவட்டம் செங்கம் வட்டம் கொட்டையூரில் கிடைத்த நடுகல் சோமாசி கோ திருமாறற்கு... எனத் தொடங்குகிறது. எனவே அக்கால கட்டத்தில் அப்பகுதியைப் போர்த்தொழில் வல்ல சோமயாஜியின் பொறுப்பின் கீழ் அல்லது ஆளுகையின் கீழ் இருந்திருக்கிறது. இக்காலமும் களப்பிரர் ஆட்சிக் காலத்திற்கு உட்பட்டதாகவே காணப்படுவதால், களப்பிரரை எதிர்த்து சோமயாஜிகள் சில பகுதிகளைக் கைப்பற்றியும் ஆண்டிருக்கின்றனர் எனத் தெரிகிறது. அதனால்தான் பாண்டியர்கள் அவர்களையும் கூட்டணி சேர்த்துக் கொண்டு களப்பிரர் ஆட்சியை அகற்றியிருக்கின்றனர். அகற்றிய பின் மீண்டும் களப்பிரர்கள் தலைதூக்காமல் இருக்கவும், வேரோடு களைவதற்கும் அந்தணர்களுக்குப் பிரமதேயங்கள் கொடுத்து அப்பணியில் ஈடுபட வைத்திருந்தனர் என்பது கடுங்கோன் முதல் அனைத்துப் பாண்டியர்கள் பற்றியும் கூறுகிற செப்பேடுகள் வாயிலாகத் தெரியவருகிறது.

ஆக, களப்பிரரிடமிருந்து ஆட்சியை மீட்ட பாண்டியர்களும் அந்தணர்களும் ஒருவருக்கொருவர் நட்பாகவும் விசுவாசம் மிக்கவர்களாகவும் நம்பிக்கைக்கு உரியவர்களாகவும் இருந்திருக்கின்றனர். ஆட்சிப் பொறுப்பேற்ற பாண்டியர்களது ஆட்சியில் படைத்தளபதி, முதல் மந்திரி போன்ற பதவிகளில் அந்தணர்கள் காணப்படவில்லை. அந்தணர்கள் அவர்களுக்கு வழங்கப்பட்ட பிரமதேய ஊர்களில் காராண்மை, மியாட்சியுடன் அனுபவித்து வந்த செய்திகளையே காணமுடிகிறது. இத்தகைய உடன்படிக்கையின் அடிப்படையில்தான் பாண்டியருக்கு உதவ முன் வந்தனரோ என எண்ணத் தோன்றுகிறது.

**தொண்டை மண்டலத்தில் களப்பிரரும், பிரமதேய ஆக்கிரமிப்புகளும்**

வேங்கடத்தைச் சங்க காலத்தில் ஆண்ட மன்னன் கள்வர்கோமான் என்றும் புல்லி என்றும் அழைக்கப்பட்டதைப் புறநானூறு மற்றும் அகநானூற்றுப் பாடல்கள் தெரிவிக்கின்றன. எருமை நாட்டைச் சேர்ந்த வடுகர் என்பவர் பற்றியும் சங்க இலக்கியங்கள் கூறுகின்றன[9] மருதப்பண்ணின் திறப்பண்ணாகிய இந்தளம் என்பதும் வடுகு தான் என்று பிங்கல நிகண்டு கூறுகிறது.[10] வேங்கடத்து உம்பர் வடுகதேயமாக இருந்த காரணத்தினால் தொண்டை மண்டலத்திலும் களப்பிரர் என்ற அரசர்கள் நுழைந்திருக்கின்றனர்.[11] ஆனால் பாண்டிய நாட்டில் கிடைத்தது போன்ற உறுதியான ஆதாரங்கள் கிடைக்கவில்லை என்றாலும், சங்க இலக்கியச் சான்றுகளும் களப்பிரர் காலத்திற்குப் பின்னர் வாழ்ந்த அரசர்கள் பற்றிய சான்றுகளுமே, தொண்டை மண்டலத்திலும் களப்பிரர்கள் ஆதிக்கம் இருந்திருக்கவேண்டும் என்பதைத் தெரிவிக்கின்றன.

மயிலை சீனி. வேங்கடசாமி அவர்கள் தமது நூலில், பல அறிஞர்கள் கூறிய கருத்துக்களைத் தந்திருக்கிறார். முனைவர் கிருஷ்ணசாமி ஐய்யங்காரும் மு. இராகவையங்காரும் கள்வர்கோமான் புல்லியே களப்பிரர் என்பதைக் குறிக்கிறது என்று கூறியிருக்கின்றனர். கள்வர் என்பதை, பழந்தமிழகத்தில் ஏட்டிலும் கல்வெட்டிலும் புள்ளி வைக்கப்படுவதில்லை என்பதால் களவர் என்றும் படிக்கலாம் என்பதால் அவ்வாறு கூறினர். இந்தக் கருத்தை மயிலை சீனி. வேங்கடசாமி அவர்கள் ஏற்றுக்கொள்ளவில்லை. வேங்கட நாட்டை ஆண்ட கள்வர் அல்லது களவர் என்பவர் தமிழர். களப்பிரரோ தமிழர் அல்லாத கன்னடர். சங்க காலத்து வேங்கட நாடு தொண்டை மண்டலத்தைச் சேர்ந்ததாகவும் தமிழகத்தின் பகுதியாகவும் இருந்தது. ஆகவே தமிழராகியக் கள்வர் வேறு கன்னடராகியக் களப்பிரர் வேறு. ஆகவே கள்வர் கோமான் புல்லி களப்பிரராக இருந்திருக்க முடியாது என்கிறார். மேலும் பல்லவ அரசர் ஆண்ட தொண்டை மண்டலம் தவிர, சோழ பாண்டிய சேர நாடுகளைக் கைப்பற்றி அரசாண்ட அவர்களுள் களப்பிரர் என்பவர் கருநாடக

> தமிழ்நாட்டு சிற்றரசர்களும், ஊர்க்கிழார்களும், குறுநில மன்னர்களும் இணைந்தே பாண்டியராட்சியை மட்டுமின்றி, தமிழ் மன்னர் அனைவரது மண்ணையும் கைப்பற்றி ஆண்டனர். தொண்டை மண்டலத்தில் புல்லி என்ற கள்வர் கோமான் இத்தகைய ஆட்சி மாற்றத்திற்கு உதவி செய்து அப்பகுதியை ஆண்டிருக்கலாம்.

நாட்டுக் கன்னடர் என்பதில் ஐயமில்லை என்று கூறுகிறார்.[12]

பாண்டி நாட்டைக் கைப்பற்றி ஆண்டவர்கள் கன்னட மன்னர் மட்டுமல்லர்; தமிழ்நாட்டு சிற்றரசர்களும், ஊர்க்கிழார்களும், குறுநில மன்னர்களும் இணைந்தே பாண்டியராட்சியை மட்டுமின்றி, தமிழ் மன்னர் அனைவரது மண்ணையும் கைப்பற்றி ஆண்டனர். தொண்டை மண்டலத்தில் புல்லி என்ற கள்வர் கோமான் இத்தகைய ஆட்சி மாற்றத்திற்கு உதவி செய்து அப்பகுதியை ஆண்டிருக்கலாம்.

சங்ககால கள்வர் கோமான் புல்லி என்பவன் வேங்கட மலைக்குத் தலைவன் என்றும் தமிழ்ப் புலவர்களுக்கு வாரி வழங்கிய வள்ளல் என்றும் கூறப்பட்டிருக்கிறான். அந்த வேங்கட மலையானது மொழி பெயர் தேயத்தைச் சேர்ந்தது என்கிறது அகநானூற்றுப் பாடல் (295)

"புடையலங் கழற் காற் புல்லி குன்றத்து
நடையருங் கானம் விலங்கி நோன்சிலைத்
தொடையமை பகழித் துவன்று நிலை வடுகர்
பிழியார் மகிழர் கலி சிறந்தார்க்கு
மொழிபெயர் தேஎயம் -
என்கிறது. இம்மன்னன் மழ நாட்டை
வென்றவன் என்பதை,
கழல்புனை திருந்தடிக் கள்வர் கோமான்
மழ புலம் வணக்கிய மாவண் புல்லி
விழவுடை விழுச் சீர் வேங்கடம்" - என
மற்றோர் அகப்பாடல் (61) கூறுகிறது.

பாடல் எண் 295இல் உள்ள 'கலி சிறந்தார்க்கும் மொழி பெயர் தேயம்' என்பதில் கலி என்பது புதுமை எனப் பொருள்படுகிறது. ஆதலால் ஏதோ ஒரு புதுமையை அவன் கடைபிடிக்கத் தொடங்கியிருக்கிறான். அந்தப் புதுமை கர்நாடகப் பகுதியிலிருந்து படையெடுக்கத் தூண்டிய களப்பிர அரசர்களுடன் இணைந்து சங்கத் தமிழ் மன்னர்களை அகற்றிப் புதுமையானதொரு அரசை நிறுவ நினைத்ததுதானா? இருக்கலாம். அதுதான் பின்னர் நடந்திருக்கிறது. இந்தக் கள்வர் கோமானை, முத்தரையர்கள் பல்லவர்களுடன் இணைந்துப் போரிட்டு வென்ற காரணத்தினால்தான் மிகவும் பெருமையாக கள்வர்களுக்குக் கள்வன், கள்வர்களின் எதிரி என்ற பொருளில் கள்வர் கள்வன் என்ற சிறப்புப் பெயரை, திரு. நடன. காசிநாதன் அவர்கள் கூறியதைப் போல் பெற்றிருந்தனர் போலும்.[13] அதனால் களப்பிரர் என்ற சொல் வைதிகர்களை எதிர்த்த அந்தக் கூட்டணியில் உள்ள சிற்றரசர், குறுநிலமன்னர், சீறூர்த் தலைவர்கள் அனைவரையும் குறித்திருக்கிறது எனலாம்.

### களப்பிரரை வென்றது பற்றியச் செப்பேட்டுத் தகவல்கள்

தொண்டை மண்டலத்தைப் பல்லவ மன்னர்கள் ஆட்சி செய்தபோது, அவர்கள் செப்பேட்டில் தங்கள் வெற்றி பராக்கிரமங்களைப் பற்றிக் கூறியிருக்கின்றனர். சிம்மவிஷ்ணு என்ற பல்லவமன்னர் பள்ளன் கோயில் செப்பேட்டை வெளியிட்டவன். இவன் களப்ர, மாளவ, சோழ, பாண்டிய மன்னர்களையும் சிங்கள, கேரள மன்னர்களையும் வெற்றிகொண்டது பற்றிய செய்தி இரண்டாம் நந்திவர்மன் வெளியிட்டுள்ள காசக்குடிச் செப்பேட்டில் கூறப்பட்டிருக்கிறது. நந்திவர்ம பல்லவனும் கேரள, சோழ, பாண்டிய, மாளவ, களப்ர, பாணாதிபர், போன்றோரை வென்றதை அவனது புல்லூர்ச் செப்பேடு கூறுகிறது. அவனது பட்டத்தாள் மங்கலம் செப்பேடும், அவனுடைய (அரண்மனை) வாயிற்புறத்தில் வல்லபர், களப்பிரர், கேரளர், பாண்டியர், சோழர், துளுவர், கொங்கணர் போன்றோரும் இன்னும் பிறரும் உள்ளே நுழைந்து சேவிப்பதற்காக, தக்க சமயத்தை எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறார்கள் என்கிறது.

முதலாம் பரமேஸ்வரவர்மனின் கூரம் செப்பேட்டில் அவனைப் புகழ்ந்து கூறுகிறபோது, நரசிம்ம பகவான் தாமே அரசன் உருவத்தில்

தொண்டை மண்டலத்தைப் பல்லவ மன்னர்கள் ஆட்சி செய்தபோது, அவர்கள் செப்பேட்டில் தங்கள் வெற்றி பராக்கிரமங்களைப் பற்றிக் கூறியிருக்கின்றனர். சிம்மவிஷ்ணு என்ற பல்லவமன்னர் பள்ளன் கோயில் செப்பேட்டை வெளியிட்டவன். இவன் களப்ர, மாளவ, சோழ, பாண்டிய மன்னர்களையும் சிங்கள, கேரள மன்னர்களையும் வெற்றிகொண்டது பற்றிய செய்தி இரண்டாம் நந்திவர்மன் வெளியிட்டுள்ள காசக்குடிச் செப்பேட்டில் கூறப்பட்டிருக்கிறது.

பூலோகத்திற்கு வந்தவர் போன்றவன் என்றும், திரும்பத் திரும்பச் சோழ, கேரள, களப்ர, பாண்டியர்களை வெற்றி கொண்டவன் என்றும் கூறுகிறது. எனவே மேற்கூறிய செய்திகளால் கிபி 6.ஆம் நூற்றாண்டில் ஆட்சி செய்த முதலாம் மகேந்திரவர்மனின் தந்தையான சிம்மவிஷ்ணு காலம் முதல், இரண்டாம் நந்திவர்மன் என்றழைக்கப்படும் இராஜசிம்ம பல்லவன் காலமாகிய 8.ஆம் நூற்றாண்டு வரை கூட, களப்பிரர் பிற எதிரிகளோடு ஒரு முக்கிய எதிரியாகத் திகழ்ந்திருக்கின்றனர் எனத் தெரிகிறது.

பாண்டிய நாட்டில், முன்னர் செய்யப்பட்ட தானங்கள் எவ்வாறு களப்பிரர்களால் தொடர்ந்து இறக்கப்பட்டு வந்ததோ, அது போலவே தொண்டை மண்டலத்திலும் நடந்திருக்க வேண்டும் என்பதைப் பல்லவர் செப்பேடுகள் உணர்த்துகின்றன. யஹாஸக் கோட்டைச் செப்பேடு என்பது சிம்மவிஷ்ணுவால் வெளியிடப்பட்டது. இச்செப்பேடுதான் பாண்டியர் செப்பேடுகளைப் போன்று அரியதொரு செய்தியைக் கூறியிருக்கின்றது.

பாண்டிய நாட்டில், முன்னர் செய்யப்பட்ட தானங்கள் எவ்வாறு களப்பிரர்களால் தொடர்ந்து இறக்கப்பட்டு வந்ததோ, அது போலவே தொண்டை மண்டலத்திலும் நடந்திருக்க வேண்டும் என்பதை பல்லவர்ச் செப்பேடுகள் உணர்த்துகின்றன. யஹாஸக் கோட்டைச் செப்பேடு என்பது சிம்மவிஷ்ணுவால் வெளியிடப்பட்டது. இச்செப்பேடுதான் பாண்டியர் செப்பேடுகளைப் போன்று அரியதொரு செய்தியைக் கூறியிருக்கின்றது.

'இந்த மன்னன் தன்னுடைய புஜபல பராக்கிரமத்தால் விலை கொண்ட அரசையுடையவனும், நீண்ட காலமாக மறைந்திருந்த அனேகம் ஆயிரம் பிரமதேயங்களை விடுவித்தலென்ற ஆக்ரயணம் என்னும் யாகத்தைச் செய்தவனும்'.. என்று கூறுகிறது அச்செப்பேடு.[14]

பிரமதேயத்தை மீட்பதற்கென்றே தனியாக ஒரு யாகம் நடந்திருக்கிறது என்று தெரிகிறது. யாரிடமிருந்து இவ்வாறு பிரமதேயங்கள் மீட்கப்பட்டிருக்கும்? பிரமதேய எதிர்ப்பாளர்களிடமிருந்து தானே? அவர்கள் களப்பிரர்கள் போன்றவர் தானே! தொண்டை மண்டலத்திலும் களப்பிரர்களது இடையீடு இருந்திருக்கிறது என்பதை மேற்கூறியச் செப்பேடுகள் கூறியிருக்கின்ற காரணத்தால் அந்த எதிர்ப்பாளர்கள் களப்பிரர்களே என்று கொள்வது தானே சரியாக இருக்கமுடியும்.

அதுபோல இதற்கு ஒப்பானதொரு தகவலையும் மீண்டும் மீண்டும் பல்லவரது பல செப்பேடுகளில், பதினோரு செப்பேடுகள் கூறுகின்றன. அவை உன்ன குரவயபாளையம் செப்பேடு, வேலூர்பாளையம் செப்பேடு, ரேயூரு செப்பேடு, நெடுங்கராயச் செப்பேடு, உருவப்பள்ளிச் செப்பேடு, ஓங்கோடு செப்பேடு, சுராச் செப்பேடு, உதயேந்திரம் செப்பேடு, யஹாஸக் கோட்டைச் செப்பேடு, ஹல்லெ கெரெ செப்பேடு ஆகியவையாகும். இச்செப்பேடுகளில் கலியுக தேசம் பற்றிக் கூறும் செய்திகள் இவைதாம்.[15]

'கலியுக தோத்தினால் அபகரிக்கப்பட்ட
தர்மத்தைத் தூக்கி நிறுத்த எப்போதும்
சன்னத்தமாக இருப்பவனும்...'

'கலியை அடக்குகிற (இரண்டாம்) பரமேசுவரன்
மனுநீதி முறைப்படி பூமியிலிருந்து கலிநீங்கும்
படி அரசு புரிந்தான்'

'கலியுக தோத்தினால் சாய்ந்த தர்மத்தைத் தூக்கி
நிலை நிறுத்துவதில் எப்பொழுதும் தயாராய்
இருப்பவனும்...'

'கலியுக தோத்தினால் முடிவடைந்த தர்மத்தை
நிலைநிறுத்துவதில் எப்போதும் சன்னத்தமாக
இருப்பவனும்.'

'கலியுக தோத்தினால் முடிவு பெற்ற தர்மத்தை
உயர்த்தி நிலை நிறுத்துவதில் எப்போதும்
சன்னத்தமாக இருப்பவனும்'

'கலியுக தோங்களாகிய சேற்றில் அழுந்தித்
தவிக்கும் தர்மமாகிய எருதைக் கரையேற்றுவதில்
எப்பொழுதும் தயாராக இருப்பவனும்...'

என்றெல்லாம் மேற்கூறியச் செப்பேடுகள் கூறுகின்றன. ஒரே மாதிரியான இந்த வாசகத்தை இச்செப்பேடுகள் அனைத்தும் கூறுவதால் ஏதோ

ஒரு உண்மைத் தகவல் புதைந்திருக்கிறது என்று தானே பொருள்! கலி அரைசர், கலிப்பகை - என்றெல்லாம் பாண்டியர் செப்பேடுகளும் இலக்கியங்களும் கூறுகின்றன. அதனால் கலியுக தோசத்தினைக் களைவதிலும், சாய்ந்த தருமத்தை மீட்பதிலும் அக்கறை காட்டியிருக்கின்றனர். களப்பிர அரசர்கள் பிரமதேய நிலங்களை பறித்துக்கொண்ட சம்பவத்தையும், பிராமணர்களை ஒடுக்கியதையும், பின்னர்த் தாங்கள் பல்லவர் ஆட்சியை நிறுவியபின்னர் அதனை மீட்டு அவர்களுக்குக் கொடுத்ததையும், ஆதரவளித்தையும் தான் இவ்வாறு பெருமையாகத் திரும்பத்திரும்பக் கூறிக்கொண்டனர் பல்லவர் என்பது புரிகிறதல்லவா!

பல்லவன் அபராஜிதவர்மன் (கி.பி 870 முதல் 890 வரை) வெளியிட்ட வேலஞ்சேரிச் செப்பேட்டிலும் களப்பிரர் பற்றிக் கூறப்பட்டிருக்கிறது. அதாவது, களப்பிரர் குலம் என்ற ஆகாயத்தில் உலவும் சூரியனாக அபராஜிதனைப் புகழ்கிறது அச்செப்பேடு.[16] ஆதலால் கி.பி 9ஆம் நூற்றாண்டின் இறுதிவரையிலும் கூட களப்பிரர்கள் பல்லவர்களை எதிர்த்துப் போரிட்டுக் கொண்டேயிருந்தனர் என்பது தெரிகிறது.

'கூடலூர் நாட்டுப் பிரம்மதாயம் சிற்றையூரும் மவ்வூரு படும் கடைய வயல்' - என்று சிற்றையூரையும் கடைய வயலையும் பிரம்மதாயமாகக் குறிப்பிடுகின்றது. பிரம்மதாயம் சிற்றையூரைத் தொடர்கின்ற சில எழுத்துக்கள் சிதைந்து பின்னர், 'அவ்வூருபடுங் கடைய வயல்..' என்று உள்ளது. இதைத் தொடர்ந்து - விற்றுக் குடுத்துக் கொண்ட - என்ற பகுதியும் கிடைக்கின்றது. இப்பிரம்மதேய ஊர்கள் புன்செய் நிலங்களையும் நீர் நிலங்களையும் உள்ளடக்கியிருந்தன என்பதையும் அக்கல்வெட்டுக் குறிப்பிடுகின்றது. மேலும் இவ்வூர்களைக், காராண்மை, மீயாட்சியுடன் பிரம்மதேயக் கிழவர்களாகிய பிரம்மதேய உரிமையாளர்கள் அனுபவித்து வந்தனர் என்பதையும் இக்கல்வெட்டுக் குறிப்பிடத் தவறவில்லை.

பிரம்மதாயத்துட் பிரம்மதாயக் கிழவர்... என்ற தொடரும் காணப்படுகின்றது. அதாவது பிரம்மதாயமாக நிலப்பங்கு பெற்றிருந்தவர்களுள் ஒருவர் - எனக் கொள்ளலாம். ஒரு ஊர் பிரம்மதேயமாக கொடுக்கப்படும்போது அவ்வூர், பிராமணர் பலருக்குப் பங்கிட்டு அளிக்கப்படும். அவ்வாறு பங்கு பெற்றவருள் ஒருவரே - பிரம்மதாயத்துட் பிரம்மதாயக் கிழவர் - என்பதாக இருத்தல் வேண்டும்.

பல்லவன் அபராஜிதவர்மன் (கிபி. 870 முதல் கிபி. 890 வரை) வெளியிட்ட வேலஞ்சேரிச் செப்பேட்டிலும் களப்பிரர் பற்றிக் கூறப்பட்டிருக்கிறது. அதாவது, களப்பிரர் குலம் என்ற ஆகாயத்தில் உலவும் சூரியனாக அபராஜிதனைப் புகழ்கிறது அச்செப்பேடு.[16] ஆதலால் கிபி 9ஆம் நூற்றாண்டின் இறுதிவரையிலும் கூட களப்பிரர்கள் பல்லவர்களை எதிர்த்துப் போரிட்டுக் கொண்டேயிருந்தனர் என்பது தெரிகிறது.

### பூலாங்குறிச்சிக் கல்வெட்டில் பிரமதேய ஆக்ரமிப்பு

தமிழ்நாட்டில் பிரமதேயம் பற்றிக் குறிப்பிடுகின்ற மிகப்பழைய கல்வெட்டு, புதுக்கோட்டை மாவட்டத்திலுள்ள பூலாங்குறிச்சியின் மலைச்சரிவில் கண்டுபிடிக்கப்பட்டுள்ள மூன்று கல்வெட்டுகளில் ஒன்றுதான். களப்பிரர் காலத்தைச் சேர்ந்த இக்கல்வெட்டுகளுள் முதல் கல்வெட்டில்தான் பிரமதாயம் பற்றிய அரிய குறிப்புகள் கிடைக்கின்றன. பிரமதாயம் பற்றிய இலக்கிய, செப்பேட்டு ஆதாரங்களுக்கு வலுவூட்டத்தக்கதாக விளங்குகின்ற ஒரே கல்வெட்டுச் சான்றும் இதுதான். இக்கல்வெட்டு,

வெள்கூருப் பச்செறிச்சில் என்று கூறப்பட இன்றைய பூலாங்குறிச்சி மலைமேல் கட்டப்பட்ட புதிய தேவகுலம் பற்றியும், அதற்குக் கொடுக்கப்பட்ட நிலக்கொடை பற்றியும், அத்தேவகுலத்தை யார் நிர்வாகம் செய்யவேண்டும், யார் பாதுகாக்க வேண்டும் என்பது பற்றியும் அங்குள்ள மூன்றாவது கல்வெட்டில் கூறுகிறபோது, நிலக்கொடைகள் பற்றி அதில் கூறப்படவில்லை. நிலக்கொடை பற்றிக் கூறுகின்ற கல்வெட்டு இந்த முதல் கல்வெட்டுதான். இத்தகையச் சூழலில் பிரம்மதேய ஊரை, அதுவும் நீர்நில வளமிக்க ஊர்களைப் பற்றிக் குறிப்பிடும்போது, அந்நிலங்களைப்

புதிதாகக் கட்டப்பட்ட கோயிலுக்குத் தொடர்புப் படுத்தித்தானே கூறியிருக்கவேண்டும். விற்றுக் கொண்டு குடுத்த என்ற தொடரும் கிடைப்பதால், பிரம்மதாயம் சிற்றையூரும், அவ்வூரு படுங்கடைய வயல் என்னும் பகுதியும் இப்புதிய தேவகுலத்திற்கு விற்றுக் கொடுக்கப்பட்டிருக்கின்றன என்று கொள்வதுதானே பொருத்தமுடையதாகும்.

இப்பகுதியை அடுத்து அதே கல்வெட்டில் பாண்டிய நாட்டு, கொங்கு நாட்டு காராண்கிழமை, கலக்கிழமை, மியாட்சி, மேலாண்மை ஆகிய உரிமை பெற்ற பிரமதேய ஊர்களைக் குறிப்பிடுகின்றன. அவ்வாறு குறிப்பிட்ட பின்.

"....அவருடைய காலாசமும் தோட்டங்களும்
மவரு
தமரையும் மவரு குடிகளையும்..
...." என்று கூறியபின் சில எழுத்துக்கள் சிதைந்திருக்கின்றன. பின்னர் "...வேறு வேறு ஆயிரத்து இருநாறு..."

அக்கல்வெட்டு எனக் கொள்வது தானே பொருத்தமுடையதாகும்.[17]

புத்தருடைய நிர்வாணத்திற்குப்பிறகு அரசர்களும் மூத்த குடிமக்களும், புத்த மதத்தைத் தழுவிய குடும்பத்தலைவர்களும், பௌத்த துறவிகளுக்காக மடங்களைக் கட்டித் தந்ததோடு அவர்களுடைய வசதிக்காகத் தோட்டங்களையும், வயல்களையும் மானியமாய் கொடுத்தார்களென்றும், அந்த விளை நிலங்களில் வேலை செய்வதற்காகக் குடியானவர்களையும் கால்நடைகளையும் அளித்து உதவினார்கள் என்றும் சீனயாத்திரிகர் பாஹியான் எழுதியிருக்கின்றார் என்பதை ஆர். எஸ். சர்மா குறிப்பிட்டுள்ளார்.

இத்தகைய நடவடிக்கையாகத்தான் பூலாங்குறிச்சி கல்வெட்டுக் குறிப்பிடும் தகவல்கள் இருத்தல் வேண்டும். பாஹியான் காலமும் இக்கல்வெட்டின்

> கலி என்பது ஏற்கனவே நிலைபெற்றிருந்த ஒரு சமூக ஒழுங்கு முறையிலிருந்து எப்போதெல்லாம் விலகல் ஏற்படுகிறதோ அப்போதெல்லாம் அது கலியாகவோ அதன் தடமாகவோ பார்க்கப்படுகிறது. சடங்கு முறைகளைப் புறக்கணித்தலும் ஒதுக்கப்பட்ட பிரிவைச் சார்ந்தோர் செல்வாக்குப் பெறுவதும் அந்நியர் அல்லது பிராமணர் அல்லாதார் ஆட்சியாளர் ஆவதும் கலி என்பதன் பொருளாகிறது என்கிறார் ஆர்.எஸ். சர்மா.

என்று கூறியவுடன் பல்வேறு அதிகாரிகளைக் குறிப்பிடுகிறது அக்கல்வெட்டு. இக்கல்வெட்டின் மூலம், இப்புதிய தேவகுலம் கட்டுவதற்கு முன்பே இயங்கிக் கொண்டிருக்கின்ற பாண்டி நாட்டு கொங்கு நாட்டு பிரமதேய ஊர்கள்தான் குறிப்பிடப்படுகின்றன என்பது தெளிவாகத் தெரிகிறது. இப்பகுதியைத் தொடர்ந்து 'அவருடைய காலாசமும் தோட்டமும் அவருடைய தமரையும் அவருடைய குடிகளையும்...' என்ன செய்யச் சொல்கிறது இக்கல்வெட்டு? இக்கல்வெட்டில் கூறப்பட்ட அதிகாரிகள் பலரும் அப்பிரமதேயங்களை இறக்கவேண்டுமென்றோ அல்லது அங்கு வரி வசூலிக்கப்பட்டு புதிய தேவகுலத்தின் பராமரிப்பிற்குத் தரவேண்டும் என்று ஆணையிட்டதையோதான் கூறுகிறது

காலமும் கி.பி. 5ஆம் நூற்றாண்டு என்பது குறிப்பிடத்தக்கது. வட இந்தியாவில் பரவலாகப் பௌத்த மடத்திற்கும் கோயிலுக்கும் அளிக்கப்பட்ட தானங்களைப் போலவே, வடக்கிலிருந்து வந்து தமிழகத் தலைவர்களுடன் கூட்டணி அமைத்து தமிழகத்தில் ஆட்சிபுரிந்த பௌத்த ஆதரவுக் களப்பிர அரசர்களும், படைத்தலைவர்களும்தான் பௌத்த கோயிலுக்குத் தானமளித்தனர் எனக் கொள்வதில் தவறில்லை எனலாம்.

கலி என்பது ஏற்கனவே நிலைபெற்றிருந்த ஒரு சமூக ஒழுங்கு முறையிலிருந்து எப்போதெல்லாம் விலகல் ஏற்படுகிறதோ அப்போதெல்லாம் அது கலியாகவோ அதன் தடமாகவோ பார்க்கப்படுகிறது.

சடங்கு முறைகளைப் புறக்கணித்தலும் ஒதுக்கப்பட்ட பிரிவைச் சார்ந்தோர் செல்வாக்குப் பெறுவதும் அந்நியர் அல்லது பிராமணர் அல்லாதார் ஆட்சியாளர் ஆவதும் கலி என்பதன் பொருளாகிறது என்கிறார் ஆர். எஸ்.சர்மா.

மேலும் மூன்று அல்லது நான்காவது நூற்றாண்டுகளில் சமூக ஒழுங்கின்மை உச்சகட்டத்தை அடைந்ததன் காரணமாகவே இக்காலத்தை வடமொழி நூல்கள் கலியுகம் எனக்குறித்து அதிகம் கவனம் செலுத்தியுள்ளன. வருணப்பாகுபாட்டில் உயர்ந்த நிலையிலிருக்கும் பிராமணரும் சத்திரியரும் வைசியரிடமிருந்தும் சூத்திரரிடமிருந்தும் விடுபட்ட நின்ற காலத்தைத்தான் கலிகாலம் என்றனர் என்பதையெல்லாம் ஏராளமான சான்றுகளுடன் நிறுவுகிறார்.

இறுதியாகக் கலியுகம் என்ற சொல்லுக்குப் பிராமணிய சமூக ஒழுங்கைச் சீர்குலைப்பது எனவும் அது மக்களின் யுகம் எனவும் பொருள் விளக்கம் அளித்தவர் ஆர். எஸ்.சர்மா.[18] சர்மாவின் இக்கருத்துக்கள் நாம் மேலே கூறிய தமிழ்நாட்டுச் சான்றுகளுடன் எவ்வாறு பொருந்தியிருக்கிறது என்பதைக் கூறவும் வேண்டுமா?

மேற்கூறிய தகவல்களாலும் இன்னும் பிற சான்றுகளாலும் களப்பிரர்கள் தமிழ்நாடு, தமிழர், தமிழ் மொழி, தமிழ் எழுத்து, தமிழகக்கலைகள் அனைத்திற்கும் ஆதரவளித்து வளர்த்தவர்கள் என்ற தகவல்கள் வெளிப்பட்டிருக்கின்றன.

**குறிப்புகள்**

1. தமிழக வரலாறு மா. இராசமாணிக்கனார் தமிழக வரலாறும் பண்பாடும் - கே.கே. பிள்ளை
2. தளவாய்புரம் செப்பேடு - பாண்டியர் செப்பேடுகள் பத்து, வரிகள். 131 - 132, பக். 106, உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை (1999)
3. ஆவணம் இதழ் 18-2007. தமிழகத் தொல்லியல் கழகம், தஞ்சாவூர்
4. வேள்விக்குடிச் செப்பேடு - பாண்டியர் செப்பேடுகள் பத்து, வரி. 134, பக். 31
5. ஸ்ரீவரமங்கலம் செப்பேடு - பாண்டியர் செப்பேடுகள் பத்து, வரிகள். 61 - 62, பக். 60
6. சின்னமனூர் சிறிய செப்பேடு - பாண்டியர் செப்பேடுகள் பத்து, வரிகள் 20 - 22, பக். 76
7. சின்னமனூர் பெரிய செப்பேடு - பாண்டியர் செப்பேடுகள் பத்து, சுலோகம் 22-32, பக். 164-165
8. சிவகாசிச் செப்பேடு - பாண்டியர் செப்பேடுகள் பத்து, சுலோகம் 8, 13, பக். 198, 199
9. அகநானூறு எண்கள் : 61, 83, 209, 295, 311, 359.
   புறநானூறு எண்கள் : 385
10. The kalabhras in the Pandiya country and their impact on the life and letters there
11. அகநானூறு எண் : 209
12. களப்பிரர் ஆட்சியில் தமிழகம் - மயிலை சீனி வேங்கடசாமி, பக். 13 - 14
13. களப்பிரர் - நடன. காசிநாதன், தமிழ்நாடு அரசு தொல்லியல் துறை 1981, பக். 27
14. யஹாஸக்கோட்டைச் செப்பேடு - பல்லவர் செப்பேடுகள் முப்பது, வரிகள் 12 - 16, பக். 381
15. பல்லவர் செப்பேடுகள் முப்பது - உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், 1999
16. Velanjeri copper plates - R. Nagaswamy, State Department of Archaeology, Chennai
17. களப்பிர அரசின் நிலவுடமைக் கொள்கை ஆ. பத்மாவதி, சமூக விஞ்ஞானம் 2006, தென்னக ஆய்வு மையம், பக். 22 -29
18. Sudras in Ancient India - R.S.Sharma



# பக்தி இலக்கியத்தில் வைதிக மேலாண்மை

க. நெடுஞ்செழியன்

மாலிய, சிவனிய இயக்கங்களின் எழுச்சியைத் தமிழ் மொழியின் மறுமலர்ச்சியாகப் பார்க்கும் பார்வை அறிஞர்களிடையே நிலவி வருகிறது. "பாகத, பாலி மொழிகளைத் தம் இலக்கிய மொழிகளாகக் கொண்டிருந்த சைன, பௌத்த சமயங்களை எதிர்த்துத் தமிழ் மக்களுக்குரிய சமயங்கள் பெற்ற எழுச்சியே தமிழகப் பக்தி இலக்கியங்களாக வடிவம் கொண்டன" என்பார் குணா. ஆனால் தமிழைத் தம் சமயத் தாய் மொழியாகக் கொண்ட ஆசிவகர்களும் பக்தி இயக்கத்தால் மிகமிகக் கடுமையான கண்டனத்திற்கு உள்ளாயினர். இதனால் மொழியுணர்வு மட்டுமே சமய மோதல்களுக்குக் காரணம் என்பதையும் நாம் மறுஆய்வு செய்ய வேண்டியுள்ளது. அதைப் போன்றே சைவ சமய உட்பிரிவுகளுக்கிடையே நிலவிய முரண்பாடுகள், சைவ சமய உட்பிரிவுகளுக்கும் வைதிக சமயங்களுக்கும் இடையே நிலவிய மோதல்கள் ஆகியன குறித்தும் நாம் கவனத்தில் கொள்ளவேண்டியுள்ளது. அந்த வகையில் சிவனிய சமயத்தின் எழுச்சி, அதன் உட்பிரிவுகள் அவற்றுக்கு இடையே நிலவிய வேறுபாடுகள், சிவனியம் எதிர்கொண்ட சவால்கள் இவை குறித்து இக்கட்டுரை ஆராய்கின்றது.

**சைவத்தின் தோற்றம்**

சைவத்தின் தோற்றம் மிகத்தொன்மையானது எனும் கருத்து ஆழப்பதிந்த ஒன்று. ஆயினும் தொல்காப்பியர்,

மாயோன்
சேயோன்
வேந்தன் (இந்திரன்)
வருணன்
கொற்றவை

ஆகிய தெய்வங்களை மட்டுமே குறித்துள்ளார். ஆனால் சிவனைப் பற்றிக் குறிப்பிடவே இல்லை. வழிபாட்டு முறைகளாகக்

கொடிநிலை
கந்தழி
வள்ளி

எனும் மூன்றையும் குறித்துள்ளார். இம்மூன்றும் ஆண், பெண் புணர்ச்சிச் சடங்குகளை உள்ளடக்கிய தந்திர வழிபாட்டு முறைகளாகவும், வளமை வழிபாட்டை உள்ளடக்கிய வளமைச் சடங்குகளாகவும் உள்ளன. இவ்வழிபாட்டு முறைகளிலும் சிவனியம் பற்றி வெளிப்படையான செய்திகள் இடம்பெறவில்லை. இதனால் சிவவழிபாட்டின் தொன்மை குறித்துச் சில ஐயங்கள் எழுகின்றன. இன்றைக்கு நாம் புரிந்துகொண்டுள்ள சிவ வடிவங்களான,

நடராசர் கோலம்
தென்திசைக் கடவுட்கோலம்
(தட்சிணாமூர்த்தி)
கபாலிக் கோலம்
பாசுபதத் தோற்றம்

முதலான படிநிலைகள் அல்லது அடையாளங்கள் எல்லாம் எப்போது தோன்றின? அவற்றின் மூலவடிவம் எது? என்பன குறித்தும் ஆராயவேண்டியுள்ளது. மேலும் சிவன் பற்றிய அடையாளங்கள் யாவும் வடமொழிக்கும் வடமொழி சார்ந்த வைதிகச் சமயத்திற்கும் உரியன எனும் பெ.சு.சு. சாஸ்திரியின் கூற்றையும் நாம் கவனத்தில் கொள்ள வேண்டியவர்களாக உள்ளோம்.

சங்க இலக்கியங்களில் இடம் பெற்றுள்ள சிவன் பற்றிய குறிப்புகள் யாவும் வடமொழிக் காப்பியங்களான இராமாயணம், பாரதம்



அரசு கல்லூரிகளிலும் பல்கலைக் கழகங்களிலும் 35 ஆண்டுகாலப் பயிற்சி அனுபவமிக்கவர். தொல்காப்பியம், திருக்குறள், மெய்யியல் பற்றிய இவருடைய ஆய்வுகள் தமிழக வரலாற்றில் பெரும் திருப்பத்தை ஏற்படுத்தியவை. தமிழர் மெய்யியலை மீட்டெடுத்தப் பெருமைக்குரியவர். 20க்கும் மேற்பட்ட நூல்களை எழுதியும் பதிப்பித்தும் உள்ளார். கவிஞராகவும், பேச்சாளராகவும் தங்கப் பதக்கம் பெற்றவர்.

முதலானவற்றின் மொழிபெயர்ப்பே எனத் துணிவார் பெ.சு. சுப்பிரமணிய சாஸ்திரி. ஆனால் மறைமலை அடிகள் உள்ளிட்ட தமிழறிஞர்கள், சிவனைத் தமிழர்களின் கடவுளாகவே உறுதி செய்கின்றனர். இதனை,

"..... எபிரேயர் (Hebrews) தாம் வணங்கிப் போந்த கடவுளைச் 'சிகோவா' (Jehovah) என்றே அழைத்தனர். கிரேக்கர் (Greaks) அதனைச் 'சியூஸ்' (Zeus) என்றே அழைத்தனர். உரோமர் (The Romans) அதனைச் 'சூபிதர்' (Jupiter) என்றே அழைத்தனர். இவ்வயலவர் வழங்கிய அச்சொற்களெல்லாஞ் 'சிவ்' என்னுஞ் சொல்லின் திரிபேயன்றி வேறல்ல. மேல்நாடுகளில் அஞ்ஞான்று வாணிகம் நடத்திய பண்டைத் தமிழரின் வாயிலாகச் 'சிவ்' என்னுஞ் சொல் அயல்நாட்டு நாகரிக மக்களிடையே பரவினாற்போல், சிவபிரானைக் குறிக்கும் ஏனைப் பெயர்ச் சொற்கள் அம்மக்களிடையே பரவக் காணாமையின், வடக்கிருந்த பழந்தமிழர் வழங்கிய 'சிவ்' என்னுஞ் சொல்லே ஏனையெல்லாவற்றினும் மிக்க பழமையுடைத்தென்பது தெளியப்படாநிற்கும். அதனாற்றான் 'சிவ்' என்னுஞ் சொல் தமிழர் வணங்கிய முழுமுதற் கடவுளுக்குச் சாலச் சிறந்த பெயராகவும், அவரது மதம் அச்சொல்லின் வழியே 'சைவம்' என்னுஞ் சிறப்புப் பெயருடையதாகவும் வழங்கி நிலைபெறலாயினவென்று ஓர்ந்துகொள்க." எனும் மறைமலை அடிகளாரின் கூற்றால் அறியலாம்.



இந்த விளக்கம் மறு ஆய்விற்கு உரியது. எனினும் இன்றைய நிலையிலும் 'சிவலிங்கம்' என அழைக்கப்படும் இலிங்கத்திற்கும் (கந்து அல்லது ஆண்குறி) சிவனுக்கும் ஏற்பட்ட இணைப்பே சிவ வழிபாட்டின் தொடக்கம் எனலாம். இந்த இணைப்பு எப்போது எப்படி ஏற்பட்டது? என்பதை உறுதிசெய்ய முடியாது. மரபு வழியாகப் பின்பற்றப்பட்டுவரும் இலிங்க வழிபாடு, ஆரியர் வருகைக்கு முற்பட்டது என்பதுடன் ஆரியரல்லாத மக்களுக்கு உரியது என்பதும் அறிஞர்களால் ஏற்றுக்கொள்ளப்பட்ட உண்மையாகும். இருக்குவேதம், இலிங்க வழிபாட்டினரை ஆண்குறி வழிபாட்டினர் (சிசுனதேவர்), என இழிவுபடுத்துகின்றது. இந்த ஆண்குறி வழிபாடே சிவவழிபாடாக மாறியது. இதனை,

"ஈசன் (மகாதேவர்) வேறு எதனாலும் காரணங்களின் காரணமாயிருக்கிறாரா? வேறு யாருடைய லிங்கமும் (ஆண்குறி) தேவர்களால் வழிபடப்படுவதாக நாம் கேள்விப்படவில்லை. மகாதேவரின் இலிங்கத்தைத் தவிர வேறு யாருடைய இலிங்கமாவது தேவர்களால் வழிபடப்படுவதாக அல்லது முன்பு வழிபடப் பட்டதாகத் தெரிந்தால் அதைத் தெரிவிப்பாயாக. எனவே யாருடைய இலிங்கத்தைப் பிரம்மாவும் விஷ்ணுவும் நீயும் (இந்திரனும்) மற்ற தெய்வங்களும் எப்போதும் வழிபடுகிறீர்களோ அவரே மிக உயர்ந்தவர் ஆவார். குழந்தைகள், பிரம்மாவின் தாமரைக் குறியையோ, விஷ்ணுவின் சக்கரக் குறியையோ, (இந்திரனின்) இடிக் குறியையோ கொண்டு பிறப்பதில்லை. ஆனால் ஆண்குறியையும் பெண்குறியையும் கொண்டு பிறக்கின்றன. தேவியின் அம்சத்தைக் காரணமாகக் கொண்டு பிறக்கின்ற எல்லாப் பெண்களுக்கும் பெண்குறி

உள்ளது. எல்லா ஆண்களும் அரனின் ஆண்குறியைப் பெற்றுள்ளனர். ஈசுவரனை (மகாதேவர்) அல்லாமல் வேறு காரணம் உண்டு எனக் கூறுபவன், தேவியின் குறி இல்லாத எந்தப் பெண்ணாவது இருப்பதாகக் கூறுபவன், மூன்று உலகிலும் யாராயிருந்தாலும் அந்த அறிவிலியை வெளியே தள்ளுக. ஆணாயிருப்பது எல்லாம் ஈசுவரன் என்றும், பெண்ணாயிருப்பது எல்லாம் உமா என்றும் அறிவாயாக. இந்த உலகம் முழுதிலுமே அசைவன அசையாதன எல்லாம் இந்த இரண்டு உடல்களால் நிரம்பியுள்ளன" எனும் அறிஞர் அம்பேத்கரின் மேற்கோள் விளக்கம் தெளிவுபடுத்தும்.

**சிவனுக்கு முன்னரே...**

இலிங்க வழிபாடு சிவ வழிபாடாக மாற்றம் கொள்வதற்கு முன்னரேயே ஆண்குறி வழிபாடு வளமை வழிபாடாகப் பெருஞ் செல்வாக்கைப் பெற்றிருந்தது. அத்துடன் போரில் வெற்றியை ஈட்டித்தரும் ஆற்றல் கொண்டதாகவும் அது வணங்கப்பட்டு வந்துள்ளது. வேளாண்மையோடும் போரோடும் தொடர்பு கொண்ட இன்றியமையாச் சடங்கு முறையாகவும் இவ் வழிபாட்டுமுறை தொடர்ந்தது. தொல்காப்பியர் 'கந்தழி' எனக் குறிப்பது (கந்து ஆண்குறி கன்றாப்பூர் நடுதறியைக் காணலாமே. அப்பர்). இந்த ஆண்குறி வழிபாட்டை என்பதையும் நாம் மனங்கொள்ளல் வேண்டும். ஆண் பெண் குறிகளை பிறப்பு உறுப்புகளை வழிபட்டு அவற்றை வளமை வழிபாட்டிற்குரிய சடங்கு முறைகளாகவும் மாற்றிய நிலையில்தான் 'தந்திரம்' (Tantra) எனும் மெய்யியல் கோட்பாடு உருவாயிற்று. இத்தந்திர நடைமுறைகளும், மெய்யியலும் வேதங்களுக்குக் காலத்தால் முற்பட்டன என்பதுடன் வேதங்களுக்கு எதிரானவையும் ஆகும். இந்த அடிப்படையில் உருவான காரணத்தால்தான் தொடக்கக்காலச் சிவனியம் வைதிக எதிர்ப்பை அடிப்படையாகக் கொண்டிருந்தது. சிவனின் மாமனாராகிய தட்சனுக்கும் சிவனுக்கும் நடந்த மோதலை அதற்கான சான்றாகக் கூறலாம். இதுபற்றி விரிவாக ஆராய்ந்த அறிஞர் அம்பேத்கர்,

"சிவன் ஆரம்பத்தில் வேதத்துக்கு எதிரான கடவுள் என்பது மிகத் தெளிவாகத் தெரிகிறது. பாகவதபுராணத்திலும் (மகாபாரதத்திலும் கூட) குறிப்பிடப்படும் இரண்டு நிகழ்ச்சிகள் இதைப்பற்றி நன்றாக விளக்குகின்றன. முதல் நிகழ்ச்சி, சிவனுக்கும் அவன் மாமனாரான தட்சனுக்கும் இடையே எப்படிப் பகைமை வளர்ந்தது என்பதைக் காட்டுகிறது. பிரஜாபதிகள் நடத்திய ஒரு வேள்வியில் கடவுள்களும் ரிஷிகளும் கூடியிருந்தார்கள். அங்கே தட்சன் உள்ளே வந்தபோது கூடியிருந்த அனைவரும், பிரம்மாவையும் சிவனையும் தவிர மற்றவர்கள் எழுந்து வணக்கம் செய்தார்கள். தட்சன் பிரம்மாவுக்கு வணக்கம் கூறிவிட்டு அவர் அனுமதியின்படி அமர்ந்தான். ஆனால் சிவன் தன்னிடம் நடந்து கொண்ட விதம் தன்னை அவமதிப்பதாக அவன் நினைத்தான்.

அப்படி நினைத்த தட்சனுக்குச் சினம் மேலோங்குகின்றது. சினமும் வெறுப்பும் கலந்த சொற்களால் பலருக்கும் முன்பாகச் சிவனை இகழ்ந்துரைக்கின்றான். 'கேளுங்கள் பிராமண ரிஷிகளே!, அக்கினிகளே! தேவர்களே! அறியாமையாலோ, ஆணவத்தினாலோ அல்லாமல், முன்னோர்களாகிய சான்றோர்களின் வழக்கத்தைக் கூறுகின்றேன். இந்த வெட்கங்கெட்ட சிவன் உலகைக் காப்பவர்களின் புகழைக் குறைக்கின்றான். பிடிவாதக்காரனான இவனுடைய செய்கை நல்லவர்களின் வழிமுறைகளை மீறுவதாக உள்ளது. இவன் என்னுடைய மாணவனைப் போன்றவன். ஒழுக்கமுள்ளவனைப்போல இவன் பிராமணர்களின் முன்னிலையிலும், அக்னியின் முன்னிலையிலும் சாவித்திரியைப் போன்ற என் மகளின் கரம் பற்றினான். குரங்குக் கண்ணனான இந்தக் கடவுள், மான் கண்ணியான என் மகளை மணந்து கொண்டான். எழுந்து நின்று எனக்கு வணக்கம் செலுத்த வேண்டியவன், வார்த்தையால்

சிவன் ஆரம்பத்தில் வேதத்துக்கு எதிரான கடவுள் என்பது மிகத் தெளிவாகத் தெரிகிறது. பாகவதபுராணத்திலும் (மகாபாரதத்திலும் கூட) குறிப்பிடப்படும் இரண்டு நிகழ்ச்சிகள் இதைப்பற்றி நன்றாக விளக்குகின்றன. முதல் நிகழ்ச்சி. சிவனுக்கும் அவன் மாமனாரான தட்சனுக்கும் இடையே எப்படிப் பகைமை வளர்ந்தது என்பதைக் காட்டுகிறது.

கூட எனக்கு மரியாதை தரவில்லை எனக் கடுமையாகக் கூறிச் சபித்துவிட்டுச் சென்று விட்டான். இச்சூழலில் தட்சன் பிரம்மாவால் பிரசாபதியாக உயர்த்தப்படுகிறான். அதன் காரணமாக மிகப்பெரிய வேள்வி ஒன்றைச் செய்கிறான். அதன் பெயர் 'விருகஸ்பதி சவா' என்பதாகும். இந்த வேள்வில் ஒவ்வொரு கடவுளும் தத்தம் துணையுடன் சென்றனர். ஆனால் சிவனுக்கோ அழைப்பேயில்லை. ஆனாலும் பார்வதி தன் தந்தை மேற்கொண்ட யாக நிகழ்விற்குத் தன்னை அழைத்துச் செல்லுமாறு சிவனை வற்புறுத்துகின்றாள். சிவன் தனக்கு மரியாதை இல்லாத இடத்திற்குச் செல்ல வேண்டாம் எனக் கூறி மறுத்தான். ஆயினும் பார்வதி அங்குச் சென்றாள். தன் கணவனை மதிக்காத தந்தையைக் கண்டித்தாள். அந்தக் கருத்து மோதலில் பார்வதி உயிர் பிரிந்தாள். இதனால் ஏற்பட்ட முரண்பாட்டில் சிவன் தன் தலைமுடியிலிருந்து ஒரு கத்தை மயிரைப் பறித்தார். அதிலிருந்து பூதம் ஒன்று தோன்றியது. சிவகணங்களை அழைத்துக் கொண்டு தக்கனின் வேள்வியைச் சிதைத்து வருமாறு அப்பூதத்திற்குக் கட்டளையிட்டார் சிவன். அவையும் அப்படியே செய்தன. இதன் விளைவால் ஏற்பட்ட பகைமையைத் தணிக்கும் பொருட்டுப் பிரம்மா சிவனிடம், தக்கனுக்கு இரக்கம் காட்டுமாறு கேட்டுக் கொள்கிறார். சிவனும் அதற்கு இணங்குகிறார்.

பாகவத புராணத்திலிருந்து இம்மேற்கோளைத் தரும் அம்பேத்கர், "முடிவில் சிவன் வேதத்துக்கு எதிரான கடவுள் எனக் காட்டுவதற்கு, அவர் தட்சனின் யாகத்தை அழித்ததை விட வேறு சிறந்த சான்று இருக்க முடியாது", என்றும் உறுதிப்படுத்துவார்.

அடிப்படையில் வேத நெறிகளுக்கு மாறாகவும் அவற்றிற்கு எதிராகவும் செயல்பட்ட சிவனியம், அதனோடு இணைந்து நின்ற தந்திர வழிபாடு ஆகிய அனைத்தும் வழிபாட்டு நிலையில்தான் தொடர்ந்தன. இந்த வழக்காற்று முறை, சமய நிறுவனமாக அதாவது வரையறுக்கப்பட்ட மெய்யியல் கோட்பாடுகளாக வடிவம் கொண்டது ஏறத்தாழ கி.மு. 6ஆம் நூற்றாண்டில் எனலாம். புத்தரின் சமகாலத்தில் வாழ்ந்த பாண்டிய மன்னன் தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியனைப் பாட்டுடைத் தலைவனாகக் கொண்ட "மதுரைக்காஞ்சியில்", சிவனைத் தலைவனாகக் கொண்ட சமயமாகச் சிவனியம் குறிக்கப்பட்டுள்ளதே அதற்கான முதற்சான்றாகும். அப்பகுதியில் குறிக்கப்பட்டுள்ள சமயங்கள் மூன்றாகும். அவை,

சிவனியம்
வைதிகம்
ஆசீவகம்

என்பன. அண்மைக்கால ஆய்வுகளின்படி மதுரைக்காஞ்சியில் இடம் பெற்றுள்ள சிவனியம், அதன் உட்பிரிவுகளில் ஒன்றான "கபாலிகம்" என அடையாளம் காணப்பட்டுள்ளது. அப்பகுதியில் சிவன்,

ஐம்பூத நாயகனாகவும்
மழுவாள் நெடியோனாகவும்

போற்றப்படுகிறார். அப்பாடற்பகுதியில் இடம் பெற்றிருக்கும் செய்திகள் யாவும் புணர்ச்சிச் சடங்குகளோடு கூடிய தந்திர வழிபாட்டிற்குரியவையாக உள்ளன. கபாலிகர்களாகிய சிவனியர்கள், இத்தகைய சடங்குமுறைகளைப் பின்பற்றியோர் ஆவர். அதன் காரணமாகத்தான் பல்லவ மன்னன் மகேந்திரன் எழுதிய 'மத்தவிலாச பிரவசனத்தில்' கபாலிகன் தன் மனைவியோடு கள்ளுண்டு களித்திருப்பவனாகச் சித்திரிக்கப்பட்டுள்ளான் என்பதும் எண்ணத்தகும். அந்நாடகத்தில் ஒரு காட்சி. குடித்து மயங்கித் தள்ளாடும் கபாலிகன், அவன் மனைவி தேவசோமை ஆகியோர் உரையாடும் பகுதி வருமாறு.

**கபாலி:**

குடிப்பழக்கம் என்னையறியாமல் ஏதேதோ உளறும்படிச் செய்கிறது. இன்று முதல் குடிப்பதை விட்டுவிடுகிறேன்.

**தேவ:**

ஐயாவே என் பொருட்டு உம்முடைய பரம விரதத்தைத் தவற விடவேண்டாம். (அவன் காலில் விழுந்து வேண்டுகிறாள்)

**கபாலி:**

(மகிழ்ச்சி பொங்க அவளைத் தூக்கி நிறுத்தித் தழுவித் கொள்கிறான்) த்ருண-த்ருண! நமச்சிவாய! அன்பே, விசித்திரமான கபாலிக வேடம் பூண்டு, மனதார மதுவை அருந்தி, கருவிழி மங்கையர் முகத்தைக் கண்டு

கொண்டிருந்தால் அதுவே மோட்சத்திற்குச் செல்லும் நல்வழியாகும் என்று திருவாய் மலர்ந்தருளிய சூலம் ஏந்திய எம்பெருமான் நீடூழி வாழ்க!"

கள்ளுண்டு களித்துத் திரியும் நிலையிலும் அவர்கள் வைதிகர்களின் வேள்விச் சடங்குகளைக் கேலி செய்வது எண்ணத்தக்கதாய் உள்ளது. கள்ளுக்கடையை வைதிகர்களின் யாக சாலையோடு ஒப்பிடும் அவ்வுரையாடல் வருமாறு.

**தேவ:**

ஐயா! காஞ்சி மாநகரம் வாருணி தேவியைப் (வாருணி வருணன் என்னும் கடல் தெய்வத்தின் மகள்) போல இனிமையாகக் காணப்படுகிறது.

**கபாலி:**

ஆமாம்! ஆமாம்! அதோ அந்த கள்ளுக் கடையைப்பார்! அது யாகசாலையைப் போன்று எவ்வளவு அழகாகக் காணப்படுகிறது! கடையின் பெயரைத் தாங்கி நிற்கும் கம்பம், யாகசாலையில் உள்ள யூபஸ்தம்பம் போல் காணப்படுகிறது. மதுபானம், சோமபானம் போலக் காணப்படுகிறது. கள்குடிப்போர், யாகசாலையில் உள்ள பிராமணர் போலக் காணப்படுகிறார்கள். கலையங்கள் சோமபானத்தை வைக்கும் பாத்திரங்கள் போல் இருக்கின்றன. அங்கு விற்கப்படும் மச்ச, மாமிசங்கள் யாகத்தில் இடப்படும் ஆகுதிகள் போலக் காணப்படுகின்றன. குடிகாரர்களின் வெறிப் பேச்சு, யசுர் வேதத்தின் யஜுஸைப் போல் இருக்கிறது. அவர்கள் பாடும் பாட்டுகள் சாமகானத்தை ஒத்திருக்கின்றன. கள்ளை முகந்தெடுக்கும் அகப்பை, யாகத் தீயில் நெய் சொரியும் கரண்டி (தர்வி) போல் இருக்கிறது. குடிவேட்கையே யாகாக்கினி போலும். கள்ளுக்கடைக்காரன் யாகத்தை நடத்தும் யசமானன் போலக் காணப்படுகிறான்.

**தேவ:**

ஆமாம்! அங்குச் சென்று நாம் இலவசமாகப் பெறுகிற மதுபானம், யாகத்தில் உருத்திரனுக்கு அளிக்கும் ஆகுதியை ஒத்திருக்கிறது.

இவ்வுரையாடல் இரண்டு வகையில் நம் கவனத்தை ஈர்க்கிறது. ஒன்று; வேள்விச் சடங்குகளைக் கேலிக்குள்ளாக்குவது. இரண்டு; உருத்திரன்தான் சிவனாக உருமாறியவன் எனும் கருத்தை மறுத்து உருத்திரன் சிவனின் வேறான, வைதிகச் சடங்குமுறைகளுக்கு உரியவன் என உறுதி செய்வது.

பக்தி இயக்கம் உயிர்ப்புடன் செயல்படத் தொடங்கிய கி.பி. 6ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியில், தமிழகத்தில் நிலவிய சமய நிலைகளை அறிந்துகொள்ள உதவும் மிகச் சிறந்த அங்கத நாடமாக மகேந்திரவர்மனின் மத்தவிலாசம் அமைந்துள்ளது. இம்மன்னன் இந்நூலை ஒரு சைனனாக! இருந்து எழுதியுள்ளான். எனினும் கபாலிகர்கள், வைதிகத்தை அதன் வேள்விப்பண்பாட்டைக் குறித்து என்ன மதிப்பீடு வைத்திருந்தனர் என்பதையும் மிக நல்ல வண்ணம் பதிவு செய்துள்ளது கருதத்தக்கதாகும்.

**கபாலிகம்**

சிவனை முழுமுதற் கடவுளாகக் கொண்ட கபாலிகர்கள், தந்திரச் சடங்கு முறைகளைப் பின்பற்றியவர்கள்; வைதிக எதிர்ப்பாளர்கள் என்று கண்டோம். அவ்வாறு அவர்கள் ஏன் வைதிக எதிர்ப்பாளர்களாக மாறினார்கள்? இக்கேள்விக்கும் நாம் விடைகண்டாக வேண்டும்.

கபாலம் எனும் சொல்லிற்கு மண்டை ஓடு என்பது பொருள். பிரமனின் தலையைக் கொய்த சிவன், அத்தலையைத் தன் கையிலேயே ஏந்திச் சென்றதால். சிவன், 'கபாலி' எனப்பட்டான். பிரம்மனின் தலையைக் கொய்த அந்த நிகழ்வை தேவாரப் பாடல்களில் பரக்கக் காணலாம். சான்றாக

"சிரம் ஏற்ற நான்முகன்தன் தலையும்"... (6ஆம் திரு திருமழபாடி 5)
"பண்டு இங்கு அறுத்தது ஓர்கை"
"திரு உடையான் படைத்தான் தலையை" (4ஆம் திருக்கண்டியூர் பா 31)
"பல்இல் வெண்தலை கையேந்திப்
பல்இலம் திரியும் செல்வர்"
(4, திருச்சோற்றுத்துறை 32)என வரும் அப்பர் பாடல்களைக் காணலாம்.

பிரமன் தலையைக் கொய்தவனும், "செத்தவர்தம்" தலைமாலைக் கையிலேந்திச் சிரமாலைச் சூடியவனுமாகப், போற்றப்பெறும் சிவனைக் கபாலியாகவே குறிப்பார் திருநாவுக்கரசர். இதனை. காரணத்தார் கருத்தர் கபாலியார் (5அன்பில் 2)

எனும் பாடலடி தெளிவுபடுத்தும். சிறுத்தொண்டரின் இல்லத்திற்கு வந்து பிள்ளைக்கறி உண்ட சிவன், கபாலிகத் துறவியின் வடிவிலே வந்தான்.

"அயன்கபா லந்தரித்த இடக்கையால் அணைத்த
வயங்கொளி மூவிலைச் சூல மணித்திருத்தோள்
மிசைப் பொலிய
வந்த அடியவர், தான் யாரென்பதை,
அடியேன் உய்ந்தேன் எங்குற்றார் உரையாய்?
என்ன அவர்மொழிவார்
வடிசேர் சூல கபாலத்தார் வடதே சத்தோம்
என்றார் (36:43:12)
எனும் பெரியபுராணப் பாடலடிகள்
உணர்த்தக் காணலாம்.
சைன சமயத்திலிருந்து சைவரானவர்
திருநாவுக்கரசர். அப்படி அவர் தழுவிய சைவ
சமயம் கபாலிகப் பிரிவு என்பதாகும். சேக்கிழார்,
மாபாவிக் கடையமணர் வாகீசத் திருவடியாம்
காபாலி அடியவர்பால் கடக்களிற்றை
விடுகென்ன"

என அப்பரைக் 'காபாலி அடியவர்' என்று குறிப்பதால் அவ்வுண்மையை அறியலாம். கபாலிகப் பிரிவு குறித்து ஆராய்ந்த இந்திய மெய்யியல் வரலாற்று அறிஞர் தாசுகுப்தா,

"ஆதி சங்கரரின் சம காலத்தவரும், அவரின் வாழ்க்கை வரலாற்றை எழுதியவருமாகிய ஆனந்தகிரி, சைவ சமயத்தின் உட்பிரிவுகள் பற்றி விரிவாகக் கூறியுள்ளார். ஒவ்வொரு உட்பிரிவினரும் தங்களுக்கென்று தனித்த அடையாளங்களைக் கொண்டிருந்ததுடன் உடம்பிலும் சில குறிகளைப் பொறித்துக் கொண்டிருந்தனர் என்றும் குறிப்பிட்டுள்ளார். அத்துடன் கபாலிகத்தில் இருந்த இரண்டு பிரிவுகள் பற்றியும் குறிப்பிட்டுள்ளார். அவற்றில் ஒன்று சூத்திரர்கட்கு உரியது, மற்றது பார்ப்பனர்கட்கு உரியது என்றும் தெளிவுபடுத்துவார்."

எனமேற்கோள் காட்டி விளக்குவார். அத்துடன்,

"கபாலிகர்கள் பார்ப்பனராகவோ அல்லது பார்ப்பனர் அல்லாதாராகவோ இருந்தாலும் அவர்களிடையே சாதி வேற்றுமை காணப்படவில்லை. கடுமையான சடங்குமுறைகளைப் பின்பற்றியவர்களாகவும் குடிப்பதிலும் பெண்களுடன் பாலுறவில் நாட்டமுடையவர்களாகவும் தூய்மையற்ற வகையில் நடந்து கொள்வர். அழிக்கும் சக்தியான பைரவரை



வணங்குவதைத் தவிர வேறு மெய்யியல் கோட்பாடுகள் அவர்களுக்கு இருந்ததாகத் தெரியவில்லை. அவர்கள் கருமக்கோட்பாட்டில் நம்பிக்கையற்றவர்கள். பைரவரின் விருப்பத்திற்கு ஏற்ப அவரது பூதகணங்கள் உலகைப் படைத்தும் காத்தும் வருகின்றன. சூத்திரப் பிரிவைச் சேர்ந்த கபாலிகர்களும் சாதி வேற்றுமைகள் அற்றவர்களாவர். மண்டை ஓட்டில் மதுவை அருந்தியும், புலாலை உண்டும் தங்கள் சமயச் சடங்குகளை நிறைவேற்றுவர். ஆர்ஜி பண்டார்க்கர், சிவமகாபுராணத்தை மேற்கோள் காட்டி, காளாமுகர்களும் மாவிரதிகளும் ஒருவரே என்றார். ஆனால் அதற்கான சான்றுகளை அவர் தரவில்லை. என் கருத்துப்படி (S.N.Dasgupta) அதற்கான சான்றுகள் சிவமகாபுராணத்தில் காணப்படவே இல்லை. சிறந்த விரதியர் எனப் பொருள்தரும் மாவிரதியர், மண்டை ஓடுகளில் உணவை உண்பர், தம் உடல் முழுவதும் (சுடுகாட்டுச் சாம்பலைப் பூசிக்கொள்வர். இந்த

அடையாளங்கள் யாவும் காளாமுகர்களுக்கும் உரியவை என்பார் இராமானுசர்..... இச்சமயப் பிரிவினர் ஒவ்வொருவரும் மற்ற பிரிவினிடமிருந்து தம்மை வேறுபடுத்திக் காட்டும் வகையில் தங்கள் மேனியில் குறிகளைப் பொறித்துக் கொள்வதுடன் தங்களுக்கெனச் சில சடங்குமுறைகளையும் வகுத்துக் கொண்டனர். மது, மாமிசம், பெண் இவற்றில் நாட்டமுடையவர்கள். சிலர் மனித ஊனையும் கூட உண்ணும் பழக்க முடையராவர்."

என விரித்துரைப்பார். கபாலிகர்களின் சடங்குமுறைகள் தந்திர வழிபாட்டினரின் சடங்குமுறைகளை ஒத்தவை என்பதையும் அறிஞர் தாசுகுப்தா எடுத்துக்காட்டுவார், தந்திர வழிபாடும் அதனைப் பின்பற்றிய கபாலிகர்களும் வேதமரபுக்கு எதிரானவர்கள் என்பதால் கபாலிகர்களிடமிருந்து பிரிந்த காளாமுகர்களையும் வேத எதிர்ப்பாளர்களாகவே கருதினார் ஆதிசங்கரர். ஆனால் அக்கூற்றில் முழு உண்மையில்லை கபாலிகர்களிடம் சாதிவேற்றுமை இல்லை என்பதன் அடையாளமாக அப்பூதியடிகள் திருநாவுக்கரசர் உறவு அமைந்துள்ளதைக் காட்டலாம்.

தந்திர வழிபாடும் அதனைப் பின்பற்றிய கபாலிகர்களும் வேதமரபுக்கு எதிரானவர்கள் என்பதால் கபாலிகர்களிடமிருந்து பிரிந்த காளாமுகர்களையும் வேத எதிர்ப்பாளர்களாகவே கருதினார் ஆதிசங்கரர். ஆனால் அக்கூற்றில் முழு உண்மையில்லை. கபாலிகர்களிடம் சாதிவேற்றுமை இல்லை என்பதன் அடையாளமாக அப்பூதியடிகள் திருநாவுக்கரசர் உறவு அமைந்துள்ளதைக் காட்டலாம்.

### சக்திபரிசத் – சிம்மபரிசத்

கபாலிகத்தில் இணைந்த வேத வழிப்பட்ட பார்ப்பனர்களால் கபாலிகத்தில் பிளவு ஏற்பட்டது. லகுலீச பண்டிதர் என்னும் குசராத்தி பார்ப்பனர் அதன் மூலவராக இருந்துள்ளார். அவர் சிவனின் வடிவமாகக் கருதப்படுகிறார். கையில் தடியுடனும் இறுக்கமான முகத்துடனும் இவர் சிலைகள் உள்ளன என்பார் தாசுகுப்தா. இவர் குசராத் மாநிலத்தில் பரோடா மாவட்டம், கார்வான் எனும் ஊரில் பிறந்தவர். கார்வான் ஊரில் பிறந்த காரணத்தாலும், இப்பிரிவிற்கு உரிய மடங்கள் மடங்களுக்குரிய கோவில்கள்யாவும் காரோணம் எனப்பட்டன. சைவ நிறுவனங்கள் பற்றி ஆராய்ந்த அறிஞர் ஆர்.என். நந்தி,

"காலப்போக்கில் சைவ சமய உட்பிரிவுகளிடையே இணக்கம் ஏற்பட்டது. காளாமுகர்கள் தமிழகத்தின் பல பகுதிகளிலும் நன்கு பரவினர். கிபி. 9ஆம் நூற்றாண்டில் அவர்கள் நன்கு வேர்விட்டபோது நாயன்மார்களின் அமைப்பு (கபாலிகராகலாம்) ஒரு முடிவிற்கு வந்துவிட்டது. நாயன்மார்கள் தங்களின் இன்றியமையா கோவில்கள் சிலவற்றிற்குக் "காரோணம்" எனப் பெயரிட்டிருந்தனர். காரோணம் என்பது லகுலீசர் பிறந்த ஊரான கார்வான் அல்லது காயாவரோகனம் என்பதன் தமிழ்வடிவமாகும். இவ் லகுலீசரே காளாமுகத்தின் நிறுவனருமாவார்."

என ஆய்ந்துரைப்பார். தேவாரப்பாடல் பெற்ற சில திருத்தலங்கள் காரோணம் என அழைக்கப்பட்டன. நாகைக் காரோணம், குடந்தைக் காரோணம் என்பவை அவற்றுள் சில. இவையாவும் காளாமுகர்களுக்கு உரிய மடங்களாகவும் தலைமை இடங்களாகவும் செயல்பட்டவையாகும். அறிஞர் ஆர்.என். நந்தி, காளாமுகத்தின் தலைவர் லகுலீச பண்டிதர் எனக் கூறுவது ஆய்வுக்கு உரியதாகும். கபாலிகம் காளாமுகம் பற்றி விரிவாக ஆராய்ந்தவர் ஆய்வாளர் டேவிட் என். லோரென்சென் ஆவார். அவர் காளாமுகப் பிரிவு இரு பெரும் கிளைகளாகக் கிளைத்திருந்தது என்றும், ஒரு பிரிவு 'சக்திபரிசத்' என்றும், மற்றொரு பிரிவு 'சிம்மபரிசத்' என்றும் அழைக்கப்பட்டதாகவும் ஆய்ந்துரைப்பார். இவ் இரண்டுமே காளாமுகத்திற்கு உரியன என்றாலும் அவற்றுள் சிம்மபரிசத் 'பாசுபதம்' என அழைக்கப்பட்டதையும் அவர் ஆய்ந்துரைக்கின்றார்.

சிம்ம பரிசத் அமைப்பைச் சார்ந்த உறுப்பினர்கள் அனைவருமே பாசுபதர்களே. அவர்கள் தங்களை லகுலீசரின் வழிவந்தவர்களாகக் கூறிக் கொள்கின்றனர். அவர்கள் சிவனையே வழிபடுவர்; வேதங்களிலும் ஆகமகங்களிலும் சிறந்த தேர்ச்சி பெற்றவர்களாகவும் திகழ்ந்தனர். அப்பிரிவின் புகழ்மிக்க ஆசிரியர்கள் தங்கள் புலமையின் காரணமாக அரசின் விருதுகளையும் சிறப்புகளையும் பெற்றனர். கடும் நோன்பை

மேற்கொண்டிருந்த அவர்கள் பார்ப்பனர்களுள் வானப்பிரஸ்தத்தில் ஈடுபட்டோரைப் போல வெறும் காய்கறி உணவையே உட்கொண்டனர் என்பது அவர்தம் கூற்றாகும்.

காளாமுகர்களின் தலைவர் லகுலீசர் என ஆர்.என் நந்தி ஆய்ந்துரைப்பதாலும், காளாமுகத்தின் ஒரு பிரிவான "சிம்மபரிசத்" பாசுபதம் என அழைக்கப்பட்டதாக டேவிட் என். லோரென்செென் மேற்கோள்காட்டி நிறுவுவதாலும், லகுலீசரால் உருவாக்கப்பட்ட பாசுபதமே காளாமுகம் எனும் தனிப்பிரிவாகக் கிளைத்திருக்க வேண்டும் என்பது உறுதி. காளாமுகத்தின் இலக்கணங்களாகச் சொல்லப்படும் பல்வேறு கூறுகள், திருஞானசம்பந்தருக்கு உரியனவாகச் சேக்கிழார் தம் பெரியபுராணத்தில் பதிவுசெய்துள்ளதால் திருஞானசம்பந்தர் காளாமுகப் பிரிவைச் சேர்ந்தவர் என்பதும் உறுதி. திருநாவுக்கரசரும், திருஞானசம்பந்தரும் சைவசமயத்தின் வேறுவேறு பிரிவைச் சேர்ந்தவர்கள் என்பதைச் சேக்கிழார் "இருதிறத்துப் பெருந்தவரும்" எனக் குறிப்பதும் அக்கருத்திற்கு அரணாகும்.

**கபாலிகர் வைதிகர் மோதல்**

கபாலிகர் ஆகம முறைகளைப் பின்பற்றியவர்கள். இவ் ஆகம முறைகள் வேதங்களுக்கும் வேத வேள்விமுறைகளுக்கும் எதிரானவை. இந்த இரண்டிற்கும் இடையே நிலவிய முரண்பாடுகளையும் அவற்றிற்கான காரணங்களையும் விரிவாக ஆராய்ந்த பேராசிரியர் பி.டி. சீனிவாச ஐயங்கார் தொகுத்தளிக்கும் சான்றுகள் வருமாறு:

1. இன்றைய இந்து சமயம் ஏறத்தாழ முற்றிலும் ஆகமங்களை அடிப்படையாகக் கொண்டது. வேதங்களைக் கொஞ்சம் கூட அடிப்படையாகக் கொண்டது அல்ல.... மதத்தில் ஊறியது இந்தியா. அந்த மதம் ஆகம மதமேயொழிய வேதமதம் அன்று.

2. ஆகமம் என்ற சொல்லின் பொருள் "தொன்று தொட்டு வந்தது" என்பதாகும். ஆகமம் என்பதற்கு "முன்னோர் மொழி ஆப்த வசனம்" என்றும் பொருள் உள்ளது.

3. வேதச் சடங்குகளும் ஆகமச் சடங்குகளும் ஒன்றுக்கொன்று போட்டியாக இருந்த பழங்காலத்தில் இரண்டும் வேறுபட்டவை என்பது அனைவருக்கும் நன்கு தெரிந்திருந்தது. வைதிகர்களின் கூற்றுப்படி, 'வேதங்கள் தாமாக உருவானவை; அவை யாராலும் (எந்த மனிதராலும்) இயற்றப்பட்டவை அல்ல. அதனால் அவை அபௌருஷேயம் என அழைக்கப்பட்டன. புருடன் ஆன ஈசுவரன் கூட வேதங்களை உருவாக்கியவன் அல்லன். ஆனால் ஆகமங்கள் சிவன், விஷ்ணு முதலான இவர்களால் அருளப்பெற்றவை. வேத மந்திரங்களை வேதச் சடங்குகளில் ஓத வேண்டும். ஆனால் சிவன் விஷ்ணு இவர்களின் வழிபாட்டு முறைகள், சடங்குகள், யோகக் கட்டுப்பாடுகள், மெய்யியல் கோட்பாடுகள் அனைத்தும் ஆகம நெறிகளுக்குக் கட்டுப்பட்டவை. வேதங்களின் கர்மகாண்டம், ஞானகாண்டம் ஆகியவற்றுக்கு மீமாம்சம் தேவை. ஆனால் சடங்குகளின் தொகுப்பான ஆகமங்களுக்கு உரை விளக்கம் மட்டுமே போதும்.

4. வேதச் சடங்குகள் நெருப்போடு தொடர்புடைய அக்கினிச் சடங்குகள். ஒவ்வொரு செயலுக்கும் தீயுண்டாக்கி வளர்த்து அதில் பொருள்களை அர்ப்பணிக்க வேண்டும். தீயில் போடும் பொருள்கள் இறைவனைச் சென்றடைகின்றன என்பது நம்பிக்கை.

ஆனால் ஆகம முறைகளில் 'தீ'க்கு வேலையில்லை. வழிபடும் தெய்வத்தின் முன்னர் வழிபாட்டுப் பொருள்களைக் காட்டிவிட்டு எடுத்துக் கொள்ளலாம்.

வேதச் சடங்கில் கடவுளின் உருவத்திற்கு இடம் இல்லை. எல்லாக் கடவுளுக்கும் நெருப்புதான் இடைத்தரகர்.

ஆனால் ஆகம வழிபாட்டில் உருவ வணக்கம் (அது, குறியீடாகவோ, படிமமாகவோ எப்படியும் இருக்கலாம்) கட்டாயமானது.

5. வேதத்தின் இறுதிப் பயன் வேதாந்தம். வைதிகக் கருமத்தின் பயன் ஞானம் பெறுதல். ஞானத்தின் மூலமாகவே முக்தி வீடுபேறு பெற முடியும். அந்த ஞானம் என்பதும் வேதக் கல்வியின் வழியாகப் பெறப்படும் ஞானமாகும்.

ஆனால் ஆகம வழிபாட்டின் பயன் பக்தி. இடைவிடாது அவனை (இறைவனை) நினைத்து வந்தால் சாகாநிலை விடுபேற்றை அடையலாம்.

6. வேத நெறிப்படி வருணங்கள் நான்கு. நான்காவதான சூத்திர வருணத்தவர் வேதம், வேதாந்தம் பயிலக் கூடாது. இதனால் வருணமுறை உருவானது. சன்னியாசம் பார்ப்பனர்கட்கு மட்டுமே உரியது. சன்னியாசத்தின் பின்னரே முத்தி கிட்டும். ஆகப் பார்ப்பனர்கட்கு மட்டுமே வீடு பேறு பெறும் உரிமை உண்டு.

   ஆகமக் கொள்கை இதற்கு மாறானது. சண்டாளன் உட்பட்ட யாரும் வழிபடலாம். வழிபாட்டின் வழியாகவே முத்திபெற முடியும். கண்ணப்பன் முதலானோர் இதற்குச் சான்றாவர். பாதராயரின் வேதாந்த சூத்திரம் 1:111 3538 'சூத்திரனுக்குச் சம்ஸகாரங்கள் உரியவையல்ல; எனவே வேதம் படிக்கவும் கூடாது கேட்கவும் கூடாது' என்கிறது. ஆகமங்களோ அனைவருக்கும் உரியவை. ஆகம விதிப்படி முத்திபெற சன்னியாசியாக வேண்டியதில்லை. பக்தி அனைவருக்கும் பொது.

7. ஆகமவாதிகள் தெய்வத்தின் பெயரால் யாகங்களில் ரத்தம் சிந்துவதை எதிர்த்தனர். அதனால் வைதிகர்கள் ஆகமவாதிகளை மிக இழிவாக மதித்தனர்.

8. பிரம்மனை வழிபட ஆகமங்கள் வழிகாட்டவில்லை. படைப்புத் தொழிலுடன் அவன் பணி முடிந்துவிடுகிறது. ஆகவே ஆகமங்கள் சிவனையும் திருமாலையும் வணங்கி வழிபடவே உருவாக்கப்பட்டன.

என வகைப்படுத்தியுள்ளதைக் காணலாம். இவ்வாறு ஆகம அடிப்படையில் உருவான காரணத்தால்தான் தொடக்ககாலச் சிவனியம் வைதிக எதிர்ப்பில் முன்னின்றது. கபாலிகப் பிரிவைச் சார்ந்த திருநாவுக்கரசரின் பாடல்களில் கனன்றெரியும் வைதிக எதிர்ப்புக்கான காரணத்தை நாம் இப்போது உணரமுடிகிறது. திருநாவுக்கரசரைப் போன்றே திருமூலரும் வைதிக எதிர்ப்பாளர் என்பதையும் நாம் இந்தப் பின்புலத்திலேயே



காணவேண்டும். "தென்னிந்திய சைவசமயத்தின் தோற்றமும் வரலாறும்" (Origin and Early History of SAIVISM in South India) எனும் நூலின் ஆசிரியர் சி.வி. நாராயண ஐயர், திருமந்திரப் பாடல் ஒன்றுக்குத் தரும் விளக்கம் இங்கே எண்ணத்தக்கதாகும்.

*"தெளிவுறு ஞானத்துச் சிந்தையின் உள்ளே*
*அளிவுறு வாரம ராபதி நாடி*
*எளியனென் றீசனை நீசர் இகழில்*
*கிளியொன்று பூசையாற் கீழது வாகுமே"*

எனும் பாடலை எடுத்துக்காட்டி அதனை ஆய்வுக்கு உட்படுத்துவார் அவர்.

"சிவனைத் தூய்மையற்றவன், வணங்கத் தக்கவன் அல்லன்" என இகழ்ந்தவர்களை எச்சரிக்கின்ற பாடல் அதுவாகும்.

"இழிந்தவர்கள் எம் ஈசனை இகழ்வதுடன், அவன் அதாவது சிவன் தேவலோகத்திலிருந்து சாதிநீக்கம் செய்யப்பட்டவன் என்றும் தூற்றித் திரிகின்றனர். அப்படித் தூற்றித் திரிவோர் பூனையிடம் சிக்கிய கிளியைப் போல் சிதைக்கப்படுவார்கள் என்பது அப்பாடலின் பொருள்". இப்பாடல்குறித்து ஆராயும் நாராயணசாமி ஐயர்,

இங்கே திருமூலர் குறிப்பிடுவது சைவ சமயத்திற்கு எதிரான சைனம், பௌத்தம் முதலான சமயத்தவர்களை அல்ல. மாறாக வேதநெறிகளை ஏற்றுப் பின்பற்றி வருபவர்களையேயாகும். அவர்கள்தாம் சிவனை இழிவானவன் தூய்மையற்றவன் என்றனர். இந்தப் பார்ப்பனர்கள் சுமிருதிகளை நம்பிய சுமார்த்தர்கள் ஆவர். அவர்கள் ஏற்றுக் கொண்ட சுமிருதிகளே சிவனை வணங்கத் தடையாக இருக்கின்றன. இத்தகைய நடைமுறைகளைச் சில சுமிருதிகளில் காணமுடிகிறது.

உசான சம்கிதை (இயல் 4 பாடல்கள் 2326) யார் யாருடன் உணவுண்ணக் கூடாது என்று தடைவிதிக்கின்றது. அப்பட்டியலில் பாசுபதர்களும் இடம் பெற்றுள்ளனர். அப்பகுதியை மொழி பெயர்த்துள்ள எம்.என். தத் (M.N.DUTT) 'சிரார்த்த சடங்குகளில் இடம் பெறக் கூடாதவர்கள், சுமிருதிகளைப் பணத்துக்காக விற்பவர், விதவைகளைத் திருமணம் செய்வோர், உரிமையாளரின் அனுமதியில்லாமல் பூட்டிய வீட்டில் நுழைவோர், தாழ்ந்த சாதியினரைப் பூசாரிகளாக நியமிப்போர், அறிமுகம் இல்லாதவர்களுக்குக் கல்வி புகட்டுவோர், பணம் பெற்றுக்கொண்டு அறிவுரை கூறுவோர், பணம் கொடுத்து வேதங்களைக் கற்போர், ஆகிய விராதர்கள், சிரமணர்கள் (ஆசீவக, பௌத்த, சைனத் துறவியர்) நிருவாணத் துறவிகள், பஞ் சராத்திர ஆகமங்களை அறிந்தோர், சைனர், கபாலிகர், பாசுபதர்... முதலானோர் ஆவர்.

இவர்கள் சிரார்த்திற்கு அனுமதி அற்றவர்கள் என்பதுடன் விருந்துகளில் சமமாக உட்காரவும் தகுதி அற்றோர் ஆவர்.

என விளக்குவார். இதனால் வைதிக நெறியினர் பாசுபதரையும், கபாலிகர்களைப் போல இழிவு செய்துள்ளமை புலனாகும். வைதிக நெறிகளை ஏற்றுக் கொண்ட போதிலும் பாசுபதர்களைத் தீண்டத்தகாதோராகச் சுமிருதிகள் கண்டித்து ஒதுக்கியதையும் இங்கே எண்ணத்தகும். இதனால் திருமூலர், "கிளியைச் சிதைக்கும் பூனையைப் போலச் சிவனை இகழ்வோரைச் சிதைப்போம்" எனச் சூளுரைப்பதற்கான காரணத்தை நாராயணசாமி ஐயர் தெளிவுபடுத்தக் காணலாம்.

அதன் காரணமாகத்தான் திருமந்திரத்தில் பல பாடல்கள் பார்ப்பனர்களை எதிர்த்தும் கண்டித்தும் அமைந்துள்ளன.

### கண்டிப்பது யாரை? எதனால்?

திருமூலர், திருநாவுக்கரசர் ஆகியோரின் பாடல்களில் வைதிக எதிர்ப்பு மிகுதியாக இருப்பதற்கான காரணங்கள் ஆராயத் தக்கவையாகும். திருநாவுக்கரசர் தம் 'பாவநாசத் திருக்குறுந்தொகை' முழுவதையும் பரசமய எதிர்ப்பாகக் குறிப்பாக வைதிக எதிர்பாகவே பாடியுள்ளார். 'பாவமும் பழியும் அற்றவர்களாய் வாழ வேண்டுமாயின் சிவனின் திருப்பாதங்களைப் பணியுங்கள்' எனப் பார்ப்பனர்களை முன்னிலைப்படுத்திக் கூறும் பாடல்களில் சில.

"கங்கை ஆடில்என் காவிரி ஆடில்என்
கொங்குதண் குமரித் துறை ஆடில்என்
ஓங்கு மாகடல் ஓதம்நீ ராடில்என்
எங்கும் ஈசன் எனாதவர்க்கு இல்லையே"
என இப்பாடல், பார்ப்பனர்களின் புனித நீராடலைப் பழிக்கின்றது.
"பட்டர் ஆகில்என் சாத்திரம் கேட்கில்என்
இட்டும் தொட்டும் ஈதொழில் பூணில்என்"
எனும் இப்பாடல் அவர்களின் வேதப் புலமையின் பயனற்ற தன்மைகளைச் சாடுகிறது.
அடுத்த பாடல், அந்த வைதிகர் யாவர் என்பதை அடையாளம் காட்டுகிறது.
வேதம் ஓதில்என் வேள்விகள் செய்யில்என்
நீதி நூல்பல நித்தம் பயிற்றில்என்
ஓதி அங்கம்ஓர் ஆறும் உணரில்என்
ஈசனை உள்குவார்க்கு அன்றி இல்லையே"

இப்பாடல் வேத விதிப்படி வேள்விகளை இயற்றுபவர்களையும், வேதங்களின் ஆறு அங்கங்களையும் நன்கு அறிந்தவர்களையும் நோக்கி அறிவுரை கூறுகிறது. அடுத்த பாடலும் அதே வழியில்,

"காலை சென்று கலந்துநீர் மூழ்கில்என்
வேலை தோறும் விதிவழி நிற்கிலென்
ஆலை வேள்வி அடைந்து அது வேட்கில்என்]
ஏல ஈசன் என்பார்க்கு அன்றி இல்லையே"

எனும் இப்பாடல் வைதிகர்களின் அன்றாடச் சடங்கு முறைகளையும், வேத விதிகளையும் பயனற்றவை எனக் காட்டுகிறது.

கபாலிகரான திருநாவுக்கரசர், ஆகம முறைகளைப் பின்பற்றியவர். அதன் காரணமாகவே ஆகம நெறிமுறைகளுக்கு முற்றிலும் எதிரான வைதிக நெறியினரை எதிர்த்தும் மறுத்தும் பேச வேண்டிய வரலாற்றுக் கட்டாயம் பக்தி இயக்க முன்னோடிகளில் ஒருவராகிய திருநாவுக்கரசருக்கு ஏற்பட்டது என்பதே உண்மை.

இவற்றைப் போன்றே வைதிகர்களின் சூரிய வணக்கம், முத்தீ வணக்கம் ஆகியவற்றையும் கண்டிக்கும் வகையில் 'ஆதிபுராணத் திருக்குறுந்தொகையை' அமைக்கின்றார்.

"எரிபெ ருக்குவர் அவ்எரி ஈசனது உருவ
ருக்கம்அது ஆவது உணர்கிலார்"

என முத்தீ வளர்த்தலைப் பயனற்றது என்றும், அம்முத்தீ கூட ஈசனின் உருவேயன்றி வேறில்லை என்றும் வற்புறுத்துகிறது அப்பாடல். அதைப் போன்றே.

"அருக்கன் பாதம் வணங்குவர் அந்தியில்
அருக்கன் ஆவான் அரன்உரு அல்லனோ"

எனப் பார்ப்பனர்களின் கதிரவன் வழிபாட்டையும் கண்டிக்கின்றார்.

4ஆம் திருமுறையில் இடம் பெற்றுள்ள திருச்சோற்றுத்துறைப் பதிகத்தில், வைதிகர்கள் ஓதும் காயத்திரி மந்திரத்தைக் கண்டிக்கும் வகையில்,

"அம்கதி ரோன்அவனை அண்ணலாக்
கருதவேண்டா
வெங்கதி ரோன்வழியே போவதற்கு அமைந்து
கொண்மின்
அம்கதி ரோன்அவனை உடன்வைத்த
ஆதிமூர்த்தி
செங்கதிரோன் வணங்கும் திருச்சோற்றுத்
துணையனாரே"

என அமைந்த இப்பாடலில், 'சூரியனை வணங்கி நீங்கள் பெறப்போவது யாது? சூரியனே நாள்தோறும் வந்து எம் ஈசனை வணங்கும்போது நீங்களும் அந்த வழியைப் பின்பற்ற வேண்டாமா? என வினவுகின்றார். அதைப் போன்றே அடுத்த பாடலில், 'வேதங்களை ஓதியே காலங்கழிக்கும் வைதிகர்களே நீங்கள் உய்திஅடைய சிவனின் திருப்பாதங்களை வந்தடையுங்கள்', என அறிவுரை கூறுகின்றார். "ஓதியே கழிக்கின்றீர்கள் உலகத்திரே" என வைதிகர்களை முன்னிலைப் படுத்திக் கூறும் திருநாவுக்கரசர், மோட்சம் வீடுபேறு கருதி அவர்கள் செய்யும் வேள்வி முறைகளைக் கைவிட்டுச் சிவனையே சிவன் பெயரையே வேளைதோறும் ஓயாமல் ஓதிவாருங்கள்" எனக் கட்டளையிடும் பான்மையில், "மற்றுநீர் மனம்வையாதே மறுமையைக் கழிக்க வேண்டில்

பெற்றது ஓர் உபாயம் தன்னால் பிரானையே பிதற்றுமின்கள்" எனப்பாடுகின்றார்.

மேற்காட்டிய சான்றுகளின்படி,
"எரி ஓம்பி,
கதிரவனை வழிபட்டு,
வேதங்கள் ஓதி சாத்திரங்கள் கற்று,
வேள்விகள் செய்து,

மறுமைப்பயன் நோக்கி நிற்கும்'' வைதிகர்களை முன்னிருத்தித் திருநாவுக்கரசர் கண்டிக்கும் வகையிலும், அறிவுரை கூறும் பாங்கிலும், கட்டளை இட்டும் கூறக் காரணம் யாது? அப்படி அவரால் தூற்றப்பெறும் வைதிகர் யார்? இக்கேள்விகட்கு நாம் விடை கண்டாகவேண்டும்.

கபாலிகரான திருநாவுக்கரசர், ஆகம முறைகளைப் பின்பற்றியவர். அதன் காரணமாகவே ஆகம நெறிமுறைகளுக்கு முற்றிலும் எதிரான வைதிக நெறியினரை எதிர்த்தும் மறுத்தும் பேச வேண்டிய வரலாற்றுக் கட்டாயம் பக்தி இயக்க முன்னோடிகளில் ஒருவராகிய திருநாவுக்கரசருக்கு ஏற்பட்டது என்பதே உண்மை. இதற்கான காரணத்தை ஆராயும் பேராசிரியர் அ.ச. ஞானசம்பந்தன்,

பல்லவர் வடமொழியை எந்த அளவுக்கு ஆதரித்தனரோ அதைவிட அதிகமாக வேத விற்பன்னர்களைப் போற்றிச் சிறப்புகள் செய்தனர். வேத விற்பன்னர்கள் என்று கூறியவுடன் தமிழ்நாட்டில் தோன்றிய தமிழ் வேதியர்கள்,

வேதம் வல்லராய் இருப்பின் அவர்கட்கு வரிசை வழங்கினரோ என்று நினைய வேண்டா. பல்லவர்களே வடக்கே இருந்து வந்தவர்களாதலின், இவர்களின் பின்னர், இவர்களைத் தொடர்ந்து வந்த வடநாட்டு வேத விற்பன்னர்களே இவர்கள் அன்புக்கும் வரிசைக்கும் உரியராயினர் என்று தெரிகிறது.

இரண்டாம் நந்திவர்மன் வழங்கிய காசாக்குடிச் செப்பேடு, ஜேஷ்டபாத சோமயாஜிக்குப் பெருங்கொடை தந்துள்ளதைக் குறிக்கின்றது. சோமயாஜிக்கு அச் செப்பேடு தரும் புகழ்மாலை அதனைப் படிப்பவரை வியப்பில் ஆழ்த்தும். சுருதி, சுமிருதி இவற்றில் வல்லவன்; புராண இதிகாசங்களில் வல்லவன்; எல்லாம் வல்லவன்; எல்லாக் கிரியயைகளையும் செய்ய வல்லவன்; வாஜபேயம் முதலிய யாகங்களைச் செய்தவன் என்று கூறுகிறது என விரிவாகக் கூறுகின்றார்.

காசாக்குடிச் செப்பேட்டில் புகழப்பெறும் சோமயாஜி, வைதிகர்களுள் மீமாம்சக் கொள்கைகளை ஏற்றவர் என்பது அவருக்குரிய விருதுகளாலேயே தெரிகின்றது. வேத நெறிகளைப் பின்பற்றியோர் "மீமாம்சகர், வேதாந்திகள்" என அழைக்கப்பட்டனர். இவ்இருவருள் மீமாம்சகர் வேதங்கள் வற்புறுத்தும் வேள்விச் சடங்குகளில் நம்பிக்கை உடையோர் ஆவர். இப்பிரிவின் மூலவராகச் சைமினி போற்றப்படுகிறார். இவர்களைப் பற்றி, மாதவச் சிவஞானமுனிவர், தம் சிவஞான மாபாடியத்தில் கூறுவது வருமாறு:

இனி மீமாஞ்சையாவது; வேதத்தில் கரும காண்ட ஆராய்ச்சி செய்தற்கு எழுந்த நூலாகலின், அதுவும் வேதம் எனப்படும். அது பன்னிரண்டு அத்தியாயமாகச் சைமினி முனிவனால் செய்யப்பட்டது.

அந்நூலுள் கூறும் பொருளாவது; வேதம் ஒருவரால் செய்யப் பட்டதன்றி அநாதியே சுயம்புவாயுள்ளது. அங்ஙனம் ஆகலின் வேதம் பிரமாணம் எனப்படும்.

வேதங்களை ஒத்துக்கொண்ட மீமாஞ்சகர் ஆன்மாக்களிலிருந்து வேறுபட்டனவாகிய பரமான்மா என்ற ஒருவன் உளன் என்பதை ஏற்றுக்கொள்வதில்லை. அதாவது வேதங்களை உடன்பட்ட மீமாஞ்சகர்கள் கடவுளை மறுத்தனர். உலகத்திற்குத் தோற்றம் உண்டு என்பதையும் ஏற்றுக் கொள்ளவில்லை. உலகம் என்பது இப்போது இருப்பது போலவே எப்போதும் இருக்கும் என்பது அவர்கள் கொள்கை.

இக்காரணங்களாலேயே மீமாம்சகர்களை நாத்திகர் பட்டியலில் இணைப்பார் பேராசிரியர் தேவிபிரசாத் சட்டோபாத்தியாயா. இம் மீமாம்சகர்கள், வேதம் கடவுளால் படைக்கப்படாமல் தானாகத் தோன்றியவை என்பதில் அழுத்தமான நம்பிக்கைக் கொண்டவர்கள்'. அதனால் வேதம் எந்த மனிதனாலும் செய்யப்பட்டதன்று எனும் பொருளில் 'அபௌருஷேயம்' அதாவது எந்தப் புருடனாலும் செய்யப்பட்டதன்று என்றனர். சைவர்களோ வேதங்களைச் சிவனே இயற்றினான் எனப் போற்றினர். இதனை,

'ஓதினார் வேதம் வாயால் ஒளிநிலா எறிக்கும் சென்னி' (4:கோயில் 5:1)

'அரியன அங்கம் வேதம் அந்தணர்க்கு அருளும்' (4. திருச்சுழிப்பாலை 4:1)

எனவும் வரும் திருநாவுக்கரசர் பதிகங்களால் அறியலாம்.

இவ்வாறு எந்த ஒரு மனிதராலோ அல்லது கடவுளாலோ வேதம் இயற்றப்படவில்லை என மீமாம்சகர் போற்ற, இல்லை வேதத்தை ஈசுவரனாகிய சிவனே இயற்றினான் எனச் சைவர்கள் மறுக்க, நீளும் இந்த விவாதத்திற்குச் சைமினி தரும் விடை மிகவும் ஆழ்ந்த சிந்தனைக்குரியதாகிறது.

"(மீமாம்சகர் கேட்கிறார்) ஆனால் உடலற்றவரான பரமேசுவரன் (கடவுள்) எப்படி வேதத்தை உச்சரித்திருக்க முடியும் என்று. அவருக்கு அண்ணமோ அல்லது வேறு உறுப்புகளோ இல்லாததால் (எழுத்துகளால் ஆன) வேதத்தின் எழுத்துகளை அவர் உச்சரித்திருக்க முடியாது. இந்த ஆட்சேபம் திருப்தியாய் இல்லை (என்று நையாயிகர் கூறுகிறார்). ஏனென்றால் பரமேசுவரனுக்கு உடல் இல்லையென்றாலும், தம்மைப் பக்தியுடன் வணங்குகின்றவர்களிடம் கருணை காட்டுவதற்காக விளையாட்டாக அவர் ஓர் உருவம் எடுத்துக்கொள்ளமுடியும் (அலகிலா

விளையாட் டுடையார் கம்பன்) எனவே வேதம் ஒருவரால் இயற்றப்பட்டதல்ல என்ற வாதம் முடிவானதல்ல".

இந்தச் சிக்கல்களையெல்லாம் நான் இப்போது தெளிவுபடுத்துகிறேன் (என்று மீமாம்சகர் கூறுகிறார்). பௌருஷேயத்துவம் (தனிப்பட்ட ஒருவரிடமிருந்து பெறப்பட்டது) என்று நிரூபிக்க முயலுகிறீர்களே, இதன் பொருள் என்ன? (1) தனிப்பட்ட ஒருவரிடமிருந்து (புருடன்) வெளிப்படுகிறது என்பதை மட்டும் இது குறிப்பிடுகிறதா? நம்மைப் போன்ற சாதாரண மனிதர்கள் தினமும் வேதத்தைச் சொல்லும்போது வேதம் நம்மிடமிருந்து வெளிப்படுவதைப் போன்றதா இது? அல்லது (2) வேறு நிரூபண முறைகள் மூலம் பெற்ற அறிவைக் காண்பிப்பதற்காக ஒழுங்குபடுத்துவதைப் போல (அதாவது நாம் ஒரு நூலை எழுதுவதைப்போல அமைந்ததைக் குறிக்கின்றதா? முதலில் கூறப்பட்ட பொருள்தான் குறிக்கப்படுகிறது என்றால் சர்ச்சைக்கு இடமில்லை. இரண்டாவது பொருளை இது குறிக்கிறது என்றால் வேதம் அதிகாரம் உடையது என்று நிரூபிக்கப்பட்டதற்கு அடிப்படை (அ) அது அனுமானத்தை ஆதாரமாகக் கொண்டது என்பதா? அல்லது (ஆ) இயற்கைக்கு அப்பாற்பட்ட அறிவை அது ஆதாரமாகக் கொண்டது என்பதா? முதலில் கூறப்பட்ட (அ) அதாவது வேதம் அனுமானத்தை அடிப்படையாகக் கொண்டிருப்பதால் அது அதிகாரம் பெற்றுள்ளது என்பது சரியாக இருக்க முடியாது. ஏனென்றால் மாலதிமாதவம் (சமற்கிருத மொழியில் அமைந்த ஒரு நாடகம் ஆர்) அல்லது இதைப் போன்ற ஏதேனும் உலகியல் நூலில் உள்ள வாக்கியத்தை எடுத்துக் கொண்டு பார்த்தால் இந்தக் கொள்கை நொறுங்கிப் போகிறது. எப்படி என்றால் அதில் அனுமானங்கள் இருக்கலாம், ஆனால் அதிகாரம் கிடையாது. இவ்வாறு இல்லாமல் (ஆ) வேதத்தில் கூறப்படுபவை மற்றப் புத்தகங்களுக்கு இல்லாத சிறப்பாக அதிகாரம் பெற்றுள்ளன என்று நீங்கள் கூறினால் இந்த விளக்கம் ஒரு மெய்யியல் அறிஞனை நிறைவுபடுத்தாது. ஏனென்றால், வேதத்தின் சொல், அதற்குக் கூறப்படும் பொருள் வரையறையின்படி, வேறு சான்றுகளால் உறுதிப்படுத்தக் கூடியவற்றைத்தான் உறுதிப்படுத்துகிறது என்று காட்ட முடியுமானால் அது ஒருவன் தன் தாயார் மலடி என்று கூறுவதைப் போன்ற முரண்பாட்டில் சிக்குவதாகும்.

ஒருவன் தன் புலன்களுக்கு எட்டாதவற்றை உணரமுடியும் என்று வைத்துக் கொண்டாலும் கூட இடத்தாலும், காலத்தாலும், இயல்பாலும் தன்னிடமிருந்து தொலைவில் உள்ளவற்றை அறிவதற்கான வழியேதும் இல்லை. மேலும் அவனுடைய கண்களும், மற்றப் புலன்களும் மட்டுமே இந்த அறிவைக் கொடுக்கும் சக்தியைப் பெற்றுள்ளன என்று கூறமுடியாது. ஏனென்றால் மனிதர்கள் தங்கள் புலன்களால் அறியக் கூடியவற்றைக் கொண்டே பொருள்களைக் கருத்தில் உருவகிக்கின்றார்கள். எல்லாம் அறிந்தவரான ஒருவர் வேதத்தைச் செய்தார் என்பதை மறுப்பதற்கு ஆசிரியர் (பிரபாகரர் சைமினியின் நூலுக்கு உரைகண்டவர்) எடுத்துக் கூறியுள்ளவாதம் இது;, "எந்த ஒரு பொருளும் (பார்வைப் புலனால்) அதன் மிகச் சிறந்த செயல்பாட்டில் அறியப்படும்போது, அது மிகத் தொலைவில் உள்ளதை, அல்லது மிக நுண்ணியதான ஒன்றைப் பார்ப்பதாகத்தான் கருதமுடியும். ஏனென்றால் எந்த ஒரு உறுப்பும் தனக்கு உரிய பொருளை விட்டு அதற்கு அப்பால் அறியமுடியாது. சான்றாகச் செவிப்புலன் ஒருபோதும் உருவத்தை உணர முடியாது. எனவே வேதத்தின் அதிகாரம், கடவுள் உடல் எடுத்துப் பெற்ற அறிவை ஆதாரமாகக் கொண்டது அல்ல".

கடவுள், மனித உடல் எடுத்துப் பெற்ற அறிவை அடிப்படையாகக் கொண்டதல்ல வேதம் என்பது உண்மைதான். ஆனால் ஏதோ ஒரு மனிதன் அல்லது பல மனிதர்கள் பெற்ற பட்டறிவின் வெளிப்பாடாகத்தான் வேதம் இயற்றப்பட்டிருக்க முடியும். ஆனால் இதனை மீமாம்சகர்கள் ஏற்பதில்லை. ஆயினும் மீமாம்சகர்கட்கும் சைவர்கட்கும் இடையே நடந்த மோதல், 'வேதம் கடவுளால் படைக்கப்பட்டதா இல்லையா என்பதில் மட்டுமன்று; மாறாக மீமாம்சகர்களின் சமூகக்கோட்பாடுகள் ஏற்றத்தாழ்வை நிலைப்படுத்துவனவாகவும், பார்ப்பனர்களின் உயர்வை அனைத்து நிலைகளிலும் நிலைநாட்ட முயன்றதாலும் ஏற்பட்டது' என்பதே உண்மை. வேத மந்திரங்களைப் பற்றிய உலகாய்தர்களின் மதிப்பிடாகிய, (சர்வதரிசன சங்கிரகம்).

"வேதங்கள் மூன்றையும் (இருக், யசுர், சாம, வேதங்கள்) இயற்றியவர்கள் நம்மை ஏமாற்றும் நயவஞ்சகத் திருடர்கள். மிகவும் அறிவுமிக்க விதிகள் எனும் ஜர்வரி துர்வரி (வேதத்தில் வருவன) என்பனவும், அசுவமேதயாகத்தில், குதிரையினை யாகம் செய்யும் மனைவி வைத்துக் கொள்வதும் யாவும், இந்த வஞ்சகர்கள் யாகத்திற்காகத் தாம் பெறும் கூலி என்ற தட்சணைக்காகவே கண்டு சொன்னவை."

என்பதைக் கபாலிகரான திருநாவுக்கரசர் அறியாதிருந்திருக்க முடியாது. ஏனெனில் உலகாய்தர்களுக்கு வைதிகர்களால் நெருக்கடி நேர்ந்தபோது அவர்கட்குக் கபாலிகர்களே அடைக்கலம் கொடுத்தார்களாம். எனவே வேத மேலாண்மையை வற்புறுத்திய மீமாம்சகர்களைச் சைவர்கள் எதிர்த்தமை என்பது அதுவும் சாதி ஏற்றத்தாழ்வுகளைப் பாராட்டாத கபாலிகர்கள் எதிர்த்தது காலத்தின் கட்டாயமாகும். அப்படி எதிர்க்க வேண்டிய தேவை சூழல் எப்படி? ஏன்? என்பதாகும்.

மீமாம்சகர்களின் சமூகக் கோட்பாடுகளுக்குக் கொடுக்கப்பட்ட வரைவுச் சட்டமே மனுதருமம் ஆகும். அதன் அடிப்படை நோக்கம்,

"சுருதி என்பது வேதத்தைக் குறிக்கிறது. சுமிருதி என்பது சட்டத் தொகுப்புகளைக் குறிக்கிறது. இவற்றில் கூறப்பட்டுள்ளவற்றைக் காரணகாரிய வாதத்தால் கேள்வி கேட்கக் கூடாது. ஏனென்றால் இவற்றிலிருந்து கடமை பற்றிய அறிவு தெரிவிக்கப்படுகிறது. அறிவுக்கு அடிப்படை மூலங்களான இந்த இரண்டையும் பகுத்தறிவை அடிப்படையாகக் கொண்ட நூல்களைச் சான்றாகக் காட்டி மறுக்கின்றவன் அவன் பார்ப்பனனாக இருந்தாலும் கூட அவனைச் சந்தேகவாதி என்றும், வேதங்களை நிந்திப்பவன் என்றும் சான்றோர்கள் சமூகத்திலிருந்து விலக்கி வைக்க வேண்டும். கடமையைப் பற்றிய அறிவை நாடுபவர்களுக்கு வேதங்கள்தான் மிக உயர்ந்த பிரமாணம் ஆகும்."

*மீமாம்சகர்கட்கும் சைவர்கட்கும் இடையே நடந்த மோதல், 'வேதம் கடவுளால் படைக்கப்பட்டதா இல்லையா என்பதில் மட்டுமன்று; மாறாக மீமாம்சகர்களின் சமூகக்கோட்பாடுகள் ஏற்றத்தாழ்வை நிலைப்படுத்துவனவாகவும், பார்ப்பனர்களின் உயர்வை அனைத்து நிலைகளிலும் நிலைநாட்ட முயன்றதாலும் ஏற்பட்டது' என்பதே உண்மை.*

ஏற்பட்டது என்பதற்கான சான்றை மாக்சுமுல்லரின் நூலிலிருந்து எடுத்துக்காட்டுவார் அம்பேத்கர். அக்கருத்து,

"ஒரு மக்களினம் தங்களுடைய புராதன தேசியக் கவிதைகள் குறிப்பாக அவை தங்கள் கடவுளர்களைக் குறித்த வேண்டுதல்களும் பாடல்களும் கொண்டவையாக இருந்தால் அவை மனிதரால் தோற்றுவிக்கப்பட்டவை அல்ல என்ற கருத்தை எப்படி உருவாக்குகின்றது என்பதைப் புரிந்துகொள்ளலாம். ஆனால் உரைநடையில் செய்யப்பட்ட பிராமணங்களின் விஷயம் அப்படி அல்ல. பிராமணங்கள் மந்திரங்களைவிட காலத்தால் மிகவும் பிற்பட்டவை. இவை 'சுருதி' என்ற வகையில் அனுமதிக்கப்பட்டன. அதற்குக் காரணம், பார்ப்பனர்கள் பேராசையுடன் கொண்டாடும் பல உரிமைகளுக்குத் தெய்வீக ஆதாரங்களைக் காட்டுவதற்காகவேயாம். இந்நோக்கத்திற்கு எளிமையான பழைய கவிதைகளை விட இந்த இறையியல் நூல்களே பொருத்தமானவை என்பதால்தான்.''

என்பதாகும். இந்தப் பின்னணியில்தான் திருமூலர், திருநாவுக்கரசர் முதலான நாயன்மார்களின் பாடல்களில் உள்ள வருண எதிர்ப்புக்கான காரணங்களைப் புரிந்து கொள்ள முடியும். சான்றாக,

"சங்கநிதி பதுமநிதி இரண்டும் தந்து
தரணியொடு வானாளத் தருவ ரேனும்
மங்குவார் அவர்செல்வம் மதிப்போம் அல்லோம்
மாதேவர்க்கு ஏகாந்தர் அல்லார் ஆகில்
அங்கமெலாம் குறைந்து அழுகு தொழு நோயராய்
ஆவுரித்துத் தின்று உழலும் புலைய ரேனும்
கங்கைவார் சடைக்கரந் தார்க்கு அன்பராகில்
அவர்கண்டீர் நாம்வணங்கும் கடவு ளாரே''

என்ற பாடலைக் காணலாம். 'சமூகத்தில் எந்த நிலையில், எந்த இடத்தில் இருந்தாலும் சிவனின் அடியவர் என்ற ஒரு தகுதி போதும் என்று உறுதி கூறும் நிலை' முழுமையான வைதிக மீமாம்சக

மறுப்பு என்பதில் ஐயமில்லை. இந்த மறுப்பு சைவ சமயத்தின் அடிமூற்றாய் இருந்துள்ளதைச் சிவஞான சித்தியாரும் உறுதி செய்கிறது.

### சிவஞான சித்தியார்

சிவஞான சித்தியாரில் சைவசமயத்திற்கு எதிரான சமய நெறிகளை எடுத்துச் சொல்லி அவற்றை மறுக்கும் பகுதிக்குப் 'பரபக்கம்' என்பது பொருள். அப்பரபக்கத்தில் மீமாம்சகத்தைத் தோற்றுவித்த சைமினியின் கோட்பாடுகள் இரண்டு பிரிவாக எடுத்துச் சொல்லி மறுக்கப்படுகின்றன. பாதராயனரின் பிரம்ம சூத்திரத்திற்கு ஆதிசங்கரர், இராமானுசர், மத்துவர் ஆகியோர் எழுதிய உரைகள் அத்துவிதமாக, வசிட்டாத்துவமாக, துவிதமாக உருப்பெற்றன. அவற்றைப் போலவே சைமினியின் நூலுக்கு உரை கண்டவர்கள் பட்டாச்சாரியன் (குல்லுகபட்டர்), பிரபாகரன் ஆகிய இருவருமாவர். இவ் இருவரின் உரைகளும் கூட தனித்தனி மெய்யியலாக வடிவம் கொண்டன. குல்லுகபட்டரின் கோட்பாடுகள், 'பட்டாசாரியன் மதம் என்றும், பிரபாகரனின் உரை, 'பிரபாகரன் மதம்' என்றும் அழைக்கப்பட்டன. சித்தியார் இரண்டையுமே கண்டிக்கின்றது. இரண்டிலும் குல்லுகபட்டரின் கருத்துகளை மறுப்பதில் தனிக் கவனம் காட்டியுள்ளதும் தெளிவாகிறது. 'பட்டாசாரியன் மறுதலையில்' உள்ள ஒருபாடலின் பொருள்,

"வடமொழியிலே உள்ள வேதங்கள் பிராமண, சத்திரிய, வைசியர்கள் என்ற மூன்று வருணத்தார்க்கே உரியனவாய் அவர்களால் மட்டுமே ஓதப்படும் என்று பட்டாசாரியனாகிய நீ கூறுகிறாய். சோதிடம் என்னும் கணிதம் வேதத்தின் ஓர் அங்கமாய் அதனுள் அடங்கும் என்று நீ ஏற்றுக் கொள்கிறாய். அப்படி இருந்தும் நான்காவது வருணத்தைச் சேர்ந்த சிலர் சோதிடத்தில் வல்லவர்களாய் விளங்குவது எவ்வாறு? மேலும் வட நாட்டில் நான்கு வருணத்தாரும் வேதத்தை ஓதுவதற்கு உரிமை உடையவர்களாகக் கொள்ளப்படுவானேன்? எல்லாராலும் ஓதப்படுகின்ற வேதம் சொல்வடிவாகத்தானே தோன்றிற்று? அதனைத் தந்தவன் ஒருவன் இல்லை என்ற உன் கூற்று. "பிறந்த பிள்ளையைப் பெற்ற தாய் ஒருத்தியே இல்லை" என்று மறுப்பதைப் போன்றது."

சிவஞான சித்தியார், பரபக்கத்தில் மறுக்கும் பட்டாசாரியன் மதம், பிரபாகரன் மதம், ஆதிசங்கரரின் அத்துவிதம் எனும் மாயாவாதி மதம் ஆகிய மூன்று சமயங்களுக்கான மறுப்புகளும் சிவனியம் வைதிகத்தின் மீது தொடுத்த தாக்குதல்களின் அடையாளம். எந்தச் சிவனியம் வைதிகத்தைக் கண்டித்து ஒதுக்கியதோ அதே சிவனியம் வைதிக மயமானது பெரும்புதிராக உள்ளது. எனினும் சைவ சமயத்தின் தலைவர் நிலையில் போற்றப்படும் திருஞானசம்பந்தரின் பதிகங்கள், அவரைப்பற்றிய பெரியபுராணம் தரும் செய்திகள் அப்புதிரை விடுவிக்கப் பெருந்துணை புரிகின்றன.

### திருஞானசம்பந்தர்

சைவ சமயக் குரவர்களில் தமிழை மிக அதிக அளவில் போற்றியவர் திருஞானசம்பந்தனே ஆவார். இவரின் இச்செயல் குறித்துப், பேராசிரியர் அ.ச. ஞானசம்பந்தன்,

தாம் பாடிய நாலாயிரம் பாடல்களில் ஐந்நூறுக்கும் மேற்பட்ட இடங்களில் தமிழின் பெருமைபேசியும் தமிழ் மொழியால் இறைவனைப் பாடி அடையமுடியும் என்று அறுதியிட்டுக் கூறியும், ஆணை வைத்துப் பேசியும் செல்கிறார் பிள்ளையார். இத்துணையும் வேதம் அறியாத ஒருவர் கூறியிருப்பின் அவை பிறரால் ஏற்றுக் கொள்ளப்படாத வெற்று உரையாய்ப் போயிருக்கும். இதன் எதிராக நாவரசர் வடமொழி நன்கு அறிந்தவர் என்று நினைப்பதில் தவறில்லை. அற்றை நாளில் தமிழை அறியாத சமணசமயம் (சைனம்) புக்குப் பல்லாண்டுகள் அச்சமயத்திலிருந்து தருமசேனர் என்ற உயர்பட்டத்தையும் பெற்றவர். சைன நூல்களைக் கற்காமல் இந்நிலை எய்த முடியாது. அப்படியானால் அவரும் வடமொழி வல்லவர் தாமே! என்றாலும் வேளாளராய அவர் எவ்வளவு வடமொழி பயின்றிருப்பினும் வேதங்களையே கற்றிருப்பினும் அன்றைய வைதிக உலகம் அவரை ஏற்றுக் கொண்டிராது.

என்று ஒப்பாய்வின் வாயிலாகத் திருஞானசம்பந்தரின் தமிழ்ப்பற்றை விதந்தோதுகின்றார். ஆனால் சேக்கிழாரின் பார்வையோ அதற்கு மாறாக உள்ளது. திருஞானசம்பந்தரின் அவதாரச் சிறப்பை,

"வேதநெறி தழைத்தோங்க மிகுசைவத்
துறைவிளங்கப்

பூதபரம் பரைபொலியப் புனிதவாய் மலர்ந்தழுத
சீதவள வயற்புகலித் திருஞான சம்பந்தர்
பாதமலர் தனைக் கொண்டு திருத்தொண்டு
பரவுவாம்" (28 : 1)
என்று போற்றுகின்றார்.

திருஞானசம்பந்தரின் பிறந்த ஊராகிய சீர்காழிக்குப் "பிரமபுரம்" என்றும் ஒரு பெயருண்டு. பிரமபுரம் என்பது அங்குள்ள சிவனின் பிரம்மபுரீசுவரர் என்ற பெயரின் காரணமாக அமைந்த காரணப்பெயர். எப்படிக் காரோணம் பாசுபதர்களுக்கும் பின்னர் காளாமுகர்க்கும் உரிய கோவிலின் மடத்தின் பெயரோ அதைப் போன்றே 'பிரம்மபுரி' என்பது காளாமுகர்கட்கு உரிய கோவிலின் பெயராகும். கபாலிகப் பிரிவுக்குரிய சிவன் கபாலிசுவரனாக அழைக்கப்பட்டதைப் போன்றதாகும். காளாமுகம், கபாலிகத்தில் ஊடுருவிய வைதிகர்களால் உருவான வேதவழிப்பட்ட சைவ சமய உட்பிரிவு என்பதை நாம் முன்னரே அறிந்துள்ளோம். எனவே எழுத்துவடிவில் தம் நூல்களைத் தொகுத்தனர். பௌத்தர்களும் பாலி மொழியைப் பின்பற்றியவராவர். அந்த வரிசையில் ஆசிவகர்கள் மட்டும் தம் தாய் மொழியாம் தமிழைப் போற்றியோர் ஆவர். ஆசிவகர், சைனர், பௌத்தர் ஆகிய அனைவரும் சைவர்களின் கடும் எதிரிகள். இச் சூழலில் சிவனிய ஆகம நூல்கள் எழுத்து வடிவம் பெற்றிருந்தால் அவை தமிழில்தான் எழுதப் பெற்றிருக்க வேண்டும். ஆகம மரபு வழக்காற்று நிலையிலும் மொழிநிலையிலும் வைதிக நெறிக்கு எதிரானதாகும். எனவே ஆகம முறைகளுக்கு மாறான வைதிக நெறியைப் பின்பற்றியவரும், காளாமுகப் பிரிவைச் சேர்ந்தவருமாகிய திருஞானசம்பந்தரைச் சேக்கிழார் 'வேதநெறி தழைத்தோங்க' வந்தவராகப் புனைகின்றார் என்பதில் ஐயமில்லை.

தமிழ்நாட்டுப் பார்ப்பனர்களில் சிவனியத்தைத் தழுவியோர் 'சிவபிராமணர்' என அழைக்கப்பட்டனர். திருஞானசம்பந்தரின் தந்தையாரின் பெயர் சிவபாத இருதயர் என்பது அந்த அடிப்படையில் அமைந்துள்ளது தெளிவு. ஞானசம்பந்தரின் தாயாரின் பெயர் பகவதி என்பது. இப் பெயர் தந்திர வழிபாட்டின் அடிப்படையில் அமைந்தது. பகவதி என்ற பெயர்ச்சொல்லிற்குப் 'பெண்குறி' என்பது பொருள். இவ்வாறு தமிழ்மரபில் வந்த போதிலும், ஞானசம்பந்தர் வேதநெறி தழைத்தோங்க 'வந்தவராகப் போற்றப்படுவதும், அவரின் தந்தையார் வேத வேள்விகளைச் செய்யும் பொருட்டு ஞானசம்பந்தர் பெரும்பொருள் கொடுத்து உதவியதும்' பெரும் புதிர் என்பதில் ஐயமில்லை.

திருஞானசம்பந்தரின் பிறந்த ஊராகிய சீர்காழிக்குப் "பிரமபுரம்" என்றும் ஒரு பெயருண்டு. பிரமபுரம் என்பது அங்குள்ள சிவனின் பிரம்மபுரீசுவரர் என்ற பெயரின் காரணமாக அமைந்த காரணப்பெயர். எப்படிக் காரோணம் பாசுபதர்களுக்கும் பின்னர் காளாமுகர்க்கும் உரிய கோவிலின் மடத்தின் பெயரோ அதைப் போன்றே 'பிரம்மபுரி' என்பது காளாமுகர்கட்கு உரிய கோவிலின் பெயராகும்.

பிறப்பினால் வைதிக நெறியை ஏற்றிருந்த ஒரு குடும்பமரபில் "கௌணிய கோத்திரத்தில்" பிறந்த திருஞானசம்பந்தர் வேதத்தில் புலமையும் தேர்ச்சியும் கொண்டிருந்ததில் வியப்பில்லை. ஆயினும் சேக்கிழார், 'வேத நெறி தழைத்தோங்க மிகு சைவத்துறை விளங்க வந்தார்' என ஏன் பாடவேண்டும்?

சைவ சமயத்தின் மூல வடிவமாகிய கபாலிகம் ஆகம முறையைப் பின்பற்றியது. ஆகமநெறி வேதநெறிக்கு மாறானது. ஆகம நூல்கள், ஆகம தந்திரங்கள் என அழைக்கப்பட்டன. ஆகம தந்திரங்கள் என்றால் ஆகம நூல்கள் என்பது பொருள். அக்காலத்தில் சமற்கிருதத்திற்கு எழுத்து வடிவம் இல்லை. தமிழ் மட்டுமே வரிவடிவைக் கொண்டிருந்த மொழியாகும். சைனர்கள் கூட எழுத்து வடிவம் இல்லாமல் வாய்மொழி மரபைப் பின்பற்றியோரே யாவர். கி.பி. 5ஆம் நூற்றாண்டிற்குப் பின்னரே பாகத மொழியில்

"... ... ... பரசமயத்
தருக்கொழியச் சைவமுதல் வைதிகமும்
தழைத்தோங்க"
எனச் சைவமும் வைதிகநெறிகளும் தழைக்கும் பொருட்டுத் திருஞானசம்பந்தர் அவதரித்தார்

என்பது சேக்கிழாரின் கூற்றாகும். இதைப் போன்றே.

"திசையனைத்தின் பெருமையெலாந்
தென்றிசையே வென்றேற
மிசையுலகும் பிற உலகும் மேதினியே
தனிவெல்ல
அசைவில்செழுந் தமிழ்வழக்கே அயல் வழக்கின்
துறைவெல்ல.."
அவதரித்தார் எனப் புகழ்கின்றார்.
வைதிகம் தழைக்கும்போது தமிழ் வழக்கு
எப்படித் தழைக்கும் என்பது கேள்வி.
இச்சூழலில் 'பூத கணநாதர்...' என்ற
பாடலில் வரும்.
"ஓதுமறை யோர்பிறி துரைத்திடினும் ஓவா
வேதமொழி யால்ஒலி விளங்கியெழு மெங்கும்"

எனும் இரு அடிகளும் எண்ணத்தக்கனவாய் உள்ளன. இப்பாடலடிகட்கு சி.கே. சுப்பிரமணிய முதலியார், 'வேதமொழி முழக்கவுள்ள மறையோர், அது செய்யாது வேறு உரைத்தாலும் வேதவொலி தாமே பெருகி முழங்குதலால் இடைவிடாது அவையே மிக்கன' எனப் பொருள் தருவார். ஆனால் பேராசிரியர் அ.ச. ஞானசம்பந்தன் இதே பாடலடிகட்குக் கூறும் பொருள் வேறாக உள்ளது. "... வேள்வியில் ஈடுபட்டுச் செய்பவர் அனைவருமே சிவபரத்துவத்தை உணர்ந்தவர்கள் என்று கூறமுடியாதல்லவா? ஒரு சிலர் புதிய வேள்வியின்



மந்திரங்களை அறிய வாய்ப்பின்மையினால் பழக்கங் காரணமாகப் பழைய மந்திரங்களை ஓதுகின்றார்கள் போலும்!' அதனை 'ஓதுமறையோர் பிறிதுரைத்திடினும்' என்று குறிப்பிட்டுக் காட்டுகிறார் ஆசிரியர். மறை ஓதும் பணிபுரிபவர்கள் பிறிது உரைப்பது எப்போது? வாலாயமாகக் கூறும் கிரியா மந்திரங்களை மட்டுமே அறிந்தவர்கள் சிலர். அவை மாறிவிட்ட நிலையில் இப்புதுமுறை வேள்வியில் அமர்ந்து மந்திரம் கூறும்பொழுது தம் பழைய மந்திரங்களையே ஓதினர் போலும்! இவ்வாறு பொருள் கூறக் கூடிய வகையில் பாடலை அமைத்துள்ளமை சேக்கிழார் பெருமான் இந்த நுணுக்கத்தை அறிந்திருந்தார் என்பதை விளக்குகின்றது. இதன் மறுதலையாக 'அவர்கள் சாதாரண நேரங்களில் உரையாடும்பொழுதும்' என்று திரு.சி.கே.சு. அவர்கள் தம் உரையில் குறிப்பிடுகின்றார். அவ்வாறு கூறுவது சிறப்பில்லை என்று நினைக்க வேண்டியுள்ளது."

என்பது அவரின் கூற்று. இருவர் உரையும் உண்மையை விட்டு விலகி நிற்கின்றன என்பதே உண்மை. நாம் இதுகாறும் கண்டதற்கு ஏற்ப, 'ஓது மறையோராகிய மீமாம்சகர், வேதாந்திகள் உள்ளிட்ட வைதிக நெறியினர் யாகங்களுக்குக் கூறும் பொருளும் நோக்கமும் வேறாக இருந்தாலும், சிவபிராமணர்கள் என்போர் அந்த நோக்கங்களுக்கு மாறுபட்ட நிலையில் வேறு பயனும் நோக்கமும் கொண்ட வேள்விகளை இயற்றினர். அந்த வேதஒலி எங்கும் நிறைந்தது' எனப் பொருள் காண்பதே பொருந்தும். பாடலுக்கான பொருள் இவ்வாறாக இருந்தாலும் வைதிக நெறிகளுக்கு மாறாக மற்றவர்களால் வேள்விகளை இயற்ற முடியுமா என்பதை அறிந்தோரே கூற இயலும். எனினும் ஞானசம்பந்தர் போற்றும் வேள்வி முறைகள் யாவும் வைதிக நெறிப்படி அமைந்தவை என்பதே உண்மை. ஞானசம்பந்தர் மதுரையில் ஆசீவக சைனர்களை வாதில் வெல்ல வேண்டிய நிலையில் பாடிய பாடல்கள் தனித்த ஆய்வுக்கு உரியவை. அவற்றில் ஒன்றான,

"வாழ்க அந்தணர் வானவ ரானினம்
வீழக தண்புனல் வேந்தனு மோங்குக
ஆழ்க தியெலாம் அரனா மமே
சூழ்க வையகமுந் துயர் தீர்கவே

என்பது. இப்பாடல் குறித்து ஆராயும் சுவாமி தயானந்த சரசுவதியின் விளக்கம் குறிக்கத் தக்கதாய் உள்ளது.

"பார்ப்பனர்களின் நித்திய நைமித்திய கர்மாக்களின் முடிவில் சொல்லுகின்ற சில மந்திரங்களின் பொருள். 'குடிகள் நலமடையட்டும் அரசர் நியாயமான வழியில் பூமியை ஆளக் கடவர். எப்போதும் பசுக்களுக்கும்

பிராமணர்களுக்கும் நலம் உண்டாகட்டும். உலகமெலாம் நலமுடன் இருக்கட்டும்"

காலங் கடவாமல் மழைபெய்ய வேண்டும்; பூமியானது பயிர்களால் செழிப்புற்றிருக்க வேண்டும்; இந்நாடானது கலக்க முறாமல் இருக்க வேண்டும்; பிராமணர்கள் பயமற்றவர்களாக இருக்க வேண்டும்.

என வேத மந்திரங்களின் பொருளைக் கூறிய அவர் அவற்றின் நுட்பத்தையும் விளக்குகின்றார்.

"இதன்பொருள் வெளிப்பார்வைக்கு அழகாகவே தோன்றும். ஆய்ந்து பார்த்தால் அவ்வாறில்லை. குடிகள் நலமடையட்டும் என்ற வாக்கியத்திற்கு முன் வேத ஸ்மிருதிகளில் விதித்துள்ளபடிக்கு என்பதையும் சேர்த்து வாசித்துப் பாருங்கள். அரசர்கள் நியாயமான வழியில் அரசு புரிவதென்றால் மனுதரும நெறிப்படி என்பது சொல்லாமலேயே விளங்க வில்லையா? மனுதருமப்படி நடக்கும் ஆட்சியில் பார்ப்பனர் அல்லாதாரின் நலம் எத்தகையது? அன்றியும் குடிகள் நலமடையட்டும் என்று முதலில் சொல்லிவிட்டு, "பசுக்களுக்கும் பிராமணர்கட்கும் எப்போதும் சுகம் உண்டாகட்டும்" என்று பின்னரும் சொல்லுவானேன். இதனால் பிராமணர், அரசனுக்குக் கீழ்ப்படிந்தவர்கள் அல்லரென்றும் அவர்கள் அடையும்படியான மேன்மை மற்ற குடிகளின் மேன்மையினின்றும் வேறு பட்டதென்றும் விளங்கவில்லையா...."

என வினாத் தொடுக்கும் அவர், மேலேகாட்டிய ஞானசம்பந்தரின் பாடலைக் காட்டி, வேதமந்திரங்களை அப்பாடல் எப்படித் தழுவியுள்ளது என்பதையும் விளக்குவார். சுவாமி தயானந்தசரசுவதியின் கூற்றை உறுதிப்படுத்தும் வகையில் சேக்கிழாரின் பாடலும் அமைந்துள்ளதைக் காணலாம். ஆசீவகத் துறவிகளைக் கழுவிலேற்றி, அரசனைச் சைவனாக்கியபின் ஞானசம்பந்தர் என்ன செய்தார்? இதைத்தான் விளக்குகின்றது.

"பூதிமெய்க் கணிந்து வேந்தன்
புனிதனாய் உயர்ந்த போது
நீதியும் வேத நீதி
யாகியே நிகழ்ந்த தெங்கும்" (திருஞான— 858:12)

என்னும் அப்பாடல். அரச நீதி வேத நீதியாகத் திகழ்ந்தது என்பதற்கு என்ன பொருள்? ஆய்வாளர்கள் சிந்திக்க வேண்டும். சேக்கிழார் அவ்வாறு குறிப்பிடக் காரணம் ஞானசம்பந்தரின் ஆலவாய்ப் பதிகப் பாடல்களே என்பதில் ஐயமில்லை. அப்பாடல்களில் சில நாம் கவனத்திற்கு உரியன.

வேத வேள்வியை நிந்தனை செய்துழல்
ஆதம் இல்லி அமணொடு தேரரை
வாதில் வென்று அழிக்கத் திரு உள்ளமே
வைதிகத்தின் வழி ஒழுகாத அக்
கைதவர் உடைக்கார் அமண் தேரரை
எய்தி வாதுசெயத் திருஉள்ளமே

மறை வழக்கம் இல்லாத மாபாவிகள்
பறிதலைக் கையர் பாய்உடுப் பார்களை
முறிய வாது செயத்திரு உள்ளமே

அறுத்த அங்கம் ஆறுஆயின நீர்மையைக்
கறுத்து வாழ்அமண் கையர்கள் தம்மொடும்
செறுத்து வாதுசெயத் திருஉள்ளமே.

அந்தணர் புரியும் அருமறை
சிந்தனை செய்யா அருகர் திறங்களைச்
சிந்த வாதுசெயத் திருஉள்ளமே

வேட்டு வேள்வி செய்யும் பொருளை விளி
மூட்டு சிந்தை முரட்டமண் குண்டரை
ஓட்டி வாது செயத் திருஉள்ளமே

அழலது ஓம்பும் அருமறையோர் திறம்
விழலது என்னும் அருகர் திறத்திறம்
கழல வாது செயத் திருஉள்ளமே
(திரு ஆலவாய்ப் பதிகம் 17)

முதலான பாடல்கள் அனைத்தும் வற்புறுத்தும் கருத்து யாது? நாம் முன்னர்க் காட்டிய திருநாவுக்கரசரின் பாடல்கள் எந்தெந்த வகையில் வைதிகக் கோட்பாடுகளைக் கண்டித்தனவோ அந்தக் கருத்துகளுக்கு நேர்முரணாக அதாவது திருநாவுக்கரசரின் பாடல்களுக்கு நேர் எதிராக, வைதிக மீமாம்ச நெறிகளை ஞானசம்பந்தர் ஏற்றிப் போற்றுகின்றாரே அதற்கு என்ன காரணம்? மேலே காட்டிய பாடல்களைப் பின்வரும் மனுதரும நூற்பாக்களோடு ஒப்பிடுவது உண்மையைக் காண உதவும்.

எக்கியாதி கருமங்களைப் பயனை விரும்பாமல் செய்பவன் மோட்சத்தை அடைகிறான்.

இம்மையிலும் தான் நினைத்தபடி அனைத்தையும் அடைகிறான். (மனு 2:5)

தெரிந்தவன் இந்தச் சாஸ்திரத்தை ஞானக் கண்ணினால் அறிந்து இதிற் சொல்லப்பட்ட தருமங்களை வேதத்தினாற் சொல்லப்பட்டதாகவே எண்ணித் தன் தருமத்தை நடத்தக் கடவன். (மனு 2:8)

சுருதியிலும் சுமிருதியிலும் சொல்லப்பட்ட தருமத்தைப் பின்பற்றுகிறவன் இவ்வுலகத்தில் கீர்த்தி அடைகிறான். இறந்தபின் ஒப்பற்ற சுவர்க்கத்தை அடைகிறான்.(மனு 2:9)

வேதத்தைச் சுருதி என்றும், தரும சாஸ்திரத்தைச் சுமிருதி என்றும் அறியத்தக்கது. அவ்விரண்டையும் விரோதமான தர்க்க சாஸ்திர யுக்தியைக் கொண்டு மறுக்கக் கூடாது. ஏனெனில் அவற்றினால்தான் தருமங்கள் விளங்குகின்றன. (மனு 2: 10)

எவன் தருமத்திற்குக் காரணமான அவ்விரண்டையும் தருக்க சாஸ்திர யுக்தியினால் அவமானஞ் செய்கின்றானோ அவன் பெரியோர்களால் கர்மானுட்டானத்தினின்றும் நீக்கக் கடவன். வேதத்தை நிந்திப்பதால் தெய்வம் இல்லை என்று சொல்பவனுமாவான். (மனு 2:11)

அமணர்'. 'நீலமேனி அமணர் நடுவே உன் பெருமைகளைச் சொல்லி வாதிட வேண்டும்'. 'முப்புரம் எரித்த அழகனே நின் கழலணிந்த பாதத்தைப் போற்றாத அமணர்களைத் தண்டிக்க நீ அருள வேண்டும்'. என்ற வேண்டுகோள்களே இடம் பெற்றுள்ளன. இம் மூன்று பாடல்களிலும் அமணர்கள் சிவனை வணங்காதவர்கள் என்ற குறிப்பு மட்டுமே உள்ளதும் எண்ணத்தகும். சிவனை வணங்காதவர்கள் என்பதற்காகவே அவர்கள் கொல்லப்பட்டிருக்க முடியாது என்பதையும் நாம் கருத்தில் கொள்ள வேண்டும்.

மேலே காட்டிய பாடல்கள் அனைத்தும் திருஞானசம்பந்தரின் நோக்கம் என்ன என்பதை உணர்த்திவிடுகின்றன. சைவத்துறை விளங்க வந்தவராகப் புகழப்பட்ட அவர், வைதிகத்தை நிலை நாட்டுவதையே நோக்கமாகக் கொண்டிருந்தார் என்பதை அப்பாடல்கள் புலப்படுத்தவில்லையா? இக்கருத்தை உறுதி செய்யும் நிகழ்ச்சி ஒன்றும் திருமறைக்காட்டில் நடந்துள்ளது. இதனைச் சேக்கிழார் குறிப்பாக உணர்த்துவதும் கவனிக்கத் தக்கதாய் உள்ளது.

**திருமறைக்காடு**

மறைக்காட்டில் உள்ள சிவன் கோயில் மறைகளால் திருக்காப்பு செய்யப் பெற்ற அதாவது

மனு வகுத்துள்ள நெறிகளுக்கு எதிராக ஆசிவக, பௌத்த, சைனத் துறவிகள் செயல்பட்டதால்தான் ஞானசம்பந்தர் அவர்களைக் கழுவிலேற்றிக் கொல்லச் செய்தார். பத்துப் பாடல்களைக் கொண்ட அப்பதிகங்களில் முதல் ஏழும், வைதிக நெறிகளை எதிர்த்தவர்கள் என்பதற்காகவே அவர்களை நோக்கி ஞானசம்பந்தர் கொதித்தெழக் காண்கிறோம்

வைதிகர்களால் மூடப்பெற்ற கதவுகளைக் கொண்டது. ஆயினும் அம் மறைகளை ஓதும் பெருமையுடைய அடியார்கள் யாரும் கோவிலுக்குள் செல்லமுடியவில்லை. அதனால் வேறு ஒரு வழியை அமைத்துக் கொண்டு உள்ளே சென்று வழிபட்டு வருகின்றனர். இச்செய்தியைக் கேட்ட ஞானசம்பந்தர், திருநாவுக்கரசரைப் பார்த்து, 'நீங்கள் கதவைத் திறக்கத் தமிழால் பாடுங்கள்' எனச் செப்பினார்.

அதன்படி திருநாவுக்கரசர் 10 பாடல்கள் பாடியும் கதவம் திறக்கவில்லை. இதனால் வாகீசர்

இவ்வாறு மனு வகுத்துள்ள நெறிகளுக்கு எதிராக ஆசீவக, பௌத்த, சைனத் துறவிகள் செயல்பட்டதால்தான் ஞானசம்பந்தர் அவர்களைக் கழுவிலேற்றிக் கொல்லச் செய்தார். பத்துப் பாடல்களைக் கொண்ட அப்பதிகங்களில் முதல் ஏழும், வைதிக நெறிகளை எதிர்த்தவர்கள் என்பதற்காகவே அவர்களை நோக்கி ஞானசம்பந்தர் கொதித்தெழக் காண்கிறோம்.

எட்டு, ஒன்பது, பத்து ஆகிய பாடல்களில் முறையே 'திருநீற்றை அணிந்த சிவனடியவர்களின் மீதுபட்ட காற்றைக் கூட நெருங்கவியலாத

சிந்தை நொந்து. "நீடுதிருக் கடைக்காப்பில் அரிது வேண்டி நின்றெடுக்கத் திருக்காப்பு நீக்கங்காட்ட" அதாவது அழுது தொழுது பாடியபின், கதவம் திறக்கிறது. ஆனால் ஞானசம்பந்தன் ஒருபாடல் பாடிய உடனே கதவம் மூடிக்கொள்கிறது. இதனால் திருநாவுக்கரசர் அஞ்சி நடுங்கி, பேழ்கணித்து அந்த மண்டபத்தின் ஓர் ஓரத்தில் ஒடுங்கிக் கிடந்து விடிவதற்குள் அந்த ஊரைவிட்டே வெளியேறிவிடுகிறார்.

விடிந்ததும் இதனை அறிந்த ஞானசம்பந்தர், திருநாவுக்கரசரை அழைத்து வந்து அமைதிப்படுத்துகின்றார். பின்னர் 'அந்தக் கோவிலின் வழிபாட்டு முறைகளாக வேத வழக்கையும் அதற்கு எதிரான வழக்கையும் நிலைபெறச் செய்தார்'. என்பது அப்பாடல்களின் பொருளாகும்.

வேதங்கள் மூடிய கதவினைத் திறக்க வேண்டின் வேதம் கற்ற மறையவரான ஞானசம்பந்தர்தானே பாடியிருக்க வேண்டும்? அதற்கு மாறாகத் திருநாவுக்கரசரைப் பாடச் செய்வது அதுவும் தமிழில் பாடச் சொல்வது ஏன்? அடுத்து, வேதம், திருக்கடைக்காப்பு செய்தது உண்மையானால் அங்கு வேதவழிபாட்டு முறைகளை மட்டுந்தானே மீண்டும் நிலைநாட்டியிருக்க வேண்டும்? அதற்கு மாறாக,

"அத்திரு வாயில் தன்னில்
அற்றைநாள் தொடங்கி நேரே
மெய்த்திரு மறைகள் போல
மேதினி புக்குப் போற்ற
வைத்தெதிர் வழக்கஞ் செய்த
வரம்பிலாப் பெருமை"

யோராகச் சேக்கிழார் பாராட்டுவது ஏன்? உண்மையில் அக்கோவில் ஆகம வழிபாட்டினரான கபாலிகர்கட்கு உரியதாக இருந்தது என்பதும், அதனைக் கைப்பற்ற வைதிகர்களான காளாமுகர் முயற்சித்தனர் என்பதும், அதனால் கபாலிகர் தமக்குரிய கோவில் கதவினைமூடி வைத்து விட்டனர் என்பதும் நடந்த நிகழ்வுகள். அதன் காரணமாகவே கபாலிகரான அப்பரைக் கொண்டு மூடிய கதவைத் திறக்குமாறு ஞானசம்பந்தர் கேட்டுக் கொண்டார். இவையே அங்கு நடந்த நிகழ்வுகள் என்பதில் ஐயமில்லை. இதனால் திருமறைக்காட்டின் கோவில் கதவுகளைத் திறக்கவும் அடைக்கவும் பாடிய நிகழ்வு என்பது கபாலிகக் காளாமுக மோதலின் வடிவம். கபாலிகப் பிரிவினருக்கு இருந்த கோவில்கள் பல காளாமுகர்களால் கைப்பற்றப்பட்ட நிகழ்வுகளை விரிவாக ஆய்ந்துரைக்கும் லோரன்சென்னின் கூற்றையும் இங்கே நாம் எண்ணிப்பார்க்க வேண்டும்.

### திராவிட சிசு

ஆதிசங்கரர் தாம் பாடிய பாடல் ஒன்றில் "திராவிட சிசு" எனக் குறித்துள்ளார். அக் கூற்று மூன்று வயதிலேயே இறைவன் அருளைப் பெற்றவராகப் போற்றப்படும் திருஞானசம்பந்தரைக் குறிப்பதாகவே தமிழ் அறிஞர்கள் நம்பிவருகின்றனர்.

'திராவிட சிசு' எனத் திருஞானசம்பந்தரை ஆதிசங்ரகரர் கூறியிருக்க முடியாது. ஏனெனில் ஆதிசங்கரர் சிவனைக் கடவுளாக ஏற்காதவர். காளாமுகர்களையும் பாசுபதர்களையும் எதிரிகளாகக் கருதிக் கண்டித்தவர். சிவஞானசித்தியார், மாயாவாதத்தைக் கண்டித்து ஒதுக்கியதைப் போன்றே ஆதிசங்கரரும் காளாமுகத்தினையும் அதன் ஒரு கூறான பாசுபதத்தையும் ஒதுக்கிக் கண்டிக்கின்றார். 'முழுமுதற்கடவுள்' என்றும் 'பிறவாயாக்கைப் பெரியோன்' என்றும் போற்றப்பெறும் சிவனை சிவனின் ஆற்றல்களைக் கேள்விக்கு உள்ளாக்கும் ஆதிசங்கரரின் கூற்று 'பாசுபதாதிகரணம்' என்று அழைக்கப்படுகிறது. 'பாசுபதர் மறுப்பு' என்பது அதன் பொருள்.

"ஈசுவரன் உலகப் படைப்பிற்கு நிமித்த காரணமாக மட்டுமே திகழ்பவர். அதாவது மட்பாண்டம் செய்யும் குயவனைப் போன்றவர் எனக் கூறும் பாசுபதர்களின் கொள்கையானது ஐந்து சூத்திரங்கள் கொண்ட இந்த அதிகரணத்தால் மறுக்கப்படுகின்றது. இதிலிருந்து ஈசுவரனை நிமித்தகாரணமாக மட்டும் சொல்லும் மதம் எதெது உண்டோ அவை யாவும் மறுக்கப்பட்டனவாகவும் கண்டுகொள்ள வேண்டும் என்றேற்படுகிறது."

என அவ் அதிகரணத்தை ஆதிசங்கரர் பிரம்மசூத்திரத்திற்கு எழுதிய உரையில் விளக்குவார்.

பாசுபதம் காளாமுகம் இரண்டும் சிவனை முழுமுதற்கடவுளாக ஏற்றுக் கொண்டவை. இரண்டு பிரிவுகளும் ஒரே மூலவரை இலகுலீசரைத் தோற்றுநராகக் கொண்டவை. எனவே அவ்விரண்டில் ஒன்றான பாசுபதத்தை மறுப்பது என்பது காளமுகத்தையும் மறுப்பது என்பதும் உண்மை. இப்படிச் சங்கரரால் மறுக்கப்பட்ட ஒரு சமயப் பிரிவான காளாமுகத்தைச் சேர்ந்த ஞானசம்பந்தரை ஆதிசங்கரர், 'திராவிட சிசு' எனப் போற்றியிருக்க முடியாது. அப்படி உண்மையிலேயே அக்கூற்று ஞானசம்பந்தரைத்தான் குறிப்பது என்றால் ஆதிசங்கரரின் கூற்று உள்நோக்கம் கொண்டதாக இருக்கவேண்டும்.

இந்திய மெய்யியல் வரலாற்றில் ஆதிசங்கரருக்கென்று தனியிடம் உண்டு. அதே நேரத்தில் அவரைக் கண்டித்து ஒதுக்கியவர்களும் மிகுதி. மகாயான பௌத்த சமயத்தின் சூனியவாதத்திற்கும், ஆதிசங்கரரின் அத்துவிதக் கோட்பாட்டிற்கும் ஒற்றுமை உண்டு. அதனால் பௌத்த சமயத்தின் சூனிய வாதத்தை ஆதிசங்கரர் அத்துவிதமாக மாற்றிவிட்டார் என்று அவர் மீது குற்றம் சுமத்துவர். அதன் காரணமாகவே அவர் மாறுவேடம் அணிந்த பௌத்தர் எனும் பொருளில் 'பிரசன்ன பௌத்தன்' என்று அழைக்கப்பட்டார். பௌத்த சமயத்தின் தாக்கம் அவரிடம் கொள்கை அளவில் இருந்தாலும், வைதிக நெறிகளைப் பாதுகாத்தவர் என்பதே உண்மை. அதன் காரணமாகவே அவர் இந்தியாவின் நான்கு திசைகளிலும் நான்கு மடங்களை நிறுவினார். மனுதருமம் செழிக்கவும் தழைக்கவும் பாடுபட்டார். அந்தவகையில் அவருக்கு முன்னோடியாகத் திகழ்ந்தவர் திருஞானசம்பந்தர் என்பதால் அவரைப் போற்றும் வகையில் 'திராவிடசிசு' எனப் பாராட்டியுள்ளார் எனக் கொள்வதுதான் பொருத்தமாக இருக்கும்.

**பிரசன்ன சைவர்**

திருஞானசம்பந்தர் வேதநெறி தழைக்க வந்தவர். வேத வேள்விகளை இயற்றத் தம் தந்தையாருக்குப் பெரும்பொருள் கொடுத்து உதவியவர். வைதிகத்தின் தீ வழிபாடு முதலானவற்றை ஏற்றுப் பாராட்டியவர். ஆகம முறையில் வழிபாடுகள் நடந்த கபாலிகக் கோவில்களில் வேத வழக்கைப் புகுத்தியவர். அப்படிப்பட்டவர் வேத நெறிகளுக்கு மாறான தமிழைப் பாராட்டியுள்ளார் என்றால் அதில் எந்த அளவு உண்மைத் தன்மை இருக்கும்? கோவில்களில் மட்டுமல்லாமல், மதுரையில் பாண்டியன் மறைந்தபிறகு பாண்டிய நாட்டில் வேத நெறியே அரசியல் நீதியாக நிலைநாட்டிய ஒருவர் தமிழ்மரபை எப்படிப் பாதுகாத்திருக்க முடியும்? எனவே, ஆதிசங்கரர் எவ்வாறு மாறுவேடமணிந்த பவுத்தராகச் சுட்டப்படுகிறாரோ, அவரைப் போன்றே திருஞானசம்பந்தரும் மாறுவேடமணிந்த சைவரே அன்றி உண்மையான சைவர் அல்லர் என்பதே உண்மையாகும். திருஞானசம்பந்தர்தான் சைவக் கோவில்களில் வேதமந்திரங்கள் ஒலிக்கக்காரணமாக இருந்துள்ளார். அவர் காலத்திலிருந்துதான் வைதிகம் சைவத்தில் செல்வாக்குப் பெற்றுள்ளது. சைவ சமயத்தின் உள்ளடக்கமான வைதிக எதிர்ப்புக்கு மாறாகத் திருஞானசம்பந்தர் எடுத்த முயற்சிகளுக்கு ஏற்பட்ட எதிர்ப்பு தணிந்திருக்கலாம். ஆனால் முற்றாக அழிந்துவிடவில்லை என்பதும் மறுக்க முடியாத உண்மையாகும். இந்தப் பின்னணியில் ஞானசம்பந்தரின் மறைவு, திருநாவுக்கரசரின் மறைவு, சுந்தரரின் கைலைப் பயணம்" ஆகிய யாவும் மறு ஆய்வுக்கு உட்படுத்த வேண்டும். அந்த முயற்சிக்கான தொடக்கமே இக்கட்டுரையாகும்.

ஆதிசங்கரர் எவ்வாறு மாறுவேடமணிந்த பவுத்தராகச் சுட்டப்படுகிறாரோ, அவரைப் போன்றே திருஞானசம்பந்தரும் மாறுவேடமணிந்த சைவரே அன்றி உண்மையான சைவர் அல்லர் என்பதே உண்மையாகும். திருஞானசம்பந்தர்தான் சைவக் கோவில்களில் வேதமந்திரங்கள் ஒலிக்கக் காரணமாக இருந்துள்ளார். அவர் காலத்திலிருந்துதான் வைதிகம் சைவத்தில் செல்வாக்குப் பெற்றுள்ளது.

### துணைநூற்பட்டியல்

- அம்பேத்கர், அம்பேத்கர் சிந்தனைகள், தொகுதி, 7, 8, 13.
- கடலங்குடி நடேசசாஸ்திரி, சங்கரபாஷ்யம் தொகுதி 1, 2, 3.
- குணா, தமிழர் மெய்யியல்.
- தயானந்த சரஸ்வதி, ஞானசூரியன்.
- சீனிவாசய்யங்கார் பி.தி
- (த.ஆ) இராமநாதன், தமிழர் வரலாறு.
- சுப்பிரமணிய சாஸ்திரி, பி.எஸ் சங்கநூல்களும் வைதிக மார்க்கமும்.
- சேக்கிழார், பெரியபுராணம்.
- திருஞானசம்பந்தர் தேவாரம், 1, 2, 3.
- திருநாவுக்கரசர் தேவாரம், 4, 5, 6.
- திருமூலர், திருமந்திரம்.
- நெடுஞ்செழியன். க, சங்ககாலத் தமிழர் சமயம்.
- மணி, பெ.சு, சிவஞானசித்தியார்.
- மறைமலை அடிகள், தமிழர்மதம்.
- மனு, மனுதருமம்.
- மாதவச் சிவஞானமுனிவர், சிவஞானமாபாடியம்.
- வித்தியாரண்யர், சர்வதரிசன சங்கிரகம்.
- வீரமணி, சி. கபாலிகம்.
- வேங்கடசாமி, மயிலை, சீனி, மகேந்திரவர்மன்.
- Bhatacharya. B, Saivism and Phallic World.
- Dasgupta.S.N, History of Indian Philosophy - Vol.V.
- Debiprasath Chattopadyaya, Lokayata. Debiprasath Chattopadyaya, Indian Athiesm.
- Debiprasath Chattopadyaya, What is Living and Dead in Indian Philosophy.
- George Ryley Scott, Phallic Worship.
- Lorenzen David. N, Kapalikas and Kalamukas.
- Narayana Samy Ayyar, C.N, Origin and Early History of Saivism in south .
  India Wall, O.A..
  Sex and Sex Worship - Phallic Worship




# ஆயிரமாவது ஆண்டு நினைவு நாளை நோக்கி வீரமாதேவி

மு. ராஜேந்திரன்.

இந்தியாவை ஆண்டவர்களின் கால அளவை ஒப்பீடு செய்து பார்க்கும்போது, மௌரியர்கள் 137 ஆண்டுகளும் (கி.மு. 322-185), குப்தர்கள் 223 வருடங்களும் (கி.பி. 320-543), பல்லவ பேரரசு 325 ஆண்டுகளும் (கி.பி. 575-900), விஜயநகரப் பேரரசு 340 வருடங்களும் (கி.பி. 1336-1676), ஆண்டுள்ளனர். வந்தவாசிப் போரில் பிரெஞ்சுக்காரர்களை வெற்றியடைந்து நாடாளத் தகுதி பெற்ற காலத்திலிருந்து (கி.பி. 1760) இந்தியாவிற்குச்சுதந்திரம் கிடைத்தவரை (கி.பி. 1947) ஏறக்குறைய 187 வருடங்கள் ஆங்கிலேயர்கள் ஆட்சி செய்துள்ளனர்.

இந்திய வரலாற்றில் பிற்கால சோழப் பேரரசு மட்டுமே தொடர்ச்சியாக 430 ஆண்டுகள் (கி.பி. 850 முதல் 1280 வரை) ஆண்டு சாதனை புரிந்துள்ளது.

சோழர் காலத்தில் நிலையான ஒரு பேரரசு உருவாகியிருந்தது. தமிழகத்தின் மொத்த வரலாற்றையும் திரும்பிப் பார்த்தோமேயானால், சோழப் பேரரசு பழங்காலத்தின் முடிவாகவும், இடைக்காலத்தின் தொடக்கமாகவும் இருப்பதை அறிய முடியும். பழங்குடிகளும், இனக்குழுக்களும் வெவ்வேறு விதமான வாழ்க்கை முறையை மேற்கொள்ளத் தொடங்கிய காலகட்டம். இனக்குழு மக்கள் ஓரிடத்தில் நிலைத்து, வாழத் துவங்கியதன் காரணமாக, சிறு சிறு நிலப்பகுதிகள் இணைந்து, ஒரு பெரும் நிலப்பகுதியாகச் சோழப் பேரரசு உருவாகியது.



சோழப்பேரரசு 430 ஆண்டுகள் அமைதியான முறையில் ஆண்டது. வளர்ச்சிப் பணிகளான கோயில் கட்டுமானம், ஏரிகள் வெட்டுதல், இந்து சமயம், சமண மற்றும் வைணவ சமய வளர்ச்சி, நிலத்தை முதன் முறையாக அளத்தல், பஞ்சாயத்து ஆட்சிமுறை அறிமுகம், நீதி பரிபாலனம், நுண்கலைகளில் ஆர்வம், மக்களின் மனம் அறிந்து ஆட்சிசெய்தல் போன்ற ஆட்சிமுறைகளால் சோழர் ஆட்சி அதிக காலம் நீடித்தது.

விஜயாலய சோழன் துவங்கி 3ஆம் ராஜேந்திரன் வரை 15க்கும் மேற்பட்ட சோழ மன்னர்கள், 430 நீண்ட காலத்தை ஆண்டனர். தம் ஆட்சிக்குட்பட்ட பகுதியை, முறையான நிர்வாகப் பகுதியாகப் பிரித்தல், செங்கல் கோயில்களை மாற்றி கற்றளிகளாகக் கட்டுவித்தல், பஞ்சாயத்து தேர்தல் முறை, வரிவழியில் முறையாகப் பின்பற்ற வேண்டிய முறைகள் போன்ற இன்றும் நடைமுறையில் உள்ள ஆட்சி நிர்வாக முறைக்கு, சில சோழ மன்னர்கள் புகழ் பெற்றிருந்தாலும், சோழ ஆட்சியின் பொற்காலமாக ராஜராஜனின் ஆட்சிக்காலம் இருந்துள்ளது. மன்னர்களின் மன்னனாக ராஜராஜன் கொண்டாடப்படுகிறான். ராஜராஜனின் இலக்கிய ஆர்வம், கட்டிடக்கலை, சைவத் தொண்டு, பிற மத சகிப்புத்தன்மை போன்ற ஆட்சிப் பணிகள் பெரிதும் வரலாற்று ஆட்சியாளர்களால் கவனிப்புக்குள்ளாகியுள்ளன.

சமீப கால ஆய்வுகளின்படி. ராஜராஜனுக்கு இணையாக அல்லது சில காரணங்களால் ராஜராஜனை விட ராஜேந்திரன்



திருவண்ணாமலை மாவட்டத்தில் இந்திய ஆட்சிப் பணித்துறையராகப் பணியாற்றியவர். இலக்கியம், வரலாறு எனப் பலதுறைகளில் ஈடுபாடுடையவர்.

மிகச் சிறந்த ஆட்சியாளனாக இருந்திருப்பது தெரியவருகிறது. ராஜராஜனின் பல வெற்றிகளுக்கு ராஜேந்திரனே காரணம். அவனே ராஜராஜனின் படைத்தளபதியாக இருந்து வெற்றிகளைக் குவித்துள்ளான். நிலையான அரசுக்கு அடிப்படையான பரந்து விரிந்த பேரரசை நிறுவியதில் ராஜேந்திரனின் பங்கு அளப்பறியது. தகுதிமிக்க தந்தையின் புகழ் வெளிச்சத்தில் மகனின் சிறப்புகள் சில நேரங்களில் எடுபடாமல் போவதுண்டு. அந்த வகையில் ராஜேந்திரனுக்கும் இந்த வரலாற்றுப்பிழை நேர்ந்துவிட்டது.

தன் தந்தையுடன் சேர்ந்து உருவாக்கிய சோழப் பேரரசை நிலைப்படுத்தி, தன் ஆட்சிக்காலத்தில் பெரும் போர்கள் இல்லாமல் அமைதியான ஆட்சி முறையை வழங்கியவன் ராஜேந்திர சோழன்.

வரலாற்று ஆசிரியர் கே.ஏ. நீலகண்ட சாஸ்திரி, ராஜேந்திர சோழனைப் பற்றிக் கூறும்போது இந்து அரசர்கள் ஆண்ட நாடுகளிலேயே சோழ தேசத்தைத் தலைசிறந்த ஒன்றாகவும், மலேயாத் தீபகற்பத்தையும், கீழைக் கடற்கரைப் பகுதிகளையும் உள்ளிட்ட மிகப்பரந்த நாடாகவும் மாற்றி சோழப்பேரரசை ராஜேந்திர சோழன் அமைத்தான் எனக் குறிப்பிடுகிறார்.

ராஜராஜன் ஆட்சிக் காலத்தில் (985-1014) மதுராந்தகன் என்ற பெயரில் தளபதியாகவும், பின்னர் 1012 முதல் 1014 வரை 2 ஆண்டுகள் இளவரசனாகவும் இருந்த ராஜேந்திர சோழன், தனது முதல் 13ஆம் ஆட்சி ஆண்டுகள் வரை (கி.பி. 1027) பல போர்களை நேரடியாகவும், தனது தளபதிகள் மூலமும் நடத்திக்காட்டியவன். தனது ஆட்சிக்காலத்தில் இறுதி 17 ஆண்டுகள் எந்தப் போரிலும் ஈடுபடாமல் அமைதி வாழ்க்கையை மக்களுக்கு அளித்தவன்.

ராஜேந்திர சோழனது வாழ்க்கை வரலாற்றை த்திருவாலங்காடு செப்பேடுகள் மூலமும், பல்வேறு கோயில் கல்வெட்டுகள் மூலமும் அறியலாம். ராஜேந்திரனின் தோற்றம் குறித்து இவனது 6வது ஆட்சியாண்டில் வெளியிடப்பட்ட (கி.பி. 1020) திருவாலங்காடு செப்பேடு கூறுகையில், மதுராந்தகன் என்ற இயற்பெயர் கொண்டவன். மன்மதன் போன்ற அழகுடையவன் என்று கூறுகிறது. மேலும் பல போர்கள் மூலம் செல்வத்தைச் சேர்த்தவன். மதுரையை ஆண்ட பாண்டியனைத் தாக்கி மலைநாட்டிற்கு விரட்டியவன். பாண்டியனின் முத்துமாலையை த்தனது பாட்டனாராகிய பராந்தகச் சோழன் காலத்திலிருந்து, தேடியும் கிடைக்காததை, ஈழமண்ணில் கண்டெடுத்தவன். சாளுக்கியர்களை வென்றவன் என்று குறிப்பிடுகிறது. கல்வி, கேள்வி, கலைகளில் சிறந்தவன் என்பதால் மற்ற எந்த சோழப்பேரரசனுக்கும் தரப்படாத பண்டித சோழன் என்ற சிறப்புப் பெயரைப் பெற்றவன். இவனுக்கென்று மட்டுமே உள்ள மற்ற சிறப்புப் பெயர்கள் கங்கைக் கொண்டான் மற்றும் கடாரம் கொண்டான்.

முடிகொண்டான் என்ற சிறப்புப் பெயரும் இவனுக்கு உண்டு. ராஜேந்திரனின் பாட்டன் பராந்தக சோழனிடம் தோற்ற பாண்டிய மன்னன் இராஜசிம்மன், தனது மணிமுடியை ஈழ நாட்டில் சிங்கள மன்னன் துப்புலனிடம் அடைக்கலமாகக் கொடுத்து வைத்திருந்தான். பாண்டிய நாட்டை வென்ற பராந்தகன் மதுரையில் முடிசூட்டிக் கொண்டபோது அங்கு பாண்டியர்களுக்குரிய

முடியும் பிற அரசு சின்னங்களும் இல்லாததைக் கண்டான். அவைகள் இருக்கும் இடம் சிங்களநாடு என அறிந்து இலங்கைக்குப் படையை பராந்தகன் அனுப்பினான். ஆனால் ஈழ மன்னன் காடுகளில் மறைத்து வைத்ததால் அவற்றை எடுத்து வரமுடியவில்லை. பராந்தகனுக்குப் பின் அரிஞ்சயன், சுந்தரசோழன், உத்தமசோழன், ராஜராஜன் என்று ஏறக்குறைய 80 ஆண்டுகள் ராஜேந்திரனின் முன்னோர்கள் முயன்றும், ஈழத்தின் மீது படையெடுத்தும் பாண்டியனின் இந்திர ஆரமும், முடியும் கைப்பற்ற முடியவில்லை. அதை ராஜேந்திரன் ஈழத்திற்குப் படையெடுத்து கைப்பற்றியதால், முடிகொண்டான் என்ற சிறப்புப் பெயர் மெய்கீர்த்தியாக கல்வெட்டுகளில் குறிக்கப்பட்டது.

ராஜேந்திர சோழன் கி.பி. 1012இலிருந்து 1014 வரை 2 ஆண்டுகள் தனது தகப்பனும் பேரரசனுமான ராஜராஜனுக்கு இளவரசனாகவும், 1014இல் பேரரசன் இறப்புக்குப்பின், பேரரசனாகவும் ஆனவன். இவனது பிறந்த வருடம் மட்டும் சரியாகத் தெரியவில்லை. ஆனால் ராஜேந்திரன் கி.பி. 1012ஆம் ஆண்டு தனது 52ஆவது வயதில் இளவரசனாகப் பட்டம் சூடியதைக் கல்வெட்டுகள் கூறுகின்றன. இச்செய்தியின் அடிப்படையில் ராஜேந்திரன் பிறந்த ஆண்டு கி.பி. 960ஆக இருக்கலாம். பிறந்தது மார்கழி மாதம் திருவாதிரை நட்சத்திரம். இறந்த வருடம் கி.பி. 1044. இறந்த இடம் திருவண்ணாமலை மாவட்டத்திலுள்ள பிரம்மதேசம்.

திருவண்ணாமலை மற்றும் சிதம்பரம் கோயில்களில் ராஜராஜன் மற்றும் ராஜேந்திரனின் கல்வெட்டுகள் இல்லை என்று சிறிது காலம் முன்பு வரை நம்பப்பட்டது. ராஜராஜன் கல்வெட்டு ஒன்று கூட சிதம்பரத்தில் இல்லை. இத்திருக்கோயிலில் இருந்துதான் ராஜராஜன், நம்பியாண்டார் நம்பி உதவியுடன் சமய இலக்கியங்களை மீட்டதாகத் தெரிகிறது. சிதம்பரம் நடராஜரைத் தனது குலதெய்வமாகக் கொண்டவன். ஆனால் இந்தக் கோயிலில் ராஜராஜனின் கல்வெட்டு ஒன்று கூட இல்லை என்பது ஆச்சரியமே. சோழ மன்னர்கள் அநேகமாக சிவ பக்தர்கள். சோழர் காலத்தில் சிவமதம் அரசு மதம் போலவே இருந்ததாக வரலாற்று ஆசிரியர்கள் கூறுகிறார்கள்.

திருவண்ணாமலையில் ராஜராஜனின் காலத்திய கல்வெட்டு ஒன்றும் ராஜேந்திரன் காலத்திய கல்வெட்டு ஒன்றும் தற்போது கண்டுபிடிக்கப்பட்டுள்ளன. 2010ஆம் ஆண்டு ஜூன் மாதம் திருவண்ணாமலை மாவட்ட ஆட்சியராகிய நானும், தொல்பொருள் ஆய்வுத்துறை முதன்மை ஆணையரும், தொல்பொருள் ஆய்வுத்துறையின் ஆற்காடு பகுதிப் பொறுப்பாளர் கலைவாணனும், கோயிலில் உள்ள கல்வெட்டுகளைப் புத்தகமாக வெளியிடலாம் என்று ஆய்வு செய்தோம். அப்போது கோயிலில் வழிபாடு செய்யவந்த ஒருவர், அந்த இடத்தில் தரையில் கல்வெட்டு மாதிரி ஒன்று கிடக்கிறது என்று என்னிடம் ஓர் இடத்தை கைகாட்டிச் சொன்னார். நாங்கள் சென்று பார்த்தபோது கோயில் ஸ்தல விருட்சமான மகிழமரத்திற்கு அருகில், நடைபாதையில் கிடந்த கல்வெட்டைப் படித்துப் பார்த்து அதிசயித்தோம். அதில் ராஜேந்திர சோழனது மெய்க்கீர்த்தியை வீரமாதேவி கல்வெட்டில் பொறித்துள்ளது கண்டுபிடிக்கப் பட்டது.

ராஜேந்திர சோழன் கி.பி. 1012லிருந்து 1014 வரை 2 ஆண்டுகள் தனது தகப்பனும் பேரரசனுமான ராஜராஜனுக்கு இளவரசனாகவும். 1014இல் பேரரசன் இறப்புக்குப்பின், பேரரசனாகவும் ஆனவன். இவனது பிறந்த வருடம் மட்டும் சரியாகத் தெரியவில்லை. ஆனால் ராஜேந்திரன் கி.பி. 1012ஆம் ஆண்டு தனது 52ஆவது வயதில் இளவரசனாகப் பட்டம் சூடியதைக் கல்வெட்டுகள் கூறுகின்றன.

ராஜேந்திர சோழனுக்குத் திரிபுவன மகாதேவியார், முக்கோக்கிழான் அடிகள், பஞ்சவன் மகாதேவியார் என்ற பட்டத்து அரசிகளும், வீரமாதேவியார் என்ற மனைவியும் இருந்ததாகக் கருதப்படுகிறது. பரவை நாச்சியார் என்ற பெண்ணும் அரசனது அன்பிற்குரியவளாகக் கல்வெட்டில் செய்தி உள்ளது. மக்கட் செல்வங்களாக ராஜாதிராஜன், ராஜேந்திர சோழன், வீரராஜேந்திர சோழன் என்ற மகன்களும் அருண்மொழி, அம்மங்காதேவி என்ற மகள்களும் இருந்துள்ளார்கள்.



வீரமாதேவி அரசக் குடும்பத்தைச் சாராதவள். சோழப் பெரும்படையின் சேனாபதி மதுராந்தகன் பரகேசரிவேளார் என்பவனின் சகோதரியாக அறியப்படுகிறாள். ராஜேந்திர சோழன் தன் ஆட்சிக் காலத்தின் முதல் 13 ஆண்டுகளைப் போர் புரிவதிலும், தன் பேரரசின் எல்லையைத் தக்கவைத்து, எதிரிகள் தலையெடுக்காதவாறு போர் புரிவதிலும் ஆர்வம் காட்டியுள்ளான். பின்னர் கழிந்த 17 ஆட்சி ஆண்டுகளில் சோழ மக்கள் அமைதியான வாழ்க்கை வாழ, போரற்ற ஒரு வாழ்வை விரும்பியுள்ளான். 52 வயது வரை இளவரசு பட்டம் கூட கிடைக்காமல், மனம் வருந்தி இருந்த ராஜேந்திரன், தான் பேரரசன் ஆன நான்கு ஆண்டுகளிலேயே தன் மகன் முதலாம் ராஜாதிராஜனை இளவரசனாக்கி ஆட்சியதிகாரத்தில் பங்கு கொடுத்தான். தன் தந்தை ராஜராஜன் தஞ்சைப் பெரிய கோயிலை எழுப்பியது போல், தன் பெயர் சொல்ல, தனக்கென கங்கை கொண்ட சோழீஸ்வரர் கோயிலைக் கட்டினான். தன் ஆட்சியில் சோழப் பேரரசின் தலைநகராக கங்கை கொண்ட சோழபுரத்தை உருவாக்கினான். சோழப் பேரரசின் இறுதிவரை கங்கை கொண்ட சோழபுரமே தலைநகராக இருந்தது.

பேரரசன் ராஜேந்திரனின் வாழ்வின் இறுதி மூன்றாண்டுகள், திருவண்ணாமலை மாவட்டத்தில் உள்ள பாலாற்றங்கரையிலும், கூழமந்தல், பிரம்மதேயம் என்றழைக்கப்பட்ட பிரம்மதேசம் உள்ளிட்ட ஊர்களிலும் கழிந்திருக்கின்றன. பிரம்மதேசத்தில் பிறந்து வளர்ந்தவளே வீரமாதேவி. இந்த மூன்றாண்டுகளில் ராஜேந்திரன் வீரமாதேவியுடன் பிரம்மதேசத்தில் தங்கியிருந்திருக்கின்றான். கி.பி. 1044ஆம் ஆண்டு ராஜேந்திரச் சோழன் இறந்த போது அவனுடன் உடன்கட்டை ஏறியவள் வீரமாதேவி.

ராஜேந்திரனின் பட்டத்து அரசிகள் இருக்க, வீரமாதேவி உடன்கட்டை ஏறியது ராஜேந்திரன் மீது கொண்ட பேரன்பால் இருக்கலாம். போரில் ஈடுபடுவது மட்டுமல்ல, அன்பிற்காக உயிரைக் கொடுப்பதும் வீரமே என்பது தமிழர்களின் வாழ்வில் அறமாக இருந்துள்ளதற்கு வீரமாதேவியின் உடன்கட்டையும் ஓர் உதாரணம்.

வீரமாதேவி உடன்கட்டை ஏறிய பிரம்மதேசத்தில் அவளது சகோதரன், மதுராந்தகன் பரகேசரி வேளார் என்ற சோழர் தளபதி, நெருப்பில் குதித்த தனது சகோதரிக்கும், பேரரசனுக்கும் மறுமையில் தாகம் தீர்க்க தண்ணீர் பந்தல் ஒன்று அமைத்துள்ளான். அவ்வூர் புளியமரத்தின் அடியில் நடந்த கிராமக் கூட்டத்தில் இதற்கான ஒப்புதல் பெற்றுள்ளான். பின்பு அங்கு ராஜேந்திர சோழனுடையப் பள்ளிப்படை சந்திரமௌலிஸ்வரர் கோயில் என்ற பெயரில் எழுப்பப்பட்டது. அவ்விடத்தில் ராஜேந்திரனின் பள்ளிப்படை எங்குள்ளது என்பதில் வரலாற்றாசிரியர்களுக்கு இடையில் இன்றும் மாற்றுக் கருத்துகள் உள்ளன.

சோழர் வரலாற்றில், வீரமாதேவியின் அதிர்ச்சியூட்டும் மரணத்திற்கு 74 ஆண்டுகளுக்கு முன்பு, கி.பி. 970ஆம் ஆண்டு ராஜராஜனின் தாயார் வானவன்மாதேவி, தன் கணவன் பேரரசன்

சுந்தரசோழனோடு தன் சொந்த ஊரான திருக்கோயிலூரில் உடன்கட்டை ஏறியுள்ளார்.

ராஜேந்திரசோழனின் பாட்டி வானவன்மாதேவி தனது சொந்த ஊரான திருக்கோயிலூரில் அரசன் சுந்தரசோழனுடன் உடன்கட்டை ஏறியதுபோல வீரமாதேவியும் தனது சொந்த ஊரான பிரம்மதேசத்தில் பேரரசன் ராஜேந்திர சோழனோடு உடன்கட்டை ஏறியுள்ளாள். தனது ஊருக்கு அருகிலுள்ள திருவண்ணாமலைக் கோயிலில் தனது கணவனும் பேரரசனுமான ராஜேந்திர சோழனின் மெய்கீர்த்தியை வீரமாதேவி பொரிக்கச் செய்துள்ளாள்.

திருவாரூர் கோவிலில், ராஜேந்திரசோழனுக்குப் பின் ஆட்சிக்கு வந்த ராஜாதிராஜனின் ஆட்சிக் காலத்தில், வீரமாதேவியைப் பற்றிய சில குறிப்புகள் கிடைக்கின்றன. ராஜேந்திர சோழனின் அணுக்கியாக (காதலி) கருதப்படும் பரவை நங்கை பேரரசனிடம் அனுமதி பெற்று திருவாரூர் கோயில் கர்ப்பகிரகம் செங்கல் கட்டிடமாக இருந்ததை எடுத்துவிட்டு கற்றளியாக மாற்றியவள். இத்தகைய மிகப்பெரிய சிவத்தொண்டிற்காகவும், பரவை நங்கை மீது தான் கொண்ட அன்பை வெளிக்காட்டவும், பரவை நங்கையைக் கி.பி. 1030ஆம் ஆண்டு நடந்த திருவாரூர் கும்பாபிசேகத்தின்போது ராஜேந்திரசோழன் தன்னுடன் சரிசமமாகத் திருவாரூர் தேரில் ஏற்றிச்சென்றான். அரசன் மட்டும் உற்சவருக்கு இணையாக திருவாரூர் தேரில் ஏறலாம் என்பது மரபு. பரவை நங்கையை தேரில் அழைத்துச் சென்றது மரபை மீறிய செயல் என்று தெரிந்தும், தன் அன்புக்குமுன் அது முக்கியமில்லை எனக் கருதி தேரில் ஏற்றிச்சென்றது மட்டுமல்லாமல் கல்வெட்டிலும் இச்செய்தியைப் பொரித்தான் பேரரசன். அத்தகைய பெருமைபெற்ற பரவை நங்கையால் பெரிதும் மதிக்கப்பட்டவள் வீரமாதேவி.

வீரமாதேவி, பேரரசனுடன் சேர்ந்து மறைந்தபோது, அடுத்த ஆண்டில் (கி.பி. 1045) பரவை நங்கை தஞ்சையை அப்போது ஆண்ட பேரரசன் ராஜாதிராஜனின் அனுமதியோடு திருவாரூர் கோயிலில் இராஜேந்திர சோழன் வீரமாதேவி திருமண்டபத்தை திருவாரூர் ஆலயத்தில் கட்டினாள். பரவை நங்கைக்கும், வீரமாதேவிக்கும் தான் மகனாகப் பிறக்கவில்லை என்றாலும், அவர்களையும் தன் தாய்போல கருதினான் ராஜாதிராஜன். ஆகவே திருவாரூர் கோயிலில் பரவை நங்கைக்கும், ராஜேந்திர சோழனுக்கும் வீரமாதேவிக்கும் செப்புத் திருமேனிகள் எழுப்புவித்தான். நாள்தோறும் வழிபாடு செய்ய நிவந்தங்களும் ஏற்படுத்தினான்.

ராஜாதிராஜனின் இறப்புக்குப் பின் (கி.பி. 1054) ஆட்சிக்கு வந்த அவனது தம்பி ராஜேந்திரதேவன் தனது 9வது ஆட்சி ஆண்டில் (கி.பி. 1060) பரவை நங்கை, வீரமாதேவி மற்றும் ராஜேந்திர சோழன் ஆகிய மூவருக்கும் விழுப்புரத்திற்கு வடமேற்கிலுள்ள பனையவரம் கிராமத்தில் பரவை நங்கை பெயரிலுள்ள பரவை ஈஸ்வரமுடையார் கோயிலில் திருமேனிகளைப் பிரதிஷ்டை செய்துள்ளான்.

பழைய வட ஆற்காடுப் பகுதி கோயில்களில் குறிப்பாக தாமரைப்பாக்கம், கூழமந்தை (கி.பி. 1034), திரிப்பாசூர் (கடம்பத்தூர் அருகில்) திரிமுக்கூடல், திருமலை குந்தவை ஷீனாலயம், (கி.பி. 1016), மேல்பாடி, (கி.பி. 1014) ஆகியவற்றில் கிடைக்கும் கல்வெட்டுகளை ஆராயும் போது

வீரமாதேவி இறந்து 967 ஆண்டுகள் நிறைவு பெறுகின்றன. இன்னும் 33 ஆண்டுகளில் வீரமாதேவி இறந்து 1000 ஆண்டுகள் நிறைவு பெற இருக்கிறது. வெற்றிகளின் மூலம் தன் வாழ்வை பேச வைப்பவர் பலர் தான் விரும்பியவன் இல்லாத வாழ்வைத் தன்னால் தொடர இயலாது என வாழ்வின் முன் தோற்று நின்ற வீரமாதேவியின் தோல்வி, 1000 ஆண்டுகள் கடந்தும் நம்மை பேச வைக்கிறது.

ராஜேந்திரன் தனது கடைசி 3 ஆண்டுகளில் இந்தப்பகுதியில் வீரமாதேவியோடு வாழ்ந்திருக்கலாம் எனத் தெரிகிறது.

கடந்துபோன வரலாறு எண்ணற்ற மனிதர்களை, அவர்களின் வெற்றி, தோல்விகளைச் சிறுபுள்ளியாக்கி செறித்து நிற்கும், பல வரலாற்று நாயகர்கள், நாயகிகள் வரலாற்றின் பக்கங்களில் சிறு புள்ளியாகக் கூட அறியப்படாமல், மறைந்து போயிருக்கிறார்கள். வீரமாதேவி இதுவரை கொண்டாடப்படாத, அறியப்படாத வரலாற்று நாயகி. ராஜேந்திரனின் மேல் கொண்ட பேரன்பிற்காகத் தன்னை மாய்த்துக் கொண்டவள் மட்டுமல்ல, ஒரு பேரரசனின் மரணத்தையே இரண்டாம் இடத்திற்குத் தள்ளி, தன் மரணத்தின் மூலம் சோழப் பேரரசின் மூச்சானவள்.

செங்குந்தர் குலப்பெண்ணான வீரமாதேவி, ராஜேந்திர சோழனை அன்பால் கரைத்தது மட்டுமல்லாமல், அன்பிற்காகத் தன்னையே பாலாற்றங்கரையினில் கரைத்துக் கொண்டவள்.

வீரமாதேவி இறந்து 967 ஆண்டுகள் நிறைவு பெறுகின்றன. இன்னும் 33 ஆண்டுகளில் வீரமாதேவி இறந்து 1000 ஆண்டுகள் நிறைவு பெற இருக்கிறது. வெற்றிகளின் மூலம் தன் வாழ்வை பேச வைப்பவர் பலர் தான் விரும்பியவன் இல்லாத வாழ்வைத் தன்னால் தொடர இயலாது என வாழ்வின் முன் தோற்று நின்ற வீரமாதேவியின் தோல்வி, 1000 ஆண்டுகள் கடந்தும் நம்மை பேச வைக்கிறது.

நினைவிடங்களுக்கும், சாலைகளுக்கும் தலைவர்களின் பெயர்களை வைத்தல் ஒரு விதத்தில், இளைய தலைமுறை வரலாற்றை நினைவு கூறச் செய்வதற்கான முயற்சியே. அவ்வகையில், செய்யாறு பிரம்மதேசத்திற்கு இடையில் 11 கோடி ரூபாய் செலவில் கட்டப்படவுள்ள மேம்பாலத்திற்கு வீரமாதேவி ராஜேந்திர சோழன் பெயர்சூட்ட அரசிடம் அனுமதி கேட்டு மாவட்ட ஆட்சியர் என்ற முறையில் நான் கடிதம் எழுதியுள்ளேன். வரலாற்று நாயகியின் வரலாற்றைச் சொல்ல.

**துணைநூற்பட்டியல்**


1. South Indian Inscriptions, Volume - II

2. அருண்மொழி, தமிழ்நாடு அரசு தொல்லியல் துறை வெளியீடு

3. Annual Reports on Indian Epigraphy, 1945

4. 'மேல்பாடி' தொல்லியல் துறை வெளியீடு

5. உலகமகா சக்கரவர்த்தி ராஜேந்திர சோழன். கவிஞர் கு.ம. கிருஷ்ணன்

6. மெய்க்கீர்த்திகள் பூ. சுப்பிரமணியம், உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்

7. Middle Chola Temples, S.R. Balasubramaniyam

8. "வந்தவாசிப்போர் 250" - டாக்டர் மு. ராஜேந்திரன். இ.ஆப மற்றும் கவிஞர் அ. வெண்ணிலா

9. 'The Cholas' - K.A. Neelakanda Sastri

# தமிழ்நாட்டின் தொடக்ககாலக் காலனிய ஆட்சியின் ஆவணங்கள்

ஆ. சிவசுப்பிரமணியன்

தமிழ்நாட்டில் காலனிய ஆட்சி எனும்போது, நம் உள்ளத்தில் பளிச்சிடுவது கிழக்கிந்தியக் கம்பெனியும் அதனையடுத்து வந்த ஆங்கில ஆட்சியும்தான். ஆங்கிலக் காலக் காலனியம் தமிழ்நாட்டில் ஆதிக்கம் செலுத்தத் தொடங்கிய காலத்தில்தான் புதுச்சேரி, காரைக்கால் பகுதிகளில் பிரெஞ்சுக் காலனியம் வேரூன்றியது. ஆனால் இவ்விரண்டு காலனியவாதிகளின் வருகைக்கு முன்பே தமிழ்நாட்டின் கடற்கரைப் பகுதிகளில் பதினாறாம் நூற்றாண்டில் போர்ச்சுக்கல் ஆதிக்கம் நிலவியது. 17ஆம் நூற்றாண்டில் இப்பகுதிகளில் போர்ச்சுக்கீசியர்களை வெற்றி கொண்டு டச்சுக்காரர்கள் தம் ஆதிக்கத்தை நிலைநிறுத்தினர். இவ்வாறு ஆங்கிலேயர்கள், பிரெஞ்சுக்காரர்கள் ஆகியோர்க்கு முன்பே போர்ச்சுக்கீசியர்கள் மற்றும் டச்சுக்காரர்கள் தமிழ்நாட்டின் கடலோரப் பகுதிகளின் ஆட்சியாளர்களாக மாறினர். இவ்விரு நாட்டினரையும் இதன் அடிப்படையில், தமிழ்நாட்டின் தொடக்ககாலக் காலனியவாதிகள் என்றழைக்கலாம். இவர்கள் தம் தாய்மொழிகளில் தமிழ்நாட்டின் அரசியல் நிலை, வாணிபம், சமயம் ஆகியன குறித்த செய்திகளை ஆவணப் பதிவாக்கியுள்ளனர். இவையே தொடக்ககாலக் காலனிய ஆவணங்கள் ஆகும்.

## தமிழ்நாட்டில் போர்ச்சுக்கீசியர்

பதினாறாவது நூற்றாண்டில் அரேபியர்களின் கொடூரமான தாக்குதலுக்கு தென்மாவட்டக் கடற்கரைப் பகுதியில் வாழ்ந்து வந்த பரதவர்கள் ஆளாகினர். இதிலிருந்து தப்பிக்கும் வழிமுறையாகக் கொச்சியிலிருந்த போர்ச்சுக்கீசியத் தளபதியின் உதவியை நாடினர். பரதவர்கள் கத்தோலிக்கர்களாக மாறினால் உதவுவதாகச் சொன்னதன் அடிப்படையில் பரதவர்கள் மதம் மாறி போர்ச்சுக்கீசியரின் படை உதவியைப் பெற்றனர். இந்நிகழ்ச்சி நடந்த காலம் 1533ஆம் ஆண்டாகும். முத்துக்குளித்துறை என்றழைக்கப்பட்ட இக்கடற்கரைப் பகுதியில் கால்கொண்ட இவர்கள், இலங்கையிலிருந்து யானைகளையும் அரேபியாவிலிருந்து குதிரைகளையும் தூத்துக்குடித் துறைமுகத்தில் இறக்குமதி செய்து, மதுரை நாயக்க மன்னருக்கும் உள்நாட்டுச் சிற்றரசர்களுக்கும் விற்பனை செய்தனர். முத்துக்குளித்தலில் கிடைக்கும் முத்துக்களைச் சேகரித்து வெளிநாடுகளுக்கு அனுப்பினர். வெடி மருந்துக்கு மூலப்பொருளான வெடியுப்பை உள்நாட்டுப் பகுதியில் சேகரித்து அய்ரோப்பிய நாடுகளுக்கு விற்பனை செய்தனர்.

போப்பாண்டவரின் ஆதரவைப் பெற்றவர்கள் என்ற நிலையில், கத்தோலிக்க சமயத்தை இங்கு நிலைக்கச் செய்வதில் ஆர்வம் காட்டினர். இதன்பொருட்டு தம் நாட்டிலிருந்தும் பிரான்ஸ் இத்தாலிய நாடுகளிலிருந்தும் மதகுருக்களை வரவழைத்தனர். இவ்வகையில் வந்தவர்களில் பிரான்சிஸ் சேவியர், அண்டிரிக் அடிகளார் ஆகியோர் குறிப்பிடத்தக்கவர்கள். இவ்வாறு வாணிபம், சமயம் ஆகியனவற்றில் ஆதிக்கம் செலுத்திய இவர்கள் மதுரை நாயக்க மன்னர்களின் ஆட்சியதிகாரத்துக்குக் கட்டுப்படாதவர்களாக தம்மைப் படிப்படியாக ஆக்கிக் கொண்டனர்.

போர்ச்சுக்கீசிய ஆட்சியின்போது உருவான ஆவணங்களை (i) அரசியல் தொடர்பானவை (ii) வாணிபம் தொடர்பானவை (iii) சமயம் தொடர்பானவை என மூன்றாகப் பகுக்கலாம். முதலிரு வகை ஆவணங்கள் இன்றும் முழுமையாகப் பயன்படுத்தப்படவில்லை என்பதைவிட அது குறித்து அதிக அளவில் நமக்கு எதுவும் தெரியாது என்பதுதான் உண்மை. இதற்கான அடிப்படைக் காரணம் இவை போர்ச்சுக்கீசிய மொழியில் இருப்பதுதான். போர்ச்சுக்கல் நாட்டின் தலைநகரான லிஸ்பனில் மட்டுமே இவை



நா. வானமாமலையின் மாணவர். நாட்டார் வழக்காற்றியல் ஆய்வாளர். தமிழகத்தில் அடிமை முறை, பிள்ளையார் அரசியல், ஆஷ் கொலையும் புரட்சி இயக்கமும் போன்ற பல நூல்களை எழுதியுள்ளார்.

இடம்பெற்றுள்ளன என்பதை மற்றொரு காரணமாகக் குறிப்பிடலாம்.

**சமய ஆவணங்கள்**

போர்ச்சுக்கீசியர்களின் ஆதரவுடன் ராமேஸ்வரம் தொடங்கி கன்னியாகுமரி வரையிலான கடற்கரைப் பகுதியில் கத்தோலிக்கம் பரவி நிலைத்தது. இப்பகுதிகளில் சமயப் பணியாற்ற போர்ச்சுக்கீசிய நாட்டுக் குருக்களும் ரோமிலிருந்த சேசுசபை என்ற துறவியர் அமைப்பைச் சேர்ந்த பிரான்ஸ், இத்தாலி, ஸ்பெயின் ஆகிய நாடுகளைச் சேர்ந்த குருக்களும் அனுப்பி வைக்கப்பட்டனர். இவர்கள் தாம் வாழும் பகுதிகளில் தமக்கு ஏற்பட்ட அனுபவங்களையும் அப்பகுதிகளின் அரசியல் மற்றும் சமூக நிகழ்வுகளையும் கடிதங்கள், அறிக்கைகள், தனிப்பட்ட நாட்குறிப்புகளில் பதிவு செய்துள்ளனர். குறிப்பாக சேசு சபையினரின் ஆண்டு மடல்கள் இவற்றில் முக்கியமானவை.

விக்கி என்ற சேசுசபைத் துறவி இந்தியாவிலிருந்து சேசுசபையினர் எழுதிய கடிதங்களைத் தொகுத்து 'டாக்குமெண்டா இந்தியா' என்ற தலைப்பில் பதினாறு தொகுதிகளுக்கு மேல் வெளியிட்டுள்ளார். இத்தொகுப்பில் தமிழ்நாட்டிலிருந்து பதினாறாவது நூற்றாண்டில் எழுதப்பட்ட கடிதங்கள் இடம் பெற்றுள்ளன. இக்கடிதங்களுள் அவர்கள் பணிபுரிந்த காலத்தின் முக்கிய அரசியல் நிகழ்வுகளைப் பதிவுசெய்துள்ளனர். ஓர் அயற்பண்பாட்டினர் என்ற முறையில் ஆர்வத்துடன் இங்குள்ள வழிபாட்டு முறைகள், பழக்க வழக்கங்கள் ஆகியவற்றையும் பதிவு செய்துள்ளனர். ஓரளவுக்கு இவர்களின் இப்பதிவுகளில் அய்ரோப்பிய இனமையவாதச் சிந்தனை இடம்பெற்றிருக்க வாய்ப்புண்டு என்றாலும், இலக்கியம் தவிர எவ்வித எழுத்தாவணமும் கிட்டாத காலத்தைய சமூகத்தைப் புரிந்துகொள்ள இப்பதிவுகள் உதவும் தன்மையன.

சவேரியாரின் கடிதங்களில் பதினாறாவது நூற்றாண்டில், புன்னைக்காயல் என்ற கடற்கரைச் சிற்றூரில் மதுவிலக்கை அவர் நடைமுறைப்படுத்தியதும் அதை மீறும் ஆண்களுக்கும் பெண்களுக்கும் தண்டம் மற்றும் சிறைத்தண்டனை விதிக்கப்பட்டதும் இடம்பெற்றுள்ளன.

பெண்களைச் சிறைப்பிடித்து சிலகாலம் அவர்களை அனுபவித்துவிட்டு, பின்னர் அவர்களை விற்றுவிடும் செயலைப் போர்ச்சுக்கீசிய அதிகாரிகள் மேற்கொண்ட கொடுமை, அடிமைமுறை ஆகியனவற்றைச் சில கடிதங்கள் வெளிப்படுத்துகின்றன.

விசயநகரப் பேரரசிலிருந்து வந்த வித்தாலராயனின் படையெடுப்பும், அதனால்

விக்கி என்ற சேசு சபைத் துறவி இந்தியாவிலிருந்து சேசுசபையினர் எழுதிய கடிதங்களைத் தொகுத்து 'டாக்குமெண்டா இந்தியா' என்ற தலைப்பில் பதினாறு தொகுதிகளுக்கு மேல் வெளியிட்டுள்ளார். இத்தொகுப்பில் தமிழ்நாட்டிலிருந்து பதினாறாவது நூற்றாண்டில் எழுதப்பட்ட கடிதங்கள் இடம்பெற்றுள்ளன. இக்கடிதங்களுள் அவர்கள் பணிபுரிந்த காலத்தின் முக்கிய அரசியல் நிகழ்வுகளைப் பதிவுசெய்துள்ளனர்.

கடற்கரை மக்கள் பட்ட அவலமும் இக்கடிதங்களில் இடம்பெற்றுள்ளன.

**அரசு ஆவணங்கள்-**

போர்ச்சுக்கீசிய மொழியில் எழுதப்பட்ட அரசு ஆவணங்கள், முத்துக்குளித்தலில் அவர்கள் மேற்கொண்ட ஏகபோக உரிமைமுறை, முத்துக்குளிப்போரிடம் மிகவும் மோசமாக வரி வாங்கியமை, உள்நாட்டுச் சிற்றரசர்களுடனான அவர்களது மோதல், போர்ச்சுக்கீசிய ஆண்களுக்கும் தமிழ்ப் பெண்களுக்கும் ஏற்பட்ட உறவின் அடிப்படையில் உருவான 'கசாதுகள்' என்ற புதிய மக்கள் பிரிவு, ஏற்றுமதி, இறக்குமதி குறித்த வாணிபச் செய்திகள் ஆகியனவற்றைக் குறிப்பிடுகின்றன. இவற்றுள் ஒரு சில கோவாவில் உள்ள ஆவணக்காப்பகங்களிலும் பெரும்பாலானவை லிஸ்பன் நகரத்திலுள்ள ஆவணக்காப்பகங்களிலும் இடம்பெற்றுள்ளன.

**டச்சுக் காலனியம்:**

கி.பி. 1658இல் போர்ச்சுக்கீசியர்களிடமிருந்து தூத்துக்குடியைக் கைப்பற்றிய டச்சுக்காரர்கள் தம் வாணிப மற்றும் அரசியல் ஆதிக்கத்தைக் கடற்கரைப் பகுதியில் நிலைநிறுத்தினர். நாகப்பட்டிணம், பரங்கிப்பேட்டை, பழவேற்காடு, தூத்துக்குடி ஆகிய பகுதிகளில் தம் பண்டகச் சாலைகளை அமைத்துக் கொண்டனர். தமிழ்நாட்டிலிருந்து கச்சைத் துணிகளை வாங்கி அதை ஏற்றுமதி செய்தனர். இதன்பொருட்டு உள்நாட்டு நெசவாளர்களைத் தூத்துக்குடி நகருக்கு அழைத்து வந்து பட்டறை போன்ற அமைப்பை நிறுவி அவர்களனைவரும் ஒரே இடத்தில் பணிசெய்யச் செய்தனர்.

போர்ச்சுகீசியர்களை விட மோசமாக அடிமை வியாபாரத்திலும் ஈடுபட்டனர். இஸ்லாமியர்களுக்கும் இவர்களுக்கும் இடையே இணக்கமான உறவு நிலவவில்லை. சேதுபதி மன்னரின் ஆதரவுடன் பெரியதம்பி மரைக்காயர் என்பவர் டச்சுக்காரர்களுடன் மோதினார். இவையெல்லாம் டச்சு ஆட்சியில் நிகழ்ந்த முக்கிய நிகழ்வுகள். இந்நிகழ்வுகள் தொடர்பான செய்திகள் டச்சு மொழியில் எழுதப்பட்ட ஆவணங்களில் பதிவாகியுள்ளன.

**செய்ய வேண்டிய பணி**

மிகச் சுருக்கமாகக் கூறப்பட்டுள்ள மேற்கூறிய செய்திகள், தமிழகச் சமூக வரலாற்றுக்கான தரவுகள் ஆங்கில மொழியில் மட்டுமின்றி போர்ச்சுக்கீஸ், இத்தாலி, ஸ்பானிஷ் ஆகிய மொழிகளிலும் உள்ளதனை வெளிப்படுத்துகின்றன. இவற்றை ஆங்கிலம் அல்லது தமிழில் மொழிபெயர்த்துப் பயன்படுத்தும்போதுதான், முழுமையான தமிழக வரலாற்றை எழுத முடியும். ஆனால் நாடு விடுதலை பெற்று அறுபதாண்டுகளுக்கு மேலாகியும் இதுவரை இது தொடர்பான முயற்சியைத் தமிழக அரசும், தமிழகப் பல்கலைக் கழகங்களும் மேற்கொள்ளவில்லை. 'புதிய வரலாறு படைப்போம்' என்ற முழக்கம் மட்டும் அரசியல் மேடைகளில் அவ்வப்போது ஒலிக்கிறது.

தஞ்சையை ஆண்ட மராத்திய மன்னர்கள் அரசின் ரகசியத்தைக் காக்கும் வகையில் மோடி எழுத்து என்ற எழுத்து முறையைக் கையாண்டுள்ளனர். மோடி என்ற மராத்தி மொழிச்சொல் உடைத்தல் என்ற பொருளைத் தரும். மராத்தி எழுத்துக்களைச் சிதைத்து ஒரு

போர்ச்சுக்கீசிய மொழியில் எழுதப்பட்ட அரசு ஆவணங்கள், முத்துக்குளித்தலில் அவர்கள் மேற்கொண்ட ஏகபோக உரிமைமுறை, முத்துக்குளிப்போரிடம் மிகவும் மோசமாக வரி வாங்கியமை, உள்நாட்டுச் சிற்றரசர்களுடனான அவர்களது மோதல், போர்ச்சுக்கீசிய ஆண்களுக்கும் தமிழ்ப் பெண்களுக்கும் ஏற்பட்ட உறவின் அடிப்படையில் உருவான 'கசாதுகள்' என்ற புதிய மக்கள் பிரிவு, ஏற்றுமதி, இறக்குமதி குறித்த வாணிபச் செய்திகள் ஆகியனவற்றைக் குறிப்பிடுகின்றன.

புதிய எழுத்து முறையில் அரசு ஆவணங்களை எழுதியுள்ளனர். மராத்தியைத் தாய்மொழியாகக் கொண்டவர்களாலும் கூட மோடி எழுத்துக்களைப் படித்தறிய முடியாது. ஆனால் பல அரிய வரலாற்றுச் செய்திகள் மோடி எழுத்தில் எழுதப்பட்ட ஆவணங்களில் புதைந்துள்ளன. இதை வெளிப்படுத்த தமிழ்ப் பல்கலைக்கழகத்தின் துணைவேந்தர் வ.அய். சுப்பிரமணியன் முயன்றார். அதன் முதற்படியாக தஞ்சையில் வாழ்ந்து வந்த மராத்திய சமூகத்திலிருந்து சிலரைத் தேர்ந்தெடுத்து, அவர்களுக்கு உதவித்தொகை வழங்கி மோடி எழுத்துக்களைப் படித்தறியும் பயிற்சியை வழங்கினார்.

இது போன்றே தமிழ்நாட்டின் வரலாற்றில் ஆர்வமும் ஆற்றலும் கொண்ட வேலையில்லா ஆய்வு மாணவர்களைத் தேர்ந்தெடுத்து நல்ல உதவித்தொகை வழங்கி போர்ச்சுகீஸ், டச்சு மொழிகளைப் பயிலும்படிச் செய்ய வேண்டும். பின்னர் அவர்களை முழுநேரப் பணியாளர்களாக நியமித்து இவ்விரு மொழிகளிலும் உள்ள ஆவணங்களை மொழிபெயர்க்கச் செய்ய வேண்டும்.


CLASSIFIED CATALOGUE

OF

TAMIL PRINTED BOOKS,

WITH

INTRODUCTORY NOTICES.

COMPILED BY

JOHN MURDOCH.

MADRAS:

The Christian Vernacular Education Society.

1865.

தமிழின் முதல் நூற்றொகை, அதாவது அச்சில் வெளியான நூல்களைப் பற்றிய தொகுப்பு 1865 இல் ஜான் மர்டாக் தொகுத்து வெளியிட்ட Classified catalogue of Tamil printed books with indtroductory notices இன் முகப்புப் பக்கம்.

# ஐரோப்பிய தமிழ் அறிஞர்களின் தமிழ் இலக்கியப் பார்வை (1700-1920)

வெ. ராஜேஷ்

(தமிழில்: அசோகன் முத்துசாமி)

தமிழ் ஆய்வுகளுக்கு வெளிநாட்டு (குறிப்பாக ஐரோப்பிய) அறிஞர்களின் பங்களிப்பு குறித்து இக்கட்டுரையில் கவனம் செலுத்துகிறேன். தமிழ் அறிஞர்கள் என்கிற சொற்றொடரைத் தமிழுக்குப் பங்களிப்பு செய்த வெளிநாட்டு அறிஞர்களையும் உள்ளடக்கிய பரந்த பொருளிலேயே பயன்படுத்துகிறேன். தமிழைக் கற்பதற்காகவும், அதைப் பற்றி எழுதுவதற்காகவும் உண்மையாகவே முயற்சித்த சில ஆரம்பகால வெளிநாட்டவர்களிடமிருந்து நாம் தொடங்கலாம்.

டென்மார்க்கின் மன்னர் நான்காம் பிரெடிரிக்கால் (Frederick IV) தரங்கம்பாடியில் இருந்த டேனிஷ் குடியிருப்புகளில் வாழ்ந்த தனது குடிகளை லூதரன் மதப்பிரிவிற்கு மதம் மாற்றுவதற்காக அனுப்பப்பட்ட மதப் பிரச்சாரகர் சீகன்பால்கு (1682-1719) (Ziegenbalg). தரங்கம்பாடியின் கரைகளில் வந்திறங்கிய சீகன்பால்குவிற்கு மலபாரிகளின் மொழி தெரியாது. (தமிழர்கள் போர்த்துக்கீசியர்கள் மற்றும் இதர ஐரோப்பியர்களால் மலபாரிகள் என்றே தொடக்கத்தில் அழைக்கப்பட்டனர்).

அடுத்த இரண்டு வருடங்களுக்கு அவர் மலபாரி மொழியைக் கற்றுக் கொள்ள முயற்சிகள் மேற்கொண்டார். 1708இல் அவர் மலபாரிகளின் மிகக் கடினமான 112 நூல்களைப் படித்து முடித்தார். முதலில் அவர் இம்மண்ணின் தமிழ் ஆசிரியர் ஒருவரை நியமித்துக் கொண்டது போல் தெரிகின்றது; தமிழும் போர்த்துக்கீசிய மொழியும் தெரிந்த ஒரு மொழிபெயர்ப்பாளர் மூலம் அவர் தமிழ் கற்றுக்கொள்ளத் துவங்கினார்.

1708இல் அவர் ஐரோப்பாவிற்கு அனுப்பிய 'பிப்ளியோத்திகா மலபாரிகா' (Bibliotheca Malabarica) என்கிற மூலச் சிறப்பு மிக்க விவரப்பட்டியல் 18ஆம் நூற்றாண்டின் தொடக்க காலத் தமிழ் இலக்கியம் பற்றியும், தரங்கம்பாடியில் இருந்த அவரது சொந்த தமிழ் நூலகம் பற்றியும் சுவாரஸ்யமான ஒரு சித்திரத்தை வழங்குகின்றது. அந்த விவரப் பட்டியலை ஐரோப்பாவிற்கு அனுப்பிய பின்னரும் அவர் தமிழ் இலக்கியப் படைப்புகளின் கையெழுத்துப் பிரதிகளைத் தொடர்ந்து சேகரித்தார்.

சீகன்பால்கு எப்படித் தமிழ் கற்றுக் கொண்டார் என்பதை அவரே பின்வருமாறு கூறுகிறார்:

"....காலை ஏழு மணியிலிருந்து எட்டு மணி வரை நான் ஏற்கனவே எழுதி வைத்திருக்கும் மலபாரிச் சொற்களையும் சொற்றொடர்களையும் மீண்டும் மீண்டும் படிப்பேன். எட்டு மணியிலிருந்து பன்னிரண்டு மணி வரை நான் ஏற்கனவே படித்திராத சில மலபாரி நூல்களை ஒரு முதிய புலவரின் முன்னிலையிலும், என்னுடைய சொந்த மலபாரி படியெடுப்பவர் ஒருவர் முன்னிலையிலும் வாசிப்பேன். புலவர் கதைகளை எனக்கு விளக்க வேண்டும்; ஒரு குறிப்பிட்ட செய்யுள் கடினமாகவும், புரியாமலும் இருந்தால் அவர் அதையும் விளக்குவார். நான் முன்னர் வேறு எந்த ஒரு நூலிலும் படித்திராத சொற்கள் மற்றும் சொற்றொடர்கள் அனைத்தையும் படியெடுப்பவர் குறித்துக் கொள்ள வேண்டும். ஆரம்பத்தில் ஒரு மொழிபெயர்ப்பாளரை என்னுடன் வைத்திருந்தேன். ஆனால், அது இனியும் அவசியமாக இருக்கவில்லை.... மூன்றிலிருந்து ஐந்து மணி வரை மீண்டும் மலபாரி நூல்களைப் படிப்பேன். இந்த நேரத்தில் நான் எப்போதுமே ஒரேயொரு ஆசிரியரை மட்டும் தேர்வு செய்து அவரிடம் முறையாகக் கற்பேன்; அப்படிச் செய்து முடித்த பின்னர் மற்றொரு ஆசிரியரை வரவழைத்துக் கொண்டு மீண்டும் ஆரம்பத்திலிருந்து கற்பேன்.... செயற்கை ஒளியில் படிப்பது எனக்குச் சிரமமாக இருந்ததால் ஏழு மணியிலிருந்து எட்டு மணி



சென்னையிலுள்ள இந்திய தொழில்நுட்பக் கழகத்தில் (IIT) மானுடவியல் மற்றும் சமூகவியல் துறையில் முனைவர் பட்டம் பெற்றுள்ளார். பத்தொன்பதாம் நூற்றாண்டில் தமிழ்ச் செவ்வியல் இலக்கியப் பாடமீட்பு, அச்சுவழி மறு உருவாக்கம் குறித்த தமிழ்ச் சமூக வரலாற்றினை முனைவர் பட்ட ஆய்வேட்டில் ஆராய்ந்துள்ளார். இவர் எழுதிய கட்டுரைகளில் ஒன்று "The Making of Sangam Literary Canon and Tamil Identity", in R.Cheran, Darshan Ambalavanar and Chelva Kanaganayagam, (Eds), New Demarcations: Essays in Tamil Studies, Scholar's Press, Toronto, pp 133-147. தற்போது, சென்னையிலுள்ள இந்திய தொழில்நுட்பக் கழகத்தில் கௌரவப் பேராசிரியராக உள்ளார்.

வரையிலும் என்னுடைய தமிழ் படியெடுப்பவர்களில் ஒருவர் எனக்காக வாய்விட்டுப் படிப்பார். நான் என்னுடைய உரையில் அப்படியே திரும்பக் கூறுவதற்கு ஏற்ற, அப்படியே திரும்ப எழுதுவதற்கு ஏற்ற நடையில் எழுதப்பட்டுள்ள நூல்களை மட்டுமே எப்போதும் இந்த நேரத்தில் தேர்வு செய்வேன். சில சமயங்களில் நான் முழுமையாகக் கற்றிராத எந்த சொல்லும், சொற்றொடரும் இல்லை என்கிற நிலை வருகின்ற வரையில் என்னுடைய படியெடுப்பவரை ஒரே நூலை ஒரு நூறு முறைகள் படிக்கச் செய்வேன். இந்த மொழியில் ஒரு குறிப்பிட்ட அளவு நிலையான அறிவைப் பெறுவதற்கு இந்த முறை எனக்கு உதவியது...." (பிரிட்டிஷ் மியூசியம் காலாண்டிதழில் ஆல்பர்ட்டைன் கவுர் (Albertine Gaur) எழுதிய கட்டுரையிலிருந்து).

தமிழ் மொழியைக் கற்பதற்காகச் சீகன்பால்கு ஒரு திட்டவட்டமான நடைமுறையை ஒவ்வொரு நாளும் கடைப்பிடித்திருக்கிறார் என்பது இந்த மேற்கோளிலிருந்து தெரிகிறது. ஒரு உள்நாட்டுப் புலவரையும், ஒரு மொழிபெயர்ப்பாளரையும் அவர் நியமித்திருக்கிறார்; பின்னர் அவர்கள் அவசியமில்லை என்று கருதியிருக்கிறார்.

தொடக்கத்தில் தன்னால் நியமிக்கப்பட்ட படியெடுப்பவர் மூலம் சீகன்பால்கு தமிழ் இலக்கியப் படைப்புகளைப் பனை ஓலைகளில் ஒரு படியெடுத்திருக்கிறார் போல் தெரிகிறது. அது மிகக் கடினமான பணியாக இருந்ததால் படியெடுப்பதற்குப் பதிலாகத் தன்னுடைய அக்கம் பக்கத்தவரிடமிருந்து தமிழ் இலக்கியப் படைப்புகளை விலைக்கு வாங்குவது என்று தீர்மானித்திருக்கிறார். சீகன்பால்கு தங்களை லூதரன் மதத்திற்கு மாற்றுவதற்காகத்தான் வந்திருக்கிறார் என்பதைப் புரிந்துகொண்ட மக்கள் கையெழுத்துப் பிரதிகளைக் கொடுப்பதில்லை என்று தீர்மானித்தனர். அது குறித்துச் சீகன்பால்கு பின்வருமாறு புகார் கூறுகிறார்:

'வேறு மதத்தைச் சேர்ந்த அவர்களது மதத்தின் அபத்தத்தை நிரூபிக்க அவர்களது நூல்களையே நான் பயன்படுத்துகிறேன் என்பதைப் புரிந்து கொண்ட அவர்கள் தங்கள் நூல்கள் விஷயத்தில் சற்று அற்பத்தனமாக நடந்து கொண்டார்கள்; அந்த நூல்களை எனக்குத் தருவதைத் தவிர்த்தார்கள். நான் எப்பொழுதெல்லாம் நூல்களைக் கேட்கிறேனோ அப்போதெல்லாம் தங்களிடம் எதுவுமில்லை என்று பாசாங்கு செய்வதற்காக ஒவ்வொருவரும் தன்னுடைய நூல்களை நன்கு கட்டி, வெளியில் தெரியாத வண்ணம் நன்கு மறைத்து வைத்துவிட்டார்கள். எனினும், பணமும் கொஞ்சம் சாதுரியமும் இருந்தால் எவ்வளவு அரியதாக இருந்தாலும் அவர்களிடமிருந்து எதையும் வாங்கிவிடலாம்."

சீகன்பால்கு தமிழ் இலக்கியப் படைப்புகள் பலவற்றைச் சேகரித்தார்; அவைதான் 18ஆம் நூற்றாண்டின் ஆரம்பகாலத் தமிழ் நூலகமாக அமைந்தன. என்றபோதிலும், அவருடைய நூலகத்தின் நூல் விவரப் பட்டியலை விடுங்கள், தான் சேகரித்து வைத்திருந்த ஓலைச்சுவடிகளில் எதையும் அவர் ஐரோப்பாவிற்கு அனுப்பவில்லை.

ஜெர்மனியின் ஹால்லேயில் உள்ள பிராங்க்கே ஆவணக் காப்பகத்தில் இருந்த (Francke Foundation Archives) சீகன்பால்குவின் 'பிப்பிளியோத்திகா மலபாரிகா' (Bibliotheca Malabarica) கையெழுத்துப் பிரதியைப் பார்க்கும் அரிய வாய்ப்பு எனக்குக் கிடைத்தது. கையால் எழுதப்பட்டிருந்த அந்த குறிப்பேடு 1708ஆம் ஆண்டு எழுதப்பட்டிருந்தது.

**என்.இ. கின்டர்ஸ்லே** (Nathaniel Edward Kindersley) **மற்றும் ரெவ்.ஜான்** (Rev John)

18ஆம் நூற்றாண்டு இறுதியில் கிழக்கிந்திய கம்பெனியில் ஊழியராகப் பணியாற்றிய என்.இ. கின்டர்ஸ்லே தமிழ் மொழி, இலக்கியம் மற்றும் அதன் வரலாறு குறித்துக் கருத்துக் கூறிய ஆரம்ப கால ஆங்கிலேயர்களில் ஒருவர். 1794இல் அவர் Specimens of Hindoo Literature (இந்து இலக்கியத்தின் வகை மாதிரிகள்) என்கிற நூலை வெளியிட்டார்; திருக்குறளின் சில அதிகாரங்களை அதில் அவர் ஆங்கிலத்திற்கு மொழி பெயர்த்திருந்தார். கிழக்கிந்தியக் கம்பெனியின் இயக்குனர்கள் குழுவிற்கு அதைச் சமர்ப்பித்திருந்தார். அந்த நூல் நான்கு தலைப்புகளைக் கொண்டிருந்தது: 'இந்துக்களின் புராணங்கள், இலக்கியம் மற்றும் கலாச்சாரம் ஆகியவை பற்றிய அறிமுகக் குறிப்புகள்', 'திருவள்ளுவருடைய குறளின் அல்லது அறிவுக்கடலின் பகுதிகள்', 'நள ராஜாவின் வரலாறு: ஒரு இந்து வீரகாதை' மற்றும் 'கல்வெட்டுகள் குறித்த விளக்கம்'. இந்து இலக்கியத்தில் நிபுணத்துவம் பெற்றுவிட்டதால் தான் இதை எழுதவில்லை என்றும், நிர்வாக நோக்கங்களுக்காக அந்தப் பகுதியின் மொழியைக் கற்றுக் கொண்டதன் விளைவாகவே எழுதியதாக அவர் தன்னுடைய முன்னுரையில் குறிப்பிட்டிருந்தார். மெட்றாஸ் நகரத்தில் வாழ்ந்ததால் கின்டர்ஸ்லேவிற்கு இந்துஸ்தானி மொழியைக் கற்றுக்கொள்ளும் தேவை இல்லாதிருந்தது. ஆனால் அதற்குப் பதிலாக தெலுங்கு மற்றும் தமிழ் ஆகிய இரண்டையும் கற்றுக்கொள்ள வேண்டிய தேவை இருந்தது. என்றபோதிலும், சமஸ்கிருதம்தான் இந்திய மொழிகள் அனைத்தின் தாய் என்று கருதிக் கொள்வதிலிருந்து அது கின்டர்ஸ்லேயைத் தடுக்கவில்லை; தமிழ் மொழியின் தொன்மை மற்றும் இயல்பு குறித்து கின்டர்ஸ்லே பின்வருமாறு கருத்து கூறுகிறார்:

"இந்துக்கள் மத்தியில் இலக்கியம் நீண்ட காலமாகவே வீழ்ச்சி அடைந்து கொண்டிருக்கிறது. அதன் விளைவாகத் தமிழ்மொழிக்கு மிகப் பெருமளவுக்குத் தீங்கு ஏற்பட்டுவிட்டது. இன்றைய மொழியைச் சரளமாகப் படிக்கவும், புரிந்து கொள்ளக் கூடியவர்களில் வெகுசிலரால் மட்டுமே தங்களிடம் இருக்கும் நூல்களை, அவை எழுதப்பட்டிருக்கும் பேச்சு வழக்கில் படித்துப் புரிந்துகொள்ள முடியும் (அந்த நூல்கள் பெரும்பாலும் மிகவும் தொன்மையானவை); ஆம், இந்த மொழிநடை கவித்துவமானது. அக்காரணத்தால் அது செந்தமிழ் என்று அழைக்கப்படுகின்றது. ஆனால், இந்த நிலை காலப்போக்கில் இந்த மொழியை ஒரு வகையில் எளிதில் புரிந்துகொள்ள முடியாததாக ஆக்கலாம்; எனினும், செந்தமிழில் எழுதப்பட்டுள்ள அந்தப் படைப்புகளை, எழுத்துக்கள் மிகவும் சிதைக்கப்படாமல், பேச்சு வழக்கு மிகப் பெருமளவுக்குக் களங்கப்படாமல், இன்றைய கொச்சை நடையில் உரை எழுதப்படாமல் அவற்றைப் புரிந்துகொள்ள வேண்டிய அவசியத்தை இந்த நிலை எப்போதுமே உண்டாக்காமல் போகலாம். எனக்குக் கவிதைத் தமிழ் சற்றும் தெரியாது என்பதால் இந்தக் கொச்சைத் தமிழின் உதவியில்லை என்றால் இந்தக் காகிதங்கள் எப்போதுமே எழுதப்பட்டிருக்காது."

"கற்றறிந்தவர்களின் கவித்துவத் தமிழுக்கும் இன்றைய கொச்சைத் தமிழுக்கும் இடையில் இருக்கும் இந்தக் குறிப்பிடத்தக்க வேறுபாடு அவர்களின் மொழி மிகவும் சிதைக்கப்பட்டிருக்கிறது என்பதற்கான நிரூபணம் மட்டுமல்ல; அந்தப் படைப்புகள் மிகவும் தொன்மையானவை என்பதற்கான நிரூபணமாகவும் இருக்கின்றது (என்றபோதிலும், இன்னும் அதிக வலுமிக்கச் சான்றுகளால் அது நிரூபிக்கப்பட்டிருக்கின்றது). மகாபாரதம் மூன்றாயிரம் வருடங்கள் பழைமையானது என்று கூறப்படுகின்றது (திரு. வில்கின்ஸ் அதிலிருந்து ஒரு அத்தியாயத்தை எடுத்து மக்களுக்காக எழுதியுள்ளார்). ராமாயணம் இரண்டாயிரம் ஆண்டுகள் பழைமையானது என்று கூறப்படுகின்றது. அறநூலின் (திருக்குறள்) சில பகுதிகளை வாசகர்களுக்காக அளித்துள்ளேன். அந்நூல் 1400 ஆண்டுகளுக்கு முன்னர் எழுதப்பட்டதாக அறியப்படுகின்றது. பொதுவான வாசகர்களின் பயன்பாட்டிற்காக அது உரை நடையில் அளிக்கப்பட்டுள்ளது; அந்த உரை நடையே மிகத் தொன்மையானதாகவும், புரிந்துகொள்ள மிகக் கடினமானதாகவும் இருக்கிறது."

திருக்குறள் கி.பி. 500இல் எழுதப்பட்டது என்று கின்டர்ஸ்லே கருதினார். எந்த அடிப்படையில் அவர் இந்தக் கருத்திற்கு வந்தார்

என்பது தெளிவாகத் தெரியவில்லை. இருந்த போதிலும், மதுரையில் சங்கம் அல்லது இலக்கிய அமைப்பு ஒன்று இருந்தது என்கிற தொல்கதை பற்றி அவர் அறிந்திருந்தார். திருக்குறளிலிருந்து எடுத்தளிக்கப்பட்ட பகுதியில் திருக்குறளின் ஆசிரியர் பற்றி அவர் பின்வரும் வாதத்தை முன் வைக்கிறார்:

“இந்தப் படைப்பின் ஆசிரியர் இந்துக்களில் கீழ்சாதியைச் சேர்ந்த (பறையர்) ஒரு பூசாரி. இந்தச் சாதியில் ஒரு மரபு இருக்கின்றது; இந்த ஆசிரியர் துணிவுடன் மதுரையில் இருந்த பிராமணர்களின் புனித சபையின் முன் சென்றார் (மரியாதையான ஒரு தூரத்தில்தான் நின்றார்); அந்தப் படைப்பை அவர்கள் வியந்து கவனமாகப் படித்துக் கொண்டிருந்தபோது அவர்கள் அமர்ந்திருந்த இருக்கை அதிசயிக்கத்தக்க வகையில் இன்னுமொரு உறுப்பினர் அமர்வதற்கு இடம் அளிக்கும் வகையில் நீளமாக ஆனது; காலி இருக்கையைப் பூர்த்தி செய்யும் தகுதி அந்தப் பூசாரிக்கு இருந்தது என்பதன் புனித வெளிப்பாடு அது என்றும், அவரது சாதியைப் பொருட்படுத்தாமல் பிராமணர்கள் அவரை அதில் அமர வைத்தார்கள் என்றும் பிராமணர்கள் அதை வியாக்கியானம் செய்தார்கள். என்றபோதிலும், பிராமணர்கள் இந்தக் கதையை (இன்று?) மறுக்கிறார்கள்.”

தமிழ்ச்சங்கமோ அல்லது இலக்கிய அமைப்போ மதுரையில் மிகக் கடந்த காலத்தில் இருந்தது என்கிற கருத்து ஆரம்ப நவீன காலத்திலும் எப்படி உயிர்ப்புடன் இருந்தது என்பது கவனத்தை ஈர்க்கின்றது. தமிழ் மரபில் மதுரையில் ஒரு சங்கம் இருந்தது என்பதைப் பற்றிக் கின்டர்ஸ்லே குறிப்பிடுகிறார் என்பதே உள்நாட்டு தமிழ் அறிஞர்களின் நினைவிலும், படைப்புகளிலும் அந்தக் கருத்து நீடித்திருந்தது என்பதைச் சுட்டிக் காட்டுகின்றது.

தமிழ்ச்சங்கமோ அல்லது இலக்கிய அமைப்போ மதுரையில் மிகக் கடந்த காலத்தில் இருந்தது என்கிற கருத்து ஆரம்ப நவீன காலத்திலும் எப்படி உயிர்ப்புடன் இருந்தது என்பது கவனத்தை ஈர்க்கின்றது. தமிழ் மரபில் மதுரையில் ஒரு சங்கம் இருந்தது என்பதைப் பற்றிக் கின்டர்ஸ்லே குறிப்பிடுகிறார் என்பதே உள்நாட்டு தமிழ் அறிஞர்களின் நினைவிலும், படைப்புகளிலும் அந்தக் கருத்து நீடித்திருந்தது என்பதைச் சுட்டிக் காட்டுகின்றது.

19ஆம் நூற்றாண்டின் தொடக்கத்தில் தமிழ் இலக்கியம் குறித்து மிக ஆரம்பத்திலேயே கருத்து கூறியவர் ரெவ். ஜான் என்கிற தரங்கம்பாடி கிறித்துவ மதப்பிரச்சாரகர் ஆவார்; 1803ஆம் ஆண்டு **Asiatic Researches** என்கிற இதழில் அவ்வையார் பற்றி ஒரு கட்டுரை எழுதினார். அவ்வையாரால் எழுதப்பட்டதாகக் கருதப்படும் 'கொன்றை வேந்தன்' மற்றும் 'ஆத்திசூடி' ஆகிய படைப்புகளை ஜான் ஆங்கிலத்திற்கு மொழி பெயர்த்தார். இந்தத் தமிழ்ப் பெண் புலவர் கி.பி 9ஆம் நூற்றாண்டைச் சேர்ந்தவர் என்கிற பிரச்சனையிலிருந்து அவர் விலகி நிற்கவில்லை.

அவ்வையாரைப் பற்றிய அவரது புரிதல் மத்திய காலத்தைச் சேர்ந்த கந்த புராணம் என்கிற படைப்பிலிருந்து பெறப்பட்டதாகும். தமிழ்ப் பகுதியின் ஒவ்வொரு மரபிலும் அவ்வையாரின் படைப்புகள் பிரபலமாக இருந்தன என்று அவர் தெரிவிக்கிறார். “மலபாரிகள் அல்லது மிகச் சரியாகச் சொன்னால் தமிழர்கள் தங்களது தொன்மையான அறநெறித் தத்துவஞானியான அவ்வையாரை உருவாக்கி, கொண்டாடியது குறித்துத் தற்பெருமை கொள்கிறார்கள்” என்று ஜான் எழுதுகிறார். கந்தபுராணத்திலிருந்து தாராளமாக எடுத்தாளும் அவர் திருவள்ளுவர், கபிலர், அதியமான், உப்பாய், வள்ளி மற்றும் உருவாய் ஆகிய அவ்வையாரின் உறவுகளும் இடம் பெறும் அவ்வையார் பற்றிய கற்பனைக்கதை ஒன்றைக் கூறுகிறார். அந்தக் கதையைக் கூறிய பின்னர் அந்தப் பெண் புலவரின் படைப்புகளைப் பின்வரும் கூற்றுடன் மொழியாக்கம் செய்கிறார்:

“அவ்வையார் வாழ்ந்த காலம் சேர, சோழ, பாண்டிய மன்னர்கள் வாழ்ந்த கிபி 9ஆம் நூற்றாண்டு என்று கருதப்படுகிறது.”

அவ்வையாரின் வாழ்க்கை வரலாற்றைப் பற்றிய அவரது எழுத்தில் மதுரையில் பண்டைய காலத்தில் தமிழ்ச்சங்கம் அல்லது இலக்கிய அமைப்பு இருந்தது பற்றி அவருக்குத் தெரிந்திருந்ததாகக் குறிப்பெதுவும் இல்லை. தமிழ் இலக்கிய மரபில் சங்கம் இருந்தது பற்றிக் குறைந்த

பட்சம் மூன்று குறிப்புகள் இருக்கும் 'திருவிளையாடல் புராணம்' அல்லது 'திருவள்ளுவ நாயனார் சரித்திரம்' ஆகியவற்றை அவர் படித்திருக்கவில்லை அல்லது தெரிந்திருக்கவும் இல்லை என்பதால் இது புரிந்துகொள்ளக் கூடியதே. என்றபோதிலும், அவ்வையார் மற்றும் திருவள்ளுவர் ஆகியோர் எப்போதுமே தமிழ் மரபில் உள்ள சங்கத்துடன் சேர்த்தே காணப்படும் அவர்கள் பற்றிய மற்ற ஐரோப்பியர்களின் புரிதலுக்கு நேர்மாறானதாக இவருடைய புரிதல் இருந்தது. 19ஆம் நூற்றாண்டில் நவீன காலத்திற்கு முந்தைய வெவ்வேறு தமிழ் இலக்கியப் படைப்புகள் குறித்த ஐரோப்பியர்களின் அறிவு தமிழ் இலக்கியத்தின் கடந்த காலம் பற்றிய வெவ்வேறு வகையான புரிதல்களுக்கு ஐரோப்பியர்களை இட்டுச் சென்றது என்பதை இது காட்டுகிறது. அவ்வையாரின் படைப்புகள் கி.பி. 9ஆம் நூற்றாண்டு காலகட்டத்தைச் சேர்ந்தவை என்று எந்த அடிப்படையில் ரெவ். ஜான் கூறுகிறார் என்பது தெரியவில்லை. சேர, சோழ, பாண்டிய மன்னர்கள் தமிழ்ப்பகுதியைக் கி.பி. 9ஆம் நூற்றாண்டில் ஆண்டார்கள் என்ற முடிவிற்கு எந்த அடிப்படையில் வருகிறார் என்பதும் நிச்சயமாகத் தெரியவில்லை.

**பிரான்சிஸ் வயிட் எல்லிஸ்** (F.W. Ellis), **ஹெச்.ஹெச்.வில்சன்** (H.H. Wilson) **மற்றும் ரெவ்.வில்லியம் டைலர்** (Rev. William Taylor)

மெட்ராஸ் ஆட்சியராக இருந்தவரும், 1812ஆம் ஆண்டு புனித ஜார்ஜ்க் கோட்டை கல்லூரியை நிறுவியவருமான பிரான்சிஸ் வயிட் எல்லிசால் (1778-1819) தமிழின் கடந்த காலத்தை ஆய்வு செய்வதற்கு ஒரு முயற்சி மேற்கொள்ளப்பட்டது. 'On the Law Books of the Hindus' என்கிற தலைப்பில் Transactions of the Madras Literary Society இதழில் அவரது மறைவுக்குப் பின்னர் வெளியிடப்பட்ட ஒரு கட்டுரையில் தமிழ்ப்பகுதியின் வரலாற்றை மறுகட்டமைக்க முயற்சித்திருந்தார், அவரது ஆய்வுக் கட்டுரை மூன்று பகுதிகளாகப் பிரிக்கப்பட்டிருந்தது; மூன்றாவது பகுதியின் தலைப்பு 'தென்னிந்தியப் பள்ளிகளில் மிகப்பெரும் செல்வாக்கு மிக்க நூல்கள்'; அதில் தென்னிந்தியாவின் முக்கிய அரசுகளின் வரலாற்றுக் காலகட்டத்தைச் சுருக்கமாகச் சித்தரிப்பதற்கு ஒரு முயற்சி எடுக்கப்பட்டிருந்தது. தென்னிந்தியாவில் பயன்படுத்தப்பட்ட சட்ட நூல்களைப் புரிந்துகொள்ள வேண்டும் எனில், பண்டைக் காலத்திலிருந்து தென்னிந்தியாவின் சுருக்கமான வரலாற்றைத் தெரிந்து கொள்வது அவசியம் என்று எல்லிஸ் வாதிட்டார்.

“இந்திய தீபகற்பத்தின் தென்பகுதியில் மிக ஆரம்ப கால அரசாங்கங்களில் சேர, சோழ, பாண்டிய ஆகிய மூன்று அரசுகள் மட்டுமே இப்போது மிகத் தெளிவாக நினைவில் இருக்கின்றன; இந்தப் பெயர்கள் வழக்கமாக நாடு அல்லது மண்டலம் என்கிற சொல்லுடன் இணைக்கப்பட்டிருக்கும்; சோழ நாடு, சேர மண்டலம் இத்யாதி. இந்த மூன்று அரசாங்கங்களும் தமிழ், மலையாளம் ஆகிய மொழிகள் பேசப்பட்ட அனைத்து நாடுகளையும் உள்ளடக்கியவையாக இருந்தன. இந்த அரசாங்கங்கள் மிகப் பழைய காலங்களில் நிறுவனப்பட்டிருக்க வேண்டும். டாலமி (Ptolemy) இவை அனைத்தையும் கவனிக்கிறார்; அவற்றுக்கு உரிய நிலையில் அவற்றை இருத்துகிறார். பிளினியும் (Pliny), இதர ஐரோப்பிய எழுத்தாளர்களும் அவற்றைப் பற்றிக் குறிப்பிடுகிறார்கள்; கிறித்துவ சகாப்தத்திற்கு முன்னர் அந்த மூன்று அரசாங்கங்களை ஆண்ட மன்னர்கள் பற்றிய நீண்ட பட்டியல்கள் இன்னும் இருக்கின்றன.”

தமிழ் மொழியில் இன்னும் இருப்பவற்றில் மிகப் பழமையான இலக்கியப் படைப்பு சீவக சிந்தாமணிதான் என்று எல்லிஸ் கருதினார். தமிழ் யாப்பிலக்கணம் பற்றி நன்கு எழுதப்பட்ட ஒரு கையெழுத்துப் பிரதியில் (அவரது மறைவுக்குப் பின்னரும் அது இன்னும் வெளியிடப்படாமல் இருக்கிறது) “சிந்தாமணி மிகத் தொன்மையான கவிதையாகும்; அநேகமாகப் பிராமணர்களின் எந்தப் பிரிவும் தென்னிந்தியாவில் வளர்ச்சி அடையாத காலத்தில் அது எழுதப்பட்டிருக்கலாம்; நிச்சயமாக ஐரோப்பிய மதம் பற்றி இந்நாட்டில் யாரும் கேள்விப்படுவதற்கு வெகு காலம் முன்னரே எழுதப்பட்டிருக்க வேண்டும்” என்று வாதிட்டார். அதே கட்டுரையில் வேறொரு இடத்தில் சிந்தாமணியைத் தமிழின் மிகச் சிறந்த படைப்பு என்று கருதுகிறார்; அநேகமாக மற்ற எதையும் விடத் தொன்மையானது என்றும், கிட்டத்தட்ட முற்றிலும் அசலானதாக இருக்கின்ற தனித்தன்மை வாய்ந்தது என்றும் கருதுகிறார். காலின் மெக்கன்சிக்கு (Colin Mackenzie) எழுதிய கடிதம் ஒன்றில் எல்லிஸ் சிந்தாமணியின் முக்கியத்துவத்தை

மீண்டும் வலியுறுத்துகிறார். தமிழ்மொழியில் சமஸ்கிருத மொழிபெயர்ப்புகள் நிறைந்திருந்தபோதிலும் முதல் தரமான அசல் படைப்புகள் பெரும் எண்ணிக்கையில் இருந்தன என்றார். கிறித்துவ மத நம்பிக்கை கொண்டவர்களுக்கும் மதிப்பு மிக்கதான தமிழ் அறநூல்கள் இருக்கின்றன; அவற்றில் தலை சிறந்தது சிந்தாமணி ஒரு சமணரின் படைப்பு என்று தென்னிந்தியாவின் கத்தோலிக்க மத போதகரான பெஸ்கி உறுதிபடக் கூறுகிறார்; அது அறநெறிகளில் மட்டுமின்றி கவித்துவத்திலும் தனிச்சிறப்பு மிக்கதாக விளங்குகின்றது என்கிறார். தமிழ் யாப்பிலக்கணம் குறித்த தன்னுடைய கட்டுரையில் மத்திய கால பிரபந்தவகைப் படைப்புகளில் மட்டுமின்றி கம்பராமாயணம், திருக்குறள், தொல்காப்பியம், சீவக சிந்தாமணி, திருவாசகம், காரிகை, புறநிலை மற்றும் பெஸ்கி பாதிரியாரின் படைப்புகளான தேம்பாவணி மற்றும் தொன்னூல் போன்றவற்றிலும் தனக்கிருக்கும் பயிற்சியை நிரூபிக்கிறார். அது போல் தன்னுடைய திருக்குறளின் ஆங்கில மொழிபெயர்ப்பிலும் பண்டைய தமிழ் இலக்கிய நூலான தொல்காப்பியம் முதல் மத்திய காலத்தின் பிரபந்தங்கள் வரையிலான மிகப்பலத் தமிழ் இலக்கியப் படைப்புகள் பற்றிய தன்னுடைய அறிவையும் வெளிப்படுத்துகிறார். ஆங்கிலத்தில் மொழிபெயர்க்கப்பட்ட குறள்களுக்கு இரண்டு இடங்களில் எழுதியுள்ள விளக்கக் குறிப்புகளில் சங்கத் தொகுப்புகளில் ஒன்றான புறநானூற்றிலிருந்து செய்யுள்களை மேற்கோள்காட்டுகிறார். புனித ஜார்ஜ் கோட்டையின் மேலாளராக அ.முத்துச்சாமிப் பிள்ளை என்பவர் இருந்தார்; எல்லிஸ் (Ellis), ஏ.டி.கேம்ப்பெல் (A.D. Campbell), பெஞ்சமின் கய் பாபிங்டன் (Benjamin Guy Babington) போன்ற நிர்வாகிகள் மற்றும் கீழ்த்திசைவாதிகள் பற்றித் தனக்குள்ள பரிச்சயம் குறித்த ஒரு சித்திரத்தை முத்துசாமிப் பிள்ளை வழங்குகின்றார்; மற்றும் கத்தோலிக்கப் பாதிரியார் பெஸ்கியின் இலக்கியப் படைப்புகளைச் சேகரிப்பதற்காகத் தமிழ்நாட்டின் தென்பகுதிகளுக்கு தான் பயணங்கள் மேற்கொண்டது பற்றியும் விளக்குகின்றார். எல்லிசுக்காகப் புறநானூற்றின் ஓலைச்சுவடி பிரதிகளைத் தமிழ்ப்புலவர்களான முத்துசாமிப் பிள்ளை, தாண்டவராய முதலியார், கந்தசாமிப் புலவர் அல்லது சிதம்பரப் பண்டாரம் ஆகியோர் வாங்கி வந்தார்களா என்பது தெளிவாகத் தெரியவில்லை. தன்னுடைய தாத்தா திருக்குறளின் கையெழுத்துப் பிரதி ஒன்றை எல்லிசுக்குக் கொடுத்ததை 20ஆம் நூற்றாண்டின் தொடக்கத்தில் அயோத்திதாசப் பண்டிதர் நினைவு கூர்ந்தார். தன்னுடைய திருக்குறள் மொழிபெயர்ப்புக்கு விளக்கக் குறிப்புகளாகப் புறநானூற்றுப் பாடல்களை எல்லிஸ் மேற்கோள் காட்டியிருப்பது தமிழ் மொழி மற்றும் இலக்கிய வரலாற்றுக்கான அறிகுறிகளைக் கொண்டிருந்தது. என்றபோதிலும், போட்லியன் நூலகத்தில் (Bodelian library, Oxford) காணப்பட்ட அவரது வெளியிடப்படாத நகல் கட்டுரைகள் குறளுக்கான தயாரிப்புக் குறிப்புகளும், மத்திய கால பிரபந்த இலக்கியம் பற்றிய வர்ணனைகளையும் மட்டுமே கொண்டவையாக இருக்கின்றன. மிகப் பரந்த அளவிலான தமிழ் இலக்கியப் படைப்புகள் குறித்த ஞானம் இருந்தபோதிலும், தமிழ் இலக்கியம் குறித்த ஒரு முழுமையான வரலாற்றை எல்லிஸ் எழுதவில்லை. தமிழ் இலக்கிய வரலாறு குறித்த அவரது சிந்தனைகள் வெறும் சித்தரிப்புகளாக மட்டுமே இருந்தன; இங்கும் கூட தமிழ் இலக்கியப் படைப்புகளில் சீவக சிந்தாமணியே தொன்மையானது என்று அவர் கருதினார்.

மெக்கன்சி (Colin Mackenzie) சேகரித்திருந்த நூல்கள் பற்றிய விவரப் பட்டியலுக்கு எழுதிய அறிமுகத்தில் அப்போது பெங்கால் ஆசியாடிக் சொசைட்டியின் செயலாளராக இருந்த ஹொராஸ் ஹேய்மேன் வில்சன் (1786-1860) தமிழ்மொழி மற்றும் இலக்கியத்தின் வரலாறு குறித்து விரிவாக விவாதித்திருந்தார்; ஓரளவிற்கு பிரான்சிஸ் எல்லிசை எடுத்தாண்டிருந்த அதே வேளையில்

மெக்கன்சி (Colin Mackenzie) சேகரித்திருந்த நூல்கள் பற்றிய விவரப் பட்டியலுக்கு எழுதிய அறிமுகத்தில் அப்போது பெங்கால் ஆசியாடிக் சொசைட்டியின் செயலாளராக இருந்த ஹொராஸ் ஹேய்மேன் வில்சன் (1786-1860) தமிழ் மொழி மற்றும் இலக்கியத்தின் வரலாறு குறித்து விரிவாக விவாதித்திருந்தார்; ஓரளவிற்கு பிரான்சிஸ் எல்லிசை எடுத்தாண்டிருந்த அதே வேளையில் எல்லிசின் சில அனுமானங்களைக் கேள்விக்குள்ளாக்கினார்.

எல்லிசின் சில அனுமானங்களை கேள்விக்குள்ளாக்கினார். வில்சன் பின்வருமாறு கூறினார்:

"சமணர்களின் இலக்கியத்தைத் தொடர்ந்து தமிழ் மொழியில் பல நூல்கள் வெளிவந்துள்ளன; அதை இந்தத் தீபகற்பத்தின் மிகத் தொன்மையான மொழி என்று கருதலாம். திராவிட நாடு என்று அழைக்கப்படும் இந்தியாவின் தென்பகுதியின் மொழி அது. அதில் பண்டைய சேர, சோழ, பாண்டிய அரசுகள் உள்ளடங்கியிருந்தன; தென்னாற்காடு, சேலம், கோயம்புத்தூர், கும்பகோணம், தஞ்சாவூர், திருச்சிராப்பள்ளி, மதுரை, திண்டுக்கல், திருநெல்வேலி ஆகிய மாவட்டங்கள் மற்றும் மைசூரின் பெரும்பகுதி ஆகியவை அந்த அரசுகளுக்கு உட்பட்டவையாக இருந்தன. அந்தப் பகுதிகள் அனைத்திலும் 50 லட்சத்திற்கும் மேற்பட்ட மக்களால் அந்த மொழி பேசப்பட்டது என்று திருபாபிங்டன் கூறுகிறார். அவரும், மறைந்த திரு.எல்லிஸ் அவர்களும் இது சமஸ்கிருதத்தில் இருந்து பெறப்பட்ட மொழி அல்ல என்றும், தனித்துத் தோன்றிய மொழி என்றும் கூறினர்."

"அத்தகைய திறன் மிக்க நிபுணர்களின் கருத்துக்களை மறுக்க முடியாது; ஆதலால், தமிழ் மொழியின் அடிப்படைக்குத் தனித்த மூலாதாரம் இருக்கிறது என்பதை ஒப்புக்கொள்ள வேண்டும். அதன் நூல் விவரப் பட்டியலில் காட்டப்பட்டுள்ளது போல் அதன் இலக்கியத்தின் தன்மையிலிருந்தும், அதன் பாரம்பரியத்திலிருந்தும் அது வழக்கத்திற்கு மாறான ஆதரவின் கீழ் சுயேச்சையாகப் பேணி வளர்க்கப்பட்டுள்ளது என்பதும் வெளிப்படையாகத் தெரிகிறது. மதுரை அரசால் தமிழுக்கென்று ஒரு சங்கம் அமைக்கப்பட்டது என்கிற பெருமை கொண்டது; மக்கள் தொகையின் அனைத்து வர்க்கங்களையும் சேர்ந்த தகுதியும் திறனும் படைத்த எழுத்தாளர்கள் அதில் உறுப்பினர்களாக இருந்தார்கள்..... ஆனால், தமிழ் மொழியின் வரலாறு பற்றி இன்னும் நிறைய விளக்கப்பட வேண்டியிருக்கிறது; குறிப்பிடத்தக்க இடங்கள், நகரங்கள், மலைகள், நதிகள், கோவில்கள் ஆகியவற்றின் பெயர்கள் அனைத்தும் கிறித்துவ யுகத்திற்கு முன்பிருந்தே சமஸ்கிருதப் பெயர்களாக இருப்பது எப்படி? நாட்டின் இயற்கையான சிறப்பம்சங்களுக்குத் தனித்துவமான பெயர்கள் இருக்கவில்லை என்றால், பிராமணீய இந்துக்கள் வடக்கிலிருந்து குடியேறுகிற வரையில், தமிழ் மொழி பேணி வளர்க்கப்படாமல் இருந்திருக்க வேண்டும்; மாவட்டங்களை நாகரீகப்படுத்துவதில் அசட்டையாக இருந்திருக்க வேண்டும்; அப்படி அவர்கள் குடியேறிய அந்த அரசியல் நிகழ்வு தென்னிந்தியாவின் அனைத்து மரபுகளாலும் உணர்ந்து கொள்ளப்பட்டிருக்கின்றது."

"ஆதலால், தமிழ் மொழி ஒரு தனித்த மூலாதாரத்தைக் கொண்டது என்பதை நாம் ஏற்றுக் கொள்ள வேண்டும் என்றபோதிலும், சமஸ்கிருத மொழியின் அறிமுகத்திற்கு முன்னர் தமிழில் தனித்துவமான இலக்கியங்கள் இருந்தன என்று திரு.எல்லிஸ் அவர்களுடன் சேர்ந்து நாம் கருத முடியாது."

"ஒரு தொலைதூர கடந்த காலத்திலிருந்து தமிழ் மொழி மிக உயர்ந்த அளவிற்குப் பேணி வளர்க்கப்பட்டது என்பது கேள்விக்கு அப்பாற்பட்டது; ஆனால், ஒப்பீட்டளவில் ஒரு நவீன கால கட்டத்திலும், சமஸ்கிருத இலக்கியத்தின் பரவலைத் தொடர்ந்தும்தான் அது மிக வெற்றிகரமாகப் பயிலப்பட்டது போல் தெரிகிறது. இப்பிரச்சனை குறித்த இந்தக் கருத்து தமிழ் ஆரம்பக் காலத்தில் பண்படாததாக இருந்தது என்கிற ஏற்கனவே இருக்கும் கருத்துடன் பொருந்திப் போகும்; மற்றும் மதுரைத் தமிழ்ச்சங்கம் பற்றிய மரபான கருத்துக்களாலும், நூல்விவரப் பட்டியலில் காணப்படுவது போன்ற தமிழ் மொழியின் தன்மையினாலும் இக்கருத்து உறுதி செய்யப்படுகிறது. தமிழை வளர்ப்பதற்காக மதுரையின் வம்சசேகர பாண்டிய மன்னனால் நிறுவப்பட்டது; சைவ மத நம்பிக்கை பரவியிதற்கு வெகு காலத்திற்கு முன்னர் இந்த மன்னர் இருந்தார் என்று சில அறிஞர்கள் கூறுகின்றனர். திருவள்ளுவர் என்கிற தமிழ்ப் புலவரைத் தங்களது சங்கத்தில் சேர்த்துக் கொள்ள வேண்டிய கட்டாயம் தமிழ்ச்சங்க அறிஞர்களுக்கு எற்பட்டது என்று பழங்கதை மரபுகள் வலியுறுத்திக் கூறுகின்றன; அவரது பிரசித்தி பெற்ற சகோதரியான அறநெறிப் புலவர் அவ்வையார் ஒன்பதாம் நூற்றாண்டில் செழித்தோங்கினார் என்று டாக்டர் ஜான் கூறுகிறார். மற்றொரு புகழ் பெற்ற தமிழ்க் கவிஞர் அதே நூற்றாண்டின் இறுதியில் எழுதினார்; ஆதலால், தமிழ் மிக விரிவாகவும், வெற்றிகரமாகவும் வளர்க்கப்பட்டது என்று நாம் இதிலிருந்து அனுமானிக்கலாம்.

சமஸ்கிருத மொழியின் மகத்தான இலக்கியங்களைத் தொடர்ந்து இந்தத் தமிழ்நூல்கள் எழுதப்பட்டன என்பதற்குத் தமிழ்நூல் பட்டியல் மறுக்க முடியாத சான்றாக இருக்கின்றது என்பதை அந்தப் பட்டியலைப் படித்தாலே தெரிகின்றது; ஏனெனில், உண்மையில் அவை சமஸ்கிருதத்திலிருந்து தமிழுக்கு மொழியாக்கம் செய்யப்பட்டவையன்றி வேறில்லை. அவ்வாறாகக் கம்பனின் மகத்தான படைப்பு ராமாயணத்தின் மொழிபெயர்ப்பாகும்; மகாபாரதத்தின் மிகப்பெரும் பகுதி தமிழில் மொழிபெயர்க்கப்பட்டுள்ளது; மகாத்மியங்களில் சமஸ்கிருதத்திற்கு அடுத்து தமிழ் நிறைந்திருக்கிறது. புராணங்களிலிருந்து மொழிபெயர்க்கப்பட்ட ஏராளமான பழங்கதைகள் நம்மிடம் இருக்கின்றன. கவிதை மற்றும் கதைப் படைப்புகள் பல அந்தச் செவ்வியல் மொழியிலிருந்து மொழி பெயர்க்கப்பட்டவையாகும். பின்னாளில் அசலான தமிழ் இலக்கியங்கள் படைக்கப்பட்டன என்று அனுமானிக்கலாம்; அவை பெரும்பாலும் சூத்திரர்கள் மற்றும் சமணர்களின் படைப்புகளாகும்; அவை பிராமணர்களின் மேலாதிக்கத்தை எதிர்த்து, அதைத் தூக்கி எறியும் முயற்சியின் ஒரு பகுதியாக இருந்தன என்பதற்கான சான்றுகளாக அவை இருக்கின்றன. அசல் தமிழ்ப் படைப்புகள் பிரதானமாகப் பழம்புகழ் மிக்க சேர, சோழ, பாண்டிய நாடுகளின் வரலாறுகள், அறநெறி மற்றும் நீதி போதனைக் கவிதைகள், மொழியியல் மற்றும் மருத்துவம் ஆகியவை பற்றிய ஆய்வுக் கட்டுரைகள் ஆகியவற்றைக் கொண்டவையாக இருக்கின்றன. முந்தையவற்றில் சில கர்னல் மெக்கன்சியின் பயன்பாட்டிற்காகத் தயாரிக்கப்பட்ட சமீபத்தியத் தொகுப்புகளாகும்; மற்றவை தொன்மைப் புகழ் மிக்கவை; பாண்டிய ராஜாக்கள் மதுரைத் தமிழ்ச் சங்கத்தின் அசல் புலவர்களான நக்கீரன், பரணர், கபிலர் ஆகியோரால் எழுதப்பட்டதாகக் கூறப்படுகிறது."

தமிழ் தனித்துத் தோன்றிய மொழி என்றபோதிலும் சமஸ்கிருதச் செல்வாக்கிற்கு உட்படாத இலக்கியங்கள் அதில் இல்லை என்பது வில்சனின் கருத்து. தமிழ் இலக்கியத்தின் துவக்கம் பாண்டியர்கள் மதுரையில் தமிழ்ச் சங்கத்தை நிறுவிய 9ஆம் நூற்றாண்டின் போது நிகழ்ந்தது என்று வில்சன் எழுதினார். வில்சனின் விவரமான நூல் பட்டியல் 1882இல் மறுபதிப்பு செய்யப்பட்டது; அதற்கு The Indian Antiquary எனும் இதழின் ஆசிரியர் பின்வரும் குறிப்புடன் ஒரு மதிப்புரை எழுதினார்:

"ஐம்பது வருடங்களுக்கு முன்பு வில்சனின் மெக்கன்சி தொகுப்பு இந்திய இலக்கியம் மற்றும் வரலாறு ஆகியவை பற்றிய தகவல்கள் நிறைந்த அரிய கையேடாக இருந்தது. இன்றும் வரலாற்று ஆய்வில் ஈடுபட்டுள்ள சில அறிஞர்களுக்கு அவ்வப்போது அது பயன்படுகின்றது. ஆனால், இப்போது அதன் உள்ளடக்கத்தில் பெரும்பகுதி இன்னும் அதிகமான சமீபத்திய ஆய்வுகளினால் காலத்திற்கு ஒவ்வாததாக ஆகிவிட்டது; புதிய தகவல்கள் கிடைத்துள்ளன"

ஐம்பது வருடங்களுக்கு முன்பு வில்சனின் மெக்கன்சி தொகுப்பு இந்திய இலக்கியம் மற்றும் வரலாறு ஆகியவை பற்றிய தகவல்கள் நிறைந்த அரிய கையேடாக இருந்தது. இன்றும் வரலாற்று ஆய்வில் ஈடுபட்டுள்ள சில அறிஞர்களுக்கு அவ்வப்போது அது பயன்படுகின்றது.

மெக்கன்சியின் தொகுப்பிற்கு வில்சன் எழுதியிருந்த அறிமுக உரை மெட்றாஸ் ராஜதானியில் பணியாற்றிக் கொண்டிருந்த சிவில் பணியாளர்களுக்குப் பயனுள்ள பல தகவல்களைக் கொண்டிருந்தது என்று அந்த மதிப்புரை புகழ்ந்தது. தமிழ் விஷயத்தில், குறிப்பாகத் தமிழ் இலக்கியத்தின் கால நிர்ணய விஷயத்தில், வில்சனின் அறிமுக உரை 19ஆம் நூற்றாண்டு ஐரோப்பிய அறிஞர்களுக்கு ஒரு நிலையான சான்றாக இருந்தது. தமிழ் இலக்கியத்தின் தொடக்க காலத்தைக் கி.பி. 9ஆம் நூற்றாண்டு என்று வில்சன் மட்டும் சொல்லவில்லை. 1856இல் திராவிட மொழிகளின் ஒப்பிலக்கணம் எழுதிய ராபர்ட் கால்டுவெல் (Robert Caldwell), 1865இல் அச்சிடப்பட்ட தமிழ் நூல்களின் தரவரிசைப் பட்டியலைத் தொகுத்த ஜான் முர்டோக் (John Murdoch), 1871இல் தென்னிந்தியாவின் நாட்டுப்புறப் பாடல்களை எழுதிய சார்லஸ் கோவர் (Charles Gover), 1878இல் பண்டைய தென்னிந்திய எழுத்து வடிவங்களின் கூறுகளை விவரிக்க முயற்சித்த ஏ.சி. பர்னெல் (A.C. Burnell)

ஆகியோரும் தமிழ் இலக்கியத்தின் துவக்க காலத்தை கி.பி. 9ஆம் நூற்றாண்டு என்று நிர்ணயிக்கலாம் என்கிற கருத்துடன் உடன்பட்டனர். ஆனால், தமிழ் மொழி சமஸ்கிருத மொழிக் குடும்பத்திலிருந்து வேறுபட்ட மொழிக் குடும்பத்தைச் சேர்ந்தது என்பதை அவர்கள் ஏற்றுக் கொண்டனர்; அதை மெய்ப்பித்தனர். தமிழ் மரபில் மூன்று தமிழ்ச்சங்கங்கள் இருந்தன என்பது பற்றி அவர்களுக்குத் தெரிந்தது; ஆனால், மூன்று சங்கங்களின் இலக்கியங்கள் எவை, அவற்றின் காலகட்டங்கள் எவை என்பது பற்றி அவர்களுக்குத் தெரிந்திருக்கவில்லை. மெக்கன்சியின் கையெழுத்துப் பிரதிக்கு தான் எழுதிய ஒரு பின் குறிப்பில் ரெவ். வில்லியம் டைலர் (Rev. William Taylor) 'சங்கத்தார் சரித்திரம்' என்கிற மெக்கன்சியினுடைய தொகுப்பின் ஒரு பகுதியாக இருந்த ஒரு இலக்கியம் பற்றி விவரித்திருந்தார். சங்கத்தார் சரித்திரத்தின் உள்ளடக்கம், அந்த கையெழுத்துப் பிரதிகள் இருந்த நிலை குறித்து பின்வரும் கருத்து கூறியிருந்தார்:

"சங்கத்தார் சரித்திரம் என்பது புலவர்களின் கதை மதுரையில் தமிழ்ச் சங்கம் அமைக்கப்பட்டது தொடர்பான படைப்பின் அரைகுறையான துண்டு இது; அந்தச் சங்கத்தில் 49 தமிழ்ப் புலவர்கள் இருந்தனர். அது வங்கிச (அல்லது வம்ச) சேகர பாண்டியன் காலத்தில் அமைக்கப்பட்டது. திருவள்ளுவரின் திருக்குறள் மற்றும் அதைத் தொடர்ந்து புலவர்கள் அழிக்கப்பட்டது (என்கிற குற்றச்சாட்டு) ஆகியவை இதில் விவரிக்கப்பட்டுள்ளன; அதில் ஒரு பகுதி மட்டுமே இந்தத் துண்டில் இருக்கின்றது. எஞ்சியவை பூச்சிகளால் கொஞ்சம் அரிக்கப்பட்டிருந்தபோதிலும் நன்கு பாதுகாக்கப்பட்டிருக்கின்றன; மற்றும் அது ஒப்பீட்டளவில் சமீபத்திய பிரதியாகும்."

### ரெவ்.பீட்டர் பெர்சிவல் (Rev. Peter Percival) மற்றும் ரெவ்.ஹென்றி போவர் (Rev. Henry Bower)

1854ஆம் ஆண்டு அமெரிக்க மதப் பிரச்சாரகரான ரெவ்பீட்டர் பெர்சிவல் The Land of Vedas என்கிற நூலை வெளியிட்டார்; அதே பொருள் குறித்துக் கான்டர்பரியில் உள்ள புனித ஆகஸ்டின் மிஷினரிக் கல்லூரியில் (St. Augustine Missionary College, Canterbury) அவர் ஆற்றிய தொடர் உரைகள் அந்நூலில் இடம் பெற்றிருந்தன. மொழிகள் பற்றிய ஆறாவது அத்தியாயத்தில் தமிழ் மொழி மற்றும் இலக்கியத்திற்காக ஒரு விரிவான பகுதியை அவர் எழுதியிருந்தார்; அதில் தமிழ் இலக்கிய வரலாறு குறித்த தன்னுடைய புரிதலை அவர் விரிவாக விளக்கியிருந்தார். "தமிழர்களிடம் விரிவான இலக்கியங்கள் இருக்கின்றன; சமஸ்கிருதத்தில் காணப்படும் ராமாயணம், மகாபாரதம், மற்ற சில புராணங்கள், இதர சில படைப்புகள் முழுமையாகவோ அல்லது பகுதியாகவோ தமிழில் மொழிபெயர்க்கப்பட்டுள்ளன; தமிழில் எழுதப்பட்ட மூல நூல்களும் ஏராளம்" என்று பெர்சிவல் வாதிடுகிறார். தமிழ் இலக்கிய மரபில் அகத்தியர் பற்றிய பழங்கதைகள், அகத்தியம் எனப்படும் அவரது இலக்கணம், அவரது சீடர்கள் ஆகியவை பற்றி விவரங்கள் கொடுக்கிறார், பெர்சிவல். பின்னர் தமிழ் இலக்கண நூல்களான தொல்காப்பியம், நன்னூல் ஆகியவை பற்றி ஒரு சுருக்கமான அறிமுகத்தை அளிக்கிறார். ஒரு வகையில் எல்லிஸ் போல், பெர்சிவலும் சீவக சிந்தாமணிதான் தமிழ் இலக்கியத்தில் இன்றும் இருக்கும் மிகச் சிறந்த படைப்பு என்று கருதினார். "தமிழ்ப் புலவர்களில் மிகச் சிறந்தவர் சிந்தாமணி எனும் காவியத்தை எழுதினார்; அந்த மொழியில் காணப்படும் மிகச் சிறந்த படைப்புக்களில் அதுவும் ஒன்று" என்று அவர் கூறினார். பின்னர் அவர் திருவள்ளுவர் மற்றும் அவ்வையார் போன்ற தமிழ்ப் புலவர்களின் வாழ்க்கை வரலாறு பற்றியும், அவர்களது படைப்புகள் பற்றியும் விளக்குகிறார். உள்நாட்டு மக்களுக்கு ஏசுவின் போதனைகளைப் பிரச்சாரம் செய்யும் மற்றும் மதம் மாற்றும் தங்களுடைய அன்றாடப் பணியில் சாதியின் முக்கியத்துவத்தை மதப் பிரச்சாரகர்கள் எதிர்கொள்வதால் தமிழ் இலக்கிய வரலாற்றை ஒரு மதப் பிரச்சாரகரின் நிலையிலிருந்து அணுகும்போது அது மதவாதத் தொனி அற்றதாக இருக்கவில்லை. "சமஸ்கிருதம் பேசும் பிராமணிய படையெடுப்பாளர்களால் இந்தியா ஆக்கிரமிக்கப்படுவதற்கு முன்னர் நாடு முழுவதும் ஒரு பொது மொழி இருந்தது; இறுதியில் அது பிராமணிய அதிகார பீடங்களிலிருந்து தொலைதூரத்தில் இருந்த ஒரு பகுதியில் மெருகூட்டப்பட்ட தமிழ் மொழியாக வெளிப்பட்டது' என்று அவர் வாதிடுகிறார்.

சமஸ்கிருதத்திற்கு எதிராகத் தமிழ் மொழி வளர்க்கப்பட்டது என்றும், அதைப் பேணி வளர்த்தது ஒரு மதச்சார்பற்ற வர்க்கம் என்றும் அவர் கருதினார். தெலுங்கு, கன்னடம், மலையாளம் போன்ற இதர தென்னிந்திய மொழிகள் தமிழும் சமஸ்கிருதமும் கலந்தவையாக இருந்தபோது, தமிழ் முற்றிலும் சமஸ்கிருதக் கலப்பற்றதாக இருந்தது. தூய்மையான தமிழ்ப் படைப்புகள் சமஸ்கிருத சொற்களின் கலப்பின்றி இருந்தன என்றும், பிராமணீயமயமாக்கப்பட்ட சிந்தனை வாகனத்தின் ஒரு சொல்லும் இன்றியே தமிழ் பேசப்பட்டிருக்க வேண்டும்" என்றும் அவர் வாதிட்டார். ஆறுமுக நாவலர், தாமோதரம் பிள்ளை போன்ற உள்நாட்டு அறிஞர்கள் பெர்சிவலுடன் நெருங்கிப் பணியாற்றினர் என்பதையும், தமிழ் இலக்கியம் குறித்த புரிதலை வடிவமைப்பதில் இந்த அறிஞர்கள் மீது பெர்சிவல் செலுத்திய தாக்கத்தைக் குறைத்து மதிப்பிட்டுவிட முடியாது என்பதையும் கவனத்தில் கொள்வது முக்கியமாகும்.

1855ஆம் ஆண்டு Calcutta Review என்கிற இதழில் வெளியிடப்பட்ட 'Tamil Language and Literature' என்கிற கட்டுரையில் ரெவ். ஹென்றி போவர், நன்னூலைப் பற்றி விரிவாக ஆய்வு செய்திருந்தார்; தமிழ் மொழி மற்றும் இலக்கியம் பற்றி சில பொதுவான கருத்துக்களையும் அதில் கூறியிருந்தார். பிரான்சிஸ் எல்லிஸ், பீட்டர் பெர்சிவல் மற்றும் பெஸ்கி ஆகியோரின் எழுத்துக்களிலிருந்து உள்வாங்கிக் கொண்டு சமஸ்கிருதத்திற்கு இணையாக இந்தியாவின் தொன்மையான மொழிகளில் தமிழும் ஒன்று எனவும், சமஸ்கிருதத்திலிருந்து முற்றிலும் வேறுபட்டது எனவும் அவர் வாதிட்டார். தமிழ் இலக்கியம் குறித்த அவருடைய புரிதல் பெரும்பாலும் மெக்கன்சியின் கையெழுத்துப் பிரதிகளுக்கு வில்சன் எழுதிய முன்னுரையிலிருந்து பெறப்பட்டதாகும். தமிழ் மொழியின் இலக்கியம் குறித்து கருத்து கூறும்போது போவர் பின்வருமாறு கூறினார்:

"தமிழ் மொழி அறிநெறி நூல்கள் நிறைந்ததாகும். ஐரோப்பிய மாணவர்கள் படித்துப் பயன்பெறக் கூடிய சமஸ்கிருத நூல் ஒன்றைக் கூறுமாறு பேராசிரியர் வில்சனிடம் கேட்கப்பட்டபோது அவரால் கீதையை மட்டுமே குறிப்பிட முடிந்தது. ஆனால், தமிழில் அதை விடச் சிறந்தவை இருக்கின்றன. மதுரைத் தமிழ்ச் சங்கத்தின் உயர்ந்தோரால் படைக்கப்பட்ட நூல்கள் முதன்மையான நீதி நூல்களாகும். அநேகமாக கி.பி மூன்றாம் நூற்றாண்டில் வம்ச சேகரனின் ஆட்சியில் தமிழ் இலக்கியத்தையும், மொழியையும் வளர்ப்பதற்காக மதுரைத் தமிழ்ச் சங்கம் நிறுவப்பட்டது. அவருடைய மகன் வம்ச சுராமணி தன் தந்தையின் திட்டத்தைப் பூர்த்தி செய்தார்; தமிழ்ச்சங்கத்தை முறையான வகையில் அமைத்தார். அப்போது மொத்த இந்துஸ்தானத்திலும் அநேகமாக இதுதான் மிகவும் போற்றப்பட்ட கற்றறிந்தோர் சபையாக இருந்திருக்க வேண்டும். விக்கிரமாதித்தன் சபையில் ஒன்பது சிறப்பு மிக்க புலவர்கள் இருந்தனர் என்றால், மதுரைத் தமிழ்ச் சங்கம் அதைப் போல் ஐந்து மடங்குக்கும் அதிகமானோரைக் கொண்டிருந்தது; 48 சங்கப் புலவர்கள் இருந்தனர்; நக்கீரர், பரணர், கபிலர் ஆகியோர் தலைமைப் புலவர்கள்."

திருக்குறள், நாலடியார் மற்றும் அவ்வையாரின் அறப்பாடல்கள் போன்ற படைப்புகளை விளக்கியதுடன் போவர் சங்கம் குறித்த வில்சனின் கருத்துக்களை விளக்குகிறார். ரெவ்.ஹென்றி போவர்தான் 1868இல் சீவகசிந்தாமணியின் முதல் அத்தியாயத்தைப் பொதுக் கல்வி இயக்குனரின் நேரடி ஆதரவுடன் முதன் முதலில் அச்சிட்டவர்; அதைத் தொடர்ந்து அது மெட்றாஸ் பல்கலைக் கழகத்தின் இளங்கலைப் பட்டப்படிப்புக்குப் பாட

திருக்குறள், நாலடியார் மற்றும் அவ்வையாரின் அறப்பாடல்கள் போன்ற படைப்புகளை விளக்கியதுடன் போவர் சங்கம் குறித்த வில்சனின் கருத்துக்களை விளக்குகிறார். ரெவ். ஹென்றி போவர்தான் 1868இல் சீவகசிந்தாமணியின் முதல் அத்தியாயத்தைப் பொதுக் கல்வி இயக்குனரின் நேரடி ஆதரவுடன் முதன் முதலில் அச்சிட்டவர்; அதைத் தொடர்ந்து அது மெட்றாஸ் பல்கலைக்கழகத்தின் இளங்கலைப் பட்டப்படிப்புக்குப் பாட நூலாகச் சேர்க்கப்பட்டது.

நூலாகச் சேர்க்கப்பட்டது. சிந்தாமணி குறித்து அவர் பின்வருமாறு கூறினார்:

"தமிழில் படைக்கப்பட்ட மிகப் பெரும் மூல காவியம் சிந்தாமணியாகும்; அது இப்போது மெட்ராசில் வெளியிடப்படுகின்றது. அது மிக உயர்தரமான நீதி நூலாகும். அந்த காவியத்தை இயற்றிய ஆசிரியரைக் கற்றறிந்தவர்களில் மிகச் சிறந்தவர் என்கிறார் அந்தக் கதையைக் கூறுகிறவர். அவரது பெயர் குறிப்பிடப்படவில்லை. அவர் சமண மதத்தைச் சேர்ந்தவர்; தமிழ்ப் புலவர்களில் தலைசிறந்தவர் என்று அவரை நியாயமாகவே அழைக்கலாம் என்று பெஸ்கி கூறுகிறார். சிந்தாமணி அதன் நாயகனான சீவகனின் முறையீடாகும்; எல்லிசின் குறளில் பல அழகான பத்திகள் மேற்கோள் காட்டப்பட்டுள்ளன. சொல்லாட்சித் திறன் மிக்க நபர்களின் உதாரணங்கள் பொதுவாக அதிலிருந்தே கொடுக்கப்பட்டுள்ளன. நாம் அச்சில் கண்டுள்ள அந்தப் படைப்பின் முதல் அத்தியாயத்திலிருந்து அதைப் படிப்பது மிகவும் கடினமாக இருக்கும் என்று நாம் அஞ்சுகிறோம்."

எனவே, சிந்தாமணி பற்றிய போவரின் கருத்துக்கள் அதே படைப்பு குறித்த பெஸ்கி மற்றும் எல்லிசின் எழுத்துக்களை அவர் அறிந்திருக்கிறார் என்பதைப் பிரதிபலிக்கின்றன. அவர் சைவ, வைணவ பக்திப் புலவர்களின் பாடல்கள் பற்றியும் பேசுகிறார்; விஷ்ணு கோவிலில் திருவாய்மொழியும், சிவன் கோவிலில் திருவாசகமும் புகழ் பெற்றவையாக இருந்தன என்கிறார்.

"வைணவர்களின் மிகப் பிரபலமான மத நூல் திருவாய்மொழியாகும்; விஷ்ணுவை வணங்கிப் பாடப்பட்ட பாடல்களைக் கொண்டது; அது, சமஸ்கிருத வேதப் பாடல்களுக்குப் பதிலாக கோவில்களில் தமிழ் பிராமணர்களால் பாடப்படுகின்றது. பன்னிரண்டு ஆழ்வார்கள் அல்லது விஷ்ணுவின் பக்தர்களால் எழுதப்பட்டதாகக் கூறப்படுகின்றது. அவை நான்காயிரம் பத்திகளைக் கொண்டவையாகும். அதற்கு நேர் எதிராகச் சைவர்கள் மத்தியில் திருவாசகம் இருந்தது; சிவனை வணங்கி எழுதப்பட்ட அவை சிவன் கோவில்களில் சைவப் பண்டாரங்களால் பாடப்படுகின்றன. அவை, ஒன்பதாம் நூற்றாண்டில் சமணர்களை வென்ற மாபெரும் சைவர் மாணிக்கவாசகரால் எழுதப்பட்டவையாகும். இந்த இரண்டு பிரபலமான படைப்புகளும், அவற்றின் பெயர்களின்படி, புனித சொல் அல்லது புனித நூல் என்பதைக் குறிக்கின்றன."

பொதுப் பள்ளிகளில் தமிழைக் கற்பிக்க வேண்டும் என்கிற அறைகூவலுடன் போவர் தன்னுடைய கட்டுரையை முடிக்கிறார். "தமிழ் இலக்கியத்தின் செழிப்பான காலம் மதுரைப் பாண்டியர்களுடன் சென்று விட்ட போதிலும், அந்தப் படைப்புகள் நினைவுச் சின்னங்களாக உணர்ந்து நிற்கின்றன; அவற்றின் மூலம் இந்து அறிவை நாம் மதிப்பிடலாம்" என்று அவர் வாதிடுகிறார். நூல்களை ஆய்வு செய்தோ அல்லது வரலாற்று முறையைப் பயன்படுத்தியோ தமிழ் இலக்கியத்தின் வரலாற்றுக் காலகட்டத்தை நிர்ணயிப்பதற்கு ஹென்றி போவர் எந்த முயற்சியும் மேற்கொள்ளவில்லை. இலக்கியத்தின் காலத்தை நிர்ணயிக்கும் பிரச்சனையில் அவர் ஒன்று வில்சனைச் சார்ந்திருந்தார் அல்லது எந்த ஆதாரமும் இன்றி ஊகம் செய்தார். ஹென்றி போவர் மத்திய காலத் தமிழ் இலக்கண நூலை ஆங்கிலத்தில் மொழி பெயர்த்து 1876ஆம் ஆண்டு வெளியிட்டார். விளம்பரம் குறித்த ஒரு பிரிவில் நன்னூல் 500 ஆண்டுகளுக்கு மேல் பழமையானதாக இருக்க முடியாது என்று கூறுகிறார். தொல்காப்பியம் கி.பி 8ஆம் நூற்றாண்டில் எழுதப்பட்டதாகக் கருதுகிறார். வரலாற்று ஆய்வு எதுவும் செய்யாமல் தமிழ் இலக்கியத்தின் காலம் பற்றிய இந்தக் கருத்துக்கள் ஏனோ தானோவென்று கூறப்படுகின்றன. வரலாற்று ஆய்வு செய்வதை விடவும் தமிழ்ப் படைப்புகளை ஆங்கிலத்தில் மொழியாக்கம் செய்வதில்தான் அவர் ஆர்வமுள்ளவராக இருந்தார் என்பது தெளிவு. வரலாற்று ஆய்வில் ஈடுபட விருப்பமற்றிருந்த ஜியு. போப் போன்ற அறிஞர்களிடமும் இது போன்ற அணுகுமுறையை நாம் காணலாம்.

**ராபர்ட் கால்டுவெல் (Robert Caldwell) மற்றும் ஜான் முர்டோக் (John Murdoch)**

ராபர்ட் கால்டுவெல்லின் 'திராவிட அல்லது தென்னிந்திய மொழிகளின் ஒப்பிலக்கணம்' என்கிற நூல் 1856இல் வெளியிடப்பட்டது. அந்த நூலில் தென்னிந்திய மொழிகளின் ஒப்பிலக்கண ஆய்வுடன் கூட திராவிட இலக்கியம் மற்றும் மதம் குறித்த பகுதிகளையும் சேர்த்திருந்தார். இலக்கணத்தை வெளியிடுவதற்கு முன்னர்

கால்டுவெல் தமிழ் மொழியை 17 வருடங்கள் கற்றார். திராவிட மொழிகள் மற்றும் பேச்சு வழக்குகள் ஒவ்வொன்றின் இலக்கணக் கட்டமைப்பை அளிப்பதுதான் தன்னுடைய நோக்கம் என்றபோதிலும், தமிழின் கட்டமைப்பின் மீது ஒளி பாய்ச்சுவதுதான் தன்னுடைய குறிக்கோள் என்று ஒப்பிலக்கண நூலில் குறிப்பிட்டிருந்தார். திராவிட மொழிகளில் தமிழ்தான் தொன்மையானது, வளமானது, மிகவும் ஒழுங்கமைக்கப்பட்டது என்றும் பலவகையில் திராவிட மொழிக் குடும்பத்தின் பிரதிநிதி என்றும் அவர் கருதினார். என்றபோதிலும், தமிழ் மொழியின் தொன்மை குறித்து அவர் வலியுறுத்துவதைப் போல தமிழ் இலக்கியத்தின் தொன்மையை அவர் வலியுறுத்தவில்லை. "திராவிட நாகரீகம் மிகவும் தொன்மையானது என்றபோதிலும், இன்றும் இருக்கும் மிகப் பழமையான திராவிட இலக்கியம் சமஸ்கிருத இலக்கியத்தை விட மிகப் பிந்தையதாகும். திராவிட மொழிகளின் இலக்கியத்தைப் பற்றிக் குறிப்பிடும் போது தொன்மை என்கிற சொல் பொருத்தமானதுதானா என்பது சந்தேகத்திற்கு உரியது" என்று அவர் கூறினார். 1913ஆம் ஆண்டு கால்டுவெல் மறைந்து 22 ஆண்டுகளுக்குப் பின்னர் அவரது ஒப்பிலக்கணம் நூலின் மூன்றாவது பதிப்பு வெளியிடப்பட்டபோது திராவிட இலக்கியம் குறித்த பகுதியை காலாவதியானது என்று கருதிய தொகுப்பாசிரியர்கள் அதை திருத்தப்பட்ட அந்த பதிப்பிலிருந்து நீக்கிவிட்டார்கள். 1875ஆம் ஆண்டு கால்டுவெல்லின் ஒப்பிலக்கணம் நூலின் இரண்டாவது பதிப்பு வெளியானதிலிருந்து 1913ஆம் ஆண்டு மூன்றாவது பதிப்பு வெளியிடப்பட்ட வரையிலான இடைப்பட்ட காலத்தில் தமிழ்ச்செவ்வியல் இலக்கியங்கள் பதிப்பிக்கப்பட்டன; தமிழ் இலக்கியத்தின் கால வரிசை பற்றிய முந்தைய எண்ணங்கள் பலவற்றைக் கேள்விக்குள்ளாக்கிய ஆய்வுகள் தமிழ் இலக்கியத்தில் தோன்றியிருந்தன. என்றபோதிலும், தன்னுடைய ஒப்பிலக்கண நூலின் முதல் இரண்டு பதிப்புகளில் தமிழ் இலக்கியத்தின் காலவரிசை பற்றி மிகுந்த ஆர்வத்துடன் ஆய்வு செய்தார்; தமிழ் இலக்கியத்தின் தொடக்கம் கி.பி 8ஆம் நூற்றாண்டில் நிகழ்ந்தது என்றார். பண்டைக் காலத்தில் மதுரையில் தமிழ்ச் சங்கம் இருந்ததைப் பற்றி அவருக்குத் தெரிந்திருந்தபோதிலும், அந்தச் சங்கத்தில் சமர்ப்பிக்கப்பட்ட இலக்கியப் படைப்புகள் பற்றி அவருக்குத் தெரிந்திருக்க வில்லை.

திருக்குறளும், சீவக சிந்தாமணியும் முற்றிலும் சமஸ்கிருதத்திலிருந்து சுயேச்சையான வடிவத்திலும் எழுதப்பட்ட விதத்திலும் அசலான மிகச் சிறந்த தமிழ் இலக்கியப் படைப்புகள் என்று அவர் கருதினார். கி.பி 8ஆம் நூற்றாண்டிலிருந்து 12 அல்லது 13ஆம் நூற்றாண்டு வரையில் தமிழ்ப்பகுதியில் சமணம் செல்வாக்கு செலுத்திய காலத்தில் திருக்குறளும், சீவகசிந்தாமணியும் படைக்கப்பட்டன என்று கால்டுவெல் அவற்றின் காலத்தை நிர்ணயித்தார். அவர் பின்வருமாறு எழுதினார்:

"சமணர்களின் ஆதிக்கம் நிலவிய காலம்தான் (அறிவிலும், கற்றலிலும் ஆதிக்கம் நிலவிய காலம்; அரசியல் அதிகாரத்தில் அல்ல) தமிழ் இலக்கியத்தின் சிறந்தோங்கிய காலமாகும்; அந்தக் காலத்தில்தான் மதுரை தமிழ்ச் சங்கம் செழித்தோங்கியது; குறள், சிந்தாமணி மற்றும் நிகண்டுகளும் இலக்கணங்களும் எழுதப்பட்ட காலம்."

"சமணர்களின் ஆதிக்கம் நிலவிய காலம்தான் (அறிவிலும், கற்றலிலும் ஆதிக்கம் நிலவிய காலம்; அரசியல் அதிகாரத்தில் அல்ல) தமிழ் இலக்கியத்தின் சிறந்தோங்கிய காலமாகும்; அந்தக் காலத்தில்தான் மதுரைத் தமிழ்ச் சங்கம் செழித்தோங்கியது; குறள், சிந்தாமணி மற்றும் நிகண்டுகளும் இலக்கணங்களும் எழுதப்பட்ட காலம்."

"ராமாயணம், மகாபாரதம் மற்றும் இதர சந்தேகத்திற்கு இடமற்ற தொன்மை கொண்ட சமஸ்கிருத கவிதைகளில் திராவிடச் சொற்கள் மிகவும் சொற்பமே; இன்றும் அழியாதிருக்கும் தமிழ் இலக்கியங்கள் கி.பி 8 அல்லது 9ஆம் நூற்றாண்டைச் சேர்ந்தவை என்று நிச்சயமாகச் சொல்ல முடியும்; ஆனால், அதற்கு முன்னர் திராவிட மொழிகளின் தொன்மை நிலை பற்றி

ராமாயணம் போன்ற இலக்கியங்களில் உள்ள திராவிடச் சொற்களை வைத்து எதுவும் சொல்ல முடியாது" என்று திராவிட மொழிகளில் எழுதப்பட்ட பழம்பெரும் நூல்கள் பற்றிக் கருத்து கூறும்போது கால்டுவெல் வாதிடுகிறார்.

தமிழின் தொன்மையைக் கால்டுவெல் ஏற்றுக் கொண்ட போதிலும், தமிழ் இலக்கியங்களின் தொடக்கம் கி.பி 8 அல்லது 9ஆம் நூற்றாண்டில் நிகழ்ந்தது என்கிறார். இந்த விஷயத்தில் கால்டுவெல் வில்சனின் கருத்தை எதிரொலிக்கிறார். ஆனால், ஒரு முக்கியமான வேறுபாடு இருக்கிறது. தமிழ் இலக்கியத்தில் உள்ள இலக்கியங்கள் அனைத்தும் சமஸ்கிருதத்திலிருந்து அப்படியே நகல் எடுக்கப்பட்டவை அல்லது மொழியாக்கம் செய்யப்பட்டவை என்று வில்சன் வாதிட்டார்; சமஸ்கிருதச் செல்வாக்கிற்கு உட்படாத மூலச் சிறப்புள்ள தமிழ்ப் படைப்புகள் இருந்ததைக் கால்டுவெல் வெளிச்சம் போட்டுக் காட்டினார். உண்மையில், ஆரிய/பிராமண/சமஸ்கிருதத்திற்கு எதிராகத் திராவிட மக்கள் என்கிற இனப்பாகுபாடு கொண்ட பார்வை அந்த நூல் முழுவதும் கால்டுவெல்லால் நிலைநாட்டப்படுகிறது. பிராமணர்கள் தமிழில் அசலான படைப்புகள் எதையும் எழுதவில்லை என்று அவர் உறுதியாகக் கூறினார். தமிழில் பாதுகாக்கப்பட வேண்டிய தகுதியுள்ள படைப்புகளை வெகுசில பிராமணர்களே எழுதியுள்ளார்கள் என்று அவர் வாதிட்டார். அவரைப் பொருத்த வரையில், "உள்ளூர் தமிழ் சூத்திரர்களால் தான் தமிழ்மொழி அளவற்ற பேரார்வத்துடனும், வெற்றிகரமாகவும் பேணி வளர்க்கப்பட்டது; தமிழ் இலக்கியத்தில் ஒரு பிராமணர் அடைந்த மிக உயர்ந்த நிலை உரையாசிரியர் நிலையாகும். திருவள்ளுவரின் (பிறப்பால் பறையர்; ஆயினும் தமிழ் எழுத்தாளர்களால் ஏற்றுக் கொள்ளப்பட்டவரும், புனிதப்படுத்தப்பட்டவருமான அவர்களின் தலைவர்) குறளுக்கு பரிமேலழகர் எழுதிய உரைதான் தமிழில் ஒரு பிராமணரால் எழுதப்பட்ட மிகச் சிறந்த படைப்பாகும்."

தமிழில் இன்னும் நிலைத்திருக்கும் இலக்கியங்கள் எல்லாம் சமஸ்கிருதத்திலிருந்து பெறப்பட்டவை என்கிற வில்சனின் கருத்துக்களை எடுத்துக் கூறிவிட்டு, தெலுங்கு, கன்னடம், மலையாளம் போன்ற இதர திராவிட மொழிகளின் விஷயத்தில் இது சரி என்றபோதிலும், தமிழின் விஷயத்தில் இது உண்மையல்ல என்று கால்டுவெல் கூறினார். "தமிழைப் பொருத்த வரையில், இது முழு நிறைவான கருத்தல்ல; ஏனெனில், திருக்குறள் மற்றும் சிந்தாமணி ஆகிய இரண்டும் சமஸ்கிருதத்திலிருந்து முற்றிலும் சுயேச்சையானது என்றும், வடிவத்திலும் எழுதப்பட்ட விதத்திலும் மூலச்சிறப்பு கொண்டது என்றும், மொழிகளில் தகுதியும் சிறப்பும் கொண்ட படைப்புகள் என்றும் அனைவராலும் ஏற்றுக் கொள்ளப்பட்டுள்ளன. தமிழ் எழுத்தாளர்கள் ராமாயணத்தையும் மகாபாரதத்தையும் அது போன்ற படைப்புகளையும் தழுவியிருக்கிறார்கள் (மொழியாக்கம் செய்தார்கள் என்று என்னால் கூறமுடியாது) என்பது உண்மை என்றபோதிலும், வால்மீகி எழுதிய சமஸ்கிருத ராமாயணத்தைவிட தங்களது கம்பன் எழுதிய ராமாயணம் மிகமிகச் சிறந்தது என்று பெருமிதம் கொள்கிறார்கள்" என்று வில்சனின் வாதத்தின் மீது கருத்து கூறுகிறார்.

கால்டுவெல்லின் ஒப்பிலக்கண நூலின் இரண்டாவது பதிப்பு 1875ஆம் ஆண்டு வெளியிடப்பட்டபோது 'திராவிட இலக்கியத்தின் ஒப்பீட்டுத் தொன்மை' என்கிற பகுதியை அந்தப் பதிப்பில் தொடர்ந்து வைத்திருந்தார்; அதனுடன் தெலுங்கு இலக்கியத்தின் வயது, கன்னட இலக்கியத்தின் வயது, மலையாள இலக்கியத்தின் வயது மற்றும் தமிழ் இலக்கியத்தின் வயது

தமிழின் தொன்மையைக் கால்டுவெல் ஏற்றுக்கொண்ட போதிலும், தமிழ் இலக்கியங்களின் தொடக்கம் கி.பி. 8 அல்லது 9ஆம் நூற்றாண்டில் நிகழ்ந்தது என்கிறார். இந்த விஷயத்தில் கால்டுவெல் வில்சனின் கருத்தை எதிரொலிக்கிறார். ஆனால், ஒரு முக்கியமான வேறுபாடு இருக்கிறது. தமிழ் இலக்கியத்தில் உள்ள இலக்கியங்கள் அனைத்தும் சமஸ்கிருதத்திலிருந்து அப்படியே நகல் எடுக்கப்பட்டவை அல்லது மொழியாக்கம் செய்யப்பட்டவை என்று வில்சன் வாதிட்டார்; சமஸ்கிருதச் செல்வாக்கிற்கு உட்படாத மூலச் சிறப்புள்ள தமிழ்ப் படைப்புகள் இருந்ததைக் கால்டுவெல் வெளிச்சம் போட்டுக் காட்டினார்.

போன்ற உபதலைப்புகளைச் சேர்த்திருந்தார். தமிழ் இலக்கியத்தின் வயது குறித்த பகுதியில் கால்டுவெல் தமிழ் இலக்கியங்களைப் பரந்ததொரு காலவரிசைச் சட்டகத்திற்குள் பொருத்தியிருந்தார். (அ) சமணர் காலம் (ஆ) தமிழ் ராமாயண காலம் (இ) சைவ மறுமலர்ச்சிக் காலம் (ஈ) வைணவ காலம் (உ) இலக்கிய மறுமலர்ச்சிக் காலம் (ஊ) நவீன எழுத்தாளர்கள்.

எண்ணற்ற நூல்களை அகத்தியர் ஆயிரக்கணக்கான ஆண்டுகளுக்கு முன்னர் எழுதியவை என்று உள்நாட்டுத் தமிழ்ப் புலவர்கள் கூறியதை வெறும் கட்டுக்கதை என்று கால்டுவெல் நிராகரித்தார். அகத்தியர் எழுதியதாகக் கூறப்படும் நூல்கள் எதுவும் கி.பி 10ஆம் நூற்றாண்டுக்கு முன்னர் எழுதப்படவில்லை என்று அவர் வாதிட்டார். தொல்காப்பியத்தில் இருக்கும் மேற்கோள்கள் இன்றும் இருக்கும் கவித்துவ நடையின் மிகப் பழைய முன்மாதிரிகள் என்று கால்டுவெல் கருதினார். தொல்காப்பிய காலத்திற்கு முன்னர் பல நூற்றாண்டுகள் இலக்கியக் கலாச்சாரம் இருந்திருக்க வேண்டும் என்று அவர் மேலும் கருதினார்; ஆனால், எந்த இடத்திலும் அவர் மிகப் பழைய இலக்கண நூலின் காலத்தைப் பற்றிக் குறிப்பிடவில்லை. தமிழ் இலக்கியப் படைப்பிற்கு ஒரு காலத்தை நிர்ணயிப்பது கால்டுவெல் போன்ற ஒரு மதப் பிரச்சாரகருக்கு ஒரு புதிராகவே இருந்தது. அவர் கூறினார்:

"தமிழ் இலக்கியம் முழுநிறைவான உச்சத்தை அடைந்து விட்டதாகக் கருதப்படும் திருக்குறளும், சிந்தாமணியும் எழுதப்பட்ட பிந்தைய காலத்திற்கு வந்தால் கூட (அவை உண்மையிலேயே பிந்தைய காலத்தைச் சேர்ந்தவையாக இருந்தால்) அந்த மகத்தான படைப்புகளின் உண்மையான காலம் தெரியவில்லை என்பதைக் காண்கிறோம். உறுதியாக நம்பத்தகுந்த ஒரு தேதி நம்மிடம் இல்லை; சான்றாதாரங்கள் அற்ற ஊகங்களில் சர்வசாதாரணமாகச் சில நூற்றாண்டுகள் கூடுதலாகவோ குறைவாகவோ வேறுபாடுகள் இருக்கின்றன. பொதுவாக இந்து எழுத்தாளர்கள் போலத் தமிழ் எழுத்தாளர்களும் தங்களது எழுத்துக்களுக்குப் பின்னால் தங்களது அடையாளத்தை மறைத்துக் கொண்டார்கள்; அவர்களில் பலரின் பெயர் கூடத் தெரியாது. தனிநபரின் இருப்பைப் போல தனிப்பட்ட புகழையும் கூட அவர்கள் தேவையற்றதாகக் கருதியது போல் தோன்றுகிறது. தங்களது நாட்டின் செவ்வியல் இலக்கியத்தில் இடம்பெறுவதற்கு ஆசைப்படுவது மட்டுமே தங்களது படைப்புகளுக்குக் கிடைக்கக் கூடிய மிகப்பெரும் சிறப்பு என்று அவர்கள் கருதியது போல் தோன்றுகிறது. யுகம் யுகமாக வாசகர்களும் அதே பாதையில்தான் சென்றார்கள். நூல் நன்றாக இருந்தால் மக்கள் அதை வியந்து போற்றினார்கள்; ஆனால் அது மனிதனால் எழுதப்பட்டதா அல்லது தெய்வத்தால் எழுதப்பட்டதா அல்லது பொதுவாக வேதங்கள் போல் தனக்குத் தானே எழுதிக் கொண்டதா என்பதைப் பற்றி அவர்களுக்குத் தெரியாது; அதைப் பற்றி அவர்கள் கவலைப்படவும் இல்லை. அந்த நூல் மோசமாக இருக்கிறதா என்பதைப் பற்றியும் அவர்கள் கவலைப்படவில்லை. வரலாற்று உணர்வு, தொன்மை உணர்வு, பெரும் அளவிற்கு விமரிசன உணர்வும் கூட நவீன காலத்திய வளர்ச்சிப் போக்குகளாகும். ஆதலால், முதன்மையான தமிழ்ப் படைப்புகளின் காலம் பற்றி நான் ஏதாவது கூற முயற்சித்தால், இந்தப் படைப்புகளைப் பொருத்தவரையில் அவை இன்னும் இருக்கின்றன என்பது மட்டுமே முற்றிலும் நிச்சயம் என்பதை மனதில் வைத்துக் கொள்ள வேண்டும்."

சமணர் காலம் அநேகமாக கிபி 8 அல்லது 9லிருந்து கி.பி 12 அல்லது 13ஆம் நூற்றாண்டு வரையிலானதாக இருக்கலாம் என்பது கால்டுவெல்லின் கருத்து. இந்தக் காலத்தில் மதுரைத் தமிழ்ச் சங்கம் செழித்தோங்கியது; அப்போதுதான் திருக்குறளும், சிந்தாமணியும் சங்கத்தில் சமர்ப்பிக்கப்பட்டன. மதுரைத் தமிழ்ச் சங்கத்தில் சமர்ப்பிக்கப்பட்ட பதினெட்டுப் படைப்புகள் பற்றி அவர் குறிப்பிடுகிறார்; ஆனால், அவற்றின் பெயர்களைக் குறிப்பிடவில்லை. திருக்குறள் பத்தாம் நூற்றாண்டிற்கு முன்னர் எழுதப்பட்டது என்று கூறுவதற்குக் கால்டுவெல்லிற்கு ஐந்து காரணங்கள் இருந்தன. சங்கராச்சாரியாரின் தனித்துவமான கோட்பாடுகளோ, ஆகம அல்லது சைவ சித்தாந்த சிந்தனையோ, புராண அல்லது பக்தி கட்டுக்கதைகளோ அவற்றில் இல்லாதிருப்பதும், சமண தத்துவம் அவற்றில் இருப்பதும் குறள் 10ஆம் நூற்றாண்டிற்கு முன்னர் எழுதப்பட்டது என்பதற்குப் போதுமான காரணங்களாக இருக்கின்றன. நாலடியார், திவாகரம், சிந்தாமணி

மற்றும் நன்னூல் ஆகியவை சமணர் காலத்தில் எழுதப்பட்டவை என்கிறார் அவர். பின்னர் கால்டுவெல் தமிழ் இலக்கிய வரலாற்றின் பிந்தைய காலங்களைப் பற்றி விளக்குகிறார். தமிழ் இலக்கியப் படைப்பு எதற்கும் அவை எழுதப்பட்ட காலம் பற்றிய நம்பத்தகுந்த விவரம் எதுவும் இல்லையாதலால் தமிழ் இலக்கிய வரலாற்றைப் புரிந்து கொள்வது மிகக் கடினமான பணி என்பதை ஒப்பிலக்கண நூலின் முதல் இரண்டு பதிப்புகளும் வலியுறுத்துகின்றன.

அச்சடிக்கப்பட்ட தமிழ் நூல்களின் விவரப் பட்டியலை 1865ஆம் ஆண்டு தொகுத்த ஜான் முர்டோக் (John Murdoch) தமிழ் மொழி மற்றும் இலக்கியத்தின் தன்மை பற்றி கருத்து கூறத் தவறவில்லை. தமிழ் இலக்கியம் குறித்த அவரது புரிதல் பெஸ்கி, வில்சன், ஹென்றி போவர், ராபர்ட் கால்டுவெல், ரெவ்.வில்லியம் டைலர் மற்றும் சைமன்காசி செட்டி (Simon Casie Chitty) ஆகியோரின் எழுத்துக்களிலிருந்து பெறப்பட்டவையாகும். மற்ற எந்த ஐரோப்பிய எழுத்தாளர்களை விடவும் கால்டுவெல்லின் செல்வாக்குதான் முர்டோக் மீது ஆதிக்கம் செலுத்தியது என்று கூறலாம். கால்டுவெல்லின் ஒப்பிலக்கணத்தை மேற்கோள் காட்டி இன்றும் இருக்கும் தமிழ் இலக்கியத்தின் மிகப் பழைய வகைமாதிரிகள் கி.பி 8ஆம் நூற்றாண்டுக்கு முந்தையவை அல்ல என்று அவர் வாதிட்டார். பண்டைக் காலத்திய வரலாற்றை அளிக்கக் கூடியவையாக இருந்த புராணங்களைக் குழந்தைத்தனமான கதைகள் என்று அவர் ஒதுக்கினார். மதுரைத் தமிழ்ச் சங்கம் இருந்ததையும், தமிழ் மொழிக்கும் இலக்கியத்திற்கும் பாண்டிய மன்னர்கள் ஆதரவு அளித்தனர் என்பதையும் முர்டோக் ஒப்புக் கொண்ட போதிலும் அவற்றின் காலத்தை வரையறுப்பதில் அவர் கால்டுவெல்லிடமிருந்தோ, மற்றவர்களிடமிருந்தோ வேறுபடவில்லை.

"பாரீஸ் கலைக்கழகம் செழித்தோங்கிய நாட்களில் கலைகளின் மீது செல்வாக்குச் செலுத்தியது போல், மதுரை தமிழ்ச் சங்கம் தமிழ் இலக்கியத்தின் மீது மிகப் பெரும் செல்வாக்கு செலுத்தியது. சமணர் காலம் கி.பி 8 அல்லது 9ஆம் நூற்றாண்டிலிருந்து 12 அல்லது 13ஆம் நூற்றாண்டு வரையிலும் நீடித்திருக்கலாம். மார்க்கோ போலோ (Morco Polo) இந்தியாவிற்கு வந்த காலத்தை ஒத்திருப்பது போல் தோன்றும் சுந்தர பாண்டியனின் ஆட்சிக் காலத்தில் சமண மதத்தைப் பின்பற்றுபவர்கள் இறுதியாகப் பாண்டிய நாட்டை விட்டு வெளியேற்றப்பட்டனர். ஆதலால், அந்த மதத்திற்கு ஆதரவான கருத்துக்களைக் கொண்டிருக்கும் அனைத்துத் தமிழ்ப் படைப்புகளும் கி.பி 13ஆம் நூற்றாண்டின் மத்தியப் பகுதிக்கு முன்னர் எழுதப்பட்டிருக்க வேண்டும்; அநேகமாக 12ஆம் நூற்றாண்டில் சமண மதத்தின் செல்வாக்கு மங்குவதற்கு முன்னால் எழுதப்பட்டிருக்க வேண்டும்.... தொல்காப்பியம் அல்லது பண்டைய தொகுப்பு எனப்படும் இலக்கண நூல்தான் மிகப் பழைய நூல் என்று பொதுவாகக் கருதப்படுகிறது. சமணர் காலத்தின் தொடக்கத்திலேயே அல்லது கி.பி 8ஆம் நூற்றாண்டில் கால்டுவெல் அதை இருத்துகிறார். அதில் உள்ள மேற்கோள்கள் இன்னும் முந்தைய படைப்புகளைச் சேர்ந்தவையாக இருக்க வேண்டும்."

கால்டுவெல்லிடமிருந்து மேலும் கருத்துக்களைப் பெறும் அவர் திருக்குறள் கி.பி 9ஆம் நூற்றாண்டைச் சேர்ந்தது என்றும், சிந்தாமணி 10ஆம் நூற்றாண்டைச் சேர்ந்தது என்றும் நிர்ணயிக்கிறார்.

**சார்லஸ் இ.கோவர் (Charles E. Gover) மற்றும் ஏ.சி.பர்னெல் (A.C. Burnell)**

1871ஆம் ஆண்டு வெளியிடப்பட்ட சார்லஸ் இ.கோவரின் Folk-Songs of Southern India என்கிற நூல் திராவிடர்களின் வெகுஜன இலக்கியத்தை

1871ஆம் ஆண்டு வெளியிடப்பட்ட சார்லஸ் இ. கோவரின் Folk-Songs of Southern India என்கிற நூல் திராவிடர்களின் வெகுஜன இலக்கியத்தை விவரமாகப் பதிவு செய்ய முயற்சித்தது. புராண இந்து மதத்தின் கட்டமைப்பையே மறுத்த நவீன காலத்திற்கு முந்தைய புரட்சிகரமான எழுத்துக்களைத் திரித்த பிராமணர்களை அவர் கடுமையாக விமர்சித்தார்.

விவரமாகப் பதிவு செய்ய முயற்சித்தது. புராண இந்து மதத்தின் கட்டமைப்பையே மறுத்த நவீன காலத்திற்கு முந்தைய புரட்சிகரமான எழுத்துக்களைத் திரித்த பிராமணர்களை அவர் கடுமையாக விமர்சித்தார். சிதைக்கப்படாத, உருக்குலைக்கப்படாத பண்டைய காலத் தமிழ் நூல்களைப் பெறுவது சிரமமாக இருந்தது என்கிறார், கோவர். இந்த நிலைமை தென்னிந்தியா முழுவதும் பரவலாக இருந்தது. ஆதியில் துரானியர்களாக (கஜகஸ்தான், உஸ்பெகிஸ்தான், துர்க்மேனிஸ்தான் பகுதிகளிலிருந்து குடியேறியவர்கள்) இருந்தவர்களே தமிழர்கள் என்று வாதிட்ட கால்டுவெல்லை அவர் வெகுவாக விமர்சித்தார். திராவிடர்களிடம் மிக உயர்ந்த அறநூல்கள் இருப்பதால் துரானியக் குடும்பத்தில் சேர்க்காமல் விட்டுவிடப்படும் கவுரவத்தை அவர்களுக்குக் கொடுக்க வேண்டும் என்று கோவர் வாதிட்டார். தமிழர்களின் இலக்கியம் பற்றிக் கருத்துத் தெரிவிக்கும்போது கோவர் பின்வருமாறு கூறுகிறார்:

"தமிழ் மற்றும் தெலுங்கு நாட்டுப்புற இலக்கியத்தில் ஏராளமான உயர்ந்த எழுத்துக்கள் கைவசம் தயாராக இருக்கின்றன; குறிப்பாக, தமிழ் மொழியில். அது முற்றிலும் அலட்சியப்படுத்தப்பட்டுவிட்டது. பிராமண புராணக் கதைகளால் அமுக்கி வைக்கப்பட்ட, பிராமணர்களால் வெறுக்கப்பட்ட, அது பெற வேண்டிய கவனத்தைப் பெறுவதற்கு அதற்கு வாய்ப்பே கிடைக்கவில்லை. மக்கள் இன்னும் அந்தப் பாடல்களைப் பற்றிக் கொண்டிருக்கிறார்கள்; ஒவ்வொரு பள்ளியிலும் மாணவர்கள் திருவள்ளுவர், அவ்வையார், கபிலர் மற்றும் இதர ஆரம்ப கால எழுத்தாளர்களின் எழுத்துக்களைக் கற்கிறார்கள். பொது மதிப்பீட்டில் இந்த நூல்களை உயர்த்துவதும், திராவிட மனதின் உண்மையான படைப்புகளை வெளிக்காட்டுவதும் பழுத்த அறிஞர்களும், அறிவொளி பெற்ற அரசாங்கமும் செய்யத் தகுந்த பணியாகும். குறிப்பாக, மதுரைத் தமிழ்ச் சங்கத்தின் அங்கீகாரத்தைப் பெற்றதாகச் சொல்லப்படும், திராவிட இலக்கியங்களில் மிகப் பழமையானவற்றின் வகைமாதிரிகள் எனப்படும் பதினெட்டு நூல்களின் பால் கவனத்தை ஈர்க்க விரும்புகிறேன். திராவிடப் படைப்புகளைக் கற்கும் எந்த மாணவராலும் அவற்றுக்கு இணையான மதிப்புள்ள ஏராளமான நூல்களைச் சேர்க்க முடியும். அவை கவனமாகத் தொகுக்கப்பட்டால் மிக உயர்ந்த மதிப்புள்ள திராவிட செவ்வியல் இலக்கியத்தின் தொகுப்பாக அவை அமையும்."

மதுரைத் தமிழ்ச் சங்கத்தின் பதினெட்டு நூல்களைப் பதிப்பிக்குமாறு கோவர் வேண்டுகோள் விடுக்கிறார்; ஆனால், அந்தப் பதினெட்டு நூல்கள் எவை என்பது பற்றித் தன்னுடைய நூலில் அவர் எங்கும் குறிப்பிடவில்லை என்பது ஆர்வத்தைத் தூண்டுகிறது. திருக்குறள், அவ்வையாரின் அறப்பாடல்கள், கபிலர் அகவல், திருவள்ளுவர் சரித்திரம் ஆகியவை பற்றி அவருக்குத் தெரிந்திருக்கிறது; அவற்றை அவர் தமிழர்களின் மிகத் தொன்மையான நூல்கள் என்று கருதுகிறார்.

1874ஆம் ஆண்டு வெளியிடப்பட்ட ஏ.சி. பர்னலின் Elements of South Indian Paleography என்கிற நூலில் நான்காம் நூற்றாண்டிலிருந்து ஐந்தாம் நூற்றாண்டு வரையிலான கல்வெட்டுக்களின் மூலம் தென்னிந்தியாவின் 'உண்மையான' வரலாற்றை அளிக்கப் போவதாக உறுதி அளித்தார். இலக்கியத்தை ஒரு ஆதாரமாகக் கொண்டு தென்னிந்தியாவின் 'உண்மையான' வரலாற்றை எழுதுவதற்குப் பதிலாகக் கல்வெட்டுக்களின் மூலம் அதை எழுதலாம் என்பது அவரது கருத்தாக இருந்தது; இலக்கியத்தை ஆதாரமாகக் கொண்டு எழுதப்படுவனவற்றைச் சலிப்பூட்டும் வறட்டுக் கோட்பாட்டு ஆய்வுக் கட்டுரைகள் என்று அவர் ஒதுக்கினார். மிகப் பழைய இலக்கியக் கலாச்சாரம் முற்றிலும் சமஸ்கிருதக் கலாச்சாரம் என்றும், தமிழ் தவிர இதர பிரதேச மொழிகளில் 10ஆம் நூற்றாண்டுக்கு முன்னர் இலக்கியம் எதுவும் இருக்கவில்லை என்று அவர் வாதிட்டார். தமிழ் இலக்கியத்தின் தொடக்கம் பற்றிய அவரது கருத்துக்கள் வட்டெழுத்து வரிவடிவம் குறித்த அவர் உரையாடும் சந்தர்ப்பத்தில் தோன்றுகின்றது. வட்டெழுத்துப் பற்றி கருத்து கூறும்போது அவர் பின்வருமாறு எழுதுகிறார்:

"ஆதலால், அதைப் பாண்டிய எழுத்து என்று கூறலாம்; ஏனெனில், பாண்டிய ராஜ்ஜியத்தின் உச்சத்தில் அந்நாடு முழுவதும் அது பயன்படுத்தப்பட்டது. மேற்குத் தொடர்ச்சி மலைக்குக் கீழே இருந்த நாட்டிலும் அது ஒரு சிறிய அளவிற்குப் பயன்படுத்தப்பட்டது. மலபாரின்

தெற்குப் பகுதியும், இன்றைய கோயம்புத்தூரும் சேர்ந்த அந்தப் பகுதி சேர ராஜ்ஜியத்தைச் சேர்ந்தது. சோழர்களின் ஆட்சியில் 11ஆம் நூற்றாண்டில் படிப்படியாக வட்டெழுத்துக்களின் இடத்தை நவீன தமிழ் எழுத்துக்கள் பிடித்தன; ஆதலால், பாண்டிய ஆட்சி (அல்லது மதுரை ராஜ்ஜியம்) மிகவும் செழித்தோங்கிய காலத்தில், அல்லது அது இறுதியாக 11ஆம் நூற்றாண்டில் சோழர்களிடம் வீழ்வதற்கு முன்னர், தொல்காப்பியம், திருக்குறள் மற்றும் இதர பழைய தமிழ் இலக்கியங்கள் வட்டெழுத்துக்களால் எழுதப்பட்டன என்பது நிச்சயம். ஆனால், தமிழ் இலக்கியத்தின் தொடக்கம் 9ஆம் நூற்றாண்டு என எச்சரிக்கையுடன் சொல்ல முடியும் என்றபோதிலும் அதற்கு முன்னர் எந்த இலக்கியமும் எழுதப்பட்டதற்கான சான்றுகள் எதுவும் இல்லை. அகத்தியர் தென்னிந்தியாவில் குடியேறினார் என்கிற பழங்கதை வரலாற்று ரீதியாக எந்தப் பயனும் அற்றது; அந்த மூன்று திராவிட ராஜ்ஜியங்களும் சந்தேகத்திற்கு இடமின்றி தொன்மையானவை என்றபோதிலும், கி.பி. 640 வாக்கில் யுவான் சுவாங் (Hsuan Tsang) தீபகற்பத்திற்கு வருகை புரியும் வரை அவற்றின் நிலை பற்றி நமக்கு ஒன்றும் தெரியாது."

இ.ஆர். பாயர்லெய்ன் (E.R. Baierlein) தமிழ் இலக்கியம் குறித்து ஜெர்மானிய மதப்பிரச்சாரகர்

ஏ.சி. பர்னெல்லின் நூல் வெளியிடப்பட்ட அதே காலத்தில் எவாஞ்ஜலிக்கல் லூதரன் சபையின் மதப் பிரச்சாரகரான இ.ஆர். பாயர்லெய்னின் The Land of Tamulians என்கிற நூல் ஜெர்மானிய மொழியிலிருந்து ஆங்கிலத்திற்கு ஜே.டி.பி. கிரிப்பிள் (J.D.B. Gribble) என்பவரால் மொழிபெயர்க்கப்பட்டு வெளியிடப்பட்டது. 'மக்களும் அவர்களது இலக்கியமும்' என்கிற தலைப்பில் அந்த நூலில் பாயர்லெய்ன் ஒரு அத்தியாயம் வைத்திருந்தார். தமிழ் இலக்கியம் மற்றும் அதன் வரலாறு குறித்த ஜெர்மன் மதப்பிரச்சாரகரின் புரிதல் காலனிய ஆட்சியாளர்களின் புரிதலில் இருந்து வேறுபட்டதல்ல என்பதை இந்த அத்தியாயத்தைப் படித்தால் புரிந்து கொள்ளலாம். பண்டைய காலத்தில் தென்னிந்தியாவில் மூன்று அரசாட்சிகளின் வரலாற்றைக் கிரேக்க ஆதாரங்களைக் கொண்டு விளக்கிய பின்னர், தமிழ் மொழியும் இலக்கியமும் மதுரையில்தான் பேணி வளர்க்கப்பட்டது என்று பாயர்லெய்ன் வாதிடுகிறார். தமிழ் இலக்கியத்தின் தொடக்கம் குறித்துக் காலனிய நிர்வாகிகள் அடிக்கடி மீண்டும் மீண்டும் கூறிக் கொண்டிருந்த நமக்குப் பரிச்சயமான கதையை அவர் கூறுகிறார். அவர் பின்வருமாறு வாதிட்டார்:

"இந்திரன் தானே வைத்ததாகச் சொல்லப்படும் ஒரு பழைய லிங்கம் இருந்த இடத்தின் மீது மதுரை நகரம் கால சேகரனால் நிர்மாணிக்கப்பட்டது. குறுகிய காலத்திலேயே இந்தத் துடிப்பும் வலிமையும் மிக்க ராஜபீடத்தில் 48 புலவர்களுடன் ஒரு உயர்பள்ளி தோன்றி எழுந்தது; இங்குதான் வடக்கின் சமஸ்கிருத மொழியிலிருந்து முற்றிலும் வேறுபட்ட தனிப்பண்பு கொண்ட தமிழ்மொழி பேணிவளர்க்கப்பட்டது. என்றபோதிலும், காலப் போக்கில் தமிழ் மொழி தன்னுடைய தூய்மையை இழக்கும் அபாய கட்டம் வரையிலும் அந்தப் புலவர்கள் ஆற்றின் போக்கிலேயே நீந்தத் தொடங்கினார்கள். அந்தத் தருணத்தில்தான், அப்போது இல்லாதிருந்த மெட்ராசின் மைலாப்பூரில் இருந்து பூசாரியும் நெசவாளருமான ஒரு பறையர் வந்தார்; அது மிகத் தொலைதூரக் கடந்த காலம் இல்லை. திருவள்ளுவர் என்று பெயர் கொண்ட அந்தப் புதியவர் மிக உயர்ந்த தூய தமிழில் எழுதப்பட்ட தன்னுடைய குறள்

கி.பி. 9ஆம் நூற்றாண்டு வாக்கில் மதுரையில் சமணமும் பவுத்தமும் தனிச்சிறப்பு பெற்ற காலத்தில் குணசேகர மன்னன் வாழ்ந்தான் என்று அவர் வாதிடுகிறார். இந்தக் காலத்தில்தான் சமணர்களுக்கும் சைவர்களுக்கும் இடையில் கடுமையான மோதல் நிகழ்ந்து கொண்டிருந்தது என்றும் அவர் வாதிடுகிறார். அதன் விளைவாக, சம்பந்தர் மன்னரின் நோயைக் குணப்படுத்தும் மந்திரச் செயல் மூலம் குணசேகரனைச் சைவ மதத்திற்கு மாற்றினார் என்பது பாயர்லெய்னின் கருத்து.

பாக்களைப் பாடுவதற்கான வாய்ப்பைப் பெறுவதில் வெற்றி பெற்றார்; இவ்விதமாகத் தமிழில் அவர் ஒரு புரட்சியை ஏற்படுத்தினார்."

கி.பி 9ஆம் நூற்றாண்டு வாக்கில் மதுரையில் சமணமும் பவுத்தமும் தனிச்சிறப்பு பெற்ற காலத்தில் குணசேகர மன்னன் வாழ்ந்தான் என்று அவர் வாதிடுகிறார். இந்தக் காலத்தில்தான் சமணர்களுக்கும் சைவர்களுக்கும் இடையில் கடுமையான மோதல் நிகழ்ந்து கொண்டிருந்தது என்றும் அவர் வாதிடுகிறார். அதன் விளைவாக, சம்பந்தர் மன்னரின் நோயைக் குணப்படுத்தும் மந்திரச் செயல் மூலம் குணசேகரனைச் சைவ மதத்திற்கு மாற்றினார் என்பது பாயர்லெய்னின் கருத்து.

**ஜி.யு. போப் (G.U. Pope), வால்டர் எலியட் (Walter Elliot) மற்றும் ஜீலியன் வின்சோன் (Julien Vinson)**

செவ்வியல் தமிழ் இலக்கியம் பற்றி அறிந்திருந்த விஷயத்தில் ஜி.யு. போப்பும் (1820-1908), ஜீலியன் வின்சோன் (1843-1926) 19ஆம் நூற்றாண்டு ஐரோப்பியத் தமிழ் அறிஞர்களில் தனிச் சிறப்பு மிக்கவர்களாக இருக்கின்றனர். இருவருமே உ.வே. சாமிநாத அய்யருடன் கடிதத் தொடர்பு வைத்திருந்தனர். இந்த வகையில், தமிழ் இலக்கியத்தின் கடந்த காலம் குறித்த அவர்களது கண்ணோட்டத்தில் காலப் போக்கில் ஏதேனும் மாற்றம் ஏற்பட்டிருக்கிறதா என்பதைக் காண்பதற்கு அவர்களை விரிவாக ஆராய வேண்டியது அவசியமாகிறது. முதலில் ஜி.யு. போப் மற்றும் வால்டர் எலியட்டின் கருத்துக்களை விரிவாகக் காண்போம்; பின்னர் பிரெஞ்சுத் தமிழ் அறிஞர் ஜீலியன் வின்சோனின் எழுத்துக்களுக்குள் நுழைவோம். 1883ஆம் ஆண்டு ஜி.யு. போப் தன்னுடைய A Hand book of the ordinary dialect of the Tamil Language என்கிற நூலின் தமிழ் மொழி மற்றும் இலக்கியம் ஆகியவற்றின் வரலாறு குறித்த பகுதியில் திருக்குறள், ஆத்திசூடி, கொன்றை வேந்தன், மூதுரை, சீவக சிந்தாமணி, நாலடியார் மற்றும் கம்பராமாயணம் ஆகியவை பற்றி மட்டுமே குறிப்பிடுகின்றார்; இலக்கண நூலான தொல்காப்பியம் தவிர சங்க இலக்கியப் படைப்புகள் எதையும் குறிப்பிடவில்லை. 1893இல் கூட நாலடியாருக்கு தான் எழுதிய முன்னுரையில் ஆரம்ப காலத் தமிழ் இலக்கியத்தின் கால வரிசை குறித்த விவாதத்தில் ஈடுபடத் தனக்கு விருப்பமில்லை என்பதைத் தெரிவிக்கிறார். என்றபோதிலும், இந்த விருப்பமின்மை தமிழ் இலக்கியத்தின் தொடக்கங்கள் குறித்துக் கருத்துக் கூறுவதிலிருந்து அவரைத் தடுக்கவில்லை. எனவே, அவரது பின்வரும் கூற்று தமிழ் இலக்கியத்தின் கடந்த காலம் குறித்த அவரது புரிதலுக்கு ஒரு சாட்சியமாகும்.

"இந்த அல்லது அந்த தமிழ் செவ்வியல் இலக்கியத்தின் காலம் பற்றிய விவாதத்தில் ஈடுபட இங்கு நான் விரும்பவில்லை; ஏனெனில், ஆதாரமாகச் சொல்வதற்கு ஆராய்ந்து கண்டுபிடிக்கப்பட்ட உண்மைகளோ அல்லது பண்டைய கல்வெட்டுக்களோ எதுவும் இல்லை. இவ்விஷயங்கள் குறித்து விவாதிப்பதற்கு தமிழ் இலக்கியத்துடன் விமரிசனபூர்வ பரிச்சயமும், அதனுடன் கூடவே மனமும், ஓய்வும், தொல்லியல் ஆய்வு செய்வதற்கான வாய்ப்பும் (இவை என்னிடம் இல்லை) தேவைப்படுகிறது. கடைசியாகக் கூறப்பட்ட அந்த இன்றியமையாத ஆய்வின்மை மற்றபடி ஆழமான ஆராய்ச்சிகள் பலவற்றைக் கிட்டத்தட்ட மதிப்பற்றவையாக ஆக்கிவிட்டது. தமிழ் இலக்கியத்தின் மிகச் சிறந்த படைப்புகள் பலவற்றை மிகக் கவனமாக ஆராய்ந்தது கி.பி. 8ம் நூற்றாண்டிற்கும் கி.பி. 12ஆம் நூற்றாண்டிற்கும் இடையில் இந்தப் படைப்புகளில் மிகச் சிறந்தவை எழுதப்பட்டன என்கிற எண்ணத்திற்கு என்னை இட்டுச் செல்கின்றது. எனக்குத் தெரிந்த வரையில், நாம் நம்புவதற்கு இலக்கியத்திற்குள் இருக்கும் சான்றுகள் மட்டுமே இருக்கின்றன."

இந்தக் கூற்றை வலுப்படுத்துவதற்காக யுவான் சுவாங்கின் (Hsuan Tsang) தென்னிந்தியப் பயணத்தின் பரிச்சயமான ஒரு நிகழ்வைக் குறிப்பிடுகிறார். தமிழ் இலக்கியத்தின் கடந்த காலம் பற்றி எழுதும்போது வெகு சில ஆங்கிலேயர்களே இந்த நிகழ்வை உதவிக்கு அழைக்கின்றனர். அவர் பின்வருமாறு வாதிட்டார்:

"மலக்கூட்டாவிலிருந்த மக்கள் செல்வம் தேடுவதில் நாட்டம் கொண்டிருந்தார்களே ஒழிய இலக்கியத்தை வளர்ப்பதில் அதிக நாட்டம் கொண்டவர்களாக இருக்கவில்லை என்று கி.பி. 640இல் இந்தியாவிற்கு வருகை தந்த புத்த மதப் பயணியான யுவான் சுவாங் கூறுகிறார். சமணர்களே பிரதான பிரிவினராக இருந்தனர் என்று குறிப்பிடுகின்றார். இந்த மலக்கூட்டா என்பது மலக்கோட்டா, மலைநாடு, மலையா, மலையாளம் ஆகியவையாக இருக்கலாம்; மற்றும் அது மெட்றாஸ் ராஜதானியின் தென்பகுதி

மொத்தத்தையும், பாண்டிய மற்றும் சேர ராஜ்ஜியங்கள், உள்ளடக்கியது போல் தெரிகிறது. (ஹல்ட்ச், தென்னிந்திய கல்வெட்டுகள், தொகுப்பு 2. பகுதி 1). சமணர்கள் சிறந்த மாணவர்களாகவும், நூல்களை நகலெடுப்பவர்களாகவும் இருந்தனர். (பர்னெல், தென்னிந்திய வரிவடிவ ஆய்வு, பக் 88). கி.பி 7ஆம் நூற்றாண்டு சமணர்களுடைய ஆதரவுடன் தமிழ் இலக்கியத்தின் தொடக்கத்தைக் கண்டது என்று நாம் உறுதியாக நம்பலாம்."

1891ஆம் ஆண்டு மெட்ராஸ் கிறித்துவக் கல்லூரியின் சஞ்சிகையில் வெளியான பி. சுந்தரம் பிள்ளையின் கட்டுரை பற்றிப் போப்புக்குத் தெரிந்திருந்தது. அதில் தமிழ் இலக்கிய வரலாற்றின் காலத்தைச் சுந்தரம் பிள்ளை முன்னுக்குத் தள்ள முயற்சிக்கிறார். நாலடியாருக்கு எழுதிய முன்னுரையில் சுந்தரம் பிள்ளையின் இந்தக் குறிப்பிட்ட கட்டுரை பற்றி அடிக்குறிப்பில் மேற்கோள்காட்டித் தமிழ் இலக்கியக் கடந்த காலம் பற்றிய காலவரிசையை நிர்ணயிப்பதில் சமீபத்தில் எடுக்கப்படும் முயற்சிகளைப் புரிந்து கொள்ளுமாறு வாசகர்களுக்குச் சுட்டிக் காட்டுகிறார். இவ்வளவு தெரிந்திருந்த போதிலும் போப் தமிழ் இலக்கியத்தின் காலவரிசை பற்றிய விவாதத்தில் ஈடுபட விரும்பவில்லை என்பது மட்டுமல்ல சுந்தரம் பிள்ளையின் கண்டுபிடிப்புகளை ஏற்றுக் கொள்ளவும் தயங்கினார். அவரது திருக்குறளின் ஆங்கில மொழியாக்கம் முதலில் The Indian Antiquary இதழில் 1878லிருந்து 1881 வரையில் வெளியானது. 1878ஆம் ஆண்டு திருக்குறளை மொழி பெயர்க்கும்போது போப் பின்வருமாறு கூறினார்:

"நமது புலவர் செழித்தோங்கிய காலத்தை நிர்ணயிக்க நமக்கு உதவக் கூடிய எந்தத் தரவும் இல்லை. அநேகமாக கி.பி. 1000லிருந்து 1200 வரையிலான காலத்தைச் சேர்ந்தது என்று நான் நினைக்கிறேன். நடை தொன்மையானதாக இல்லை; சீவக சிந்தாமணியை விடத்தொன்மை மிகக் குறைவாகவே இருக்கிறது."

1886ஆம் ஆண்டு திருக்குறளின் ஆங்கில மொழியாக்கம் ஜி.யு. போப்பால் முழுமையாக வெளியிடப்பட்டபோது அந்த இலக்கியப் படைப்பின் கால நிர்ணயிப்பில் ஒரு சிறு மாறுதல் செய்தார். திருக்குறள் கி.பி 8 மற்றும் 10ஆம் நூற்றாண்டுகளுக்கு இடைப்பட்ட காலத்தைச் சேர்ந்ததாக இருக்கலாம் என்று வாதிட்டார். தென்னிந்திய அல்லது திராவிட மொழிக் குடும்பம் தொடர்பான, பண்டைய இலக்கியப் படைப்பான புறநானூற்றின் மொழிபெயர்ப்பு தொடர்பான குறிப்புகளில் கூடப் பண்டைய தமிழ் இலக்கியப் படைப்புகளின் காலம் சம்பந்தப்பட்ட அம்சத்திற்குள் நுழையவே இல்லை. எங்கெல்லாம் அவர் அது பற்றி கருத்துக் கூறினாரோ அங்கெல்லாம் ராபர்ட் கால்டுவெல்லைப் போலவே தமிழ் இலக்கியத்தின் தொடக்ககாலம் கி.பி 9ஆம் நூற்றாண்டு என்றார்.

தென்னிந்தியாவின் தொல்பொருள் ஆராய்ச்சியில் ஆர்வம் கொண்டிருந்த மற்றொரு ஆங்கிலேயர் வால்டர் எலியட் (Walter Elliot). பிரான்சிஸ் எல்லிசின் கட்டுரைகளைப் பாதுகாத்து வெளியிட்டது வால்டர் எலியட் மட்டுமே செய்ததாகும். 1850களிலிருந்து 1887இல் இறக்கும் வரையிலும் தென்னிந்தியாவின் வரலாறு மற்றும் கலாச்சாரம் குறித்த கட்டுரைகளைப் பல்வேறு இதழ்களில் அவர் எழுதினார். அவரது மரணத்திற்கு முந்தைய அவரது கடைசிக் கட்டுரை நேரடியாகத் தமிழ் செவ்வியல் இலக்கியத்துடன் சம்பந்தப்பட்டது என்பதால் நம்முடைய ஆய்வுக்கு அது மிக முக்கியமாகும். 'The Importance of Early Dravidian Literature' என்கிற தலைப்பிலான அந்தக் கட்டுரையில், பண்டைய தமிழ் இலக்கண நூலான தொல்காப்பியத்திற்கு எழுதப்பட்ட ஒரு நீண்ட விளக்கவுரை அச்சிட்டு வெளியிடப்படுவது தொடர்பாக தன்னுடைய தமிழக நண்பரிடமிருந்து செய்தி வந்துள்ளதாக The Indian Antiquary என்கிற இதழின் வாசகர்களுக்கு அறிவித்தார். அவர் பின்வருமாறு மேலும் கூறினார்:

"இந்த தொகுப்பின் மீது நான் கவனத்தை ஈர்ப்பதன் நோக்கம், அதன் ஒரு முழு மொழி பெயர்ப்பு தென்னிந்தியாவின் ஆரம்ப கால மக்களின் இனநிலை பற்றி அநேகமாகத் தெளிவுபடுத்தக்கூடும் என்று குறிப்பிடுவதற்காகத்தான்; குறிப்பாக, அவர்களை நர மாமிசம் உண்ணும் இனம் என்று குறிப்பிட்டிருந்தேனே அந்தப் பகுதியை அநேகமாக தெளிவுபடுத்தக் கூடும்."

மேற்கோள் காட்டப்பட்டுள்ள இந்த பத்தியிலிருந்து, அந்தப் படைப்பின் மொழி அம்சத்தை விட இனத் தோற்றவியல் முக்கியத்துவத்திலேயே அதிக ஆர்வம் கொண்டவராக இருந்தார் என்பது கண்கூடு. தொல்காப்பியத்தின் கவித்துவ மற்றும் மொழியியல் வழக்காறுகள் எலியட்டின் கவனத்தைப் பெறுவதற்குப் பதிலாக குடியேற்றங்களின் வரலாறு, இனக்குழுக்களுக்கு இடையிலான

யுத்தம், திருமண நடைமுறைகள் போன்றவை அவரது கவனத்தைப் பெற்றன. தென்னிந்தியாவின் பல்வேறு பகுதிகளுக்கு அவர் பயணங்கள் மேற்கொண்டபோது எண்ணற்ற வீரக்கற்களைக் கவனித்த அனுபவத்தையும், இலக்கிய மற்றும் இலக்கணப் படைப்புகளை விளக்குவதற்கு இதை எப்படிப் பயன்படுத்த வேண்டும் என்பதையும் நினைவு கூர்ந்தார்.

"தொல்காப்பியத்தின் ஆசிரியர் அகத்திய முனிவரின் முதன்மைச் சீடராக இருந்தவர் என்று குறிப்பிடப்படுகிறார். அவர் பிறந்த ஊரின் பெயரிலிருந்து அவருக்குத் தொல்காப்பியனார் என்று பெயர் பெற்றார். அதுவே தன்னுடைய மகத்தான படைப்பிற்கு அந்தப் பெயர் வைக்கக் காரணமாக இருந்தது. ஆனால், தொல்காப்பியம் இன்னும் பழைய காலத்தைச் சேர்ந்தது என்பதற்கும், வடக்கிலிருந்து பிராமணீய மதப்பிரச்சாரகர்கள் குடியேறுவதற்கு முன்னர் செழித்தோங்கிய இன்னும் தொன்மையான திராவிட இலக்கியத்தின் மிச்சம் என்பதற்கும் சாத்தியமில்லை என்று சொல்ல முடியாது. அப்படி எனில், தொல்காப்பியமும் மற்ற சமகால இலக்கியங்களும் செவ்வியல் மற்றும் இனத்தோற்றவியல் மதிப்புமிக்க அறிவுச் சுரங்கங்களை அளிக்கவல்லவை. நான் இதைச் சொல்வதன் நோக்கம், மெட்ராஸ் பல்கலைக்கழகத்தின் பேராசிரியர்கள் சிலர் அதன் உட்பகுதிகளை ஆராயுமாறு தூண்டப்படுவார்கள் என்கிற நம்பிக்கையை வெளிப்படுத்துவதற்காகத்தான்; பம்பாயிலும் வங்கத்திலும் உள்ள தனிச் சிறப்பு மிக்க தங்களது நாட்டவர்களை முன்மாதிரியாகக் கொண்டு, தங்களது சொந்த மண்ணின் வழக்கமான இலக்கியம், பழக்க வழக்கங்கள், சடங்கு சம்பிரதாயங்கள் மற்றும் இதரவை மீது ஒளி பாய்ச்சுவார்கள் என்கிற எதிர்பார்ப்பில்தான் இதை நான் கூறுகிறேன்."

"இந்த விஷயம் குறித்து கவனம் ஈர்க்கப்படுவது இது முதல் முறையல்ல; பண்டைய திராவிட இலக்கியம், குறிப்பாகத் தமிழ் இலக்கியம், எவ்வளவு மகத்தானது என்பதை 15 வருடங்களுக்கு முன்பு திரு. கோவர் அவர்கள் தகுதி மிக்க நிபுணர்களின் ஆதரவுடன் சுட்டிக் காட்டினார்."

பின்னர், பண்டைய தமிழ் இலக்கியப் படைப்புகளை மீட்டு, பதிப்பிக்க வேண்டும் என்று தனது 'தென்னிந்திய நாட்டுப்புறப் பாடல்கள்' என்கிற நூலில் சார்லஸ் கோவர் விடுத்திருந்த வேண்டுகோளை எலியட் மேற்கோள் காட்டுகிறார்.

தமிழின் பவுத்த சமண காவியங்களைப் பிரெஞ்சு மொழியில் மொழி பெயர்த்ததிலிருந்து 1903இல் தமிழ்மொழி பற்றிய ஒரு குறிப்பேட்டைத் தொகுத்தது வரையில் ஜூலியன் வின்சோன் (1843-1926) தமிழ் மொழிக்குப் பலவிதமாகப் பங்களித்துள்ளார். உ.வே. சாமிநாதையருடன் கடிதத்தொடர்பு வைத்துக் கொண்டிருந்தார்; தமிழ் இலக்கியப் பதிப்புலகின் வளர்ச்சிப் போக்குகளைக் கவனித்துக் கொண்டிருந்தார். குறிப்பேட்டிற்குத்தான் எழுதிய முன்னுரையில் தமிழ் இலக்கியம் குறித்த தனது கருத்துக்களை வின்சன் சுருக்கமாகத் தொகுத்தளிக்கிறார். பி. சுந்தரம் பிள்ளையின் Some Milestones in the History of Tamil Literature என்கிற நூல் பற்றியும், 'சித்தாந்த தீபிகா' இதழில் திருமலைக்கொழுந்து பிள்ளை எழுதிய கட்டுரைகள் பற்றியும் அவர் அறிந்திருந்தார்.

1897இல் வெளியிடப்பட்ட எம். சேஷகிரி சாஸ்திரியின் 'தமிழ் இலக்கியம் குறித்த ஒரு கட்டுரையிலிருந்தும் அவர் மேற்கோள்கள் காட்டியிருக்கிறார். பி. சுந்தரம்பிள்ளை, திருமலைக்கொழுந்து பிள்ளை மற்றும் சேஷகிரி சாஸ்திரி போன்ற உள்நாட்டு அறிஞர்கள் தமிழ் இலக்கியத்தின் துவக்க காலம் குறித்த ஐரோப்பிய அறிஞர்களின் வாதங்களை மறுத்துரைத்தனர். அவர்களது எழுத்துக்கள் பற்றி வின்சோன்னிற்குத் தெரிந்திருந்தபோதிலும் அவர்களது முடிவுகளை அவர் ஏற்றுக் கொள்ளவில்லை. கலித்தொகை, சிலப்பதிகாரம், மணிமேகலை, நாலடியார், பழமொழி போன்ற நூல்கள் இன்று மத்திய காலம் என்றழைக்கப்படும் காலத்தைச் சேர்ந்தவை என்றார். தொல்காப்பியம்தான் இன்றும் இருக்கும் தமிழின் மிகத் தொன்மையான படைப்பு என்று நம்பினார். வின்சோன் சாமிநாத அய்யருடன் கடிதத் தொடர்பு வைத்துக் கொண்டிருந்தபோதிலும் முதலாம் உலக யுத்தம் தொடங்குவதற்குப் பல ஆண்டுகள் முன்னரே அவரது ஆர்வம் தமிழில் இருந்து பாஸ்க் (Basque) மொழிக்கும் பொதுவான மொழியியலுக்கும் மாறியது.

தமிழ் செவ்விலக்கியம் (எகா: சங்க இலக்கியம்) பற்றித் தெரிந்திருந்தபோதிலும் தமிழ் இலக்கியத்தின் காலம் பற்றிய தங்களது நிர்ணயத்தை ஐரோப்பிய அறிஞர்கள் மாற்றிக் கொள்ள விரும்பவில்லை என்பதற்கு ஜியு. போப் மற்றும் ஜூலியன் வின்சோன் ஆகியோரின் உதாரணங்கள் சான்றாக இருக்கின்றன.



# மயிர்பிளக்கும் வாதங்கள்
# அருட்பா - மருட்பா போரை முன்வைத்து

*ப. சரவணன்*

திருவருட்பா என்று பெயரிட்டு வள்ளலாரின் பாடல்களை வெளியிடுவதற்கு முன்பே அவை மக்களிடத்தில் பெரும் செல்வாக்கைப் பெற்றிருந்தன. பாடல்களைத் தொகுத்துத் திருமுறைகளாக வகுத்து முறைப்படி வெளியிட்டபோது அவற்றின் செல்வாக்கு மேலும் விரிவுபெற்றது.

'ஒருமையுடன் நினது திருமலரடி நினைக்கின்ற உத்தமர்தம் உறவு வேண்டும்' என்னும் திருவருட்பாப் பாடலைப் பாடிப் பரமனைத் துதித்த பக்தர்கள், 'அம்பலத்து அரசே அருமருந்தே' என்று பாடிப் பிச்சையெடுத்த பண்டாரங்கள், 'கொம்மியடிப் பெண்கள் கொம்மியடி' என்று பாடி வீடுகளைக் கோயிலாக்கிய பெண்கள், 'தெண்டனிட்டேன் என்று சொல்லடி' என்று பாடி இசையரங்குகளை மகிழ்வித்த இசைவாணர்கள், 'அருட்சோதி தெய்வம் எனை ஆண்டு கொண்ட தெய்வம்' என்று சங்கு முழங்கிச் சேமக்கலம் கொட்டிப் பிண ஊர்வலத்தின்போது பாடிய பணியாளர்கள், சைவர்கள் மட்டுமல்லாது வைணவ அருளாளர்கள் என ஆளாளுக்குத் தமது நிலையில் திருவருட்பாவின் புகழைப் பரப்பிக்கொண்டிருந்தனர். அகச்சான்றுகள் மட்டுமன்றிப் புறச்சான்றுகளும் திருவருட்பாவிற்கு இருந்த செல்வாக்கைப் பறைசாற்றுகின்றன.

திருஅருட்பா எனப் பெயர் சூட்டப்பட்டு முறையான பதிப்பு ஒன்று வெளியாவதற்கு 26 ஆண்டுகளுக்கு முன்பே மக்கள் செல்வாக்கின் காரணமாகத் திருவருட்பாப் பதிப்பு தொடங்கிவிட்டது. அதாவது வள்ளலார் பாடிய பாடலாகக் கருதப்பட்டுத் தற்போது ஊரன் அடிகள் பதிப்பில் (1972) உள்ள 'ஒருமையுடன் நினது திருமலரடி நினைக்கின்ற உத்தமர்தம் உறவு வேண்டும்' என்னும் புகழ்பெற்ற பாடல் இடம்பெறும் தெய்வமணிமாலை நூல் பதிப்பு 1851இல் வெளிவந்தது. எனினும் முறையான பதிப்பு வெளிவர வேண்டும் என்னும் எண்ணம் வள்ளலாரின் சீடர் இறுக்கம் இரத்தின முதலியாருக்கே உதித்தது.

இராமலிங்க அடிகளார் சென்னையை விட்டு வடலூர் சென்ற பின்பு (1857) அவரது பாடல் ஏடுகளைத் தொகுக்கும் முயற்சியில் இறுக்கம் இரத்தின முதலியார் ஈடுபட்டார். இப்பணி, 1860களில் மும்முரமானது. காரணம், வள்ளலாரது பாடல்களை வணிகநோக்கோடும் அச்சுப் பிழையுடனும் பலர் வெளியிட்டதேயாகும். அவ்வாறு வெளியிட்டவர்களை இரத்தின முதலியாரும், செல்வராய முதலியாரும் அணுகி அடிகளது பாடல்களைத் தாங்கள் முறையாக வெளியிடவிருப்பதால் இது தகாதெனக் கூறித் தடுத்தனர்; இழப்பீடாகப் பொருளும் தந்தனர். எனினும் அவர்கள் அச்சிடுவதை நிறுத்தவில்லை. இந்நிலையில் இறுக்கம் இரத்தின முதலியார் பாடல்களைத் தொகுப்பதிலும் அவற்றை வெளியிட அடிகளின் இசைவைப் பெறுவதிலும் தீவிரமாக முனைந்தார்.

திருவருட்பா ஏடுகளைத் தொகுத்தல், அச்சிடுதல் என இவை தொடர்பாக 1860 முதலே இறுக்கம் இரத்தின முதலியாருக்கும் வள்ளலாருக்குமிடையே கடிதப் போக்குவரத்து இருந்து வந்தது. திருவருட்பாவை வெளியிட இரத்தின முதலியார் ஏழு ஆண்டுகள் முயன்றார். அச்சுக்கு அனுமதி கோரியும் வள்ளலாரிடமுள்ள பாடல் ஏடுகளைத் தம்மிடம் அனுப்பி வைக்குமாறும் இறுக்கம் இரத்தின முதலியார் தொடர்ந்து கடிதம் எழுதிவந்தார். எனினும் வள்ளலார் பாராமுகமாகவே இருந்தார். தமது பாடல்கள் வெளியாவதில் அவருக்கு ஆர்வமோ விருப்பமோ இல்லை. எனவே இறுக்கம் இரத்தின முதலியார் ஓர் உபாயத்தைக் கையாண்டார். "பாடல் ஏடுகள் தம்மிடம் வந்து சேரும்வரை தாம் ஒருவேளை மட்டுமே உணவு உட்கொள்ளப் போவதாக" அடிகளாருக்குக் கடிதம் எழுதினார். கடிதத்தைக்



சென்னை, அயனாவரம் மாநகராட்சி மேல்நிலைப் பள்ளியில் முதுகலைத் தமிழாசிரியராகப் பணியாற்றி வருகிறார். 'அருட்பா – மருட்பா' எனும் நூலின் மூலம் தமிழுலகில் அறிமுகமானவர். மயிலை சீனி. வேங்கடசாமி அவர்களின் வெளிவராதப் படைப்புகளை 6 தொகுதிகளைப் பதிப்பித்தவர். இவரின் நூல்கள்: 'அருட்பா – மருட்பா கண்டனத்திரட்டு', 'நவீன நோக்கில் வள்ளலார்'.

கண்ணுற்ற அடிகள் திடுக்கிட்டுப் பாடல் ஏடுகளை இரு திங்களில் அனுப்புவதாகவும், ஒருவேளை உணவு மட்டுமே கொள்வதென்ற நிர்ப்பந்த ஏற்பாட்டைத் தவிர்க்கும்படியும், அதைத் தமக்குத் தபாலில் தெரிவிக்கும்வரை தாமும் ஒருவேளையே உணவு உண்ணப்போவதாகவும் பதில் மடலை (30.12.1860) வரைந்தார்.

இறுக்கம் இரத்தின முதலியாருக்கு அடிகளின் பாடல்களைத் திரட்டுவதில் ஐந்தாண்டுகள் கடந்தன. எனினும் பாடல்கள் முழுவதும் ஒன்று சேரவில்லை. அச்சுக்கு அடிகளின் இசைவும் கிடைக்கவில்லை. இந் நிலையில் இனியும் தாமதிக்க இயலாதென்றும் அச்சுக்கு இசைவளித்தே ஆக வேண்டுமென்றும் விண்ணப்பித்து 13.11.1865 அன்று பதிவுத் தபாலில் கடிதம் ஒன்றை அனுப்பினார். அதைக் கண்ட அடிகள், ". . . . . அக்கடிதத்தில் குறித்த விஷயம் எனக்குகத்துணை அவசியமின்றாயினுந் தங்கள் கருத்தின்படி இறைவன் என்னுள்ளிருந்து பாடுவித்தவைகளை மாத்திரம் தாங்களாயினும், மகா ஸ்ரீ ஸ்ரீ செல்வராய முதலியாரவர்களாயினும் தாங்கள் வரைந்தபடி செய்து கொள்ளலாம்" என்று பதில் மடல் எழுதிப் பாக்களை அச்சிட இசைவளித்தார்.


மீசையுடன் வள்ளலார்

பாக்களை வெளியிட அடிகளின் இசைவைப் பெற்ற இறுக்கம் இரத்தின முதலியார் வள்ளலாரின் ஏனைய சீடர்களான புதுவை வேலு முதலியார், சிவாநந்தபுரம் செல்வராய முதலியார், தொழுவூர் வேலாயுத முதலியார் ஆகியோருடன் இணைந்து அருட்பாவை வெளிக்கொணர்வதில் முனைப்புடன் செயல்பட்டார். அத்துடன் நூலின் தலைப்பேட்டில் வெறுமனே இராமலிங்கப் பிள்ளை என்று பொறிப்பதைக் காட்டிலும் 'இராமலிங்க சாமி' என்று பொறிக்கக் கருதி அதற்கான அனுமதி வேண்டி அடிகளுக்குக் கடிதம் ஒன்றை எழுதினார். மேலும் சிதம்பரம் பொருளாக அண்மையில் பாடிய பாடல்களையும் பாயிரத்தையும் அச்சுக்கு அனுப்புமாறும் குறிப்பிட்டிருந்தார்.

கடிதத்தைக் கண்ட அடிகள், ". . . நான் இங்கு வந்த பின்னர் சிதம்பர விஷயத்தில் தோத்திர மாலைகளும் சாத்திர மாலைகளுமாகச் சுமார் இருநூறு மாலைகள் செய்யப்பட்டிருக்கின்றன. அவைகள் வெளிப்படும் போது வெளிப்படுத்திக்கொள்ளலாம். இது நிற்க, 'இராமலிங்க சாமி'யென்று வழங்குவிப்பது என் சம்மதமன்று. என்னை? ஆரவாரத்திற்கு அடுத்த பெயராகத் தோன்றுதலின் இனி அங்ஙனம் வழங்காமை வேண்டும். ஜீவகாருண்யமும் சிவானுபவமும் அன்றி மற்றவைகளை மனத்தின்கண் மதியாதிருத்தல் வேண்டும்" என்று பதில் எழுதியிருந்தார்.

அடிகளின் இசைவு, பாடல்களின் தொகுப்பு என எல்லாம் முடிந்த பிறகு நூலுக்குப் பெயரிட வேண்டிய தருணம் வந்தது. அப்போது 'திருஅருட்பா' என்று பெயரிடப்பட்டது. பெயரை இட்டவர் அடிகளின் தலைமை மாணாக்கர் 'உபயகலாநிதிப் பெரும்புலவர்' தொழுவூர் வேலாயுத முதலியார். 1867இல் திருவருட்பாவினை முதன்முதலில் இவர் பதிப்பித்த காலத்தில்

நூலுக்குப் பெயரிடுவதில் அடிகள் எவ்விதக் கருத்தையும் தெரிவிக்கவில்லை. பாடல்களைப் பதிப்பித்த தொழுவூராரே இதனைத் தெரிவுசெய்தார். அதேபோலப் பாடல்களை வகைதொகைப்படுத்தி ஆறு திருமுறைகளாக வகுத்தவரும் அவரே.

திருவருட்பாவை ஆறு திருமுறைகளாக வகுத்த பின்பு ஆறில் முதல் நான்கு திருமுறைகள் மட்டும் ஒரே நூலாக 1867இல் தொழுவூராரால் முதன்முதலில் பதிப்பிக்கப்பட்டன. இதன் வெளியீட்டிற்குப் பொருளுதவி செய்தவர் மயிலை சிக்கிட்டி சோமசுந்தரம் செட்டியார். 'இராமலிங்க சுவாமிகள்' என்று வழங்கப்படாமை வேண்டும் என்று அடிகள் தடுத்து விட்டபடியால் நூல் முகப்பில் 'திருஅருட்பிரகாச வள்ளலார்' என்று பொறிக்கப்பட்டது.

நூலைக் கண்ட அடிகள் அதில் தமது பெயருக்கு முன் 'திருவருட்பிரகாச வள்ளலார்' என்று பொறிக்கப்பட்டிருந்ததைக் கண்டு அதிர்ச்சியடைந்து, "அந்த உபயகலாநிதிப் பெரும்புலவரை நோக்கி, பிச்! ஏங்காணும்! திருவருட்பிரகாச வள்ளலார் என்று உம்மை யார் போடச் சொன்னது?" என்று அதட்டிக் கேட்க, முதலியார் நடுநடுங்கியவராய் வாய்புதைத்து, வள்ளலாரது திருவடிகளைச் சிந்தித்தவண்ணமாய் நின்றிருந்தார். சிறிது நேர மௌனத்திற்குப் பின்னர் நமது அடிகளாரே உண்மை விளக்கம் தந்து அமைதி பெறச் செய்தார். அதாவது திருவருட்பிரகாச வள்ளலார் என்ற பெயரைத் 'திருவருள் பிரகாச வள்ளல் ஆர்?' எனப் பிரித்து வினாவாகக் கொண்டு, அதற்கு விடையாகக் கடவுள் அல்லது பதியேதான் திருவருட் பிரகாச வள்ளல் என்று உண்மையைச் சுட்டுவதாகக் கூறிவிட்டுத் தன்னை அப் பதியின் திருவடியிற் கிடக்கும் சிற்றணுவாகக் குறித்திட்டார். யாதெனில், திருவருட்பிரகாச வள்ளல் ஆர் என்ற சிதம்பரம் இராமலிங்கம் பிள்ளை எனக் குறித்திட்டார். தமது மாணவர் தமக்குச் சூட்டிய பட்டப் பெயரைத் தம் புலமைத் திறம் கொண்டு தெய்வத்துக்குச் சூட்டினார் அடிகள். அத்துடன் தமது பாடல்களில் பலவிடங்களில் இறைவனை 'வள்ளல்' என்று குறித்திருப்பதும் அவதானிக்கத்தக்கது.

வள்ளலாரின் கையெழுத்து

திருவருட்பா முதல் நான்கு திருமுறைகள் வெளியான பதிமூன்று ஆண்டுகள் கழித்து 1880இல் (வள்ளலாரின் மறைவுக்குப் பின்) ஐந்தாம் திருமுறை வெளிவந்தது. இந்நூலும் சோமசுந்தர செட்டியாரின் பொருளுதவியாலேயே தொழுவூராரால் பதிப்பிக்கப்பட்டது. முதல் நான்கு திருமுறைகளையும் அடுத்து ஐந்தாம் திருமுறையையும் பதிப்பித்து வெளியிட்ட தொழுவூர் வேலாயுத முதலியார் ஆறாம் திருமுறையை வெளியிடுவதில் அக்கறை காட்டவில்லை. ஏனெனில், வள்ளலாரின் ஆறாம் திருமுறைப் பாடல்கள் சமயம் கடந்த புரட்சிகரமான சமூகச் சீர்திருத்தப் பாடல்கள். இவரோ சைவத்தில் ஆழ்ந்த புலமையும் பற்றும் உடையவர். முதல் ஐந்து திருமுறைகளை வெளியிட மிகுந்த ஆர்வம் காட்டிய இறுக்கம் இரத்தின முதலியார் போன்றவர்களும் பொருளுதவி செய்த சோமசுந்தர செட்டியாரும் அமைதியாகவே இருந்தனர். இவர்கள் அனைவரும் சைவத்தில் மிக்க ஈடுபாடுடையவர்கள் என்பது குறிப்பிடத் தக்கது. ஆனால், அடிகளாரின் ஆணைக்கு அஞ்சித் தொழுவூரார் தம் வாழ்நாளில் ஆறாம் திருமுறையை வெளியிடவில்லை; அவரது காலத்துக்குப் பிறகே அச்சிடப்பட்டது என்று கூறுவார் மபொசி. இக்கருத்து ஏற்புடையதன்று. தொழுவூராரின் காலகட்டம் 1832-1889. திருவருட்பா ஆறாம் திருமுறை வெளியானதோ 1885இல். எனவே தொழுவூராரின் மறைவுக்கு முன்பே ஆறாம் திருமுறை வெளியானது என்பதும், சைவப் பற்றே அவரை ஆறாம் திருமுறையை வெளியிடாது தடுத்தது என்பதும் வெளிப்படை.

திருவருட்பாவின் தொடக்க காலப் பதிப்பாளர்கள் அமைதியாக இருந்ததினால், இனியும் காலம் தாழ்த்தாது ஆறாம் திருமுறையை

அச்சிட வேண்டும் என்ற எண்ணம் உடையவராய் வேலூர் பத்மநாப முதலியார் அச்சிட முன்வந்தார். பெங்களூர் இராகவலு நாயக்கர் அவருக்குத் துணைநின்றார். இவ்விருவரின் வேண்டுகோளுக்கு இணங்கிச் சென்னை மாநகர் அரசாங்க நார்மல் பாடசாலைத் தமிழ்ப் புலவர் சோடசாவதானம் தி.க. சுப்பராய செட்டியாரால் பார்வையிடப்பட்டு, திரிசிரபுரம் ம. லோகநாத செட்டியாரின் பொருளுதவியால் 1885ஆம் ஆண்டு ஆதிகலாநிதி அச்சகத்திலிருந்து ஆறாம் திருமுறை வெளியாயிற்று.

2

திருவருட்பா முதல் நான்கு திருமுறை வெளிவரவிருந்த காலகட்டத்தில் 1864இல் ஐந்தாவது முறையாக யாழ்ப்பாணத்திலிருந்து தமிழகம் வந்தார் ஆறுமுக நாவலர். நாவலர் யாழ்ப்பாணத்து நல்லூரிலே கார்காத்த வேளாளர் மரபிலே 1822 மார்கழி 5ஆம் தேதி பிறந்தார். ஐந்து வயதிலேயே வித்தியாரம்பஞ் செய்யப்பெற்றுச் சுப்பிரமணிய உபாத்தியாயரிடம் சில வருடம் கல்வி பயின்றார். சரவணமுத்துப் பிள்ளை என்பவரிடம் இலக்கிய, இலக்கண, ஞானசாத்திரங்களைக் கற்றார். சைவமே தமிழ் தமிழே சைவம் என்று வாழ்ந்த இவர் இலக்கியம், இலக்கணம், தர்க்கம், வேதாந்தம், சித்தாந்தம் முதலியவற்றைக் கற்ற அறிஞராகத் திகழ்ந்தார்.



நாவலரின் கையெழுத்து

சைவ சித்தாந்த சமயத்தைப் பரிபாலிக்கவும், அச் சமய நூல்களைப் பிரசுரிக்கவும், அவற்றைப் போதிப்பதற்குப் பாடசாலைகளை நிறுவவும், சித்தாந்த உண்மைகளைப் பிரசங்கிக்கவும், ‘புறமதஇருள்’களை ஓட்டவும் தமது வாழ்நாளைத் திருமணம்கூடச் செய்துகொள்ளாமல் அர்ப்பணித்துக்கொண்டவர் நாவலர். இருபது வயதில் பாதிரிமார்களால் நாவலருக்கு வேலை கிடைத்தபோதும் சைவத்தை வளர்க்கும்பொருட்டு அவர் அதனைத் துறந்தார். அதனால் அவரது சகோதரர்களின் கோபத்துக்கு ஆளாகி அவர்களை விட்டு நீங்கும் நிலையும் ஏற்பட்டது. பின் பெர்சிவல் பாதிரியாரின் நன்மதிப்பைப் பெற்றுப் பைபிளை மொழி பெயர்க்கும் பணியை ஏற்றார். தமிழகத்தில் சைவ வித்தியாநுபாலன அச்சியந்திர சாலையையும் பாடசாலையையும் நிறுவித் தமிழ்ப்பணி ஆற்றிவந்தார்.

நாவலர் சைவத்திற்கு எதிராக நடக்கும் எதனையும் கண்டிக்கத் தவறியதில்லை. கிறிஸ்துவக் கண்டனம், சைவதூஷண பரிகாரம் முதலியன இவரது கண்டனங்களுக்கு உதாரணம். திருவாவடுதுறை ஆதினம் உட்படப் பல ஆதினங்களோடு இவருக்கு நெருக்கமான உறவு இருந்தது. ‘நாவலர்’ என்னும் பட்டம் திருவாவடுதுறை ஆதினம் வழங்கியதாகும். நாவலர் செய்யக் கருதிய சிவபுண்ணியங்களுள் முக்கியமானது தேவார பாராயணத்தை எல்லாத் தலங்களிலும் நடைமுறைப்படுத்த முயன்றதாகும்.

இத்தகு பின்புலத்தோடு இருந்த நாவலர் தமிழகத்தில் சென்னையிலும் சிதம்பரத்திலும் வாழ்ந்தவர் என்றாலும் சிதம்பரத்தோடு அவருக்கிருந்த தொடர்பே அதிகம். இதை அவர் எழுதிய சிதம்பர மான்மியத்தால் அறியலாம். சிதம்பரத்தின்மீது நாவலருக்கு இருந்த ஈடுபாடு ஈழத்துச் சைவர்களிடையே பரம்பரை பரம்பரையாக இருந்த ஈடுபாட்டின் அடிப்படையிலே தோன்றியது என்பர். எனவேதான் ‘சைவப்பிரகாச வித்தியாசாலை’ (1864) ஒன்றை நாவலர் சிதம்பரத்திலே நிறுவினார். என்றாலும் நாவலரால் அங்கு ஆழமாக வேரூன்ற இயலவில்லை. இதற்குக் காரணம், தில்லைத் தீட்சிதர்களின் பகையைத் தேடிக் கொண்டதும், வள்ளலாரது பாடல்களை மருட்பா என்று கண்டனம் செய்ததுமாகும்.

சிதம்பரத்திலே சைவப்பிரகாச வித்தியாசாலையை நிறுவிய நாவலர் அங்கே சிவதரிசனம் செய்துவந்த நாட்களில் அக்கோயிலிலுள்ள தீட்சிதர்களின் பூசாவிதிகளையும் அநுட்டான ஆசாரங்களையும் கவனிக்க நேர்ந்தது. அதுபோது அவர்கள் செய்த குறைகள், அவர்கள் சிவதீட்சைப்

பெறாதவர்கள் என்பதை வெளிப்படுத்தின. அதைக் கண்ட நாவலர் தாம் நிறுவிய வித்யாசாலையிலே கூட்டமொன்றினைக் கூட்டித் தீட்சிதர்களின் குறைகளைச் சுட்டிக்காட்டிக் கண்டித்தார். அதில் முக்கியமானது யாதெனில், "சிவாகமத்தில் சொல்லப்பட்டபடியே சைவ ஆலயங்கள் நடத்தப்படவேண்டும்; சிவ தீட்சையில்லாத வைதிக பிராமணர்கள் கையால் விபூதி வாங்குதல் கூடாது; ஆகமங்கள்படி பிரதிட்டை செய்த கோயில்களிலே தீட்சை பெறாதவர்களைக் கொண்டு பூசைகள் செய்வித்தல் கூடாது." இதை அவர் எழுதிய சிதம்பர சைவப்பிரகாச வித்தியாசாலை முதலாம் ஆவேதனத்தில் காணலாம்.

சைவப்பிரகாச வித்தியாசாலையை நிறுவச் சென்ற நாவலர் சிதம்பரத்திலே தீட்சிதர்களின் பகையைத் தேடிக்கொண்டார். ஆத்திரமடைந்த தீட்சிதர்கள் நல்ல தருணம் நோக்கியிருந்தனர்.

ஆறுமுக நாவலர் ஐந்தாவது முறையாகத் தமிழகம் வந்த காலத்தில்தான் 'அருட்பா x மருட்பா' விவாதம் நிகழ்ந்தது. வள்ளலாரின் பாடல்களுக்கு மக்களிடையே இருந்த செல்வாக்கின் காரணமாக அவை சென்னையிலுள்ள சில கோயில்களில் பஞ்சபுராணங்களுக்குப் பதிலாக ஓதப்பட்டு வந்தன. இதனைக் கண்ட நாவலர் அருட்பா என்பது தேவாரம், திருவாசகம், திருவிசைப்பா, திருப்பல்லாண்டு, பெரியபுராணம் என்னும் ஐந்து புராணங்களேயொழிய மற்றவையல்ல என்று தாம் நிகழ்த்திவந்த சுக்கிரவாரப் பிரசங்கங்களிலே விளக்கி வந்தார். அருட்பாவிற்கு விளக்கம் தருவதாக மட்டும் அக்கூட்டம் அமையாமல் வள்ளலாரையும் அவரது பாடல்களையும் நேரடியாகக் கண்டனம் செய்வதாகவும் இருந்தது. வள்ளலாரது பாடல்களை அருட்பா என்று சொல்வதை நாவலர் விரும்பவில்லை. பட்டினத்தார் பாடல் திரட்டு, குமரகுருபரர் பாடல் திரட்டு, தாயுமானவர் பாடல் திரட்டு என்று அழைப்பதைப் போல வள்ளலாரது பாடல்களையும் அவரது பெயராலேயே இராமலிங்கர் பாடல் திரட்டு என்று அழைக்க வேண்டும் என்பதே நாவலரது வாதம்.

அருட்பா x மருட்பாப் பிரச்சினை நூல் வடிவம் பெறுவதற்கு முன்பாகவே அது பற்றிய விவாதம் பலமுறை நிகழ்ந்தது. ஆனால் வள்ளலாரோ அவர்களது சார்பாளர்களோ நாவலருடன் நேருக்கு நேராக வாதிடவில்லை. நாவலரது அருட்பாப் பிரசங்கத்திற்குக் கண்டனம் தெரிவிப்பதற்காக முதன்முதலில் திருமயிலை சண்முகம் பிள்ளை அவர்களால் 1868 ஜனவரியில் திருவருட்பா தூஷண பரிகாரம் என்னும் நூல் அச்சிட்டு வெளிப்படுத்தப்பட்டது. அருட்பா மருட்பாப் பிரச்சினையில் வெளியான கண்டன நூல்களில் இதுவே முதலாவது. நாவலர் எழுப்பிய பல கேள்விகளுக்கு இந்நூல் பதிலளித்தது.

'அருட்பா' பற்றிய பிரசங்கத்தை மட்டும் நாவலர் செய்து வந்திருந்தால் பின்னாளில் உருவான இப்பிரச்சினை அவ்வளவு வலுப் பெற்றிருக்காது. அல்லது வள்ளலாரையும் அவரது பாக்களையும் மறைமுகமாகக் கண்டித்திருந் தாலாவது இப்பிரச்சினை அடங்கிப் போயிருக்கும். ஆனால் எதையுமே நேரிடையாகக் கண்டனம் செய்யும் நாவலரின் இயல்பு அதனைத் தனிமனித ஆளுமைப் பிரச்சினை வரை இழுத்துச் சென்றுவிட்டது.

அருட்பா x மருட்பாக் கண்டனங்கள் நடைபெற்றுவந்த இக்கால கட்டத்தில் நாவலரின் சீடரான சி.வை. தாமோதரம் பிள்ளை (1832-1901) தொல்காப்பியம் சொல்லதிகாரத்தைச் சேனாவரையர் உரையோடு, நாவலர் உதவியோடு பரிசோதித்துப் பதிப்பித்தார். 1868 அக்டோபர் 31ஆம் தேதி முதல் அந்நூல் பற்றிய விளம்பரம் சென்னைப் பதிப்பு தினவர்த்தமானியில் தொடர்ந்து வெளிவந்தது. அவ்விளம்பரத்திலே தாமோதரம் பிள்ளை, நாவலரை "இலக்கண இலக்கியங்களில் மகா வல்லவரும் சென்னை முதல் ஈழமீறாகவுள்ள தமிழ்நாட்டு வித்துவான்களில் தமக்கு இணையில்லாதவருமாகிய . . .'' என்று புகழ்ந்திருந்தார். இது தமிழக அறிஞர்களை அவமதிப்பதாக உள்ளதென வள்ளலார் சார்பாளர்கள் எண்ணினர். இதற்கு முன்பே திருவருட்பாவைப் பற்றி ஈழத்தவர் குறைகூறுதலும் அதற்கு மறுப்புத் தெரிவித்தல் என்பதும் தொடர் நிகழ்வாக நிகழ்ந்து வந்தன. எனவே திருவருட்பா நூற்குற்றம், தமிழக அறிஞர்கள் அவமதிப்பு என்னும் இரு பிரச்சினைகளை முன்னிறுத்தி வள்ளலாரின் மாணவர்களுள் ஒருவரான நரசிங்கபுரம் வீராசாமி முதலியார் விஞ்ஞாபனப் பத்திரிகை என்னும் கண்டன நூலை எழுதி வெளியிட்டார். முதலியார் இந்நூலை எழுதி

வெளியிடுவதற்குத் தூண்டுகோலாக இருந்தவர்கள் கோமளபுரம் இராஜகோபாலப் பிள்ளையும் தொழுவூர் வேலாயுத முதலியாரும் ஆவர். அந்நூலின் இறுதியில், இனி அச்சிற் பதிப்பிக்கப்படுவன தீபா ந்திர சைவ விநோத சரிதம், புரளிப் பிரசங்க விநோத சரிதம் என்னும் இரு நூல்களின் பெயர்கள் விளம்பரப்படுத்தப் பட்டிருந்தன.

வீராசாமி முதலியாரின் கண்டனத்திற்கு மறுப்புத் தெரிவிக்கும் வகையில் நல்லறிவுச் சுடர் கொளுத்தல் என்னும் நூல் சென்னை சிவபாதநேசப் பிள்ளை என்பவரால் எழுதப்பெற்று நாவலரின் சம்மதத்தோடு பதிப்பிக்கப்பட்டது. ஆனால் இந்நூலை நாவலரே எழுதினார் என்பார் பண்டிதமணி சி. கணபதிப் பிள்ளை.


போலியருட்பா மறுப்பின் கண்டனம்.
அல்லது
குதர்க்காரணிய நாசமஹா பரசு.

நல்லறிவுச் சுடர் கொளுத்தலுக்கு மறுப்புத் தெரிவிக்கும் வகையில் வள்ளலாரின் சார்பாக வெளியான நூல் அகங்காரதிமிரபானு. இந்நூல் பற்றிய விவரம் ஏதும் கிடைக் காதபோதும் இதனை எழுதியவர் தொழுவூர் வேலாயுத முதலியாராக இருக்கக்கூடும் என்பதை இறுக்கம் இரத்தின முதலியார் சாலை ஸ்ரீ சண்முகம் பிள்ளைக்கு எழுதிய கடிதத்தால் அறியலாம்.

இதே நேரத்தில் கூடலூர் விசுவலிங்க முதலியார் என்பவர் பிரார்த்தனைப் பத்திரிகை என்னும் சிறு பிரசுரத்தை எழுதி வெளியிட்டார்.

இக்கண்டனத்தை அடுத்து வெளிவந்தது போலியருட்பா (1869) என்னும் துண்டுப் பிரசுரமாகும். இப்பிரசுரத்தின் தலைப்பு பின்னாளில் போலியருட்பா மறுப்பு என்று பெயர் மாற்றம் செய்யப்பட்டு இன்று வரை அதே பெயரில் வழங்குகிறது; இப்பெயர் மாற்றம் எப் பதிப்பில் நிகழ்ந்தது என்பது புலனாகவில்லை என்பர். இரண்டாம் பதிப்பிலேயே இந்த மாற்றம் நிகழ்ந்துவிட்டது. இந்நூல் மாவண்டூர் தியாகேச முதலியாரால் வெளியிடப்பட்டது. ஆனால் இந்நூலையும் நாவலரே எழுதினார் என்பதைத் தொழுவூராரின் குதர்க்காரணிய நாசமகா பரசு, த. கைலாச பிள்ளையின் ஆறுமுக நாவலர் சரித்திரம் ஆகியவற்றால் அறியலாம்.

'போலியருட்பா'வுக்கு எதிராக மட்டுமே பன்னிரு கண்டன நூல்கள் வெளியாயின. இது அந்நூலின் வீரியத்தைக் காட்டுகிறது. வரலாற்றாசிரியர்களால் கூறப்படும் அருட்பா x மருட்பாப் போராட்டம் இந்தக் காலகட்டத் திலிருந்தே நேரடியாகத் தொடங்குகிறது. இதற்கு முன்பு நடந்தவை எல்லாம் இதன் அடிப்படையில் அமைந்த வையாகும்.

போலியருட்பா மறுப்புக்குக் கண்டனம் தெரிவிக்கும்வகையில் வெளியான ஒரு நூல் நடந்தவண்ணம் அறிவித்தல். இதை எழுதி வெளியிட்டவர் காவித் தண்டலம் சண்முக முதலியார். இந்நூல் இன்று கிடைக்கவில்லை. ஆனால் இதைப் பற்றிய குறிப்பு குதர்க்காரணிய நாசமகா பரசுவில் உள்ளது.

இதனைத் தொடர்ந்து தொழுவூர் வேலாயுத முதலியார் போலியருட்பா மறுப்பின் கண்டனம் அல்லது குதர்க்காரணிய நாசமஹா பரசு (1869) என்னும் நூலை எழுதி வெளியிட்டார். இந்நூலை வெளியிட்டதில் வள்ளலாருக்கும் பங்குண்டு என்பார் பொ. பூலோகசிங்கம். 'இங்ஙனம் நமது குருநாதர் கட்டளையா னிவ்வளவி னிறுத்தினோ மென்க' என்று எழுதித் தொழுவூரார் இந்நூலினை முடித்திருப்பதைக் கொண்டு பூலோக சிங்கம் இம்முடிவுக்கு வருகிறார். ஆனால் இதற்கு ஆதாரம் இல்லை.

குதர்க்காரணிய நாசமகா பரசுவை மறுத்துக் குதர்க்காரணிய நாசமகாபரசு கண்டனம் என்னும் நூல் வெளியிடப்பட்டது என்பர். இது தவறு. பெயரளவில் மட்டும் இந்நூல் உள்ளதே அன்றி இப்படி ஒரு நூலை எவரும் எழுதி வெளியிடவில்லை.

போலியருட்பா மறுப்பைக் கண்டித்துத் தொழுவூரார் நூல் வெளியிட்ட அதே

காலகட்டத்தில் திவாந்திர சைவ விநோதம் என்னும் நூல் வீராசாமி முதலியாரால் வெளியிடப்பட்டது. விஞ்ஞாபனப் பத்திரிகையிலே ஈழத்தை இழித்துரைத்த வீராசாமி முதலியார் அதே பாணியில் இந்த விநோத நூலைப் படைத்துள்ளார் என்பர்.

1868இல் தொடங்கி நடைபெற்று வந்த அருட்பா மருட்பாக் கண்டனங்கள் ஓரளவு ஓய்ந்த பின்பு, ஈழம் திரும்பும் நோக்கோடு சென்னையிலிருந்து புறப்பட்ட நாவலர் 1869 ஜூன் மாதம் சிதம்பரம் வந்தார். இதற்கு முன்பே நாவலரால் கண்டிக்கப்பட்ட தீட்சிதர்கள் சிதம்பரத்திலே இராமலிங்கரையும் அவரது குழுவினரையும் துணையாகக் கொண்டு நாவலருக்கு எதிராகக் கூட்டம் கூட்டினார்கள். அந்தக் கூட்டம், "நிறைவெண் கொடிமாட நெற்றி நேர்தீண்டப் பிறைவந் திறைதாங்கும் பேரம்பலம்" எனத் தேவார முதலிகளால் போற்றப்பட்டதில்லை பேரம்பலத்திலே, 1869 ஜூன் மாதம் ஏழாம் தேதி கூடியது. தேவாரம் உள்ளிட்ட பஞ்சப் புராணத்தையே அருட்பா எனக் கொள்ள வேண்டும் என்று வற்புறுத்திய நாவலரை அது கண்டித்தது.

தில்லைக் கோயிலை ஆகம விதிப்படி புதுப்பிக்க வேண்டும் என்று வள்ளலார் விரும்பினார். அதனால் தீட்சிதர்களுக்கும் வள்ளலாருக்கும் கொள்கையளவில் பல முரண்பாடுகள் இருந்து வந்தன. தீட்சிதர்கள் வள்ளலாரின் பல்வேறு கருத்துக்களுக்கு உடன்படாமையே அவரைப் போட்டிச் சிதம்பரமாகிய உத்தரஞான சிதம்பரத்தை (வடலூர்) தோற்றுவிக்கவும் செய்தது. அத்தகு வள்ளலாரை "சிவ தீட்சையும் சிவாகம அறிவும் இல்லாதவர்கள் சிவபூஜை செய்யத் தகுதியுடையவர்கள் அல்லரென்று'' வெகு ஜனங்களுக்கெதிரே பேசிய நாவலரைப் பழிவாங்கும்பொருட்டுத் தம்பக்கம் இழுத்தனர். 1869 ஆனியில் உத்தர தரிசன தினத்தில் கூட்டமானது வள்ளலாரை அழைத்துக்கொண்டு சிதம்பரத்திற்குப் புறப்பட்டது. தீக்ஷிதர்கள் பேரார்வத்தோடு அவர்களை வரவேற்றுப் பேரம்பலத்தில் கூடினார்கள். கூட்டம் ஆரம்பமானது. அன்று தரிசன தினம். முதலில் வள்ளலார் எழுந்து பேசினார். இல்லை, பேசுவித்தார்கள் என்பதே பொருத்தம்.

இராமலிங்க அடிகளார் நாவலரவர்களை தூஷித்து பேசும்போது 'நாவலர்' என்னும் சொல்லை 'நா அலர்' எனப் பிரித்துப் பொய்யன், வித்தையில்லாதவன், நாவிற் பழிசொல்லை உடையவன் எனப் பலவாறு விரித்துப் பேசினார். அப்போது ஈசான சிவாசாரியார் எழுந்து உந்தன் கருத்திலேதானா திருவாவடுதுறை யாதீனம் அவருக்குப் பட்டம் வழங்கியது என்று கேட்டார். அவ்வளவிற் வள்ளலார் கண்மூடி மௌனியாய்ச் சும்மாவிருந்தார். இக்கூட்டம் தொடர்பான செய்தி பேரம்பலப் பிரசங்கம் என்னும் பெயர் கொடுத்துச் சி.சொ. சண்முகப் பிள்ளை, சி.அ. வேலாயுதப் பிள்ளை, ச.இரா. ஆறுமுகப் பிள்ளை என்னும் மூவரால் பிரசுரிக்கப்பட்டது. துரதிர்ஷ்டவசமாக இந்நூல் இன்று கிடைக்கவில்லை.

கூட்டத்துக்குத் தலைமை வகித்த தில்லைத் தலைமை குரு சபாநடேச தீக்ஷிதர், முன்காட்டியவற்றிலிருந்து அவை போன்ற சொற்றொடர்கள் சிலவற்றையும் பிரயோகித்து, ஆவேசமடைந்து தாம் இருந்த ஆசனத்திலிருந்து எழுந்தார். நாவலர் இருக்கும் இடத்துக்குச் சென்று அவரை இழுத்துக்கொண்டுவந்து நையப் புடைப்பதற்குத் தாம் விரும்புவதாகவும் மற்றவர்கள் தமக்கு உதவியாக வருதல் வேண்டும் என்றும் கேட்டுக் கொண்டார்.

இராமலிங்க அடிகளார் நாவலரவர்களை தூஷித்து பேசும்போது 'நாவலர்' என்னும் சொல்லை 'நா அலர்' எனப் பிரித்துப் பொய்யன், வித்தையில்லாதவன், நாவிற் பழிசொல்லை உடையவன் எனப் பலவாறு விரித்துப் பேசினார். அப்போது ஈசான சிவாசாரியார் எழுந்து உந்தன் கருத்திலேதானா திருவாவடுதுறை யாதீனம் அவருக்குப் பட்டம் வழங்கியது என்று கேட்டார். அவ்வளவிற் வள்ளலார் கண்மூடி மௌனியாய்ச் சும்மாவிருந்தார்.

பேரம்பலத்தில் நடைபெற்ற இந்த இரு நிகழ்ச்சிகளை அடிப்படையாகக் கொண்டு நாவலர் கடலூர் மஞ்சக்குப்பம் கோர்ட்டில் தீட்சிதர்கள் ஐந்து பேர் மற்றும் இராமலிங்கர் ஆகியோருக்கு எதிராக வழக்குத் தொடுத்தார்.

முதலாம் எதிரி சபாநடேசர் மீது சுமத்தப்பட்ட குற்றச்சாட்டுகள் மான நட்டமும் பயமுறுத்தலும்; அடுத்த நான்கு தீட்சிதர்கள் மீது சுமத்தப்பட்ட குற்றச்சாட்டு பயமுறுத்தல்; ஆறாம் எதிரியான இராமலிங்கர் மீது சுமத்தப்பட்ட குற்றச்சாட்டு மானநட்டமாகும்.

வழக்கை விசாரித்த இணை நீதிபதி திரு. ராபர்ட்ஸ், சபாநடேசருக்கு மட்டும் ரூபாய் ஐம்பது அபராதம் அல்லது ஒருமாதச் சிறை தண்டனை வழங்கினார். மற்றவர்களை விடுதலை செய்தார்.

அருட்பா மருட்பாவினூடே தொடரப்பட்ட இந்த வழக்குக்குப் பின்பு சிதம்பரத்தைவிட்டு நாவலர் மாயூரத்துக்குச் சென்றார். அதனருகே இருக்கும் தருமபுர ஆதினத்தில் இருபது நாட்கள் தங்கிச் சைவ சொற்பொழிவாற்றினார். இறுதியில் கோடிக்கரை வந்து தோணியேறி 1870இல் யாழ்ப்பாணம் போய்ச் சேர்ந்தார். இதன் பின்பு அருட்பா மருட்பாப் போராட்டம் தமிழகத்தில் சில காலம் ஓய்ந்திருந்தது.

இதுவரை நாம் பார்த்தது அருட்பா x மருட்பாக் குறித்து நடந்த முதற்கட்டப் போராட்டமாகும். இதனை அடுத்துத் தமிழகத்தில் ஏறக்குறைய இருபது ஆண்டுகள் கழித்து நாவலரின் மாணவரது மாணவரான நா. கதிரைவேல் பிள்ளை மீண்டும் இந்த அருட்பா மருட்பாப் போராட்டத்தைக் கையிலெடுத்தார்.

3

ஆறுமுக நாவலர் மறைந்தபோது (1879) மேலைப்புலோலி நா. கதிரைவேல் பிள்ளைக்கு வயது எட்டு. ஆறுமுக நாவலர் கதிரைவேல் பிள்ளைக்கு வித்யாரம்பம் செய்து வைத்ததாகக்கூடத் தெரியவில்லை. ஆயினும் கதிரைவேல் பிள்ளை சரிதம் நாவலரின் வரலாற்றிலே சென்று சங்கமமாகின்றது. நாவலருக்குத் திருவருட்பாவைக் கண்டனம் செய்வதற்குக் காரணம் இருந்ததைப் போலக் கதிரைவேல் பிள்ளைக்குக் காரணம் ஏதும் இல்லை. என்றாலும் எப்போதும் ஏதாவது ஒன்றைப் பற்றிக் கண்டனம் செய்துகொண்டிருப்பதே இவரது குணம் என்பதால் அந்த அடிப்படையிலேயே நாவலருக்குப் பின் அருட்பாவைக் கண்டிக்கத் தொடங்கினார். "நாவலருக்குப் பின்வந்தவர்கள் தமது ஞான குருவிடமிருந்து பெற்றுக்கொண்ட திருமுறைகளில் ஒன்று கண்டன நோக்கமாகும்" என்று கைலாசபதி கூறியிருப்பதும் இங்கு ஒப்பிடத் தக்கது.


ம.தி. பானுகவி

திருவருட்பாவை எதிர்க்க ஆரம்பித்த பிள்ளை அதற்கான பணியைத் தொடங்கியது 1903இல் ஆகும். இந்தக் காலகட்டத்தில்தான் அவர் போலியருட்பா மறுப்பு V வழுத்திரட்டு என்னும் இரு நூல்களை வெளியிட்டார். இதனை அருட்பாக் குழுவினர் சிலர் கண்டித்தொதுக்கினர். இந்தக் கண்டனக் கூட்டம் மறைமலையடிகள் தலைமையில் நடந்தது. இதனால் ஆத்திரமுற்ற கதிரைவேலர் போலிவிவாதிகளுக்குப் புத்தி புகட்டல், குதர்க்கிகளின் பொய்க்கோள் விலக்கு என்னும் இரு பத்திரிகைகளை வெளியிட்டார்.

இந்த இரு நூல்களையும் கண்டித்துச் சென்னை வேதாகமோக்த சைவ சித்தாந்த சபையைச் சார்ந்த ப. முருகேச முதலியார், ப. பழனி முதலியார் ஆகிய இருவரும் திருவருட்பா விவாதிகளுக்கொரு விளக்கம் என்னும் ஒரு சிறு பிரசுரத்தை வெளியிட்டனர்.

இதனை அடுத்துக் கதிரைவேல் பிள்ளை 1904இல் முன்பு நாவலரால் எழுதி வெளியிடப்பட்ட போலியருட்பா மறுப்பு என்னும் நூலைப் பதிப்பித்து, அதனுடன் அருட்பாச் சிறப்பு,

இராமலிங்கம் பிள்ளை படிற்றொழுக்கம், இராமலிங்கம் பிள்ளை அங்கதப்பாட்டு என்னும் மூன்று பிரசுரங்களையும் இணைத்து அதனைத் தூத்துக்குடி இரா. ம. நயினார் செட்டியார் பெயரில் வெளிப்படுத்தினார். நாவலர் போலியருட்பாவை மாவண்டூர் தியாகேச முதலியார் பெயரில் வெளிப்படுத்தியதைப் போலவே கதிரைவேல் பிள்ளையும் இந்நான்கு நூல்களை நயினார் செட்டியார் பெயரில் வெளிப்படுத்தினார் என்பது குறிப்பிடத்தக்கது. இந்நூல் கதிரைவேல் பிள்ளையால் எழுதப்படவில்லை என்பர். ஆனால் இந்நூலை அவர்தான் எழுதினார் என்பதற்குச் சான்று உள்ளது.

1869இல் நாவலர் எழுதிய போலியருட்பா மறுப்பு நூலில் தேவாரம், திருவாசகம், திருவிசைப்பா, திருப்பல்லாண்டு, பெரியபுராணம் என்னும் ஐந்து மட்டுமே அருட்பா என்று கூறியிருக்க, இவர் பன்னிரு திருமுறைகளே அருட்பா என்று 1904இல் மாற்றிப் பதிப்பித்தார். அத்துடன் கொட்டையூர் மகாவித்துவான் சுவாமிநாத தேசிகர், திரிசிபுரம் மகாவித்துவான் மீனாட்சிசுந்தரம் பிள்ளை ஆகிய இருவரும் இராமலிங்க அடிகளைக் கண்டு அவர் பாடலிலுள்ள சித்தாந்தத்திற்கும் இலக்கணத்திற்கும் மாறாக உள்ள பாடல்களை எடுத்துக்காட்டிக் கேள்வி கேட்டபோது விடைகூறத் தெரியாது அவர் ஓட்டம் பிடித்தார் என்று இல்லாத விடயத்தை இவராகவே சேர்த்தெழுதினார்.

சிவாலய முனிவர் செய்த அருட்பாச் சிறப்பு என்னும் நூலில், அநபாய சோழன் காலத்திலிருந்த சிவாலய முனிவர் எழுதிய பாடல்கள் என்று மூன்று பாடல்களைக் காட்டியுள்ளார். படிற்றொழுக்க நூலில் வள்ளலார் செத்தவர்களை எழுப்புவோம் என்று கூறினார் என்றும், பெண்களை நிர்வாணமாக்கிக் கும்மியடிக்கச் சொல்லி ரசித்தார் என்றும், அநேக நபர்களைக் கற்பழித்தார் என்றும், இறுதியில் தாமே தற்கொலை செய்து கொண்டார் என்றும் எழுதி அதனைச் சொக்கபுரம் ஆதினம் இராமலிங்கத் தம்பிரான் சுவாமிகள் மாணவரான நெ. சிவக்கொழுந்து முதலியார் பெயரில் வெளிப்படுத்தினார்.


ஆறுமுக நாவலர்

இறுதி நூலான அங்கதப்பாட்டில் வள்ளலாரது தமையனார் சபாபதிப் பிள்ளை, இராமலிங்க அடிகள், தம்மைத்தாமே திருவருட்பிரகாச வள்ளலார் என்று கூறியதையும் தமது நூலுக்குத் திருவருட்பா என்று பெயரிட்டதையும் கண்டித்து அவர்மீது அங்கதப்பாட்டு பாடியுள்ளார் என ஐந்து பாடல்களை எடுத்துக்காட்டியுள்ளார்.

வள்ளலாருக்கும் அவரது திருவருட்பாவிற்கும் மாசு கற்பிக்க வேண்டும் என்னும் நோக்கத்துடன் கதிரைவேல் பிள்ளை முனைப்புடன் செயல்பட்டிருப்பதை மேலுள்ள அவரது நூல்கள்வழி அறிய முடிகிறது. அருட்பாவையும் அடிகளாரையும் தூற்றுவதற்கு மற்றவர்கள் எழுதியதாக இவர் எடுத்துக்காட்டிய நூல்களைத் தனியே வெளியிட்டால் எங்கே தமது குட்டு வெளிப்பட்டுவிடுமோ என்று கருதியே இவற்றை நாவலரது போலியருட்பா நூலுடன் சேர்ந்து வெளியிட்டிருக்கிறார். ஆனால் இவை அனைத்தும் தவறானவை என்பது நிரூபிக்கப்பட்டுள்ளன. இவ்வாறு பல பொய்யான தகவல்களை உலகிற்குப் பரப்பிவரும் இக்கதிரைவேல் பிள்ளையின் செயலைக் கண்டித்துத் திருக்குடந்தை சிதம்பர ஐயர் என்பார் இவர்மீது பதினெட்டுப் பாடல்களைக் கொண்ட ஓர் அங்கதப் பிரசுரத்தை வெளியிட்டார்.

இதனை அடுத்து 1905இல் முக்குணவயத்தின் முறைமறந்தறைதல் என்னும் ஏழு பக்க அளவுள்ள ஒரு துண்டுப்பிரசுரத்தைக் கதிரைவேல் பிள்ளை உதயமூர்த்தி சுவாமிகள் என்பவரது பெயரில் வெளிப்படுத்தினார். (ஆனால் இந்நூல் 1872இல் வெளியானதாக அவர் பொய்யாகக் குறித்துள்ளார்.)

இதைக் கண்டித்து முத்தமிழ்க் கவியரசு டாக்டர் தஞ்சை சண்முகம் பிள்ளையின் மாணவர் தங்கவேலு பிள்ளை என்பார், ஸ்ரீமத் இராமலிங்க சுவாமிகள் விஷயமாக இந்த ஈழநாட்டு நா. கதிரைவேல் பிள்ளையைப் பற்றிக் கோர்ட்டில் நடந்த விவகாரமும் முக்குணவயத்தின் முறைமறந்தறைதல் என்னும் பத்திரிகையின்மேற் கண்டனமும் என்னும் ஒரு நூலை வெளியிட்டார். விரிவான செய்தியை அதில் கண்டுணர்க.

கதிரைவேல் பிள்ளை தொடர்ந்து சில பிரசுரங்களை வெளியிட்டு அதன் வாயிலாக வள்ளலாரையும் அருட்பாவையும் கண்டனம் செய்து வந்ததைச் சகிக்க முடியாமல் வடலூர் சிவநேசம் பிள்ளை என்பார் அவுட் பீரங்கி என்னும் ஓர் பத்திராஸ்திரத்தைக் கதிரையார்மீது ஏவினார். இப்பத்திரிகையைக் கண்டித்துக் கதிரைவேலர், பாசுபதாஸ்திரப் பிரயோக பிரசண்ட மாருதக் கோடையிடி என்னும் துண்டுப் பிரசுரத்தைத் திரிகோணமலை ப. இலங்கணிப் பிள்ளையின் பெயரில் வெளிப்படுத்தினார். இப்பிரசுரத்தைக் கண்ணுற்ற வடலூர் சோமசுந்தரம் பிள்ளை சஞ்சீவிராயன் விடுத்த எரிநகர் தகனம் என்னும் உத்திரகிரியைப் பத்திரிகையையும், சத. சுங்காதரப் பாவலர் எரிகோணமலை இராமபாணம் என்னும் பத்திரிகையையும் வெளியிட்டுக் கதிரைவேல் பிள்ளையைக் கண்டித்தார்.


தொழுவூர் வேலாயுத முதலியார்

தொடக்க காலத்தில் திருவருட்பாவையும் வள்ளலாரையும் பிரசங்கத்தின் மூலமும் சிறுசிறு பிரசுரங்களின் மூலமும் கண்டனம் செய்துவந்த கதிரைவேல் பிள்ளை இதன் உச்சகட்டமாக அடுத்துச் செய்தது இராமலிங்கம் பிள்ளை பாடல் ஆபாச தர்ப்பணம் அல்லது மருட்பா மறுப்பு என்னும் நூலை எழுதி வெளியிட்டதாகும். இதனைத் தமது மாணாக்கர் வன்னியகுல பு. பாலசுந்தர நாயக்கர் பெயரில் வெளியிட்டார். இந்நூல் வெளியான உடனேயே 27.03.1904 ஞாயிறு அன்று சென்னைக் குச்சிலிக்கடைக்கு அடுத்த அன்னதான சமாஜிய சத்திரத்தில் பிரஹ்மஸ்ரீ ஆத்மராம சுவாமிகள், அரன்வாயில் வேங்கடசுப்பு பிள்ளை, டாக்டர் சண்முகம் பிள்ளை முதலிய வித்வ சமூகத்தார் கூடி அவ்வாபாச தர்ப்பண நூலைக் கண்டித்தனர். இதன் விவரம் திருவருட்பா தூடண நிக்கிரக மகாசபை பத்திரிகையில் வெளிவந்தது. அதே தினத்தில் கதிரைவேலன் கடைச்சிரார்த்தம் என்னும் ஒரு பத்திரிகையை வடலூர் ஆறுமுகம் பிள்ளை வெளியிட்டார். தம்மைப் பற்றி அடிக்கடி வெளியான உத்திரகிரியைப் பத்திரிகையைக் கண்டு கோபமடைந்த கதிரைவேல் பிள்ளை அதனைத் தடுப்பதற்காக அருட்பாக் கூட்டத்தார் சிலர்மீது சென்னை பிரிசிடென்சி மாஜிஸ்திரேட் கோர்ட்டில் வழக்குத் தொடுத்தார். இதன் காலண்டர் எண் 14575. வழக்கு 10.5.1904இல் விசாரணைக்கு வந்தது. குற்றம் நிரூபிக்கப்படாததால் வழக்குத் தள்ளுபடி செய்யப்பட்டது.

கதிரைவேல் பிள்ளை எழுதி வெளியிட்ட ஆபாச தர்ப்பண நூல் அருட்பாக் கூட்டத்தாரைப் பெருமளவு பாதித்தது. குறிப்பாக வள்ளலாரின் தமையன் மகன் வடிவேல் பிள்ளை இதனால் பெரிதும் மன உளைச்சலுக்கு ஆளானார். எனவே அவர் அந்த நூலில் உள்ள முதன்மைக் குற்றங்கள் என 27 குற்றங்களை எடுத்துக்காட்டி 28.06.1904இல் சென்னை பிரசிடன்ஸி மாஜிஸ்திரேட் கோர்ட்டில் வழக்குத் தொடர்ந்தார். இதன் காலண்டர் எண் 24533. குற்றவாளிகளான கதிரைவேல் பிள்ளைக்கும் அவரது மாணவர் புரசை பாலசுந்தர நாயக்கருக்கும் சம்மன் பிறப்பிக்கப்பட்டது. ஆனால் வழக்குத் தள்ளுபடி செய்யப்பட்டது. எனவே மீண்டும் வடிவேல் பிள்ளை ஹைகோர்ட்டுக்கு ரிவிஷன் அப்பீல் செய்தார். அங்கும் கதிரைவேல் பிள்ளைக்குச் சாதகமாகத் தீர்ப்பு வழங்கப்பட்டது. இவ்வழக்கில் கதிரையாருக்கு ஆதரவாகச் சாட்சியளித்த முக்கிய

நபர் உவே. சாமிநாத ஐயர். (இதில் திருவி.க.வின் பெயர் இணைத்துப் பேசப்படுவது பிழை.) வாதி வடிவேலு பிள்ளைக்கும் குற்றவாளி நா. கதிரைவேல் பிள்ளைக்கும் விரோதமின்மையாலும், செத்தவரை தூஷித்தல் அவதூறு ஆகாது என்னும் அடிப்படையிலேயே தீர்ப்பு கதிரையாருக்குச் சாதக மானது. கோர்ட்டில் நடந்த வழக்கு விடயங்கள் குறித்து மருட்பா மறுப்பு வழக்கு முடிவு என்னும் ஒரு புத்தகத்தை மருட்பாக் குழுவினர் வெளியிடப்போவதாக ஒரு விளம்பரம் கொடுத்தனர். ஆனால் இந்தப் புத்தகம் வெளிவந்ததாகத் தெரியவில்லை.


உ
கணபதிதுணை.
திருச்சிற்றம்பலம்.

போலியருட்பாமறுப்பு.

ம-ள-ள-ஸ்ரீ சாந்தம்பாக்கம்
அரங்கநாதமுதலியாரவர்களால்,

ஆரழகவிலாச அச்சுக்கூடத்தில்
பதிப்பிக்கப்பட்டது.

1897.

[இரண்டாம்பதிப்பு.]

திர்ப்பு தங்களுக்குச் சாதகமாக அமைந்ததால் அதனைக் கொண்டாடும்பொருட்டு மருட்பாக் குழுவினர் ஆறு இடங்களில் திருவருட்பா மகோற்சவத்தை நடத்தினர். மகோற்சவ கூட்டங்களில் திருவருட்பா விஜயநாமாவளி, இராமலிங்கம் பிள்ளை பாடலாபாச தர்ப்பண விஜயமகாசரபம், ஸ்ரீ பரமாசாரிய சுவாமிகள் கட்டியங்கள், காஞ்சித் திருமுறை மகோற்சவ நாமாவளி, அருட்பா வெற்றிக் கையுறை வாழ்த்து, திருவருட்பா மகோற்சவ விபவம் முதலிய பிரசுரங்கள் பொதுமக்களுக்கு வழங்கப்பட்டனவாம்.

வழக்கில் கதிரைவேல் பிள்ளை எப்படி வெற்றி பெற்றார் என்பதை முத்தமிழ்க் கவியரசு தஞ்சை சண்முகம் பிள்ளை எழுதிய கதிரைவேல் பிள்ளை உண்மைச் சரித்திரம் (1909), அவரது மாணவர் தங்கவேல் பிள்ளை எழுதிய ஈழநாட்டு நா. கதிரைவேல் பிள்ளை பற்றிக் கோர்ட்டில் நடந்த விவகாரம் (1906), சென்னை வேப்பேரி கமலநாயகி அச்சியந்திர சாலையிலிருந்து வெளியான உண்மை தெரித்தல் முதலிய பிரசுரங்களிலிருந்து அறியலாம்.

கதிரைவேல் பிள்ளை அறுபது தலைப்புகளில் எழுதிவிடுத்த இராமலிங்கம் பிள்ளை பாடல் ஆபாச தர்ப்பண நூலைக் கண்டித்து மதி. பானுகவி என்பார், 190 பக்கங்களில் இராமலிங்கம் பிள்ளை பாடல் ஆபாச தர்ப்பண கண்டன நியாய வச்சிரகுடாரம் (1905) என்னும் நூலை எழுதி வெளியிட்டார். இவர் முதலில் மருட்பாக் கூட்டத்தாருடன் இருந்தவர். கதிரைவேல் பிள்ளை நிகழ்த்திய வாதப்போர் பலவற்றிற்குப் பக்கபலமாக இருந்தவர். வடலூர் சபை முதன்முதலில் கட்டப்பட்டபோது அதன்மீது இடி விழுந்ததென்ற செய்தியைச் சிந்தாதிரிப் பேட்டையில் கூடிய வாத சபையில் முதன்முதலில் வெளியிட்டவர். தணிகைப் புராண பிரசங்கத்திலே 'வசவாசி என்னும் ஒரு சொல்லைப் பற்றிக் கதிரைவேல் பிள்ளைக்கும் இவருக்கும் நடந்த விவாதத்தினால் மனம் திருந்தி, அருட்பாக் கூட்டத்தாருடன் இணைந்தவர்.

தமிழகத்தில் இரண்டாம் கட்டமாக நடைபெற்ற அருட்பா மருட்பாப் போரை முடிவுக்குக் கொண்டுவந்ததில் பெரும்பங்கு மறைமலையடிகளாரைச் சாரும். திருவருட்பாவைப் பற்றிக் கதிரைவேல் பிள்ளை அவதூறு

*மறைமலையடிகளைப் போலவே அருட்பா மருட்பாப் போராட்டத்தில் குறிப்பிடத்தக்க பங்களிப்பைச் செலுத்தியவர் செய்குதம்பி பாவலர். சென்னையில் இட்டா பார்த்தசாரதி நாயுடுவின் அச்சகத்தில் தலைமைப் பார்வைப் பணியாளராகப் பணியாற்றிவந்த பாவலர், நாயுடுவின் ஒத்துழைப்போடே அருட்பா மறுப்பாளர்களை வென்றார். மருட்பாக் கூட்டத்தார் எழுப்பியிருந்த பல கேள்விகளுக்கு இலக்கண இலக்கிய தர்க்கப்பூர்வமாக விடையளித்தார்.*

செய்துவந்தபோதெல்லாம் அதற்கு எதிர் நிலையிலிருந்து குரல் கொடுத்தவர் இவர். இது குறித்துத் தமது நாட்குறிப்பிலும் அவர் எழுதிவைத்துள்ளார். இந்த நாட்குறிப்புச் செய்திகளையும் அவருடன் இருந்த அனுபவத்தையும் கொண்டு அவர்தம் மகன் மறை. திருநாவுக்கரசு மறைமலையடிகள் வரலாறு என்னும் நூலில் சற்று விரிவாகவே எழுதியுள்ளார்.

மறைமலையடிகளைப் போலவே அருட்பா மருட்பாப் போராட்டத்தில் குறிப்பிடத்தக்க பங்களிப்பைச் செலுத்தியவர் செய்குதம்பி பாவலர். சென்னையில் இட்டா பார்த்தசாரதி நாயுடுவின் அச்சகத்தில் தலைமைப் பார்வைப் பணியாளராகப் பணியாற்றிவந்த பாவலர், நாயுடுவின் ஒத்துழைப்போடே அருட்பா மறுப்பாளர்களை வென்றார். மருட்பாக் கூட்டத்தார் எழுப்பியிருந்த பல கேள்விகளுக்கு இலக்கண இலக்கிய தர்க்கப்பூர்வமாக விடையளித்தார். ஒரு இஸ்லாமியராக இருந்தபோதும் சமரசப் பாங்கோடு அருட்பாவினது உண்மையை அவர் நிலைநாட்டியது போற்றுதலுக்குரியது.

4

பத்தொன்பதாம் நூற்றாண்டில் நடந்த அருட்பா மருட்பாப் போராட்டம் அண்மைக் காலத்திலும் ஓய்ந்தபாடில்லை. வள்ளலாரைப் பற்றியும் அவரது பாடல்களைப் பற்றியும் தாக்கிவருவது தொடர் நிகழ்வாகவே ஆகிவிட்டது. அருட்பாவா? மருட்பாவா? என்று நேரடியான தாக்குதல்கள் நடைபெறாவிட்டாலும் அதனூடாக வந்த உதிரியான சில பிரச்சினைகளையும் அண்மைக் காலங்களில் காண முடிகிறது. இதில் முக்கிய இடம் வகிப்பது, நீதிபதி பலராமய்யா எழுதிய வள்ளலார் மறைவு சித்தியா? மரணமா? (1987) என்னும் நூலாகும். இதற்குத் தக்க சான்றுகளைக் கொண்டு துறவி கந்தசாமி இராமலிங்கர் பெற்ற இறைவடிவமும் ஐந்தொழிலாற்றலும் (1989) என்னும் நூலை வெளியிட்டார்.

இந்தக் கண்டனங்களை எல்லாம் ஒருங்கு திரட்டி அவற்றின் உண்மைத் தன்மையை வெளிப்படுத்தியது ப. சரவணனின் அருட்பா x மருட்பா என்னும் நூல். இந்நூல் வெளிவந்த பிறகே அருட்பா மருட்பாப் பிரச்சினையின் தாற்பரியம் சற்று துலக்கம் பெற்றது எனலாம். அதுவரை நிலவிவந்த புனைவுகளுக்கெல்லாம் இது முற்றுப்புள்ளி வைத்தது. இதே போல வள்ளலாருக்கு எதிராக ராஜ்கௌதமன் எழுதிய கண்மூடி வழக்கமெல்லாம் மண்மூடிப்போக . . . (2001) என்னும் நூலுக்கும் இக்கட்டுரையாசிரயர் எழுதிய வள்ளலாருக்கு எதிரான கலகக்குரல் என்னும் கட்டுரையும் குறிப்பிடத்தக்கது.

மொத்தத்தில் அருட்பா மருட்பாப் பிரச்சினை என்பது ஒரு சங்கிலித் தொடர் போலக் காலங்காலமாக நிகழ்ந்துவந்துள்ளதைக் காணமுடிகிறது. இதற்கெல்லாம் காரணம் வள்ளலார் பற்றி இன்னும் அவிழ்க்கப்படாத / அவிழ்க்கமுடியாத புதிர்கள்தான். எனவே இதை ஒட்டிய புத்தகங்கள் வரவு இத்தோடு அடங்கிப்போகுமா? இன்னும் வெளி வந்துகொண்டே இருக்குமா? பொறுத்திருந்துதான் பார்க்கவேண்டும்.



# தமிழில் புனைகதை உருவாக்கம் - சில குறிப்புகள்

மு. வையாபுரி

தமிழ்ப் புனைகதை உருவாக்க வரலாற்றை நூல் பிடித்தது போன்று வரையறுத்து எழுதிவிட முடியாது. ஏறக்குறைய 75 ஆண்டுகளின் தொடர் செயல்பாடுகளின் பிறகே தமிழ்ப் புனைகதை உருப்பெற்றது. அந்த வரலாற்றை இக்கட்டுரை சுருக்கமாக விளக்க முற்படுகிறது.

தமிழில் புனைகதை உருவாக்கம் என்பது ஐரோப்பியத் தாக்கத்தினால் மட்டும் உருவாகவில்லை. ஐரோப்பியத் தாக்கத்தினால் நமது சமூக, அரசியல், பொருளாதார இயங்கு தளங்களில் ஏற்பட்ட சில மாற்றங்கள்தாம் தமிழில் புனைகதை என்றொரு இலக்கியவகை உருவாகக் காரணமாக அமைந்தது. ஒரு தனி மனிதன் அல்லது குழுவுக்குள் ஏற்படும் பிரச்சினைகள், அங்கலாய்ப்புகள், ஆசாபாசங்கள், ஆதங்கங்கள் இவைகள் எல்லாவற்றையும் எளிய வடிவில் எடுத்துரைப்பதற்கு வடிவ ரீதியாக பாரம்பரிய தமிழ் இலக்கிய மரபில் ஒரு முன்னுதாரண இலக்கிய ஊடகம் இல்லை. ஆனால் அதற்காக அந்த இலக்கிய வகையை உள்வாங்கிக் கொள்வதற்கு, அதனை அப்படியே கடன் வாங்கிக்கொள்ள முடியாது. அதனை தமிழ் மொழியில் குறிப்பாக, அதனை வாசிப்பவனுக்குப் புரிகின்ற மொழியில் சொல்லவேண்டிய தேவை மிக முக்கியமான ஒன்றாகும். இவ்வாறான சூழ்நிலையில் புனைகதை வடிவமானது தமிழ்மொழியின் பாரம்பரியங்களுக்கு ஊடாகத்தான் இங்கே தோற்றம் பெற்றது.

தமிழ் இலக்கிய உருவாக்கத்தில் 'காவியம்' என்னும் இலக்கிய வகையின் தொடர்ச்சியாக 'நாவல் இலக்கியத்தைக் கூற முடியும். காவியங்களின் பெருக்கமே உரைநடை வசன இலக்கியங்கள் தோற்றம் பெற வழிவகுத்தன. காவிய நிகழ்ச்சிகளின் நிலைக்களம் செய்கை உலகு அன்று; கருத்து உலகு ஆகும். 13ஆம் நூற்றாண்டுக்குப் பிறகு நமது தமிழ் மக்கள் வடமொழி இலக்கியங்களையும் பிறமொழி இலக்கியங்களையும் கற்று அவற்றினின்றும் மொழிபெயர்ப்புச் செய்து தமது இலக்கிய வளத்தைப் பெருக்க முயன்றார்கள் எனக் கூற முடியாது. இக்காலப் பகுதியில் தலபுராணங்கள் மிகுதியாகத் தோன்றின. சிறிதும் நயமில்லாத கதைகள் இப்புராணங்களில் மீண்டும் மீண்டும் கூறப்பட்டன. பயனற்ற போலி அலங்காரங்கள் இப்புராணங்களில் நிரம்பி அருவருப்பு மேலிடச் செய்தன. உண்மையான கவித்துவம் இருந்த இடம் தெரியாமல் ஓடிவிட்டது. ஓரளவு கவித்துவம் வாய்ந்தவர்கள் ஸ்தலமூர்த்திகளைக் குறித்துப் பல சிறு பிரபந்தங்கள் எழுதினர். கோவை, உலா, அந்தாதி, இரட்டை மணிமாலை, மும்மணிக் கோவை, நான்மணிமாலை முதலியன இதற்குச் சான்றுகளாகும். இவற்றில் பெரும்பாலும் கவித்துவநயம் காணப்பட்டன. இவ்வாறு சிறு சிறு முயற்சிகளில் கவிஞர்கள் ஈடுபட்டனர். பொது மக்களும் இவற்றையே விரும்பிக் கற்க முற்பட்டனர். இவ்வாறான நிலையில புதியதாகக் 'காவியம்' ஒன்று தோன்றினாலும் அதனைக் கற்கும் மனப்பான்மையே பொது மக்களுக்கு இல்லாத சூழல் நிலவியது. அதனால் காவியம் தோன்றுவதற்கு உரிய சூழ்நிலை மறைந்துவிட்டது. இதன்பிறகு புராணங்களைவிட கலையுணர்ச்சி குறைந்த மிகைக் கற்பனைகள் நிறைந்த சமய இலக்கியங்களே அதிக அளவில் தோன்றின. இதன் விளைவாக அதிக அளவில் சிறு இலக்கியங்கள் இயற்றப்பட்டன.

இந்தச் சூழலில் பொதுமக்கள் சார்ந்த நாட்டுப் பாடல்களிலும் கதைப் பாடல்களிலும் இசை தழுவிய நாடகங்களிலுமே கதையம்சம் குடி கொண்டிருந்தது. வரலாற்றுத் தொடர்புடைய கதைப் பாடல்கள் சிலவற்றை நீக்கினால் இக் கதைப் பாடல்களும் இசை நாடகங்களும் பெரும்பாலும் பழைய கதைகளை மீண்டும் மீண்டும் கூறுவனவாக அமைந்தன. புராண



சென்னையிலுள்ள தமிழ்நாடு திறந்தநிலைப் பல்கலைக்கழகத்தில் தமிழியல் மற்றும் பண்பாட்டுப் புலத்தில் உதவிப் பேராசிரியராகப் பணியாற்றி வருகிறார்.

இதிகாசக் கதைகள் கிராமியப் பண்பு பெற்று விகற்பங்களுடன் அமைந்தன... இவற்றையெல்லாம் நோக்கும்போது புதிய வடிவிலான புனைகதை தோன்ற வேண்டிய தேவை தமிழ்ச் சூழலில் ஏற்படுகிறது.

மேற்சொன்ன தேவையை ஏற்படுத்தியதில் சமூக, அறிவியல், பொருளாதார சூழ்நிலைமைகளுக்கு முக்கிய இடமுண்டு. குறிப்பாக 15ஆம் நூற்றாண்டுக்குப் பிறகு தமிழகம் விஜயநகர மன்னர்களின் ஆதிக்கத்தின் கீழ் வந்தது. இக்காலங்களில் ஏற்பட்ட நாயக்க ஆட்சி முறைமைகள், பாளையக்காரர்கள், மராட்டியர்கள், சுல்தான்கள், ஜமீன்கள் போன்ற வட்டாரம் சார்ந்த ஆட்சியாளர்களால் தமிழக அரசியல், சமூகப், பொருளாதார தளங்கள் நிலையற்ற தன்மையைக் கொண்டதாக இருந்தன. மக்களுக்குப் பாதுகாப்பு, சமத்துவம், விடுதலை, குடியுரிமை என்பன கேள்விக்குரிய ஒன்றாக இருந்த சூழல் நிலவியது.

ஐரோப்பியரின் / ஆங்கிலேயரின் வருகையினால் ஒரே தேசம், ஒரே ஆட்சி, தனிமனித உரிமைக்கு மதிப்பளித்தல், மனித சமத்துவம், முறையான நிர்வாக முறை என்பன ஏற்படுத்தப்பட்டன. இதன் ஊடாகவே நவீனத் தகவல் மற்றும் தொடர்புச் சாதனங்களான அச்சு, பத்திரிகை, தந்தி, இரயில்வே போக்குவரத்து போன்றனவும் ஆங்கிலக் கல்வி முறையும் அறிமுகப்படுத்தப்பட்டன. இதன் பயனாக ஆங்கிலக் கல்வியறிவு பெற்ற அதே நேரத்தில் தமிழ் அறிவையும் பின்புலமாகக் கொண்ட ஒரு கல்வி விழிப்புணர்வு பெற்ற நடுத்தர வர்க்கம் உருவானது.

இதன் சமகாலத்தில் தமிழ்மொழி, இனம் அடையாளம் குறித்த ஆவணப்படுத்தல் தமிழ் இலக்கியங்களை மீள்கண்டுபிடிப்புச் செய்வது ஒருபுறமும் நடைபெற்றன. அச்சுப் பரவலான பிறகு சாதாரண வாசகனுக்கும் சென்றடையக்கூடிய அளவுக்கு இலக்கியப் பிரதிகள் பெருக்கமடைந்தன.

நாம் இதுவரை கண்டவை தமிழ்நாட்டுச் சூழலில் ஒரு புதிய இலக்கிய ஊடகத்தின் உருவாக்கத்திற்கானவை. இது ஒருபுறமிருக்க, பதினைந்தாம் நூற்றாண்டின் இறுதியில் நமது நாட்டிற்கு வருகைபுரிந்த ஐரோப்பிய வணிகர்களோடு கிறித்தவ சமயம் நம் நாட்டினுள் நுழைந்தது. முன்பே குறிப்பிட்டதுபோன்று கூடவே அச்சு முறைமையும் பத்திரிகைத் தொழிலும் வசன நடையும் இங்கும் வந்தன.

கிறித்தவப் பாதிரியார்கள் சமயப் பணிக்காகத் தமிழைக் கற்றார்கள். அதன் துணையோடு தமது மத நூல்களின் சாரங்களைத் தமிழில் சிறு நூல்களாக எழுதினார்கள். அந்நூல்கள் பெரிதும் வசன நடையிலேயே அமைந்தன. செய்யுள்களாக இருந்த நிகண்டுகளுக்குப் பதில் அகராதிகளை இயற்றினர். சூத்திரமாக இருந்த இலக்கண நூல்களை வசனமாக எழுதினர். நமது நாட்டுக்கு அச்சு எந்திரத்தைக் கொண்டுவந்து முதல் அச்சுப் புத்தகத்தை உருவாக்கினர். தமிழில் இலக்கிய வளர்ச்சிக்கும் புதிய தமிழ் வசன நடை வளர்ச்சிக்கும் அச்சு இயந்திரம் செய்த உதவி அளவிட முடியாதது.

தமிழுக்குத் தொண்டு செய்த ஐரோப்பியர்களை ஆட்சியாளர்கள் என்றும் சமயப் பணியாளர்கள் என்றும் இரு வகைப்படுத்தலாம். இவர்களுள் சமயப் பணியாளர்களே தமிழ் வளர்ச்சிக்குப் பங்காற்றியதில் முதன்மை பெறுகிறார்கள்.

தமிழில் வசன நடையைத் தோற்றுவித்ததில் என்றி என்றிக்கஸ் (1520-1600) அவர்களுக்கு முக்கியப் பங்குண்டு. இவரால் இயற்றப்பட்ட தம்பிரான் வணக்கம், கிரீசித்துயாணி வணக்கம், அடியார் வரலாறு ஆகிய மூன்று நூல்கள் நமக்குக்

கிடைக்கின்றன. 'தம்பிரான் வணக்கம்' தமிழில் முதன்முதலில் அச்சான வசன நடையில் அமைந்த நூல் என்ற வகையில் தனித்து எண்ணத்தக்கது.

என்றி என்றிக்ஸைத் தொடர்ந்து தமிழில் வசன நூல்களை எழுதியவர் இராபர்ட்-டி-நொபிலி (1577-1605) ஆவார். இவர் ஞானோபதேச காண்டம், ஆத்தும நிருணயம், அஞ்ஞான நிவாரணம், மந்திரமான புனர்ஜென்ம ஆட்சேபம், சேசுநாதர் சரித்திரம், ஞானதீபிகை, ஞான சங்கோபம், நித்திய சீவிய சல்லாபம், தூவுணதிகாரம், சிலுவை விசேஷ சல்லாபம், பித்துச் சல்லாபம், தேவமாதா சரித்திரம், கடவுள் நிர்ணயம் முதலான நூல்களை இயற்றியுள்ளார். இந்நூல்களுள் பல வசன நடையில் அமைந்தவை.

இவருக்கடுத்து பதினைந்தாம் நூற்றாண்டின் இறுதியில் தமிழகத்திற்கு வருகைபுரிந்த பிலிப்புஸ் பல்தேயுஸ் முதன்முதலில் கிறித்தவ வேதாகமத்தின் ஒரு பகுதியை தமிழில் மொழிபெயர்க்கத் தொடங்கினார். இம் மொழிபெயர்ப்பைப் பற்றி 1849ஆம் ஆண்டு முதல் தொடர்ந்து வெளியிடப் பெற்ற நற்போதகம் இதழில் 'தமிழில் வேதாகமம் திருப்பப்பட்ட வரலாறு' என்னும் தலைப்பில் வெளியிடப்பட்ட கட்டுரைகளில் விரிவாகப் பேசப்பட்டுள்ளது. கிறித்தவ வேதாகமம் தமிழில் மொழிபெயர்க்கப்பட்டதற்கும் தமிழில் வசன நடை உருவாக்கம் மற்றும் தமிழில் வாசிப்புப் பழக்கம் உருவாகியதற்கும் நெருங்கிய தொடர்பு உண்டு. ஏனெனில் முதன்முதலில் வசன நடையில் தமிழில் அச்சாகி வெளிவந்த மிகப் பெரும்நூல் வேதாகமம் ஆகும். இதன்பிறகே தமிழ்ச் சூழலில் துண்டுப் பிரசுரங்கள் மூலம் வசன நடை எளிய மக்களுக்கும் சென்று சேர்ந்தது. அதன் பயனாக மௌன வாசிப்பு என்பதும் உருவானது. அவ்வகையில் இவருடைய பணி முக்கியத்துவம் பெறுகிறது.

பிலிப்புஸ் பல்தேயிஸ் போன்றே கிறித்தவ வேதாகமத்தின் புதிய ஏற்பாட்டை வசன நடையில் மொழிபெயர்த்த (1708-1715) சீகன்பால்கு ஐயர் குறிப்பிடத்தக்கவர். தமிழில் வசன இலக்கியம் எதுவும் இவரால் எழுதப்படவில்லை என்றாலும், முதன்முதலில் கிறித்தவ வேதாகமத்தை முழுவதுமாக வசனநடையில் மொழிபெயர்த்தளித்து தமிழில் வசன நடை வளர்ச்சியடைய வழி ஏற்படுத்தியதில் இவருக்கு முக்கியப் பங்கு உண்டு.

சீகன்பால்கு ஐயரைத் தொடர்ந்து கான்ஸ்டான்ஷியுஸ் சோசப் பெஸ்கி என்னும் வீரமாமுனிவர் (1680) அவர்களின் பங்களிப்பு சிறப்புக்குரிய ஒன்றாகும். இவர் தமிழ் வசன இலக்கிய முன்னோடி. இவர் தமது கத்தோலிக்க கிறித்தவ வேதக் கருத்துக்களைத் தாங்கின வேதவிளக்கம், பேதகமறுத்தல், ஒத்தேரினத்தியல்பு, பதுதர் பேரில் திருக்கடையூர் நாட்டுக்குத் திருச்சபை எழுதின நிருபம், வேதியர் ஒழுக்கம், ஞானக்கண்ணாடி, திருச்சபைக் கணிதம், தமிழ் மருத்துவம் ஆகிய உரைநடை நூல்களை இயற்றியுள்ளார். பரமார்த்த குருவின் கதையும், வாமன்சரித்திரமும் இவரியற்றிய உரைநடைக் கதைகளாகும். இவரியற்றிய பரமார்த்த குருவின் கதை தமிழில் மறுமலர்ச்சி உரைநடைக்கு முன்னோடியாகவும் தமிழ்ப் புனைகதை இலக்கிய உருவாக்கத்திற்கு அடிப்படையாகவும் அமைந்தது.

வீரமாமுனிவர் தாம் வெளியிட்ட தமிழ் - இலத்தீன் அகராதியின் இரண்டாம் பின்னிணைப்பில் பரமார்த்த குருகதையை இணைத்து அதன் இலத்தீன் முன்னுரையில் இவ்வாறு குறிப்பிடுகிறார்.

"நண்பர்கள் அறிவுரை கூற, கொடுந்தமிழ் நடையின் எடுத்துக்காட்டுப் போல அமைந்தவற்றை இங்குப் பிற்சேர்க்கையாகச் சேர்க்கிறேன். பயனில்லாமல் சேர்க்கவில்லை. இவற்றால், புதிதாய் மொழிபயில்வோர் சொல்லாட்சியையும் தொடரிலக்கண விதிகளையும் தம் கண்முன் நிறுத்திக் கையால் தொட்டுணர இயலும். நீளமான வாக்கியங்களைப் பல பகுதிகளாகச் செதுக்கி

சீகன்பால்கு ஐயரைத் தொடர்ந்து கான்ஸ்டான்ஷியுஸ் சோசப் பெஸ்கி என்னும் வீரமாமுனிவர் (1680) அவர்களின் பங்களிப்பு சிறப்புக்குரிய ஒன்றாகும். இவர் தமிழ் வசன இலக்கிய முன்னோடி. இவர் தமது கத்தோலிக்க கிறித்தவ வேதக் கருத்துக்களைத் தாங்கின வேதவிளக்கம், பேதகமறுத்தல், ஒத்தேரினத்தியல்பு, பதுதர் பேரில் திருக்கடையூர் நாட்டுக்குத் திருச்சபை எழுதின நிருபம், வேதியர் ஒழுக்கம், ஞானக்கண்ணாடி, திருச்சபைக் கணிதம், தமிழ் மருத்துவம் ஆகிய உரைநடை நூல்களை இயற்றியுள்ளார்.

யெடுக்கப்பட்ட வாக்கியங்களை இங்கு காணமுடியாது. இத்தகைய பேச்சுநடை இம்மொழிக்கு ஒவ்வாத ஒன்றாகும். தமிழ் மக்கள் சுருக்கமான மொழியையே, இங்கொன்று அங்கொன்று என்று சில சொற்களில் முடிந்துவிடும் மொழியையே பெரிதும் சுவைக்கின்றனர். நயம் சிறக்க, அணி இலக்கண அழகுடன் எழுத விரும்பும்போதுங்கூட, இதுபோல் இனிய முடிவு கொண்ட, இங்குமங்கும் நன்கு செதுக்கப்பட்ட தொடர்களையே ஒன்று சேர்க்க விரைவர். கருத்தினை விளக்காமல் வைத்தும் கருத்தினை எல்லைமீறி விளக்கியும் படிப்போர் மனதை வேதனைப்படுத்து வதையும், பயனற்ற வார்த்தைகளில் வறண்ட வேர்ச் சொற்களைக் குவித்து, பெரு வேகங் கொண்ட ஒலியுடன் பெருத்த நீண்ட வாக்கியத் தொடர்களில் சுற்றி வளைப்பதையும் விலக்கி விடுவர். பழைய எழுத்தாளர்களில் ஒருவராவது இத்தகைய முறையில் எழுதியிருப் பதாகக் காண்பது அரிது.



பரமாறதகுருவின
கதை.

THE ADVENTURES OF THE

GOOROO PARAMARTAN:

A TALE IN THE TAMUL LANGUAGE: ACCOMPANIED BY A TRANSLATION AND VOCABULARY, TOGETHER WITH AN ANALYSIS OF THE FIRST STORY.

BY BENJAMIN BABINGTON,
OF THE MADRAS CIVIL SERVICE.

LONDON:
J. M. RICHARDSON, 23, CORNHILL.
MDCCCXXII.

மேலும் படியெடுப்போரின் அறியாமை ஓரளவும் சோம்பல் ஓரளவும் காரணமாக பற்பல பொதுத்தமிழ் நூல்களில் ஒரு பக்கங்கூட எழுத்துப் பிழையின்றி இருப்பதை நாம் காண முடியாது. இது மொழி பயிலத் தொடங்குவோருக்குத் தொல்லையாகவும் தீமையாகவும் முடிகிறது. இந்தக் காரணத்தினால் இலக்கிய எடுத்துக்காட்டுகளை அச்சிலேற்ற நினைத்தேன். அச்சுப் பிரதி கொண்டிருக்கும் தமிழ் மாணவர்கள் தமிழில் உள்ள எழுத்து ஒழுங்குகள் எல்லாம் காப்பாற்றப்பட்டிருப்பதற்கு எடுத்துக்காட்டுகளைக் கொண்டிருப்பர். இவற்றால் தொடக்கத்தில் பிழையான எழுத்துக்களுக்குப் பழக்கப்படாமல் இருப்பர்.

இந்த நோக்கத்தோடு, முதலில் போதிய அளவு நகைச்சுவை கொண்டதும் இப்பகுதியில் பேர் பெற்றதுமான கதையைத் தேர்ந்து கொண்டேன். இவ்வாறு பயனுள்ளதோடு நயனுள்ளதைக் கலந்து, எரிச்சலும் களைப்பும் நிறைந்த இந்த மொழிக் கல்வியை எளிதாக்கி இனிய குழலோசையில் குழைத்துக் கொடுக்க என்னால் கூடும். இதனால் உள்ளங்கவரப்படும், இன்பமடையும். வெட்டிய மரத்தில் சிறுசிறு புறக்கிளைகளை இங்குமங்கும் ஒட்டிக் கட்டுவதுபோல இக்கதையில் வேறு சில கதைகளைச் சேர்த்துள்ளேன். இதைப் படிப்போர் இந்நூலைப் போற்றாவிடினும், என் உள்ளத்தின் ஆசையை யென்கிலும், பிறர்க்குப் பணிசெய்ய நான் கொண்ட ஆசையை யென்கிலும் பாராட்டுவார்களாக. மொழி பயிலத் தொடங்குவோர் இதை எளிதில் பயன்படுத்த எல்லாவற்றையும் இலத்தீனில் பெயர்த்துள்ளேன். அவ்வாறு பெயர்க்கும்போது இயன்றவரை, தமிழும் இலத்தீனும் வார்த்தைக்கு வார்த்தை பொருந்தி அமைந்திருக்கும்படி செய்ய முயன்றுள்ளேன்' (வீரமாமுனிவர் ஆய்வுக்கழகம், முன்னுரை : 1975) என்று குறிப்பிடுகிறார்.

பதினெட்டாம் நூற்றாண் டின் தொடக்கத்தில் (1680-1749) எழுதப்பட்ட "பரமார்த்த குருவின் கதையைப் புதுச்சேரியில் வாழ்ந்த முத்துசுவாமிப் பிள்ளை என்பவர் தேடிக் கொடுத்த கையெழுத்துப்பிரதியைக் கொண்டு சென்னைக் கல்விச் சங்கம் 1822இல் அச்சிட்டு தனிநூலாக வெளியிட்டது.'' (தமிழில் சிறுகதை வரலாறும் வளர்ச்சியும், 1989:13) யாழ்ப்பாணத்திலிருந்து வெளிவந்த உதய தாரகை பத்திரிகையில் (1841) வீரமாமுனிவரின் உரைநடை நூல்கள் தொடராக வெளியிடப்பட்டன. அவற்றுள் பரமார்த்த குருகதையும் ஒன்றாகும். இக்கதை நூலின் ஆசிரியர் குறித்த முரணான பல விவாதங்கள் உண்டு. இக்கதை நூலை வீரமாமுனிவர் எழுதவில்லை என்றும், சுப்பிரதீபக் கவிராயர் இதை எழுதினார் என்றும் மாறுபட்ட கருத்துக்கள் உண்டு. விவாதங்கள் எப்படியிருப்பினும் தமிழ் வசன/ புனைகதை உருவாக்கத்திலும், தமிழ் கற்பித்தலிலும் இக்கதை நூலின் தாக்கம் இரு நூற்றாண்டுகள் நீடித்தது. அவ்வகையில் தமிழில் வசன இலக்கியம் உருவாக்கத்தில் பரமார்த்த குரு கதை தனித்த கவனத்தில் கொள்ளத்தக்கது.

தமிழ் வசன நடைக்கு ஓரளவு பங்களிப்புச் செய்தவராக ஜேம்ஸ் தெ. ரோசி அவர்களைக் குறிப்பிடலாம். இவர் இயற்றிய அர்ச்சிய சிஷ்டர்களின் சரித்திரம், கிழமைப் புதுமை நூல்கள் அனைத்தும் எளிய நடையில் மக்களுக்குப் புரியக் கூடிய வகையில் அமைந்திருந்தன. பல வசன நூல்களை இயற்றியதோடு, வேதாகமத்தின் வெட்ரீசியுஸ் மொழிபெயர்ப்பை மேலும் செம்மைப் படுத்தியவரான இரேணியுஸ் ஐயரின் வேத உதாரணத் திரட்டு, உருவ வணக்கம், மனுக்குல வரலாற்றுச் சுருக்கம், சமய சாரம், புரொட்டஸ்ட்டன்ட் கத்தோலிக்க உரையாடல் முதலிய வசன நூல்களை இவர் செய்துள்ளார். இவ்வாறு கிறித்தவ பாதிரியார்களால் எழுதப்பட்ட பல வசன நூல்கள் பின்னாளில் சென்னைக் கல்விச் சங்கத்தின் கல்வி பயிற்றுவிப்பதில் முக்கிய இடத்தை வகித்தன.

தமிழறியும் பெருமாள் கதையின் மொழிநடையும் அமைப்பும் அது பேசும் பொருளும் செவ்வியலும் வாய்மொழி மரபும் இணைந்த ஒன்றாக உள்ளது. அது சமகாலச் சமூகத்தைப் பிரதிபலிப்பதாக உள்ளது. அதனுள் பெண்கல்வி, சமூகச் சீர்திருத்தம் பற்றி பேசப்பட்டுள்ளது. அது சாதாரண மக்கள் மொழியில் அமைந்துள்ளது.

இவ்வாறு ஐரோப்பாவிலிருந்து தமிழகம் வந்த கிறித்தவ பாதிரியார்கள் தமிழில் நவீன உரைநடையாகிய வசன நடையை உருவாக்கியதில் முக்கியப் பங்கு வகித்தனர். இப்பணியைச் செய்ய அவர்களுக்கு உதவியாக இருந்தவை அச்சு எந்திரமும், தாள் உபயோகமும், ஆங்கிலேய அரசாங்க உதவியுமே ஆகும்.

மேற்குறித்த இருவழிப்பட்ட பின்புலத்தில் 19ஆம் நூற்றாண்டின் முதல் இருபது ஆண்டுகளில் தமிழில் வசன / கதை இலக்கியம் படைக்கப்படுவதற்கான சூழல் மெல்ல மெல்ல உருவாகத் தொடங்கியது.

கி.பி. 1820இல் சென்னைக் கல்விச் சங்கம் தொடங்கப்பட்டது. இச்சங்கத்தின் சார்பில் நூல் வெளியீட்டு நிறுவனம் ஒன்று ஆரம்பிக்கப்பட்டது. இந்நிறுவனத்தின் மூலம் ஆட்சிப் பணியின் பொருட்டு இங்கிலாந்திலிருந்து இந்தியா வருகை புரிந்தவர்களுக்கு அவரவர் பணியாற்றச் செல்லும் பகுதியின் வழக்கு மொழிகள் கற்பிக்கப்பட்டன. அதற்கு உதவி செய்யக்கூடிய வசன நூல்கள் உருவாக்கத்திற்கு அந்தந்த மொழிகளில் புலமைபெற்ற அறிஞர்களின் துணை தேவைப்பட்டது. அவ்வகையில் தமிழ் கற்ற ஐரோப்பியர்களுக்கு தமிழ்ப் பயிற்சி அளிக்கத்தக்க வசன நூல்களின் தேவை ஏற்பட்டது. இதற்காக[1] ஏற்கனவே ஐரோப்பியர்களால் செய்யப்பட்ட, பரமார்த்தகுரு கதை, வேத உதாரணத் திரட்டு முதலிய வசன நூல்களைப் பயன்படுத்துவது; தமிழ் மரபில் வழக்கத்திலுள்ள[2] கதைகளைத் தொகுத்துப் பயன்படுத்துவது பிறமொழிகளில் உள்ள கதைகளை[3] தமிழில் மொழிபெயர்த்து வழங்குவது என்று மூன்று நிலைகளில் தமிழ் வசன / கதை நூல்கள் தொகுத்து வெளியிடப்பட்டன.

இதன் பயனாக தமிழ்க் கற்றல், கற்பித்தல் சூழலில் கதைகள் பாடப் பொருளாயின/ விவாதப் பொருளாயின. இவ்வாறான கதைநூல்கள் / வசன நூல்கள் உருவாக்கத்திலும் ஈடுபட்டும், ஊக்கப்படுத்தியும் செயல்பட்டவர்கள் சென்னைக் கல்விச் சங்கத்தில் தமிழ் கற்பித்து வந்த தாண்டவராய முதலியார் முதலியோராவர். இவர்களோடு தொடர்புற்றிருந்தவர்களும், ஆங்கிலக் கல்வியினால் தாக்கமடைந்தவர்களும் பல்வேறு பழந்தமிழ் இலக்கியங்களைச் சுருக்கமாக வசன வடிவில் வெளியிட்டனர். சிலர் இலக்கண வினாவிடை என்னும் பெயரில் இலக்கண நூல்களை எளிய உரைநடையில் எழுதினர். இன்னும் சிலர் பழந்தமிழ்க் கதைப்பாடல் மரபிலான மக்கள் வழக்கத்திலிருந்த கதைகளை ஓலைச்சுவடிகளிலிருந்து நூலாகக் கொண்டு வந்தனர். அவற்றுள் குறிப்பிடத்தக்க ஒன்று தமிழறியும் பெருமாள் கதையாகும்.

தமிழறியும் பெருமாள் கதையின் மொழிநடையும் அமைப்பும் அது பேசும் பொருளும் செவ்வியலும் வாய்மொழி மரபும் இணைந்த ஒன்றாக உள்ளது. அது சமகாலச் சமூகத்தைப் பிரதிபலிப்பதாக உள்ளது. அதனுள் பெண்கல்வி, சமூகச் சீர்திருத்தம் பற்றி பேசப்பட்டுள்ளது. அது சாதாரண மக்கள் மொழியில் அமைந்துள்ளது. கதை இப்படி ஆரம்பிக்கிறது.

*'அலகாபுரி என்றொரு பட்டணமுண்டு. அதிலே அளகேஸ்வரன் என்றொரு இராஜா இராச்சிய பரிபாலனம் பண்ணிக் கொண்டிருந்தான். அவனுக்கு ஏலங்குழலாளென்றொரு குமாரத்தி பிறந்தாள். அவள் பன்னிரண்டு வயதிலே சகல கலையுங் கற்று வெகுரூப லாவண்ணிய சவுந்தரியாய் மிகுந்த செல்வவதியாகிப் பன்னிரண்டு நிலை யுப்பரிகையின் பேரிலேயிருந்து கொண்டு தன்னுடைய தோழிமாரும் தானுமாகப் பந்து விளையாடிக் கொண்டிருக்கும்போது, பின்னை யொரு தேசத்திற் பாடலிபுரமென்றொரு பட்டணமுண்டு...'*

என்று தொடர்ந்து செல்கிறது. இக்கதையில் முக்கியமாக எண்ணப்படவேண்டிய ஒன்று, இது முழுவதும் தமிழ்ப் பின்புலத்தை மையமாகக் கொண்டு உருவானது. அதே சமயம் சமகாலத்தில் மக்களிடையே வழக்கத்திலிருந்த மயில்ராவணன் கதை, மதனகாமராசன் கதை, ஈசாப் நீதிக்கதைகள், தெனாலிராமன் கதை முதலிய பல கதைகள் பிறமொழிகளிலிருந்து மொழிபெயர்க்கப்பட்டு தமிழில் வழங்கியவை. தமிழறியும் பெருமாள் கதை தமிழ்ப் பின்புலத்தைக் கொண்டு தமிழ்ச் சமூகத்தைப் பிரதிபலிக்கக்கூடிய கதையாகும். இக்கதை எளிய வசன நடையில் எழுதப்பட்டுள்ளது. இது 1818ஆம் ஆண்டிலேயே அச்சானதாக அ.மு. பரமசிவானந்தம் குறிப்பிடுகிறார். பின்னாளில் 1866இல் சிதம்பரம் கருணானந்த சுவாமிகளாலும் நூலாக வெளியிடப்பட்டது.

மேற்கண்ட அனைத்தையும் மனதில் கொண்டு இக்கதையை நோக்கும்போது, தமிழறியும் பெருமாள் கதை தமிழ்ச் செவ்வியல் மரபும் வாய்மொழி மரபும் நவீன மரபும் ஒருங்கே அமைந்த ஒரு பிரதியாக உள்ளது. தமிழ்ச் செவ்வியல் மரபில் உருவாகி அச்சான முதல் வசனக் கதை என்று இதனைக் குறிப்பிடலாம். பரமார்த்தகுரு கதையை அடுத்து தமிழறியும் பெருமாள் கதை தமிழ் வசன கதை இலக்கிய முயற்சியில் குறிப்பிடத்தக்கதாகும்.

இதனையடுத்து சென்னைக் கல்விச் சங்கத்தின் தலைமைத் தமிழ்ப் பண்டிதராக இருந்த தாண்டவராய முதலியார், தமிழை எளிதில் புரிந்து கொள்ளவும், எழுதிப் பழகவும், பேச்சு வழக்கினைப் புரிந்து கொள்ளவும் உதவியாக இருக்கும்பொருட்டு பஞ்ச தந்திரக் கதையை, மகாராட்டிர மொழியிலிருந்து மொழிபெயர்த்து நூலாக வெளியிட்டார். இக்கதை தமிழில் மொழிபெயர்க்கப் பட்டதன் நோக்கம் குறித்து அதன் பாயிரத்தில் பின்வருமாறு குறிப்பிட்டுள்ளது.

*"தமிழ்க் கற்கப் புக்கோர் தமிழிலெழுதி வழங்குகின்ற பஞ்சதந்திரக் கதையைக் கற்கப் புகுந்தாற் குளிக்கப் புக்கோர் சேறைப் பூசிக் கொண்டாற்போல வழுக்களையே கற்றுத் தடுமாற்றமுறுதலால் - சென்னைச் சங்கத்துத் தலைவராகிய - ம-ள-ள-ஸ்ரீ - ரிச்சார்ட்டுக் கிளார்க்குத் துரையவர்கள் உத்தரவினால் - மஹாராஷித் திலச்சுப் பதித்திருக்கின்ற பஞ் சதந்திரக் கதையைத் தமிழின் மொழிபெயர்த்து சொற்பொருளழகுறப் பலவிடத்துச் சில கூட்டியுங் கற்போருலக நடை சில செய்யுண்னடையுமான தமிழ் நன்குணரவுஞ் சுவையுற விம்மொழி பெயர்ப்புப் பஞ்சதந்திரக் கதை - சாலி வாகன சக வருடம் 1766க்கு மேற்செல்லா நின்ற பாத்திவ வருடத்துக்குச் சரியான - கிரீஸ்து - 1825 வருடம் செய்து முற்றுப் பெற்றது. (தாண்டவராய முதலியார், 1825, பாயிரம்)*

இக்கதையை மொழிபெயர்த்த தாண்டவராய முதலியார் அக்காலத்தில் தமிழ்ப் பண்டிதர்கள் கொண்டிருந்த கடின உரைநடையைப் பின்பற்றாமல், எளிய வசன நடையைப் பயன்படுத்தி மொழிபெயர்ப்புச் செய்துள்ளார். கதை,

*"ஒரு நாட்டிலொரு சிங்கமு மெருதுங் கூடி மிகவு மொருமையாக வாழ்ந்திருந்தன. அந்த சிநேகத்தைக் கோட் சொல்லும லோபகுணமுள்ள வொரு நரி வந்து கெடுத்ததென்று சொல்ல - ராசகுமாரர்களதெப்படியென, சோமசன்மா சொல்லத் தொடங்கினான்'' (பஞ்சதந்திரம், 1825:3)*

என்று தொடங்குகிறது. இக்கதை அன்றைய காலத்தில் பாடநூல்களில் இடம்பெற்று, பரவலான வாசிப்புக்கு உட்பட்டது. இக்கதையை மொழிபெயர்த்த தாண்டவராய முதலியார் 1826இல் கதாமஞ்சரி என்றொரு கதைத் தொகுப்பு நூலை வெளியிட்டார். ஐம்பதுக்கும் அதிகமான சிறுகதைகள் தொகுக்கப்பட்டன. இவற்றுள் பல சமகால மக்களிடத்தில் வழக்கத்திலிருந்த கதைகளாகும். இக்கதையின் பாயிரம் இக்கதைகள் தொகுக்கப்பட்ட வரலாற்றைக் குறிப்பிடுகிறது.

*"ம-ள-ள-ஸ்ரீ-ரிச்சார்ட்டு கிளார்க்குத் துரையவர்கள் சென்னைக் கல்விச் சங்கத்திற்*

றலைவராயிருந்த காலத்தில் தமிழ்ப் படிப்போர் - தொடக்கத்திற் படிக்கத் தக்கதோர் கதைத் திரட்டுவாயென்றேவ மேற்கொண்டு சில கதைகளைச் சந்தி பிரித்தும் புணர்த்தும் - பல கதைகளை யவ்வாறின்றி யேற்றவாறு சிலவிடத்துச் சந்தி புணராமலும் பலவிடத்துப் புணர்த்துங் கதாமஞ்சரி யென்னும் பெயர் தந்திவ்வாறிக் கதை தாண்டவராயராற் தொகுக்கப்பட்டது" (கதாமஞ்சரி, 1826, பாயிரம்)

அக்காலத்தில் தமிழ்ப் பண்டிதர்களால் பயன்படுத்தப்பட்ட உரைநடையை விட தாண்டவராய முதலியாரின் மொழிநடை எளிதாக இருப்பினும் அந்த மொழிநடையே தமிழ் கற்கத் தொடங்குவோருக்கு கடினமாக இருக்குமென்று எண்ணிய தாண்டவராயர் அக்காலத்தில் எவரும் கைக் கொண்டிராத மிகவும் எளிய வசன நடையைக் கையாண்டார். இத்தொகுப்பில் இடம்பெற்றுள்ள முதல் கதையினைக் காண்போம்.

**பிரித்தல்**

*எந்த - உயிரையும்-கொல்லாத - ஒரு - சந்நியாசி - ஒரு - ஏரி - கரை - மேலே போனான் - போகும்போது - ஒரு - செம்படவன் - அந்த ஏரியிலே - மீன் - பிடித்தான் - சந்நியாசி - செம்படவனை - பார்த்து - ஐயோ - நீ - எப்போது - கரை - ஏறுவாய் - என்றான் - ஐயா - என் - பறி - நிரம்பினால் - கரை - ஏறுவேன் - என்றான்.*

**கூட்டல்**

*எந்த வுயிரையுங் கொல்லாத வொரு சந்நியாசி யோரேரி கரைமேலே போனான் - போகும் போதொரு செம்படவனந்த வேரியிலே மீனை பிடித்தான் - சந்நியாசி செம்படவனைப் பார்ததையோ நீ யெப்போது கரையேறு வாயென் றானையோ வென பறி நிரம்பி னாற் கரையேறு வேனென்றான். (கதாமஞ்சரி, 1826:1)*

பஞ்சதந்திரத்திலும் பார்க்க கதா மஞ்சரியின் மொழிநடை மேம்பட்டதாக அமைந்திருப்பதைக் காணலாம். வீரமாமுனிவரின் பரமார்த்த குரு கதை, தமிழறியும் பெருமாள் கதை ஆகியவற்றைத் தொடர்ந்து தாண்டவராய முதலியாரின் பஞ்ச தந்திரமும், கதா மஞ்சரியும் தமிழ் வசன / கதையிலக்கிய முன்முயற்சிகளில் குறிப்பிடத் தக்கனவாகும். இவ்விரு கதை நூல்களையும் இயற்றிய தாண்டவராய முதலியார் குறித்து காால்டுவெல் தாம் எழுதிய திராவிட மொழிகளின் ஒப்பிலக்கணம் நூலின் இரண்டாம் பதிப்பின் அறிமுகவுரையில், இவ்வாறு குறிப்பிட்டுள்ளார்.

*"இந்நூற்றாண்டில் முற்றிலும் புதிய உரைநடையொன்று தோன்றியிருக்கிறது. அதுதான் உலக வழக்கை யனுசரித்த அழகிய வசன நடையாகும். ஐரோப்பியரது கொள்கைகள் பரவி வருவதனால் இனி எழுதப்படும் தமிழ்நூல்களில் இதுவே செய்யுனடையோடி கலி மேம்படத் தக்கதாயிருக்கின்றது. இந்நடைக்கு கர்த்தாவென்று சொல்லத்தக்கவர் ஒரு காலத்துச் சென்னைக் கலாசாலையில் உபாத்தியாயராயிருந்த தாண்டவராய முதலியார் என்பவர்; அவர் பெயர் ஞாபகத்தில் வைக்கத்தக்கது. பஞ்சதந்திரத்தைத் தமிழ் வசன நடையில் நமக்கு எழுதியுபகரித்தவர் அவரே. அவர் வழிகாட்ட இராமாயணம், மகாபாரதம் முதலிய நூல்களும் வசனங்களாக வெளிவந்துள்ளன. இவை யனைத்தும் பஞ் சதந்திரம் போலவே ஆற்றொழுக்கான திருந்திய நடையில் எல்லோர்க்கும் நன்கு விளக்குமாறு எழுதப்பட்டுள்ளன." (Rt. Rev. Robert Caldwell, 1875 : P.155)*

என்று குறிப்பிடுகிறார். தமிழ் வசன நடையின் முக்கியத்துவமும் பெருமளவிலான வசன / கதை நூல்கள் தோன்றுவதற்கான சூழலும் இக்காலப் பகுதியில் நிலவியதை நாம் உணரலாம்.

பத்தொன்பதாம் நூற்றாண்டில் 1830க்குப் பிறகு தமிழ்ச் சூழலில் பத்திரிகைகள் தொடங்கப்பட்டன. ஆட்சியாளர்களுக்கு சாதகமான செய்திகளை வெளியிடுதல், சமயம், கல்வி, அன்றாட நிகழ்வுகள், நாட்டு வரலாறுகள் முதலியவற்றை இக்காலப் பத்திரிகைகள் வெளியிட்டன. தமிழை எளிய மக்களுக்கான மொழியாக மாற்றியதில் பத்திரிகைகளின் பங்களிப்பு அளப்பரியது. ஏனெனில் 1820-1840களில் வெளிவந்த இலக்கிய நூல்களின் (இராமாயண வசனம், மகாபாரத வசனம்) வசன சுருக்கங்கள், சில கதை நூல்கள் அனைத்துமே உண்மையில் பொதுமக்கள் புரிந்து கொள்ளும் வகையில் எளிய வசன நடையைக் கையாளவில்லை. ஆனால் இதற்கு மாறாக இக்காலப் பகுதியில் வெளிவந்த உதயதாரகை (1841), நற்போதகம் (1849, கலாவர்த்தினி (1869), ஜனவிநோதினி (1875) முதலான பத்திரிகைகள் பொதுமக்களும் புரிந்து கொள்ளக்கூடிய எளிய வசன நடையைத் தங்களது பத்திரிகைகளில்

பயன்படுத்தினர். இப்பத்திரிகைகளில் தமிழ்ப்புனை கதைக்கான சிந்தனைக் கூறுகள் காணக் கிடைக்கின்றன. இவை 19ஆம் நூற்றாண்டுத் தமிழ் வசன நடையின் போக்கையும் பொதுமக்களிடையே கதைகளை எடுத்துச் சென்று பரவலாக்கிய வரலாற்றையும் உணர்த்தி நிற்கின்றன. இவை பயன்படுத்திய வசன நடையைப் பற்றி நாம் தெரிந்து கொள்வது, புனைகதை உருவாக்க வரலாற்றுப் பின்புலத்திற்கு உதவும்.

உதயதாரகை (1841) பத்திரிகையில் கற்றல், கற்பித்தல், வரலாறு, பொதுவான கல்வி, பயிர்ச்செய்கை, அரசியல் தொடர்பான செய்திகளும் Fables, Tales என்னும் பெயரில் பல்வேறு நீதிக்கதைகளும் கட்டுக்கதைகளும் வெளியிடப்பட்டன. இப்பத்திரிகையில் வெளியிடப்பட்ட ஒரு கதை,

*"ஒரு கிழவனுக்குச் சில பிள்ளைகளுண்டு. அவர்கள் அடிக்கடி சண்டையடித்து வருவார்கள். அந்தக் கிழவன் அதைக் கண்டபொழுது, அவர்களை இணங்கப் பண்ண வெகுவாகத் தெண்டித்தும், அவர்களுக்கு இணங்கிக் கொள்ளக் கொஞ்சமும் மனமில்லை. கடைசியாக ஒரு காரியம் மாத்திரஞ் செய்ய எண்ணினான். அவன் தன்னுடைய குமாரரை ஒருமிக்க வரவழைத்து ஒரு முருக்கின கயிற்றை அவர்களிடத்திற் கொடுத்து உங்களிற் பலவான் இதை அறுத்துப் போடட்டுமென்று சொன்னான்." (உதயதாரகை, 1841, பிப்ரவரி, 18)*

இது 'அடப்பங்கொடியுந்திரண்டால் மிடுக்கு' என்னும் ஒரு கிறித்தவ உபதேசக் கதையாகும். இக்கதையின் நடை தாண்டவராய முதலியார் நடையைவிட சிறிது எளிமையானது. மேலும் இது கிறித்தவ பாதிரியர்களின் வசன நடையை ஒட்டியது.

இப்பத்திரிகையில் தாண்டவராய முதலியாரின் பஞ்சதந்திரக் கதை 18-01-1841 முதல் 7-11-1844 வரை தொடர்ந்து வெளியிடப் பெற்றது. அதைப்போலவே வீரமாமுனிவரின் பரமார்த்த குருகதையும் 19-8-1841 முதல் 16-12-1841 வரை தொடர்ந்து வெளியிடப் பட்டுள்ளது. இவ்விரு கதைகளையும் மக்களிடத்தில் கொண்டு சென்றதில் இப்பத்திரிகைக்கு முக்கியப் பங்குண்டு.

இப்பத்திரிகையின் ஆசிரியராக 1857 முதல் 1881 வரை பதவியேற்றிருந்த அ. சதாசிவம் பிள்ளை (1820-1895) அந்தப் பத்திரிகையில் வாசகர்களுக்கு புரியும் வகையில் அடிக்கடி சிறுகதைகளை எழுதி வெளியிட்டுள்ளார். அவற்றுள் நாற்பது கதைகளைத் தொகுத்து 'நன்னெறிக் கதாசங்கிரகம்' என்ற பெயர் கொடுத்து 1869ஆம் ஆண்டு வெளியிட்டுள்ளார். நூலின் தலைப்புக்கு விளக்கமாக "இதிலே சன்மார்க்க சாதனைக்கும் போதனைக்குமுரிய அனேக விந்தைக் கதைகள் அடங்கியிருக்கின்றன" என்ற வார்த்தைகளோடு ஆங்கிலத்தில் A Collection of Moral Tales in Tamil என்று ஒரு துணைத் தலைப்பையும் சேர்த்திருந்தார். இவர் எழுதிய சிறுகதைகளில் பெரும்பான்மையும் ஆங்கில மரபுக் கதைகளைத் தழுவி எழுதப் பட்டவை என்று சொன்னாலும், கதைகளில் தமிழ்ச் சூழல் இருக்கத்தக்கதாக அவர் கவனித்துக் கொண்டார்.

உதயதாரகை (1841) பத்திரிகையில் கற்றல், கற்பித்தல், வரலாறு, பொதுவான கல்வி, பயிர்ச்செய்கை, அரசியல் தொடர்பான செய்திகளும் Fables, Tales என்னும் பெயரில் பல்வேறு நீதிக்கதைகளும் கட்டுக்கதைகளும் வெளியிடப்பட்டன.

தமிழ்ச் சூழலில் நாட்டார் கதைகள் பெருமளவில் தொகுக்கப்படும் முன்பே இக்கதைகள் உதயதாரகையில் வெளியாகிப் பின் நூல்வடிவம் பெற்றன. இத்தகைய செயல்பாடுகளால் தமிழ்ச் சூழலில் பரவலான வாசிப்புப் பழக்கம் உருவாயிற்று.

தமிழ் வசன நடைக்குக் குறிப்பாக தமிழ்ப் புனைகதைக்கு பங்களிப்புச் செய்த மற்றொரு பத்திரிகை நற்போதகம் (1849) ஆகும். திருநெல்வேலியிருந்த சன்மார்க்க புத்தக சங்கத்தாரால் 1849 மார்ச் முதல் இப்பத்திரிகை வெளியிடப்பட்டது. இதில் கிறித்தவ சமய விளக்கங்களும், கல்வி வரலாறுகளும் வெளியிடப்பட்டன. உதயதாரகை பத்திரிகையைவிட இப்பத்திரிகை தெளிந்த வசன நடையைக் கொண்டு வெளிவந்தது. இப்பத்திரிகையில் முதன்முதலில் 'சிறுகதை' என்னும் புனைகதை வகைக்குரிய மொழிநடை, உள்ளடக்கம், வடிவம்

ஆகியவற்றைக் கொண்டமைந்த நல்ல பெண்சாதி (பிப்ரவரி, 1876), நல்ல மனைவி (மார்ச், 1876), நல்ல புருஷன் (ஏப்ரல், 1876) என்னும் பெயரில் சிறுகதைகள் வெளியிடப்பட்டன. இக்கதைகளின் நிகழிடம் ஐரோப்பாவாக இருப்பினும் கதையின் நடை, விளம்புமுறை ஆகிய அனைத்தும் தமிழ்ச் சிறுகதை போன்றே உள்ளன. சான்றாக,

*"பிரெஞ்சு தேசத்திலுள்ள ஒரு கிராமத்தில் ஒரு சிறு பெண் இருந்தாள். அவள் மகா சவுந்தரமுள்ளவள். சிலர் பொறாமை கொண்டு, அவள் முகம் மட்டுக்கு மிஞ்சி வெள்ளை என்றும் வேறு சிலர் அவள் கண் மட்டுக்குமிஞ்சிக் கறுப்பென்றும் குறை சொல்லியும் அவளைப்போல அழகுள்ளவள் உள்ளபடி உண்டோவென்று எண்ணிக் கொள்ளாதவர்கள் இல்லை" (பெண்சாதி, நற்போதகம், 1876)*

பிறிதொரு சிறுகதை

*"தாய் மறிந்த பிறகு மகள் காரியம் வெகுவாய் மாறிப்போயிற்று. முன் சிறுபிள்ளைபோல் சிரிப்பும் விளையாட்டுமாயிருப்பாள். தாயார் அதிகப் பரீட்சையுள்ளவள். ஆனதால் யோவான் அவளிடத்தில் யோசனை கேட்பானே அல்லாமல், பெண்சாதியிடத்தில் அதிகமாய் கேட்க மாட்டான். மரியாள் இருவருக்கும் பெற்ற பிள்ளை போலிருந்து தன் காலத்தை கவலையற்ற விதமாய் போக்கி வந்தாள்" (நல்ல மனைவி, நற்போதகம், 1876)*

என்று கதை தொடர்ந்து செல்கிறது. இக்கதைகள் ஒவ்வொன்றும் எட்டுப் பக்கங்களைக் கொண்டிருக்கின்றன. தமிழ்ப் புனைகதைக்கான மொழி இப்பத்திரிகையிலேயே தொடங்கிவிட்டது என்பதனை இவை உணர்த்துகின்றன. இப்பத்திரிகையில் அக்கால அரசாங்கப் பாடப்புத்தகங்கள் தொடர்புடைய செய்திகளும், நல்ல வசன நூல்கள் எழுதுவோருக்குமான பரிசுப் போட்டிகளும் வெளியிடப்பட்டன. நற்போதகம் இதழ் தமிழ் வசன நடை உருவாக்கத்திலும் புனைகதை உருவாக்கத்திலும் தனித்த கவனத்திற்குரியது. புனைகதை வரலாற்றை எழுதியோர் ஏனோ இப்பத்திரிகையின் பங்களிப்பை புறந்தள்ளிவிட்டனர்.

நற்போதகம் வெளிவந்த சமகாலத்தில் 1869ஆம் ஆண்டு முதல் துரைத்தன கல்விச் சங்கத்தாரால் சென்னை வேப்பேரியிலிருந்து 'ஜநவிநோதிநி' என்னும் பத்திரிகை வெளியிடப்பட்டது. இப்பத்திரிகையில் தமிழ்ச் சமூகத்தில் வழங்கிய பல்வேறு கதைகள் தொகுக்கப்பட்டு பெயர் குறிப்பிடாமல் வெளியிடப்பட்டன. கூடவே, அரசியல், அறிவியல், நீதி, வரலாறு, பொது அறிவு குறித்த கட்டுரைகளும் வெளியிடப்பட்டன. இதன் பத்தாமாண்டு அறிக்கையில் பின்வருமாறு குறிப்பிடப்பட்டுள்ளது,

"இப்பொழுது ஆரம்பிக்கும் 1879ஆம் வருஷத்துச் சஞ்சிகைகள் இதுவரையில் நாம் கொண்ட கோட்பாடுகளை அனுசரித்து நடத்தப்படும். மேலும் இத்தனை நாளாய் இருந்ததுபோல நீதி விஷயங்களும் சாஸ்திர விஷயங்களும் விசித்திரமான படங்களும் இருப்பதோடுகூட, இவ்வருஷத்துப் புத்தகத்தில் சுதேசசரித்திர விலாசம் என்னும் சிற்சில விநோதமான பூர்வ கதைகளும் எழுதலாகும். இத்தன்மையான கதையொன்று நாளது மாதச் சஞ்சிகையிலேயே ஆரம்பித்திருக்கிறது. இவர்களோடுகூட மாட்சிமை பெற்றவர்கள், புண்ணிய புருஷர்கள் முதலானோர்களுடைய சரித்திர சங்கிரகமும் கால்நடை முதலான ஜடஜந்துக்களை இம்சிக்காமல் ஆதரித்து வருவது நற்குணமெனக் காட்டும் விஷயங்களும் இன்னும் இவ்வாறு சிறியோர் பெரியோர் பலர்க்கும் உபயோகமான விஷயங்களும் சேர்க்கப்படும்'' (ஜநவிநோதிநி, ஜனவரி, 1879)

என்று தமது நோக்கத்தைக் குறிப்பிடுவது போலவே, பல்வேறு வசனக் கட்டுரைகளையும், வசனக் கதைகளையும் வெளியிட்டது. இதற்குச் சான்றாக இப்பத்திரிகையில் வெளிவந்த சில கதைத் தலைப்புகள் அமைந்துள்ளன.

"மந்திர வீணை அல்லது மெய்மை பொய்மையைப் பற்றிய கதை, விகடகவி வித்துவானை வென்ற கதை, ராஜ்யம் விட்டோடிப் போன ஒரு மொகலாயராஜன் கதை, இரண்டு சகோதரர்கள், கூட்டுக் குடியிருந்த சூதனும் மூடனும், ஆறு வல்லவர்கள், பொன்மயிர் அரக்கன், ஒரு பூதத்தோடு செய்து கொண்ட உடன்படிக்கை அல்லது நீராவியந்திரம் கண்டுபிடிக்கப்பட்ட கதை, சிறுகூனன் கதை, கிச்சிலிப் பழக்காரன், அல்லது மெய்யனும் கள்வனும், கண்ணாடியறை"

இதுபோன்ற நூற்றுக்கணக்கான கதைகள் இப்பத்திரிகையில் வெளியிடப்பட்டுள்ளன. இப்பத்திரிகை வெளிவந்த சமகாலத்தில் பிற பத்திரிகைகளும் தனிப்பட்ட மனிதர்களும் ஜநவிநோதிநி கதைகளை வெளியிட்டும், தனி நூலாக வெளியிட்டும் வந்துள்ளனர் என்பதை,

*"இத்தனை நாளாய் இப்பத்திரிகையை ஆதரித்து வந்ததற்காகவும் இப்பத்திரிகை அவரவர் குடும்பங்களில் பெண்டீர் சிறுவர் சிறுமியர்கள் படித்துக் களிக்கவும் பாடசாலை மாணாக்கர்களுக்கும் மற்றத் தமிழ்நாட்டுப் பிள்ளைகளுக்கும் வெகுமதியாகக் கொடுக்கவும் உபயோகப்பட்டு வருவதற்காகவும் நாம் மிகவும் நன்றி பாராட்டுகிறோம். மற்ற சுதேசபாஷா பத்திராதிபர்கள் நமது பத்திரிகையின் நேர்மையை அங்கீகரித்துத் தாமும் இதைப்போல் நடத்துவது மல்லாமல் இப்பத்திரிகையில் காணப்படும் உபந்நியாசங்களையும் கதைகளையும் தெரிந்தெடுத்துத் தத்தம் பத்திரிகைகளில், சில வேளையில் பேர் கூறாவிடினும் பிரசுரம் செய்வது உசிதமென்று புதுப்பித்து வருகிறார்கள்."*

என்று 1879ஆம் வருடம் இப்பத்திரிகையின் ஆசிரியர் அறிக்கையில் குறிப்பிடப்பட்டுள்ளது. இப்பத்திரிகை வெளிவந்த சமகாலத்திலும் அதன்பிறகும் தமிழில் புனைகதை உருவாக்கத்திற்கு அடித்தளமிட்ட / முதன் முயற்சிகளைச் செய்த மாயூரம் வேதநாயகம் பிள்ளை உட்படப் பலரும் இப்பத்திரிகையின் தாக்கத்திற்கு ஆட்பட்டவர்கள் என எண்ண இடமுண்டு. இன்னும் இப்பத்திரிகையில் வெளியான பல கதைகளையும் கட்டுரைகளையும் எழுதியவர்கள் இவர்களாகவும் இருக்க வாய்ப்புண்டு. ஏனெனில் ஜநவிநோதிநியில் வெளிவந்த படைப்புகள் அனைத்தும் ஆசிரியர் பெயரிலேயே வெளிவந்துள்ளன. அவ்வகையில் தமிழில் வசன நடை உருவாக்கத்திலும் புனைகதை உருவாக்க முன்முயற்சியிலும் ஜநவிநோதிநிக்கு முக்கியப் பங்குண்டு. 1890க்கும் - 1920க்கும் இடைப்பட்ட காலங்களில் நாவல் இலக்கியம் படைத்தவர்களில் சிலர் தங்கள் முதன் முயற்சியாக இவ்வாறு பத்திரிகைகளில் வெளிவந்த கதைகளையும் மக்கள் வழக்கிலுள்ள கதைகளையும் தொகுத்து நூலாக வெளியிட்டனர். அதன்பிறகே தமது சொந்த முயற்சியில் புனைகதை படைத்தனர். இதன் தாக்கத்தை அக்காலத்தில் வெளிவந்த புனைகதைகளின் தலைப்புகளைக் கொண்டு நாம் அறியலாம்.

இந்தளவு முக்கியத்துவம் மிகுந்த ஜநவிநோதிநியின் பங்களிப்பை புனைகதை வரலாறு எழுதியவர்கள் ஏனோ அலட்சியப்படுத்தி விட்டார்கள். தொடக்ககாலத் தமிழ்ப் பத்திரிகைகளைப் புறக்கணித்துவிட்டு தமிழ்ப் புனைகதை உருவாக்க வரலாற்றை முழுமைப் படுத்த முடியாது.

மேற்குறிப்பிட்டுள்ள பத்திரிகைகளில் வெளிவந்த கதைகள் மட்டுமல்லாத சமகாலத்தில் (1850-1880) ஈசாப்பின் நீதிக்கதைகள் (1853), மதனகாமராஜன் கதை (1855), பகல் சக்கனும் குராச் சக்கனும் (1859), இராபின்ஸன் குருஸோ சரித்திரம் (1867), மயில் ராவணன் கதை (1868), முப்பத்திரண்டு பதுமைக் கதை (1869), மேற்கண்ட கதைகளைத் தொகுத்து நூலாக வெளிவந்த கதாசிந்தாமணி (1866 அல்லது 1876), தக்காணத்துப் பூர்வ கதைகள் (1880), திராவிட பூர்வக் காலக் கதைகள் (1881), முதலிய பல்வேறு கதைத் தொகுப்புகள் மக்களிடையே வழக்கத்திலிருந்து தமிழ்ச் சூழலில் வாசிப்புப் பழக்கத்தை அதிகப்படுத்தி வந்தன.

கி.பி. 1800 தொடங்கி 1874 வரை கிட்டத்தட்ட முக்கால் நூற்றாண்டு செயல்பாடுகள் மூலம் தமிழில் வசன / கதை இலக்கியத்திற்கான மொழி உருவாக்கப்பட்டு விட்டது. இக்கால கட்டத்தில் மேல்நாட்டு / ஆங்கில இலக்கிய அறிமுகம் பெற்ற ஒரு வர்க்கமும் பாரம்பரிய தமிழ்ப் பின்புலத்தோடு புதியன படைத்திட முயன்ற ஒரு வர்க்கமும் தமிழில் புதிய புனைகதை படைத்திடும்

> புனைகதை இலக்கிய வகையில் ஒன்றான 'நாவல்' தமிழில் அறிமுகமானபோது அது தனக்கான ஊடகமாக முதலில் எதை எடுத்தது என்றால், பாரம்பரிய வாய்மொழிக் கதை உரைத்தல் மரபான கதைப் பாடல் வடிவத்தினைத்தான்.

முன்முயற்சியில் ஈடுபட்டனர். இவர்களுள் முதலில் வைத்து எண்ணத்தக்கவர் தூ.வீ. சேஷையங்கார் என்பவராவார்.

புனைகதை இலக்கிய வகையில் ஒன்றான 'நாவல்' தமிழில் அறிமுகமானபோது அது தனக்கான ஊடகமாக முதலில் எதை எடுத்தது என்றால், பாரம்பரிய வாய்மொழிக் கதை உரைத்தல் மரபான கதைப் பாடல் வடிவத்தினைத்தான். ஏனெனில் கதைப் பாடல்கள் மக்கள் புரிந்து கொள்ளும் மொழியில் சமகால சமூகப் பிரச்சனைகளைப் பிரதிபலிக்கின்ற இலக்கிய ஊடகமாகவும் வாய்மொழி ஊடகமாகவும் இருந்ததுதான்.

இதனை மனதில் கொண்ட தூ.வீ. சேஷையங்கார் என்பவர் 1875இல் 'ஆதியூர் அவதானி சரிதம்' என்னும் பெயரில் நூல் ஒன்று வெளியிட்டார். இந்நூல் இதுதான் முதல் தமிழ் நாவல் என்னும் பெயரோடு வெளிவந்தது. இது எழுதப்பட்ட மொழி செய்யுள் நடை, இது பேசிய பொருள் சமகாலத் தீண்டாமை, விதவை மறுமணம், காதல் மணம், மாமியார் கொடுமை பற்றியது. ஆனால் இந்நூல் வெற்றி பெறவில்லை. தமிழ்ச் சூழலில் வசனம் பெருவழக்காகிவிட்ட நிலையில், தமிழில் புனைகதை என்னும் ஆக்க இலக்கியம் உருவாவதற்கான தகுந்த சூழல் ஏற்பட்டுவிட்ட நிலையில் இவர் ஏன் செய்யுளில் ஒரு நூலை படைத்து விட்டு 'நாவல்' என்று குறிப்பிட்டார் என்கிற வினா எழுகிறது.

தூ. வீ. சேஷையங்கார் பாரம்பரிய இலக்கியப் புலமையுள்ள ஒரு தமிழ்ப் பண்டிதர்; அக்கால மேல்தட்டு வகுப்பைச் சேர்ந்தவர்; நவீன மரபு கைவரப் பெறாதவர்; சமகால வசன இலக்கியத்தின்மீது வெறுப்பு கொண்டவர். ஆனால் அதில் கொஞ்சம் ஈடுபாடு கொண்டவர். "நாவலைச்" செய்யுளிலேயே எழுதி வெற்றி பெற்று விடலாம் என்று எண்ணங் கொண்டவர். அதனாலேயே தமது நூலை 'நவீனமாக வியற்றிய கட்டுரை நூல்' என்று சொல்லிவிட்டு செய்யுளில், கதைப்பாடல் வடிவில் செய்தார். இவருக்கு ஏற்பட்ட குழப்ப மனநிலைதான் அன்றைய பெரும்பாலான மரபு வழிப்பட்ட தமிழறிஞர்களிடையே இருந்தது. இருந்தும் இவர் 'நாவலைச்' செய்யுள் வடிவில் எழுதியுள்ளார். இந்நூலின் முன்னுரையில் இவ்வாறு குறிப்பிடுகிறார்.

*"தமிழ்ப்பாஷையின் மூலமாய்க் கல்வியுங் களிப்புந்தேரும் இந்நாட்டவர், புறநாட்டவர் யாவர்க்கும் ஒரு மொழி பகருகிறேன். ஆதரவுடன் செவிசாய்த்துக் கேட்பாயாக. காவியங்களுங் கதைகளும் பல பல காலங்களில் நிகழ்ந்த வரலாறுகளை அல்லது நிகழ்ந்தனவாகப் பாவிக்கப்படும் வர்த்தமானங்களைத் தழுவி நிற்பன வாயினும் ஆக்கியோர்களின் காலத்தனுபவங்களை, அவைகள் ஆங்காங்கு காட்டாமற்போகா. நான் சொல்வதற்கொரே யொரு நிதர்சனங் காட்டுவேன். ஆதியில் வான்முகி முனிவர் இயற்றிய வடமொழி இராமாயணத்திலும், தேச வர்ணனை ஜனவர்ணனைகளில் பல குணபேதங்களையும் ஆசார பேதங்களையும் காணலாம். இக்கலப்பு கவிகளின் குணதோஷங்களைப் பண்ணும் நிபுணர்களில் சிலர்க்கு விபரீதமாகவுந் தோன்றும். கற்பனைக் கதைகளும் ஒரு காலத்தில் இன்பந்தருவன. மற்றொரு காலத்தில் தாரா. பாலர்க்குக் களிப்பூட்டுவன முதியர்க் கூட்டா. சிற்றறிவோரை மகிழ்விப்பன பேரறிவோரை மகிழ்வியா. நம்தேயத்துச் சனங்களுடன் கூட திசை நூல்களை ஆராய்ந்தறிந்தவர்கள் நமது புராணாதி கதைகளுள் ஊற்றம் வையார். இந்நூதனக் கல்வித் துறைகளையறியாத நமது முதியோரோ, இவர்மேல் விசை கூறுவர். மனிதன் மனிதன் சித்தி விருத்தியிப்படியாகவிருக்கும். நானோ வெனில் நமது வித்துவான்கள் வழக்கமாயிறங்கும் துறைகளை விட்டுக் காலத்தியற்கையைத் தழுவிப் புதுத்துறையில் காலிட்டேன்.*

*இதற்குமுன் யானியற்றிய 'குணாகரம்' எனுங் காவியம் 'முதிய தமிழும்' 'புதிய கருத்தும்' அறிந்தார்க்கே யன்றிப் பிறர்க்கின்பந்தராது. பழம் பண்டிதர் மனதில் புதுக் கருத்துக் கொள்ளாது. புதுக்கலையில் தேர்ந்தோர்க்குப் பழம் பாஷை விள்ளாது. ஆதலால் யாவர்க்கும் பொருளும் புணரிப்பும் எளிதில் விளங்கும்படி இந்நூலைச் செய்தனன்.*

*இதிலடங்கிய சங்கதிகள் பல இந்து குடும்பங்களில் இக்காலத்திலுள்ளவைகள்தாம். ஆதலால் இது "பொய்ப்பெயர்பூண்டு, மெய்ப்பொருள் காட்டும்" (ஆதியூர் அவதானி சரிதம், 1875: முன்னுரை, பக். 2)*

தூ.வீ. சேஷையங்கார் குறிப்பிடுவதுபோல இந்நூல் சமகாலப் பிரச்சினைகளான தீண்டாமை, கல்வி, விதவை மறுமணம், காதல் மணம், மாமியார்

கொடுமை ஆகியவற்றைப் பாடு பொருளாகக் கொண்டமைந்துள்ளது. ஆனால் அவர் இந்நூலின் முகப்புப் பக்கத்தில் குறிப்பிடுவது போன்று இது கட்டுரை நடையில் அமையவில்லை. மாறாகக் கதைப்பாடல் வடிவில் உள்ளது. இக்கதை நூலின் தொடக்கம் இவ்வாறு அமைந்துள்ளது.

"ஆதிபகவன் அடித்தலங்கள் தாம் போற்றி

சோதிச் சொருபன் சுடர்ப் பதங்கள்தாம் போற்றி

வேதங்கட் கெட்டா விமலன்கழல் போற்றி

ஆதியூர் வாழும் அவதானி தன் கதையை

வேதியன் நல்ல வினையாளன் தன் கதையை

வழக்கத் தமிழாலே மாந்தர் படித்தறிய

பழக்கத் தாலம்மானைப் பாட்டாகத்
தாம் பகர

எழுதிமுடிப்பதற்கே யீசனே முன்னடைவாய்

பழுதில் கதைபாடப் பரமனே முன்னடவாய்"

சேஷையங்கார் 'பழக்கத்தாலம்மானைப் பாட்டாகத் தாம்பகர' என்று குறிப்பிடுவது போன்று இந்நூல் அம்மானைப் பாட்டாகத் தான் உள்ளது. இந்நூலின் இறுதி கீழ்க்காணுமாறு முற்றுப் பெறுகிறது.

"அம்மானை யாடும் அழகு சகோதரிகள்

இம்மான் கதையை யிதையங்களிகூற

பாடுவீர் பாடிப் பலன்கள் பெறுவீர்கள்

நாடிப் படித்து நலங்கொள் நெறியமர்ந்து

குழந்தைகள் பெற்றுக் குணமாக நீர்
வளர்ப்பீர்

விழைந்து நாம் பருகி மேலாக
வாழ்ந்திருப்பீர்!

கழங்குகளாடக் கவிபாடி நான்றருவேன்

குழந்தைகள் நீங்கள் குணருடன்
வாழ்ந்திடுவீர்."

இவர் குறிப்பிடுவதைப் போன்று வழக்கத் தமிழால் அமையாமல் இந்நூல் கதைப்பாடல் வடிவிலேயே அமைந்துள்ளது. நான் தமிழின் முதல் நாவலை வெளியிடுகிறேன் என்று ஆங்கிலத்தில் குறிப்பிடும் சேஷையங்கார் 'நாவல்' இலக்கியத்திற்கான மொழியைப் புறக்கணித்துவிட்டு செய்யுள் ஊடகத்தைப் பயன்படுத்தியுள்ளதை நோக்கும்போது ஒன்று தெளிவாகிறது. நவீன மரபை உள்வாங்கி அதனை நமது பாரம்பரிய இலக்கிய ஊடகத்தின் மூலம் வெளியிட முனைந்துள்ளார். ஆனால் அம்முயற்சி வெற்றி பெறவில்லை.

ஆதியூர் அவதானி சரிதம் எழுதப்பட்ட நான்கு ஆண்டுகள் கழித்து 1879இல் புனைகதை இலக்கியத்திற்கான ஊடகமான வசனத்தைக் கையாண்டு ஒருவர் அதில் வெற்றியும் பெற்றார். அதுபற்றிக் காண்பதற்குமுன் தமிழ்ப் புனைகதை வரலாற்றை எழுதியவர்கள் மறவாமல் குறிப்பிடும் 'விநோதரச மஞ்சரி' என்னும் நூல் பற்றிக் காண்போம்.

கி.பி. 1850 தொடங்கி சமகால நிகழ்வுகள், தமிழ்ப்புலவர் சரித்திரங்கள், மக்களிடையே வழங்கிய கர்ணப் பரம்பரைக் கதைகள் முதலானவற்றை உரைநடையில், கட்டுரை வடிவில் எழுதும் போக்கு தமிழ்ச் சூழலில் உருவானது. இதற்கு சமகாலத்தில் உருவான பத்திரிகைகள் நல்ல வாய்ப்பாக அமைந்தன. இவ்வகையான பணிகளைச் செய்தவர்களுள் மிக முக்கியமானவர் அட்டவதானம் வீராசாமிச் செட்டியார் என்பவரும் ஒருவர்.

பத்தொன்பதாம் நூற்றாண்டில் வசன உரைநடை நூல்களை எழுதுவதில் வல்லவர்களாகத் திகழ்ந்த ஆறுமுக நாவலர், வள்ளலார், மாயூரம் வேதநாயகம் பிள்ளை ஆகியோரின் சமகாலத்தவர் இவர். சென்னை அரசினர் கல்லூரியின் தமிழாசிரியராகத் திகழ்ந்த இவர் தமிழ் இலக்கண, இலக்கியத்தில் ஆழ்ந்த புலமை மிக்கவர். உரைநடை வடிவில் கட்டுரை வரைவதிலும் வல்லவர். 1856 முதல் 1876 வரை பீட்டர் பெர்சிவல் பாதிரியாரால் நடத்தப்பெற்ற 'தினவர்த்தமானி' பத்திரிகையில் இவர் எழுதிய தெய்வங்கொள்கை, கற்றாய்ந்தொழுகல், கற்பு நிலைமை, செய்ந்நன்றி மறவாமை, கீதவாத்திய விநோதம், பயணி செலவு, மகா பண்டிதனைச் சிறுபிள்ளை வென்றது, காலபேதவியல்பு, ஒட்டக் கூத்தர் ஈட்டியெழுபது பாடியது. கம்பர் சரித்திரத்தின் ஒரு பகுதி, கம்பர் கம்பராமாயணம் பாடியது, காளமேகப்புலவர் சரித்திரம், ஏகாம்பரவாணர் சரித்திரம், ஒரு பதி விரதை சரித்திரம் ஆகிய கட்டுரைகள் இவருடைய உரைநடைத் திறத்தை வெளிப்படுத்துவன. மேற்கண்ட புலவர் சரித்திரங்கள் அனைத்தும்

கர்ணப் பரம்பரையாக புலவர்களிடையேயும் மக்களிடையேயும் வழங்கப்பட்ட கதைகளிலிருந்து சுருக்கி எழுதப்பட்டதாக வீராசாமிச் செட்டியாரே குறிப்பிடுகிறார். இக்கட்டுரைகள் அனைத்தும் 'தினவர்த்தமானி' ஆசிரியர் பீட்டர் பெர்சிவல் அனுமதியோடு 1888இல் கலவை நாராயணசாமி முதலியார் வேண்டுகோளின்படி பட்டாளம் குப்புசாமி முதலியார் அவர்களது தொண்டை மண்டலம் அச்சகத்தில் "விநோதரச மஞ்சரி" என்னும் பெயரில் அச்சிடப்பட்டது. கூடுதலாக அவ்வையார் சரித்திரமும், அவிவேக பூரண குருகதையும் சேர்க்கப்பட்டன. பரமார்த்த குரு கதை, அவிவேக பூரண குரு கதை என்று முதன்முதலில் இத்தொகுப்பில்தான் பெயர் மாற்றம் செய்யப்பட்டது. பிற்காலத்தில் பல பதிப்புகள் கண்ட விநோதரசமஞ்சரியில் சிறுகூனன் கதை என்னும் ஒரு புதிய கதையும் சேர்த்து அச்சிடப்பட்டது. இதில் இடம்பெற்றுள்ள ஏகம்பவாணன் சரித்திரம் பஞ்சதந்திரக் கதையைத் தழுவி எழுதப்பட்டுள்ளது.. பீட்டர் பெர்சிவல் பாதிரியார் தமிழ்ப் பழமொழிகளைத் திரட்டி நூலாக வெளியிடுவதற்கு வீராசாமிச் செட்டியாரோடு அவர் கொண்டிருந்த உறவு காரணமாக இருந்திருக்க வாய்ப்புண்டு.

தமிழ்ப் புனைகதை வரலாற்றை, குறிப்பாக சிறுகதை வரலாற்றை எழுதியவர்கள் வீரமாமுனிவரின் பரமார்த்த குரு கதை, தாண்டவராய முதலியாரின் பஞ்சதந்திரக் கதை, நன்நெறி கதாசங்கிரகம், வீராசாமி செட்டியாரின் 'விநோத ரச மஞ்சரி ஆகியவை முன்னுதாரணங்கள் எனக் குறிப்பிடுவர். ஆனால் வீராசாமிச் செட்டியாரின் 'விநோதரச மஞ்சரி சிறுகதைக்கான எத்தகைய கூறுகளையும் கொண்டிராத உரைநடைத் தொகுப்பாகும். தமிழ் உரைநடை / வசன நடை உருவாக்கத்தில் இத்தொகுப்பிற்கு ஒரு இடமுண்டு. தமிழ்ப் புனைகதை வரலாற்றில் இடம்பெறத்தக்க எத்தகைய இயல்புகளையும் கொண்டிராத ஒரு நூல் விநோதரச மஞ்சரி'.

19ஆம் நூற்றாண்டின் நடுப்பகுதியில் இவ்வாறு பல்வேறு கதைகள் / நூல்கள் தொகுக்கப்பட்டும் ஆங்கிலம் முதலிய மொழிகளிலிருந்து மொழிபெயர்த்தும் தழுவியும் எழுதப்பட்டன. இந்தப் பயிற்சியின் பயனாகப் படைப்பிலக்கியப் பாணியில் புனைகதைகள் எழுதுவதற்கான திடம் பெற்றார்கள் அப்பொழுது வெளியிடப்பெற்ற பத்திரிகைகளும் அதற்கான வாய்ப்பை ஏற்படுத்திக் கொடுத்தன.

தமிழில் புனைகதை உருவாக்கம் தொடர்பான செயல்பாடுகள் 1800 தொடங்கி 1875 வரை தொடர்ந்து நடைபெற்றன. இந்த நீண்ட செயல்பாட்டுப் பின்புலத்தில் புனைகதை இலக்கியத்தின் ஒருவகையான "சிறுகதை" இலக்கியம் தோன்றுவதற்கான சூழலே நெருங்கி வந்தது. ஆனால் அப்படி எதுவும் நிகழவில்லை. மாறாக புனைகதை இலக்கியத்தின் பிறிதொரு வகையான நாவல் இலக்கியம் / பிரதாப முதலியார் சரித்திரம் என்னும் பெயரில் தமிழில் உருப்பெற்றது. அது, தான் தோன்றிய காலத்துக்கு முன்னிருந்த தமிழ்க் கதையிலக்கியத்தின் இயல்புகளையெல்லாம் தன்னகத்தே கொண்டிருந்தது.

தமிழ்ப் புனைகதை வரலாற்றை குறிப்பாக சிறுகதை வரலாற்றை எழுதியவர்கள் வீரமாமுனிவரின் பரமார்த்த குரு கதை, தாண்டவராய முதலியாரின் பஞ்சதந்திரக் கதை, நன்நெறி கதாசங்கிரகம், வீராசாமி செட்டியாரின் 'விநோத ரச மஞ்சரி ஆகியவை முன்னுதாரணங்கள் எனக் குறிப்பிடுவர். ஆனால் வீராசாமிச் செட்டியாரின் 'விநோதரச மஞ்சரி சிறுகதைக்கான எத்தகைய கூறுகளையும் கொண்டிராத உரைநடைத் தொகுப்பாகும்.

பிரதாப முதலியார் சரித்திரத்தை எழுதும்போது வேதநாயகம் பிள்ளை இந்தியப் பண்பாட்டிற்குப் பொருத்தமாயுள்ள சில உத்திகளைக் கையாண்டார். கதைக்குள் கதையாகப் பஞ்சதந்திர உத்தி, மிகைப்படக் கூறல், அறிவுரைகளைக் கதை மாந்தர் கூற்றாகவே வெளிப்படுத்தும் உத்தி ஆகியவற்றை வேதநாயகம் பிள்ளை தமது நாவலில் திறம்படக் கையாண்டுள்ளார். நாவல் முழுவதும் தமிழர் பண்பாடு தொனிக்க வேண்டுமென்பதே வேதநாயகம் பிள்ளையின் நோக்கமாக இருந்தது. பண்பாட்டைச் சான்றுகள் மூலம் விளக்குவதற்கு ஃபேபிள் (Fable) என்னும் நீதிக்கதை சொல்லும் முறையை அவர் கையாண்டுள்ளார்.

மக்களிடையே உலவி வந்த நாடோடிக் கதைகளையும் பயன்படுத்தியுள்ளார். பஞ்சதந்திரக்

கதைகள் போன்று ஒன்றுக்குள் ஒன்றாகப் பல கதைகள் கிளை பிரிந்து செல்லும் உத்தி பிரதாப முதலியார் சரித்திரத்தில் காணப்படுகிறது. இவ்வாறு பிரதாப முதலியார் சரித்திரம் நாவலின் உள்ளடக்கம் முழுவதிலும் நாம் இந்தக் கட்டுரையில் கண்ட அனைத்து கூறுகளும் நிறைந்துள்ளன. பிரதாப முதலியார் சரித்திரம் படைக்கப்பட்ட காலத்திலும், பிறகும் திறனாய்வாளர்களால் பல்வேறு விமர்சனங்களுக்கு உள்ளானாலும் தமிழ்ப் புனைகதை உருவாக்க வரலாற்றில் முதல் முழுமையான ஆக்க இலக்கியம் என்பதில் மாற்றுக் கருத்து இருக்க முடியாது. பிரதாப முதலியார் சரித்திரத்திற்குப் பிறகான தமிழ்ப் புனைகதை வரலாறு வேறு பல புதிய தன்மைகளைக் கொண்டது. அதைப்பற்றி பிறிதொரு சந்தர்ப்பத்தில் ஆய்வோம்.

**துணைநூற்பட்டியல் :**


1. தமிழறியும் பெருமாள் கதை, கருணானந்த சுவாமிகள், சிதம்பரம் (பர்) பிரபாகர் அச்சுக்கூடம், வேப்பேரி, சென்னை, 1866.
2. பஞ்ச தந்திரக் கதை, தாண்டவராய முதலியார், (மொ.பு), சென்னைக் கல்விச் சங்கம், சென்னை, 1825.
3. கதாமஞ்சரி, தாண்டவராய முதலியார், (தொர்), சென்னைக் கல்விச் சங்கம், சென்னை, 1826.
4. திராவிட மொழிகளின் ஒப்பிலக்கணம், கால்டுவெல், 1875, கவிதாசரண் பதிப்பு.
5. ஆதியூர் அவதானி சரிதம், சேஷையங்கார், தூ.வீ. ஸ்ரீதர முத்திரா கவுரசாலை, சென்னை, 1875.
6. விநோதரச மஞ்சரி, வீராசாமிச் செட்டியார், அஷ்டவதானம், தொண்டை மண்டலம் அச்சியந்திர சாலை, சென்னை, 1888.
7. பிரதாப முதலியார் சரித்திரம், வேதநாயகம் பிள்ளை, 1879.
8. நல்லூர் ஆறுமுக நாவலர் சரித்திரம், கனகரத்தின உபாத்தியாயர், சைவப் பிரகாச யந்திர சாலை, யாழ்ப்பாணம், 1882.
9. Father Beschi. His Times & His writings, Trichy, 1918.
10. தமிழ் வசன இலக்கியத்தின் வரலாறு, (கட்டுரை), கோதண்டராமன், ஸ்ரீபி. சக்தி, 1940.
11. தமிழில் சிறுகதையின் தோற்றமும் வளர்ச்சியும், சிவத்தம்பி, கார்த்திகேசு, வித்தியோதயப் பல்கலைக்கழகம், இலங்கை, 1967.
12. தமிழாராய்ச்சியின் வளர்ச்சி, சுப்பிரமணிய ஐயர், ஏ.வி, அமுத நிலையம், சென்னை, 1971.
13. பத்தொன்பதாம் நூற்றாண்டில் தமிழ் இலக்கியம், வேங்கடசாமி, மயிலை, சீனி, சாந்தி நிலையம், சென்னை, 1967.
14. தமிழ் நாவல் நூறாண்டு வரலாறும் வளர்ச்சியும், சுந்தரராஜன், (சிட்டி), பெ.கோ., சிவபாத சுந்தரம், சோ., கிறித்தவ இலக்கியச் சங்கம், சென்னை, 1977.
15. தமிழ் நாவல் இலக்கியம், கைலாசபதி, க., நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் பிரைவேட் லிமிடெட், சென்னை, 1977.
16. பத்தொன்பதாம் நூற்றாண்டின் தமிழ் உரைநடை வளர்ச்சி, பரமசிவானந்தம், அ.மு. தமிழ்க்கலை இல்லம், சென்னை, 1976.
17. தமிழ் வளர்த்த தைரியநாதர் என்னும் வீரமா முனிவர், பண்டாரம் நம்பியார், எ. ஜெயக்குமாரி ஸ்டோர், நாகர்கோவில், 1970.
18. தமிழில் சிறுகதை, வரலாறும் வளர்ச்சியும், சுந்தரராஜன் (சிட்டி), பெ.கோ., சிவபாத சுந்தரம், சோ., சென்னை, 1989.
19. கிறித்தவத் தமிழ்த் தொண்டர்கள், ரம்போலா மாஸ்கரேனால், தமிழ் இலக்கியக் கழகம், திருச்சிராப்பள்ளி, 1972.
20. பரமார்த்த குருவின் கதை, வீரமாமுனிவர், வீரமாமுனிவர் ஆய்வுக் கழகம், கருமாத்தூர், 1975.

**இதழ்கள்**

21. உதய தாரகை (1841)
22. நற்போதகம் (1849)
23. கலாவர்த்தினி (1866)
24. ஜநவிநோதிநி (1869)

**நூலகங்கள்**

25. மறைமலையடிகள் நூலகம்
26. கன்னிமாரா பொது நூலகம்
27. ரோஜா முத்தையா ஆய்வு நூலகம்
28. சென்னைப் பல்கலைக்கழக நூலகம்
29. பேரா. கா. சிவத்தம்பியுடனான கலந்துரையாடல்.

# கதைமரபும் தமிழின் முதல்மூன்று புதின ஆசிரியர்களும் பாரதியும்

ய. மணிகண்டன்

பழந்தமிழ் தொடங்கித் தனது சமகாலத் தமிழ் வரை பரந்து விரிந்த பார்வை பாரதிக்கு இருந்தது. பெருவீச்சோடு தான் முன்னெடுத்த தமிழ் மறுமலர்ச்சிக் காலக்கட்டத்தில் தனக்குச் சற்று முன்னும் தன் சமகாலத்திலும் தமிழின் பல்துறைகளிலும் முன்னோடிகளாய் விளங்கியவர்களையும் அவர்தம் முயற்சிகளையும் பாரதி கூர்ந்து நோக்கியிருக்கின்றார். அவர்களது முயற்சிகளையும் அவர்களையும் போற்றியிருக்கின்றார். அப்பல்துறைகளிலும் அரும்பிக்கொண்டிருந்த முயற்சிகளையும் முயற்சியாளர்களையும் கூட அவர் இனங்கண்டு பாராட்டியிருக்கின்றார். பின்னாளில் புரட்சிக்கவிஞராக விசுவரூபம் கொண்ட சுப்புரத்தினத்தின் முயற்சியைப் பாராட்டியது அத்தகையதே. தமிழ் ஆராய்ச்சி உலகத்தின் அரசஞ்சண்முகனார், இராகவையங்கார்... தமிழ் நாடக இலக்கிய முன்னோடிகளில் செய்யுள் வடிவில் மனோன்மணீயம் படைத்த சுந்தரனார், உரைநடை வடிவில் ரூபாவதி முதலியன படைத்த பரிதிமாற் கலைஞர்... சிறுகதை முன்னோடி வ.வே.சு. ஐயர், தமிழ்ப்பதிப்பு முன்னோடிகள் சி.வை.தா., உ.வே.சா., சற்றுக் காலத்தால் முந்தைய நாட்குறிப்பு நூல் முன்னோடி ஆனந்தரங்கம் பிள்ளை, கலைத்துறையின் முன்னோடி முயற்சிகளைப் புரிந்த ஆனந்தகுமாரசாமி, மொழிபெயர்ப்புத் துறையிலே முயற்சிகளைப்புரிந்த போப், மகேசகுமாரசர்மா என்றெல்லாம் தமிழுலகின் பல்துறை முதன்முயற்சியாளர்களை, முன்னோடிகளைப் பற்றி அவர் எழுதியிருக்கின்றார். இப்பதிவுகள் அவர் தனது சமகாலத் தமிழுலகின் ஆழ அகலங்களை, முயற்சிகளைக் கூர்ந்து நோக்கியிருக்கின்றார் என்பதனையும் படைப்புத்துறையன்றித் தமிழின் பல்துறை பற்றியும் அக்கறை கொண்டிருந்திருக்கின்றார் என்பதையும் நமக்கு நன்குணர்த்துகின்றது.

•

படைப்புத்துறைகளுள் ஒன்றான புதினம் எழுதுவதில் பாரதியே ஈடுபட்டிருந்திருக்கின்றார். அவர் நடத்திய 'இந்தியா' இதழிலும் பிறர் படைத்த புதினம் வெளிவந்திருக்கிறது என்பதை அறியமுடிகிறது. (ஒரு சான்று: A Novel with a Hero by "Dreamer" த்ருடசீலன், இந்தியா, 8.9.1906) அதே வேளையில் இன்று நாம் தமிழின் முதல் அணிப் புதின ஆசிரியர்கள் என்று போற்றுகின்ற, மரபாக வழக்குப் பெற்றுவிட்ட முதல் மூன்று புதினங்கள் என்பனவற்றைப் படைத்த படைப்பாளிகளைப் பற்றி அவர் அறிந்திருக்கின்றார்; கருத்துரைத்திருக்கின்றார் என்பது சிறப்பாகக் குறிப்பிடத்தக்கது.

பத்தொன்பதாம் நூற்றாண்டுத் தமிழ் உரைநடையில் குறிப்பிடத்தக்க ஒரு தனித்தன்மை பல்வேறு பழமொழிகளையும், வழக்கில் உள்ள கதைகளையும் எடுத்தாள்வதாகும். பிரதாபமுதலியார் சரித்திரம் கதைக்களஞ் சியமாகவே இருப்பது இங்கே நினைக்கத்தக்கது. கட்டுரை முதலிய உரைநடை வடிவங்களிலும் பழமொழி, கதைகள் முதலியனவற்றை ஆள்வது ஒரு மரபென்று சொல்லும் அளவிற்கு இருந்திருக்குமோ என்று எண்ணத்தோன்றுகிறது. பாரதியின் உரைநடைகளில் ஏராளமான பழமொழிகளும், வழக்கில் உள்ள கதைகளும் இடம்பெற்றுள்ளன. சாதாரண மக்கள் பல்வேறு பழமொழிகளை, கதைகளை வாழ்க்கையில் பயன்படுத்துவது போலப் பாரதி தனது கட்டுரைகளில் எண்ணற்ற பழமொழிகளையும் வழக்குக்கதைகளையும் போகிற போக்கில் நினைவில் இருந்து பொருத்தமான நிலையில்



சென்னைப் பல்கலைக்கழகத் தமிழ் இலக்கியத்துறையில் உதவிப் பேராசிரியராகப் பணியாற்றி வருகின்றார். சுவடியியல், யாப்பியல், பாரதிதாசனியல் ஆகிய துறைகளில் 25க்கும் மேற்பட்ட நூல்களை எழுதியுள்ளார். இவரின் நூல்கள்: தமிழில் யாப்பிலக்கண வளர்ச்சி, பாரதிதாசனின் அரிய படைப்புகள், ஒளிந்திருக்கும் சிற்பங்கள், பாரதிதாசனும் சக்தி இதழும், கட்டளைக் கலித்துறை, பாரதிதாசன் இலக்கியம்: அறியப்படாத படைப்புகள், பாரதிதாசன் கவிதை இலக்கியங்களில் சுயமரியாதை, சமத்துவம், பாரதிதாசன் கவிதை இலக்கியங்கள் இறைமை, இந்திய விடுதலை இயக்கம், நேரிசை வெண்பா இலக்கியக் களஞ்சியம், மகாகவி பாரதியும் சங்க இலக்கியமும் முதலியன.

குறிப்பிட்டுச் சென்றிருக்கின்றார். இவற்றுள் உலகளவிலான கதைகள், இந்திய அளவிலான கதைகள், தமிழ்மண்ணில் வழங்குகின்ற கதைகள் முதலிய அனைத்தையுமே காணமுடிகின்றது. உலகளாவிய நீரோ, டான்க்விக்ஸோட், கான்யூட் ராஜா கதை முதலியவற்றையும், இந்திய அளவிலான மகாபாரதக்கதை, இராமாயணக்கதை, பஞ்சதந்திரக்கதை, பர்த்ருஹரி கதை, காளிதாசன் பற்றிய கதை, ஜகந்நாத மகாகவி கதை, தெனாலிராமன் கதை, எல்லாம் நன்மைக்கே கதை, இராமகிருஷ்ணர் கதை முதலியவற்றையும், தமிழ் மண்ணில் வழங்கும், பெரிதும் தமிழ் மண்ணிற்கே உரிய பெரியபுராணக்கதை, மண்கிண்ணி பொன்கிண்ணி கதை, நாரையும் ஓநாயும் கதை, மாமியார் மருமகள் கதை, ஆட்டுக்குட்டி கதை, வித்வானைப் பார்த்து அழத்தொடங்கிய ஆட்டிடையன் கதை, குருசீடன் கதை முதலியனவற்றையும் பாரதியின் உரைநடையில் ஆங்காங்கு காணமுடிகிறது. இப்படிப் பல்வேறு சிறுசிறு கதைகளைப் பொருத்தமாக ஆள்வது அன்றைய நிலையில் அவர் சொல்லக்கருதிய நுணுக்கமான அரசியல் செய்திகளையும் சாதாரண மக்கள் புரிந்துகொள்ளத் துணையாகும் உத்தியாக அமைந்திருந்திருக்கின்றது. அவருடைய உரைநடைப் படைப்புகளிலிருந்து வழக்கிலிருந்த கதைகளின் களஞ்சியம் ஒன்றையே உருவாக்கிவிட முடியும்.

இப்படியெல்லாம் கதைகளின் மீது ஈடுபாடு கொண்டிருந்த, கதைப்படைப்பு முயற்சியிலும் ஈடுபாடு கொண்டிருந்த மகாகவி பாரதி தமிழின் முதல் மூன்று புதின ஆசிரியர்களான மாயூரம் வேதநாயகம் பிள்ளை, பி.ஆர். ராஜமய்யர், அ.மாதவையா ஆகியோரைப் பற்றித் தனது எழுத்தில் பதிவு செய்திருக்கின்றார் என்பது தமிழ் ஆராய்ச்சி உலகத்தினரின் தனித்த கவனத்திற் குரியதாகும். முதல் மூன்று புதினங்கள் என்று இவற்றைச் சொன்னாலும் காலவரிசையில் வேறுசிலரின் படைப்புகளும் இவற்றுக்குள் இடம்பெறுவது உண்மையாயினும் இப்படிக் கூறுகிற மரபு வலுப்பெற்று விட்டது. எனினும் இம்மூன்று புதினங்களும் மூவகைப்போக்குக்கு முன்னோடிகளாகி விடுகின்றன. இத்தொடர்பில் கி.அ.சச்சிதானந்தம் எழுதியுள்ள பின்வரும் குறிப்பு எண்ணுதற்குரியது

இப்படியெல்லாம் கதைகளின் மீது ஈடுபாடு கொண்டிருந்த, கதைப்படைப்பு முயற்சியிலும் ஈடுபாடு கொண்டிருந்த மகாகவி பாரதி தமிழின் முதல் மூன்று புதின ஆசிரியர்களான மாயூரம் வேதநாயகம் பிள்ளை, பி.ஆர். ராஜமய்யர், அ. மாதவையா ஆகியோரைப் பற்றித் தனது எழுத்தில் பதிவு செய்திருக்கின்றார் என்பது தமிழ் ஆராய்ச்சி உலகத்தினரின் தனித்த கவனத்திற்குரியதாகும்.

'தமிழ் நாவல் இலக்கியப் போக்கிற்குத் தடம் அமைத்தவை முதல் மூன்று நாவல்கள் எனலாம். அதீத கற்பனையும் கதைத்தன்மையும் கொண்ட போக்கிற்கு 'பிரதாப முதலியார் சரித்திரம்'; தத்துவப் பண்பும் இலக்கியத்தன்மையும் கொண்ட போக்கிற்குக் 'கமலாம்பாள் சரித்திரம்'; சமூகச் சீர்திருத்த மாற்றத்திற்குப் 'பத்மாவதி சரித்திரம்'. (கி.அ.சச்சிதானந்தம், 'அறிமுகம்', கமலாம்பாள் சரித்திரம், ப. 14)

தமிழின் முதல் ஐந்து புதினங்கள் என்று அறிமுகம் செய்த க.நா. சுப்பிரமணியன் அந்த

ஐந்து புதின ஆசிரியர் மரபில் குறிக்கத்தக்கவர்கள் வரிசையையும் தனது நூலில் விவரித்துள்ளதும் இத்தொடர்பில் கருதத்தக்கதாகும். (முதல் ஐந்து தமிழ்நாவல்கள் பக். 126, 127)

•

இந்த மூன்று முன்னோடிப் புதினங்களுக்கும் புதின ஆசிரியர்களுக்கும் பாரதிக்குமான கால நிலையிலான உறவினைப் பின்வருமாறு நிரல் படுத்தலாம்.

வேதநாயகம் பிள்ளை 1879இல் பிரதாப முதலியார் சரித்திரத்தை எழுதி வெளியிடுகின்றார். 1826இல் பிறந்த அவர் 1889இல் இறக்கின்றார். வேதநாயகம் பிள்ளை இறக்கும்போது பாரதிக்கு வயது 7. பிரதாப முதலியார் சரித்திரம் வெளிவரும் போது பாரதி பிறக்கவில்லை. பாரதி பிறப்பதற்கு மூன்றாண்டுகளுக்கு முன்பே பிரதாப முதலியார் சரித்திரம் வெளிவந்துவிட்டது. எனவே பாரதியின் காலத்தில் நல்ல வழக்குப்பெற்றிருக்க இந்தப் புதினத்திற்கு வாய்ப்பு மிகுதி.



கமலாம்பாள் சரித்திரத்தைப் படைத்த ராஜமய்யர் தனது படைப்பை 1896இல் எழுதி வெளியிடுகின்றார். 1872இல் பிறந்த அவர் 1898இல் இறக்கிறார். பாரதி ராஜமய்யருக்குப் பத்து வயது இருக்கும்போது பிறக்கிறார். ராஜமய்யர் இறக்கும் போது பாரதிக்கு வயது 16. கமலாம்பாள் சரித்திரம் வெளிவரும்போது பாரதிக்கு வயது 14. இந்தப் படைப்பும் பாரதியின் வளர் பருவத்தில் செல்வாக்குக் கொண்டதாகவே இருந்திருக்கும். 'பிரபுத்த பாரதம்' முதல் இதழ் வெளிவந்த 1896 ஜூலை முதல் இரண்டாண்டுக் காலம் ராஜமய்யர் அதன் ஆசிரியராக இருந்தார். பாரதிக்கு முன்னோடியாக அவர் இதழியற் பணி ஆற்றிச் சென்றுவிடுகிறார்.

பத்மாவதி சரித்திரத்தைப் படைத்த மாதவையா 1872இல் பிறக்கின்றார். (ராஜமய்யர் பிறந்த அதே ஆண்டு) 1925இல் காலமாகிறார். மாதவையாவிற்குப் பத்து வயது இருக்கும்போது பாரதி பிறக்கிறார். பத்மாவதி சரித்திரம் இதழில் வெளிவரும்போது பாரதிக்கு வயது 16, 17. முழுநூல் வடிவில் வரும்போது வயது 29. பாரதியைவிடப் பத்துவயது மூத்தவர் மாதவையா. எனினும் பாரதி இறந்து நான்கு ஆண்டுகள் கழித்தே மாதவையா இறக்கிறார்.

இம்மூன்று முன்னோடிகளும் பாரதியைவிட மூத்தவர்கள். இவர்களுடைய மூன்று புதினங்களும் பாரதியின் வளர்நிலைப்பருவத்தில், வாழ்க்கையின் முதிர் பருவத்திற்குள் செல்வாக்கு மிக்கதாக, வழக்குபெற்றதாக இருந்திருந்தமையை இக்குறிப்புகள் உணர்த்துகின்றன. இவற்றைப் பாரதி படித்திருத்தல் இயல்பே.

•

மகாகவி பாரதி இந்தியா (1909) இதழிலே ஒருமுறை மார்லியின் சீர்திருத்தங்கள் தொடர்பாகவும், அத்தொடர்பில் லண்டன் நகரிலே அமீர்ஆலி முதலிய முஸ்லீம் தலைவர்கள் மார்லியைச் சந்தித்தது பற்றியும் ஓர் அரசியல் குறிப்பை எழுதினார். மார்லியின் சீர்திருத்தங்கள் ஒருபோதும் நடைமுறைக்கு வரவாய்ப்பில்லை என்பதையும் வந்தாலும் பயன்தரப்போவதில்லை என்பதையும் அந்த எழுத்திலே குறிப்பிட்டிருந்தார். இவ்வாறு நடைமுறைக்கு வர வாய்ப்பற்ற ஒன்றுக்காக லண்டனிலே முஸ்லீம் தலைவர்கள் சென்று சந்தித்த முயற்சியையும் அதையொட்டி இந்துக்கள் வாதிடுவதையும் கூறவரும்போது மாயூரம் வேதநாயகம் பிள்ளையின் பிரதாப முதலியார் சரித்திரத்தில் இடம்பெற்றுள்ள கதையின் பகுதியினைப் போகிற போக்கில் அனாயாசமாக என்று குறிப்பிடுவார்களே அப்படி நினைவுகூர்ந்து ஓரிரு தொடர்களில் எடுத்துக்காட்டிச் செல்கின்றார். இந்த அரிய பதிவானது வேதநாயகம் பிள்ளை கதையைப் பாரதி எவ்வளவு தூரம் ஞாபகத்தில் வைத்திருந்திருக்கின்றார் என்பதையும், எடுத்துக்காட்டுகின்ற அளவுக்கு வாசகர்கள் மத்தியிலும் அந்தக் காலத்தில் அந்தக் கதை எவ்வளவு பிரபலம், எவ்வளவு தூரம் நினைவில்

இருக்கக்கூடிய அளவுக்கு வழக்கிலிருந்தது என்பதையும் நமக்கு உணர்த்துகின்றது.

வேதநாயகம்பிள்ளையின் கதைப்பகுதியை எடுத்துக்காட்டிச் செல்லும் பாரதியின் உரைநடைப் பகுதி வருமாறு:

'லண்டனிலே ஸ்ரீமான் அமீர் ஆலி முதலிய சில மகமதிய கனவான்கள் சீர்திருத்தங்களின் சம்பந்தமாக லார்டு மார்லியைச் சந்தித்து விண்ணப்பம் செய்ததாகத் தெரிகிறது. இந்த மாதிரியான விஷயங்களில் பெரும் பகுதியாரான ஹிந்துக்கள் சிறுபகுதியாரான மகமதியர்களின் இஷ்டப்படியே நடந்து கொள்ளுதல் நேச வளர்ச்சிக்கு மிகவும் நியாயமாகும். இதில் இகழ்ச்சி நேரிடுமாயின், அதிலிருந்து பெருங் கெடுதிகள் விளைவதற்கிடமுண்டு என்ற போதிலும் ஒரு போதும் வரப் போகாதனவும், வரினும் பயனற்றனவுமாகிய மார்லியின் சீர்திருத்தங்களுக்கு இந்த ஜனங்கள் ஒருவரை யொருவர் முட்டிக் கொள்வது வியப்பைத் தருகிறது. "பிறவாத பிள்ளையை ஸ்வீகாரம் கேட்டுப் பிரமாதச் சண்டை வளர்த்தல்" என்ற வேதநாயகம் பிள்ளை கதை நினைப்பிற்கு வருகின்றது.

(கால வரிசைப்படுத்தப்பட்ட பாரதி படைப்புகள் தொகுதி 4, ப. 155 )

அரசியல் கட்டுரையிலே பாரதி குறிப்பிடுகிற "பிறவாத பிள்ளையை ஸ்வீகாரம் கேட்டுப் பிரமாதச் சண்டை வளர்த்தல் என்ற வேதநாயகம் பிள்ளை கதை நினைப்பிற்கு வருகின்றது" என்ற இரண்டுவரிகளை இன்று படிப்பவர்கள் உடனடியாக வேதநாயகம் பிள்ளையின் கதைப்பகுதியினை நினைவுக்குக் கொண்டுவர வாய்ப்பில்லை (பாரதியின் இந்த உரைநடையைப் படித்தவர்களும், பிரதாப முதலியார் சரித்திரத்தைப் படித்தவர்களும் இன்று குறைவுதானே). பாரதியைப் புரிந்துகொள்ள, பாரதியின் இத்தகு எழுத்தைப் புரிந்துகொள்ளப் பரந்து விரிந்த இலக்கியப்பயிற்சியும் பல்துறை அறிவும் இலக்கிய ஆர்வலருக்குத் தேவைப்படுகின்றது. பாரதி இங்கே எடுத்துக்காட்டிய பகுதியை விளங்கிக்கொள்ள வாய்ப்பாக மாயூரம் வேதநாயகம் பிள்ளையின் பிரதாப முதலியார் சரித்திரப் பகுதியைச் சற்று நீளமானதென்ற போதிலும் இங்கேயே பார்ப்பதுதான் ஏற்றதாகும்.

'முந்தின அதிகாரத்திற் சொல்லியபடி ஞானசல்லாபங்களிலும் கிருகஸ்தாச்சிரம தர்மங்களிலும் சந்தோஷமாகக் காலம் போக்கிக் கொண்டுவந்தோம். கலியாணத்துக்கு முன்பு, பிடரியைப் பிடித்துத் தள்ளினாலும் போகாமலிருந்த காலம் இப்போது வாயு வேகம் மனோ வேகமாக ஓடத்தலைப்பட்டது. கலியாணத்துக்குப் பின்பு ஒன்றரை வருஷம் ஒன்றரை நிமிஷம் போற் பறந்துவிட்டது. நாங்கள் இரண்டாவது தடவை சம்பந்தி முதலியார் வீட்டில் இருக்க வேண்டிய ஆறு மாசமும் கடந்துபோய்விட்டதால் ஞானாம்பாளை என் வீட்டுக்கு வரும்படி உத்தரவு செய்து நான் முந்திப்போய்விட்டேன். அதற்குச் சற்று நேரத்துக்குப் பின்பு சம்பந்தி முதலியார் என் தகப்பனாரிடத்திற்கு வந்து "ஞானாம்பாள் கர்ப்பவதியாயிருப்பதாக அவளுடைய தாயார் சொல்லுகிறாள். அவளுக்கு முதற் பிரசவத்தில் ஆண் குழந்தை பிறக்குமென்று அவளுடைய ஜாதகத்தில் எழுதப்பட்டிருக்கிறது. அந்தப் பிள்ளையை எனக்கு நீர் ஸ்வீகாரம் கொடுக்கவேண்டும்; அதற்கென்ன சொல்லுகிறீர்?" என்றார். என் தகப்பனார் சிரித்துக்கொண்டு "கர்ப்பமே நிச்சயமென்று தெரியவில்லை; அது நிச்சயமாயிருந்தாலும் ஆண் பிள்ளைதான் பிறக்குமென்று எப்படி நிச்சயிக்கக் கூடும்? பின்னும் ஜேஷ்ட புத்திர ஸ்வீகாரமும் புத்திரிகா புத்திர ஸ்வீகாரமும் செல்லாதென்று தர்ம சாஸ்திர வசனமும் இருக்கின்றதே" என்றார். சம்பந்தி முதலியார் என் தகப்பனாரைப் பார்த்து "உம்மை நான் தர்மசாஸ்திரம் கேட்கவில்லை. நீர் அந்தப் பிள்ளையை ஸ்வீகாரம் கொடுப்பீரா? மாட்டீரா? இரண்டிலொன்று சொல்லும்" என்றார். உடனே என் தகப்பனார் "எனக்குப் பௌத்திரன் வேண்டாமா? உமக்கெப்படி ஸ்வீகாரங் கொடுப்பேன்?" என்றார். இதைக் கேட்டவுடனே சம்பந்தி முதலியாருக்கு ஆத்திரம் உண்டாகி, அவர் வீட்டுக்குப் போய் ஞானாம்பாளைக் கூப்பிட்டு "உனக்கு நான் வேண்டுமா? புருஷன் வேண்டுமா?" என்று கேட்க, அவள் "இருவரும்தான் வேண்டும்" என்றாளாம். "இருவரிலும் யார் விசேஷம்?" என்று அவர் மறுபடியும் கேட்க அவள் புருஷன்தான் விசேஷமென்று நேரே உத்தரவு சொன்னால் தகப்பனாருக்குக் கோபம் வருமென்று நினைத்து,

"என் தாயாருக்குத் தன் தகப்பனைப் பார்க்கிலும் நீங்கள் விசேஷமல்லவா?" என்று வினயமாகவும் மறைபொருளாகவும் மறுமொழி சொன்னாள். அதற்குச் சற்றுநேரம் அவருக்குப் பயன் தெரியாமலிருந்து பிற்பாடு தெரிந்துகொண்டு ஞானாம்பாளை வாயில் வந்தபடி தூஷித்து "இனிமேல் நீ உன் புருஷன் வீட்டுக்குப் போவதைப் பார்க்கலாம். அவனும் இங்கே வருவதைப் பார்க்கலாம்" என்று சொன்னாராம். தூஷணையான வார்த்தைகளை அவள் ஒருநாளும் கேளாதவளானபடியால் அவளுக்கு உடனே நடுக்கலும் சுரமும் கண்டு கர்ப்பத்துக்கு அபாயம் வந்து விட்டது.

இந்தச் செய்திகளெல்லாம் என் தகப்பனார் கேள்விப்பட்டு அவர் என்னை அழைத்து "உனக்குத் தகப்பன் வேண்டுமா? பெண்சாதி வேண்டுமா?'' என, நான் "இருவரும்தான் வேண்டும்'' என்றேன். அவர் "அது கூடாது; நான் வேண்டுமானால் உன் பாரியைத் தள்ளிவிட வேண்டும்" என்றார். நான் என் தகப்பனாரைப் பார்த்து "பிதுர் வாக்கியம் நியாயத்திற்கும் தர்மத்திற்கும் ஒத்திருக்கிற பக்ஷத்தில் நான் அந்தப்படி நடக்கவேண்டியதுதான். சகல சாஸ்திரங்களுக்கும், வேத வாக்கியங்களுக்கும் விரோதமாகவும் நிஷ்காரணமாகவும் என் பாரியைத் தள்ளிவிடும்படி சொல்கிறீர்கள். அந்த உத்தரவை எப்படி நான் அனுஷ்டிக்கக் கூடும்?" என்றேன். உடனே அவருக்குக் காலாக்கினி போல் கடுங் கோபமுண்டாகி, "அடா! பயலே! இதற்குத்தானா உன்னை நான் பெற்றேன்? வளர்த்தேன்? நேற்று வந்தவளைப் பொருளாயெண்ணி என்னை அலக்ஷியஞ் செய்தாயே. இனிமேல் அவளும் இங்கே வரக்கூடாது. நீயும் அங்கே போகக்கூடாது. இனி நீ அவளிடத்தில் பேசினால் எனக்கு நீ பிள்ளையுமல்ல; நான் உனக்குத் தகப்பனுமல்ல; என்னுடைய ஆஸ்தியும் உனக்கு நாஸ்திதான்" என்றார். இதைக் கேட்டவுடனே எனக்கு எவ்வளவு துயர முண்டாயிருக்குமென்பதை இதை வாசிக்கிறவர்கள் உணர்ந்து கொள்ள வேண்டுமேயல்லாது அதை விவரிக்க நான் சக்தி யுள்ளவனல்ல. இப்படிப்பட்ட வார்த்தைகளை இதற்கு முன் ஒருநாளும் நான் கேட்ட தில்லையானதால் அந்த வார்த்தைகள் ஒவ்வொன்றும் பாணம்போல் என் இருதயத்தைப் பிளந்தது. சம்பந்தி முதலியார் வீட்டுக்கு நானும் போகக் கூடாது. என் வீட்டுக்கு ஞானாம்பாளும் வரக்கூடாதென்று சம்பந்தி முதலியாரும் என் தகப்பனாரும் ஆணையிட்டு மறித்த பிற்பாடு இனிமேல் அவளை எப்போது காணப்போகிறோம் என்று நான் துக்காக்கிராந்தனாயிருக்கும் போது என் தாயார் பரிதாப முகத்துடன் என்னிடம் வந்தார்கள்.



அவர்களைக் கண்டவுடனே, "அம்மா! நடந்த சங்கதிகளை எல்லாம் கேள்விப்பட்டீர்களா?'' என்று சொல்லி அழுதேன். அவர்களும் சற்று நேரம் என்னுடன்கூட விசனப்பட்ட பிற்பாடு என் கண்ணீரைத் துடைத்துச் சொல்லுகிறார்கள்: "அப்பா! நீ கிலேசப்படவேண்டாம்; பெரியோர் களாயிருக்கிறவர்களுக்கு ஒவ்வொரு சமயத்தில் கோபம் வருகிறதும் பிற்பாடு தணிகிறதும் வழக்கம்தான். இப்போது உன் தந்தையார் ஏதோ சொன்னார்களென்று துக்கிக்க வேண்டாம். நீ பிறந்தது முதல் இந்நாள் மட்டும் உன்னை உயிருக்கு உயிராய் வளர்த்தவர்கள் இப்போது கோபமாய் ஒரு வார்த்தை சொன்னால் அதற்காக மனஸ்தாபப்படலாமா? அதற்குமுன் அவர்கள் செய்த நன்மையை மறந்து விடலாமா? அவர்கள் கோபத்திலே சொன்ன வார்த்தைகளையெல்லாம் நிசமென்று நீ மனம் வருந்தாதே, ஞானாம்பாளை நீ சீக்கிரத்தில் பார்ப்பாய்" என்று பலவிதமாக என் தாயார் எனக்குத் திடஞ் சொன்னார்கள். அவர்கள் என்கூட இருந்த வரையில், எனக்குக் கொஞ்சம் ஆறுதலாகவிருந்தது, அவர்கள் போன உடனே அந்த ஆறுதலும் போய்விட்டது. என்னுடைய வியாகுலத்தை அதிகப்படுத்துவதற்கு இன்னொரு காரணமும் கூடச் சேர்ந்தது. அஃது என்ன வென்றால், சம்பந்தி முதலியாருக்கும் என் தகப்பனாருக்கும் உண்டான சண்டை நிமித்தம்

ஞானாம்பாளுக்கு வியாதி அதிகரித்து, அவளுடைய கர்ப்பமும் அழிந்து போனதாக நான் கேள்விப்பட்டு, வேல் தொளைத்த புண்ணிலே கொள்ளிக் கட்டையைச் சொருகினதுபோல் பெருந்துயரத்தை அடைந்தேன். அந்தச் சண்டைக்குக் காரணமாயிருந்த கர்ப்பம் அழிந்துபோயும் அதனால் விளைந்த கலகம் தீரவில்லை. குதிரை கீழே தூக்கிப் போட்டதுமில்லாமல் மேலே ஏறியும் மிதித்தது போல், என் தகப்பனார் மறுபடியுஞ் சும்மா இராமல் எனக்கு வேறே பெண் விசாரித்துக் கலியாணம் செய்விக்கவேண்டுமென்று எண்ணம் கொண்டதாக நான் கேள்விப்பட்டு இப்படிப்பட்டவர்களுடைய முகத்தில் விழிக்காமல், ஞானாம்பாளையும் அழைத்துக்கொண்டு எங்கேயாவது போய்விடலாமென்கிற எண்ணம் உண்டாயிற்று. ஆனால் ஞானாம்பாள் வியாதியா யிருப்பதனாலே, அவளை அழைத்துக்கொண்டு போவது தகுதியல்ல வென்றும் நான் முந்திப் போய் ஒரு இடத்தில் நிலைத்திருந்துகொண்டு பிற்பாடு அவளை அழைத்துக்கொள்ளலாமென்றும் எனக்குள்ளே தீர்மானித்துக் கொண்டேன்' (மாயூரம் வேதநாயகம் பிள்ளை, பிரதாப முதலியார் சரித்திரம், பக். 176-179).

இவ்வளவு பெரிய புதின இலக்கியப் பகுதியைப் பாரதி நினைவிற் கொண்டு போகிற போக்கில் அரசியல் செய்தியை விளக்க இரண்டுவரிகளில் எடுத்துக்காட்டாக்கியிருக்கிற நுட்பம் எண்ணத்தக்கது ஒருபுறமிருக்க, இந்தப் படைப்பில் பாரதி எந்த அளவுக்குத் திளைத்திருக்கின்றார் என்பதும் தெள்ளத்தெளிவாக வெளிப்படுகிறது.

இப்படி நேரடியாக வேதநாயகம் பிள்ளையை, அவரது படைப்பை எடுத்துக்காட்டிப் பதிவு செய்திருப்பது ஒருபுறமிருக்க வேறுசில கூறுகளிலும் அப்படைப்பின் செல்வாக்கைப் பாரதியிடத்தில் காணமுடிகிறது. பாரதியின் வசனகவிதை பற்றிப் பலரும் அறிவர் எனினும் பாரதி அந்தக் கவித்துவப்பகுதிக்கு வசன கவிதை என்ற பெயரை இடவில்லை. ஆனால் உரைநடை எழுத்தில் ஒரிடத்தில் அவர் "வசனகாவியம்'' என்ற சொல்லாட்சியைப் பயன்படுத்தியிருக்கின்றார். பாரதி தனது இறுதிக்கட்ட வாழ்வில், புதுவை யிலிருந்து மீண்டபின், வெள்ளையராட்சியால் கைது செய்யப்பட்டு விடுவிக்கப்பட்ட பின் எட்டையபுர மன்னருக்கு ஒரு கடிதத்தை எழுதினார். அந்தக் கடிதத்தில் எட்டயபுர ராஜ வம்ச சரித்திரம் முன்பே எழுதப்பட்டுள்ள போதிலும் அதன் தமிழ்நடை சிறப்பானதாக அமையவில்லை என்றும், தான் அதனை இனிய நடையிலே படைத்துத் தருவதாகவும் குறிப்பிட்டார். அப்படித் தான் படைக்கும் அந்த வரலாற்றுப் படைப்பானது தமிழ்நாட்டிலே "வசன காவியத்துக்கு" ஒரு சிறந்த எடுத்துக்காட்டாக அமையும் என்றும் குறிப்பிட்டார். அந்த இடத்தில் அவர் வசனகாவியம் என்ற அரிய சொல்லாட்சியை ஆண்டிருக்கின்றார். இந்த ஆட்சியைக் கொண்ட அக்கடிதப் பகுதி வருமாறு:

'முன்பு கவி கேஸரி ஸ்ரீ ஸ்வாமி தீக்ஷிதரால் எழுதப்பட்ட 'வம்சமணி தீபிகை' என்ற எட்டயபுரத்து ராஜ வம்சத்தின் சரித்திரம் மிகவும் கொச்சையான தமிழ் நடையில் பலவிதமான குற்றங்களுடையதாக இருப்பது ஸந்நிதானத்துக்குத் தெரிந்த விஷயமே.

அதைத் திருத்தி நல்ல, இனிய, தெளிந்த தமிழ் நடையில் நான் சமைத்துத் தருவேன்...

மேலும், நான் அதை எழுதுகிற மாதிரியை ஒட்டியும் என் பெயரை ஒட்டியும் அந் நூல் தமிழ்நாட்டில் வசன காவியத்துக்கோர் இலக்கியமாக எக்காலத்திலும் நின்று நிலவும்படி செய்யப்படும்.'

... இக் காரியத்தால் இவ்விடத்து ராஜ குடும்பத்துக்கு அழியாத கீர்த்தியும் தமிழ் மொழிக்கொரு மேன்மையும் பொருந்திய சரித்திர நூலும் சமையும்.

*(காலவரிசைப்படுத்தப்பட்ட பாரதி படைப்புகள், தொகுதி 10, பக். 565-566)*

> பாரதி பயன்படுத்திய வசனகாவியம் என்ற சொல்லாட்சியானது அவருக்கு முன்பே பிரதாப முதலியார் சரித்திரத்தில் இடம்பெற்றுள்ளது; அந்த இலக்கிய வடிவமும், மேனாடுகளில் அவற்றின் செல்வாக்கும் பற்றி விரிவாக மனத்திற் பதியும் வண்ணம் மறக்கவொண்ணா வண்ணம் எழுதப்பட்டிருக்கின்றது.

பாரதி பயன்படுத்திய வசனகாவியம் என்ற சொல்லாட்சியானது அவருக்கு முன்பே பிரதாப முதலியார் சரித்திரத்தில் இடம்பெற்றுள்ளது; அந்த இலக்கிய வடிவமும், மேனாடுகளில் அவற்றின் செல்வாக்கும் பற்றி விரிவாக மனத்திற் பதியும் வண்ணம் மறக்கவொண்ணா வண்ணம் எழுதப்பட்டிருக்கின்றது. ஒரு புதினப்படைப்பில் வசனகாவிய வடிவம் பற்றிக் கதைத்தலைவி இப்படியொரு விரிவுரை ஆற்ற வேண்டுமா என்று கேட்கும் அளவிற்கு எழுதப்பட்டிருக்கிறது. இந்தப் பகுதியும் இந்தச் சொல்லாட்சியும் பாரதியின் மனத்தில் ஆழப்பதிந்ததன் விளைவே இச்சொற்பிரயோகம் என்பது தெளிவு. பிரதாப முதலியார் சரித்திரத்தில் முதன் முறையாக மனத்திற் பதியும் வண்ணம் பதிவு பெற்றுள்ள "வசனகாவியம்" எனும் ஆட்சி, வசனகாவியம் எனும் வடிவம் பற்றிய செய்தி ஆகியனவற்றை இங்கே பார்க்கலாம்:




இங்கிலீஷ், பிரான்சு முதலிய பாஷைகளைப் போலத் தமிழில் வசனகாவியங்கள் இல்லாமலிருப்பது, பெருங்குறை வென்பதை நாம் ஒப்புக் கொள்ளுகிறோம். அந்தக் குறைவைப் பரிகரிப்பதற்காகத்தான் எல்லாரும் ராஜபாஷைகளுந் தமிழுங் கலந்து படிக்க வேண்டுமென்று விரும்புகிறோம். ராஜபாஷைகளும் சுதேச பாஷைகளும் நன்றாக உணர்ந்தவர்கள் மட்டும் உத்தமமான வசனகாவியங்களை எழுதக் கூடுமேயல்லாது இதரர்கள் எழுதக் கூடுமா? வசனகாவியங்களால் ஜனங்கள் திருந்த வேண்டுமேயல்லாது, செய்யுட்களைப் படித்துத் திருந்துவது அசாத்தியம் அல்லவா? ஐரோப்பிய பாஷைகளில் வசனகாவியங்கள் இல்லாமலிருக்கு மானால் அந்த தேசங்கள் நாகரீகமும் நற்பாங்கும் அடைந்திருக்கக் கூடுமா? அப்படியே நம்முடைய சுயபாஷைகளில் வசன காவியங்கள் இல்லாம லிருக்கிற வரையில் இந்தத் தேசம் சரியான சீர்திருத்தம் அடையாதென்பது நிச்சயம்...

தேசபாஷைகளில் தகுந்த வசனகாவியங் களிருக்குமானால், இவ்வளவு நிர்ப்பாக்கியமான ஸ்திதியிலிருப்பார்களா? ஆதலால் இங்கிலீஷ், பிரான்சு முதலிய ராஜபாஷைகளைப் படிக்கிறவர்கள், தேசபாஷைகளையுந் தீர்க்கமாக உணர்ந்து இந்தத் தேசத்தைச் சூழ்ந்திருக்கிற அறியாமை என்னும் அந்தகாரம் நீங்கும்படி வசனகாவியங்களென்னும் ஞானதீபங்களை ஏற்றுவார்களென்று நம்புகிறோம். (மாயூரம் வேதநாயகம் பிள்ளை, பிரதாப முதலியார் சரித்திரம், பக். 328-330)

வசனகாவியம் என்னும் ஆட்சியைப் பாரதி பயன்படுத்தியிருப்பினும் வேதநாயகம் பிள்ளை கருதிய பொருளில் கொண்டார் எனத் தோன்றவில்லை. வரலாற்றை உரைநடையில் காவியத் தன்மையுடன் படைத்தல் எனப் பொருள் கொண்டதாகவே தெரிகிறது. அதற்கு முன்பு வேதநாயகம் பிள்ளை புதின (நாவல்) இலக்கிய வகையைக் குறிப்பிட இதனைப் பயன் படுத்தியிருப்பினும் இந்தச் சொல் வடிவத்தின் அமைப்பு, பொருள், இதன் பொருத்தப்பாடு முதலியவற்றைக் கைலாசபதி விரிவாக நோக்கியுள்ளார். பாரதி ஆண்ட சொல் வடிவம் என்பது கைலாசபதியால் சுட்டப்படவில்லை. அவர் பார்வைக்கு அது படவில்லை என்றே தோன்றுகிறது. பிரதாப முதலியார் சரித்திரத்தின் ஆட்சி கொண்டு இது குறித்து விரிவாகவே அவர் பேசியுள்ளார். கைலாசபதியின் இத்தொடர்பிலான கருத்துகளை இங்கு நோக்குதல் தகும்.

நாவல் ஒரு புதிய இலக்கிய வகை என்று அதனைத் தொடக்கி வைத்தவர்கள் நன்குணர்ந்தனராயினும், காவியமரபினின்றும் முற்றாக விடுபட்டிருந்தனர் எனக் கூறுவதற்கில்லை. இதற்குப் பல சான்றுகள் காட்டலாம்; ஆயினும் ஒன்றை மட்டும் இங்குக் குறிப்பிடுதல் பொருந்தும். தொடக்கத்தில் நாவலை வசனகாவியம் என்றும் அழைத்தனர். வேதநாயகம்பிள்ளை படைத்த பாத்திரங்களிலொன்றான ஞானாம்பாள் ஒரு சந்தர்ப்பத்திற் பின்வருமாறு கூறுகிறாள். "இங்கிலீஷ்,

பிரான்சு முதலிய பாஷைகளைப் போலத் தமிழில் வசனகாவியங்கள் இல்லாமலிருப்பது பெருங்குறையென்பதை நாம் ஒப்புக்கொள்கிறோம். நம்முடைய சுய பாஷைகளில் வசனகாவியங்கள் இல்லாமலிருக்கிறவரையில் இந்தத் தேசம் சரியான சீர்திருத்தம் அடையாதென்பது நிச்சயம்."

வசனகாவியம் என்ற சொற்றொடர் வசனத்தினாலாய காவியம் எனப் பொருள்பட நிற்றல் நோக்கத்தக்கது. இது புதிய படைப்பான நாவலைக் காவியத்தின் வாரிசாகக் கொண்ட மனப்பான்மையைக் காட்டுகிறது. முற்காலத்திலே சமுதாயத்திற் காவியம் வகித்த ஸ்தானத்தைத் தற்காலத்தில் நாவல் அடைந்துள்ளது என்று ஒருவாறு கூறலாமாயினும், காவியத்தையும் நாவலையும் வேறுபடுத்துவது உரைநடை ஒன்று மட்டுமே என்பது எவ்வாற்றானும் ஏற்புடைத்தன்று...

புதின வடிவமும், அதனைக் குறிக்கும் சொல்வடிவத்தின் கருத்துவடிவமும் ஆங்கிலத்திலிருந்தே பெறப்பட்டது என்பதைக் கைலாசபதி சுட்டுகின்றார். இச்சொல் வடிவத்தின் தெளிவுக்குறைவு பற்றியும் சுட்டுகின்றார். வேதநாயகர் இவ்வாட்சியைப் புதின இலக்கியத்தைக் குறிக்கப் பயன்படுத்தப் பாரதி சரியான பொருளில் இதனைப் பயன்படுத்தியதாகவே தோன்றுகிறது. எனினும் இச்சொல் வடிவம் பாரதியை ஈர்த்துள்ளது; அதற்குக் காரணமாகப் பிரதாப முதலியார் சரித்திரம் அமைந்துள்ளது என்பது குறிப்பிடத்தக்கது.

கைலாசபதி பிறிதொரு நூலில் பாரதியாரின் முன்னோடிகளைப் பற்றிப் பேசுமிடத்தில் பாரதியின் தமிழ்குறித்த எண்ணங்களுக்கு மனோன்மணீயம் சுந்தரனார் முன்னோடியாக, செல்வாக்குச் செலுத்தியவராக இருத்தல்கூடும்

'சுந்தரம் பிள்ளையின் நாடகம் பற்றிய மதிப்பீடு எவ்வாறிருந்த போதும் அதிற் காணப்படும் சில கருத்துக்கள் பாரதியைக் கவர்ந்திருக்கும் என்று கருதத் தோன்றுகிறது உதாரணமாகப் பிள்ளையின் நாடக நூற்பாயிரத்திற் காணப்படும் தமிழ்த் தெய்வ வணக்கம் தமிழிலக்கியத்திலேயே புதியதொரு கவிப்பொருளைத் தோற்றுவித்தது

வசனகாவியமும், வசனகவிதையும், உண்மையில் முரண்பாடான பிரயோகங்கள். சம்பந்தப்பட்ட இலக்கிய வகைகள் குறித்த தயக்க மயக்கங்களைத் தெளிவுபடுத்துவனவே அவை என்றால், தவறிருக்காது. இவ்விரண்டிலும் வசனகாவியம் என்பது முக்கியமானது; உண்மையான ஓர் இலக்கிய மாற்றத்தை எடுத்துக்காட்ட வல்லதாயுள்ளது.

வசனகாவியம் என்ற சொற்றொடர் Prose epic என்னும் தொடர் மொழியின் தமிழாக்கம் என்பதில் ஐயமில்லை. நாவல் வடிவம் ஆங்கிலத்திலிருந்து பெறப்பட்டது போலே, அது பற்றிய கருத்து வடிவங்களும் அம்மொழியிலிருந்து வந்து புகுந்தன. பதினெட்டாம் நூற்றாண்டிலே ஆங்கில நாவலுலகிற் சிறந்து விளங்கியவருள் ஒருவரான ஹென்றி ஃபீல்டிங் (17.07.1754) என்பாரை "ஆங்கில வசனகாவியத்தின் தந்தை" என்றழைப்பர். (க.கைலாசபதி, தமிழ் நாவல் இலக்கியம், பக். 2-3 )

என்பதையும், இருவரையும் ஒப்புநோக்கிக் கற்றல் வேண்டும் என்றும் சுட்டிச்செல்வார். அவ்வாறு சொல்லிச் செல்லும் பகுதிகள் வருமாறு:

'சுந்தரம் பிள்ளையின் நாடகம் பற்றிய மதிப்பீடு எவ்வாறிருந்த போதும் அதிற் காணப்படும் சில கருத்துக்கள் பாரதியைக் கவர்ந்திருக்கும் என்று கருதத் தோன்றுகிறது. உதாரணமாகப் பிள்ளையின் நாடக நூற்பாயிரத்திற் காணப்படும் தமிழ்த் தெய்வ வணக்கம் தமிழிலக்கியத்திலேயே புதியதொரு கவிப்பொருளைத் தோற்றுவித்தது என்பதில் ஐயமில்லை. பாரதியிடத்தும் பின்வந்த பாரதிதாசன் போன்றோரிடத்தும் வீறுமிக்க தமிழுணர்ச்சி காணப்படுகின்றதென்றால் மேற்கூறிய பாடலே வழிகாட்டியாயமைந்த தெனலாம்.' (க.கைலாசபதி, ஒப்பியல் இலக்கியம், ப. 267)

'பிள்ளையின் தமிழ்த் தெய்வ வணக்கமும் பாரதியின் தமிழ்த்தாய் என்ற பாடலும் ஒப்புநோக்கிக் கற்க வேண்டியன.' (க. கைலாசபதி, ஒப்பியல் இலக்கியம், ப. 269)

அவர் இவ்வாறு கூறினும் இது குறித்து மேலும் சிந்திக்கவேண்டியுள்ளது. மகாகவி பாரதி சுந்தரம்பிள்ளை பற்றி எழுதியிருக்கின்றார். ஆனால் அவருடைய மனோன்மணீயப் படைப்பைப்பற்றி ஏதும் குறிப்பிடவில்லை. பன்மொழி அறிந்தவர் என்றும் புலவர் சிகரம் என்றும் ஆராய்ச்சி வன்மை படைத்தவர் என்றும் சுந்தரனாரைப் பாரதி போற்றுகின்றார் (கால வரிசைப்படுத்தப்பட்ட பாரதி படைப்புகள் தொகுதி 7, ப. 282). இவ்வாறன்றிப் பிரதாப முதலியார் சரித்திரத்தில் இடம்பெற்றுள்ள தமிழ் குறித்த வேதநாயகம் பிள்ளையின் கூற்றுகள் பாரதியிடத்தில் செல்வாக்குச் செலுத்தியிருக்கக்கூடுமோ? என்று எண்ணத் தோன்றுகிறது.

மனோன்மணீயம் சுந்தரனாரின் தாக்கத்தைப் பாரதியிடம் காண்பதைப் போலவே வேதநாயகம் பிள்ளையின் தாக்கத்தையும் தமிழ்நாடு, தமிழ் தொடர்பான உணர்வில் பாரதியிடம் காண நல்ல வாய்ப்புள்ளது. வேதநாயகம் பிள்ளையின் புதினப் படைப்பைப் பாரதி ஆழ்ந்து படித்துள்ளார் என்பது தெள்ளத் தெளிவாகின்ற நிலையில் வேதநாயகம் பிள்ளையின் தாக்கம் விதந்து நோக்கத்தக்கதாக அமைகிறது. இவ்வாறு எண்ணத்தக்கதாக அமையும் பிரதாப முதலியார் சரித்திரத்தின் பகுதி வருமாறு:

'எண்ணிறந்த தேவாலயங்களும், பிரமாலயங்களும் அன்ன சத்திரங்களும், நீர்வளமும், நிலவளமும், நாகரிகமும் ஆசார நியமங்களும் நிறைந்த இந்தத் தமிழ்நாடு, மற்றைய நாடுகளிலும் விசேஷமென்றும், அப்படியே தமிழ் பாஷையும் சர்வோத்கிருஷ்டமான பாஷையென்றுஞ் சகலரும் அங்கீகரிக்கிறார்கள். அகஸ்தியர் நாவிலே பிறந்து, ஆரியத்தின் மடியிலே வளர்ந்து, ஆந்திரம் முதலிய பாஷைகளில் தோழமை பெற்று, சங்கப் புலவர்களுடைய நாவிலே சஞ்சரித்து, வித்வான்களுடைய வாக்கிலே விளையாடி, திராவிட தேசம் முழுதும் ஏக சக்ராதிபத்தியஞ் செலுத்தி வந்த தமிழ் அரசியை இப்போது இகழலாமா? நம்மைப் பெற்றதும் தமிழ், வளர்த்ததும் தமிழ், நம்மைத் தாலாட்டித் தூங்க வைத்ததும் தமிழ், நம்முடைய மழலைச் சொல்லால் நமது தாய் தந்தையரைச் சந்தோஷிப்பதுந் தமிழ். நாம் குழந்தைப் பருவத்திற் பேச ஆரம்பித்த போது முந்தி உச்சரித்ததும் தமிழ். நம்முடைய அன்னையும் தந்தையும் நமக்குப் பாலோடு புகட்டினதுந் தமிழ். தாய், தந்தை, குரு முதலானவர்கள் நமக்கு ஆதியில் உபதேசித்ததும் தமிழ். ஆதிகாலம் முதல் நம்முடைய முன்னோர்களெல்லோரும் பேசின பாஷையும் எழுதி வைத்த பாஷையும் தமிழ். இப்போது நம்முடைய மாதாபிதாக்களும் பந்து ஜனங்களும் இஷ்டமித்திரர்களும் இதரர்களும் பேசுகிற பாஷையும் தமிழ். நம்முடைய வீட்டுப் பாஷையும் தமிழ். நாட்டுப் பாஷையும் தமிழ்' (மாயூரம் வேதநாயகம் பிள்ளை, பிரதாப முதலியார் சரித்திரம், பக். 325-326).

மனோன்மணீயம் சுந்தரனாரின் தாக்கத்தைப் பாரதியிடம் காண்பதைப் போலவே வேதநாயகம் பிள்ளையின் தாக்கத்தையும் தமிழ்நாடு, தமிழ் தொடர்பான உணர்வில் பாரதியிடம் காண நல்ல வாய்ப்புள்ளது. வேதநாயகம் பிள்ளையின் புதினப் படைப்பைப் பாரதி ஆழ்ந்து படித்துள்ளார்

வேதநாயகரின் இத்தகு பகுதிகள் பாரதியை ஈர்த்திருக்கக் கூடும் என்பது தெளிவு. மேலும் வேதநாயகம் தொடரை ஒத்து பாரதியும் தமிழ் அரசி என்று ஓரிடத்தில் குறிப்பது மனங்கொள்ளத்தக்கது:

'இங்கிலீஷ் படித்த தமிழ் மக்கள் முக்கியமாக, வக்கீல்களும் பள்ளிக்கூடத்து வாத்தியார்களும் தமது வாக்கிலும் மனத்திலும் தமிழரசியைக் கொலுவிருக்கும்படி செய்து வணங்கவேண்டுமென்றும், அதுவே இப்போதுள்ள ஸ்திதியில் தமிழ் வளர்ப்புக்கு மூல ஸ்தான மாகுமென்றும் அறிக்கையிட்டுக் கொள்ளுகிறேன்' (பாரதியார் கட்டுரைகள், பக். 263-264).

இத் தொடர்பில் மேலும் சிந்திக்க வாய்ப்புள்ளது.

பிறிதொரு கருத்திலும் வேதநாயகம் பிள்ளையையும் பாரதியையும் ஒப்பிட்டுநோக்க

வாய்ப்புள்ளது. பிரதாப முதலியார் சரித்திரத்தில் நீதிமன்றத்தில் வழக்கறிஞர்கள் ஆங்கிலத்தையே பயன்படுத்துவதற்குக் கூறும் காரணம் தொடர்பாகக் கதையினூடே எடுத்துரைக்கையில், ஆங்கிலத்தில் உள்ளவற்றைத் தமிழில் மொழிபெயர்த்து வழங்கவேண்டும் எனவும், கலைச்சொல் வடிவிலானவற்றிற்குத் தமிழ் நூல்களை ஆராய்ந்தால் ஏற்ற சொற்கள் கிடைக்கும் எனவும், கிடைக்காத சிலவற்றிற்கு வடமொழியிலிருந்து ஆளலாம் எனவும், இரண்டிலும் கிடைக்காத நிலையில் ஆங்கில வடிவிலேயே அந்தச் சொற்களை ஆளலாம் எனவும் கதாபாத்திரத்தின் வாயிலாக வேதநாயகர் எடுத்துரைக்கிறார். மகாகவியும் அறிவியல் செய்திகளைத் தமிழில் மொழிபெயர்க்கையில் இயன்றவரை கலைச்சொற்களுக்கும் தமிழிலேயே சொற்களை ஆளவேண்டும் எனவும், சொல் கிடைக்காத நிலையில் வடமொழிச் சொற்களை ஆளலாம் எனவும், அதுவும் கிட்டாத நிலையில் ஆங்கிலச் சொற்களை ஆளலாம் எனவும் கருத்துரைக்கின்றார். இச்சிந்தனை இடம்பெற்றுள்ள இருவருடைய கதை, கட்டுரைப் பகுதிகள் வருமாறு:

**மாயூரம் வேதநாயகம் பிள்ளை:**

'நியாயசாஸ்திரங்களெல்லாம் இங்கிலீஷ் பாஷையிலிருப்பதாலும் இங்கிலீஷிலிருக்கிற நீதிவாக்கியங்களுக்குச் சரியான பிரதிபதங்கள் தமிழில் இல்லாமையாலும் தாங்கள் இங்கிலீஷ் பாஷையை உபயோகிப்பதாகச் சில வக்கீல்கள் சொல்லுகிறார்கள். இங்கிலீஷ் வார்த்தைகளுக்குச் சரியான பிரதிபதங்கள் தமிழில் இல்லையென்று வக்கீல்கள் சொல்வது அவர்களுடைய தெரியாமையேயல்லாமல் உண்மையல்ல. தமிழ் நூல்களைத் தக்கபடி அவர்கள் ஆராய்ந்தால், பிரதிபதங்கள் அகப்படுவது பிரயாசமா? அப்படித்தான் இரண்டொரு சங்கேத வார்த்தைகளுக்குத் தமிழிலாவது சமஸ்கிருதத்திலாவது பிரதிபதங்கள் அகப்படாத பக்ஷத்தில், அந்த வார்த்தைகளை மட்டும் இங்கிலீஷிலே பிரயோகித்தால் அவர்களை யார் கோபிக்கப் போகிறார்கள்?' *(பிரதாப முதலியார் சரித்திரம், ப. 322)*

பாரதி:

'பௌதிக சாஸ்த்ரங்கள் கற்றுக் கொடுப்பதில், மிகவும் தெளிவான எளிய தமிழ் நடையில் பிள்ளைக்கு மிகவும் ஸுலபமாக விளங்கும்படி சொல்லிக் கொடுக்க வேண்டும். இயன்ற இடத்திலெல்லாம் பதார்த்தங்களுக்குத் தமிழ்ப் பெயர்களையே உபயோகப்படுத்த வேண்டும். திருஷ்டாந்தமாக, "ஆக்ஸிஜன்", "ஹைட்ரஜன்" முதலிய பதார்த்தங்களுக்கு ஏற்கனவே தமிழ்நாட்டில் வழங்கப்பட்டிருக்கும் பிராணவாயு, ஜலவாயு என்ற நாமங்களையே வழங்க வேண்டும். தமிழ்ச்சொற்கள் அகப்படாவிட்டால் ஸம்ஸ்கிருத பதங்களை வழங்கலாம். பதார்த்தங்களுக்கு மட்டுமேயன்றிக் கிரியைகளுக்கும் அவஸ்தைகளுக்கும் (நிலைமைகளுக்கும்) தமிழ், சமஸ்கிருத மொழிகளையே வழங்குதல் பொருந்தும். இந்த இரண்டு பாஷைகளிலும் பெயர்கள் அகப்படாத இடத்தில் இங்கிலீஷ் பதங்களையே உபயோகப்படுத்தலாம். ஆனால், குணங்கள், செயல்கள், நிலைமைகள் இவற்றுக்கு இங்கிலீஷ் பதங்களை ஒருபோதும் வழங்கக் கூடாது. பதார்த்தங்களின் பெயர்களை மாத்திரமே இங்கிலீஷில் சொல்லலாம், வேறு வகையால் உணர்த்த இயலாவிடின்.' *(பாரதி நூல்கள் கட்டுரைகள், பக். 466-467)*

இவ்விரு பகுதிகளும் இந்நோக்கில் ஒப்பிடத்தக்கனவாக உள்ளன.

வேதநாயகரின் தாக்கம் என்றன்றி வேதநாயகரையும் பாரதியையும் ஒரு சேர ஈர்த்த உலகளாவிய நிலையிலான ஒரு வாழ்க்கை நிகழ்வு இருந்துள்ளதை அவர்களின் எழுத்துகளாலே உணரமுடிகின்றது. சாக்ரடீஸின் மனைவியின் இயல்பு குறித்து வழங்கும் வாழ்க்கை நிகழ்வு இருவரையுமே ஈர்த்துள்ளமையைக் காணமுடிகின்றது. இருவர் தம் எழுத்திலுமுள்ள அவ்வாழ்க்கை நிகழ்வுப் பகுதி வருமாறு:

*மாயூரம் வேதநாயகம் பிள்ளை:*

'சோக்கிராட்டிஸ் (Socrates) என்னும் ஞான சாஸ்திரிக்கு வாய்த்த பெண்சாதி எவ்வளவு பொல்லாதவளென்று சகலருக்கும் தெரிந்த காரியமே. அவள் செய்த கொடுமைகளையெல்லாம் அவர் எவ்வளவோ பொறுமையுடன் சகித்தார். ஒருநாள் அவள் சொன்ன தூஷணங்களைச் சகிக்கமாட்டாமல் அவர் வெளியே போய் வாசற்படிக்கு முன்பாக உட்கார்ந்தார். அவள்

பாடல்களையும் எழுதியிருந்தார்' (மா. கிருஷ்ணன், அ. மாதவையா ஒரு விவரப்பதிவு, காலச்சுவடு கட்டுரை, ப.60-61)

மாதவையாவிற்குப் பரிசு கிடைத்துப் பாரதிக்குக் கிடைக்காதது தொடர்பாகச் சிலர் வேறுபட்ட கருத்துகளைக் கூறினும், பாரதி இத்தொடர்பில் மாதவையாவைக் குறைகூறிக் கருத்தெதுவும் தெரிவித்ததாகப் பதிவுகளில்லை.

அதே வேளையில் மாதவையாவின் சீர்திருத்த எண்ணங்களை, செயற்பாடுகளைப் புலப்படுத்துவது போல ஒரு குறிப்பு பாரதியின் எழுத்தில் காணப்படுகின்றது. ஒரு கிழவரின் திருமணம் தொடர்பாகச் 'சுதேசமித்திரன்' இதழில் மாதவையா எழுதிய கடிதத்தை ஒட்டிப் பாரதியார், மாதவையாவின் பெயரைக் குறிப்பிட்டு, ஊரைக் குறிப்பிட்டுச் செய்தி பற்றிய தனது எண்ணத்தைப் பதிவுசெய்துள்ளார். அப்பதிவு:

'செய்யூரிலிருந்து ஸ்ரீ மாதவய்யா ஒரு கிழவருடைய விவாகத்தின் சம்பந்தமாக எழுதியிருந்த கடிதம் சில தினங்களின் முன்னே "சுதேச மித்திரனில் பிரசுரஞ் செய்யப்பட்டிருந்தது." கிழவருக்கு வயது 70; அவருடைய தாயார் இன்னும் உயிரோடிருக்கிறாள். அந்தப் பாட்டிக்கு வயது 99. இந்தத் தாயாருக்கும் தமக்கும் உபசாரங்கள் செய்யும் பொருட்டுக் கிழவர் ஒரு பதினாறு வயதுக் குமரியை மணஞ்செய்துகொள்ளப் போகிறாராம். இதே கிழவரிடம் இதைத் தவிர இன்னும் 21 குமரிகளின் ஜாதகம் வந்திருப்பதாகத் தெரிகிறது.

கடைசியாக ஒருவாறு தீர்மானஞ் செய்திருக்கிற பெண்ணினுடைய தகப்பனார் பணத்தையும், விதியையும், ஜோதிடத்தையும் நம்பி வேலை செய்கிறார். தெய்வத்தை நம்புவதாகத் தெரியவில்லை.

ஒட்டகத்துக்கு ஓரிடத்திலா கோணல்? தமிழ் நாட்டிற்கு ஒரு வழியிலா துன்பம்?'

(காலவரிசைப்படுத்தப்பட்ட பாரதி படைப்புகள், தொகுதி 8, பக். 259-260, சுதேச மித்திரன்: 11.12. 1915, ப. 8)

மேலும் பாரதிக்கும் மாதவையாவிற்கும் நல்ல பழக்கம் இருந்திருக்க வேண்டும் என்பதை உணர்த்துவது போல மாதவையாவின் மகள் தங்கள் வீட்டிற்குப் பாரதி வந்திருப்பதைக் குறிப்பிட்டுள்ளார்:

மாதவையாவின் மகள் முத்துலட்சுமி இந்து நாளிதழுக்காக (1.6.2001) வி. ஆர். தேவிகா கண்ட நேர்காணலில் தங்கள் வீட்டிற்கு வந்தவர்களில் சுப்ரமணிய பாரதியும் ஒருவர் எனப் பதிவு செய்திருக்கின்றார் தியடோர் பாஸ்கரன், (மொழிபெயர்ப்பாளர் குறிப்பு) (மா. கிருஷ்ணன், அ. மாதவையா ஒரு விவரப்பதிவு, காலச்சுவடு கட்டுரை, ப.61).

மாதவையாவின் வீட்டு நூலகத்தில் இடம் பெற்றிருந்த உலக இலக்கியங்களையும் இந்திய இலக்கியங்களையும் தமிழ் இலக்கியங்களையும்


காலஞ்சென்ற ஸ்ரீமான் அ. மாதவய்யா.

குறித்த விவரங்களை விரிவாகத் தருகையில் அவரது மகன் பாரதியார் நூல்கள் மாதவையாவின் வீட்டு நூலகத்தில் இருந்ததைக் குறித்துள்ளார்.

'பிரதாப முதலியார் சரித்திரம் போன்ற அண்மைக்கால உரைநடை நூல்களும் பாரதியாரின் கவிதை நூல்களும் ஆளுயர அலமாரியில் அடுக்கிவைக்கப்பட்டிருந்தன.'

(மா. கிருஷ்ணன், அ. மாதவையா ஒரு விவரப்பதிவு, காலச்சுவடு இதழ் 134, ப. 58)

அவரும் பாரதியின் மீது ஈடுபாடு கொண்டிருந்ததை இக்குறிப்பு உறுதி செய்கிறது.

'பஞ்சாமிர்தம்' இதழ்வழிப் பாரதி குறித்த எழுத்து முயற்சிகளுக்கு அவர் அக்கறை காட்டியமை முதலியனவும் இவற்றோடு இணைந்து எண்ணத்தக்கன.

அ. மாதவையாவின் புதினப் போக்கைப் பின்பற்றுபவர்கள் என எழுத்தாளர்களைக் க.நா. சுப்பிரமணியம் பட்டியலிடும் போது அதில் முதலில் இடம்பெறுபவர் மகாகவி பாரதியார்தான் (முடிவுறாத சந்திரிகையின் கதைக்காக) என்பது (முதல் ஐந்து தமிழ் நாவல்கள், ப. 126) மாதவையா பாரதி பற்றி இணைத்து எண்ணுகையில் குறிப்பிடத்தக்க மற்றொரு செய்தியாகும்.

•

தமிழின் புனைகதை இலக்கியத்துறையின் மூன்று முன்னோடிப் படைப்பாளிகளைப் பற்றிய மகாகவி பாரதியின் பதிவுகள் புனைகதை ஆராய்ச்சியாளர்களும், வரலாற்றாளர்களும், பாரதியியலாரும் கவனத்திற் கொள்ளவேண்டிய பதிவுகளாகும். முக்கியமான இந்த மூன்று படைப்பாளிகளின் மேல் பாரதியாருக்கு இருந்த மதிப்பும் ஈடுபாடும் அவர்தம் படைப்புகளின் மேல் இருந்த ஈடுபாடும் பயிற்சியும் சிறப்பாகச் சுட்டத்தக்கன. இவற்றோடு பாரதியின் புனைகதை முயற்சிகளுக்கான வேர்களையும் இந்தப் படைப்புகளோடு ஒப்பிட்டு நோக்கி எண்ண வாய்ப்பிருக்கிறது. இந்தக் கதை மரபில் அவர் பெற்றவையும் தந்தவையும் அவருடைய தனித்தன்மையும் குறித்து எண்ணலாம். மேலும் பாரதியின் பரந்துவிரிந்த இலக்கியப்பயிற்சியைப் புரிந்துகொள்ளவும் இந்தப் பதிவுகள் முக்கியமானவை. புனைகதைகளின் மீதான பாரதியின் ஈடுபாடு, பயிற்சி குறித்துப் புரிந்துகொள்ளவும் இந்தப் பதிவுகள் முக்கியமானவை. 'தொன்மையன'வற்றில் மட்டுமன்றி 'இன்று தோன்றியன'வற்றிலும் பாரதியின் ஈடுபாடு, பயிற்சி விதந்து குறிக்கத்தக்கதாகவே அமைந்திருக்கின்றது என்பதை இந்த நோக்கிலும் பாரதியியலார் மனங்கொள்ளல் தகும்.

**துணைநூற்பட்டியல்**


1. கைலாசபதி, க., ஒப்பியல் இலக்கியம், பட்டாளிகள் வெளியீடு, சென்னை, இரண்டாம் பதிப்பு, ஜனவரி 1978.
2. கைலாசபதி, க., தமிழ் நாவல் இலக்கியம், குமரன் பப்ளிஷர்ஸ், சென்னை, மறுபதிப்பு, செப்டம்பர் 2005.
3. சுப்பிரமணிய பாரதி, சி., பாரதி நூல்கள் (கட்டுரைகள்), பாரதி பிரசுராலயம், சென்னை, முதற்பதிப்பு, 1936
4. சுப்பிரமணியம், க.நா., முதல் ஐந்து தமிழ் நாவல்கள், உலகத்தமிழ் கல்வி இயக்ககம், சென்னை, முதற் பதிப்பு 1957, மறுபதிப்பு 2001.
5. மணி, பெசு., தமிழ்ப் புலவர்மரபும் பாரதி மரபும், பூங்கொடி பதிப்பகம், சென்னை, 1995.
6. மாதவையா, அ., பத்மாவதி சரித்திரம், நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் பிரைவெட் லிமிடெட்., சென்னை, நான்காம் பதிப்பு, அக்டோபர் 2009.
7. மாயூரம் வேதநாயகம் பிள்ளை, பிரதாப முதலியார் சரித்திரம், சந்தியா பதிப்பகம், சென்னை, முதற்பதிப்பு, டிசம்பர் 2004.
8. ராஜமய்யர், பி.ஆர்., கமலாம்பாள் சரித்திரம், சச்சிதானந்தம், கி.அ., சரவணன்.ப (ப.ஆ.), சந்தியா பதிப்பகம், முதற்பதிப்பு, 2011.
9. விசுவநாதன், சீனி., (ப.ஆ.), கால வரிசைப்படுத்தப்பட்ட பாரதி படைப்புகள், வெளியீடு சீனி.விசுவநாதன், சென்னை, தொகுதி 4: தொகுதி 8: முதற்பதிப்பு டிசம்பர் 2007, தொகுதி 9: முதற்பதிப்பு டிசம்பர் 2008, தொகுதி 10: முதற்பதிப்பு டிசம்பர் 2009.
10. காலச்சுவடு இதழ் 134, பிப்ரவரி 2011.




# அறியப்படாத அல்லது கவனப்படுத்தப்படாத புனைகதையாளர்கள்

க. பஞ்சாங்கம்

மனிதர்களின் வாழ்க்கையில் அடையாளப் படுத்துவது, வரலாற்றை வடிவமைப்பது முதலியனவெல்லாம் அதிகாரத்தின் செயல்பாடுகளாகவே விளங்கி வருகின்றன. ஆதிக்க சக்திகள் வடிவமைப்பதே மற்றவர்களின் அடையாளமாகவும் வரலாறாகவும் இருந்து கொண்டு இருக்கின்றன. பத்தொன்பதாம் நூற்றாண்டில் காலனித்துவம் உலகம் முழுவதும் நிலைநிறுத்தப்பட்ட பிறகு காலனித்துவவாதிகள் தங்களை மையப்படுத்தித் தங்களின் அதிகாரத்தை மற்றவைகளின்மேல் செலுத்துவதற்கு ஏற்றவாறு புனைந்தவைகள்தான் மூன்றாம் உலக நாடுகளின் வரலாறாக வகுப்பறைகளில் சொல்லிக் கொடுக்கப்பட்டுக் கொண்டிருக்கின்றன என்கின்ற உண்மைகள் எல்லாம் பின்நவீனத்துவம், பின்காலனித்துவம், புதிய வரலாற்றியம் ஆகிய கோட்பாட்டுச் சிந்தனைகளின் மூலமாக இன்றைக்கு வெளிப்படையாகத் தெரிய வந்திருக்கின்றன. வரலாறு என்பதும் அடையாளம் என்பதும் கட்டப்படும் புனைவுகள்தான் என்கிற இந்தப் புதிய வெளிச்சத்தில் தமிழில் எழுதப்பட்டுள்ள புனைகதை எழுத்துக்கள் குறித்த வரலாற்றினை ஆராயும் பொழுது அங்கேயும் ஆதிக்கவாதிகள் கட்டியுள்ள புனைவுகளைத்தான் நாம் பெரும்பாலும் பார்க்க முடிகிறது. உலக அளவில் காலனித்துவ ஆதிக்கம் என்றால் தமிழக அளவில் உயர்சாதியினரின் ஆதிக்கம். இந்த ஆதிக்கச் சாதியினர்தான் புனைகதை இலக்கியத்தின் வரலாற்றையும் தமிழர்களுக்கு வடிவமைத்துக் கொடுத்திருக்கிறார்கள்.

தமிழில் பின்காலனித்துவச் சமூகத்தில்தான் புனைகதை இலக்கியம் உருக்கொள்கிறது. 1835இல் புகுத்தப்பட்ட ஆங்கிலக் கல்வியின் மூலம் அறிமுகமான இலக்கிய வடிவங்கள்தான் இந்தப் புனைகதைகளான சிறுகதையும் நாவலும். இலக்கியம் என்றால் அது செய்யுள் வடிவில்தான் இருக்க முடியும் என்ற தமிழ் மரபு கேள்விக்குள்ளாகி உரைநடையிலும் இலக்கியம் உருவாக முடியும் என்ற நிலை ஏற்பட்டது பின்காலனித்துவத் தமிழ்ச் சமூகத்தில்தான். ஆங்கில அதிகாரிகளுக்குத் தமிழ் மொழி அறிவு கொடுப்பதற்காகத் தொடங்கப்பட்ட சென்னைக் கல்விச் சங்கம் 1939இல் வெளியிட்ட 'பத்திரத் திரட்டு' என்ற ஒரு நூலில்தான் புனைகதை என்ற சொல்லாட்சி முதன் முதலில் கையாளப்பட்டுள்ளது. (கோ.கேசவன், தமிழ்ச் சிறுகதைகளில் உருவம்) இவ்வாறு பின்காலனித்துவச் சமூகத்தில் தோன்றிய தமிழ்ப் புனைகதை இலக்கியத்தின் வரலாற்றை வடிவமைத்தவர்களுள் கி.வா.ஜகந்நாதன்(தமிழ் நாவலின் தோற்றமும் வளர்ச்சியும், 1966), சிட்டி கோ சிவபாதசுந்தரம் (தமிழ் நாவல் நூறாண்டு வரலாறும் வளர்ச்சியும், 1977 தமிழில் சிறுகதை வரலாறும் வளர்ச்சியும், 1989), மா.இராமலிங்கம் (விடுதலைக்கு முன் புதிய தமிழ்ச் சிறுகதைகள், 1977), இரா.தண்டாயுதம் (தற்காலத் தமிழ் இலக்கியம், 1973), ஏ.வி.சுப்பிரமணிய ஐயர் (தற்காலத் தமிழ் இலக்கியம், 1942), கா. சிவத்தம்பி (தமிழில் சிறுகதையின் தோற்றமும் வளர்ச்சியும், 1967), தா.வே. வீராசாமி (தமிழ் நாவல் வகைகள், 1979) முதலிய ஆய்வாளர்களுக்குப் பெரும் பங்குண்டு. இவர்கள் எல்லோருமே மையத்தில் இருந்து கொண்டு பெரும் கதையாடல் சார்ந்த, சமூகத்தின் வெகுஜன அளவில் பரவலாகப் பேசப்பட்ட புனைகதைகளைச் சார்ந்தே பெரும்பாலும் தங்களின் வரலாற்றை வடிவமைத்துள்ளார்கள். இதற்குச் சான்றாக ஒன்றைச் சொல்லலாம். பெரும்பாலும் இவர்களுடைய இந்தப் புனைகதை வரலாறுகளில் பாலியல் ரீதியாக விளிம்புநிலையில் வாழும் பெண்களின் எழுத்துக்களைக் குறித்த பதிவுகள் விரிவாக இல்லை. போனால் போகட்டும் என்று சில பெண் எழுத்தாளர்களின் பெயர்களை மட்டும் சொல்லிச் செல்கிற போக்குதான் இவர்களின் வரலாற்றில் வெளிப்படுகிறது. எனவே விளிம்புநிலைப் பார்வைகள் மேலெழுந்து வந்துள்ள இன்றைய காலகட்டத்தில்



புதுவை காஞ்சி மாமுனிவர் பட்ட மேற்படிப்பு மையத்தில் தமிழ்ப் பேராசிரியராகப் பணியாற்றி ஓய்வு பெற்றவர். கவிதை, நாவல், மொழிபெயர்ப்பு, இலக்கியக் கோட்பாடு மற்றும் திறனாய்வு எனப் பல தளங்களில் நூல்களை எழுதி வெளியிட்டுள்ளார்.

கவனிக்கப்படாது விடப்பட்ட புனைகதைகளைக் குறித்தும் புனைகதையாளர்களைக் குறித்தும் தேடித் தொகுக்க முயல்வது ஒருவகையில் வரலாற்றை நேர் செய்யும் முயற்சியாகக் கொள்ளலாம்.

தமிழில் தோன்றிய முதல் நாவல் எது? என்று கேட்டால் உடனே பிரதாப முதலியார் சரித்திரம் என்று பதில் கிடைக்கும். இரண்டாவது நாவல் எது என்றால் தெரியாது என்பதுதான் பெரும்பாலும் பதிலாக இருக்கும். இரண்டாவது நாவல் 1885இல் வெளிவந்த 'அசன்பே சரித்திரம்' என்ற நாவலாகும். இதை எழுதியவர் முகமது காசிம் மரைக்கார். இந்த நாவல் பின்காலனித்துவச் சமூகத்தில் உருவாகிய உலகம் தழுவிய ஓர் அணுகுமுறையைத் தனது கதைக்களனாகக் கொண்டு இயங்குகிறது என்பது மிகவும் குறிப்பிடத்தக்க ஒரு செய்தியாகும். எகிப்து நாட்டுத் தலைநகரான கெய்ரோவில் கதை தொடங்குகிறது. தொடர்ந்து இந்தியாவைச் சார்ந்த பம்பாய், சூரத், கல்கத்தா முதலிய நகரங்களையும் மேலை நாட்டிலுள்ள அலெக்ஸாந்திரியா, பெய்ரூத் முதலிய நகரங்களையும் கதைக்களனாகக் கொண்டு இயங்குகிறது. முஸ்லீம் மதத்தைச் சார்ந்த அசன் முஸ்லீம் மதத்திற்கு மாறிய ஆங்கிலக் கிறித்துவப் பெண்ணைத் திருமணம் முடிப்பது போல அந்தக் காலத்திலேயே படைத்து அளித்துள்ளார். தன் நிகழ்கால நிகழ்ச்சிகளான ரஷ்யாவிற்கும் துருக்கிக்கும் நடந்த போர் நிகழ்ச்சிகளையும் நாவலுக்குள் கொண்டு வருகிறார். நாவல் என்பது ஒரு ஆவணமாக வினைபுரிய வேண்டும் என்பதற்கேற்ப முஸ்லீம் மதப் பண்பாடுகளை நாவலுக்குள் பரவலாகப் பதிவு செய்துள்ளார்.

பின்காலனித்துவச் சொல்லாடலில் ஹோமி பாபா வழங்கிய கலப்பினம் என்ற கருத்தாக்கம் இன்று பெரிய அளவில் பேசப்படுகிறது. பின்காலனித்துவச் சமூகங்களில் தவிர்க்க முடியாதபடி நிலவுகின்ற கலப்பினக் கூறுகளைப் பலவீனமாகக் கருதத் தேவையில்லை. தூய தேசியம், தூய பண்பாடு, தூய இனம் என்றெல்லாம் காலனித்துவத்திற்குப் பிறகு பேசமுடியாது; இவ்வாறு சொல்வது தேசியத்திற்கு எதிரானது என்றும் கொள்ள முடியாது. அதாவது பின்காலனித்துவச் சமூகங்களில் ஏற்படும் மாற்றங்கள் ஒருவழிப்பட்டதல்ல என்ற உண்மையை ஹோமி பாபா இதன் மூலம் முன்மொழிகிறார். ஏனெனில் காலனித்துவத்திற்கு உள்ளானவர்கள் அதன் செல்வாக்கிற்கு உள்ளாவது போலவே காலனித்துவவாதிகளும் தங்களால் காலனித்துவப்படுத்தப்பட்டவர்களின் செல்வாக்கிற்கு உள்ளாவதும் தவிர்க்க முடியாதது. மேலும் காலனித்துவ நாடுகளில் காலனியவாதிகள் குடியேறுவது, தங்களால் காலனித்துவத்திற்கு உட்பட்ட மக்களைத் தங்களின் பல்வேறு காலனிய நாடுகளுக்கு அடிமைகளாக, கூலிகளாக, தோட்டத் தொழிலாளர்களாகக் கட்டாயப்படுத்திப்

தமிழில் தோன்றிய முதல் நாவல் எது? என்று கேட்டால் உடனே பிரதாப முதலியார் சரித்திரம் என்று பதில் கிடைக்கும். இரண்டாவது நாவல் எது என்றால் தெரியாது என்பதுதான் பெரும்பாலும் பதிலாக இருக்கும். இரண்டாவது நாவல் 1885இல் வெளிவந்த 'அசன்பே சரித்திரம்'; என்ற நாவலாகும். இதை எழுதியவர் முகமது காசிம் மரைக்கார். இந்த நாவல் பின்காலனித்துவச் சமூகத்தில் உருவாகிய உலகம் தழுவிய ஓர் அணுகுமுறையைத் தனது கதைக்களனாகக் கொண்டு இயங்குகிறது என்பது மிகவும் குறிப்பிடத்தக்க ஒரு செய்தியாகும்.

புலம்பெயரச் செய்வது, அவர்களின் பண்பாட்டு நடவடிக்கைகளில் குறுக்கிடுவது, தங்களின் பண்பாட்டைத் தரமானதாகவும் உயர்வானதாகவும் புனைவது முதலியவற்றின் மூலமாகக் கலப்பினம் உருவாவது பின்காலனித்துவச் சமூகங்களில் தவிர்க்க முடியாதது என்கிறார் ஹோமி பாபா. தொண்ணூறுகளுக்குப் பிறகு இந்தியா போன்ற காலனிய நாடுகளில் உலகமயமாதல், சந்தைப் பொருளாதாரம், ஊடகங்களின் ஆதிக்கம் முதலியவற்றால் உருவான புதிய காலனித்துவத்தினால் நிலையாகவே புலம்பெயர்ந்து வாழ்வதும், ஒரே காலத்தில் இரண்டு மூன்று நாடுகளின் குடிமகனாக வாழ்வதற்கான உரிமை கிடைப்பதும் இன்றைய காலகட்டத்தின் யதார்த்தங்களாக இருக்கின்றன. இத்தகைய சூழலில் ஹோமி பாபாவின் கலப்பினம் என்ற கோட்பாடு தவிர்க்க முடியாத மெய்மையாக முன்னுக்கு வருகிறது. இந்தக் கலப்பினச் சிந்தனையின் அடிப்படையில் தமிழின் இரண்டாவது நாவலாகக் கருதப்படும் அசன்பே சரித்திரம் அமைந்திருக்கிறது. ஆனால் காலனித்துவச் சமூகத்தில் ஏற்படும் மிக முக்கியமான விளைவை நாவலாக்கியிருக்கும் முகமது காசிம் மரைக்கார் குறித்துத் தமிழில் இதுவரை நாவல் வரலாற்றிலும் சரி, திறனாய்விலும் சரி பெரிதும் பேசப்படவில்லை.

சரித்திரக் கதைதான் என்பது எத்தனை பேருக்குத் தெரியும். காதலா? கடமையா? என்ற புனைகதையின் கதை இதுதான். மாயாபுரியின் அரசர் சுசீலர் ஆவார். அவருடைய மகள் விஜய சுந்தரி ஆவாள். சுசீலருக்குப் பிறகு அவரது சகோதரி புதல்வன் பிரதாபனே பட்டத்திற்குரியவனாகக் கருதப்படுகிறான். பிரதாபனும் மதுரையைச் சேர்ந்த சுசேந்திரனும் ஒரே மாதிரியான தோற்றங் கொண்டவர்கள். இராகுலப் பிரபு பிரதாபனைக் கொன்று, தான் அரச பதவியில் அமர்வதற்கு அவன் குடிக்கும் பானத்தில் மயக்க மருந்து கொடுத்து விடுகிறான். சேனாதிபதியின் யோசனையால் சுசேந்திரன் அரசனாகப் பதவியேற்றுச் சிறப்பாக ஆட்சி புரிகிறான். விஜயசுந்தரிக்குச் சுசேந்திரனின் மீது அன்புண்டாக, அவனோ, காதலா? கடமையா? என்கிற கேள்வியில் கடமைக்கு முக்கியத்துவம் கொடுத்து நாட்டைப் பிரதாபன் வசம் ஒப்படைத்துவிட்டு வெளியேறுகிறான்.

இந்தப் புனைகதையில் பெண்களுக்கான பள்ளிக்கூடங்கள், கல்லூரிகள், அனாதை ஆசிரமங்கள், மருத்துவமனைகள் சுசேந்திரன் ஆட்சியில் திறக்கப்பட்டதாக ஆசிரியர் படைத்துக் காட்டுகிறார். மேலும் சுசேந்திரன் "எந்தச் சமூகம் பெண் மக்களை அடிமைப்படுத்தி வைத்திருக்கின்றதோ

பொதுவாகவே வரலாற்றை வடிவமைக்கிறவர்கள் பெண்களின் பங்கெடுப்பைப் பெரிதும் கவனத்தில் கொள்வதில்லை. இந்திய விடுதலைப் போராட்டம் முழுக்க முழுக்க ஆண்களால் மட்டும் நிகழ்த்தப்பட்டது போலவே நம்முடைய விடுதலைப் போராட்ட வரலாறு எழுதப்பட்டிருக்கிறது. அதுவும் சிறுபான்மை இனத்தைச் சார்ந்த இஸ்லாமியப் பெண் என்றால் சொல்லவே வேண்டாம்.

பொதுவாகவே வரலாற்றை வடிவமைக்கிறவர்கள் பெண்களின் பங்கெடுப்பைப் பெரிதும் கவனத்தில் கொள்வதில்லை. இந்திய விடுதலைப் போராட்டம் முழுக்க முழுக்க ஆண்களால் மட்டும் நிகழ்த்தப்பட்டது போலவே நம்முடைய விடுதலைப் போராட்ட வரலாறு எழுதப்பட்டிருக்கிறது. அதுவும் சிறுபான்மை இனத்தைச் சார்ந்த இஸ்லாமியப் பெண் என்றால் சொல்லவே வேண்டாம். தமிழ்ப் புனைகதை வரலாற்றிலும் முதல் இஸ்லாமியப் பெண் புனைகதை எழுத்தாளராக அறியப்படும் சித்தி ஜூனைதா பேகம் குறித்தும் பெரிய அளவில் பேசப்படுவதில்லை. எம்ஜிஆருக்குப் பெரும் புகழையும் அதிகாரத்தையும் தேடித் தந்த 'நாடோடி மன்னன்' என்ற திரைப்படம் இவர் எழுதிய 'காதலா? கடமையா?' என்ற

அந்தச் சமூகம் ஒரு காலத்தும் தலைநிமிர்ந்து நிற்க முடியாது' என்ற கொள்கையுடையவன் என்றும் உருவாக்கிக் காட்டுகிறார். 'இந்த அபிநவ கதையை நான் பார்த்த போது எனக்கு மிக்க மகிழ்ச்சியும் வியப்பும் உண்டாயின. மகம்மதியர்களுக்குள்ளும் தமிழ் நூல்களைப் பயின்றுள்ள பெண் மக்கள் இருக்கிறார்கள் என்பதை இப்புத்தகம் நன்கு விளக்குகிறது' எனச் சொல்லி மகிழ்கிறார் உவே சாமிநாதையர்.

சித்தி ஜூனைதா பேகம் எழுதிய மற்றொரு குறு நாவல் 'செண்பகவல்லி தேவி அல்லது தென்நாடு போந்த அப்பாஸிய குலத்தோன்றல்' என்பதாகும். இச்சரித்திரக் கதையை எழுத நேர்ந்ததற்கான காரணத்தை முன்னுரையில் இவ்வாறு பதிவு செய்கிறார்.

"இஃது ஒரு சரித்திரக் கதை. தெளிவாக ஆராய்ந்து தொகுக்கப்பட்ட சரித்திரமன்று. கர்ண பரம்பரையாக வழங்கி வந்ததும், ஆங்காங்கே கிடைத்த சில சரித்திரத் துணுக்குகளும் புலவர் பெருமான் வண்ணக்களஞ்சியம் இயற்றிய 'தினெறி விளக்கமும்' யாம் நேரிலே செய்த ஆராய்ச்சிகளும் யாம் இச்சிறு நூலை எழுதுதற்குத் துணை புரிபவையாய் அமைந்தன. இத்தகைய மறைந்துபட்ட சரித்திர வரலாறுகளையும், தமிழுலகிற்குப் போதிய அளவு அறிமுகப்படுத்தப்படாத சூபியாக்களின் சரிதைகளையும், சமூகச் சீர்திருத்த நவீனங்கள், கட்டுரைகள், சிறுகதைகள் முதலியவைகளையும் புதுமுறையில் வெளியிட முயற்சிக்கின்றோம். இத்தகைய பணி ஆண் மக்களைவிடப் பெண் மக்கட்கே ஏற்புடைத்து, ஆண் மக்கள் சாதி சமயத்தான் தூண்டப்பட்டு, சரித்திர உண்மைகளை மறைத்தும் திரித்தும் எழுதலாம். பெண் மக்கள் இயல்பாகவே ஆழந்து சிந்திக்கும் மனத்தன்மையும், இரக்கமும் உடையவர்கள். எனவே, புத்துலகம் புதுமாற்றம் விழையும் முஸ்லீம் உலகம் மறுமலர்ச்சி விரும்பும் தமிழர்தம் நாடு பெண் எழுத்தாளர்களை வரவேற்குமாக" என்று குறிப்பிடுகிறார். 1917ஆம் ஆண்டு பிறந்து ஏறக்குறைய 81 ஆண்டுகள் வாழ்ந்து மறைந்த இந்த எழுத்தாளர் பேகத்தின், பெண்களைக் குறித்த மதிப்பீடு பெரிதும் கவனத்திற்குரியதாக இருக்கிறது. இந்தப் புனைகதையிலும் மற்றொரு நுட்பமான பதிவைப் பார்க்க முடிகிறது. வஜீர் அப்பாஸ் பே என்கிற முகம்மதியருக்கும் சண்பகவல்லி தேவி என்கிற இந்துப் பெண்ணுக்கும் காதல் உண்டாகி சண்முகவல்லி தேவி சலீமாவாக மாறி திருமணம் முடிகிறது. இருவருக்கும் குழந்தை பிறக்கிறது. அக்குழந்தைக்கு முகம்மதூர் ரஷீத் பே எனப் பெயரிடுகின்றனர். ஆனால் சண்பகவல்லி தேவி என்ற சலீமாவோ அக்குழந்தையை அழகேந்திரன் என்றே அழைக்கிறாள். புற உலகிற்காக அவள் மதம் மாறினாலும் அக உலகத்திற்குள் தான் பல்லாண்டு பழகிய இந்து மத உணர்வோடுதான் இருக்கிறாள் என்பதை நுட்பமாக உணர்த்துகிறார் பேகம். பன்னிரண்டு வயதில் திருமணம் முடித்து பதினேழு வயதிற்குள் விதவையான ஜுனைதா பேகத்தின் குடும்பம் வண்ணக் களஞ்சியப் புலவரின் பரம்பரையில் வந்தது. ஆனாலும் "எந்தப் பெரியவர்களும் என்னை எழுதத் தூண்டியது இல்லை. துணை செய்ததும் இல்லை. எப்போதும் எனது சொந்த முயற்சியும் ஆவலுந்தான்" என்கிறார் மூன்றாம் வகுப்பு வரைதான் பயின்ற ஜுனைதா பேகம். "எல்லோரும் ஓர் குலம், எல்லோரும் ஓர் இனம் என்ற மனப்பான்மையே என் உள்ளத்தின் ஆணிவேர். எனவே சாதி, சமய, இன வேற்றுமையின்றி என் புத்தகங்களை எல்லோரும் படித்து இன்புற வேண்டும்" என்கிறார். நூருல் இஸ்லாம், பிறை, ஷாஜகான், செம்பிறை, நவயுவன் முதலிய இஸ்லாமியப் பத்திரிக்கைகளோடு தொடர்பு வைத்துக் கொண்டு கட்டுரைகளும் எழுதி வந்துள்ளார். இஸ்லாமிய சமூகங்களில் பெண்களுக்கு உரிமை வழங்கப்பட்டிருப்பதைப் பலவாறு எடுத்துக் காட்டுகின்றார். இவ்வாறு எழுதுகிறார்:



"மிஸ். எலிசபெத், மிஸ்டர் கிளைவ் என்பவரை மணந்து கொண்டால், மிஸஸ் கிளைவாக மாறிவிடுகிறாள். ஆனால் இஸ்லாமியப் பெண் தன் கணவரின் பெயரோடு தன்னை இணைத்துக் கொள்ளத் தேவையில்லை. ஜபீரா, ஷேக் பரீதை மணந்து கொண்டால் ஜபீரா, ஜபீராதான். அவள் மிஸஸ் ஷேக் பரீதாவாக மாறி விடுவதில்லை. அவள் பெயருக்கு அவளே உரிமை பெற்றவள். அவள் செல்வத்திற்கும் அவளே அதிகாரி. அவள் திருமணம் செய்து கொண்டதால், அவள் உரிமைகள் அனைத்தையும் இழந்துவிடவில்லை. அவளுக்குத் தனியான ஆத்மா உண்டு. அவளுக்குத் தெய்வம் அவள் கணவன் அல்ல."

இவ்வாறு பெண்ணின் சுய உணர்வை அன்றைக்கே நுட்பமாகப் பதிவு செய்துள்ளார் பேகம். பெண்ணிய மொழியாடல்கள் தீவிரப்பட்டிருக்கும் இன்றைய சூழலில் இவரது எழுத்துக்களின் மேல் இலக்கிய உலகத்தின் கவனம் திரும்ப வேண்டியது அவசியமாகும்.

அன்றைய பரந்து விரிந்த சென்னை மாகாணத்தில் நாடக மேடைகளிலும் திரைப்படங்களிலும் மாபெரும் நடிகையாகப் புகழ்பெற்ற டிபி. இராஜலட்சுமி ஒரு புனைகதை எழுத்தாளர் என்பது தமிழ்ச் சூழலில் எத்தனை பேருக்குத் தெரியும்? ஒரு துறையில் புகழ் பெறும் போது மற்றொரு துறை அறியப்படாமல் போய்விடுவது வரலாற்றின் ஒரு பண்பாகவும் இருக்கிறது. பாரதியாருக்கே இந்தக் கதைதான். கவிஞராக அறியப்பட்ட பாரதியார் சந்திரிகையின் கதை, ஆறில் ஒரு பங்கு, சின்னசங்கரன் கதை,

துளசிபாய், காந்தாமணி முதலிய மிகச்சிறந்த புனைகதை எழுத்தாளர் என்பது இன்னும் பல பேருக்குப் போய்ச் சேரவில்லை என்பதுதான் யதார்த்த நிலை. டி.பி. இராஜலட்சுமிக்கும் இதுதான் நிகழ்ந்துள்ளது. 'கமலவல்லி அல்லது டாக்டர் சந்திரசேகரன்', 'விமலா', 'மல்லிகா', 'வாஸந்திகா', 'மறைந்த முகம்' முதலிய பல்வேறு புதினங்களை இவர் எழுதியுள்ள போதிலும் அவர் நாவலாசிரியர் என்று இன்றுவரை அறியப்படவில்லை. கமலவல்லி அல்லது டாக்டர் சந்திரசேகரன் என்பது இவரது முதல் புதினமாகும். அன்றைய வழக்கப்படி முகப்பு அட்டையிலேயே "இது அநுபவ ஞானக்கலா விலாசங்கள் நிறைந்திலங்கும் அமிர்தச் சுவையுள்ள அழகிய தமிழ் நாவல்" என்ற விளம்பர வாசகமும் காணப்படுகிறது. இந்நாவல் தமிழர்களின் களவு மணம் மறைந்து விலை மணம் பெருகிவிட்ட சூழலை விமர்சிக்கின்றது. இந்நாவல் முழுவதும் பெண்கள் சார்பான கருத்தோட்டங்கள் மிகவும் வேகமாகவும், உணர்ச்சிப்பூர்வமாகவும் முன்வைக்கப்படுகின்றன.

அன்றைய பரந்து விரிந்த சென்னை மாகாணத்தில் நாடக மேடைகளிலும் திரைப்படங்களிலும் மாபெரும் நடிகையாகப் புகழ்பெற்ற டிபி. இராஜலட்சுமி ஒரு புனைகதை எழுத்தாளர் என்பது தமிழ்ச் சூழலில் எத்தனை பேருக்குத் தெரியும்? ஒரு துறையில் புகழ் பெறும்போது மற்றொரு துறை அறியப்படாமல் போய்விடுவது வரலாற்றின் ஒரு பண்பாகவும் இருக்கிறது.

உலகத்தில் அதிலும் பெண்ணாய்ப் பிறந்தவர்கள் எதிலும் கொஞ்சம் புத்திசாலித்தனமாய் நடந்து கொண்டாலன்றி, மானமாய் வாழ முடியாது. அதிலும் பெண்களைப் பிள்ளை பெறும் யந்திரங்களாகவும், தங்களுடைய சௌகர்யத்திற்காகவே உண்டாக்கப் பட்டவர்களாகவும் கருதும் ஆண்கள் நிறைந்த இந்த நாட்டைப் பற்றியோ கொஞ்சமும் சொல்ல வேண்டியதில்லை.

இதேபோல் மற்றொரு இடத்தில் ஊரறிய ஒருவரை மணம் செய்துகொண்ட ஒரு பெண் வேறொருவருடன் வாழ்வதற்கு அந்தக் கணவனே வழிசெய்து கொடுப்பது முறையாகுமா என்ற வினாவிற்கு டாக்டர் சந்திரசேகரன் இவ்வாறு பதிலளிக்கிறான்:

"ஏன் முறையாகாது? விவாகமென்பதே ஆணும் பெண்ணும் தங்கள் வாழ்க்கையை முன்னிட்டுச் செய்து கொள்ளும் ஒரு ஒப்பந்தந்தானே, நீங்கள் கொஞ்சம் நன்றாய் ஆலோசித்துப் பாருங்கள். கல்யாணம் ஆணுக்கா? அல்லது பெண்ணுக்கா? இருபாலருக்குந்தானே. அப்படியிருக்க ஆண்கள் மட்டும் பல பெண்களை மணக்க அனுமதிக்கும் நாம், பெண்கள் தங்கள் விருப்பப்படி ஒருவரை விவாகம் செய்து கொள்வதை ஏன் அனுமதிக்கக் கூடாது? குருட்டுத்தமான இந்தக் கொடுமைகள் பெண்கள் சமூகத்திற்கே உலைவைப் பதாயிருக்கின்றன. பெண்கள் ஆண்களைவிட எவ்வகையிலேனும் தாழ்ந்தவர்களென்று கூற முடியுமா? நாம் நம்முடைய சௌகர்யத்திற்காகப் பெண்களை அடக்கியாண்டு கொடுமைப் படுத்துகிறோம். இது பெரும்பாபமான காரியமாகும், பெண்களை விதவையென்று சொல்லி மூலையில் உட்கார வைத்தது போல் ஆண்களையும் உட்கார வைத்தால் தான் ஆணுலகம் திருந்தும்."

மேலும் இராஜலட்சுமி விடுதலைப் போராட்டக் காலத்தில் தந்தை பெரியாரால் முன்னெடுக்கப்பட்ட சமூகச் சீர்திருத்தமா? இந்திய விடுதலையா? எதற்கு முதன்மை கொடுப்பது என்ற விவாதத்திலும் ஆர்வம் கொண்டவராகத் தனது நாவலுக்குள் அதையும் ஒரு மொழியாடலாகக் கொண்டு வருகிறார்:

"பெரியவர்களெனப்பட்டவர்கள் குழந்தைகளின் கல்யாண விஷயத்தில் பெரும்பாலும் அவர்களுடைய உறவு, வருமானம், அந்தஸ்து முதலிய சுயநலங்களையே பெரிதெனக் கருதுகிறார்கள். இத்தகைய சீர்கேடுகள் நாட்டைச் சூழ்ந்து கொண்டு பாழ்படுத்துவதாற்றான் ஒரு காலத்தில் உலகத்திற்கே நடுநாயகமாக விளங்கிய நம்நாடு இப்போது பிறநாட்டினரால் நகையாடப்படும் பரம கேவல நிலையிலிருந்து வருந்துகின்றது. இத்தகைய சீர்கேடுகளையெல்லாம் வைத்துக் கொண்டு சுதந்திரம், சுவராஜ்யம், சுயமரியாதையென்று வீண்கூச்சலிடுவதெல்லாம் பகற்கனவேயன்றி வேறல்ல'' என்று ஒரு பாத்திரத்தைப் பேச வைக்கிறார்.

இவ்வாறு விடுதலைக்கு முந்தைய காலகட்டத்தில் பல பெண் எழுத்தாளர்கள் மிகப்பெரிய கலகக்குரலைப் பெண் விடுதலை முன்னிட்டு தங்கள் எழுத்துக்களில் பதிவு செய்துள்ளனர். கிருபை சத்தியநாதன் அம்மாள் (1862-1894) (நாவலின் பெயர்கள்: கமலம், சகுணா), மூவலூர் இராமாமிர்தம் அம்மையார் (1883-1962) (தாசிகளின் மோசவலை அல்லது மதிபெற்ற மைனர்), ஞானதிரவியம் குமரேசன் அம்மாள் (சுகிர்தா, சுந்தரவல்லி), எம்.எஸ்.கமலா (மனித தெய்வம்), ஸரோஜா ராமமூர்த்தி (மனைவி, அன்னை, நெஞ்சு பொறுக்குதில்லையே, இரு கதைகள்), மீனாட்சி சுந்தராம்மாள் (ஜயசீலன், ஸ்ரீதரன்), வேங்கடலட்சுமி (தங்கம்மாள்), குகப்பிரியை (சந்திரிகா), குமுதினி (நந்துவின் பிறந்தநாள், திவான்மகள்), பாலம்மாள் (சாணக்யா சாகசம் அல்லது சந்திரகுப்த சரித்திரம்), உண்மைக் காதல், திலகவதி, பரோபகாரம், விருந்தில் விலங்கு, அவள் இஷ்டம், மன்னிப்பு, பணச்செருக்கு), ஜயலட்சுமி ஸ்ரீனிவாஸன் (புஷ்பஹாரம்), வி.சரஸ்வதி அம்மாள் (பிரேமாஹரன்), எஸ்.பி.சுப்புலட்சுமி அம்மாள் (ஜாதகலெட்சுமி), பண்டிதை விசாலாட்சி அம்மாள் (ஆநந்த மகிளா, கௌரீ, விராஜினி, லலிதாங்கி, ராஜப்ரபா, தாரா அல்லது மகர கண்டியின் மர்மம்), செய்யூர் சாரநாயகி அம்மாள் (ஞானக்கொழுந்து, சம்பத்குமார் அல்லது மாயாண்டித் தேவனின் மாயவலை, கமலா கண்ணன் காதற்கடிதங்கள், கோகில சுந்தரி அல்லது மன்மத விஜயம், சண்முகவடிவு அல்லது கட்டழகால் மயங்கிய காளை), வைமு.கோதைநாயகி அம்மாள் (ஜகன் மோகினி உட்பட 86 நாவல்கள், 21 குறுநாவல்கள், 6 சிறுகதைத் தொகுதிகள்) என்று அந்தப் பட்டியல் நீண்டு கொண்டு போகிறது. ஆனால் இந்த அளவிற்கு எழுத்துலகில் சாதனை படைத்துள்ள இவர்களைக் குறித்துத் தமிழ் இலக்கியத் திறனாய்வாளர்களும் வரலாற்றாசிரியர்களும் முறையாக வாசித்துத் தங்களது மதிப்பீட்டு எல்லைக்குள் கொண்டு வந்திருக்கிறார்களா என்றால் இல்லை என்பதுதான் பதிலாக இருக்கிறது. பெரும்பாலும் மேலோட்டமாகப் பார்த்துவிட்டு அல்லது ஏற்கனவே முன்னால் ஒருவரால் மதிப்பிட்டுச் சொல்லப்பட்ட கூற்றையே கிளிப்பிள்ளை போலச் சொல்லிச் செல்லும் பாங்கே வெளிப்படுகிறது.



இலக்கிய வரலாறு வடிவமைப்பதிலும் ஆணாதிக்க அரசியலே அறிந்தோ அறியாமலோ செயல்பட்டுள்ளது. உண்மையில் விடுதலைக்குப் பிந்தைய பெண் எழுத்தாளர்களைவிட விடுதலைக்கு முந்தைய காலத்தில் பெண் எழுத்தாளர்களின் எண்ணிக்கையும் முயற்சியும் வியக்கத்தக்க அளவில் இருக்கின்றன. அவைகள் எல்லாம் பெண்ணியக் கோட்பாடுகள் பெரிதும் பேசப்படும் இன்றைக்குக் கவனப்படுத்தப்பட வேண்டியவை என்பது காலத்தின் கட்டாயம் எனச் சொல்லத் தோன்றுகிறது.

தமிழ் இலக்கியத்தின் வரலாற்றை வடிவமைத்தவர்கள் பெண்களின் படைப்பைப் பெரிதும் கவனத்தில் எடுத்துக் கொள்ளாததைப் போலவே பெரும்பாலும் கல்வியாளர்கள் எழுதுகின்ற புனைகதைகளையும் கவனத்தில் எடுத்துக் கொள்ளாத போக்கே தமிழ்ச் சூழலில் நிலவுகிறது. மறைமலையடிகள், மு.வரதராசனார் போன்ற கல்வியாளர்களின் புனைகதைகள் பேசப்பட்டன என்று விதிவிலக்காகச் சிலரைச் சொல்லலாம். ஆனாலும் அவர்கள் பேசப்பட்டதற்குக் காரணம் அவர்களின் எழுத்துக்குப் பின்னணியாக இருந்த தமிழ் மறுமலர்ச்சி இயக்கமும் திராவிட இயக்கமும் ஆகும். இவ்வாறு இயக்கச் சார்பு இல்லாமல் கல்வித் துறையிலும் பல படைப்பாளிகள் புனைகதைகளை ஆர்வத்தோடு எழுதியுள்ளனர். ஆனால் சரியான அங்கீகாரம் கிடைக்காமல் ஒதுங்கிக் கொண்டுள்ளனர். சமீபகாலச் சான்றாகப் பேராசிரியர் ச. ராஜநாயகத்தைச் சொல்லலாம். 'சில முடிவுகளும் சில தொடக்கங்களும்', 'சாமிக்கண்ணு எனச் சில மனிதரின் கதைகள்' ஆகிய இரண்டு புனைகதைகளை எழுதியுள்ள பேராசிரியர் தொடர்ந்து புனைகதைத் துறையில் இயங்கவில்லை. பின்நவீனத்துவமும் தலித்தியமும் மேலெழுந்த தொண்ணூறுகளில் சோதனை முறையில் வித்தியாசமாக எழுதப்பட்டவை மேற்கண்ட இரண்டு நாவல்களும். வரிக்கு வரி வித்தியாசங்களை வெறித்தனமாகத் தேடி அலையும் பிரதிகளாக இவை கட்டமைக்கப்பட்டுள்ளன. முதல் நாவல் பெயரிடுதலின் அரசியலையும் அதன் அதிகாரத்தையும் கட்டுடைக்கிறது. "புரிந்து கொண்டது மாற்றப்பட வேண்டும். ஏன், புரிந்து கொள்ளும் விதம் பற்றிய புரிதலே

மாற்றப்பட வேண்டும்" எனப் பேசும் பிரதி, பெயரின் மேல் ஏற்றப்பட்டிருக்கும் புனைவுகள் அனைத்தையும் கலைத்துப் போட்டு நையாண்டி செய்வதன் மூலம் இதுவரை நமக்குள் வந்து அடர்த்தியாய் அப்பிக் கிடக்கும் அனைத்து வகையான புரிதலையும் ஈவிரக்கமின்றி மறுதலித்துவிட்டுச் சிதைக்கிறது. விநாயகர், முருகன், சிவன், விஷ்ணு, ஐயப்பன், தேவர், அசுரர் முதலிய புராணப் பெயர்கள்; அசோகன், மதுரை மீட்ட சுந்தர பாண்டியன், நாயக்க மன்னர், இளங்கோ அடிகள், கணியன் பூங்குன்றனார், கௌதம புத்தன், சேர சோழ பாண்டியன், அதியமான், ஔவை முதலிய வரலாற்றுப் பெயர்கள்; கிரம்ளின், வெள்ளை மாளிகை, வளைகுடாயுத்தம், என்.ஆர்.ஐக்கள், எழுத்தாளர்கள், நகரங்கள், கரசேவகர்கள், பெரியார், இந்தி, தமிழ், நெல்சன் மண்டேலா, "முத்தமிழ்க் காவலர்", உடன்பிறவா சகோதரி தோழி, சாகித்ய அகாடெமி பரிசு, பட்டிமன்றம், போக்ரான் அணுகுண்டு, தேர்தல், கிரிக்கெட், கார்கில், வயாக்ரா முதலிய நிகழ்காலப் பெயர்கள் அனைத்தும் கலைத்துப் போடப்படுகின்றன. நையாண்டி செய்யப்படுகின்றன. அவைகளின் மேல் புனையப்பட்டுள்ள புனிதங்கள் உடைக்கப்படுகின்றன. புதிய புரிதலுக்கான சாத்தியப்பாடுகள் திறந்துவிடப்படுகின்றன. இதுபோலவே 'சாமிக்கண்ணு எனச் சில மனிதரின் கதைகள்' என்ற நாவலும் மிகச்சிறந்த தலித் இலக்கியம் என்று கொண்டாடுவதற்கு ஏற்ற கூறுகளைக் கொண்டது. ஆனால் பேசப்படவில்லை. எந்தவொரு காலகட்டத்திலும் பெயர் பெற்றுவிட்ட ஒரு சிலரையே, அவரது எழுத்தையே திரும்பத் திரும்பப் பேசுகிற ஒரு பழக்கம்தான் தமிழ்ச் சூழலில் நிலவுகிறது. தலித் இலக்கியத்திலும் இதுதான் நிகழ்ந்து கொண்டு இருக்கிறது.

புனைகதை இலக்கிய வரலாற்றில் கல்வியாளர்கள் பெரிதும் அடையாளப் படுத்தப்படாதது போலவே வர்க்க அடிப்படையிலான இடதுசாரி எழுத்துக்கள் பலவும் முறையாகப் பதிவு செய்யப்படுவதில்லை. இடதுசாரி அமைப்புகளோடும் இடதுசாரிப் பத்திரிக்கைகளோடும் நெருக்கமான உறவைத் தொடர்பறாமல் பாதுகாத்துக் கொள்கின்ற ரகுநாதன், கு.சின்னப்ப பாரதி, கந்தர்வன், தமிழ்ச்செல்வன் முதலியோருடைய படைப்புக்கள் பெரிதும் அடையாளப்படுத்தப்படுகின்றன. அதேநேரத்தில் தமிழ்ச் சமூகத்தின் பல்வேறு பகுதிகளில் நடக்கும் சுரண்டல்களையும், கொடுமைகளையும், போராட்டங்களையும் இடதுசாரிப் பார்வையில் சித்திரிக்கும் பல எழுத்துக்கள் இன்னும் கவனப்படுத்தப்படாமலேயே கிடக்கின்றன. சி.ஆர்.ரவீந்திரன் (அங்குத்தாய்1988), ஜெகதா (சமுத்திரக் குமாரர்கள்1985), மாற்கு (கத்தியின்றி ரத்தமின்றி1987, சுவர்கள்1985), ஐசக் அருமைராஜன் (கல்லறைகள்1982), பாவண்ணன் (சிதறல்கள்1990), ஆர்.எஸ்.ஜேக்கப் (வாத்தியார் 1987), இமயவன் (உலைக்களம்1987, விளைநிலம் 1990) இப்படிப் பெரும் பட்டியலாக நீள்கிறது இந்தப் பெயர் வரிசை. மேற்கண்ட இந்தப் படைப்புகள் பண்ணையாளர்களையும், முதலாளிகளையும், வட்டிக் கொடுமைகளையும், சுரண்டல்களையும், மத மேலாண்மைகளையும், அரசியல் அதிகாரங்களையும் எதிர்த்துப் போராடும் போராட்ட வாழ்வைச் சித்திரிப்பவைகளாகும்.

'கத்தியின்றி ரத்தமின்றி' என்ற மாற்கு நாவலில் ஆதிக்கச் சாதி சார்ந்த பண்ணையாளர்கள் மிகக் குறைந்த கூலி கொடுத்துத் தாழ்த்தப்பட்ட விவசாயக் கூலிகளைச் சுரண்டுகின்ற தன்மை விவரிக்கப்படுகின்றது. பண்ணையாளர்களுக்கு எதிராகத் தாழ்த்தப்பட்ட விவசாயக் கூலிகள், 'கூலி விவசாயிகள் சங்கம்' என்று ஓர் அமைப்பை உருவாக்கிப் போராடத் தொடங்கியவுடன் மேல்சாதி பண்ணையாளர்கள் 'விவசாய சங்கம்' என்ற அமைப்பை ஏற்படுத்தி அவர்களுக்கு ஏற்கனவே கொடுத்துக் கொண்டிருந்த ஆண்களுக்கு நான்கு ரூபாயும், பெண்களுக்கு இரண்டு ரூபாயும் என்ற கூலியைக் குறைத்து முறையே மூன்று ரூபாயும், ஒன்றரை ரூபாயுமாகக் குறைத்துப் போராட்ட உணர்வை ஒடுக்க முயல்கின்றனர். இவ்வாறு ஆதிக்கத்திற்கு எதிராக ஒன்றும் செய்ய முடியாத நிலையில் தாழ்த்தப்பட்ட விவசாயக் கூலிகள் தீவிரவாத இயக்கத்துடன் போய் இணைகின்றனர்.

இது போலவே பாவண்ணனின் 'சிதறல்கள்' என்ற புனைகதை புதுச்சேரியிலுள்ள ரோடியர் மில் தொழிலாளர்களுக்கும் உடைமை யாளர்களுக்கும் நடக்கிற போராட்டத்தை இலக்கியமாக்கிய ஒரு படைப்பாகும்.

சமுத்திரக் குமாரர்கள் புனைகதையில் சங்குகுளித் தொழிலாளிகளுக்கும் முதலாளிகளுக்கும் நடக்கிற போராட்டமும், சங்குகுளித் தொழிலின் நுட்பங்களும் விரிவாகப் புனையப்பட்டுள்ளன.

கிழங்கு பிடுங்கும் தொழிலாளர்களை முன்வைத்து புனையப்பட்ட நாவல் 'கல்லறைகள்' ஆகும். தங்கள் பெண்களை அடமானப் பொருளாக

வைத்து முதலாளியிடம் வட்டிக்குப் பணம் வாங்கும் நடைமுறையை இந்நாவல் புனைகிறது. தன் மகளை அடமானம் வைத்துச் செல்வமணி வட்டிக் கடைக்காரனிடம் பணம் கேட்ட போது அவன் இவ்வாறு பதில் கூறுகிறான்:

*ஒனக்குப் பணம் தரதுல எனக்குக் கஷ்டம் ஒண்ணுமில்ல. ஆனா ஒரு விஷயம் நீ எனக்கு எழுதித் தரணம். நா உனக்கு ரண்டு வரியம் டைம் தரேன். வட்டிக் கட்டிக்கிட்டேயிரு. பின்ன ரண்டா மத்த வரியம் மொதல எனக்குத் திருப்பித் தந்துரு! ஒரு சமயம். ஒன்னால மொதல திருப்பித் தரமுடியலணா வச்சிக்க இந்தக் குட்டிய (கமலா) எனக்குக் கல்யாணஞ் செய்து தரணும். இந்த ரண்டு வரியத்துக்குள்ள நீ இந்தக் குட்டிய யாருக்கும் பேசக்கூடாது பாத்துக்க. அது எழுதாமலே ஆயிற்ற விஷயம்*

இவ்வாறு தமிழ்ச் சமூகத்தின் உள் இடுக்குகளில் உயிர்த்துடிப்போடு இயங்கும் வாழ்க்கைப்பாடுகளை அங்கங்கே உள்ள பல எழுத்தாளர்கள் பலவிதமாகப் புனைகதைகளில் பதிவு செய்துள்ளனர். ஆனால் அவர்களுக்கான பத்திரிக்கைப் பலம் இன்மையும், தங்கள் எழுத்தை வாசகர்களிடம் கொண்டு சேர்ப்பதற்கான பல்வேறு தந்திரங்களையும் உத்திகளையும் கையாளத் தெரியாத நிலையும் அவர்களையும் அவர்கள் எழுத்தையும் பின்தங்கச் செய்து விடுகின்றன.

பொதுவாக வெற்றி பெற்றவர்களின் வரலாறே ஒட்டு மொத்த மனிதர்களின் வரலாறாகப் புனையப்பட்டு வருவதைப் போலவே இலக்கிய வரலாற்றிலும் அரசியல், பதவி, பணம், செல்வாக்கு சாதி, மதம், அதிகார உறவு, தன்னை நிலைநிறுத்தும் தந்திரம் முதலிய பல்வேறு பின்னணியில் வினைபுரிந்து தங்கள் எழுத்தைச் சமூகத்தில் நிலைநிறுத்தத் தெரிந்தவர்களின் எழுத்துக்களே பெரும்பாலும் அடையாளப்படுத்தப்படுகின்றன. உண்மையில் அடையாளப்படுத்தப்படாமல் கிடக்கிற இலக்கியங்களே நூற்றுக்குத் தொண்ணூறு விழுக்காடு ஆகும். இப்படி அடையாளப்படுத்தப்படாமல் போகிற இலக்கியங்கள் கடந்த காலத்தில்தான் என்பது இல்லை. நிகழ்காலத்தில் எழுதப்படும் இலக்கியங்களிலும்கூடப் பல உன்னதமான இலக்கியங்கள் வாசகர்களின் கவனத்திற்கு வராமலேயே பார்த்துக் கொள்ளக்கூடிய இலக்கிய அரசியல் நிகழ்ந்து கொண்டுதான் இருக்கிறது. அப்படிப்பட்ட ஓர் இலக்கியப் பிரதியாக இங்கே சுட்டத்தக்க ஒன்று ரமேஷ் பிரேமின் 'சொல் என்றொரு சொல்' என்ற புனைகதையாகும். பின் நவீனத்துவம் அறிமுகமான தொண்ணூறுகளுக்குப் பிறகு வெளிவந்த மிக முக்கியமான ஒரு நாவல் இதுவாகும். ஆனால் இது பெரிதும் கவனிக்கப்படவில்லை. ஒரு பெரும் பள்ளத்தாக்கில் தூக்கிப் போடப்பட்ட ஒரு பூப்போல இந்நாவல் ஆகிப்போனது. பேசப்பட வேண்டிய ஒரு நாவல் பேசப்படவில்லை. தமிழ் இலக்கிய உலகத்தின் அரசியல் இப்படியா இருக்க வேண்டும் என்று பெரிதும் ஆதங்கப்பட்டு அதைப் பதிவு செய்தவராகவும் முருகேசபாண்டியன் அறியப்படுகிறார்.

'சொல் என்றொரு சொல்' என்ற இந்தப் பிரதி கழுமரத்திலிருந்து தப்பி வந்த 'அதீதன்' எனப்படும் ஆதிச் சமணனின் கதையைச் சொல்வது போலவும், அவன் எழுதியதாகக் கருதப்படும் "உடலில் வலியும் உணர்வில் இசையும்" என்ற பிரதி குறித்த உரையாடல் போலவும் ஒரு சரடை அமைத்துக் கொண்டு, பூமிப்பரப்பெங்கும் சிதறிக்கிடக்கும், விளிம்புநிலை மரபுகளை இன்னும் தக்கவைத்துக் கொண்டு மூச்சுமுட்ட மல்லாடிக் கொண்டு கிடக்கும், தொன்மையான தமிழினத்தின் வரலாற்றிற்குள் புதைந்து கிடக்கும் புனைவுகளையும், அவ்வினத்தின் புனைவுகளுக்குள் முடங்கிக் கிடக்கும் வரலாற்றினையும், கையில் சிக்கிய சிட்டுக் குருவியின் உயிர்த்துடிப்புடன் பிடித்துத் தருகிறது.

அ - பூர்வீகம் உணர்ந்த காதை; ஆ - நூல் பொருள் காதை என ஔ வரைக்குமென ஒரு வரிசையிலும்; அடிக்குறிப்பு என்கிற முறையில் ஒரு வரிசையிலும், 1 - உடலில் வலியும் உணர்வில் இசையும் என்ற படைப்புக்கு அரூபதர்சினி எழுதிய ஆய்வுரையின் ஒரு பகுதி; 2 - அரூபதர்சினி தனது நண்பனிடம் சொன்னது என்ற முறையில் 12 - வரைக்குமென ஒரு வரிசையிலுமாக மூன்று பாதைகளைப் புதிர்வட்டமாக அமைத்துக் கொண்டு பிரதி நகர்கிறது; முதல் வாசிப்பில் மிரட்டுகின்ற பிரதி, இரண்டாவது வாசிப்பில் நேர்கோட்டுக் கதைகளை மட்டுமே வாசித்துப் பழகிய வாசகனுக்கும்கூட, அவனுக்கேற்ப வளைந்து கொடுக்கக் கூடியதாக மாறுகிறது.

தனது நகர்விற்கு வரலாறு எழுதும் நடை, பிரசங்க நடை, ஆராய்ச்சி நடை, உடுக்கை அடிப்பவன் நடை, சித்தர்கள் நடை, வாசகரே விடை எழுதிக்கொள்ளும்படியான வினாநடை, உருவக நடை, விமர்சன நடை, புள்ளிவிவர நடை, கவிதை நடை, தத்துவார்த்த விசாரணை நடை

என மொழியின் அனைத்துச் சாத்தியப்பாடுகளையும் பயன்படுத்திக் கொள்ளுகிற பிரதியானது மூவிடம், முக்காலம், இருதிணை, ஐம்பால் முதலிய மொழிப் பிரிவினைகள் எல்லாவற்றையும் கலைத்துப் போட்டு விளையாடும் ஆடுகளமாகத் தன்னளவில் இயற்கை போல 'சிவனேனு' இருக்கின்ற ஒரு பாவநிலையில் தன் இருப்பை மேற்கொண்டுள்ளது. ஆனால் தன்னைத் தீண்டுகிறவர் மேல் தீயாகப் பற்றிக் கொள்ளும் 'கங்குகளோடும்' விளங்குகின்றது.

பிரதி ஓரிடத்தில் கூறுவது போல, பூமியின் 95% மனிதர்கள் குறித்துச் சரித்திரத்தில் பதிவுகளே இல்லை (ப. 261) என்பது எந்த அளவிற்கு உண்மையோ அந்த அளவிற்கு அதிக்கச் சக்திகளின் மொழியாடலில், மொழியின் 95% வார்த்தைகள் கெட்ட வார்த்தைகள், கொச்சை வார்த்தைகளென முத்திரை குத்தப்பட்டு விலக்கப்பட்டு வருவதும் உண்மை; இதுபோலவே 'இருள் நகரத்தின்' ஓரத்தில் வாழும் உடலை விற்பவர்கள், மனநோயாளிகள், கொலை செய்பவர்கள், ஊனமுற்றவர்கள், நகரத்துப் பொருட்களை அடித்து நொறுக்குபவர்கள் முதலியோர் வாழ்வு எவ்வளவு உயிர்த் தன்மை ததும்பியதாக நகர்கிறது என்பதையும், அதிகாரக் கட்டளைகள் தள்ளி வைத்தவைகளை எல்லாம் இவர்கள் எப்படி இயல்பாகக் கடைப்பிடித்துப் பாட்டுப்பாடி மகிழ்கிறார்கள் என்பதையும் பிரதி பதிவு செய்துள்ளது.

"ஆபாசங்களை அழகென்றார்கள். அழகுகளை அழுகிப் போனவை என்றார்கள். தேவதைகளின் சிலைகளின் மீது சிறுநீர் கழித்தார்கள். கம்பீரமாக எழுந்து நிற்கும் தேவதூதர்களின் சிலைகளைத் தகர்த்தார்கள். வேத கன்னிகளைப் புணர்ந்து உங்கள் உடலை இதன் மூலம் விடுதலை செய்கிறோம் என்றார்கள். நகர இனத்தவர்கள் அனைவரும் ரத்தம் பருகுகிறார்கள்; நாங்கள் சிறுநீர் பருகுகிறோம் என்றார்கள்; பதுக்கப்பட்ட செய்திகளைச் சுவரொட்டிகளாக ஒட்டினார்கள்; தடுக்கப்பட்ட வார்த்தைகளை உரக்கக் கூவினார்கள்" (ப. 189)

இவ்வாறு கலகக்குரலாக வெளிப்படும் பிரதி, மையத்தில் வாழ்பவர்களின் வாழ்க்கையைப் பல கோணங்களில் கேலி செய்கிறது; அடிமைகள் என முகத்தில் அறைகிறது; நகரம் இந்த அடிமைகளால் நெரிசலுற்றுக் கிடக்கிறது; இந்த அடிமைகள் இறந்த காலத்தில் வாழ்கிறார்கள் என்பதைப் பிணங்களோடு புணர்ந்து வாழ்வதாக உருவகம் செய்கிறது; "ஒவ்வொரு மனக் கூடத்திற்குள்ளும் எத்தனையோ பிணங்கள்" (ப. 85) அவை மட்டுமா, சேர, சோழ, பாண்டிய, பக்தி, கோயில் எனப் புராதன ஆவிகளோடு திரைப்படம், தினசரி மற்றும் வாரப் பத்திரிக்கைகள், மதத்தலைவர்கள், அரசியல் கட்டவுட்டுகள், பஜனைகள், துணிக்கடைகள், தொலைக்காட்சிப் பெட்டிகள் என இன்றைய ஆவிகளோடு ஆவிகளாய் வாழ்ந்து மடியும் நிகழ்கால வாழ்வும் வலியும் பக்கக் கிளைகள் முளைத்து வளரும்படியான ஒரு தளத்தில் பிரதிக்குள் புதைத்து வைக்கப்பட்டிருக்கின்றன் விலங்குநிலையைவிடக் கேவலமாகப் போன இந்த மனித நிலை, பிரதிக்குள் மிக நுட்பமாக எடுத்துரைக்கப்படுகின்றது.

மொத்தத்தில் நவீன சமூகத்தின் மூலை முடுக்குகளிலெல்லாம் நிகழும் அனைத்துக் கூற்றுக்களையும் உரையாடல்களையும், தனது எழுத்துலகில் நடக்கும் அரசியல் விளையாட்டுக்களையும், விஷ ஊசி உலவும் அதிகார விளைவுகளையும் ஒன்றுவிடாமல் பிரதிக்குள் கொண்டு வந்திருப்பதானது, "பிரதிக்கு வெளியே ஒன்றும் இல்லை; நீயுமில்லை; நானுமில்லை" என்று வாசகனை உணர வைக்கும் அளவிற்குப் பயன்படுகிறது. "எந்தவொரு மனிதனின் நகர்வும், எழுதப்பட்ட பிரதியின் ஏதோவொரு வாக்கியம் மட்டுமே" எனக் கூறிவிடுகிறது; மனிதர்கள் உச்சரிக்கும் வாக்கியங்கள், வார்த்தைகள் அனைத்தும் தொலைக்காட்சி, திரைப்படம், வானொலி, பத்திரிக்கை முதலியவற்றிலிருந்து சுத்தரித்து எடுத்துக் கொள்ளப்பட்டவைகளே என்ற உண்மைகளை உரக்க உரைக்கிறது. "யாருடைய பேச்சும் அவருக்குச் சொந்தமற்றதாக இருக்கிறது." இருத்தல் அல்ல, பாவித்தல்தான் நிர்வாணம்; ஆதல் அல்ல, ஆதலுக்கான பாவனை; பாவனைக்கான தயாரிப்பு; இதுதான் மனித ஜீவிதம் என வலி ஏற்படும்படிக் கூறுகிறது பிரதி. கூடைகளில் வைத்து ஆற்றில் விடப்பட்ட சிசுக்கள் நாம் என்கிறது பிரதி. கணியன் பூங்குன்றனார் இன்றைய நவீனத் தமிழில் வந்து பேசுவது போல் இருக்கிறது; நாம் தேர்ந்தெடுக்காதது நமது பாதை; வாக்கியப் பிரவாகத்தில் அடித்துச் செல்லப்படுகிறோம்; நம் மூலம் அது கடந்து செல்லுகிறது. அவ்வளவுதான். இப்படி வாசகனை மகாவலியோடு மௌனமாக நிறுத்துகிறது பிரதி. "நாங்கள் வலிகளைப் பற்றிப் பேசுகிறோம்; வலிகளைத் தவிர எதுவுமற்ற மொழியில் பேசுகிறோம்" என்பதற்கேற்ப மாறி மாறி "கவிதையும் புரட்சியும் அற்றுப் போனதற்கான

காரணங்களைத் தேடி அலைவதுதான் இன்றைய தலைமுறைக்கானது" என்று சிரிக்கும்போது நவீன மனித வாழ்வின் ஒட்டு மொத்த வலியையும் ஒரு மாத்திரையில் அடக்கித் தருவது போல் உணரமுடிகிறது.

இறுதியில் 'நாளந்தா' எரிகிறது; குழந்தைகள், புலி வாலோடு பிறக்கும் தென்புலத்தீவில் நூலகம் எரியத் தொடங்குகிறது; தமிழினத்தின் குறியீடாக வரும் நம்மொழித் தேவன் திடுக்கிட்டு எழுகிறான்; தனது உடைவாளைத் துறவியின் மடத்திலேயே விட்டுவிட்டு வந்ததை அப்பொழுதுதான் அறிகிறான்; என்பதோடு இந்த நாவல் முடிகிறது. மடங்கள் உடல் வீரத்தை உறிஞ்சிவிட்டன. உடலுக்கு அதற்குரிய இடம் இல்லாதபடிப் பார்த்துக் கொண்டன. தந்திரமும் சூழ்ச்சியும் சதியும் அதிகாரமும் உற்பத்தி செய்யப்படும் இடங்களான மடங்களின் மூளைக்கு முன்னால் இனி நாம் என்ன செய்யப் போகிறோம்?

இவ்வாறு தமிழினம், அதிகாரம், அரசியல், ஊழல், விளிம்புநிலை எனப் பன்முகமாக விரியும் இந்த நாவல் தமிழ் இலக்கியச் சூழலில் கவனிக்கப்படாமல் போனது அதன் வறுமையைத்தான் காட்டுகிறது. இந்த இடத்தில் ஒன்றைச் சுட்டத் தோன்றுகிறது. இரண்டாம் உலகப் போரையொட்டி மிகச்சிறந்த நாவல்கள் இரண்டை எழுதிய ப. சிங்காரத்தை எந்த நாவல் வரலாற்றாசிரியர்களும் குறிப்பிடவே இல்லை. ஆனால் தொண்ணூறுகளில் நாவல் இலக்கியம் குறித்தும், விளிம்புநிலை எழுத்துக்கள் குறித்தும் புதிய விழிப்புணர்வு தோன்றிய சூழலில் சிறுபத்திரிக்கை வட்டாரத்தைச் சார்ந்த ந. முருகேசபாண்டியன் போன்ற எழுத்தாளர்கள் அவருடைய நாவல்களைக் குறித்து எழுதிக் கவனப்படுத்தியதையும் இந்த இடத்தில் எண்ணிப் பார்க்கத் தோன்றுகிறது. ஒவ்வொன்றுக்குமான காலம் கனிந்து வரும்போது அதற்கான வாழ்வும் சாத்தியமாகிவிடுமென்றே தோன்றுகிறது.

தமிழ்ச் சூழலில் கவனப்படுத்தப்படாத பல புனைகதை எழுத்தாளர்கள் என்னைத் தனிப்பட்ட முறையில் பெரிதும் கவர்ந்தவர்களாக இருக்கின்றனர். கோபி கிருஷ்ணன் (காத்துக் கொண்டிருக்கும் உல்லாசபுரி, கருத்தரங்கில் கணக்கில் கொள்ளப்பட்டவை, முடியாத சமன், இழந்த யோகம் முதலிய கதைகள்), க.வை. பழனிச்சாமி (மீண்டும் ஆதியாகி), பா. விசாலம் (கனவுகள் மெய்ப்பட வேண்டும், உண்மை ஒளிர்கவென்று பாடவும்), சேஷையா ரவி (இன்னும் மனிதர்கள்), சித்தார்த்தன் (பச்சைப் பறவை), குமாரசெல்வா (உக்கிலு), காசியபன் (அசடு), வண்ணதாசன் (தோட்டத்திற்கு வெளியிலும் சில பூக்கள்), இலட்சுமணப் பெருமாள் (பால காண்டம்), தவசி இப்படி நீண்டு கொண்டே போகிறது இந்தப் பட்டியல். உண்மையில் அறியப்படாத அல்லது கவனப்படுத்தப்படாத புனைகதையாளர்கள்தான் தமிழில் மட்டுமல்ல, எந்த மொழி இலக்கியத்திலும் அதிகமாக இருப்பார்கள். எதையும் வரலாற்றுமயப்படுத்தும் மனிதர்களின் பண்பு எல்லைக்கு உட்பட்டதாகத்தான் இருக்கிறது. இந்த எல்லை முன்பே சுட்டிக்காட்டியது போல வெற்றி பெற்றவர்களால் போடப்படும் எல்லையாக இருக்கிறது. இத்தகைய சூழலில் இந்தக் கட்டுரையிலும் என் வாசிப்பு எல்லைக்கு உட்பட்டுதான் இங்கே சிலவற்றைச் சுட்டிக்காட்ட முடிந்திருக்கிறது. உண்மையில் இந்தக் கட்டுரைக்கு இவ்வளவுதான் என்று ஒரு முடிவுரையை எழுதிவிட முடியாது என்பதுதான் உண்மை.

# காலனியச் சூழலில் தமிழ் இலக்கண உருவாக்கம்

இரா. வெங்கடேசன்

தமிழ் இலக்கண நூல் உருவாக்க மரபு இரண்டாயிரம் ஆண்டுக்கால எல்லையைக் கொண்டது. தமிழ் மொழிக்கான இலக்கணத்தை வரையறுத்துக் கூறும் நூல்கள் பல காலந்தோறும் தோற்றம் பெற்றுள்ளன. தொல்காப்பியம் தொடங்கி இன்றுவரை பல்வேறு இலக்கண நூல்கள் உருவாகி வந்துள்ளதை வரலாற்றில் பார்க்க முடிகிறது. நீண்ட தமிழ் இலக்கண மரபில் பதினேழாம் நூற்றாண்டுவரை செய்யுள் வடிவில் மட்டுமே இலக்கண நூல் உருவாக்கம் செய்யப்பட்டுள்ளது. காலந்தோறும் இலக்கணப் பொருண்மையில் பழம் கூறுகளுடன் பல்வேறு புதிய கூறுகள் இடம்பெற்றுள்ளன, என்றாலும் அதன் வடிவ அமைப்பில் எந்த மாற்றமும் பதினேழாம் நூற்றாண்டு வரை ஏற்படவில்லை. இலக்கண நூல்களுக்கு உரை வகுத்த உரையாசிரியர்களும் அந்நூல்களுக்கு உரைகளை வகுத்துச் சென்றனர். அவ்வுரைகள் வசன அமைப்பைக் கொண்டிருப்பினும், அவ்வசன அமைப்பு இலக்கண நூல்களின் வடிவ அமைப்பைப் பாதித்ததில்லை. செய்யுள் வடிவில் மட்டுமே தமிழ் இலக்கண நூல்களின் உருவாக்கம் தொடர்ந்து இருந்துவந்துள்ளன. தமிழ் இலக்கண மரபு வடமொழி இலக்கண மரபுகளை உள்வாங்கிய நிலையிலும் வடிவத்தில் எந்த மாற்றத்தையும் அது ஏற்றுக்கொண்டதில்லை.

பதினாறாம் நூற்றாண்டில் தமிழ் இலக்கண மரபில் ஒரு மாற்றம் ஏற்படுகிறது. பொருண்மை நிலையிலான சில புதிய கூறுகளுடன் வடிவ நிலையிலும் மாற்றத்தைத் தமிழ் இலக்கண மரபு எதிர்கொள்கிறது. தமிழ்ச் சூழலில் ஐரோப்பியர்களின் வருகையால் இப்புதிய மாற்றம் உருவாகிறது. ஐரோப்பியர்கள் சமயப் பரப்பலின் பின்னணியாக இங்குள்ள மொழிகளைப் படித்துப் பயிற்சிபெறும் சூழலுக்கு ஆளாகின்றனர். இதன் பின்னணியாகப் புதிய/எளிய வடிவில் தமிழ் இலக்கண நூல்களை உருவாக்கும் சூழல் ஏற்படுகிறது. பதினாறாம் நூற்றாண்டு முதல் பத்தொன்பதாம் நூற்றாண்டின் தொடக்கம் வரை அவ்வகை இலக்கண நூல்களை உருவாக்கினார்கள். அவ்வகை நூல்கள் பெரும்பாலும் ஐரோப்பிய மொழிகளில் மட்டுமே உருவாக்கப்பட்டன. ஐரோப்பியர்கள் தமிழ் இலக்கண நூல்களை உரைநடை அமைப்பில் உருவாக்கிய அந்தச் சமகாலத்தில் தமிழ் இலக்கண நூல்களைச் செய்யுள் வடிவிலும் தமிழ்ப் புலமையாளர்கள் உருவாக்கியுள்ளனர்.

> பதினெட்டாம் நூற்றாண்டில் செய்யுள் வடிவ இலக்கண நூல்கள் உருவாக்கம் செய்யப்பட்டதற்கான ஆதாரங்கள் வரலாற்றில் இல்லை. ஆனால், ஐரோப்பிய மொழிகளில் சில தமிழ் இலக்கண நூல்கள் உருவாக்கப்பட்டதற்கான சான்றுகள் பல உள்ளன. இவ்வகைப் பணிகளைச் சீகன்பால்கு, பெப்ரீஷியஸ், பெஸ்கி முதலானோர் செய்துள்ளனர்.

ஐரோப்பியரான பிலிப்பால்டே பதினேழாம் நூற்றாண்டில் டச்சு - தமிழ் இலக்கண நூலை எழுதினார். இந்தச் சமகாலத்தில் பிரயோக விவேகம், இலக்கண விளக்கம், இலக்கணக் கொத்து முதலான செய்யுள் வடிவ இலக்கண நூல்களும் தமிழ்ப் புலமையாளர்களால் உருவாக்கப்பட்டுள்ளன. உரைநடை மரபுடன் செய்யுள் வடிவத்திலான இலக்கண நூல்களின் உருவாக்கமும் இருந்துவந்துள்ளதை இது



தமிழ் இலக்கியம், இலக்கணம், பதிப்பு குறித்த ஆய்வுகளில் ஈடுபட்டுவருபவர். செம்மொழி தமிழாய்வு மத்திய நிறுவனத்தில் (இலக்கியத்துறையில்) பணியாற்றி வருகிறார். உங்கள் நூலகம், புத்தகம் பேசுது, நோக்கு முதலான இதழ்களில் தொடர்ந்து ஆய்வுக் கட்டுரைகளை எழுதி வருகிறார். இவரின் நூல்கள்: 'தொல்காப்பிய நன்னூல் (பதிப்பு)', 'தமிழ் யாப்பியல் உருப்படிகள்: இயைபுத்தொடை', 'தமிழ்நூல் பதிப்பு வரலாற்றில் செவ்வியல் நூல்கள்'. மாற்றுவெளி இதழ் ஆசிரியர் குழுவில் ஒருவர்.

காட்டுகிறது. பதினெட்டாம் நூற்றாண்டில் செய்யுள் வடிவ இலக்கண நூல்கள் உருவாக்கம் செய்யப்பட்டதற்கான ஆதாரங்கள் வரலாற்றில் இல்லை. ஆனால், ஐரோப்பிய மொழிகளில் சில தமிழ் இலக்கண நூல்கள் உருவாக்கப்பட்டதற்கான சான்றுகள் பல உள்ளன. இவ்வகைப் பணிகளைச் சீகன்பால்கு, பெப்ரீஷியஸ், பெஸ்கி முதலானோர் செய்துள்ளனர். இந்நூற்றாண்டைத் தொடர்ந்து பத்தொன்பதாம் நூற்றாண்டில் தமிழ் இலக்கண நூல்கள் பெரும்பாலும் உரைநடை அமைப்பிலேயே உருவாக்கப்பட்டுள்ளன. தமிழ் இலக்கண நூல் உருவாக்கம் பதினேழாம் நூற்றாண்டு வரை செய்யுள் வடிவத்திலும், பதினேழாம் நூற்றாண்டிலிருந்து பத்தொன்பதாம் நூற்றாண்டு வரை செய்யுள், உரைநடை எனும் இருவகை வடிவத்திலும் இருந்துவந்துள்ளன. பத்தொன்பதாம் நூற்றாண்டில் இத்தன்மையில் முற்றான மாற்றம் ஏற்பட்டுள்ளது. இலக்கண நூல்களைச் செய்யுள் வடிவத்தில் இயற்றுவதை விடுத்து உரைநடை வடிவத்தில் மட்டுமே இயற்றினர். இதற்குக் காலனிய அரசுருவாக்கமும், அச்சு ஊடக வருகையும் காரணங்களாக இருந்தன. முத்துவீரியம், அறுவகை இலக்கணம் எனும் ஒரு சில இலக்கண நூல்களைச் செய்யுள் வடிவத்தில் இயற்றியுள்ளனர்.

பத்தொன்பதாம் நூற்றாண்டின் தொடக்கத்தில் ஐரோப்பிய ஆட்சியாளர்களுக்கு மொழி கற்பித்தலுக்காக இலக்கண நூல்களை உருவாக்கும் சூழல் ஏற்பட்டது. அவ்வாறு உருவாக்கப்பட்ட இலக்கண நூல்கள் மரபிலக்கணங்களை உள்வாங்கிய உரைநடை அமைப்பில் இருந்தன. 1811இல் திருவேற்காடு சுப்பராய முதலியார் 'தமிழ் விளக்கம்' என்னும் நூலை எழுதி வெளியிட்டுள்ளார். கிடைக்கின்ற தரவுகளின் அடிப்படையில் உரைநடை அமைப்பில் வெளிவந்த முதல் நூலாக இவற்றைச் சுட்டலாம். 1813இல் திருச்சிற்றம்பல தேசிகனார் எழுதி வெளியிட்ட 'இலக்கணச் சுருக்கம்' எனும் நூல் மேற்குறித்த பின்புலத்தில் உருவாக்கப்பட்ட இரண்டாவது நூலாகும். இதன் பின்னர்த் தாண்டவராய முதலியார் (1828), மயிலை சவேரிமுத்துப் பிள்ளை (1845), திருத்தணிகை விசாகப்பெருமாளையர் (1854), மழவை மகாலிங்கையர், அ. முத்துச்சாமிப் பிள்ளை, ஜியுபோப் போன்றவர்கள் இவ்வகையான இலக்கண நூல்களை உருவாக்கி அச்சிட்டு வெளியிட்டனர். இதன் வரலாற்றை விரிவான நிலையில் ஆராய்வது அவசியமான ஒன்றாகும். ஐரோப்பிய ஆட்சியாளர்களுக்கு மொழி கற்பித்தல் விளைவாக உருக்கொண்ட இலக்கண நூல் உருவாக்க மரபு, தமிழ்ச் சூழலில் உருவாக்கப்பட்ட கல்வி நிறுவனங்களில் பயின்ற சுதேச மாணவர்களுக்கானதாகவும் எப்படி நீட்சி பெற்றுள்ளது. மொழி கற்பித்தல் மரபும் இலக்கண நூல் உருவாக்கச் சூழலும் தமிழிலிருந்த மரபிலக்கணங்களை மீட்டெடுப்பதற்கு எவ்வாறு வழிவகுத்தது என்பது பற்றிய விவாதமும் அவசியமாகிறது. இவ்வகையான விவாதத்திற்குக் கீழ்வரும் இலக்கண நூல்கள் ஆதாரமாக அமையும். இவைகளைக் கொண்டு பத்தொன்பதாம் நூற்றாண்டின் இலக்கண மரபுகள் குறித்த விவாதங்களை முன்னெடுக்க முடியும். இதன்வழித் தமிழ்க் கல்வி வரலாற்றை அறிந்துகொள்ளவும் வாய்ப்புள்ளது.

**பத்தொன்பதாம் நூற்றாண்டில் அச்சான உரைநடை வடிவ தமிழ் இலக்கண நூல்கள்**

1811 தமிழ் விளக்கம், திருவேற்காடு சுப்பராய முதலியார், சென்னை, முதல் பதிப்பு

1813 இலக்கணச் சுருக்கம், திருச்சிற்றம்பல தேசிகர், எல்லீஸ் பதிப்பு, சென்னைக் கல்விச் சங்கம், சென்னை

1817 தமிழ் விளக்கம், திருவேற்காடு சுப்பராய முதலியார், சென்னை, இரண்டாம் பதிப்பு

1825 இலக்கண வினா விடை, தாண்டவராய முதலியார், சென்னைக் கல்விச் சங்கம், சென்னை, முதல் பதிப்பு

1828 இலக்கண வினா விடை, தாண்டவராய முதலியார், சென்னைக் கல்விச் சங்கம், சென்னை, இரண்டாம் பதிப்பு

1828 இலக்கணச்சுருக்க வினா விடை, திருத்தணிகை விசாகப் பெருமாளையர்,

1839 இலக்கணச் சுருக்கம், மழவை மகாலிங்கையர், கல்விக் கடல் அச்சுக்கூடம், சென்னை

1842 தமிழ் இலக்கண நூல் சுருக்க வினா விடை, ஜி.யு.போப், முதல் பதிப்பு

1845 இலக்கணச் சுருக்கம், மயிலை சவேரி முத்துத்தம்பிப் பிள்ளை, சன்மவிராக்கினி மாதாகோவில் அச்சுக்கூடம், புதுவை

1854 பாலபோத இலக்கணம், திருத்தணிகை விசாகப்பெருமாளையர், கல்வி விளக்க அச்சுக்கூடம், சென்னை, 2ஆம் பதிப்பு

1854 இலக்கணச் சுருக்கம், பு. இராஜகோபால முதலியார்(ஆ.ர்.), தி. அண்ணாசாமிப் பிள்ளை(ப.ஆ.), முத்தமிழ் விளக்க அச்சுக்கூடம், சென்னை

1855 இலக்கண வினா விடை, ஆறுமுக நாவலர்(ஆ.ர்.), பொன்னம்பல பிள்ளை(ப.ஆ.), வித்தியாநுபாலன யந்திரசாலை, சென்னை, 11ஆம் பதிப்பு

1855 தமிழ் இலக்கண நூற்சுருக்க வினா விடை, ஜி.யு.போப், எஸ்.பி.சி.கே.பிரஸ், சென்னை, 5ஆம் பதிப்பு

1855 தமிழ் இலக்கண வினா விடை, ஜி.யு.போப், அமெரிக்கன் மிசியோன் பிரஸ், சென்னை

1855 தமிழிலும் இங்க்லீஷிலும் எழுதிய இங்க்லீஷ் இலக்கணம், ஜே.ஜி. சீமார், எஸ்.பி.சி.கே.பிரஸ், சென்னை

1857 இலக்கண நூல், பகுதி 1, இலக்கண வினா விடை, ஜி.யு. போப், பதிப்பும் வெளியீடும் P.R. Hunt, அமெரிக்கன் மிசியோன் பிரஸ், சென்னை, முதல் பதிப்பு

1859 இலக்கண நூல், பகுதி 1, இலக்கண வினா விடை, ஜி. யு. போப் (ஆ.ர்.), அச்சும் வெளியீடும்: P.R. Hunt, அமெரிக்கன் மிசியோன் பிரஸ், சென்னை, 2ஆம் பதிப்பு

1865 தமிழ் இலக்கண வினா விடை, ஜி.யு. போப், கிறிஸ்டியன் வர்ணாகுலர் பிரஸ், சென்னை, பத்தாம் பதிப்பு

1866 வாசக இலக்கணம்: முதலாம் அதிகாரம்: சொற்றொடர் இலக்கணம், ஜான் அரிவானந்தம் பிள்ளை, Branch United Scottish Press, சென்னை

1867 'பிரிசி' என்னும் சுருக்கம், சை. விஜயராகவலு செட்டியார், அடெல்பி பிரஸ், (அக்கால விசேடப் பரீட்சையில் சுருக்க எழுதுதல் என்ற பிரிவுக்கு உதவும் வகையில் உதாரணங்களுடன் விளக்கப் பட்டிருக்கிறது)

1867 இலக்கண நூல், பகுதி1, இலக்கணச் சுருக்க வினா விடை, ஜி. யு.போப், தி. கிருஸ்டியன் வர்னாகுலர் எஜுகேஷன் சொசைட்டி, எஸ். பி. சி. கே. பிரஸ், வேப்பேரி, சென்னை, 19 ஆம் பதிப்பு

1867 கிரேக்க இலக்கண நூல், ஆர், ஆர், மெடோஸ் அய்யர், அடல்பி அச்சுக்கூடம், சென்னை

1867 தமிழ் இலக்கணத் திரட்டு, சென்னை

1868 Hand Book in Tamil, ஜி. யு. போப் ஐயர்(ஆ.ர்.), ஏ.ஙிலாரி(ப.ர்.), சென்னை, (3 ஆம் பதிப்பு)

1868 இலக்கணப் பரீக்ஷ, திருநெல்வேலி க. நாராயாண பிள்ளை(ஆ.ர்.), க. அழகிய நம்பி பிள்ளை(ப.ர்.), முத்தமிழாகர அச்சுக்கூடம், திருநெல்வேலி

1868 தமிழ் இரண்டாவது வினா விடை விளக்கம், ஜியு. போப்(ஆ.ர்.), சி.வி.இ. சொசைட்டி, சி.கே. எஸ். பிரஸ், சென்னை, 11ஆம் பதிப்பு,

1868 தமிழ் இலக்கண முதல் வினா விடை விளக்கம், சி. ஞானமணி நாடார்(ஆ.ர்.), எச். டபில்யு.லாரி(ப.ஆ.), சி.வி. எஸ். சொசைட்டி, சென்னை, 20ஆம் பதிப்பு

1868 தமிழ் இலக்கணத் திரட்டு, ஹென்ரி மார்ட்டின் வின்பெரட், எச்.டபில்யு.லாரி, சி.கே. எஸ். பிரஸ், சென்னை, முதல் பதிப்பு. (தமிழ் இலக்கணத்தின் பல்வேறு பிரிவுகளின் அடிப்படை விதிகளை முறைப்படி ஆராய்ந்து எடுத்துக்காட்டியுள்ளது இந்நூல். எடுத்துக் காட்டுக்களோடும் விளக்கக்குறிப்புக்களோடும் பயிற்சிகளோடும் கூடிய இந்நூல் தமிழ்ச் சொல்தொடர் இலக்கணத்தையும் தருகிறது)

1868 யாப்பிலக்கண வினா விடைச் சுருக்கம், சைதாபுரம் காசி விசுவநாத முதலியார்(ஆர்.), சை. சோமசுந்தர முதலியார்(ப.ஆ.), ஸ்டார் ஆப் இந்தியா பிரஸ், சென்னை

1870 தமிழ் இலக்கண முதல் வினா விடை விளக்கம், ஜி.யு. போப், சி.கே. எஸ். பிரஸ், சென்னை, 21ஆம் பதிப்பு

1870 நான்காவது யாப்பிலக்கணச் சுருக்கம், கொட்டையூர் சி. சாமிநாத தேசிகர், தேவகாருண்ய அச்சுக்கூடம், நாகர்கோவில்

1870 இலக்கணச்சுருக்க வினா விடை, திருத்தணிகை விசாகப் பெருமாளையர், ?, ஐந்தாம் பதிப்பு

1870 பாலபோத இலக்கணம், திருத்தணிகை விசாகப்பெருமாளையர், கலாநிதியச்சுக்கூடம், சென்னை

1870 முதல் வினா விடை விளக்கம், மகாலிங்கையர் (ஆர்.), H.W. லாரி, சி.வி.இ. சொசைட்டி, சென்னை

1871 இலக்கணச் சுருக்கம், கோமளபுரம் இராசகோபால பிள்ளை, சந்த்ர மௌலி பிரஸ்

1871 தமிழ் இரண்டாவது வினா விடை விளக்கம், ஜி.யு. போப் (ஆர்.), H.W. லாரி (ப.ஆ.), சி.வி.இ. சொசைட்டி, சி.கே. எஸ். பிரஸ், சென்னை, 12ஆம் பதிப்பு

1871 தமிழ் இலக்கண முதல் வினா விடை விளக்கம், ஜி.யு. போப் (ஆர்.), H.W. லாரி (ப.ஆ.), சி.கே. எஸ். சொசைட்டி, சி.கே. எஸ். பிரஸ், சென்னை, 23ஆம் பதிப்பு

1872 நவமணித் திரட்டு, வி. வெங்கட்ராயலு நாயுடு, பாஸ்டர் பிரஸ், வேப்பேரி, சென்னை (இந்நூல் ஒன்பது பகுதியாக அமைந்துள்ளது. நூதனமாய் எழுத்து சொல் உச்சரிப்பு இவைகளின் பேதமும் அபேதமும், அவைகளுக்கு உதாரணக்குறிப்புகளும் வியாக்கி யானமும், எழுதற்குரிய பயிற்சியும், அதை இலக்கண வழு இன்றிப் புணர்த்தும்முறை முதலியனவும், உபாத்தியாயர், மாணாக்கருக்குக் கற்பிக்கும் சுளுவான விதமும் யாவரும் தெள்ளிதின் உணரத் திரட்டி அமைக்கப்பட்டுள்ளது)

1873 இலக்கணத் துளிர், எஸ். இசுபுமியான் சாய்பு, சிலோன், இந்தியன் பிரஸ், சென்னை

1873 தண்டியலங்காரஸாரம், தி.ஈ. ஸ்ரீநிவாசராகவாசாரியாரால் செய்யப்பட்டுத் தேரெழுந்தூர் சக்கரவர்த்தி ராஜகோபாலாச்சாரியர் உதவியால் பதிப்பிக்கப்பட்டது, கலாரத்நாகரம் அச்சுக்கூடம், சென்னை

1873 தமிழ் இலக்கண முதல் வினா விடை விளக்கம், ஜி. யு. போப், சி.கே. எஸ். சொசைட்டி, சி.கே. எஸ். பிரஸ், சென்னை, மூன்றாம் பதிப்பு

1873 மகாலிங்கையர் இலக்கணம், மகாலிங்கையர் (ஆர்.), ஊ. புஷ்பரத செட்டியார் (ப.ஆ.), கலாரத்நாகரம் பிரஸ், சென்னை, மூன்றாம் பதிப்பு

1874 இலக்கணச் சுருக்கம், யாழ்ப்பாணத்து நல்லூர் ஆறுமுக நாவலர், வித்தியாநுபாலன யந்திரசாலை,சென்னை

1874 மகாலிங்கையர் இலக்கணம், மகாலிங்கையர் (ஆர்.), வி. வரதாச் சாரியார் (ப.ஆ.), சித்தானந்த சைவப் பிரஸ், சென்னை, முதல் பதிப்பு

1875 இலக்கண வினா விடை, ஆறுமுக நாவலர் (ஆர்.), சதாசிவப் பிள்ளை (ப.ஆ.) வித்தியாநுபாலன யந்திரசாலை, சென்னை

1875 தமிழ் இலக்கண வினா விடை விளக்கம் 1, சி. ஞானமணிநாடார், முதல் பதிப்பு, ஆகஸ்ட்

1876 இலக்கணச் சுருக்கம், கோமளபுரம் இராசகோபால பிள்ளை, ஏஷியாடிக் அச்சுக்கூடம், சென்னை

1876 தமிழ் இலக்கண நூல் 2, ஜி.யு. போப்(ஆர்.), சி. வி.இ. சொசைட்டி, சி.கே. எஸ். பிரஸ், சென்னை, 13 ஆம் பதிப்பு

1876 மகாலிங்கையர் இலக்கணம், மகாலிங்கையர்(ஆர்.), பி.எஸ். கிருஷ்ணசாமி பிள்ளை, முதல் பதிப்பு

1876 யாப்பிலக்கண விளக்க வினா விடை, திரிசிபுரம் அ.த. அமிர்தம் பிள்ளை (ஆர்.), அப்பாயி நாயுடு (ப.ஆ.), ஸ்ரீதர அச்சுக்கூடம், சென்னை

1877 தமிழ் இலக்கண முதல் வினா விடை விளக்கம், ஜி.யு. போப், சி.கே. எஸ். பிரஸ், சென்னை, 26 ஆம் பதிப்பு

1878 இலக்கணச் சுருக்கம், மழவை மகாலிங்கையர்,

வர்த்தமான தரங்கிணி சாகை அச்சுக்கூடம், சென்னை

1878 தமிழ் இலக்கண முதல் வினா விடை விளக்கம், சி. ஞானமணி நாடார், சி.வி. இ. சொசைட்டி, சி.கே.எஸ். பிரஸ், சென்னை

1879 தமிழ் இலக்கண நூல் 2, ஜி.யு. போப் (ஆர்.), சி. வி.இ. சொசைட்டி, சி.கே. எஸ். பிரஸ், சென்னை, 14 ஆம் பதிப்பு

1879 தமிழ் இலக்கணம், பகுதி1, இலக்கணச் சுருக்க வினா விடை, ஜி. யு. போப், தி. கிருஸ்டியன் வர்னாகுலர் எஜுகேஷன் சொசைட்டி, வேப்பேரி, பாஸ்டர் அச்சுக்கூடம், சென்னை,

1879 பள்ளிகளுக்கும் கல்லூரிகளுக்கும் உபயோகமான தமிழ் இலக்கணப் புத்தகம், ஜான் லாசரஸ், அடிசன் அண்டு கம்பெனி, சென்னை,

1880 இலக்கணச் சிந்தாமணி, இராயபுரம் ச. ஜெகராகவு முதலியார், இந்தியா பிரஸ், சென்னை

1880 தமிழ் இலக்கண முதல் வினா விடை நூல், சி. ஞானமணி நாடார், 28 ஆம் பதிப்பு

1881 தமிழ் இலக்கண முதல் வினா விடைப் புத்தகம், ஜி.யு. போப், எஸ். பி. சி. கே. பிரஸ், சென்னை

1881 மகாலிங்கையர் இலக்கணம், மகாலிங்கையர் (ஆர்.), ஊ. புஷ்பரதச் செட்டியார் (ப.ஆ.), கலாரத்னாகரம் பிரஸ், சென்னை

1882 இலக்கணச் சுருக்கம், புதிய பதிப்பு, மழவை மகாலிங்கையர், மிமோரியல் அச்சுக்கூடம், சென்னை

1882 இலக்கணச் சுருக்கம்,மே. சு. ஜெயராம முதலியார், பாஸ்டர் அச்சுக்கூடம், சென்னை

1883 இலக்கணச் சுருக்கம், மழவை மகாலிங்கையர், ஸ்ரீநிலயம் அச்சுக்கூடம், சென்னை

1883 இலக்கணச் சூடாமணி: முதலாம் பங்கு, எச்.ஏ. கிருஷ்ண பிள்ளை, சர்ச் மிஷன் பிரஸ், பாளையங்கோட்டை

1883 தமிழ் இலக்கண இரண்டாம் வினா விடை நூல், ஜி.யு. போப், முதல் பதிப்பு

1883 தமிழ் இலக்கணம், பகுதி1, இலக்கணச் சுருக்க வினா விடை, ஜி. யு. போப், தி. கிருஸ்டியன் வர்னாகுலர் எஜிகேஷன் சொசைட்டி, எஸ். பி. சி. கே. பிரஸ், வேப்பேரி, 31 ஆம் பதிப்பு

1883 மகாலிங்கையர் இலக்கணம், மகாலிங்கையர் (ஆர்.), வி. வரதாச் சாரியார் (ப.ஆ.), ஸ்ரீநிலயம் அச்சுக்கூடம், சென்னை, 2 ஆம் பதிப்பு

1884 இலக்கணச் சுருக்கம், மழவை மகாலிங்கையர், சுஜநரஞ்சனி அச்சுக் கூடம், சென்னை

1884 தமிழ் இலக்கணம், பகுதி 1, இலக்கணச் சுருக்க வினா விடை, ஜி. யு. போப், தி. கிருஸ்டியன் வர்னாகுலர் எஜிகேஷன் சொசைட்டி, எஸ். பி. சி. கே. பிரஸ், வேப்பேரி, 34 ஆம் பதிப்பு

1884 வினைச்சொல் விளக்கம், ப. வாசுதேவ முதலியார், பிரிட்டிஷ் பிரஸ், சென்னை

1885 இலக்கணச் சுருக்கம், ப. வாசுதேவ முதலியார், அமெரிக்கன் அச்சுக்கூடம், சென்னை

1885 சிறுவர் சொல் இலக்கணம், டி. டேவிட், எஸ். பி. சி. கே. பிரஸ், சென்னை

1885 தமிழ் இலக்கண இரண்டாம் வினா விடை நூல், ஜி.யு. போப், 16 ஆம் பதிப்பு

1885 தமிழ் இலக்கண முதல் வினா விடை நூல், ஜி.யு. போப், சி.வி.இ. சொசைட்டி, எஸ்.பி.சி. கே. பிரஸ், சென்னை 34 ஆம் பதிப்பு

1885 தமிழ் இலக்கணம், பகுதி 1, இலக்கணச் சுருக்க வினா விடை, ஜி. யு. போப், தி. கிருஸ்டியன் வர்னாகுலர் எஜுகேஷன் சொசைட்டி, எஸ். பி. சி. கே. பிரஸ், வேப்பேரி, 33 ஆம் பதிப்பு

1885 மகாலிங்கையரின் இலக்கண நூல், மகாலிங்கையர் (ஆர்.), ஊ. தியாகராய ஐயர் (ப.ஆ.), லலீதா பிரஸன்னோதயம் அச்சுக்கூடம், சென்னை, முதல் பதிப்பு

1886 தமிழ் இலக்கணச் சுருக்கம், முத்துசாமி முதலியார், வர்த்தமான தரங்கிணீ அச்சுக்கூடம், சென்னை

1887 ஆங்கில இலக்கண நூல், எஸ்.எல். ரகுபதி (ஆர்.), எஸ். முத்துசாமி (ப.ஆ.) திவாகர பிரஸ், தஞ்சை

1887 இலக்கண வினா விடைத் திரட்டு, ஜே. சுப்பிரமணியப் பிள்ளை, ஹிந்து தேசாபிமானி அச்சுக்கூடம், திருநெல்வேலி

1887 இலக்கணச் சுருக்கம், ஆறுமுக நாவலர் (ஆர்.), சதாசிவப்பிள்ளை (ப.ஆ.), வித்தியாநுபாலன யந்திரசாலை, சென்னை

1887 இலக்கணச் சுருக்கம், யாழ்ப்பாணத்து நல்லூர் ஆறுமுக நாவலர் (ஆ.ர்.), மேற்படியூர் சதாசிவம் பிள்ளை (ப.ஆ.), வித்தியாநு பாலன யந்திரசாலை, சென்னை

1887 தமிழ் இலக்கணம் 1, ஜி.யு. போப், கலாரத்நாகரம் அச்சுக்கூடம், சென்னை, 15 ஆம் பதிப்பு

1888 இலக்கணச் சுருக்கம், மழவை மகாலிங்கையர், கலாரத்நாகரம் அச்சுக்கூடம், சென்னை

1888 உயர் வகுப்பு மாணவர்களுக்கான இலக்கண நூல், பி.ஏ.கிருஷ்ண மாச்சாரியார், வி.பொன்னுசாமிப் பிள்ளை அண்டு கம்பெனி, சிந்தாமணி யந்திரசாலை, திருப்பத்தூர், முதல் பதிப்பு

1888 தமிழ் இலக்கண நூல் அநுபந்தத்துடன், சி.டி.இ. ரேனியஸ் ஐயர், ஹிக்கிம்பாதம் அண்டு கம்பெனி, சென்னை, நான்காம் பதிப்பு

1888 தமிழ்ச் செய்யுள் உரைநடை இலக்கணங்கள், எம். முருகேச முதலியார், கலாரத்நாகரம் அச்சுக்கூடம், சென்னை, முதல் பதிப்பு

1888 மகாலிங்கையரின் இலக்கண நூல், மகாலிங்கையர் (ஆ.ர்.), எம்.எஸ். இயாகப் பிள்ளை, செயிண்ட் ஜோசப் பிரஸ், சென்னை, 6 ஆம் பதிப்பு

1888 யாப்பிலக்கண சூசனம், எம்.ஏ.முத்துத்தம்பிப் பிள்ளை, மதராஸ் ரிப்பன் பிரஸ், சென்னை

1889 இலக்கணச் சுருக்கம், மழவை மகாலிங்கையர், தொண்டமண்டலம் பிரஸ், சென்னை

1889 தமிழ் இலக்கண முதல் வினா விடை விளக்கம், ஜி.யு. போப் (ஆ.ர்.),சி.கே. சொசைட்டி, எஸ்.பி.சி.கே. பிரஸ், சென்னை, 37 ஆம் பதிப்பு

1889 மழவை மகாலிங்கையரால் இயற்றப்பெற்ற இலக்கணச் சுருக்கம், ஆநூர் எத்திராஜ முதலியார் (ப.ஆ.) பிரின்ஸ் ஆப் வேல்ஸ், சென்னை

189 இலக்கணச் சுருக்கம், மழவை மகாலிங்கையர், கல்விக்கடல் அச்சுக்கூடம், சென்னை

1891 தமிழ் இலக்கண தீபிகை : முதலாம் பாகம்: எழுத்ததிகாரம், ஜேம்ஸ் டி. அப்பாபிள்ளை, வெஸ்லியன் மிஷியோன் பிரஸ்

1891 தமிழ் இலக்கண வினா விடை, ஜியு. போப், P.R. Hunt, சென்னை, 9 ஆம் பதிப்பு

1892 தமிழ் இலக்கண நவீன பயிற்சிப் புத்தகம் 1, எம். வெங்கடசாமி ஐயர், எஸ். பி.சி.கே. பிரஸ், சென்னை, முதல் பதிப்பு

1892 இலக்கண வினா விடை, ஜி. யு. போப், கிறித்துவ இலக்கியச் சங்கம், சென்னை, 39ஆம் பதிப்பு

1892 இலக்கணச் சுருக்கம், மழவை மகாலிங்கையர், கலாரத்நாகரம் பிரஸ், சென்னை, (எழுத்தியல் சொல்லியல்களோடு சொற்றொடரியலும், யாப்பியலும் அமைந்துள்ளன)

1892 தமிழ் இலக்கணம், ஜெ.எஸ். பீட்டர், எஸ். பி. சி.கே. பிரஸ், சென்னை, முதல் பதிப்பு

1892 நூதன தமிழ் இலக்கணப் புத்தகம், ஏ.எச். ஆர்டன் ஐயர், சி.கே. சொஸைட்டி, எஸ்.பி.சி.கே.பிரஸ், சென்னை, (பொதுவான பேச்சுத் தமிழை ஐரோப்பிய மாணவர்கள் பயிலும் பொருட்டு ஆக்கப்பெற்ற மொழி வழிகாட்டி நூல்)

1893 ஆர்டனின் முன்னேற்றத் தமிழ் இலக்கணத் துணை நூல், தொகுதி 1, ஏ.எச்.ஆர்டன் ஐயர், சி.கே. சொஸைட்டி, எஸ்.பி.சி.கே.பிரஸ், சென்னை, முதல் பதிப்பு

1893 இலக்கணாகரம், அரீக்குட்டியா பிள்ளை, மெட்ராஸ் விக்டோரியா பிரஸ், சென்னை

1893 தமிழ் இலக்கண விளக்கம், சி. ஞானமணி நாடார், பிரின்ஸ் ஆப் வேல்ஸ் பிரஸ், சென்னை, முதல் பதிப்பு

1893 தமிழ் இலக்கணச் சுருக்கம், பகுதி 1, ஆர். சீனிவாச முதலியார், சுஜன ரஞ்ஜனி விலாச அச்சுக்கூடம், சென்னை, முதல் பதிப்பு

1893 தமிழ் இலக்கணச் சுருக்கம், பகுதி 2, ஆர். சீனிவாச முதலியார், சுஜன ரஞ்ஜனி விலாச அச்சுக்கூடம், சென்னை, முதல் பதிப்பு

1893 தமிழ் இலக்கணத் தெளிவு, தாவீது யோசேப்பு உபாத்தியாயர், எஸ். பி.சி.கே. பிரஸ், சென்னை

1894 இலக்கண வினா விடை, ஜி. யு. போப், கிறித்துவ இலக்கியச் சங்கம், சென்னை, 14 ஆம் பதிப்பு

1894 இளைஞர் பயில் இலக்கணம், மோசூர் வேங்கடசாமி ஐயர், எஸ்.பி.சி.கே.பிரஸ், சென்னை

1894 ஸ்பெல்லிங் அண்ட் ரீடிங், தேவசிகாமணி முதலியார், மினர்வா பிரஸ், சென்னை, (தமிழ் விளக்கத்துடன் ஆங்கிலம் கற்பதற்கு வழிகாட்டும் நூல்)

1895 இலக்கண மணிமாலை, பி.எஸ். இ. முத்துசாமிப்பிள்ளை, ஆக்ஸ்போர்டு பிரஸ், பெங்களூர், முதல் பதிப்பு

1895 தமிழ் இலக்கண வினா விடை, ஜி.யு. போப், கிறித்துவ இலக்கியக் கழகம், எஸ். பி. சி. கே. பிரஸ், வேப்பேரி, சென்னை, 19 ஆம் பதிப்பு

1895 தமிழ் இலக்கண நூல் சுருக்க வினா விடை, ஜி.யு. போப், ஆங்கில மொழிபெயர்ப்பு, டி. எஸ். ஹெறிக்

1895 யாப்பிலக்கண வினா விடை, சீர்காழி உபாத்தியாயர் சி. கோவிந்த சாமி ரெட்டியார், பிரம்ம வித்தியா பிரஸ், சிதம்பரம்

1896 தமிழ் இலக்கணச் சிந்தாமணி, சி.ஞானமணி நாடார், பிரின்ஸ் வேல்ஸ் பிரஸ், சென்னை

1896 தமிழ் இலக்கணம், வி. சௌந்தரராஜ அய்யங்கார், ஸ்ரீவித்தியா அச்சுக்கூடம், கும்பகோணம்

1897 இலக்கண விளையாட்டு, வி. கிருஷ்ணமாச்சாரியார், எஸ்பிசிகே. பிரஸ், வேப்பேரி, சென்னை, (உரையாடல் முறையில் இலக்கணச் செய்திகள் விவரிக்கப்பட்டுள்ளன)

1897 இலக்கண வினா விடை, ஆறுமுக நாவலர் (ஆ.ர்.), சதாசிவப்பிள்ளை (ப.ஆ.), வித்தியாநுபாலன யந்திரசாலை, சென்னை

1897 இலக்கணச் சந்திரிகை, அ. குமாரசுவாமிப் பிள்ளை, சோதிடப் பிரகாச யந்திரசாலை, கொக்குவில்

1897 இலக்கணச் சுருக்கம், கோமளபுரம் இராசகோபால பிள்ளை, சுந்தர மௌலி பிரஸ், சென்னை

1897 தமிழ் இலக்கண வினா விடை, ஜி. யு. போப், கிறித்துவ இலக்கியச் சங்கம், சென்னை, 44 ஆம் பதிப்பு

1897 தமிழ் இலக்கணம், நன்னூல் சூத்திரத்துடன் விளக்கம், வி. சௌந்தர ராஜ அய்யங்கார், சீனிவாச வரதாச்சாரியார் அண்டு கம்பெனி

1897 பாலர் இலக்கணம், சி. ஞானமணி நாடார், பிரின்ஸ் ஆப் வேல்ஸ் பிரஸ், சென்னை, முதல் பதிப்பு

1897 மழவை மகாலிங்கையரின் இலக்கணச் சுருக்கம், ஏ. சிங்கார வேலு முதலியார்/வி.ஜே. மாணிக்கவேலு முதலியார் அண்டு கோ, ஜரிஷ் பிரஸ், சென்னை,

1897 முதலிலக்கணம், சௌரியப்பா, அல்பீனியன் பிரஸ், சென்னை

1897 லோயர் செகண்டரி தமிழ் இலக்கணம், பி. வாசுதேவ முதலியார், மதராஸ் ரிப்பன் பிரஸ், சென்னை

1897 ஜெனரல் தமிழ், மாணிக்கவேலு முதலியார் (ப.ர்.), ஜரிஷ் பிரஸ், சென்னை

1898 அணியிலக்கணம், திருத்தணிகை விசாகப்பெருமாளையர் (ஆ.ர்.), ஈக்காடு இரத்தினவேலு முதலியார் (ப.ஆ.), பண்டித மித்திர யந்திர சாலை, சென்னை

1898 ஆரம்ப தமிழ் இலக்கணம், எஸ்.வி. இராமசாமி ஐயங்கார், எம்பிரஸ் ஆப் இந்தியா பிரஸ், சென்னை

1898 உச்சரிப்பு வழிகாட்டி நூல், ஆர். சக்கரபாணி ஐயங்கார், ஸ்ரீவித்தியா அச்சுக்கூடம், கும்பகோணம்

1898 தமிழ் இலக்கண வினா விடை, ஜி. யு. போப், கிறித்துவ இலக்கியச் சங்கம், சென்னை, 45 ஆம் பதிப்பு

1898 தமிழ் இலக்கணம், நன்னூல் சூத்திரத்துடன் விளக்கம், வி. சௌந்தர ராஜ அய்யங்கார், சீனிவாச வரதாச்சாரியார் அண்டு கம்பெனி

1898 பால போத இலக்கணம், வி. சௌந்தரராஜ அய்யங்கார், சீனிவாச வரதாச்சாரியார் அண்டு கம்பெனி

1898 மழவை மகாலிங்கையரின் இலக்கணச் சுருக்கம், வி. கோ. சூரிய நாராயண சாஸ்திரி (ப.ர்.), தாம்ஸன் கம்பெனி, மினர்வா அச்சுக்கூடம், சென்னை

1898 யாப்பிலக்கணச் சுருக்கம், செயிண்ட் ஜோஸப்ஸ் காலேஜ் பிரஸ்,

திருச்சினாப்பள்ளி

1899 ஆரம்ப தமிழ் இலக்கணம், எம். சண்முகம் பிள்ளை டி. பாலசுந்தர முதலியார், மினர்வா அச்சுக்கூடம், சென்னை, முதல் பதிப்பு

1899 இளைஞர் இலக்கண வினா விடை, எம். முருகேச முதலியார், சிட்டி பிரஸ், சென்னை, முதல் பதிப்பு

1899 எழுவாய், பயனிலை, செயப்படு பொருள் விளக்கம், பார்த்தசாரதி ஐயங்கார், தமிழ் ஜர்னல் ஆன் எஜிகேஷனல், வித்தியாவர்த்தமானி ஆபிஸ், சென்னை

1899 சிற்றிலக்கணம், எம்.சண்முகம் பிள்ளை, மினர்வா அச்சுக்கூடம், சென்னை

1900 தமிழ் இலக்கண நவீன பயிற்சிப் புத்தகம் 1, எம். வெங்கடசாமி ஐயர், ஹோா அண்டு கோ, பிரிமியர் அச்சுக்கூடம், சென்னை, முதல் பதிப்பு

1900 முதல் இலக்கணம், மோசூர் வேங்கடசாமி ஐயர், அடிசன் அண்டு கம்பெனி, சென்னை

1900 யாப்பிலக்கணம், திருத்தணிகை சரவணப்பெருமாளையர் (ஆ.ர்.), ஈக்காடு இரத்தினவேலு முதலியார் (ப.ஆ.), பண்டித மித்திரன் யந்திர சாலை, சென்னை


MADRAS


இலக்கணச்சுருக்கம்.


இலக்கணச்சுருக்கம்.


தாண்டவராயமுதலியாரம்

அ. முத்துச்சாமிப்பிள்ளை


இலக்கண சந்திரிகை.

அ. குமாரசுவாமிப்பிள்ளையால்


TAMIL GRAMMAR

இலக்கண நூல்.

ROJA MUTHIAH


இலக்கணச்சுருக்கம

1813


இலக்கணச்சுருக்கம்.

1854

# அறியவேண்டிய மொழிபெயர்ப்பாளர்களும் பணிகளும்

மு. வளர்மதி

பிற மொழிகளிலிருந்து தமிழுக்கு வந்த நூல்களைக் கணக்கிட்டால் சுமார் பத்தாயிரத்தை எட்டும். இவை பல்வேறு மொழிகளிலிருந்து மொழிபெயர்ப்பாக, மொழியாக்கமாக, தழுவலாக இடம் பெற்றுள்ளன. இவற்றுள் பல வியத்தகு மொழிபெயர்ப்புப் பட்டியலில் அடங்குவன ஆகும். ஆனால் அம்மொழிபெயர்ப்பை வழங்கிய பல பேரறிஞர்களின் பெயர்கள் அறியப்படாமல் மறைந்து போனவை நூற்றுக்கணக்கில் உண்டு என்றாலும் இக்கட்டுரை அளவில் ஒரு சில பகுதிகள் சான்றுக்கு மட்டும் சுட்டிக் காட்டப்படுகின்றன.

உலக மொழிகளுள் கிரேக்க மொழி செவ்வியல் மொழி (Classical Language) எனும் பெருமைமிகு தகுதியைப் பெற்ற முதல் மொழியாகும். கிரேக்கத்தின் தொன்மையும், அதன் இலக்கியங்களும், அந்நாட்டில் தோன்றிய தத்துவ ஞானிகளின் சிந்தனைகளும், கலைவடிவங்களும் அத்தகுதி பெறுவதற்குக் காரணிகளாக அமைந்துள்ளன. கிரேக்கச் சிந்தனைகளின் செல்வாக்கு இன்று வரை உயிர்த்துடிப்புடன் விளங்குகிறது. கிரேக்க மொழிக்கு செவ்வியல் தகுதியை வழங்க முதல் காரணமாக இருந்தவர் ஹோமர் (Homer) எனும் பண்டைக் கிரேக்க இதிகாசக் கவிஞர். இவர் வழங்கிய இலியட் (ILIAD), ஒடிஸி (ODESSAY) எனும் இதிகாசங்கள் இம்மொழியின் சிறப்பை உலகுக்கு உணர்த்தின. ஹோமர் வாழ்ந்ததைக் குறித்தும் அவர் வாழ்ந்த காலம் குறித்தும் ஒருமித்த கருத்து நிலவவில்லை. எப்படியிருப்பினும் அவர் வழங்கியுள்ள இலியட், ஒடிஸி காவியங்கள் பல்வேறு மொழிகளில் மொழிபெயர்க்கப்பட்டுள்ளன. ஹோமரின் இப்படைப்புகள் ஆங்கிலத்தில் மட்டும் 113 மொழிபெயர்ப்புகள் வெளிவந்துள்ளன. தமிழில் ஹோமரின் இலியதம், ஒடிஸி காவியங்களை 7 மொழிபெயர்ப்பாளர்கள் மொழி பெயர்த்துள்ளனர்.

கே.வெங்கடராம் ஐயர், எஸ்.ஆர். அனந்தராம ஐயர், அ.சீநிவாசராகவன், அ.கு. ஆதித்தர், எ. சிங்காரவேலு, நாகூர் ரூமி, பெரு. முருகன் ஆகிய ஏழு மொழிபெயர்ப்பாளர்கள் இம்முயற்சியில் ஈடுபட்டனர். இவர்களுள் கே. வெங்கடராம ஐயர் 1920களில் இம்மொழிபெயர்ப்பு முயற்சியைத் தொடங்கியவர் என்பதுடன் ஹோமர் இலியதம், உல்லாஸன் சரிதம் எனும் தலைப்புகளில் இவ்விரு நூல்களையும் தமிழில் வழங்கியுள்ளார். பிறர் அனைவரும் ஹோமரின் இலியத் அல்லது ஒடிஸி இதில் ஏதாவது ஒன்றை மட்டும் தமிழில் வழங்கும் பணியைச் செய்துள்ளனர். இதில் எஸ்.ஆர். அனந்தராம ஐயர் 1950இல் 4 தொகுதிகளாக வழங்கிய இம்மொழிபெயர்ப்பு கையெழுத்துப் பிரதிகளைப் பெற்று சென்னை கீழ்த்திசைச் சுவடி நூலகம் திரு. பெரியசாமித் தூரன். திரு.ப. திரிகூட சுந்தரம் ஆகிய இருவரையும் பதிப்பாசிரியராகவும், திரு.டி.சந்திரசேகரன் எனும் நூலகரைப் பொதுப்பதிப்பாசிரியராகக் கொண்டு 1961ஆம் ஆண்டு 975 பக்கங்கள் உடைய ஒரு பெரு நூலாக வெளியிட்டுள்ளது. இந்நூலின் முன்னுரைப் பகுதியில் "This was presented in the year 1950-51 by Sri S.R.Anantarama Aiyar, Kulpathi, Palghat. This is a direct Tamil translation from Alexander Pope's English version of Homer's Iliad" (P.IV) என்று மட்டும் சிறிய எழுத்துகளில் குறிப்பிடப்பட்டுள்ளது. சுமார் ஆயிரம் பக்கங்கள் கொண்ட மிகத் தொன்மையான கிரேக்க இலக்கியத்தைத் தமிழில் வழங்கிய அம்மொழிபெயர்ப்பாளர் பெயர் சரியான முறையில் பதிவு செய்யப்படவில்லை என்பது குறிப்பிடத்தக்கது.

மேற்குறிப்பிட்ட 7 மொழிபெயர்ப்பாளர்களுள் ஹோமரின் காவியச் சுவையைத் தமிழ்ச்சுவையாக தமிழ்ச் செய்யுள் இலக்கணமுறைக்கேற்ப மொழியாக்கம் செய்து 'எல்லியம்' எனும் தலைப்பில்



உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத்தில் இணைப்பேராசிரியராக பணியாற்றி வருகிறார். பத்திற்கும் மேற்பட்ட நூல்கள் வெளிவந்து உள்ளன. இவரின் நூல்களில் சில: 'மொழிபெயர்ப்பு முன்னோடிகள்', 'பயண இலக்கியங்கள்', 'தோழர் நாகம்மையாரும் தோழர் கண்ணம்மாளும்'.

1008 பக்கங்கள் கொண்ட நூலை வழங்கிய பெருமைக்குரியவர் அ.கு. ஆதித்தர். இவர் திருச்செந்தூரையடுத்த காயாமொழிப்பட்டனத்தில் 21.12.1901ஆம் ஆண்டு பிறந்தார். அழகானந்த ஆதித்த நாடார், வடிவம்மாள் இவரது பெற்றோராவர். ஆதித்தர் இவருடைய குடும்பப் பெயர். இவருடைய பெயர் குமரகுருபர ஆதித்தர்; அழகானந்த குமரகுருபர ஆதித்தர் என்ற பெயர் அ.கு. ஆதித்தர் எனச் சுருக்கமாக்கியுள்ளார். இவர் மெய்ஞ்ஞானபுரம் நெல்லை சி.எம். கல்லூரியில் கல்வி பயின்றுள்ளார். காந்தியின் மீதும் இந்திய விடுதலை மீதும் மிகுந்த பற்று கொண்டதால் ஒத்துழையாமை இயக்கத்தில் ஈடுபட்டார். பின்பு தம் படிப்பை நிறுத்திவிட்டு ஒப்பற்ற தேசிய கீதங்கள் 150க்கு மேல் இயற்றித் தாமே பாடி விடுதலைப் பிரசாரம் செய்வதில் ஈடுபட்டார். இவர் ஆசிரியர் பணியை ஏற்று அருப்புக்கோட்டை, செங்கல்பட்டு ஆகிய இடங்களில் பணியாற்றி இறுதியாக சென்னைக் கிறித்துவக் கல்லூரி உயர்நிலைப்பள்ளியில் பணியாற்றி ஓய்வு பெற்றார். திருக்குறள், கம்பராமாயணம், சீவக சிந்தாமணி ஆகிய மூன்றையும் உயிர் மூச்சாகக் கொண்டவர். இலக்கணப் புலமை மிக்கவர். கவிதை என்பது அவருடைய உயிர்ப்பாக இருந்தமையால் அவருடைய படைப்புகளில் அம்மேதமை மேலோங்கியுள்ளது. ஆகையால் அ.கு. ஆதித்தர் மகாகவி அ.கு. ஆதித்தர் எனும் பட்டம் பெற்றார். கிரேக்க மொழிக்கு செம்மொழித் தகுதியைப் பெற்றுத்தந்த மகாகவி ஹோமரின் இலியட் படைப்பைத் தமிழுக்குக் கொண்டுவந்து சேர்த்த மொழிபெயர்ப்பாளர் மகாகவி அ.கு. ஆதித்தர் பாராட்டுக்குரியவர்.

> கிரேக்க மொழிக்கு செம்மொழித் தகுதியைப் பெற்றுத்தந்த மகாகவி ஹோமரின் இலியட் படைப்பை தமிழுக்குக் கொண்டு வந்து சேர்த்த மொழிபெயர்ப்பாளர் மகாகவி அ.கு. ஆதித்தர் பாராட்டுக்குரியவர்.

இவர் ஹோமரின் படைப்பை ஆங்கிலத்தில் எட்வர்ட் ஏர்ல் டெர்பி (Edward Earl of Derby) என்பவர் மொழிபெயர்த்த நூலை மூலமாகக் கொண்டு மொழியாக்கமாகத் தமிழில் 'எல்லியம்' எனத் தமிழாக்கியுள்ளார். "தர்பிக்கோமான், மூலநூலை விட்டு விலகாமல் கூட்டாமல் குறைக்காமல் ஆங்குற்றாவாறே எழுதியிருப்பதாகத் தம் முகவுரையில் கூறியுள்ளார். அதனால் யான் அவர் நூலைத் தேர்ந்தெடுத்தேன். 2900 ஆண்டுகளாகத் தமிழில் வெளிவராத ஒரு காவியம் 1980இல் வெளிவருகின்றது. 1955இல் எல்லியம் மொழிபெயர்ப்புத் தொடங்கி 22.06.1960இல் முடிந்துள்ளது. ஏறக்குறைய 20 ஆண்டுகள் என் கையெழுத்துப் பிரதி நெடுந்துயில் கொண்டு 1980இல் என் எண்பதாம் வயதை ஒட்டி வெளிவருகின்றது" என்று தமது குறிப்பில் (ப.999) அ.கு. ஆதித்தர் குறிப்பிட்டுள்ளார்.

சிறந்த உவமைகளைக் கையாண்டு காட்சிகளை விவரித்துள்ளார் என்பதற்கு ஒரு சான்று, மெனிலஸ் (Menelous) போர்க்களத்தில் எதிரிகளை வீழ்த்திய காட்சியை விவரிக்கும்பொழுது (அதிகாரம். 17, பாடல் 207, பக். .684, 685) சிங்கம் ஒரு உயிரை வேட்டையாடும்பொழுது எப்படி எவ்வளவு கோபத்துடனும் வேகத்துடனும் செயல்படுமோ அவ்வாறு அவர் போர்க்களத்தில்

எதிரியை வீழ்த்தினான் என்பதைக் காட்டும் வகையில்

"வரைவலர் சிங்கம் ஒன்று வீரிய
மிக்குப்பாய்ந்து

நிறையுறு காளை ஒன்றைக் கழுத்தினிற்
கடுத்துக் கௌவி

விரைவுறப் பிய்த்து ஊனை உதிரத்தை நக்கி
மாந்தும்

கரையுறு காவல் நாய்கள் ஆயர்கள் கலங்கி
நிற்பர்.

ஆர்ப்பரால் ஆஊ என்றே அடி எறி
என்று சொல்வார்

நேர் உற யாரும் நண்ணார் நெஞ்சத்திற்
பீதி மல்கும்

யார் ஒரு வருமாங் கில்லை, மானவன்
எதிரிலுற்றுப்

போர்வினை நடத்த; அன்னான் புரிவதைத்
தடுத்து நிற்க."

ஹோமர் கிரேக்க மொழியில் கூறியுள்ள அந்த மெனிலஸின் வீரம் இங்கு அ.கு. ஆதித்தரால் அதே வன்மையுடன் தமிழில் காட்டப்பட்டுள்ளது. மெனிலஸ் என்ற பெயரை மானவன் என்றபெயர் மாற்றம் தவிர அந்த உவமைநயச் சிறப்பைப் பெயர்ப்பில் தங்குதடையின்றி ஓடிவரும் நீரூற்றுப்போல சொல்நயம் காட்டும் கவிதைநடை தமிழ் மொழிபெயர்ப்பில் இடம் பெற்றுள்ளது. கும்மி, ஆனந்த களிப்பு, நொண்டிச் சிந்து, இடும்பன் பாட்டு, காவடிச் சிந்து மெட்டு, திருப்புகழ், மேலைப் பண்முறை கீதங்கள் எனும் இசைவடிவக் குறிப்புகளுடன் வழங்கியுள்ளார்.

சுமார் 3000 ஆண்டுகளுக்கு முந்தைய ஒரு மனிதனின் கற்பனைக்குள் இக்கால மனிதர்களான நாம் பயணிக்கிறோம் என்பது இம்மொழிபெயர்ப்பாளர்கள் மூலம் உண்மையாகின்றது. காதலும் வீரமும் தான் இவ்வுலக மொழிகளில் உள்ள எல்லாக் காவியங்களிலும் மையப் பொருளாகும். பெண்ணும் மண்ணும் இக்காவியங்களின் களங்களாக அமைகின்றன. ஹோமரும் பெண்ணுக்காக நடக்கும் போரைத் தன் படைப்பின்வழி பாடியுள்ளார். இதில் இலியதம் காவியத்தின் கதாநாயகனாக விளங்கும் அக்கிலிஸ் எனும் வீரனின் கோபம் நூலிழையாக அமைகிறது.

ஹோமரின் இலியட், ஒடிஸி வெறும் கற்பனைப் பிரதிகளாக அறிஞர்கள் பார்க்கவில்லை. அப்படைப்புகளின் வழியாக ஹோமரின் கவித்திறன், கிரேக்கச் சமுதாயத்தின் பண்டைய நிலை, அரசியல் நெருக்கடி, கிரேக்கக் கடவுள்கள், அக்கடவுள்கள் மீது கிரேக்கர்கள் கொண்ட அதிநம்பிக்கை, அச்சம், பெண்ணாசை, அடிமை வணிகம், பெண்ணடிமைத்தனம், நாடு பிடிக்கும் ஆசை, முடிவற்ற போர், அதிகாரத்தைக் கைப்பற்ற மேற்கொண்ட சூழ்ச்சிகள், கொலைகள் என இவை அனைத்தும் நிரம்பிய ஒரு கிரேக்கம் முழுமையாகப் பதிவு செய்யப்பட்டிருப்பதை இப்படைப்புகளைப் படிப்போர் எவரும் உணருவர். உலகின் தொன்மை வாய்ந்த முதல் இதிகாசங்களைத் தமிழில் மொழிபெயர்த்த மொழிபெயர்ப்பாளர்கள் அனைவரும் பாராட்டுக்குரியவர்கள்.. அ. சினிவாசராகவன், ஏ. சிங்காரவேலு, நாகூர் ரூமி ஆகியோரின் இலியட் காவியத்தின் மொழிபெயர்ப்பு குறித்து தனித்தனியே குறிப்பிட்டு அதன் சிறப்பை மதிப்பீடு செய்யலாம்.

***

தமிழ் மொழிபெயர்ப்புலகில் குறிப்பிடத்தக்க பெரும்பணியாற்றிய பேரறிஞர் மா.ரா. ஜம்புநாதன் (1896 - 1974). தந்தை ராமசுவாமி. ரிக், யஜுர், சாம, அதர்வண வேத நூல்களைச் சமஸ்கிருதத்திலிருந்து தமிழுக்கு அளித்த அறிஞர். திருச்சி மாவட்டம் மணக்கால் கிராமத்தில் பிறந்தவர் ஜம்புநாதன். சமஸ்கிருதத்திலிருந்து தமிழில் அதிகமான மொழிபெயர்ப்புகளைச் செய்த பெருமைக்குரியவர்.




வடமொழி வேத உபநிடதங்கள் தமிழில் அறியும் வகையில்லாதிருந்த நெடுங்காலத் தேவையை நிறைவேற்றிய முதல் அறிஞர், தமிழ், வடமொழி, இந்தி, ஆங்கில

மொழிகளில் வல்லமை பெற்றவர். 20 அரும்பெரும் நூல்களை அளித்தவர்.

வேத சந்திகை, கடோபநிடதம், திருமூர்த்தி உண்மை, சீனவேதம் (கன்பூஷியஸ்) மாஜினி வாழ்க்கை, சுவாமி தயானந்தர், சுதாரதம், உபநிடதக் கதைகள், யோகாசனம் என்பனவாகும். பிற வடமொழியின் செல்வங்களை வண்டமிழுக்குக் கொணர்ந்த வள்ளல். அரசு ஆற்றவேண்டிய பணியைத் தனியொருவராக ஆற்றியவர். "ஒவ்வொரு இந்தியன் உள்ளத்தும் இல்லத்தும் வேதம் விளங்க வேண்டுமாயின் வேதமாம் சூரியன் இந்திய மொழிகளனைத்திலும் எழ வேண்டும்" என்ற நோக்கில் சாம யஜுர் அதர்வண வேதங்களைத் திருப்பனந்தாள் தருமை ஆதின உதவியுடன் வெளியிட்டார். 30 ஆண்டுகள் முனைந்த உழைப்பால் ரிக் வேதத்தைப் பெயர்த்தார். வெளிவருமுன் 78ஆம் வயதில் மறைந்தார். (23.08.1896 - 18.12.1974). ஒரு தமிழர் வடமொழி விற்பன்னராக விளங்கி வியத்தகு தொண்டாற்றி யுள்ளது நன்றியுடன் நினைக்கத்தக்கது. வாழ்வு முழுவதும் இந்தியப் பண்பாட்டைப் பரப்புவதில் கழித்தவர்.

வேதம் என்றால் அறியப்படுவது என்பது பிராமணர்கள் மட்டும் அறியப்படுவதாகிவிட்டது. பிற சாதியினர் அறிய முயலக் கூடாதது, படிக்கக்கூடாதது எனவும் புனிதம், மறை என்ற பிரச்சாரம் செய்யப்பட்டது. வேதப் பாடல்களைப் படிக்க பெண்களுக்கு உரிமையில்லை. சமயம் சார்ந்து மிக உயர்வாக, முதல் மேல்தளத்தில் உள்ள வர்க்கத்தினருக்கு உரிய இந்த வேதங்களைப் பிற மொழிகளில் மொழிபெயர்த்தல் கூடாது என்ற கட்டுக்கோப்பை, ஆங்கில மொழியில் 19ஆம் நூற்றாண்டில் மொழிபெயர்த்த பல அறிஞர்கள் தகர்த்துள்ளனர். இவர் சாமவேத மொழிபெயர்ப்பின் முன்னுரையில் ஒரு வேண்டுகோளை விடுத்துள்ளார். தமிழ்நாட்டில் உள்ள குறிப்பாக திராவிடர்களை, ஆதித்திராவிடர்களைச் சாமவேத துதிகளை அறிந்து கொள்ளுமாறு குறிப்பிடுகிறார்.

"மதுரை, ஆடுதுறை, சிரீரங்கம், திருவாதி, மாயவரம், திருவோடகம், காரைக்குடி, காளையார் கோவில், திருவனந்தபுரம், திருவானைக்காவல் முதலிய இடங்களிலுள்ள சாமவேத பாடசாலை அதிகாரிகளே! மாணவர்களே! ஆச்சாரியர்களே! நீங்கள் இனி தமிழ் உரையுடன் சாமவேதத்தை அறிய முயல் வேண்டும். இல்லையேல் உங்களை சீவனற்ற கிராமபோன் ரிக்கார்டுகள் என இளங்காளைகள் கூறுவார்கள். சாம புரோகிதர்களே! சாம பிராமணர்களே! சாமனை அறிந்து தமிழ் மொழியில் சம்ஸ்காரங்களைச் செய்வது உங்கள் முதற்கடமையாகும். தமிழ்நாட்டிலுள்ள இந்துக்களே! திராவிடர்களே!! ஆதித்திராவிடர்களே!!! சாதாரண மனிதர்களால் செய்யப்பட்ட புராண இதிகாசத் துதிகளை எல்லாம் நீக்கி சாமவேதத் துதிகளைச் செய்து சர்வேசன் ஆசீர்வாதத்தை அடையவும், சகத்திலுள்ள எல்லா மக்களுக்கும் இச்சாமத்தை அளித்து எங்கும் வேத கோஷம் செய்யவும்." பிற மக்கள் வேதம் படிக்கக் கூடாது என்ற பிராமண விதியை உடைத்தெறிந்து தன்னளவில் ஒரு எதிர் நடவடிக்கையில் ஈடுபட்டுள்ளார் ஜம்புநாதன். 2004ஆம் ஆண்டில் அலைகள் வெளியீட்டகம் மீண்டும் இவருடைய மொழிபெயர்ப்புகளைத் தரமான பதிப்பாக 7 தொகுதிகளாக வெளியிட்டு மரா. ஜம்புநாதனின் அரும்பணியை உலகுக்குத் தெரிவித்ததுடன் இதை வேறு பல அணுகுமுறைகளில் தமிழர்கள் படித்துணர வாய்ப்பும் வழங்கியுள்ளது.

"நீண்ட காலம் வரை வேதங்களை வர்ண அடிப்படையில் பெரும்பான்மையினராக உள்ள சூத்திரர்கள் என்ற உழைப்பாளர்கள் படிக்கக்

> "இந்திய சமூக அமைப்பைப் பற்றிய விவாதங்கள் கூர்மை அடைந்துள்ள சூழலில், வேதக் கருத்துக்களை ஆதரித்தும் எதிர்த்தும், நடைபெறும் விவாதங்களில் சராசரி தமிழ் வாசகன் ஏன், அறிவு படைத்த ஆர்வமுள்ள சிலரும் கையறுநிலையில் வைக்கப்பட்டுள்ளனர் என்பதே உண்மையாகும்."

கூடாதவை என்று விதி செய்யப்பட்டு மறைக்கப்பட்டு வந்த வரலாறும் இருக்கிறது"

"இந்திய சமூக அமைப்பைப் பற்றிய விவாதங்கள் கூர்மை அடைந்துள்ள சூழலில், வேதக் கருத்துக்களை ஆதரித்தும் எதிர்த்தும் நடைபெறும் விவாதங்களில் சராசரி தமிழ் வாசகன் ஏன், அறிவு படைத்த ஆர்வமுள்ள சிலரும் கையறுநிலையில் வைக்கப்பட்டுள்ளனர் என்பதே உண்மையாகும்."

"இந்த இடைவெளியை நிறைவு செய்ய சமஸ்கிருதத்தின் சொத்தாக இறைவனிடமிருந்து நேரடியாக பெறப்பட்ட அறிவுக் களஞ்சியம் எனப் போற்றப்படும் வேதங்களை தமிழில் வெளிவரச் செய்துள்ள பெருமைக்குரியவர் ஜம்புநாதன்." எனும் அலைகள் பதிப்பகத்தின் பதிப்புரை இதன் முக்கியத்துவத்தை எடுத்துக்காட்டியுள்ளது.

வேதங்களை அவரவர் வாசிப்பில் பல்வேறு கருத்துகளைச் செய்திகளை அறிவதற்குத் துணையாகத் தம் வாழ்நாள் பணியாக இவ்வேத மொழிபெயர்ப்புகளைச் செய்துள்ளார். அவருடைய மறைவுக்குப் பிறகு வெளிவந்த ரிக் வேத மொழிபெயர்ப்பு முன்னுரையில் அவருடைய துணைவியார் திருமதி சாந்தி பி. ஜம்புநாதன்

அவர் தம் வாழ்நாளை வேதங்களையும், உபநிஷத்துகளையும் தமிழில் மொழிபெயர்க்கும் பணிக்காகவே அர்ப்பணித்துக் கொண்டார். 1932 இல் உபநிஷத் கதைகளையும், கடோபநிஷத்தையும், 1933இல் யஜுர் வேத சதபத பிராமணக் கதைகளையும், வேத சந்திரிகை என்னும் நூலை 1934இலும், நான்கு மறைகளில் மூன்றான சாமவேதத்தை, 1935இலும் யஜுர் வேதத்தை 1938 இலும் அதர்வண வேதத்தை 1940ஆம் ஆண்டிலும் இந்நூல்கள் அனைத்தையும் அரிய மிகப்பெரும் முயற்சியுடன் எளிய தமிழில் மொழிபெயர்த்து வெளியிட்டு வேதமுதைப் பொழிந்தார்.

இதன்பிறகு வேதங்களிலேயே மிகப் பெரியதான ருக்வேத சம்ஹிதையின் தமிழ் மொழிபெயர்ப்பை அவரது முப்பது ஆண்டுகளின் மிகக் கடுமையான உழைப்பின் பயனாக முழுமை பெறச் செய்து, உடலில் உயிருள்ளவரை உலகிற்குச் சிறந்த அரிய உத்தமத் தமிழ்ப் பணியாற்றியுள்ளார். 18.12.1974 அன்று அவர் மறைந்த பொழுது அவருடைய ருக்வேத தமிழ் மொழிபெயர்ப்பு சுமார் 6,000 பக்கங்களுடன் முழுமை பெற்ற அரிய கையெழுத்துப் பிரதியினை விட்டுச் சென்றார்".

ஜம்புநாதன் தம் வாழ்நாளை வேதங்களையும், உபநிஷத்துகளையும் தமிழில் மொழிபெயர்க்கும் பணிக்காகவே அர்ப்பணித்துக் கொண்டார். 1932இல் உபநிஷத் கதைகளையும், கடோபநிஷத்தையும், 1933இல் யஜுர் வேத சதபத பிராமணக் கதைகளையும், வேத சந்திரிகை என்னும் நூலை 1934இலும், நான்கு மறைகளில் மூன்றான சாமவேதத்தை, 1935இலும் யஜுர் வேதத்தை 1938இலும் அதர்வண வேதத்தை 1940ஆம் ஆண்டிலும் இந்நூல்கள் அனைத்தையும் அரிய மிகப்பெரும் முயற்சியுடன் எளிய தமிழில் மொழிபெயர்த்து வெளியிட்டு வேதமுதைப் பொழிந்தார்

குறிப்பிட்டுள்ள செய்திகள் அறிஞர் ஜம்புநாதன் அவர்களின் பேருழைப்பைக் காட்டுவதாக உள்ளது.

"இலக்கியம் அவரது முக்கிய ஈடுபாடு, வேதங்களைத் தாய்மொழியில் மொழிபெயர்த்து, வெளியிடுவதன் மூலம் ஒவ்வொருவரும் படித்து, அதன் உண்மைகளை நன்கு புரிந்து கொண்டு போற்றி, அதனைப் பின்பற்றி வாழ்வில் பயன்பெற வேண்டும் என்ற உயர்ந்த இலட்சியமே அவரது வாழ்க்கையின் குறிக்கோளாக இருந்தது.

அறிஞர் ஜம்புநாதன் தீண்டாமையை ஒழிக்க தன்னால் இயன்ற முயற்சிகளையெல்லாம் மேற்கொண்டுள்ளார். வடமொழி, ஹிந்தி, ஆங்கில மொழிகளில் பெரும்புலமை பெற்றிருந்த போதிலும் தாய்மொழியான தமிழை மிகவும் நேசித்தார். அதன் விளைவே இம்மொழி பெயர்ப்புகளாகும். தனது வாழ்நாளில் நீண்ட காலம் மும்பையில் வாழ்ந்தார். அங்கு தாழ்த்தப்பட்ட தமிழ் மக்களுக்காக முதல் 'முனிசிபல் தமிழ்ப் பள்ளியைத் தொடங்கினார். வேதம் எல்லோருக்கும் பொதுவானது அவை குறிப்பாக தாழ்த்தப்பட்டோருக்குச் சேர வேண்டும் என்ற

அவாவினால் நான்கு வேதங்களை மொழிபெயர்த்த துடன் 'யஜுர் வேத சத்பத ப்ரஹ்மணம்' என்ற அங்கத்தின் தமிழ் மொழிபெயர்ப்பு நூலை 'ஹரிஜனங்களின் பாதகமலங்களுக்கு' சமர்ப்பித்திருக்கிறார். தமிழில் 16 நூல்களையும் ஆங்கிலத்தில் 3 நூல்களையும் வழங்கியுள்ளார். தாமே ஒரு நிறுவனமாக இருந்து செயல் பட்டுள்ளார்.

"ஹரிஜனங்களே, உங்களுக்கு நமஸ்காரம். நாங்கள் தலைமுறை தலைமுறையாகச் செய்த பாவங்களுக்கு பச்சாதாபப்பட்டு பிராயஸ்சித்தம் செய்து கொள்ள விரும்புகிறோம் என வாக்குறுதி செய்து இவ்வேத நூலை உங்கள் பாதகமலங்களில் சமர்ப்பிக் கிறேன். நீங்கள் தான் இவ்வேதங் களைப் படித்து பாரத நாடு மாத்திரமில்லை, பூலோக முழுவதும் பிரச்சாரம் செய்து மறுபடியும் தர்மஸ்தாபனம் செய்யவேண்டும்... இந்நாடு பூலோக முழுவதும் புனித வேதம் விரிந்து தலையோங்க நீங்களே அதற்கேற்ற கங்கையைக் கொண்டு வர முடியுமென இதை நான் உங்களுக்கு அர்ப்பணம் செய்கிறேன்" என்று எழுதியுள்ளமை அனைவரையும் வியப்பில் ஆழ்த்தக்கூடியது. அவருடைய வாழ்நாள் சாதனையான வேத மொழிபெயர்ப்புப்பணி பெரும் பாராட்டுக்குரியதாகும்.

***

தமிழ்நாடு அரசாங்கம் சில ஆண்டுகளுக்கு முன்னர்க் கல்லூரித் தமிழ்க் குழுவொன்றை நிறுவி அதன் மூலம் கல்லூரி மாணவர்கட்குத் தேவையான பல தமிழ் நூல்களை வெளியிட்டு வந்தது. தமிழை ஆட்சி மொழியாக அரசாங்கம் ஏற்று கொண்ட பிறகு, தமிழ் மொழிக்கு ஆக்கம் தேடுகின்ற முறையில் இன்னும் மகத்தான அளவில் தமிழில் நூல்கள் வெளிவரவேண்டும் என்ற கருத்தில் தமிழ் வெளியீட்டுக் கழகம் 1962இல் நிறுவப் பெற்றது.

'உலகின் பிறபகுதிகளிலுள்ள மக்களின் அறிவு வளர்ச்சிக்குக் குறையாமல் தமிழ் மக்களும் அறிவு வளர்ச்சி பெற வேண்டுமானால், பிற மொழியிலுள்ள நூல்களைப் படிக்க முடியாதவர்கள் தமிழின் மூலமே எல்லாவற்றையும் கற்கக்கூடிய சூழ்நிலை ஏற்பட வேண்டும். இந்த எண்ணத்தின் அடிப்படையிலேயே தமிழ் வெளியீட்டுக் கழகம் கல்லூரி மாணவர்களுக்குரிய நூல்களை வெளியிடுவதுடன், பொது மக்களுக்கும் பயன்படுகின்ற முறையில் வரலாறு, அரசியல், உளவியல், பொருளாதாரம், புவியியல், விஞ்ஞானக் கலைகள் ஆகிய பல துறைகளிலும் பல்வேறு நூல்களை வெளியிட முனைந்துள்ளது' என 1964ஆம் ஆண்டு அப்போதைய கல்வி முதலமைச்சர் திரு. எம். பக்தவத்சலம் தமிழ் வெளியீட்டுக் கழகத்தின் நோக்கத்தையும் சிறப்புகளையும் சுட்டிக்காட்டியுள்ளார். தமிழ் வெளியீட்டுக் கழகம் அதுவரை ஆங்கிலத்தில் மட்டும் படித்து அறிந்துக் கொள்ளக்கூடிய துறைசார்ந்த நூல்களை மிகச் சிறந்த நூல்களைத் தேர்வுசெய்து அவற்றை எளிய தமிழ்நடையில் எழுதியும் மொழிபெயர்த்தும் சுமார் ஆயிரத் துக்கும் மேற்பட்ட நூல்களைத் தமிழில் வழங்கி அரும்பணி ஆற்றியுள்ளது.

இந்நிறுவனம் இச்சிறப்பான பணியை மேற்கொள்ள பல்துறை அறிஞர்கள், துறைசார்ந்த ஆசிரியர்கள், பேராசிரியர்கள் ஆகியோரின் பேருழைப்பு வழங்கியுள்ளனர். மொழிபெயர்ப்பாளர்கள் யார் எவர் என்று துறை சார்ந்தோரே அறிந்திருப்பது அரிது.

தகுந்த ஆசிரியர்களைக் கொண்டு இப்பணியை நிறைவாகச் செய்து வந்துள்ளது. சான்றாகக் குழந்தைகளின் உடல், மனம், உளவியல் கல்வியைப் பற்றி ஆய்வு செய்த டாக்டர் மரியா மான்டிசோரி. அவர் பெயரால் மழலை மான்டிசோரி கல்வி முறை என்று தனியாக உருவாகி பெரும் வரவேற்பைப் பெற்றது. மான்டிசோரி அம்மையார் இத்தாலி நாட்டைச் சேர்ந்தவர். ஆசிரியர் பயிற்சியை நடத்தி வைக்கச் சென்னைக்கு வந்தவர். இரண்டாம் உலகப் போர் நடந்த பொழுது எதிரி நாட்டைச் சேர்ந்தவர் என்ற காரணத்தால் கொடைக்கானல் எல்லையைக் கடக்கக் கூடாது'

என்ற கட்டுப்பாட்டுடன் அங்கேயே இருந்து ஆசிரியர் பயிற்சியை நடத்தி வந்தார். இந்தியா விடுதலை பெற்ற பிறகு முதற்பயிற்சியை அலகாபாத்தில் நடத்தி வந்தார்.

மரியா மான்டிசோரி (Maria Montessori) எழுதிய Absorbent Mind எனும் நூலில் குழந்தையின் தனிப்பட்ட மனச் சக்திகளை, வளர்ச்சி நிலைகளை, அறிவியல் முறையில் குழந்தைகளின் பேச்சு, கல்வி கற்றல் ஆகியவற்றை விளக்கமாக எழுதியுள்ளார். குழந்தைகளுடன் நெருங்கிப் பழகி, கவனித்து, இதன் மூலம் தாம் கண்டறிந்ததை இந்நூலின் வழியாக உலகிற்கு வழிகாட்டியுள்ளார். 'மான்டிசோரி முறையைச் சேர்ந்த முக்கியமான கருத்துகளுள் ஒன்று 'சூழ்நிலையைத் தயாரித்தல்' ஆகும். குழந்தைப் பள்ளிக் கூடத்தில் சேருவதற்கு மிக முன்னரே 'பிறப்பிலிருந்து கற்பித்தல்' என்ற கொள்கைக்கு இக்கருத்து திறவு கோலாகிறது. தொடக்கத்திலிருந்து மனிதத் தனியனைப் பண்படுத்துவதற்கும் இது திறவு கோல் ஆகிறது. பல நாட்டுக் குழந்தைகளை நேரடியாகக் கவனித்து அவற்றுடன் பழகிக் குழந்தைத் தன்மையை மலரச் செய்து, மனச் சக்தியை தெய்வீகச் சிறப்படையச் செய்தவர் விஞ்ஞானமுறை அடிப்படையில் இக்கொள்கையை வழங்குகிறார்'' என்று முதற்பதிப்பின் முன்னுரையில் குறிப்பிடப் பட்டுள்ளது. சென்னை, தியோசிபிகல் சொசைட்டி மூலம் இந்நூல் வெளியிடப்பட்டுள்ளது. இந்நூலை சி.ந. வைத்தீஸ்வரன் தமிழில் மொழிபெயர்த்து வழங்கியுள்ளார். 1964ஆம் ஆண்டு இந்நூல் தமிழ் வெளியீட்டுக் கழகம் மூலம் வெளியிடப்பட்டுள்ளது. மொழிபெயர்ப்பாளர் சி.ந. வைத்தீஸ்வரன், டாக்டர் மரியா மான்டிசோரி அம்மையாருடன் துணைஆசிரியராகப் பணியாற்றிய சிறப்புப் பெற்றவர். ஆகையால் அம்மையாரின் குழந்தை உலகத்திற்கு அவர் அளித்துள்ள பெருங் கொடையாகத் திகழும் இந்நூலைத் தமிழில் (390 பக்க அளவில்) மொழிபெயர்த்துள்ளார். இவர் தமது நன்றியுரையில்,

'நான் காலஞ்சென்ற டாக்டர் மரியா மான்டிசோரி அம்மையாருடன் அடையாறு, கொடைக்கானல், பிலானி ஆகிய இடங்களில் துணை ஆசிரியனாகத் தொண்டாற்றும் பேறு பெற்றேன். அன்று முதல் அவர்களின் நூல்களை நம்மவருக்கு அறிமுகப்படுத்தி என் நன்றியைச் செலுத்த வேண்டுமென்ற பேரவாக் கொண்டிருந்தேன்.' 'குழந்தையின் ரகசியம்' 'புத்துலகுக்கான கல்வி' என்ற இரு மொழிபெயர்ப்புகளும் வெளிவந்தன.

'உட்கவர் மனம்' இன்று கலைச் சொற்களுடன் தமிழ் வெளியீட்டுக் கழகத்தின் 43வது மலராய்க் காட்சி அளிக்கிறது. இது தமிழ் வெளியீட்டுக் கழகத்தார் அம்மையாருக்குக் காட்டும் பாராட்டென்றும் குழந்தை உலகத்துக்கே செய்யும் பெருந்தொண்டென்றும் கருதுகின்றேன். குறுகிய காலத்துக்குள் இதைச் சிறப்பாக வெளியிட்ட கழகத்துக்கு என் பாராட்டுகள் உரியன' என தனது நன்றியுரையில் மொழிபெயர்ப்பாளர் சி.ந. வைத்தீஸ்வரன் தெரிவித்துள்ளார்.

சான்றுக்கு காட்டப்பட்ட இந்நூலைப் போன்று ஏராளமான நூல்கள் பல மொழிபெயர்ப்பாளர்களின் பேருழைப்பால் பல நூறு நூல்களைத் தமிழ் வெளியீட்டுக் கழகம் மூலமாக, பின்னாளில் தமிழ் நாட்டுப் பாடநூல் நிறுவன வெளியீடாக வெளிவந்துள்ளன. எனினும் இந்த உழைப்பை நல்கிய அறிஞர்களின் பெயர்கள் எங்கேயும், எப்போதும் குறிக்கப்படாமல், அறியப்படாமல், மறைந்து போய்விடுகின்ற பெயர்களாக உள்ளன.

'இளையோர் உளவியல்' (Psychlogy of Adolo-scence) எனும் தலைப்பில் கார்ல் சி. காரிசன் (Karl C.Garrison) எழுதியுள்ள நூலை தி.இரா. அரங்கராசன் அவர்களின் தமிழ் மொழிபெயர்ப்பில் இரண்டு தொகுதிகளாக 1964, 1965ஆம் ஆண்டுகளில் 801 பக்கங்களில் வெளியிடப்பட்டுள்ளது. 'குழந்தை உளவியல்' (Child Psychology) எனும் தலைப்பில் ஆர்தர் டி ஜெர்சில்டு (Arthur T.Jersild) எழுதியுள்ள நூலும் தி.இரா. அரங்கராசன் மொழிபெயர்ப்பில் இரண்டு தொகுதிகளாக 1964ஆம் ஆண்டில் வெளிவந்துள்ளது. துறை சார்ந்த அறிஞர்கள் இதைப் போன்று குறிப்பிட்ட துறைகளுக்கு வேண்டிய நூல்களை அயல்நாடுகளிலிருந்து பெற்று அதை மொழிபெயர்த்து தமிழ் வெளியீட்டுக் கழகத்தின் வழியாக வெளியிடப்பட்டன. கல்லூரிகளில் தமிழ்வழிக் கல்வி பயிலும் மாணவர்களுக்கு இவ்வரிய நூல்கள் பெரிதும் பயனுடையவையாகும். கே.ஏ. நீலகண்ட சாஸ்திரி எழுதியுள்ள தென்னிந்திய வரலாறு (A History of South India) முரா. பெருமாள் முதலியார் அவர்களின்

மொழிபெயர்ப்பில் இரு தொகுதிகளாக வெளியிட்டது. வரலாற்றுத் துறை சார்ந்த அறிஞர்களுக்கும், மாணவர்களுக்கும் என்றும் பயன்மிக்கதாகும். அமெரிக்க ஐக்கிய நாட்டின் வரலாறு, இங்கிலாந்து அரசியலமைப்பு வரலாறு, ரோமாபுரி வரலாறு, பிரிட்டன் வரலாறு எனப் பல நாடுகளின் வரலாறு, அரசியல், பொருளாதாரம் எனப் பலவற்றை அறிந்து கொள்ள மூலாதாரமான நூல்களை மொழிபெயர்த்து வழங்கியுள்ளனர். இம்மொழிபெயர்ப்புகளின் வழியாக ஒவ்வொரு நூலின் இறுதிப் பகுதியிலும் கலைச்சொற்கள் பட்டியலை வழங்கி சொல்வளத்தைப் பெருக்கி யுள்ளனர். பொறியியலில் தொழில்நுட்பவியல், புவியியல் கலைச் சொற்கள், புள்ளியியல் கலைச் சொற்கள், உளவியல் கலைச்சொற்கள் எனத் தனித் தனி நூல்களாகவும் தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவன வழியாக வெளியிடப்பட்டுள்ளது குறிப்பிடத்தக்கதாகும். அறிஞர்கள், கல்லூரி ஆசிரியர்கள் பெரும் உழைப்பை நல்கியுள்ளனர். அவர்கள் என்றும் பாராட்டிற்குரியவர்கள்.

தமிழ்வெளியீட்டுக் கழகத்தின் மொழிபெயர்ப்புப் பணியும், தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனத்தின் மொழிபெயர்ப்புப் பணியும் தமிழ்வளர்ச்சிப் பாதையில் குறிப்பிடத்தக்க திருப்புமுனையாகும். இவை மீண்டும் மீண்டும் கவனிக்கப்படக் கூடியவையாகும்.

1. வானிலை அறிவியல், 2. வானியல், 1 2, 3. காலநிலையியல், 4. வளியியலுக்கு ஓர் அறிமுகம், 5. புவி அமைப்பு இயல், 6. உயர்நிலை நுண்ணினப் பொருளாதார இயல், 7. பொறியியலியல் வேதியியல், 8. பொதுநிலைப் பொறியியல், 9 புகுமுக வகுப்பு மனையியற் கலை, 10. உட்கனற் பொறி ஓர் அறிமுகம், 11. பொறியியற் கணக்குப் பகுதி 1,2, 12. திரிகோண கணிதம், 13. பௌதிகம் துணைப்பாடம், 14. வணிகப் புள்ளியியல், 15. முற்கால வடிவ கணிதம், 16. இந்தியாவின் தண்ணீர் வாழ் ஆல்காக்கள், 17. திட நிலை, 18. செய்முறைக் கரிம வேதியியல், 19. ஊற்று நீர்ப் பொறியியல் அடிப்படைக் கோட்பாடுகள், 20. கரிமவேதியல், 1,2, 21. அளவையியல், 22. கனிம வேதியியல், 23. பொது பௌதீகம், 24. அளவறி பகுப்பாய்வு, 25. உயிர் இயற்பியல் என இன்னும் நீண்ட பட்டியலில் குறிப்பிட வேண்டியுள்ளது. இவை தமிழில் இடம்பெறச் செய்த ஆசிரியர்களின் பணி மகத்தானதாகும்; சிறந்த தமிழ்த் தொண்டாகும்; அத்தொண்டும் பேருழைப்பும் நினைக்கப்பட வேண்டியவை; அத்துறை சார்ந்த இளந்தலைமுறை கல்வியாளர்கள் அறிய வேண்டியவை; போற்றப்பட வேண்டியவையாகும்.

**துணைநூற்பட்டியல்**

உட்கவர் மனம் (Absorbent Mind), மரியா மான்டிசோரி, தமி.சி.ந.வைத்தீஸ்வரன், தமிழ்வெளியீட்டுக் கழகம், தமிழ்நாடு அரசாங்கம்.



# தமிழில் சித்திரக்கதைகள்: ஒரு வரலாற்றுக்கான குறிப்புகள்

சு. பிரபாவதி

அச்சு ஊடகத்தின் வருகையினால் பரவலான வாசிப்பு மரபு உருவாகியது. இதனால் வாசகரின் வாசிப்புக்குத் தீனிபோடும் விதமாக பத்திரிகைகள், இதழ்கள், நூல்கள் என அச்சுஊடகம் தன் எல்லையை விரிவுபடுத்திக்கொண்டது. இதன் விளைவே இதழியல் எனும் புலம். பொதுவாக சித்திரக்கதைகள் இதழியலின் ஒரு பகுதியாக விளங்குகின்றன.

19ஆம் நூற்றாண்டின் இறுதியில் கார்ட்டூன்கள் எனப்படும் மிகைப்படுத்தப்பட்ட ஓவிய மரபானது பத்திரிகைகளுக்குள் நுழைந்தது. அது அரசியல், சமூக நிகழ்வுகளை விமர்சிக்கவும், விளக்கவும் பயன்படுத்தப்பட்ட கருத்துப்படங்களாகும். அப்போதைய அரசியல் சூழல்கள் ஓவியங்கள் மூலமாக விமர்சிக்கப்பட்டன. இதனை இந்தியா, சுதந்திரச்சங்கு போன்ற பத்திரிகைகளில் வெளியான கருத்துப்படங்கள் மூலம் அறியலாம். இதனைத் தொடர்ந்து வெறும் வார்த்தைகளால் சொல்லப்படும் நகைச்சுவைத் துணுக்குகள் தொடர் கார்ட்டூன் ஓவியங்கள் மூலம் விளக்கப்பட்டன. இவை சித்திரக்கதை வடிவமைப்பிலேயே காணப்பட்டன. எனினும் ஒரு முழுநீள சித்திரக்கதை மரபினைத் தமிழில் ஏறக்குறைய 1945க்குப் பிறகுதான் காணமுடிகிறது. இக்காலகட்டத்தில் இந்த வடிவம் பெரும் வரவேற்பினைப் பெற்றிருந்தது என்பதை அப்போது வெளியான சில விளம்பரங்கள் விளக்குகின்றன. பற்பசை (படம்1), பெருங்காயம் எனப் பல பொருட்களுக்கான விளம்பரங்களும் இவ்வடிவில் வெளிவந்தன. இங்கு வாசிப்பு என்பது படித்தல் என்பதுடன் பார்த்தல் என்பதையும் தன்னுடைய தாக்கிக்கொள்கிறது. இவற்றில் படங்கள் மக்களை எளிதில் தொடர்பு கொள்ளும் ஊடகமாகப் பயன்படுத்தப்பட்டன. எனவே நாம் சித்திரக்கதை வரலாற்றினைக் கருத்துப்படங்கள் மற்றும் நகைச்சுவைத் துணுக்குகளின் தொடர்ச்சியாகவே பார்க்கவேண்டியுள்ளது.

சித்திரக்கதைகளுக்கு அடிப்படையானது தொடர்ச்சித்திரம். தமிழில் இந்த தொடர்ச்சித்திர மரபு என்பது முன்பு குறிப்பிட்டது போன்று நகைச்சுவைத் துணுக்குகளுக்கும், விளம்பரங்களுக்குக்கும் மட்டுமல்லாமல், செய்திகளைச் சொல்லவும் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனைக் கருத்துப்படங்களின் நீட்சியாகக் காணலாம். 1948 இலிருந்து குமுதத்தில் செய்தியும் சித்திரமும் என்னும் பகுதி இடம்பெற்றுள்ளது. இதில் மூன்று பக்கங்களுக்குச் செய்திகளைத் தொடர்ச் சித்திரங்கள் மூலமாக வெளியிட்டுள்ளனர். கல்கி இதழிலும் அரசியல் நிகழ்ச்சிகள் தொடர்ச் சித்திரங்களாக்கப் பட்டுள்ளன. ஆனந்த விகடன், கல்கி, குமுதம் போன்ற இதழ்களில் இம்முயற்சியைக் காணமுடிகிறது. அதேபோல், காந்தி சரித்திரப்படங்கள் (சந்தனு ஆனந்தவிகடன் 1933) (படம்2), பிரஸிடென்ட் ரூஸ்வெல்டின் வாழ்க்கைச் சித்திரவரலாறு (கல்கி, ஓவியர்உம்மன் 1942) போன்ற கதைகள் தொடர்ச் சித்திரங்களாக (தொடர் சட்டகங்களுக்குள் கதை சொல்லுதல்) சொல்லப்பட்டுள்ளன. இதுபோல் பல தலைவர்களுடைய வாழ்க்கை வரலாறுகள் இதழ்களில் தொடர்ச் சித்திரங்களால் வடிவமைக்கப்பட்டுள்ளன. மேற்குறிப்பிட்ட முயற்சிகளுக்குப் பின்னரே தமிழில் சித்திரக்கதை என்னும் ஒரு தனிமரபு வருகிறது.

இந்தக் காலகட்டத்தில் உலக நாடுகளில் சித்திரக்கதை என்பது ஒரு பெருவழக்காக எல்லா இடங்களிலும் வெளிவந்துகொண்டிருந்தது. 1920-30களில் சித்திரக்கதை, இதழ்கள் என்ற எல்லையைத் தாண்டி தனி நூல்களாக வெளிவரத்தொடங்கின. சித்திரக்கதைகள் குறிப்பிட்ட காலம் வரை சாகசநாயகர்கள், மாயாஜாலங்கள், நகைச்சுவைத் துணுக்குகள் முதலியன கொண்ட கதைகளாகவே வெளிவந்தன. 1960க்குப் பிறகு தீவிரமான இறுக்கமான கதைகளைக் (பிற இலக்கிய வடிவங்கள் போல) கொண்டு வெளிவந்தன. இதுபோல் தமிழில்



புதுவை பல்கலைக்கழகத் தமிழ்த்துறையிலும் புதுவை பிரெஞ்சு ஆய்வு நிறுவனத்திலும் 'தமிழ்ச் சித்திரக் கதைகள் (1950-2000)' என்ற தலைப்பில் முனைவர் பட்ட ஆய்வினை மேற்கொண்டு வருகிறார்.

சித்திரக்கதை என்னும் ஒழுங்குபடுத்தப்பட்ட வடிவம் 1945க்குப் பிறகு வந்துள்ளது. குறிப்பாக இது இதழியலில் சிறுவர்களுக்கான ஒரு பகுதியாகவும் சிறுவர் இதழின் ஒரு பகுதியாகவும் வெளியிடப்பட்டது. எனினும் இவ்வடிவம் தமிழ்ச்சூழலில் எந்தவித வளர்ச்சி மாற்றங்களையும் அடையவில்லை. ஆரம்பகாலத்தில் எவ்வாறு வந்ததோ அதே போன்றே இன்றும் உள்ளது என்பது இதன் வரலாற்றில் முக்கியமான ஒன்றாகும். அதாவது தமிழ்ச்சூழலில் இவ்வடிவம் குறித்தான எந்தவிதப் பிரக்ஞையும் இல்லாமல், வியாபார நோக்கோடு மட்டுமே செயல்பட்டுள்ளனர் என்பதை இதன் வரலாறு நமக்குணர்த்துகிறது. ஏறக்குறைய 70 ஆண்டு கால வரலாற்றைக் கொண்ட இச்சித்திரக்கதைகளில் தமிழில் இன்றுவரை இதற்கென ஒரு முறையியல் தோன்றவில்லை என்பதே உண்மை. காரணம் தமிழில் வெளியான பெரும் பான்மையான கதைகள் மொழிபெயர்ப்புகளாகவே இருக்கின்றன. மேலைநாடுகளில் இருந்துவந்த கதைமாந்தர்களே தமிழ்ச் சித்திரக்கதை உலகிலும் கதாநாயகர்களாக உள்ளனர். தமிழ்ச் சித்திரக்கதை கதாநாயகர்களின் பெயர்கள் சிலவற்றைக் கூறுங்கள் என்று கேட்டவுடன் சித்திரக்கதை வாசகர்கள் வேதாளம், இரும்புக்கை மாயாவி, மாண்ட்ரேக், ப்ரூனோபிரேசில், டார்ஜான், மாடஸ்டி பிளைசி, ஜேம்ஸ்பாண்ட் 007, ப்ளு பெர்ரி, காரிகன், லக்கி லூக் போன்ற மேலைநாட்டுக் கதாநாயகர்களின் பெயர்களைக் குறிப்பிடுகின்றனர். இதன் மூலம் தமிழ்ச்சூழலில் சித்திரக்கதை நாயகன் என்று பரவலாகக் குறிப்பிடும் அளவிற்கு இவ்வடிவத்திற்கு முக்கியத்துவம் அளிக்கப்பெறவில்லை என்பதையும் அறியமுடிகிறது.



மேலும், சிலர் பிறமொழிக் கதாநாயகர்களின் பெயரை மட்டும் வைத்துக்கொண்டு, அதற்கேற்றார் போன்ற கதைகளை உருவாக்கி அதற்கான ஓவியங்களையும் இங்கேயே வரைந்து வெளியிட்டுள்ளனர். எ.கா. இரும்புக்கை மாயாவி என்ற பெயரில் தேசமலர் காமிக்ஸில் கதைகள் வெளிவந்துள்ளன. மேலைநாட்டு மரபை மட்டும் பிரதிபலித்துக்கொண்டிருந்த தமிழ்ச் சித்திரக்கதை உலகில் சில தனித்துவ முயற்சிகளும் மேற்கொள்ளப்பட்டன. இதில் மிகவும் குறிப்பிடத்தகுந்தவர் வாண்டுமாமா, கௌசிகன் என்று அழைக்கப்படும் வி. கிருஷ்ணமூர்த்தி என்பவர். இவர் தமிழ்ச் சித்திரக்கதை வரலாற்றில் தவிர்க்க முடியாத ஒரு நபர். சிறுவர் இலக்கிய மரபிலும் சித்திரக்கதை மரபிலும் குறிப்பிடத்தகுந்த படைப்புகளை உருவாக்கியவர். தமிழ்ச்சித்திரக்கதை நாயகர்களை உருவாக்கும் முயற்சியை மேற்கொண்டவர். அதனடிப்படையில், சமத்து சாரு, குஷிவாலி ஹரிஷ், பலே பாலு, சர்க்கஸ் சங்கர் போன்ற கதாபாத்திரங்களை உருவாக்கியவர். பெரும்பான்மை, சிறுவர் சிறுமியரே இவருடைய சித்திரக்கதை நாயகர்களாக இருந்தனர். மாயாஜாலம், மர்மம், துப்பறியும் கதைகள் போன்றவற்றை உருவாக்கினார். இந்தப் பின்புலத்தோடு தமிழ்ச்சித்திரக்கதை குறித்த வரலாற்றை அணுகவேண்டியுள்ளது. அதனடிப்படையில் தமிழ்ச்சித்திரக்கதை வரலாற்றுக்கான சில குறிப்புகளின் தொகுப்பே இக்கட்டுரை.

தமிழில் வெளியான முதல் சித்திரக்கதை எது என்பது குறித்து பல்வேறு கருத்து மாறுபாடுகள் நிலவுகின்றன. எனினும் இவ்வடிவம் தமிழில் 1945-50 காலப்பகுதிக்குள் வந்திருக்க வேண்டும். நமக்குக் கிடைக்கும் தரவுகளின் அடிப்படையில்

தமிழில் "சித்திரக்குள்ளன்" இதழ் தான் ஒரு கதையினைச் சித்திரக்கதையாக முதன்முதலில் வெளியிட்டது. இது 1949இல் சிறுவர்களின் சித்திரப்பத்திரிகை என்னும் வாசகத்துடன் வெளியானது. ஓவியர் சந்தனு என்பவரால் தொடங்கப்பட்ட இவ்விதழில் (1.5.1950) 'காட்டுச்சிறுவன் கண்ணன், வேதாள உலகத்தில் விச்சு' போன்ற சித்திரத்தொடர்கதைகள் வந்துள்ளன(படம்3). இதனைத்தொடர்ந்து, கலைமகள் வெளியீடான "கண்ணன்" சிறுவர் பத்திரிகையிலும் சித்திரக்கதைகள் வெளிவந்துள்ளன. இவ்விதழ் 1950களில் தொடங்கப்பட்டது. இதன் ஆசிரியர் கலைமகள் பத்திரிகைக் குழுமத்தில் ஒருவராய் இருந்த ஆர்.வி. என்றழைக்கப்படும் ஆர். வெங்கட்ராமன். இவர் பத்திரிகை ஆசிரியராக மட்டுமல்லாமல் பல கதைகளையும் எழுதியுள்ளார். ஆர்.வி. எழுதிய பல கதைகள் சித்திரக்கதைகளாக வெளிவந்துள்ளன. கண்ணன் இதழில் வெளியான முதல் சித்திரக்கதை "இரு சகோதரர்கள்" என்பதாகும் (படம்4). இதில் வெளியான பெரும்பான்மையான கதைகள் மாயாஜாலக் கதைகளாகவும், நீதிபோதனைக் கதைகளாகவும் இருந்தன. இதனைத் தொடர்ந்து 1956க்கு முன்வரை விளம்பரப் பலகைக்காகவும், நகைச்சுவைத் துணுக்குக்காகவும் சித்திரக்கதை வடிவத்தைப் பயன்படுத்தி வந்த ஆனந்தவிகடனில் 1956அக்டோபரில் ஒரு சித்திரக்கதையினை வெளியிட்டனர். அது ஓவியர் மாயா அவர்களின் கைவண்ணத்தில் வெளிவந்த ஜமீன்தார் மகன் என்பதாகும். (குறிப்பு: ஆனந்தவிகடனில் வெளியான இக்கதைதான் தமிழில் வெளியான முதல் சித்திரக்கதை என ஆனந்தவிகடனின் பொக்கிஷம் (17.2.2010) பகுதியில் வெளியிட்டிருந்தனர்) இதேபோல், கல்கி, குமுதம், கோகுலம் போன்ற இதழ்களும் சித்திரக்கதைகளை வெளியிட்டன. இவ்வாறு இதழ்களில் வெளிவரும் சித்திரக்கதைகள் பெரும்பான்மை தமிழில் உருவாக்கப்பட்டவை. தமிழ்ப்பண்பாடு சார் சித்திரக்கதை வரலாற்றை மீட்டெடுப்பதற்கு முதன்மை ஆதாரமாக விளங்குபவை இதழ்களில் வெளியான சித்திரக்கதைகளே.



இதனைத் தொடர்ந்து 1961இலிருந்து தினத்தந்தியில் கன்னித்தீவு, மாதவி என்னும் இரு கதைகள் அறிமுகமாகின. மாதவி என்னும் தொடர் முடிந்தபின் அது வெளியான இரண்டாம் பக்கத்தின் மேற்பகுதியில் கன்னித்தீவு கதை வெளிவந்துகொண்டிருக்கிறது. கன்னித்தீவு சித்திரக்கதையும் அது தினத்தந்தியில் வெளிவந்துகொண்டிருக்கும் வரலாறும் தனியாக ஆய்வு செய்யப்பட வேண்டியவை. செய்தித்தாள்களில் தினமலர் சில காலம் வேதாளர் கதைகளை வெளியிட்டது. அதேபோல் மாலை முரசும் 1995இலிருந்து ஏறக்குறைய மூன்று ஆண்டுகளாக வேதாளர் கதைகளை வெளியிட்டது. இது மேலைநாடுகளில் செய்தித்தாள்களில் வெளிவரும் சித்திரக்கதைகள் போன்று இங்கு செய்யப்பட்ட முயற்சி. எனினும் இம்முறைமை இங்கு வெற்றி பெறவில்லை. இதற்கு முக்கியக் காரணம் இங்கு புதுப்புது கதைகள் உருவாக்கப்படவில்லை என்பதுதான். இவற்றில் வெளியான கதைகளும் பெரும்பான்மை மொழிபெயர்ப்பு செய்யப் பட்டவையே.

இதுவரை தினசரிகளிலும் மாத வார இதழ்களிலும், சிறுவர் பகுதியாக வெளிவந்த சித்திரக்கதைகள், 1965இல் தனி இதழ்களில் வெளிவரத் தொடங்கின. மேலும் தமிழ்க் கதைகளை மட்டுமே கொண்டிருந்த சித்திரக்கதை மரபில் இக்கால கட்டத்தில் தான் பிறமொழிக் கதைகள் வெளிவரத்தொடங்கின. இதனை முதன்முதலில் வெளியிட்டது டைம்ஸ் ஆப் இந்தியா (மும்பை) என்ற நிறுவனம். இதிலிருந்து இந்திரஜால் காமிக்ஸ் (படம் 5) என்னும் பெயரில் முழுக்க முழுக்க சித்திரக் கதைகளை மட்டுமே கொண்ட வண்ண இதழை அறிமுகப்படுத்தினர். இக்காலத்தில் தான் வேதாளர், மாண்ட்ரேக் போன்ற கதாபாத்திரங்கள் தமிழில் அறிமுகமாகின (இக்கதை குமுதத்தில் முகமூடி என்ற பெயரில் கருப்பு வெள்ளையில் ஒவ்வொரு வாரமும் வெளியிடப்பட்டது). இதனைத் தொடர்ந்து இந்தியா புக் ஹவுஸ் நிறுவனம் 1967 இல் அமர்சித்ர கதா என்ற சித்திரக்கதை நூல்வரிசையை அறிமுகப்படுத்தியது. இதில் இந்திய புராண தொன்மக்கதைகள் கதைக்களமாக எடுக்கப்பட்டது. குறிப்பாக மகாபாரத ராமாயணக்கதைகள், அதன் கிளைக்கதைகள் போன்றவற்றைச் சித்திரக்கதைகளாகப் பல வண்ணங்களில் தமிழில் தொடராக வெளியிட்டனர். இதுவரை 116 நூல்கள் வெளிவந்துள்ளன. இந்நூல்வரிசை இன்று ஆங்கிலத்தில் மட்டும் வெளிவந்து கொண்டிருக்கின்றது. இந்நூல்களின் பழைய

தமிழ்ப் பதிப்புகள் கிழக்குப் பதிப்பகத்தில் தற்போது விற்பனை செய்யப்பட்டு வருகின்றன.

குமுதம் குழுமத்திலிருந்து 1967இல் மாலை மதி காமிக்ஸ் வெளிவந்தது. ஆரம்பத்தில் குமுதத்தில் தொடராக வெளியான சித்திரக்கதைகளைத் தொகுத்து வெளியிட்டனர். பின்னர், அமெரிக்க மற்றும் ஐரோப்பிய சித்திரக்கதைகளின் உரிமம் பெற்று அவற்றைத் தமிழில் மொழிபெயர்ப்பு செய்து வெளியிட்டனர். அதன் பின்னர் கிதிமி (Advertising Films of India) என்னும் நிறுவனத்துடன் ஒப்பந்தம் செய்து கொண்டு ஏறக்குறைய 26 சித்திரக்கதைகளை வெளியிட்டுள்ளனர். இவ்விதழில் ஆரம்பத்தில் மாதம் இருமுறையும் பின்னர் வாரம் ஒருமுறையும் என சித்திரக்கதைகள் வெளியிடப்பட்டன. இதில் இண்டேர்பால் ஜானி ஹஸார்ட், பிப் கிர்பி, பிலிப் காரிகன், கிஸ்கோ கிட் ஆகிய நால்வரின் கதைகளே பெரும்பான்மையாக வரும். இச்சித்திரக்கதை இதழ் வாசகரிடையே பெரும்பான்மையான வரவேற்பு இல்லாததால் மாலை மதி நாவலாக மாற்றப்பட்டது.



இக்காலகட்டத்தில் சித்திரக்கதைகள் மட்டுமல்லாமல் அவற்றை வெளியிட்ட சிறுவர் இதழ்களும் மொழிபெயர்ப்பு செய்யப்பட்டன. அவ்வகையில் 1965இல் இங்கிலாந்தில் இருந்துவெளிவந்து கொண்டிருந்தது 'falcon' என்னும் இதழ். இது 1968 ஜனவரியில் இருந்து பால்கன் சிறுவர் வண்ணப் பத்திரிகை மாதம் இருமுறை இதழாகத் தமிழில் வெளிவந்தது. இவ்விதழ் போதிய வாசகர்கள் இல்லாததால் (nov-1968) 22 இதழ்களுடன் நின்றுவிட்டது. இக்காலத்தில் வெளிவந்த பொன்மலர், அம்புலிமாமா போன்ற சிறுவர் இதழ்களிலும் பல சித்திரக்கதைகள் வெளிவந்துள்ளன. அம்புலிமாமா (1947) சிறுவர் இதழ் என்பதால் சிறார்களைக் கவரும் விதத்தில் கதைகள் வண்ண ஓவியங்களால் நிரம்பியிருந்தன. இதில் வெளியான மாயாஜாலம், புராணம், நீதிபோதனைக்கதைகள் போன்றவை சித்திரக்கதைகளாக அல்லாமல் சித்திரங்களோடு கூடிய கதைகளாக இருக்கின்றன. இவ்விதழ் இன்னும் வெளிவந்து கொண்டிருக்கின்றது. இக்காலகட்டத்தில் வெளியான பெரும்பான்மையான சிறுவர் இதழ்களிலும் இவ்வடிவம் இடம்பெற்றுள்ளதைக் காணமுடிகிறது. குறிப்பாக அணில், சக்தி, கரும்பு போன்ற சிறுவர் இதழ்களில் காணமுடிகிறது.

மேற்கூறியவை, தமிழ்ச்சூழலில் உருவாக்கப்பட்ட சித்திரக்கதை மரபு, தமிழ்ச்சூழலுக்கு மொழி பெயர்க்கப்படும் சித்திரக்கதை மரபு என்னும் இருபோக்குகளின் தொடக்க காலம்.

1970க்குப் பிறகு பல நிறுவனங்கள் சித்திரக்கதைகளை வெளியிடுவதில் ஆர்வம் காட்டின. அதனடிப்படையில், சிவகாசியிலிருந்து சௌந்தரபாண்டியன் என்பவரால் தொடங்கப்பட்ட பிரகாஷ் பப்ளிகேஷன்ஸ் என்ற நிறுவனம், 1972இல் முத்து காமிக்ஸ் என்னும் சித்திரக்கதை இதழைத் தொடங்கியது. இவ்விதழின் பதிப்பாசிரியர் முல்லை தங்கராசன். இவர்கள் பெரும்பாலும் வெளிநாட்டுக்கதைகளின் பதிப்புரிமை பெற்று அவற்றைத் தமிழில் மொழிபெயர்த்து வெளியிட்டனர். எனினும், இவ்விதழின் ஒரு சிறு பகுதியாகச் சிறுவர்களுக்கான சித்திரத்தொடர்கதைகள் (அதிமேதை அப்பு, விச்சுகிச்சு...) ஓவியர் செல்லம் அவர்களால் வரையப்பட்டுள்ளன. இதில் வெளிவந்த முதல் சித்திரக்கதை இரும்புக்கை மாயாவி (படம் 6) என்பதாகும். இன்றுவரை தொடர்ந்து வெளிவந்து கொண்டிருக்கும் சித்திரக்கதை இதழில் முதன்மையானது. இடையில் சில காலம் இவ்விதழ் வாரமலராகவும், ஒருசில ஆண்டுகள் நின்றும் பின்னர் வெளிவந்தது. இன்றுவரை இவ்விதழில் 312 கதைகள் வெளிவந்துள்ளன. முத்து மினி என்ற பெயரில் 1975இல் மற்றும் ஒரு சித்திரக்கதை இதழினையும் இந்நிறுவனத்திலிருந்து வெளியிட்டனர். இவ்விதழ் ஓராண்டுக்குள்ளேயே நின்றுவிட்டது.

1978இல் ரத்னபாலா பாலர் வண்ண மாத மலர், முல்லை தங்கராசன் அவர்களை ஆசிரியராகக் கொண்டு தொடங்கப்பட்டது. ஓர் ஆண்டிற்கு பிறகு கே.ஆர். வாசுதேவன் அவர்களை ஆசிரியராகக் கொண்டு இவ்விதழ் வெளிவந்தது. இதிலும் பல சித்திரக்கதைகள் மொழிபெயர்ப்புகளாகவும், சில தமிழிலே எழுதப்பட்ட கதைகளாகவும் வெளிவந்தன.

அதில் மிகவும் குறிப்பிடத்தக்கது விண்வெளி அண்ணல், ஸிமித்ஸன் ஜான்ஸனாக ரோபோ ஜானி போன்ற வெளிநாட்டுக்கதைகளும், மாஸ்டர் மகேஷ் துப்பறியும் எனும் தலைப்பில் மாதா மாதம் வெளியிடப்பட்ட துப்பறியும் கதையும் ஆகும். ஆனந்த விகடனில் கதைத்தொடராக வெளிவந்த தேவனின் துப்பறியும் சாம்பு கதை சித்திரக்கதை வடிவில் பலவண்ணங்களில் வெளியானது.

இக்காலத்தில், குமுதம், கல்கி, கலைமகள், கோகுலம் போன்ற ஜனரஞ்சக இதழ்களில் எல்லாவற்றிலும் சித்திரக்கதைகள் தொடர்களாக வெளியாயின. பின்னாளில் அவையே தொகுக்கப்பட்டுத் தனி இதழ்களாகவும், நூல்களாகவும் வெளிவந்தன. எ.கா. கல்கியில் வெளியான கனவா நிஜமா வாண்டுமாமாவின் கதைத்தொடர் பின்னாளில் பார்வதி சித்திரக்கதைகளில் தனி இதழாக வெளியானது. வானதி பதிப்பகத்தாரால் வெளியிடப்பட்ட பல கதைகள் வாண்டுமாமா இதழ்களில் எழுதிய கதைகளின் தொகுப்பாகும். அதுபோல் குமுதம் இதழில் இரட்டை வால் இரண்டு, காதல் அழைக்கிறது, பிளான் பட்டாபி போன்ற தமிழ் கதைகளையும், முகமூடி என்ற பெயரில் வேதாளரின் கதையினையும் தொடராக வெளியிட்டனர்.

இதழ்களின் பொறுப்பாசிரியராக எஸ். ராமஜெயம் இருந்தார். இவரைத்தொடர்ந்து அ.மா. சாமி அவர்களைப் பொறுப்பாசிரியராகக் கொண்டு மீதி இதழ்கள் வெளிவந்தன. சரியான கதைத்தேர்வும், மொழிபெயர்ப்பும் இல்லாத காரணத்தால் இவ்விதழ் காலப்போக்கில் வாசகர்களின் வரவேற்பில்லாமல் நின்றுவிட்டது.

இதே காலகட்டத்தில் முத்து காமிக்ஸ் நிறுவனரின் மகனான எஸ். விஜயன் அவர்கள் 1984 ஜூலை மாதம், லயன் காமிக்ஸ் என்ற சித்திரக்கதை இதழைத் தொடங்கினார். இரண்டு இதழுக்குப் பிறகு பரவலான சித்திரக்கதை அளவிலிருந்து கையடக்கப்பதிப்பாக (pocket size) வெளிவரத் தொடங்கியது. தமிழ் காமிக்ஸில் முதன் முதலாகத் தீபாவளிமலர், விடுமுறை மலர் என ஒருபுது முறை அறிமுகப்படுத்தப்பட்டது. மேலும், 1986 ஜனவரியில் திகில் லயன் எனும் இதழையும் வெளியிட்டனர். இவ்விதழில் சின்ன சின்ன 4, 6 பக்கங்கள் கொண்ட கதைகளை மொத்தமாகப் பெரிய அளவில் (A4 size) வெளியிட்டனர். இதில் வெளியான கதைகள் அந்த அளவு வாசகர் மத்தியில் வரவேற்பு பெறாததால் 4ஆவது இதழிலிருந்து வழக்கம் போல் பழைய அளவிலேயே கதைகளைப் போட ஆரம்பித்தனர். 1987இல் ஜூனியர் லயன் காமிக்ஸ் என்னும் இதழைத் தொடங்கினார். தமிழ்

1970க்குப் பிறகு பல நிறுவனங்கள் சித்திரக்கதைகளை வெளியிடுவதில் ஆர்வம் காட்டின. அதனடிப்படையில், சிவகாசியிலிருந்து சௌந்தரபாண்டியன் என்பவரால் தொடங்கப்பட்ட பிரகாஷ் பப்ளிகேஷன்ஸ் என்ற நிறுவனம் 1972இல் முத்து காமிக்ஸ் என்னும் சித்திரக்கதை இதழைத் தொடங்கியது. இவ்விதழின் பதிப்பாசிரியர் முல்லை தங்கராசன்.

தமிழ்ச் சித்திரக்கதை வரலாற்றில் 1980-1995 காலகட்டத்தில் தான் வர்த்தக ரீதியான ஒரு துறையாக இது பெருகத்தொடங்கியது. இக்காலத்தில் பெரும்பாலான காமிக்ஸ் இதழ்கள் வரத்தொடங்கின. 1984இல் ராணி காமிக்ஸ் தினத்தந்தி குழுமத்திலிருந்து வெளிவரத் தொடங்கியது. இதன் ஆசிரியராக எஸ். ராமஜெயம் நியமிக்கப்பட்டார். ராணி காமிக்ஸ் ஆரம்பத்திலிருந்தே வெளிநாட்டுக் கதைகளைத் தமிழில் மொழிபெயர்த்து வெளியிட்டது. மொத்தம் 500 இதழ்கள் தொடர்ந்து மாதம் இருமுறை வீதம் வெளிவந்துள்ளன. இவற்றில் முதல் 100

நாட்டில் அதுவரை இரு வண்ணங்களில் வெளிவந்து கொண்டிருந்த சித்திரக்கதை லக்கிலூக் கதாபாத்திரத்தின் மூலம் மல்டி கலர் சித்திரக்கதை அறிமுகப்படுத்தப்பட்டது. இதுபோல் திகில் லைப்ரரி, மினி லயன் காமிக்ஸ், முத்து காமிக்ஸ் வாரமலர், சக்தி காமிக்ஸ் என பல சித்திரக்கதை இதழ்கள் பிரகாஷ் பப்ளிகேஷன்ஸ் என்னும் நிறுவனத்திலிருந்து வெளிவந்தன. எனினும் இவை அனைத்தும் வெளிவரத் தொடங்கிய சில ஆண்டுகளுக்குள்ளேயே நின்றுவிட்டன. இன்றுவரை இந்நிறுவனத்திலிருந்து முத்துகாமிக்ஸ், லயன்காமிக்ஸ் என்னும் இரு இதழ்களும், பழைய சித்திரக்கதைகளை மறுபதிப்பு செய்து வெளியிடும் இதழாக காமிக்ஸ் கிளாசிக்ஸ் என்னும் இதழும்

வெளிவந்து கொண்டிருக்கின்றன. இந்நிறுவனம் சித்திரக்கதை வரலாற்றில் இதுவரை எவருமே மேற்கொள்ளாத முயற்சியாக, ஏஜென்ட் XIIIன் இரத்தப்படலம் 118 (2011) பாகங்களை ஒரே தொகுப்பாக 800க்கும் அதிகமான பக்கங்களில் தமிழில் மொழிபெயர்த்து வெளியிட்டுள்ளது குறிப்பிடத்தகுந்த ஒன்றாகும்.



1984இல், மேத்தா பப்ளிஷர்ஸ் (சிவகாசி) என்னும் நிறுவனத்திலிருந்து மேத்தா காமிக்ஸ் வெளியானது. சாகச வீரர்களைக்கொண்ட மொழிபெயர்ப்புக் கதைகளை வெளியிட்டனர். இதில் மொத்தம் 12 இதழ்கள் வெளிவந்தன. பின்னர் மேத்தாவின் மகனாகிய அசோக் என்பவர் இதன் பெயரை அசோக்மேத்தா காமிக்ஸ் (1985) எனப் பெயரை மாற்றி அதேமாதிரியான கதைகளை வெளியிட்டார். இதே ஆண்டில் (1984) சென்னையிலுள்ள காக்ஸ்டன் பப்ளிகேஷன் காக்ஸ்டன் காமிக்ஸ் இதழை வெளியிட்டது. இதில் திகில், விண்வெளிக்கதை, கௌபாய் கதை என மொழிபெயர்க்கப்பட்ட கதைகள் வெளியாகின. இவ்விதழ் 1985இல் நின்றுவிட்டது. 1988இல் ராணி காமிக்ஸின் ஆசிரியராக விளங்கிய எஸ். ராமஜெயம் அவர்களால் தொடங்கப்பட்ட இதழ் சீக்ரெட் ஏஜெண்ட் ஜேம்ஸ்பாண்ட் காமிக்ஸ் என்பதாகும். இதில் ஜேம்ஸ்பாண்டின் சாகசக்கதைகள் வெளிவந்தன. அதோடு தமிழில் உருவாக்கப்பட்ட சிறு சிறு கதைகளும் வெளிவந்துள்ளன. இது மொத்தம் 6 இதழ்களோடு நின்றுவிட்டது. இம்மொழிபெயர்ப்புச் சித்திரக்கதை மரபில் குறிப்பிடத்தகுந்தவர் முல்லை தங்கராசன் அவர்கள். இவர் பல சித்திரக்கதை இதழ்களின் பதிப்பாசிரியராக இருந்துள்ளார்.

இவ்வாறு தொடர்ந்து மொழிபெயர்ப்புக் கதைகள் மட்டுமே வெளிவந்து கொண்டிருந்த காலப்பகுதியில் கலைப்பொன்னி குழுமத்திலிருந்து வெளியான மலர் காமிக்ஸ், பொன்னி காமிக்ஸ் போன்றவற்றில் உள்ளூர் சித்திரக்கதைகள் (LOCAL ART WORK) வெளிவந்துள்ளன. இவற்றில் திகில், மர்மக்கதைகள் வெளிவந்தன.

அதேசமயம், பைகோ பப்ளிஷிங் ஹவுஸ் என்ற நிறுவனம் மலையாள மொழியில் பூம்பட்டா என்ற பத்திரிக்கையையும், தமிழில் பூந்தளிர் என்ற பத்திரிகையையும் குழந்தைகளுக்காக ஆரம்பித்தது. பூந்தளிர் 1984ஆம் ஆண்டு அக்டோபர் மாதம் வாண்டு மாமாவை ஆசிரியராகக் கொண்டு தொடங்கப்பட்டது. பூந்தளிரில் வெளிவந்த கபீஷ், காக்கை காளி போன்ற கதைகள் குழந்தைகளை பெரிதும் கவர்ந்தவை. 1990களில் பைக்கோ நிறுவனம் இந்தியா புக் ஹவுஸ் உடன் வியாபார ஒப்பந்தம் செய்து கொண்டது. அதன்பின்னர், டிங்கிளில் வெளிவந்த சித்திரக்கதைகள் தமிழில் மொழிபெயர்க்கப்பட்டு பூந்தளிர் இதழில் வெளியிடப்பட்டன. பின்னர், அமர்சித்ர கதாவில் வெளிவந்த மகாபாரத ராமாயணப் பகுதிகளையும் தமிழில் மொழிபெயர்த்து பூந்தளிர் அமர்சித்ர கதை என வெளியிட்டனர். இதே நிறுவனம் பின்னர் 1987 செப்டம்பர் மாதம் பைகோ கிளாசிக்ஸ் காமிக்ஸ் என்ற பெயரில் உலக இலக்கியங்களைத் தமிழுக்கு அறிமுகப்படுத்தும் விதமாகப் பல (டாம் சாயர், கால யந்திரம் ..) சித்திரக்கதைகளை வெளியிட்டது. 1992இல் பார்வதி சித்திரக்கதைகள் என்னும் சித்திரக்கதை இதழ் மாதம் இருமுறையாக வெளியானது. இதில், எழுபதுகளில் வாண்டுமாமா கோகுலம் இதழில் வெளியிட்ட தொடர் சித்திரக்கதைகளும், 80களில் பூந்தளிரில் வெளியான கதைகளும் மாதம் ஒரு கதையாக முதலில் வெளியிடப்பட்டன. பின்னர் புதிய கதைகள் வெளியிடப்பட்டன.

தமிழில் பல இடங்களில் இருந்தும் 100க்கும் மேற்பட்ட காமிக்ஸ் இதழ்கள் வெளிவந்துள்ளன. கண்மணி காமிக்ஸ், ரேகா காமிக்ஸ், மதி காமிக்ஸ், வாசு காமிக்ஸ் , டார்ஜன் காமிக்ஸ், மலர் காமிக்ஸ், மலர் பொன்னி காமிக்ஸ், மேகலா காமிக்ஸ், கஸ்தூரி காமிக்ஸ், லீலா காமிக்ஸ், பார்வதி சித்திரக்கதைகள், அனு காமிக்ஸ், சோலை காமிக்ஸ், ஸ்வீட் பேபி காமிக்ஸ், பாப்பா காமிக்ஸ்...... எனத் தமிழில் சித்திரக்கதைகள் பரவலாக்கப்பட்டன. இருப்பினும் அவற்றில் பெரும்பாலான இதழ்கள் வெளிவரத் தொடங்கிய

ஓரிரண்டு ஆண்டுகளுக்குள்ளாகவே நின்று விட்டன. இதற்கு அடிப்படையான காரணம் போதிய வாசகர் வட்டம் இல்லாததே.

சித்திரக்கதைகள் இதழ்களாக வந்ததோடு மட்டுமல்லாமல் நூல்களாகவும் வெளிவந்துள்ளன. அவற்றை, வானதி பதிப்பகம், மணிமேகலைப் பிரசுரம், கங்கை புத்தக நிலையம், நர்மதா பதிப்பகம், அமுத நிலையம், கிழக்கு பதிப்பகம், நியுசெஞ்சுரி புக்ஹவுஸ், விகடன் பதிப்பகம் முதலான பதிப்பகங்கள் வெளியிட்டுள்ளன.

புனைகதை வரலாற்றில் ஒரு குறிப்பிட்ட காலப்பகுதிக்குள் மர்ம நாவல்கள், துப்பறியும் நாவல்கள் வெளியாயின. அதுபோல் தமிழ்ச்சித்திரக்கதை மரபிலும், தொடக்கத்தில் துப்பறியும் கதைகளும், மர்ம, மாயாஜாலக் கதைகளுமே முக்கியத்துவம் பெற்றன. இதனடிப்படையில், சித்திரக்கதை நூலாக்க முயற்சிகளில் ஒன்று, தொடக்கத்தில் வெளியான நாவல்களைச் சித்திரக்கதைகளாக்குவது. 1956இல் கல்கண்டு வார இதழில் தமிழ்வாணன் எழுதிய நாவலை ஆதாரமாகக் கொண்டு ஒரு சித்திரக்கதைநூல் வெளிவந்துள்ளது. இந்நூலின் பெயர் "MDP 7171 முழுநீளப் படக்கதை" என்பதாகும். இதற்கு ராகி என்பவர் ஓவியம் வரைந்துள்ளார். இந்நூல் மணிமேகலைப் பிரசுரத்தின் வெளியீடாக 1979இல் முதல் பதிப்பும், 1983இல் இரண்டாம் பதிப்பும் வெளிவந்துள்ளது. ஒரு நூல் குறிப்பிட்ட சில ஆண்டுகளுக்குள் மறுபதிப்பு செய்யப்படுகிறது என்றால் அதற்கான தேவை இருந்துள்ளது என்று பொருள். இன்று இத்தகைய நூல்களைத் தேடித் திரட்டுவதில் எழக்கூடிய சிக்கல்கள் காரணமாக நமது சமகாலக் கலைஇலக்கிய மரபான சித்திரக்கதைகள் குறித்த வரலாற்றினைப் புரிந்துகொள்வதிலும், எழுதுவதிலும் குழப்பங்கள் ஏற்படுகின்றன.

புனைகதை வரலாற்றில் ஒரு குறிப்பிட்ட காலப்பகுதிக்குள் மர்ம நாவல்கள், துப்பறியும் நாவல்கள் வெளியாயின. அதுபோல் தமிழ்ச்சித்திரக்கதை மரபிலும், தொடக்கத்தில் துப்பறியும் கதைகளும், மர்ம, மாயாஜாலக்கதைகளுமே முக்கியத்துவம் பெற்றன. இதனடிப்படையில், சித்திரக்கதை நூலாக்க முயற்சிகளில் ஒன்று, தொடக்கத்தில் வெளியான நாவல்களை சித்திரக்கதைகளாக்குவது. 1956இல் கல்கண்டு வார இதழில் தமிழ்வாணன் எழுதிய நாவலை ஆதாரமாகக் கொண்டு ஒரு சித்திரக்கதைநூல் வெளிவந்துள்ளது.

இரண்டாவதாகத் தமிழில் தொடக்கத்தில் இதழ்களில் வெளிவந்த சித்திரக்கதைகளைத் தொகுப்புகளாக வெளியிட்டுள்ளனர். வாண்டுமாமா கோகுலம், பூந்தளிர் போன்ற இதழ்களில் எழுதிய கதைகள் பார்வதி சித்திரக்கதைகள் என்னும் இதழில் வெளியானது பின்னர் அவை சித்திரக்கதைகள்வாண்டுமாமா என்ற பெயரில் கங்கை புத்தக நிலையத்தாரால் வெளியிடப்பட்டது. இதுபோல் கி.மு.வில் சோமு சிம்புத்தேவன்; நர்மதா பதிப்பகம். (ஆனந்த விகடனில் தொடராக வெளிவந்தது). மூன்றாவதாக தமிழிலேயே புதிதாக கதைகளைப் புனைந்தும் ஓவியங்கள் வரைந்தும் வெளியிட்டுள்ளனர். சான்றாக, இராஜகம்பீரன் ப. தங்கம்: தங்கப்பதுமை பதிப்பகம், தாராவும் குகை மனிதர்களும் இராஜதிலகம்: மணிமேகலைப் பிரசுரம். இதுபோல் சில நூல்கள் தமிழில் இன்று வெளிவந்து கொண்டிருக்கின்றன.

நான்காவதாக, சித்திரக்கதை இதழ்கள் போன்று பிறமொழிகளில் வந்த சித்திரக்கதைகளைத் தமிழில் மொழிபெயர்த்து நூல்களாக வெளியிட்டுள்ளனர். அவ்வகையில், ஈரான்: ஒரு குழந்தைப் பருவத்தின் கதை, ஈரான்: திரும்பும் காலம் (விடியல் பதிப்பகம்; 2005) (graphic novels), ரஷ்யப் புரட்சி (நியுசெஞ்சுரி புக்ஹவுஸ்; 2008) போன்ற நூல்களைக் குறிப்பிடலாம். இதுபோன்ற வரைபட இலக்கியம் எனக்குறிப்பிடப்படும் கிராபிக்நாவல் முயற்சிகள் தமிழில் இன்னும் முன்னெடுக்கப்படவில்லை.

**சித்திரக்கதை வரலாற்றிலிருந்து**

- ஆரம்ப காலகட்டங்களில் சிறுவர் இலக்கியமாகப் பார்க்கப்பட்ட இவ்வடிவம் இன்றுவரை சிறுவர்களுக்கானதாகவே பார்க்கப்படுகின்றது. காரணம், உலக நாடுகளில் சித்திரக்கதைகளில் ஏற்பட்டுள்ள வளர்ச்சிகள் போல் தீவிரமான, ஒவ்வொரு வயதினருக்கும் ஏற்றார் போன்ற சித்திரக்கதைகள் தமிழில் உருவாகவில்லை. மேலும் இன்று தினசரிகளுடன்

இலவச இணைப்பாக வரும் சிறுவர் இதழ்களில் மட்டுமே வெளிவரும் (சிறுவர் மலர், தங்கமலர், சிறுவர்மணி) சித்திரக்கதைகள் இதனை உறுதிசெய்கின்றன.

- சிறுவர் இதழ்களிலும் ஜனரஞ்சக இதழ்களிலும் வெளிவந்த இச்சித்திரக்கதைகள், அதற்கடுத்த கட்டத்திற்கு நகரவில்லை. ஆரம்பத்திலிருந்து இன்றுவரை சிறுபத்திரிகைகளில் சித்திரக்கதைகள் ஒரு இலக்கியமாகவோ, ஊடகமாகவோ பயன்படுத்தப்படவில்லை. ஆனால் அதே சமயத்தில் சிறுபத்திரிகைகள் நவீன ஓவியத்தின் மீது சிறப்பான கவனம் செலுத்தின என்பது குறிப்பிடத்தக்கதது.

- தமிழ்நாட்டில் சிறந்த பத்திரிகைஓவியர்கள் பலர் உள்ளனர். அவர்களில் பெரும்பாலானோர் சித்திரக்கதைகளுக்கு ஓவியம் வரைந்துள்ளனர். இருந்தாலும், தமிழில் இன்றுவரை சித்திரக்கதைக்கென ஒரு முறையியலும், தனி ஓவிய பாணியும் உருவாகவில்லை. அதாவது கார்ட்டூனிஸ்ட் என்று கூறும் அளவிற்குத் தமிழில் சில ஓவியர்கள் உள்ளனர். ஆனால் சித்திரக்கதை ஓவியர் என்று தமிழ்ச்சூழலில் யாரையும் குறிப்பிட முடியவில்லை.

- சிறுவர்களிடையே வாசிப்புப் பழக்கத்தை உருவாக்கியதில் சித்திரக்கதைகள் பெரும் பங்கு வகிக்கின்றன. இன்று முத்து லயன் காமிக்ஸுக்கான வாசகர் வட்டம் என்பது ஒரு பெரும் குழுவாக செயல்படுகிறது. இவ்வாசகர்கள் இன்று இணையத்தில் வலைப்பதிவுகள் மூலம் இன்றும் தங்களின் பழையகால நினைவுகளையும், ரசனைகளையும் பகிர்ந்துகொள்கின்றனர். முத்து லயன் காமிக்ஸைத் தாண்டி தமிழில் வெளிவந்த அனைத்து சித்திரக்கதை நூல்களையும் தேடிப் படித்தல், தொகுத்தல், பாதுகாத்தல், மூலப் பிரதியைத் தேடி ஆராய்தல், மொழிபெயர்ப்புகளோடு ஒப்பிடுதல், போன்ற வேலைகளைச் செய்கின்றனர். இவர்களுக்குள் பிரதியைப் பகிர்ந்துகொள்ளுதலும் நடக்கின்றது. தமிழ்ச் சித்திரக்கதை வரலாற்றை ஆராயும் என் ஆய்விற்கு அடிப்படையான தகவல்கள் எந்த நூலகங்களிலும் கிடைக்காத பட்சத்தில், வாசகர்களாகிய தனிநபர்களின் சேகரிப்புகளே பெரிதும் உதவுகின்றன. இதில் குறிப்பாக, தமிழ் காமிக்ஸ் உலகம், சித்திரக்கதை, அ.கொ. தீ.க முதலான வலைப்பதிவுகளைக் குறிப்பிடலாம் (விவரங்கள் அட்டவணையில்).

- மேலும், சித்திரக்கதை இதழ்களில் அவை வெளியிடப்பட்ட ஆண்டு, மாதம், ஓவியம், கதை தமிழாக்கம் என எந்தவிதத் தகவலும் இல்லாமல் பதிப்பிக்கப்படுவதால் அவற்றைக் கால எல்லைக்குள் அடக்கி அவற்றின் வளர்ச்சி நிலைகளை ஆராய்வதில் சிக்கல் எழுகிறது. எனினும் இதுவரை கூறப்பட்டவை யாவும் அவ்விதழ்களில் காணப்படும் சில குறிப்புகள், விளம்பரங்கள் போன்றவற்றைக்கொண்டு மதிப்பிடப்பட்டவை.

- மேற்குறிப்பிட்ட குறிப்புகளிலிருந்து சித்திரக்கதைகளின் தொடக்கம் தமிழ்மண் சார்ந்த கதைகளை உருவாக்கி வெளியிடுதல் என்பதாகவே இருந்துள்ளது. ஆனால், காலப்போக்கில் அந்நிலை மாறி பிறமொழிச் சித்திரக்கதைகளை மொழிபெயர்த்து வெளியிடுதல் என்பது பெருவழக்காகிப் போனது.

நன்றி: கலீல், கிங் விஸ்வா, வலைப்பதிவுகள்

**இணைப்புகள்**

1. முத்து காமிக்ஸ் இதுவரை வெளிவந்துள்ள இதழ்களின் பட்டியல்
2. லயன் காமிக்ஸ் பட்டியல்
3. லயன் காமிக்ஸ் ஸ்பெஷல் பட்டியல்
4. காமிக்ஸ் கிளாசிக்ஸ் பட்டியல்
5. மாலைமதி காமிக்ஸ் பட்டியல்
6. பார்வதி சித்திரக்கதைகளின் பட்டியல் (உள்ளூர் சித்திரக்கதைகள்) 1992ல் இருந்து 95 வரை வெளியான கதைகள். இப்பட்டியல் முழுமையானது அன்று.
7. சித்திரக்கதை வாசகர்களின் வலைப்பதிவுகளின் விவரங்கள்

படங்கள்

1. கோகுலம்
2. காந்தி சித்திரப்படங்கள்
3. சித்திரக்குள்ளன்
4. கண்ணன்
5. இந்திரஜால் காமிக்ஸ்
6. முத்து காமிக்ஸ்

# தமிழ் அச்சுப்பண்பாடு: சாதிநூல்கள்

ர. குமார்

அச்சு ஊடகம் என்கிற துறை தமிழர்களுக்குப் பதினாறாம் நூற்றாண்டளவில் அறிமுகமான ஒன்று. எடுத்த எடுப்பிலேயே இது சாமானியர்களைச் சென்றடையவில்லை என்பதும் எண்ணத்தக்கது. தொடக்ககால அச்சு நூல்கள் பெரும்பான்மையும் சமயம் சார்ந்தவையாக இருந்ததிலிருந்தே இதனை நாம் மதிப்பிட முடியும். அதிலும் கிறித்தவம் சார்ந்த நூல்களே அதிகம். சான்றாக ஜான் மர்டாக் உருவாக்கிய 'அச்சிடப்பட்ட தமிழ் நூல்களின் பட்டியலில் (Classified catalogue of Tamil Printed Books with introducing notice) இதனைக் காணலாம். அதில் சீர்திருத்தக் கிறித்துவ சமயநூல்கள் 587, ரோமன் கிறித்துவ சமய நூல்கள் 87, இந்து நூல்கள் 508, முகமதிய நூல்கள் 36, பிற சமய நூல்கள் 19 எனக் குறிப்பிடப்பட்டுள்ளன. இத்தகைய சமயம் சார்ந்த அச்சுப் பண்பாடு தமிழ் அச்சுப் பண்பாடாக உருமாறிய செயல்பாட்டைப் பண்டைத் தமிழ் இலக்கியங்களைச் சுவடிகளில் இருந்து அச்சு நூல்களாகப் பதிப்பித்த செயல்பாட்டிலிருந்தே கணக்கிலிட முடியும். அச்சு நூல்கள் உருவாக்கத்திற்கு எழுத்துப்பயிற்சி முதன்மையானது. அச்சு ஊடகத்தின் ஊடே கல்வியும் நமக்கு ஐரோப்பியர்களால் வழங்கப்பட்டது. இதில் கிறித்தவ நிறுவனங்களுக்கும் பாதிரிமார்களுக்கும் நிறைய பங்குண்டு.

"அச்சு எந்திரம், அச்சு சார்ந்த வாசிப்பு முறை, அச்சு சார்ந்த ஆக்கங்கள் உருவாதல் ஆகிய பல நிகழ்வுகள் சார்ந்து உருப்பெறும் நிகழ்வை அச்சுப்பண்பாடு என்று அழைக்க முடியும்" (வீ. அரசு: 2007:23)

இவ்வகை தமிழ் அச்சுப்பண்பாட்டில் 'சாதிநூல்கள்' என்கிற தனிப்பட்ட வகைமை சார்ந்த நூல்களை அடையாளப்படுத்துவதை இக்கட்டுரை மேற்கொள்கிறது. சாதிநூல்கள் என்பவை குறிப்பிட்ட ஒரு சாதி தொடர்பான மற்றும் நால்வருணம் தொடர்பான நூல்கள் மட்டும் கிடையாது. இத்துடன் குறிப்பிட்ட சாதி சார்ந்த சடங்குகள், மாநாடுகள், தீர்மானங்கள், தீர்ப்புகள், நடவடிக்கைகள், வரலாறுகள், சொல்லாய்வுகள், கண்டனங்கள், அறிக்கைகள் என ஒட்டுமொத்த செயல்பாடுகளின் அச்சாக்க நூல்களையும் குறிப்பிடலாம். 1800 தொடக்கம் 1950 வரைக்குமான கால எல்லையில் இதன் எண்ணிக்கை சுமார் 700 எனலாம். தமிழ்நூல் விவர அட்டவணையில் மேற்கண்ட சாதி தொடர்பான அனைத்துச் செயல்பாடுகளையும் உள்ளடக்கிய அச்சாக்கங்கள் 600க்கும் மேற்பட்டவை. சென்னை அரசு கீழ்த்திசைச் சுவடிகள் நூலகத்தில் (மெக்கன்சி தொகுப்பில்) 75க்கும் மேற்பட்ட தாள் மற்றும் சுவடிநூல்கள் காணப்படுகின்றன. இத்தகைய நூல்கள் மற்றும் சுவடிகளை ஒருங்குதிரட்டி ஆய்விற்கு உட்படுத்தினால் தமிழ்ச்சமூக வரலாறு குறித்த ஆக்கப்பூர்வமான பலன் கிடைக்கும் என்பதில் மாற்றுக்கருத்து இருக்கமுடியாது. இத்துடன் அச்சுப் பண்பாட்டில் சாதியும் சாதியமும் எவ்வாறு செயல்பட்டிருக்கின்றன என்பதையும் மதிப்பிட முடியும். இத்தன்மையான சாதிநூல்களின் உருவாக்கப் பின்புலம், அதன் பொருண்மை, தமிழ்ச் சமூக வரலாற்றில் அது ஏற்படுத்திய தாக்கம் முதலியவற்றைப் பின்வருமாறு காணலாம்.

#### சாதிநூல் உருவாக்கம்

தமிழ் அச்சுப் பண்பாட்டில் சாதிநூல்களின் உருவாக்கத்திற்கு மூன்று முக்கியக் காரணிகளைக் குறிப்பிடலாம். அவை. 1. சாதியேற்பாட்டுக் கோரிக்கைகள், 2. மக்கள் தொகைக் கணக்கெடுப்புகள், 3. கண்டனங்கள். இதில் சாதியேற்பாட்டுக் கோரிக்கை என்பது ஒரு சாதியின் உயர்சாதிக் கோரிக்கையைக் குறிக்கிறது. பிறப்பின் அடிப்படையில் அனைவரும் சமம் எனினும் இந்தியச் சூழலில் இந்துமதக்



சென்னைப் பல்கலைக்கழகத் தமிழ் இலக்கியத் துறை மாணவர். 'தமிழ் அச்சுப்பண்பாடு சாதிநூல்கள் (1800-1950)' எனும் தலைப்பில் ஆய்வியல் நிறைஞர் பட்டம் பெற்றினை முடித்துள்ளார்.

கருத்தியலானது பிறப்பின் அடிப்படையிலான வருணப்பாகுபாட்டை முன்மொழிகிறது. வருணப்பாகுபாட்டில் பிராமணர், சத்திரியர், வைசியர், சூத்திரர் என்கிற இறங்குவரிசையிலான சமத்துவமற்ற சாதிப்படிநிலை காணப்படுகிறது. இதனால் ஒருவர் உயர்ந்தவர் மற்றவர் தாழ்ந்தவர் என்கிற கருதுகோள் உண்டாக்கப்படுகிறது. இதன் காரணமாகச் சமூகத்தில் தாழ்நிலையில் வைக்கப்பட்டிருக்கும் சாதிப் பிரிவினர் தங்களுக்கு முன் உள்ள (மேலுள்ள) வருணநிலை அந்தஸ்தைக் கோருகின்றனர். இதனை மையப்படுத்தி தங்களின் சாதி உற்பத்தி, அதற்கான தொன்மம், பழக்கவழக்கங்கள், புராண இதிகாசத் தொடர்புகள் போன்றவற்றைத் தொகுத்து அக்குறிப்பிட்ட சாதியின் ஏற்பாட்டைக் (சாதி உயர்வை) கோருகின்றனர். பெரும்பான்மையான சாதிநூல்கள் இத்தன்மையிலேயே தோன்றியுள்ளன. அத்தகைய சாதி நூல்களின் வழி சாதியேற்பாட்டுக் கோரிக்கைகளை முன்வைக்கும் சாதிகளைப் பற்றியும் அவைகளின் சமூக அந்தஸ்தையும் பின்கண்டவாறு பட்டியலிட முடியும்.

| எண். | அந்தஸ்துகோரும் சாதி | கோரிய வருணம் | அழைத்துக்கொள்ளும் சாதிப்பெயர் |
|---|---|---|---|
| 1. | கம்மாளர் | பிராமணர் | விஸ்வப்பிராமணர் |
| 2. | குயவர் | பிராமணர் | குலால விஸ்வப்பிராமணர் |
| 3. | சாத்தானியர் | பிராமணர் | சாத்தானியர் |
| 4. | சேடர் | பிராமணர் | தேவாங்கப் பிராமணர் |
| 5. | சாலியர் | பிராமணர் | சாலியப் பிராமணர் |
| 6. | சௌராஷ்டிரர் | பிராமணர் | சௌராஷ்டிர பிராமணர் |
| 7. | வேளாளர் | வைசியர் | பூவைசியர் |
| 8. | இடையர் | வைசியர் | கோவைசியர் |
| 9. | கோமுட்டியர் | வைசியர் | கோமுட்டிச் செட்டிகள் |
| 10, | செக்கார் | வைசியர் | வாணியச்செட்டிகள் |
| 11. | நாட்டுக்கோட்டை நகரத்தார் | வைசியர் | சந்திர கங்காகுல வைசியர் அல்லது உபயகுல வைசியர் |
| 12. | பரதவர் | க்ஷத்திரியர் | சந்திரவமிசபரதமஹாராஜ சந்ததியர் |
| 13. | சாணார் | க்ஷத்திரியர் | க்ஷத்திரியச் சான்றோர் அல்லது சான்றோர்குல க்ஷத்திரியர் |
| 14. | பள்ளி(வன்னியர்) | க்ஷத்திரியர் | அக்நிகுல க்ஷத்திரியர் |
| 15. | மறவர் | க்ஷத்திரியர் | பாண்டிய வமிசத்தினர் |
| 16. | கவரைகள் (வடுகர்) | க்ஷத்திரியர் | விஜயநகரத்தரசர்களது பந்துக்கள் |
| 17. | பள்ளர் | சூத்திரர் | தேவேந்திரகுல வெள்ளாளர் |
| 18 . | பறையர் | (வருணம் இல்லை) | பூர்வீகப் பவுத்தர் |

இவற்றுடன் இன்று சக்கிலியர்கள் தங்களை 'அருந்ததியினர்' என்று அழைத்துக் கொள்வதையும் குறிப்பிடலாம். இவ்வாறு ஒவ்வொரு சாதிக்குமான சாதியேற்பாட்டுக் கோரிக்கையானது உயர்சாதிக் கோரிக்கையாகவே முடிகிறது. சமூகத்தில் இருக்கும் வருணப் பாகுபாடு போன்ற மட்டமான தரம் பிரித்தலினால்தான் இத்தகைய ஏற்பாட்டுக் கோரிக்கைகள் எழுகின்றன என்பதையும் மறுக்கமுடியாது. குறிப்பாக இரண்டு தமிழ்ச் சாதிகளை வைத்து அவைகளின் சாதியேற்பாட்டுக் கோரிக்கையைப் புரிந்துகொள்ள முடியும். கம்மாளர் (விஸ்வகர்மா), குலாலர் (குயவர்) ஆகிய இரு குடித்தொழில் சாதியினரும் தங்களைப் 'பிராமணர்' என்று அழைத்துக் கொள்கின்றனர். விஸ்வப் பிராமணர் எனப்படும் கம்மாளரின் கருத்துப்படி பார்ப்பனர்கள் அசல் பார்ப்பனர்களே கிடையாது. அது தொடர்பான வழக்குதான் 'சித்தூர் ஜில்லா அதாலத்துக்கோர்ட்டுத் தீர்ப்பு-1872' என்ற நூலாக வந்தது. அதனைத் தொடர்ந்து பல 'பார்ப்பனர் எதிர்ப்பு' நூல்களை விஸ்வகர்மாக்கள் எழுதினர். குலாலவிஸ்வ பிராமணர் எனும் குலாலர்கள், விஸ்வப்பிராமணர் எனும் கம்மாளர்கள் ஆகியோர் தங்களைப் 'பிராமணாள்' என்று அழைத்துக் கொள்வதற்கு இன்னொரு காரணமும் உண்டு. மேற்குறிப்பிட்ட இரண்டு சாதிகளும், உற்பத்தியோடு தொடர்பு கொண்டவை. அதாவது தமிழ்ச்சமூகத்தில் மரம், பொன், உலோகம் உள்ளிட்ட பஞ்சப்பொருட்களை உருவாக்கம் செய்கின்றவர்கள் கம்மாளர்கள். இதனடிப்படையில் அவர்கள் தச்சர், தட்டர், கொல்லர் எனப்படுகின்றனர். இதேபோல் பானை முதலிய பொருட்களை உருவாக்குபவர்கள் குலாலர்கள். இதனால் பிர்ம-பிரம்ம- பிரம்மா- என்ற உற்பத்திக் கடவுளின் பெயரால் உருவான 'பிராம்மணர்' என்ற அந்தஸ்தை மேற்படி வகுப்பினர் கேட்கின்றனர். எந்தவித உற்பத்தியிலும், ஈடுபடாமல் பார்ப்பனர்கள் 'பிராமணப் பட்டம்' பெறும்போது உற்பத்தியே தங்களின் குடித்தொழில் என்று வாழும் மேற்படி இரண்டு சமூகத்தினர் 'பிராமணப்பட்டம்' கேட்பதில் அடிப்படை அரசியல் இருக்கவே செய்கிறது. இன்றும் குலாலர்கள் தங்களின் கோத்திரமாகப் பிரம்மகோத்திரத்தைச் சொல்கின்றனர். (உருவாக்கம் அல்லது படைப்பு என்பது இதில் அடிப்படையானது.)



வேளாண் மரபுண்மை விளக்கம்.

சைவசித்தாந்த சபையின்

Copy Right Registered.

1903.

இத்தகைய பிராமணர் உயர்சாதி கோரிக்கைகள் மற்ற குடித்தொழில் சமூகத்தினரிடம் எழாததற்குக் காரணமும் உற்பத்திதான். (இங்கு உற்பத்தி என்பது ஒரு பொருளை உருவாக்குவது) பறையர், வண்ணார், நாவிதர் முதலிய சாதியினர் உற்பத்தியில் ஈடுபடுவதில்லை. (ஈடுபடுத்துவது இல்லை). மாறாக அவர்களின் குடித்தொழிலை அசுத்தத்தை நீக்குபவர்களாக, அதனால் தானும் அசுத்தம் நிறைந்தவர்களாக இச்சமூகம் கட்டி வைத்துள்ளது. இதனாலேயே மற்றக் குடித்தொழில் சமூகங்களிடையே பிராமணர் சாதியேற்பாட்டுக் கோரிக்கைகள் எழவில்லை எனலாம்.

ஆனால் பார்ப்பனர்களுக்கு இத்தகைய கோரிக்கைகள் தேவையில்லை. 'இயல்பிலேயே' அவர்கள் உயர்நிலையில் வைக்கப்பட்டுள்ளதே இதற்குக் காரணமாகும். இது தொடர்பான சாதி நூல்களும் பார்ப்பனர் களுக்கில்லை. மநு முதலிய தர்ம நூல்கள் பார்ப்பனர்களின் நலனுக்காகப் பார்ப்பனரால் எழுதப்பட்ட 'சாதிநூல்' என அழைக்க முடியும். இதனை வைத்தே இன்றைய சாதிநூல்களின் தேவை யாருக்கானது எதற்கானது என்பதைக் கணித்துவிட முடியும். பார்ப்பனர்களின் இத்தகைய நிலையைப் பாண்டியகுல விளக்கம் என்ற நூல் பின்கண்டவாறு நையாண்டி செய்கிறது. "எந்தெந்த காலத்தில் எந்தெந்த ராஜாங்கம் வருகிறதோ அந்தந்த ராஜாங்க நோக்கத்துக்குத் தக்கபடி இணங்கி நடந்து கொள்வதினால் எந்தக்காலத்திலும் பிராமணாள் மேலாகவேயிருக்கிறார்கள்" (1883: 41) இத்துடன் குறிப்பிட்ட சாதிநூல்கள் அக்குறிப்பிட்ட சாதிக்கு மட்டுமே வழங்கப்பட்டுள்ளதையும் காணமுடிகிறது. எடுத்துக்காட்டாக 'தொண்டமண்டலம் சோழிய வேளாள மரபார் ஏற்படுத்திக் கொண்ட விவகார ஆசாரசட்டம்-1915' என்ற நூலைக் குறிப்பிடலாம். இதன் முகப்பில் 'For Private Circulation Only' என்றுள்ளது.

குடிமதிப்புச் சபையாரால் வரிசைப்படுத்தப்பட்ட மேற்படி சாதிகள் தங்கள் சாதி மேலானது என்றும் மற்றவர் சாதி கீழானது என்றும் தங்களைப் பிரம்ம, க்ஷத்திரிய, வைசியரில் வைக்க வேண்டும் என்றும் அதற்கான ஸ்ருதி (புராணம்), ஸ்மிருதி (மநு), வேத, ஆகமங்களை உதாரணம் காட்டி அரசுக்கு மனுசெய்தனர். இதனைப் பரிசீலித்த பிரித்தானிய அரசும் தகுந்த ஆதாரங்கள் இருப்பின் அவர்களுக்கான சாதியேற்பாட்டை வழங்கியும் உள்ளது.

இன்னும் சில சாதிநூல்கள் அப்புத்தகத்தில் சொல்லியிருக்கும் அக்குறிப்பிட்ட சாதி தொடர்பான கட்டுப்பாடுகளை மீறுபவர்களுக்குப் பின்வரும் ஓம்படைக்கிளவிச் செய்தியைக் குறிப்பிடுகின்றன. சான்றாக 'இராயகுல மகாநாடு தீர்ப்பு விபரம்-1926' என்கிற நூல் "இத்தீர்ப்பு யாதொரு பின்னம் வராமல் நடந்துகொள்ள வேண்டியது. இதைத் தவிர்த்து நடப்பவர்களும் கெடுக்க எண்ணங்கொள்பவர்களும் காராம் பசுவைக் கொன்ற பாவத்திலும் பிராமணாளைக் கொன்ற பாவத்திலும் ஏழு சிவாலயத்தை அழித்த பாவத்திலும் சிசுக்களைக் கொன்ற பாவத்தையும் அனுபவிப்பவர்களாகவும்", (1926:40) என்று எச்சரிக்கிறது. கல்வெட்டு மரபில் இறுதியாகப் பின்பற்றப்படும் இத்தகைய ஓம்படைக்கிளவி அச்சுப் பண்பாட்டிலும் எதிரொலிப்பதைக் காணலாம். இதன்மூலம் கல்வெட்டுப் பண்பாட்டிலிருந்து சுவடிப் பண்பாட்டிற்கும் சுவடியிலிருந்து அச்சுப் பண்பாட்டிற்கும் உள்ள ஊடாட்டத்தை நோக்கமுடியும்.

2. 1871இல் எடுக்கப்பட்ட முதல் மக்கள் தொகைக் கணக்கெடுப்பும் சாதிநூல்கள் தோன்றுவதற்கு முக்கியக் காரணமாக இருந்திருக்கின்றது. இதன்படி எடுக்கப்பட்ட முதல் கணக்கெடுப்பில் சாதிகளை வருணப் பாகுபாடு செய்யவில்லை என்றும் சாதிகளை அகர வரிசையில் மட்டும் வரிசைப்படுத்துவதாகவும் பிரித்தானியர் உறுதியளித்தனர். இதனைக் காசி விசுவநாத முதலியாருக்கு எழுதிய மறுகடிதத்தில் சார்லஸ் இ. கோவர் துரை அவர்கள் குறிப்பிடுகிறார். அது 'வேளாண் மரபியல்-1880' என்ற வேளாளர் சாதிநூலில் மொழிபெயர்த்துக் கொடுக்கப்பட்டுள்ளது. அதன்படி குடிமதிப்புச் சபையார் 'ஒவ்வொரு மனிதனும் அவன் சொல்லுகிறபடி அவன் சாதியை எழுதிக்கொள்ளப்படுமென்றும் ஒருவனும் க்ஷத்திரியன், வைசியன், சூத்திரன் என்று தன்னை எழுதிக்கொள்ளும்படி சொல்வதை ஒப்புக்கொள்ளப்படுவதில்லை' என்றும் (1880:60) குறிப்பிட்டனர். ஆனால் இந்நிலையை மீறி தமிழ்ச்சாதிகளைச் சூத்திரருள் பதினாலு வகையைப் பிரித்து அவற்றுக்கான உட்பிரிவுகளும் 1871இன் கணக்கெடுப்பில் 'Classification of Hindu Caste' என்ற தலைப்பில் கொடுக்கப்பட்டிருந்தன. இதன்படி முதல் மக்கள்தொகைக் கணக்கெடுப்பில் கீழ்வரும் பதினான்கு தமிழ்ச்சாதிகளைச் சாதிமுறையில் வரிசை செய்யப்பட்டிருந்தது குறிப்பிடத்தக்கது. அவை கவறை, வெள்ளாளர், இடையர், கம்மாளர், கணக்கர், கைக்கோளர், குயவர், சாத்தானியர், வன்னியர், அம்பட்டர், வண்ணார், செம்படவர், சாணார், பறையர் என்பனவாகும்.

குடிமதிப்புச் சபையாரால் வரிசைப்படுத்தப்பட்ட மேற்படி சாதிகள் தங்கள் சாதி மேலானது என்றும் மற்றவர் சாதி கீழானது என்றும் தங்களைப் பிரம்ம, க்ஷத்திரிய, வைசியரில் வைக்க வேண்டும் என்றும் அதற்கான ஸ்ருதி (புராணம்), ஸ்மிருதி (மநு), வேத, ஆகமங்களை உதாரணம் காட்டி அரசுக்கு மனுசெய்தனர். இதனைப் பரிசீலித்த பிரித்தானிய அரசும் தகுந்த ஆதாரங்கள் இருப்பின் அவர்களுக்கான சாதியேற்பாட்டை வழங்கியும் உள்ளது. (சான்றாக நாடார் சமூகத்தவர்களைச் 'சாணார்' என்பதிலிருந்து 'நாடார் க்ஷத்திரியர்' என்றும், வன்னியர்களைப் 'பள்ளி' என்பதிலிருந்து 'அக்நிகுல க்ஷத்திரியர்கள் என்றும் பதிவுசெய்து கொண்டதைக் குறிப்பிடலாம்.அந்த வகையில் அரசுக்கு மனுவாகவும் கண்டனமாகவும் எழுதப்பட்ட சாதிநூல்களின் பட்டியல் கீழ்வருமாறு:

1. ஜாதி சங்கிரகசாரம் - 1872
2. சாதி நூல் (TREATISE ON CASTE) - 1875
3. வேளாண் மரபியல் -1880
4. வன்னியகுல விளக்கம் -1891
5. வருண சிந்தாமணி -1901
6. வருண தர்ப்பணம் -1901
7. வேளாண் மரபுண்மை விளக்கம் -1908
8. விஸ்வப்பிராமணப் பட்டம் -1911

9. சென்சஸ் ரிப்போர்ட் - 1901-1911

10. சென்ஸஸ் ரிப்போர்ட் கண்டனம் - 1911

11. சென்சஸாபாஸ முக்கிய கவனிப்பு (வருடம் இல்லை) முதலியன.

இத்தகைய சாதிநூல்களை அந்தந்தக் குறிப்பிட்ட சாதிகளின் அறிவு வர்க்கத்தினரே எழுதினர் என்பது குறிப்பிடத்தக்கது. இவர்கள் தங்கள் சாதியை உயர்வாகக் கருதிக்கொள்ளும் அதே சமயம் பிற சாதிகளைத் தாழ்வாகக் கருதி சாதிநூல்களை வெளியிட்டனர். இதில் 'ஜாதி சங்கிரகசாரம்' என்னும் நூல் வன்னியர்களை சென்சஸில் தவறாகக் குறித்ததின் பேரிலும் அதனை சென்சஸ் சபையாருக்கு விளக்கவும் சாணார் உள்ளிட்ட சாதிகள் க்ஷத்திரிய அந்தஸ்து கேட்பதைக் கண்டிக்கவுமே எழுதப்பட்டது. இது பெருமளவில் வன்னிய தனவான்களின் பொருளுதவியினால் உண்டானது. அதில் இந்நூல் தோன்றுவதற்கான காரணம் சொல்லப்பட்டுள்ளது. அது வருமாறு. "இக்காலத்திலாதி புராண நூல்களிற்றாழ்ந்தவர்களென்று சொல்லப் பட்டவர்களிப்போது உயர்ந்தவர் களென்று சொல்லி உயர்ந்தவர்களுடைய நடவடிக்கையைக் கொண்டு அத்துமீறினாலப் பேர்ப்பட்டவர்களைத் தண்டித்து அவர்களுக்குரிய வழியிலடங்கி நடக்க கட்டளையிடவும் மேற்படிப் புராண நூல்களிற் சொல்லப்பட்ட உயர்ந்த ஜாதியும் உயர்ந்த அந்தஸ்துக்குரியவர்கள் இப்போதந்த அந்தஸ்து குலைந்து தாழ்ந்தவர்களாகத் தாழ்ந்த தொழிலைக் கைக்கொள்வார்களால் அவர்களைத் தண்டித்துச் சீர்திருத்தி இவர்களை உயர்ந்த அந்தஸ்திற்குக் கொண்டு வரவும்" (1873:3) இந்நூல் செய்யப்பட்டதை விளக்குகிறது.

இதனைத் தொடர்ந்து 1881, 1891 ஆகிய இரு பத்தாண்டுகளிலும் சென்சஸ் சபையார் சாதிகளை வருணப்பாகுபாடு செய்யவில்லை. 1901இல் இதனை மீறி சனசங்கைப் புத்தகத்தில் (Census of India 1901 Vol xv Madras. Part I Report by N.Francis) 'சாதிகளின் சமுதாய அந்தஸ்து' என்கிற தலைப்பில் பார்ப்பனர்களைத் தொடக்கமாகக் கொண்டு இறங்கு வரிசையில் சாதிகளின் வரிசைப்பட்டியல் செய்யப்பட்டிருந்தது. அதில் பார்ப்பனர்களை புரோகிதர்களாக வைத்துக்கொள்கிறவர்கள், மற்றும் கொள்ளாதவர்கள், தொட்டால் தீட்டு உண்டாக்குகிறவர்கள் மற்றும் உண்டாக்காதவர்கள், மாட்டு இறைச்சி சாப்பிடுகிற மற்றும் சாப்பிடாதவர்கள் என்கிற முறையில் வரிசைக்கிரமம் செய்யப்பட்டனர். சாதிவாரியான மக்கள் கணக்கெடுப்பு 1871, 1881, 1891, 1901, 1911, 1921, 1931 ஆகிய ஆண்டுகளில் பத்தாண்டுகளுக்கு ஒருமுறை நிகழ்த்தப்பட்டதை அறிகிறோம். இதற்குப் பின் எடுக்கப்பட்டவை எல்லாம் தாழ்த்தப்பட்டோர், தாழ்த்தப்பட்டோர் அல்லாதார் என்ற முறையிலேயே அமைந்தன. இன்று 2011இல் மீண்டும் சாதிவாரியான கணக்கெடுப்பிற்கு மத்திய அமைச்சரவை ஒப்புதல் அளித்துள்ளது குறிப்பிடத்தக்கது.

மேலே குறிப்பிட்ட சாதியேற்பாட்டுக் கோரிக்கைகளில் இருந்து அயோத்திதாசரின் 'பூர்வீக பவுத்தர்' கோரிக்கை முற்றிலும் வேறானது. இதனால் 1901ஆம் ஆண்டு கணக்கெடுப்பில் பறையர் சாதியினரை 'பூர்வீக பவுத்தர்' என்று பதியுமாறு சென்சஸ் சபையாருக்கு அயோத்திதாசர் கோரிக்கை வைத்தார். இது அன்றைய 'தமிழ்ப் பவுத்த' அரசியலினால் விளைந்த ஒன்றாகும்.

3. கண்டனங்கள் என்பவையும் சாதிநூல்களின் உருவாக்கத்திற்குக் காரணியாக இருந்திருக்கின்றன. அதன்படி கண்டன சாதிநூல்களும் அச்சாதி நூல்களுக்கான சாதிநூல் கண்டனங்களும் இதில் அடக்கம். குறிப்பாக நாடார்கள் பற்றிய கண்டன சாதிநூல்கள் முக்கியமானவை. இத்தகைய சாதிநூல்கள் கண்டனங்களுக்குக் கண்டனம், மறுப்புகளுக்கு மறுப்பு என்ற வகையில் தொடர்ச்சியாக அமைந்தன. கால்டுவெல் 'The Tinnevelly shanars' என்ற தன் நூலில் சாணார் எனும் சொல்லை 'சான்றோர்' என்ற பழைய இலக்கியத் தொடர்ப்பொருளோடு இணைத்துப் பார்த்தார். இது சாணார்கள் மத்தியில் பல விவாதங்களை ஏற்படுத்தியது. இந்நூலுக்கு எதிர்ப்பாக சாமுவேல் சற்குணநாடார் 'Bishop caldwell and the Tinnevelly shanars-1883' என்ற நூலை எழுதினார். இதனைத் தொடர்ந்து இலங்கையில் இருந்த செந்தில்நாத அய்யர் கால்டுவெல்லுக்கு ஆதரவாகவும் சாமுவேல் சற்குணர்க்கு எதிராகவும் 'Shanars Not Kshatricsas' என்ற துண்டு வெளியீட்டை வெளியிட்டார். இதற்கும் மறுப்பாக 'செந்தில்நாதனுக்குச் செருப்படி' என்ற எதிர் துண்டுப் பிரசுரம் ஏசல் மொழியில் சற்குணரால் வெளியிடப்பட்டது. இத்துடன் செந்தில்நாத அய்யரின் 'சாண் ஷத்திரிய பிரசண்ட மாருதம்-1883' என்ற கண்டன சாதிநூலும் சொல்லத்தக்கது. இத்தகைய தொடர் கண்டனங்கள் பத்திரிகைகளிலும் துண்டு பிரசுரங்களிலும் (Tracks)

முன்னெடுக்கப்பட்டதை அறியமுடிகிறது. இன்னும் பல சாதி நூல்கள் கண்டனங்களாகவும் மறுப்புகளாகவும் இருக்கின்றன. அவற்றைப் பின்கண்டவாறு காணலாம். அவை

1. சித்தூர் ஜில்லா அதாலத்துக்கோர்ட்டுத் தீர்ப்பு - 1872

2. சான்றோர் குலமரபு காத்தல் - 1874

3. சாணார் விகற்ப வினாவிடை - 1891

4. வருண சிந்தாமணி -1901

5. தென்னிந்திய சௌராஷ்டிர ஜாதியாரின் சரித்திர சாரசங்கிரகம் -1903

6. வைசியகுல விளக்கம் -1909

7. ஆதிதிராவிடர் என்ற நாமதேயம் -1921

8. நமது குலத்தொழில் -1926

9. நிஜவைசிய நிரூபணமும் போலிவைசிய கண்டனமும் -1931

10. நிஜவைசியர் நிருபண நீர்த்துளிதம் வாணிய வைசிய விளக்கச் சூறாவளி 1931

11. கச்சிப்பல்லவ சோழ சரித்திரச் சுருக்கம் முதலியன. இத்தகைய கண்டன நூல்கள் தனிநபர் சார்ந்த ஏசலாகவும் குறிப்பிட்ட சாதி சார்ந்த ஏசலாகவும் மாறிவிடுகின்றன. சான்றாக 'சாணார் விகற்ப வினாவிடை -1891 என்ற நூல் சாணார்கள் க்ஷத்திரியர் இல்லை என்று கண்டித்து எழுதியதோடு மட்டும் இல்லாமல் அக்குறிப்பிட்ட சாதியை மிகக் கீழான வார்த்தைகளில் சாடியிருப்பதைப் பார்க்கமுடிகிறது. சான்றாகச் சிலவற்றை இங்கு குறிப்பிடலாம். சேரிகிராமணி, சேரிவாணர், சவுண்டிகச் சாணார், சாணாரக்கூட்டம், பறச்சாணான், சக்கிலிச்சாணான், சாணாரவாதம், சாணாரப் பண்டிதர், ஈழசாதி, சாணாப்பாதிரியார், சாணாரப் புராணம், சாணாரக்காசு, சாணாரத்திட்டு, சாணார வாத்தியார், சாணார நாற்றம், சாணாரப்பெண் (சீதை), சாணாரவாதை முதலிய கலைச்சொற்கள் ஏசல் மொழியில் சாணர் அல்லது கிராமணி அல்லது நாடார் எனப்படும் சமூக மக்களைக் கண்டிக்கிறது. இத்தகைய கண்டன சாதிநூல்களினால் இருவேறு சாதிகளிடையே ஏற்பட்ட முரண் அது வழக்காடு மன்றங்களுக்குச் சென்று தீர்ப்பு பெற்றது முதலிய செயல்பாடுகள் தமிழ்ச்சமூகத்தில் நடந்தேறியுள்ளன. கம்மாளர் பற்றி தவறாகக் குறிப்பிட்ட 'வன்னி வம்ஸப்பிரகாசிகை-1912' என்னும் நூலுக்கு கம்மாளர் நீதிமன்றத்திற்குச் சென்றதைச் சான்றாகக் குறிப்பிடலாம். மேற்கண்ட முறைகளில் மட்டுமின்றி சாதிச் சங்கங்களும், சாதிநூல்களை உருவாக்கி இருக்கின்றன. சாதிகளுக்கும் சாதிச் சங்கங்களுக்குமான இணைவை அதன் மூலமே விளங்கிக்கொள்ள முடியும். இந்த வகையில் சென்னையில் செயல்பட்ட சாதிச்சங்கமான 'விஸ்வகர்ம குலோத்தாரண சபை' அதன் பெயரிலேயே ஒரு பிரசுரத்தைத் தொடங்கி 'விஸ்வர்மா சாதி' தொடர்பான பல நூல்களை அச்சிட்டு அதன் சங்க உறுப்பினர்களுக்கு இனாமாக வழங்கியுள்ளதை அறியமுடிகிறது. இது தவிர 1921இல் எழுந்த 'ஆதிதிராவிடர் என்ற நாமதேயம்' என்னும் நூல் பின்வரும் காரணத்திற்காக உண்டாக்கப்பட்டது. அன்று பறையர்களுக்குப் புதிதாக வழங்கும் 'ஆதிதிராவிடர்' என்கிற பெயர் யாரால் உண்டாக்கப்பட்டது என்கிற விவாதத்தில் 5.10.21 அன்று மாணிக்கவேலு முதலியார் என்பார் சுதேசிமித்திரனில் வினா எழுப்பினார். அதற்கு மறுப்பாக, 'திராவிடன்' பத்திரிகையில் எழுந்த விவாதங்களைத் தொகுத்து சென்னை, திருவள்ளுவர் சநாதன தர்மசங்கத்தின் உபதலைவர் பூ.அ. கோவிந்தராஜ்தாஸ் அவர்கள் மேற்படி நூலை 2000 பிரதிகள் அச்சிட்டு வெளியிட்டார். இதன்பிறகு ஆதிதிராவிடர்களுக்குப் பெயர்மாற்ற மசோதாவை எம்.சி.ராஜா அவர்கள் சட்டமன்றத்தில் முன்மொழிந்தார் என்பது குறிப்பிடத்தக்க ஒன்றாகும். இதேபோன்று சாதிப்பெயர் தொடர்பான நூல்களும் எழுந்துள்ளன. அவை நாடார் சாதித்தொடர்பானவை. 'நாடார் என்னும் சொல்லாராய்ச்சி', 'கிராமணி என்னும் சொல்லாராய்ச்சி, 'சான்றோர் என்னும்


உ

ஆதி திராவிடர் வரலாறு.

திரிசிரபுரம் ஆ. பெருமாள் பிள்ளை,
அவர்களால் இயற்றப்பட்டு

சென்னை வியாசர்பாடி,
ஆசிரியரும்,
புரசை தாக்கர் தெரு
ஆதி திராவிட சங்கத்தலைவருமாகிய,
புரசை
ஸ்ரீமான். மு. சிவசுப்பிரமணியம் பிள்ளை,
அவர்களது முயற்சியால்,

சென்னை, விக்டோரியா அச்சுக்கூடத்தில்
பதிப்பிக்கப் பெற்றது.

1922-ம்

இதன் விலை ரூபாய்

சொல்லாராய்ச்சி முதலிய நூல்களை 'க்ஷத்திரிய மித்திரன்' பத்திராதிபர் விஜய துரைசாமி கிராமணி அவர்கள் எழுதி வெளியிட்டார். இவ்வாறு சாதிநூல்களின் உருவாக்கத்திற்குப் பல காரணிகள் செயல்பட்டிருக்கின்றன என்பதை அறியமுடிகிறது. இனி அதன் பொருண்மைகளைப் பார்ப்போம்.

**சாதிநூல்களில் குறிப்பிடப்படும் செய்திகளின் வகைமைகள்**

சாதிநூல்களில் பலவகைச் செய்திகள் காணப்படுகின்றன. அருமை கருதிச் சிலவற்றை மட்டும் இங்கு காணலாம். அவை, சாற்றுக்கவிகள், அங்கிகாரப்பத்திரம், சாதிகளின் பெயர்க்காரணம், சாதித்தொன்மம், சாதிப்பட்டங்கள், சாதிநூல் பாடவேறுபாடுகள், அடிமை சாசனம், சாதிகளுக்கான கட்டுப்பாடுகள் முதலியன

1. சாற்றுக்கவிகள் என்பவை ஒரு நூலையும் அந்நூல் ஆசிரியரையும் புகழ்ந்து பாடுவதாகும். இது ஒருவகையில் அந்நூலுக்கான அங்கிகாரம் எனலாம். சான்றாக 1891இல் எழுதப்பட்ட, வன்னியர்களை 'க்ஷத்திரியர்கள்' என்று வாதிடும் நூலான 'வன்னியகுல விளக்கம்' நூலின் ஆசிரியர் டி. அய்யாக்கண்ணு நாயகர் அந்நூலுக்கான சாற்றுக்கவிகளைப் பார்ப்பனர்களைக் கொண்டே நிரப்பினார். ஒருவரின் சாதி ஏற்பிற்கு பார்ப்பனர்களின் அங்கிகாரம் எந்த அளவிற்கு முக்கியம் என்பதனை இதன் மூலம் புரிந்து கொள்ளலாம். மேலும் இந்நூலைப் பற்றி வன்னியகுல க்ஷத்திரிய மகா சங்க அறிக்கையில் (1940:40) 'இஃது பிராமணர் முதலான பண்டிதர்களால் அங்கிகரிக்கப்பட்டதென்பதற்கு அதில் அச்சிட்டிருக்கும் அவர்கள் கருத்தால் விசிதமாகும். இப்புத்தகம் சங்க மூலமாய் கவர்ன்மெண்டார், கௌன்சலர்கள், கலெக்டர்கள், ஜட்ஜிகள் முதலானவர்களுக்கு அனுப்பப்பட்டது. சில கலெக்டர்களும் ஜட்சிகளும் இப்புத்தகத்தை அங்கிகரித்து இதற்கூறிய விஷயம் சரியென்று ஒப்புக்கொண்டிருக்கிறார்கள்' (2006:115) என்றுள்ளது. இதுபோல் இன்னொரு முக்கியமான நூல் 'வருணசிந்தாமணி-1901' என்கிற வேளாளர் சாதி நூலாகும். இந்நூல் வேளாளர்களை 'வைசியர்கள்' (பூவைசியர்) என்று வாதிடுகிறது. இதற்குச் சாற்றுக்கவி அளித்தவர்கள் தமிழகத்தின் மிக முக்கியமாக அறியப்படும் சி. சுப்பிரமணிய பாரதியும் உவே. சாமிநாதய்யரும் ஆவர். இவர்கள் இருவரும் பார்ப்பனச் சமூகத்தினர் என மனதில் கொண்டால் இதன் அரசியல் விளங்கும். இது தவிர அதன் முன்னுரையில் இந்நூலை அங்கிகரித்து சான்றிதழ் அளித்த 13 தீஷிதர், சாஸ்திரியார், பட்டாரகர் உள்ளிட்டவர்களின் பெயர்கள் பட்டியலாகக் கொடுக்கப்பட்டுள்ளன. உடன் இந்நூல் உருவாக்கத்திற்குப் பொருளுதவி செய்த வேளாளர் சாதியைச் சேர்ந்த வணிகர்கள், வக்கீல்கள், உத்யோகஸ்தர்களின் பெயர்பட்டியலும் கொடுக்கப்பட்டுள்ளன.

2. சாதிகளின் பெயர்க்காரணத்தைப் பொருத்தவரை ஒவ்வொரு சாதிக்குமான பெயர்கள் சில குறிப்பிட்ட தொன்மங்களைக் கொண்டிருக்கின்றன. அவை அச்சாதியின் உற்பத்தி, இடப்பெயர்வு, தொழில் ஆகியவைகளை மையப்படுத்தியே அமைந்தவை. அந்த வகையில் அன்று வரை பறையர், பஞ்சமர், புலையர், வள்ளுவர் என்று வழங்கப்பட்டு வந்தவர்கள் 'பழந்தமிழர்' என்று பொருள்படும் 'ஆதிதிராவிடர்' என்ற பெயரை எளிதாக ஏற்றுக் கொண்டார்கள். தஞ்சை வைரக்கண் வேலாயுதப் புலவர் என்பார் இதனை முதன்முதலாக வழங்கினார். இப்பெயர் அன்று 'திராவிட பாண்டியன்' முதலிய தலித் இதழ்களில் பயின்று வந்ததைக் காணமுடிகிறது. இதுபோன்று செய்யும் தொழிலாலும் பல சாதிகளுக்குச் சாதிப்பெயர்கள் வழங்கப்பட்டுள்ளன. அவற்றைச் சுருக்கமாகக் காண்போம்.

| | |
|---|---|
| கம்மவார் | கம்ம (தெலுங்கில்) - ஒலை. அதை எதிரியிடம் இருந்து பாதுகாத்தவர். |
| கள்ளர் | வீரர் என்னும் பொருள் பற்றியே கள்வர் அல்லது கள்ளர் சாதிப்பெயர் உண்டானது. |
| செங்குந்தர் | செங்குந்தம் = ஈட்டி, அதனைக் கையில் உடையதால் இப்பெயர் தோன்றியது. |
| நாட்டுக்கோட்டை நகரத்தார்கள் | ஏழு வழியினர் எனப்படும் நகரத்தார்கள் இளையாற்றக்குடி நகரத்தார்கள் எனப்பட்டனர். இந்நகரம் நாட்டுக்கு நடு மண்டலமாதலால் நாட்டுக்கோட்டை நகரத்தார்கள் எனப்பட்டனர். |

நாடார் — நாடு=ஊர், அதனையுடையவர்கள் நாடார்கள் எனப்பட்டனர். வேறு சாதி நூல்களில் நாடார் என்பதற்கு ஊரை நாடாத தீண்டப்படாதவர்கள் என்றும் பொருள் உரைக்கின்றன. இவர்களுக்கு வழங்கும் வேறு பெயரான 'கிராமணியார்' என்பதைக் கிராம+அந்நியர் எனப் பிரித்து கிராமத்திலிருந்து அந்நியப்படுத்து வதையும் பார்க்கிறோம். நீற்றுவேளாளர் தஞ்சை அரண்மனை கட்டும் காலத்தில் சாதுர்யமாக சுண்ணாம்பை நீற்றுக் கொடுத்ததால் இப்பெயர் வந்ததாகச் சொல்லப்படுகிறது. இதுபோல் பல சாதியினருக்கும் காரணப் பெயர்கள் இருக்கின்றன என்பதை அறியலாம்.

3. சாதித்தொன்மம் என்பது ஒவ்வொரு சாதிக்குமான கூட்டு மனநிலையில் தோன்றுபவை என்று மானிடவியலாளர் குறிப்பிடுகின்றனர். இத்தகைய தொன்மக் கதைகளை உடைய சாதிப்புராணங்கள் தமிழகத்தில் ஏறக்குறைய 100 சாதிகளில் காணப்படுவதாக பக்தவத்சல பாரதி தம் நூல் ஒன்றில் குறிப்பிடுகிறார். அதேநூலில் "சாதிப்புராணங்களின் அளவை நோக்கும்போது தேசிய சராசரி அளவு 16.895% ஆக உள்ளது. இந்தியாவில் மக்கள் என்னும் திட்டத்தை மேற்கொண்ட பின் தமிழகத்தில் மொத்தம் 364 சமூகங்கள் உள்ளன என்று இத்திட்டம் கணக்கிட்டுள்ளது. இவற்றுள் 143 தமிழ்ச் சமூகத்தினர் வரலாற்றுக் குறிப்புகளைக் கொண்டவர்களாக உள்ளனர் என்னும் முடிவு கிடைத்துள்ளது." (2008:366) என்ற செய்தியும் அறியப்படுகிறது. இத்தன்மைய சாதியக் கதையாடல்களுக்கு அடிப்படை வாய்மொழி வழக்காறாகும். வாய்மொழியாக மக்களின் கூட்டு மனநிலையில் வழிவழியாகக் கடத்தப்படும் இத்தொன்மக்கதை அச்சு ஊடகத்தின் வரவால் அச்சாக்கம் பெற்று அதன் சமுதாயத்தினருக்குப் புதிய வடிவில் சென்று சேருகின்றன.

தமிழகத்தில் பல சாதிகளுக்கும் பல தொன்மக்கதைகள் இருப்பதால் இங்கு சான்றுக்காக ஒன்றை மட்டும் குறிப்பிடலாம். சௌராஷ்டிர தேசத்திலிருந்து இங்கு புலம்பெயர்ந்து வாழும் சௌராஷ்டிரர்கள் அவர்களின் இன்றைய இழிநிலைக்குப் பின்வரும் தொன்மக்கதையைச் சொல்கின்றனர். இதன்படி "பூர்வகாலத்தில் சாஷாத் மஹாவிஷ்ணுவினுடைய அநுமதியினால் இந்திரன் ஏகாதிஷ்டம் என்னும் எக்ஞம் செய்த காலத்தில் சௌராஷ்டிர பிராம்மணர்களுக்கு ஏகோதிஷ்டம் என்னும் தானம் கொடுக்கப்போனார். அப்போது அந்த தானத்தை வாங்கமாட்டோமென்று நிராகரித்தார்கள். ஆகையால் இந்திரனுக்கு கோபமுண்டாகி நீங்கள் தரித்திரர்களாய் போகக்கடவீரென்று சபித்தார்" (1911: 7) இன்றுவரை இச்சமூகத்தினர் இதனால்தான் தரித்திரர்களாய் உள்ளோம் என்று கருதி வருகின்றனர். நகரத்தார்களின் இடப்பெயர்வு கதையும் நாடார் மற்றும் வன்னியர்கள் பிற நாட்டினரால் தாங்கள் இழிநிலைக்குத் தள்ளப்பட்டதாக, அவரவர்களின் தொன்மக் கதைகளைச் சொல்கின்றனர்.

4. சாதிப்பட்டங்களைப் பொருத்தவரை தமிழ்நாட்டில் உள்ள சாதிகளுக்கு அளவேயில்லை எனலாம். ஒரு சாதிக்கான பட்டம் இன்னொரு சாதிக்குமான பட்டமாகவும் எதார்த்தத்தில் அமைவதைப் பார்க்கிறோம். சான்றாக 'பிள்ளை' என்னும் பட்டப்பெயர் தமிழகத்தில் வேளாளர், பறையர், இடையர் ஆகிய சாதிகளில் வழங்கப்படுகிறது. 'முதலியார்' என்ற 'முதலி' பட்டம் இங்கு செங்குந்த முதலிகளுக்கும் உண்டு வேளாள முதலிகளுக்கும் உண்டு. இத்தகைய பட்டப்பெயர்கள் ஒரு குறிப்பிட்ட சாதியை அடையாளப்படுத்துவதில் சிக்கலை ஏற்படுத்துகின்றன.

"இந்தியாவில் மக்கள் என்னும் திட்டம் தொடங்கப்பட்ட போது அப்போதிருந்த அரசுக் கணக்குப்படி 6,748 சமூகங்கள் இருக்கின்றன என்று கணக்கில் கொள்ளப்பட்டிருந்தது. ஆனால், இந்தியா முழுமைக்கும் ஒரு சேர இம்மதிப் பாய்வகத்தால் முறையான அணுகுமுறை மூலம் கணக்கிடப்பட்ட போது இந்தியாவில் 4,635 சமூகங்கள் மட்டுமே இருப்பதாகப் பதிவாகியுள்ளது. பல பெயர்கள் கூறியது கூறலாகவும் ஒரே சமூகத்திற்கு வெவ்வேறு பெயர்கள் பதிவாகியும் இருந்தமை கண்டறியப்பட்டன". (2008:365) மேற்கண்ட கூற்றின் மூலம் சாதிப்பட்டங்கள் குறித்த சிக்கல்களைப் புரிந்துகொள்ள முடியும். ஒவ்வொரு சாதிக்கும் நூற்றுக்கணக்கில் பட்டப்பெயர்கள் உள்ளன. இதில் 'கள்ளர்' சாதித்

தொடர்பான 348 பட்டங்களை நமு. வேங்கடசாமி நாட்டார் அவர்கள் தம் 'கள்ளர் சரித்திரம் -1923' நூலில் குறிப்பிட்டுள்ளார். சாதிப்பட்டம் தொடர்பாகத் தமிழகத்தில் எழுந்த இன்னொரு செய்தியையும் குறிப்பிட்டாக வேண்டும். 1930களில் முதலமைச்சராக இருந்த சி. ராஜகோபாலாச்சாரியார் ஒரு அரசாணை பிறப்பித்தார். அதில் கம்மாளர் என அறியப்படும் விஸ்வகர்மாக்கள் இனி தங்கள் பெயருக்குப்பின் 'ஆச்சாரி' என்று எழுதாமல் 'ஆஸாரி' என்றே எழுதவேண்டும் என்றிருந்தது. சுயமரியாதை இயக்கத்திலிருந்து இதற்குக் கடும் கண்டனங்கள் எழுந்தன. தமிழகத்தில் விஸ்வகர்மாக்களும், அய்யங்கார்களும் இப்பட்டப் பெயரினைப் பயன்படுத்துகின்றனர். இதன் கதையை 'விஸ்வகர்ம பிராமண வம்சப் பிரகாசிகை -1950' என்ற நூல் குறிப்பிடுகிறது. "ஆருஷேயர்களின் பொதுப் பட்டப் பெயராகிய அய்யர், அய்யா என்னும் பட்டங்களை விஸ்வகர்மப் பிராம்மணர் பண்டு தொட்டே விரும்பினார்களில்லை. ஆயினும் இராமானுசர் காலத்தில் தோன்றிய ஆருஷேய வைணவர்கள் 'ஆச்சாரி' 'ஆச்சார்ய' 'ச்சாரி' என்ற பட்டங்களைப் போட்டியிட்டு வகிக்கத் தொடங்கியதிலிருந்தே இவ்விரு வகுப்பாருக்கும் பட்டப்பெயர் காரணமாகப் போராட்டம் எழுந்தது. (1950:142) பின்னர், தங்கள் பட்டப்பெயர்களால் அழைத்துக்கொள்ளும் உரிமை ஒவ்வொரு ஜாதியாருக்கும் உண்டென்பதால் இது கைவிடப்பட்டது. விஸ்வகர்மாக்களுக்கு ஆச்சாரி பட்டம் நிலைத்தது.

5. பாடவேறுபாடும் நூற்பாட்டுக்களும் என்பதில் ஒரு சாதிக்கான செய்யுள்கள் மற்றவர்களால் பதிப்புச் செய்யும்போது சாதி காரணமாகப் புரட்டப்பட்டிருக்கின்றன. சான்றாக 1875இல் திருவாரூர் ஞானப்பிரகாசம் எழுதிய 'சாதிநூல்' என்கிற நூலில் பழையர் (கள் விலைஞர்) குறித்துவரும்.

'புதுமணம் புரிய வந்த
புத்திரர் பழைய ராகி
மதுபனை யீந்திற் றூக்கு
முட்டியில் முட்டா தூறும்' (6)

என்ற செய்யுள், அதேநூலை 1909இல் 'சாதிபேத விளக்கம்' எனும் புதுப்பெயர் புனைந்து வெளியிட்ட யாழ்ப்பாணம் சி. செல்லையாப்பிள்ளை மற்றும் நா. சிவசுப்பிரமணிய சிவாச்சாரியார் பதிப்பில்

'புதுமணம் புணர வந்த
புத்திரர் சான்றா ராகி
முதுபனை யீஞ்சிற் றூக்கு
முட்டியில் முட்டியூறு' (58)

என்று புரட்டி பதிப்பிக்கப்பட்டிருக்கிறது. இதனால் 'சான்றார்' என்கிற நாடார் சாதிப் பெயர் இவ்விடத்தில் 'கள்விற்பவர்கள்' என்ற பொருளில் வந்துள்ளது. நாடார் சமூகத்தினர் தாங்கள் கள்விற்பவர்கள் இல்லை என்று இதனை எதிர்த்து நூல் (நம் குலத்தொழில் யாது-1926) எழுதியிருப்பதும் ஒப்புநோக்கத்தக்கது. அதேபோல் 'கபிலரகவல்' செய்யுளில்

*காவிரிப்பூம் பட்டினத்தில்கள்விலைஞர் சேரியில்*
*சான்றா ரகந்தனில் உறுவை வளர்ந்தனள்*
*(1918, 111 - 112)*

என்று இருக்க நாடார் சமூகத்தவரான விஜய துரைசாமி கிராமணி அவர்கள் தாம் வைத்திருக்கும் கபிலரகவல் ஏட்டுப்பிரதியில்

'பழைய ரகந்தனில் உறுவை வளர்ந்தனள்' (112) என்றுள்ளதைக் குறிப்பிடுகிறார். இதுபோல் வேளாளர் தொடர்பான சாதிப் புரட்டுகள் சூடாமணி நிகண்டு, பெரிய புராணம், திருவாசகம் ஆகிய நூல்களில் நடந்திருப்பதாக 'வருணசிந்தாமணி' குறிப்பிடுகிறது. இங்கு சூடாமணி நிகண்டு பற்றி மட்டும் பார்ப்போம். மண்டல புருடனால் செய்யப்பட்ட சூடாமணி நிகண்டை 1839இல் முதன்முதலாகப் பதிப்பித்தவர் தாண்டவராய முதலியார். இதில் 12 தொகுதிகள் இடம் பெற்றிருந்தன. இதன் இரண்டாவது மக்கட்பெயர்த் தொகுதியில் 107 பாடல்களில் முதல் இரண்டு பாடல்கள் 'வைசியர்' என்போர் 'வேளாளர் என்றும் மேலும் அவ்வைசியர், கோவைசியர், தனவைசியர், பூவைசியர் என்றும் சொல்லப் பட்டுள்ளன. மூன்றாவது பாடல் இம்மூவர்க்கும் ஏவல் தொழில் செய்பவரான 'சூத்திரர்' பற்றி சொல்லப்பட்டுள்ளது. இதனைத் தொடர்ந்து இந்நிகண்டைப் பரிசோதித்து 1850இல் பதிப்பித்த ஈழநாட்டு அறிஞர் ஆறுமுகநாவலர் பதிப்பில் இவையும் அப்படியே பதிப்பிக்கப்பட்டன. பின்பு 1848இல் வேதகிரி முதலியார் பதிப்பை நோக்கி நாவலரின் சூடாமணி நிகண்டு இரண்டாம் பதிப்பில் 'வேளாளரை' வைசியர் என்ற செய்யுளைப் புரட்டி வேளாளரைச் 'சூத்திரர்' என்று

பதிப்பித்ததாக 'வருணசிந்தாமணி' ஆசிரியர் கனகசபைப் பிள்ளை குறிப்பிடுகிறார். அதேபோல் 1899ஆம் ஆண்டு ஈழநாட்டு அறிஞர் கதிரைவேற் பிள்ளை (நாவலரின் மாணாக்கர்) தொகுத்த 'தமிழ்மொழி அகராதியில்' வேளாளரைச் 'சூத்திரர்' எனக் குறித்தார். இச்செயல்பாடு 'வேளாளர்கள் வைசியர்தாம்' எனும் அபிமானம் உடைய தமிழ்நாட்டு வேளாளர்களிடையே கொந்தளிப்பை ஏற்படுத்தியது. மறுப்புக்களும், கழிவுகளும், கண்டனங்களும் பெருமளவில் அவ்விரு அறிஞர்களுக்கும் குவிந்தன.


வருண சிந்தாமணி
(இரண்டாம் பதிப்பு)
1925
Copy Right Registered.

வருணசிந்தாமணியின் விவகாரக்காண்டம் முழுமையும் இவ்விரு அறிஞர்களைத் திட்டவே தமிழ்நாட்டு வேளாளர்கள் பயன்படுத்தினர். இச்சண்டை பின்பு அருட்பா X மருட்பா போரில் இருவேறு அணியாகச் செயல்பட்டதைப் பொ. வேல்சாமி குறிப்பிடுகிறார். இவ்வாறு பாட வேறுபாடுகளும் நூற்புரட்டுக்களும் சாதிப்புரட்டு என்ற பெயரில் தமிழகத்தில் நடந்தேறியுள்ளது என்பதை அறியமுடிகிறது.

6. சாதிய மேலாண்மை என்பது ஒரு குறிப்பிட்ட ஆதிக்கச் சாதியினர் குறிப்பிட்ட ஒடுக்கப்பட்ட சாதியின் மீது அதிகாரம் செலுத்துவதைக் குறிக்கும். இதன்படி தமிழகத்தில் வேளாளர்கள் 'குடித்தொழில்' என்ற பெயரில் 18 சாதிகளைத் தங்களுக்குப் பரிவார (பணிவிடை செய்யும்) சாதிகளாக வைத்துள்ளனர். தமிழகத்தைப் பொறுத்தவரை நிலவுடமையும் கோவில் நிர்வாகமும் வேளாளர் கையிலேயே இருந்ததை அறிகிறோம். இதனால் அவர்களுக்குக் கீழ் வேலை பார்க்கும் குடித்தொழில் சாதியினர் மிக எளிதாக அடிமைப்படுத்தப்பட்டனர். 'வருணசிந்தாமணி -1901இல் பறையர், பள்ளி (வன்னியர்) சாதியினர் வேளாளர்களுக்கு எழுதிக்கொடுத்த அடிமை சாசனம் கொடுக்கப்பட்டுள்ளது. இதனால் வேளாளர்கள் தங்களை நிலவுடைமையாளர்களாக (நிலக்கிழார், மிராசுதார்) மகுடம் சூட்டிக் கொண்டனர். வேளாளர்களின் பரிவார சாதிகளைப் பல வேளாளர் சாதிநூல்கள் குறிப்பிடுகின்றன. அவை 1. நாவிதன் 2. குயவன் 3. வண்ணான் 4. ஓச்சன் (கணக்கன்) 5. கொல்லன், 6. தட்டான் 7. தச்சன் 8. கன்னான் 9. சிற்பி 10. செக்கான் 11. இலை வாணியன், 12. எருத்துவாணியன் 13. மாலைக்காரன் (சாத்தானி) 14. பாணன் (தையக்காரன்) 15. பள்ளி (வன்னியன்) 16. வலையன், 17. இடையன் 18.பறையன் முதலிய சாதிகளாகும்.

7. சாதிக்கட்டுப்பாடுகள் என்னும் தலைப்பில் சாதிநூல்களில் ஒவ்வொரு குறிப்பிட்ட சாதிக்கும் குறிப்பிட்ட சாதி தர்மம் வழங்கப்பட்டிருக்கும். சாதிச்சங்கங்கள் சில கட்டுப்பாடு களைத் தங்களுக்குத் தாங்களே விதித்துக் கொண்டிருக்கின்றன. அவை புத்தக வடிவிலும் மக்களுக்கு வழங்கப்பட்டு இருப்பதைப் பார்க்கலாம். சான்றாக வேளாளரின் ஆசார திட்டங்களைப் பேசும் சாதிநூல் ஒன்றில் "காவல்தானே பாவையர்க்கழகு என்னும் மூதுரைக்கிணங்க ஸ்திரீகளுடைய பதிவிரதா தன்மைக்குரியது அவர்கள் கற்பேயாதலால், தங்கள் கணவர்களல்லாத காலத்தில் வீட்டில் வரும் பாலர், விருத்தர் தவிர, இதர புருஷர்களுடன் நேரில் வார்த்தை சொல்வதும், தெருவாயிலில் நிற்பதும் தனிமையாயெங்குந் திரிவதும் கூடாவாம்" (1915: 20) என்று இராயர்குலக் கவுண்டர் பெண்களுக்குக் கட்டுப்பாடு விதிக்கப்பட்டுள்ளது. அதேபோல் சாதிநூலில் ஒன்றிலும் 'பெண்களுக்கு மாராப்புக்குரிமை நடத்தினால் ஜாதிப்பொதுப் பண்டுக்காக ரூபாய் 1-0-0 கொடுத்து ஜாதி கொடுக்கும் கெடுவின் பேரில் வழக்கம்போல் செய்துகொள்ள வேண்டியது (1926:23) என்று விதிக்கப்பட்டதில் இருந்து சாதிவெறியும் ஆணாதிக்கமும் ஒரு புள்ளியில் இணைவதைப் பார்க்கலாம். இவ்வாறு சாதிநூல்களின் பொருண்மைகள் அமைந்துள்ளதை மேற்குறிப்பிட்டவற்றில் இருந்து விளங்கிக் கொள்ள முடியும்.

### தமிழ்ச் சமூக வரலாற்றில் சாதிநூல்கள்

சாதி நூல்களைப் பொருத்தவரை தமிழ்ச் சமூக வரலாற்றில் மிகப்பெரிய மாற்றங்களை

சமூக அரங்கில் தங்கள் சாதிக்கான தகுதிப்பாடுகளைக் கேட்டுக்கோரிய சாதிகளானக் கள்ளர், மறவர், அகம்படியார், பறையர், வன்னியர், நாடார் உள்ளிட்ட சாதிகள் தொடக்கத்தில் சாதிச் சங்கங்களாகவே ஒன்றிணைந்தன. தங்கள் கோரிக்கைகளை மாநாடு கூட்டி தீர்மானங்கள் இயற்றியும் அது தொடர்பான நூல்களை வெளியிட்டும் அரசுக்கு மனு செய்தும் இத்தகைய சாதிகள் தங்கள் வருணப் பாகுபாடை உயர்த்திக் கொண்டன.

ஏற்படுத்தியுள்ளன என்று உறுதியாகக் கூறமுடியும். ஒவ்வொரு சாதிநூலும் அது சார்ந்த சமூகத்தின் அக்கால அசைவியக்கத்தை எடுத்துக்காட்டுவதாய் அமைந்துள்ளன. குறிப்பிட்ட சாதிகள் ஒன்றிணைந்து முக்குலத்தோர் எனத் தனக்குள் பரஸ்பர உறவை வைத்துக் கொண்டிருப்பதையும் இதன்மூலம் பார்க்க முடியும். சான்றாகக் கள்ளர், மறவர், அகம்படியார் இவர்கள் தமக்குள் ஒன்றிணைந்து அரசியல் எழுச்சி பெற்றமையைக் குறிப்பிடலாம். இவ்வெழுச்சி அவர்களைக் குற்றப்பரம்பரை என்ற அடிமை முறைக்கு எதிராகக் கலகம் செய்யத் தூண்டியது. மேற்குறிப்பிட்ட மூன்று சாதிகளுக்கும் தனித்தனி சாதிநூல்கள் இருப்பினும் இம்மூன்று சாதிகளையும் இணைத்து எழுதப்பட்ட நூலான 'மூவேந்தர் குல சரிதை என்னும் சேர, சோழ, பாண்டிய மரபினராகிய கள்ளர், மறவர், அகம்படியார் குல விளக்கம் -1940' என்னும் நூலை இதற்கு ஆதாரமாகக் காட்டலாம்.


உ.
சிவமயம்.
திருச்சிற்றம்பலம்.
சாணார்விகற்பவினாவிடை.
இஃது
சென்னையிலுள்ள
வன்னியகுலபதிகள்வேண்டிக்கொண்டமையால்
ம-ள-ள-ஸ்ரீ
கோடம்பாக்கம்
மு. துரைசாமிநாயகரவர்களால்
இயற்றப்பட்டு,
சென்னை
அமெரிக்கமிஷன் என்னும் அச்சுக்கூடத்தில்
பதிப்பிக்கப்பட்டது.

சமூக அரங்கில் தங்கள் சாதிக்கான தகுதிப்பாடுகளைக் கேட்டுக்கோரிய சாதிகளான கள்ளர், மறவர், அகம்படியார், பறையர், வன்னியர், நாடார் உள்ளிட்ட சாதிகள் தொடக்கத்தில் சாதிச் சங்கங்களாகவே ஒன்றிணைந்தன. தங்கள் கோரிக்கைகளை மாநாடு கூட்டி தீர்மானங்கள் இயற்றியும் அது தொடர்பான நூல்களை வெளியிட்டும் அரசுக்கு மனு செய்தும் இத்தகைய சாதிகள் தங்கள் வருணப் பாகுபாடை உயர்த்திக் கொண்டன. உதாரணமாக நாடார்களின் தொடர்ச்சியான போராட்டத்தின் விளைவாக 'சாணார்' என்ற இழிபெயரை நீக்கி இனி நாடார் என அழைக்கப்படுவர்' என்ற அரசாணை (G.O.785) ஜுலை 1921இல் பெறப்பட்டது. இதற்கு முன் ஏப்ரல் 1921இல் 'ஒரு சமுதாய மக்கள் அவர்கள் சார்ந்திருக்கும் சமூகத்தின் பெயரை அவர்கள் விரும்பிய வண்ணமே இனி பயன்படுத்தலாம்' என்ற அரசாணையும் (G.O.56) குறிப்பிடத்தக்கது. இதனால் குடிமதிப்புச் சபையார் நாடார்களைச் 'சூரியகுலக் கிராமணிகள்' 'நாடார் க்ஷத்திரியர்' என்று பதிந்து கொள்ளுமாறு ஆணை பிறப்பித்தனர். இத்தகைய சமூக அங்கீகாரத்திற்குப்பின் 'நாடார் மகாஜன சங்கத்தின்' செயல்பாடு இருந்துள்ளதை அறியமுடிகிறது. நாடார்களைப் போல் 'க்ஷத்திரியர்' அபிமானம் கொண்டவர்களான வன்னியர்களுக்கும் தொடர்ச்சியான போராட்ட வரலாறு உண்டு. இதற்காக அவர்கள் 1860ஆம் ஆண்டின் 21ஆம் ஆக்டின்படி (Act) 1890இலேயே 'வன்னியகுல க்ஷத்திரிய மகாசங்கத்தைக் கூட்டினர். 1891இல் வன்னியர் 'க்ஷத்திரியர்' என்பதற்கான ஆதாரங்களைத் திரட்டி ஆங்கிலத்தில் எழுதப்பட்ட நூலான 'வன்னியகுல விளக்கம்' நூலுடன் 20,000 பேர்களின் கையொப்பத்துடன் அரசுக்கு மனு செய்தனர். ஒவ்வொரு பத்தாண்டுகளுக்கு எடுக்கப்படும் மக்கள் தொகைக் கணிதத்தில் தங்களை 'வன்னியகுல க்ஷத்திரியர்' எனப் பதியுமாறு கோரிக்கை வைத்தனர். இத்தகைய தொடர்ச்சியான போராட்டத்தின் விளைவாக சென்னை குடிமதிப்புச் சபையார் 14.1.1928இல் மேற்படி சங்கத்திற்கு எழுதிய கடிதத்தில் வன்னியர்களை இனி 'வன்னியகுல க்ஷத்திரியர்' எனக் குறிப்பதாக ஆணை பிறப்பித்தனர். இவ்வாறு தங்கள் சமூக அந்தஸ்துக்காக 'சாதிச்சங்கங்கள்' மூலம் அணிதிரண்ட தமிழகத்துச் சாதிகள் இன்று அரசியல் அதிகாரத்திற்காகச் 'சாதிக்கட்சிகளாக' திரண்டிருக்கின்றனர் என்பதில் வியப்பேதும் இல்லை. இச்சமயம் பெரியார் ஈ.வெரா சேலம்

வன்னிய குலக்ஷத்திரியர் மகாநாட்டில் சொன்ன ஒரு செய்தி மட்டும் நினைவிற்கு வருகிறது. அது 'க்ஷத்திரியப்பட்டத்திற்கு இத்தனை பேர்கள் ஒருவருக்கொருவர் போட்டியும் சண்டையும் போட்டுக் கொள்ளுகின்றார்களேயொழிய இதன் பலனாய் எச்சில் கிண்ணம் கழுவுபவனுக்கும் பிச்சையெடுத்து வாழ்பவனுக்கும் தரகு வேலை செய்பவனுக்கும் நோகாமல் பிராமணப் பட்டம் கிடைத்துவிட்டது.' (குடியரசு ஜுன் 1930:13) என்பதாகும்.

இத்தகைய சாதிநூல்களின் வழியேதாம் தமிழ்ச்சமூகப் பண்பாட்டு வரலாற்றைக் கட்டமைக்க முடியும். காலனியச் சூழலில் தீவிரம் பெற்ற 'சாதி என்கிற சரக்கு இன்று பின்காலனியச் சூழலில் சாதியமாக தீவிரப்பட்டிருக்கின்றது. விடுதலை அடைந்து அறுபது ஆண்டுகளுக்கு மேலாகியும் இன்னும் சாதியை ஒழித்த பாடில்லை. சாதிய வன்கொடுமைகள் இன்னும் தொடர்ந்து கொண்டுதான் இருக்கின்றன. இந்நிலையில் சாதி தோன்றிய இடம் எது? அது தீவிரப்பட்ட இடம் எது என்பதற்கு போதிய ஆதாரங்கள் இல்லை. சாதி என்கிற பழைய சரக்கு அச்சுவாகனம் ஏறியபோதே அதன் பரவல் அதிகமானது எனக் கூறமுடியும். எனவே தமிழ் அச்சுப் பண்பாட்டில் சாதிநூல்கள் மிகுந்திருந்த 19 மற்றும் 20ஆம் நூற்றாண்டுகளை மீளாய்வு செய்ய வேண்டிய கட்டாயத்தில் இருப்பதை மீண்டும் இச்சாதிநூல்கள் நமக்கு உணர்த்துகின்றன.

**துணைநூற்பட்டியல்**


1. வீ. அரசு, தமிழ் அச்சுப்பண்பாட்டின் கதை (தொடர் கட்டுரை), உங்கள் நூலகம், இருமாத இதழ், செப், அக் 2007.
2. அ.க. பொன்னுசாமி நாடார், பாண்டியகுல விளக்கம்: மாதவநிவாச வச்சுக்கூடம், 1883 முதல்பதிப்பு, 1899 இரண்டாம் பதிப்பு.
3. ம.கெப்பய்யர், இராயர்குல மகாநாடுதீர்ப்பு விவரம்: ஹக்கீம் பிரஸ், போடிநாயக்கனூர், 1926.
4. தொழுவூர் வேலாயுத முதலியார் (மொழி பெயர்த்தவர்) வேளாண் மரபியல்: Printed At the Scottish Press by Graves, 1880.
5. குண்ணம் முனிசாமிப்பிள்ளை, ஜாதிசங்கிரக சாரம், கவிரஞ்சனி அச்சுக்கூடம், 1872.
6. காவிரிநாடன், வன்னியப் பெருங்குலம், அண்ணல் வெளியீடு, சென்னை, 2006.
7. பக்தவத்சல பாரதி, தமிழர் மானிடவியல், அடையாளம் பதிப்பகம், திருச்சி, 2008 இரண்டாம் பதிப்பு
8. ஆர். கிருஷ்ணபண்டிதர் ஜி.கே. ராமஸ்வாமி அய்யர், சௌராஷ்டிரா சரித்திரம், சுதேசி அச்சியந்திர சாலை, கும்பகோணம், 1911.
9. T.M. தெய்வசிகாமணி ஆச்சாரியார், K.K. சுப்ரஹ்மண்ய ஆச்சாரியார், விஸ்வப்பிராமண வம்சப் பிரகாசிகை, சாது அச்சுக்கூடம், இராயப்பேட்டை, 1950
10. வீ. ஆறுமுகஞ்சேர்வை, கபிலரகவல் மூலமும் உரையும் ரிப்பன் அச்சியந்திர சாலை, 1918.
11. வி. சுந்தர முதலியார், தொண்டைமண்டலம் சோழிய வேளாள மரபார் ஏற்படுத்திக் கொண்ட விவகார ஆசார சட்டம்: For Private Cerculation only; மஹாலட்சுமி விலாச அச்சுக்கூடம், சென்னை, 1915.
12. பெரியார் ஈ.வெரா, குடியரசு, ஜுன் 1930
13. ஞானப்பிரகாச சுவாமிகள், சாதிநூல் (Treatise on Caste) கலாநிதி அச்சுக்கூடம், சென்னை, 1875.
14. E.Keys, Census of the Madras Presidancy -1871; The Government Gazette Press, Madras 1874.




# ஜனவிநோதினி

க. செந்தில்ராஜா

ஐரோப்பியர் வருகையால், பதினாறாம் நூற்றாண்டில் தென்னிந்தியாவிற்கு அச்சு இயந்திரம் கொண்டு வரப்பட்டது. பத்தொன்பதாம் நூற்றாண்டு வரை கிறித்தவமதத்தைப் பரப்பும் பணியை முதன்மையாகக் கொண்டு பரவலாகச் செயல்பட்டது. அச்சு ஊடகத்தின் பரவலாக்கம் காரணமாக ஓலைச்சுவடியில் இருந்த பல நூல்கள் அச்சு வடிவம் பெற்றன. தொடக்ககால அச்சு நூல்கள் பெரும்பாலானவை சிறு சிறு நூல்கள் என்பதை இங்கு நினைவில் கொள்ள வேண்டும். தவிர, கிறித்தவ மத பாதிரிமார்கள் மதப் பரப்புதலுக்குத் தேவையான பிரசுரங்களை வெளியிட்டு வந்தனர்.

இதன் தொடர்ச்சியாக 1818இல் 'சென்னை சமயத் துண்டுப் பிரசுர சங்கம்' நிறுவப்பட்டு சென்னை ராஜதானியில் கிறித்தவ மதக் கொள்கைகளைப் பரப்பும் வேலையைக் கிறித்தவ பாதிரிமார்கள் செய்து வந்தனர். இச்சங்கமும் சென்னைக் கிறித்தவ சமயப்பரப்புக் கழகமும் இணைந்து 1831இல் 'தமிழ் மேகசின்' என்ற கிறித்தவ சமய இதழைத் தொடங்கினர். இதனைத் தொடர்ந்து பல கிறித்தவ இதழ்கள் தோன்றின. 1832இல் அரசின் நடப்பு நிகழ்வுகளை மையமாகக் கொண்டு 'புனித ஜார்ஜ் கெஜட்' என்ற அரசிதழ் வெளியானது.

1835இல் 'சர் சார்லஸ் மெட்கஃப்' என்ற தலைமை ஆளுனரால் அச்சு ஊடகம் பொதுமையாக்கப்பட்டது. இதற்குப் பின்னர் சமகால நிகழ்வுகளைச் செய்திகளாகத் தரவும் மக்களுக்குக் கல்வி அறிவை வளர்க்கவும் புதிய கருவிகளை அறிமுகப்படுத்தவும் அறிவியல் பற்றிய அறிவை விருத்தி செய்யவும் சிறுவர்களுக்கு அறிவுரைக் கூறவும் இலக்கியம், சுதந்திரம், மருத்துவம், சுகாதாரம், அறம் போதித்தல் எனப் பல பொருண்மைகளை மையமாகக் கொண்டு தனித்தனியாக ஏராளமான இதழ்கள் வரத் தொடங்கின. இவ்விதழ்கள் சங்கங்கள், மடங்கள், இயக்கங்கள், தனிநபர் எனப் பலவகையில் வெளிவந்தன. தமிழ் உரைநடை நன்கு வளர்வதற்கு இத்தகைய இதழ்கள் பங்காற்றுகின்றன என்று சொல்லலாம்.

பிரித்தானியரின் ஆட்சிக் காலத்தில், அவர்களது அலுவலகப் பணியினைச் செய்ய கல்வி, எழுத்தறிவு பெற்றவர் தேவைப்பட்டனர். அத்தகைய நபர்களை உருவாக்க வேண்டி கல்வியைப் பரப்பும் வேலையைப் பிரித்தானிய ஆட்சியர் செய்யத் தொடங்கினர். இதனால் துரைத்தனத்தாரும் பாதிரிமார்களும் பல கல்விச் சங்கங்களையும் நிறுவனங்களையும் உருவாக்கினர். இதனுடைய நீட்சியாக 1850இல் சென்னைப் பாடசாலைப் புத்தகச் சங்கம் என்னும் அமைப்பையும் உருவாக்கினர். இதன் மூலம் அவர்களது கல்வி கற்பிப்பதற்கான பாட நூல்களை வெளியிட்டனர். மேலும் இச்சங்கத்தின் மூலம் இதழ்களையும் வெளியிடத் தொடங்கினர். அவ்வாறு உருவான இதழ்களில் ஒன்று ஜனவிநோதினி.

1870ஆம் ஆண்டு தொடங்கிய ஜனவிநோதினி 1890ஆம் ஆண்டு வரை தொடர்ந்து வெளிவந்துள்ளது. இவ்விதழைச் சென்னைப் பாடசாலைப் புத்தகச் சங்கமும், தாய்மொழிக் கல்விச் சங்கமும் இணைந்து நடத்தியுள்ளன. ஜனவிநோதினி இதழின் தலைப்புப் பக்கத்தில் POPULAR MAGAZINE OF AMUSING AND INSTRUCTIVE INFORMATION IN TAMIL (மகிழ்ச்சியூட்டக்கூடியதும் மற்றும் அறிவூட்டக் கூடியதுமானத் தகவல்களைத் தரும் தமிழ் வெகுசன இதழ்) என்ற அடைமொழியோடு வெளியானது என்பது கவனத்தில் கொள்ளத்தக்கது.

இவ்விதழுக்கு முன் வெளிவந்த இதழ்கள், பல தகவல்களோடு வந்திருப்பினும் கூட, அவை அனைத்தும் சமயத்தை முன்னிலைப்படுத்தி வெளிவந்தன. ஆனால், ஜனவிநோதினி பாடப்புத்தக நோக்கில் உருவாக்கப்பட்ட இதழ் என்பது குறிப்பிடத்தக்கது. மேலும் வெகுசனத்திற்கான பல செய்திகள் எளிய மொழிநடையோடு ஜனவிநோதினியில் காணக்கிடைக்கின்றன.

ஜனவிநோதினி இதழ் சென்னை வேப்பேரியில் சிகேஎஸ் பிரஸ் (Christion knowledge society press) என்ற பெயரில் இயங்கிய அச்சகத்தில் அச்சிடப்பட்டது. இந்த அச்சுக்கூடம் கல்வியை மையமாகக் கொண்ட பல நூல்களை வெளியிட்டுள்ளது. மேலும் இதில் சமூக நூல்கள் பலவும் வெளிவந்துள்ளன.

ஜனவிநோதினி 1886இல் இருந்து 1887 வரை சென்னை, வேப்பேரியில் உள்ள, எஸ்.பி.சி.கே. அச்சுக்கூடத்திலும் 1888இல் இருந்து 1990 வரை அல்பினியன் (சென்னை) அச்சுக்கூடத்திலும் வெளியாகியுள்ளது.



சென்னைப் பல்கலைக்கழகத் தமிழ் இலக்கியத் துறையில் 'பத்தொன்பதாம் நூற்றாண்டு தமிழ் இதழியல் வரலாறு: ஜநவிநோதிநி' என்ற தலைப்பில் ஆய்வை மேற்கொண்டு ஆய்வேட்டை சமர்பித்துள்ளார். மாற்றுவெளி இதழ் ஆசிரியர் குழுவில் ஒருவர்.

அரசாங்க பண உதவியுடன் சென்னைப் பாடப்புத்தகச் சங்கம் மற்றும் தாய்மொழிக் கல்வி கழகமும், இணைந்து ஜ.வி.யை (ஜநவிநோதிநி இனி ஜ.வி.) நடத்தியது. ஜ.வி.யின் அட்டைப் பக்கத்தில் 'Puplised by Madras school book and Vernaculer Lierature society and sold at ther depository old college nungambakkam' என்று உள்ளது. இச்சங்கத்தார் சிறு நூல்களையும் வெளியிட்டுள்ளனர்.

1870 முதல் 1876 வரை 'ஜனவிநோதினி' என்ற பெயரில் வெளியாகியுள்ளது. 1877 முதல் இதழ் நிற்கும் வரை ஜநவிநோதிநி என்ற பெயரோடு வெளியாகியுள்ளது. பெயர் மாற்றத்திற்கானக் காரணத்தை இதழில் காண இயலவில்லை. பத்தொன்பதாம் நூற்றாண்டில் சனம் (மக்கள்) என்பதற்கு ஜநம் என்றும் வினோதம் என்பதை விநோதம் என்றும் பயன்படுத்தும் வழக்கம் இருந்துள்ளது. ஆக, மக்களுக்கு விநோதமான செய்திகளைத் தருவது என்ற நோக்கத்தோடு இவ்விதழ் வெளியாகியுள்ளது. ஜநவிநோதிநி என்ற பெயரில் இதே விடயங்களோடு தெலுங்கிலும் ஒரு இதழ் வெளியானது என்பது குறிப்பிடத் தக்கது.

ஜ.வி.யில் கட்டுரை எழுதியவர்களின் பெயர் எங்கும் தரப்படவில்லை. ஆனால் 1881ஆம் ஆண்டில் வெளியான இதழில் மட்டும் அன்றைய காலகட்ட சென்னை மாகாண கல்வித்துறை அதிகாரியாக இருந்த ஜி. டங்கன் (1868)இல் சென்னை மாநிலக் கல்லூரியின் தத்துவத்துறைத் தலைவராக இருந்தவர்) 'கையொப்பதாரர்களுக்கு அறிக்கையை' வெளியிட்டுள்ளார்.

#### ஜநவிநோதிநியின் இதழமைப்பு

அட்டைப் பக்கம், அட்டவணைப் பக்கம், அட்டவணைக்கு அடுத்தப் பக்கம், பக்க அமைப்பு, விலை முதலியவற்றைக் கொண்டு ஜ.வி.யின் இதழைமைப்பைக் காணலாம்.

அட்டைப் பக்கம்

1877வரை ஜ.வி. மாத இதழின் அட்டைப் பக்கத்தில் இதழின் பெயரும் அட்டவணையும் தரப்பட்டுள்ளது. இதழைத் தொகுத்து ஆண்டு இறுதியில் நூலாக வெளியிட்டனர். 1874ஆம் ஆண்டு ஏப்ரல் மாத இதழின் அட்டவணைப் பக்கத்தின் பின்புறத்தில்,

சென்னை இராஜதானிப் புத்தக சங்கத்தார் இப்பத்திரிகையைத் தமிழ் நாட்டவருக்கு முன்னிருந்ததைக் காட்டிலும் இனிப்பாயும் அள்கோரமாயும் இருக்கும்படிச் சற்று வேறு மாதிரிப் படுத்திச் சில மாதங்களாகப் பிரசுரம் செய்து வருகிறோம். இப்பத்திரிகை, வர்ணத்தால் சித்திர வேலை செய்து அழகாயிருக்கத் தக்க மேற்பார்வையால் அலங்கரிக்கப்பட்டதாயும் ஏதாவது ஒரு மேன்மைப்பட்டவர்களுடைய படமாவது அல்லது பேர் பெற்ற இடம், சரித்திரம் இவைகளின் சித்திரமாவது, அவற்றின் வரலாற்றுச் சுருக்கத்தோடுகூட ஒவ்வொரு சஞ்சிகையிலும் சேர்க்கப்பட்டதாயும் தகுந்த விஷயங்கள் பதித்த இருப்பதாறு பக்கங்களுக்குக் குறையாததாயும் பிரசுரஞ் செய்யப்படும்.

அட்டைப் பக்கத்தில் 'ஜனவிநோதினி' என்று தமிழிலும் அதன் கீழே ஆங்கிலத்தில் janavinodini என்றும் POPULAR MAGAZINE OF AMUSING AND INSTRUCTIVE INFORMATION IN TAMIL என்றும் இதனோடு 1876 முதல் ILLUSTRATED அதாவது, உதாரணங்கள், படங்கள் அடங்கிய இதழ் என்ற குறிப்போடு வெளியானது.

#### அட்டவணைப் பக்கம்

ஜவியின் மாத இதழிலும் ஆண்டுத் தொகுப்பிலும் அட்டவணை தமிழிலும் ஆங்கிலத்திலும் வெளியிட்டுள்ளது. மாத இதழில் பக்க எண் வரிசையில் தலைப்புகள் தரப்பட்டுள்ளது.

#### அட்டவணைக்கு அடுத்துப் பக்கம்

ஜ.வி. மாத இதழின் அட்டவணைப் பக்கத்திற்கு அடுத்தப் பக்கத்தில் NOTICE TO OUR READERS என்றும் அல்லது NOTICE TO OUR SUBSCRIBERS என்றும் ஆங்கிலத்தில் செய்திகள் வெளியாகியுள்ளன. அவை தமிழில் கையொப்பக்காரர்களுக்கும் மற்றவர்களுக்கும் அறிவிப்பு (அ) அறிக்கை என்று வெளியாகி உள்ளன. அவை பெரும்பாலும் சந்தா நிலுவை, ஜ.வி.யில் வெளியாகும் கதைகள், வெளிவர இறுக்கம் கதைகள் மற்றும் ஜ.வி.யின் கட்டுரைகள் நூல்களாக வெளியிடப்பட்டவையின் அட்டவணை போன்றவை வெளியிடப்பட்டுள்ளது.

#### பக்க அமைப்பு

ஜ.வி. பெரும்பாலும் மாத இதழாக வெளியாகியுள்ளது. இதழ் தொடங்கிய 1870இல் தொடர்ச்சியாக மூன்று மாதங்கள் 25 பக்கங்கள் என்ற அடிப்படையில் வெளியானது. அதற்குப் பின்னர் 28 பக்கம் வரை உள்ளது. சில இதழ்கள் இரண்டு மாதமொருமுறை வெளியாகியுள்ளன. அவற்றின் பக்கம் 45 முதல் 50 பக்கம் வரை உள்ளன. மேலும் பக்க எண் தொடர் எண்ணாக ஓர் ஆண்டு முழுவதும் தரப்பட்டுள்ளன. ஓர் ஆண்டு இதழில் 300 பக்கம் வரை வெளியாகியுள்ளது. மேலும் 8 பக்கங்கள் கொண்டவை ஒரு 'பாரமாக' (கட்டு) உள்ளதைக் குறிப்பிடும் வகையில் எட்டுப் பக்கத்திற்கு எட்டுப் பக்கம் தொடர் எண் தரப்பட்டுள்ளது. ஒவ்வொரு கட்டுரையின் முடிவிலும் அடிக்கோடிடப்பட்டுள்ளது.

#### அளவு, விலை

ஜ.வி. 20.5 செ.மீ. நீளமும் 13.5 அகலமும் கொண்டது. இவ்விதழின் விலை மாதம் தனி இதழ் 2 அணா. வருடத் தொகுப்பிற்கான கையொப்பம் ரூ1 1/2. மாணவர்களுக்கு எவ்வளவு விலை என்பது குறிப்பிடப்படவில்லை.

#### படங்கள்

கிறித்தவத் தமிழ்க் கல்விக் கழக வெளியிடான 'தேசோபகாரியில்' (1861) ஏராளமான படங்கள் வெளியாகியுள்ளன. இதைப் பற்றி அ.மா.சாமி, பத்தொன்பதாம் நூற்றாண்டு தமிழ் இதழ்கள் என்ற நூலில் இவ்விதழுக்கான படத்திற்குரிய பிளாக்குகளை இலண்டனிலிருந்து பாய்மரக் கப்பல் வழியே ஆப்பிரிக்காவின்' தென் முனையைச் சுற்றி (சூயஸ் கால்வாய் அன்று வெட்டப்படவில்லை) கொண்டுவரப்பட்டது என்பது நமக்கு ஆச்சர்யத்தைக் கொடுக்கும் என்று 'தேசோபாகாரி' நூற்றாண்டு விழா மலர் கூறுகிறது என்கிறார்.

தேசோபகாரி படங்களைப் பயன்படுத்தியதுபோல ஜவியும் படங்களைப் பயன்படுத்தியுள்ளது. இவை இரண்டும் கல்விக்காக நடத்தப்பட்ட இதழ் என்பது கவனிக்கத்தக்கது. இதில் ஜ.வி. அச்சுக்கட்டைகள் மட்டுமல்லாது புகைப்படங்களையும் பயன்படுத்தியுள்ளது. ஒரே படத்தை தேசோபகாரியும் ஜ.வியும் பயன்படுத்தியுள்ளது.

1877இல் அக்டோபர் - நவம்பர் இதழை 'இரட்டைச் சஞ்சிகையாகத்' தருவதற்கான காரணத்தைக் கீழ்க் கண்டவாறு கூறுகின்றது.

> அக்டோபர் மாதச் சஞ்சிகையில் சில்பவித்தைப் பற்றி சில விஷயங்களைச் சித்திரத்தோடு நமது கையொப்பக்காரருக்கு எழுதியனுப்ப உத்தேசித்து இதுவரை எதிர்பார்த்தும் மேற்படி சித்திரம் சித்தமாகாமையில் இப்போது அக்டோபர் - நவம்பர் இவ்விரண்டு மாதங்களுக்குமான ஜநவிநோதிநியை இரட்டைச் சஞ்சிகையாகப் பதிப்பித்தனுப்பலாயிற்று.

இதன் வழி ஜவி. படங்களுக்குக் கொடுக்கப்பட்ட முக்கியத்துவத்தை அறிய முடிகிறது. மேலும் 1878இல் ஜூன்-ஜூலை இதழில் மைசூர் மகாராஜாவின் மணக்கோலத்தின் புகைப்படம் ஒட்டப்பட்டு இதழ் வெளியிடப்பட்டுள்ளது. இக்காலகட்டத்தில் (1878) புகைப்படத்தைக் கொண்டு வெளியான இதழ் ஜவி. என்பது குறிப்பிடத்தக்கது. ஏனெனில் 1878இல் 'குருபரம்பர பிரபாவம்' என்ற இதழில் வெளியான ஆண்டாள் ஓவியம் மற்றும் இதே கட்டத்தில் வெளியான விலாசம், நாடக நூல்களிலும் அச்சுக் கட்டைகளைப் படங்களுக்குப் பயன்படுத்தப்பட்டன என்பது கவனிக்கத்தக்கது.

#### செய்திகள்

இதழ் வெளியான காலகட்டத்து நிகழ்வுகளை ஜ.வி. பதிவு செய்துள்ளது. அதில் பெரும்பான்மை பிரித்தானியரின் ஆட்சி பற்றியும் விக்டோரியா ராணியின் குடும்பத்தார் பற்றியும் திருவனந்தபுரத்து மகாராஜா, மைசூர் மகாராஜா போன்ற பிரித்தானிய ஆட்சியை ஆதரித்த அரசர்கள் பற்றியும் தொடர்ச்சியாகப் பதிவு செய்துள்ளது. தவிர நோய், பூகம்பம், எடின் பாரோ டியுக் இந்தியா வந்தது. வேல்ஸ் பிரபு வந்தது, பிரித்தானிய அரசின் செயல்பாடு போன்றவற்றைத் தொடர்ச்சியாக பதிவு செய்துள்ளதைக் காண முடிகிறது.

விநோதம் செய்யுளில் இருந்து உரைநடை வளர்ச்சி அடைந்தபோது கதைகள் எழுதப்பட்டன. அப்படியான கதைகளாக வீரமாமுனிவரின் - பரமார்த்த குரு கதை, தாண்டவராய முதலியாரின் - பஞ்சதந்திரக் கதைகள், செல்வகேசவ முதலியாரின்- அபிநவக் கதைகள் போன்றவை. தவிர பத்தொன்பதாம் நூற்றாண்டில் பிற நாடுகளின் வரலாறு, படைப்பு, கட்டிடங்கள், நிகழ்வுகள் முதலியவற்றை அறிய ஆர்வங்கொண்டனர். எனவே விநோதமானவற்றைப் பதிவு செய்து இதழாவும் நூலாகவும் வெளியிடத்தொடங்கினர்.

ஜ.வி.யில் வெளியான விநோதங்களை மூன்று வகையாகப் பிரிக்கலாம். 1. உலகம் 2. இந்தியா 3. சென்னை மகாணம் போன்றவை. இதில் உலக விநோதங்கள் மொழிபெயர்த்து வெளியிடப் பட்டுள்ளன. தவிர ஜ.வி.யில் எதைப் பற்றி பேசும்போதும் விநோதம் என்ற வார்த்தைத் தவிர்க்க இயலாது பதிவாகியுள்ளது கவனிக்கத்தக்கது.

ஜவியில் ஒரு நாட்டைப் பற்றி, நபரைப் பற்றி கதை போன்று கூறப்பட்டுள்ளது. இதனைப்

படிப்பவருக்குக் கதையின் வழி ஒரு நாட்டின் பண்பாடு, பழக்க வழக்கம், நில அமைப்பு, உணவு போன்றவற்றைப் புரிந்து கொள்ளும் வகையில் பதிவு செய்கிறது.

ஐரோப்பியர் பதினாறாம் நூற்றாண்டு தொடங்கி உலகம் முழுக்க பரவியதின் ஊடாகப் பல நாடுகள் பற்றி அறிந்து கொண்டுள்ளனர். அப்படியான புரிதலை பூலோக யாத்திரை என்ற தொடர்க்கட்டுரை விரிவாகப் பதிவு செய்கிறது. இதில் ஆப்பிரிக்க தேசத்தைப் பற்றி பேசப்படுகிறது.

ஆப்பிரிக்க கண்டத்தில் உள்ள எகிப்து தேசம் (1882-145), மெக்சிகோ நகரம் (மேலது- 257) பர்மா சீயம் தேசங்கள் (1884-127), கிரின்லாந்து தேசம் (1881-125) போன்ற ஏராளமான உலக நாடுகளை அறிமுகப்படுத்துகிறது.




தவிர இந்தியாவிலுள்ள பம்பாய், கல்கத்தா, ஸ்ரீநகர், இமயமலை, ஹைதராபாத் போன்ற பல இடங்களை அறிமுகப் படுத்துகிறது. மேலும் தமிழகத் திலுள்ள ஸ்ரீரங்கம், தஞ்சை, காஞ் சிபுரம், சென்னை போன்ற இடங்களைப் பற்றிய கட்டுரைகளும் படங்களும் வெளியாகி உள்ளன.

இதைப் போல் உலகில் சிறப்பு பெற்ற கட்டிடங்களை ஜ.வி. அறிமுகப்படுத்தியுள்ளது. ஹொங்கா என்னும் தீவருகேயுள்ள ஓர் அதிசயமான குகை (1871-215) நான்கின் நகரத்து பீங்கான் கோபுரம் (1875-1) பைசா நகரத்துச் சாய்ந்த கோபுரம் (மேலது 79) வெனிலா நகரத்து ஸெண்டு மாற்கு என்னும் ஆலயம் (மேலது211) போன்றவை.

#### தனிநபர் வரலாறு

பலவிதமான நபர்களைப் பற்றி ஜவி. பேசுகிறது. குறிப்பாக, கல்வி சார்ந்தவர், அறிஞர், ஆட்சியாளர், உதாரண குணம் உடையவர் போன்றவர்களின் வாழ்க்கை வரலாற்றைக் கூறுகின்றது. இப்படியான வரலாறு வாசகரின் வாழ்க்கைக்கு உபயோகமாக இருக்குமென கருதியுள்ளது. மேலும் ஜவி. கல்விக்கான இதழ் என்பதால் வரலாறு தவிர்க்க முடியாததாக இருந்துள்ளது.

ஜவியில் 1877 முதல் தொடர்ச்சியாக 'சிறுவர்க்கான கதை' என்ற தலைப்பில் கதைகள் வெளியாகியுள்ளன. சிந்துபத்திரன் செய்த கப்பல் யாத்திரைகள் (1880-74), சந்திரஹாசன் கதை (1881:130, 181) தூக்கு தூக்கி ஒரு பழைய கதை (18849,50,93), நாகாநந்த நாடகக் கதை (1886,11,27,75) வர்த்தகனும் அவன் நாயும் (1888, 160) ஓர் கரடியின் கதை (மேலது-186) ஓர் கரடி (மேலது 204) போன்ற பல கதைகளை ஜவி. தொடர்ச்சியாக வெளியிட்டுள்ளது. இவற்றில் பிரதானமாக மாயாஜலம், விநோதம் போன்றவை கதைக் கருக்களாகி உள்ளன. இவற்றில் பெரும்பான்மையான கதைகள் மொழிபெயர்ப்பு என்பது குறிப்பிடத்தக்கது.

பத்தொன்பதாம் நூற்றாண்டில் புது விடயங்களை விநோதமாகப் பார்க்கப்பட்டுள்ளன. அவற்றை ஜவி. கவனப்படுத்துகிறது. ஜ.வி. அறிவியல் கண்டுபிடிப்புகளை மட்டுமல்லாது அறிவியல் அறிஞர்களையும் அறிமுகப் படுத்தியுள்ளது. இதனூடாக ஒரு பொருளைக் கண்டுபிடித்த விதம், அவர்களின் வரலாறு முதலியவற்றைப் பதிவு செய்துள்ளது.

ஜ.வி.யில் கல்வி கற்பதினால் ஏற்படும் நன்மை, ஆரம்பக் கல்வி, உயர்க்கல்வி, தொழிற்கல்வி, பெண் கல்வி, ஒடுக்கப்பட்டோர் கல்வி போன்ற கட்டுரைகளை வெளியிட்டுள்ளது. அரசாங்கத்தின் கல்விச் செயல்பாட்டைத் தொடர்ச்சியாக ஜ.வி. பதிவு செய்துள்ளது. கல்வி உதவித் தொகையைக் கொடுத்தவர், பெற்றவர் பற்றிய குறிப்புகளும் ஜ.வி.யில் உள்ளது.

1885க்குப் பிறகு அரசு ஜவிக்குக் கொடுத்து வந்த நிதி உதவியை நிறுத்திக் கொண்டது. அதுவரை அரசையும் அரசாங்கக் கல்வியையும் ஆதரித்து வந்த ஜவி. இதற்குப் பின் எதிர்க்கத் தொடங்கியது. ஜ.வி. கட்டுரைகளைத் தொகுத்துப் பள்ளி, கல்லூரிகளுக்குப் பாடப் புத்தகமாக வெளியிட்டுள்ளனர். பாடப்புத்தகம் உருவானதில் ஜவிக்கு பெரும் பங்குண்டு என்பதனை இவ்விதழின் பொருண்மைகளைக் கொண்டு அறியமுடிகிறது.

நிறைவாக, பெரும்பாலும் பத்தொன்பதாம் நூற்றாண்டில் வெளியான இதழ்களைத் தமிழுலகம் கவனப்படுத்தாமையால் அவை பார்வைக்குக் கிடைப்பதற்கு அரியதாய் ஆகியது. ஆகவே சமயம், அறிவியல், கல்வி, சமகால நிகழ்வு, விநோதம் போன்ற பல பொருண்மைகளில் வெளியான ஜ.வி.யை கவனப்படுத்தும் நோக்கில் இக்கட்டுரை அமைந்துள்ளது.

# தமிழ்ச்சூழலும் வானொலி ஊடகமும் 1920-1940

கு. பிரகாஷ்

இன்று நமது சமகால வாழ்வியலில் புழக்கத்திலுள்ள வெகுசன ஊடகங்களின் தன்மையானது அச்சு, கேட்பு, காட்சி, மின்னணு என்ற வகைமைகளில் நீள்கிறது. இத்தகு வெகுசன ஊடகங்கள் மனித சமூக இயங்குதளத்தில் பல்வேறு பண்பாட்டு நிகழ்வுகளை ஏற்படுத்துகின்றன. இந்த ஊடக வகைமைகள் தொடக்கத்தில் பல்வேறு ஆளுமைகளால் உருவாக்கப்பட்டு பயன்பாட்டு வடிவங்களாகப் புழக்கத்திற்கு வந்தபோது, ஏற்கனவே மரபுவழியில் இயங்கி வந்த வெகுசனங்கள் அவற்றை வியப்புக்குரிய பொருட்களாகவும் மரியாதைக்குரிய பொருட்களாகவும் பார்க்கத் தொடங்கினர். தொழில்வளம் மிகுந்த மேலைநாடுகளில் இத்தகைய வெகுசன ஊடகங்களின் உருவாக்கமும் வளர்ச்சியும் கி.பி. 15ஆம் நூற்றாண்டிலேயே ஆரம்பமானது. ஜெர்மனியில் உருப்பெற்ற 'அச்சுக்கருவி' இத்தகைய ஊடக உருவாக்கப் பயணத்தின் முதற்புள்ளியாக அமைந்தது. அச்சு ஊடகத்தின் அடுத்த கட்ட வளர்ச்சியாக கேட்பு ஊடகம் உருப்பெற்றது. ஒலியைப் பதிவு செய்து அதன் வழியே செய்திகளைப் பரிமாற்றம் செய்வது கேட்பு ஊடகத்தின் சிறப்பியல்பாக அமைந்தது. பிரித்தானியக் காலனித்துவத்தின் விளைவாக ஆசிய, ஆப்ரிக்க நாடுகளில் பல்வேறு புத்தாக்கப் பொருட்கள் சந்தைப்படுத்தப்பட்டன. இத்தகு சந்தைப்படுத்தலின் விளைவாகவே கேட்பு ஊடகமான வானொலி 20ஆம் நூற்றாண்டில் தமிழ்ச்சூழலில் வெகுசன ஊடகமாக தருவிக்கப்பட்டது. அன்றாட வாழ்வியலின் தகவல் பரிமாற்றத்திற்கான நுகர்வுக் கருவியாகவும் உருப்பெற்றது. 1920-40கள் வரையில் தமிழ்ச்சூழலில் அரசுசார் நிறுவனமாக வானொலி ஊடகம் உருப்பெற்ற தன்மை குறித்து இங்கு பேசப்படுகின்றது.



### வானொலி உருவாக்கம்

தொழிற்புரட்சியின் விளைவாக மேலைநாடுகள் தொழில்வளம் மிகுந்த சக்திகளாக உருப்பெற்றன. மேலும் பல்வேறு துறைகள் சார்ந்த புத்தாக்கங்களை உருவாக்கும் முயற்சிகள் முன்னெடுக்கப்பட்டன. கேட்பு ஊடகக் கருவிகளான கிராமபோன் மற்றும் வானொலி போன்றவற்றை உருவாக்கும் முயற்சிகளில் கி.பி. 19ஆம் நூற்றாண்டில் பௌதீகவியல் துறை சார்ந்து பல்வேறு ஆளுமைகள் ஈடுபட்டனர். அவர்களுள் ஜேம்ஸ் கிளார்க் மாக்ஸ்வெல், ஃபாரடே, மோர்ஸ், ஹெர்ட்ஸ், எடிசன், மார்க்கோனி போன்ற ஆளுமைகளின் பங்களிப்புகள் குறிப்பிடத்தக்க வகையில் அமைந்திருந்தன. கம்பியில்லா வகையில் ஓரிடத்திலிருந்து மற்றொரு இடத்திற்கு செய்திகளைக் கொண்டு செல்லும் முயற்சி இவர்களின் காலத்தில் வெற்றி பெற்று, அதன்வழியே வானொலி ஒலிபரப்பு உருப்பெற்றது.

வானொலி ஒலிபரப்புதல் (Broad casting) உருவாக்கம் பெறும் முன்பாக, மேலைநாடுகளில் வீட்டில் வசித்தவாறு தொலைபேசிக் கருவியின் வழியே வெளியில் பல்வேறு இடங்களில் நிகழ்த்தப்பட்ட நாடக நிகழ்ச்சிகளைச் சிலர் கேட்டு வந்தனர். இந்நேரத்தில் குறிப்பிட்ட ஒலிகளைப் பதிவு செய்து, நினைத்த நேரங்களில் அவற்றை மீண்டும் கேட்பதற்கு உதவும் கிராமபோன் ரிகார்டுகளும் புழக்கத்திற்கு வந்தன. இத்தகைய கிராமபோன் ரிகார்டுகள்



சென்னைப் பல்கலைக்கழகத் தமிழ் இலக்கியத் துறை மாணவர். 'தமிழ் வானொலி வரலாறு: வானொலி இதழ்த் தரவுகள் (1938-1950)' எனும் தலைப்பில் ஆய்வியல் நிறைஞர் பட்டப் பேற்றினை முடித்துள்ளார்.

வெகுசனங்களின் அன்றாடப் பொழுதுபோக்கிற்குப் பயன்படும் உல்லாசக் கருவிகளாக உலக நாடுகளில் பரவலடைந்தன. இவற்றின் அடுத்தகட்டமாகவே வானொலி ஊடகம் வளர்ச்சி பெற்றது. கி.பி.1899இல் இத்தாலி நாட்டைச் சேர்ந்த மார்க்கோனி கம்பியில்லாத் தந்தியின் வழியே, அறிகுறியான சில ஒலிகளைக் காற்றில் செலுத்தி வெற்றி பெற்றார். இத்தகு அறிகுறியான ஒலிகளின் மூலமாக வெகுதொலைவில் அமைந்த நாடுகளின் இடையே தகவல் பரிமாற்றம் செய்தல் மேலைநாடுகளிடையே பரவலடைந்தது. உலகப்போர்கள் நிகழ்த்தப்பட்ட நேரங்களில் இத்தகைய வானொலி வழிச் செய்திப் பரிமாற்றம் பெருமளவில் பயன்படுத்தப்பட்டது.

### அமெரிக்காவிலும், இங்கிலாந்திலும் உருப்பெற்ற வானொலி ஒலிபரப்புகள்

அமெரிக்காவில் 1916ஆம் ஆண்டில் டேவிட் சார்னாப் (David Sarnoff) என்பவர் தற்போதுள்ள முறையில் ஒலிபரப்புதல் (Broad casting) அமையும் கருத்த வெளியிட்டார். அதே வருடத்தில் டாக்டர் லீ டீஃபாரஸ்டு (Dr.Lee Dee Forest) என்ற அமெரிக்க ஆளுமை ரேடியோ டெலிபோன் வழியே இசையை ஒலிபரப்பினார். இதன் அடுத்தகட்டமாக 1920ஆம் ஆண்டு பொதுமக்கள் கேட்கின்ற தன்மையில் முறையான ஒலிபரப்புதல் அமெரிக்காவில் உருப்பெற்றது. தொழில்முறையில் நிகழ்த்தப்பட்ட வானொலி ஒலிபரப்புதலுக்கு உரிமம் (காப்புரிமை) வழங்க ஓர் அமைப்பு ஏற்படுத்தப்பட்டது. இந்த அமைப்பிற்கு ஒலிபரப்பு நிலையங்களின் நிகழ்ச்சிகளையும் செய்திகளையும் தணிக்கை செய்யும் அதிகாரம் வழங்கப்படவில்லை. மேலும் வானொலி ஒலிபரப்புதல் என்பது தனிப்பட்ட அமைப்புகள் நடத்தும் வளமான தொழிலாக உருப்பெற்றது. பல ஒலிபரப்புக் கம்பெனிகள் தோற்றுவிக்கப்பட்டன. அவற்றுள் 1926இல் தோற்றுவிக்கப்பட்ட தேசிய ஒலிபரப்புக் கம்பெனி, 1927இல் நிறுவப்பட்ட கொலம்பியா ஒலிபரப்புக் கம்பெனி, மியூச்சுவல் ஒலிபரப்புக் கம்பெனி போன்றவை குறிப்பிடத் தகுந்தவைகளாகும். இத்தகைய தனிப்பட்ட கம்பெனிகள் நிகழ்த்திய வானொலி ஒலிபரப்பு விளம்பரங்களின் வழியே பெறப்பட்ட பெருமளவிலான நிதியைக் கொண்டு நடத்தப்பட்டது. இசை வகைமைகள், நடப்பு நிகழ்வுகள், பல்துறைசார் ஆளுமைகளின் விவாதங்கள் கல்வி நிகழ்ச்சிகள் போன்றவை இத்தகைய வானொலி ஒலிபரப்புதலில் இடம்பெற்றன.

### பி.பி.ஸி.

இங்கிலாந்தில் 1920இல் முதன்முதலில் வானொலி ஒலிபரப்பு உருப்பெற்றது. 'செம்ஸ்போர்டு' என்னும் இடத்தில் காப்டன் ரவுண்டு என்பவர் பரிசோதனை நோக்கத்தில் அமைத்த ஒலிபரப்பு நிலையமே பிரிட்டிஷ் ஒலிபரப்புதலின் தொடக்கமாக அமைந்தது. 14.2.1922இல் அதிகாரப்பூர்வமான ஒலிபரப்புதல் ஆரம்பமானது. பிரிட்டிஷ் ஒலிபரப்புக் கம்பெனியும் அவ்வருடத்தில் அமைக்கப்பட்டது. லண்டன், பர்மிங்ஹாம், நியுகாசில், மான்செஸ்டர் போன்ற நகரங்களில் ஒலிபரப்பு நிலையங்கள் நிறுவப்பட்டன. 1926இல் ஒலிபரப்புதல் தேசியமயமாக்கப்பட்டு பின்பு பிரிட்டிஷ் ஒலிபரப்புக் கார்ப்பொரேஷன் (British Broad casting Corporation) உருவானது. பல்வேறு ஐரோப்பிய நாடுகளில் பி.பி.ஸி.யின் வானொலி ஒலிபரப்புதலைப் பின்பற்றி வானொலி ஒலிபரப்புகள் ஏற்படுத்தப்பட்டன.

வானொலி நிகழ்ச்சிகளைக் கேட்கும் வெகுசனங்கள் அவற்றைக் கேட்பதற்காக ஒவ்வொரு வருடமும் குறிப்பிட்ட தொகையினை உரிமக் கட்டணமாக அதற்கென நிறுவப்பட்ட அமைப்பிற்குச் செலுத்த வேண்டும். இவ்வாறு பெறப்பட்ட நிதி ஆதாரங்களைக் கொண்டு

பல்வேறு பண்பாட்டுக் களங்களில் நிகழ்ச்சி வகைமைகள் தயாரிக்கப்பட்டு ஒலிபரப்பப் பட்டன. ஏற்கனவே மரபுவழியில் இயங்கிய பல்வேறு இசைக்கலைஞர்கள், நடிகர்கள், எழுத்தாளர்கள், பேச்சாளர்கள் போன்றவர்கள் நவீன வானொலியின் நிகழ்ச்சி வகைமைகளுக்கான பங்கேற்பாளர்களாகத் தெரிவுசெய்யப்பட்டனர். இதற்காக இவர்களுக்கு வானொலி உரிமக் கட்டணங்களில் பெறப்பட்ட தொகைகளிலிருந்து நிகழ்ச்சிப் பங்கேற்பிற்கான ஊதியத்தொகைகள் வழங்கப்பட்டன. பத்திரிகைகள் மற்றும் நிகழ்ச்சிகள் பற்றிய பல்வேறு பிரசுரங்களையும் பி.பி.ஸி. நிறுவனம் வெளியிட்டது. இதன் மூலமாகவும் பெருமளவிலான தொகை இந்நிறுவனத்திற்கு வருமானமாய்க கிடைத்தது.

இராது. இப்படி அதிகப்படிக் கிடைக்கும் வருமானத்தைக் கொண்டு பி.பி.ஸி நிகழ்ச்சிகள் செய்திகள் இவைகளுக்காக இப்போது செலவழிப்பதைவிட அதிகம் செலவழிக்கலாம். விளம்பர ஆதரவைக் கொண்டு நடத்துவதால் ஒலிபரப்புப்பூராவும் ஒரே விளம்பரமயமாகிவிடும் என்று பயப்பட வேண்டியதில்லை. அமெரிக்காவில் ஒலிபரப்பு நேரத்தில் நடக்கும் நிகழ்ச்சிகளில் மூன்றில் ஒரு பங்கு விளம்பரம் செய்வோர்களால் தரப்படுகின்றன. ஆனால் இந்நேரத்தில் பத்தில் ஒரு பங்குதான் விளம்பரம் செய்வதற்கென்று எடுத்துக்கொள்ளப்படுகிறது. ஒரு மணி நேரத்தில் இரண்டே நிமிஷங்கள்தான் விளம்பரங்களுக்காக தினசரிப் பத்திரிகைகளில் பாதி விளம்பரங்களால் நிரப்பப்படுகிறதே ஆயினும் பத்திரிகைகளில் விளம்பரங்கள் கூடாது என்று சொல்ல யாராவது

1930களில் வானொலி ஒலிபரப்புதல் என்பது தொழில்முறையில் நடத்தப்பெற்று, வெகுசனங்களிடம் தகவல்களைக் கொண்டு சேர்க்கின்ற வலிமையான ஊடகமாக மாற்றம் பெற்றது. இத்தகு ஊடகம் இன்னும் சிறப்பான வளர்ச்சியைப் பெறவேண்டுமானால் விளம்பர நிறுவனங்களை நிகழ்ச்சிகளில் பங்குபெறச் செய்து பொருள் திரட்டலாம் என்று பல்வேறு தரப்புகளிலிருந்து விவாதங்கள் முன்வைக்கப்பட்டன.

1930களில் வானொலி ஒலிபரப்புதல் என்பது தொழில்முறையில் நடத்தப்பெற்று, வெகுசனங்களிடம் தகவல்களைக் கொண்டு சேர்க்கின்ற வலிமையான ஊடகமாக மாற்றம் பெற்றது. இத்தகு ஊடகம் இன்னும் சிறப்பான வளர்ச்சியைப் பெறவேண்டுமானால் விளம்பர நிறுவனங்களை நிகழ்ச்சிகளில் பங்குபெறச் செய்து பொருள் திரட்டலாம் என்று பல்வேறு தரப்புகளிலிருந்து விவாதங்கள் முன் வைக்கப்பட்டன. பி.பி.ஸி. ஒலிபரப்புதலில் விளம்பரங்கள் இடம்பெற வேண்டுமென சில வியாபாரிகளும், நாடகக் கம்பெனிகளின் முதலாளிகளும் வலியுறுத்தினார்கள். அவர்களுள் 1938ஆம் ஆண்டு 'ஸெல் பிரிட்ஜ்' என்ற வியாபாரி பின்வருமாறு குறிப்பிடுகிறார்.

'வியாபார முறையில் ஒலிபரப்பை நடத்தினால் இப்போது கிடைக்கும் வருமானத்தைவிட இரண்டு பங்கு அதிக வருமானம் பிபிஸிக்குக் கிடைக்கும். சரக்குகளை விற்பனை செய்யும் வியாபாரிகளே நிகழ்ச்சிகளை நடத்தும் பொறுப்பை ஏற்றுக்கொள்வார்கள். இதனால் ரேடியோ கேட்போருக்கு ஒரு தம்பிடிகூட அதிகச் செலவு துணிவார்களா?' (வானொலி 1939:1:18:23)

வானொலி ஒலிபரப்பில் விளம்பரங்கள் இடம்பெறும்போது, முன்பு வழங்கிய நிகழ்ச்சிகளைவிட மிகவும் தரமான நிகழ்ச்சிகளை அமைத்து வழங்க முடியும். சிறந்த பங்கேற்பாளர்களை நிகழ்ச்சி வகைமைகளில் பங்குபெறத் தெரிவுசெய்து அழைத்துவர இயலும்.

வானொலி நிகழ்ச்சிகளில் எழுதுவது, பாடுவது, நடிப்பது போன்றவற்றை மேற்கொள்ளும் நபர்களுக்கு முன்பைவிட அதிகமான ஊதியங்கள் வழங்கமுடியும். நிகழ்ச்சி வகைமைகளில் பங்குபெறும் நபர்கள் அதிக ஊதியம் பெறும்போது, அவர்கள் தொழில்முறையில் ஈடுபட்டு வெகுசனங்களுக்குத் தேவையான முதல் தரமான நிகழ்ச்சிகளை வழங்குவர்.

நிகழ்ச்சிகள் தரப்படுத்தப்பட்ட வடிவங்களில் அமையும்போது வானொலி வடிவங்களில் அமையும்போது வானொலி கேட்பாளர்களின் எண்ணிக்கை மிக வேகமாக அதிகரிக்கும். இதனால் தொழில்முறையில் வானொலி ஒலிபரப்புதல் மேன்மேலும் வளர்ச்சிபெற இயலும்.

மேற்கண்ட கருத்தியல்களுக்கு முரண்பட்ட வகையிலும் சில கருத்தியல்கள் முன்வைக்கப்பட்டன. அவை வானொலி ஒலிபரப்பில் விளம்பரங்கள் இடம்பெறக்கூடாது என்பதை வலியுறுத்தும் வகையில் அமைந்தன. 1938ஆம் வருடத்தில் விக்ஹெம் ஸ்டீட் என்ற பத்திரிகையாளர் பி.பி.ஸி. வானொலி ஒலிபரப்புதல் பற்றிய தனது கருத்தைப் பின்வருமாறு பதிவு செய்கிறார்.

'ஒலிபரப்பைச் சீர்தூக்கிப் பார்க்கும் அளவுகோல் பொதுஜன நன்மையே. இதை வியாபார முறையிலும் போட்டி முறையிலும் நடத்தக் கூடாது. ஏனெனில் இது ஒவ்வொரு வீட்டிற்கும், ஒவ்வொரு ஆசாமிக்கும் நேராக மற்றெந்த சாதனமும் கிடைக்காத வகையில் போகிறது. நமது வாழ்க்கையிலே இது ஒரு புது விஸ்தரிப்பு. பொது மக்களுக்கு சமாசாரம், சந்தோஷம் இரண்டையும் அளிக்கும் சாதனம் இதைக் கொண்டுபோய் வியாபாரிகள் கையிலும் விளம்பரம் செய்பவர்கள் கையிலும் ஒப்படைப்பது தவறு' (வானொலி 1939:1:18: 3) வியாபார முறையில் ஒலிபரப்பு அமையக் கூடாது என்பதனைப் பற்றி உணர்த்தும் வகையில் பின்வரும் கருத்துக்கள் முன்வைக்கப்பட்டன. அவை, வியாபாரிகளின் கைகளில் ஒலிபரப்பு கிடைத்தால் அவர்கள் பணம் சேர்ப்பதையே நோக்கமாய் வைத்துக் கொண்டு செயல்படுவர். மேலும் மக்களுக்கு எவற்றைக் கொடுக்க வேண்டுமோ அவை 'வியாபாரத்துக்குக் கெடுதல்' என்ற வகையில் ஒலிபரப்பில் இடம் பெறாமல் போக வாய்ப்புள்ளது. நியாயங்களையும் உண்மைகளையும் கூட சுதந்திரமாக வானொலியில் பேச முடியாது. வானொலியில் பேசவும் எழுதவும், நடிக்கவும் அழைக்கப்படும் பங்கேற்பாளர்களுக்கு அதிகமான அளவு பணம் கொடுத்தால்தான் முதல் தரமான நிகழ்ச்சிகளை வழங்க முடியும் என்ற மனநிலைமையை ஏற்றுக்கொள்ள இயலாது. அதிகப்பணம் கொடுத்து நிகழ்ச்சி வகைமைகளில் பங்குபெறத் தெரிவுசெய்யப்படும் பங்கேற்பாளர்கள் அனைவராலும் முதல் தரமான நிகழ்ச்சிகளை வழங்குவதும் இயலாது. வெகுசனங்களை மகிழ்விக்கும் தன்மையிலும் நடைமுறையில் உள்ள சமகாலப் பண்பாட்டு நிகழ்வுகளை மறைக்காமல் உடனுக்குடன் வெளிப்படுத்தும் தன்மையிலும் வானொலி ஒலிபரப்புதல் அமையவேண்டும். மேற்கண்ட கருத்துக்களின் அடிப்படையில் பி.பி.ஸி.யின் வானொலி ஒலிபரப்புதல் நிகழ்த்தப்பட்டது. பி.பி.ஸியை முன்மாதிரியாகக் கொண்டு பல ஐரோப்பிய நாடுகளில் வானொலி ஒலிபரப்புதல் நிகழ்த்தப்பட்டது.

**இந்தியச் சூழலில் வானொலி உருவாக்கம்-மதராஸ் பிரெசிடென்ஸி ரேடியோ கிளப்**

பிரிட்டிஷ் இந்தியாவில் 1920களில் பம்பாய், கல்கத்தா, மதராஸ் ஆகிய நகரங்களில் அமெச்சூர் வானொலி நபர்கள் சிலரின் முயற்சியால் 'ரேடியோ கிளப்' அமைப்புகள் செயல்பட்டன. இங்கிலாந்தில் உயர்கல்வி கற்றுத் திரும்பிய பலர் இத்தகைய ரேடியோ கிளப் அமைப்புகளின் வழியே ஒலிபரப்புதல் தொழிலை ஏற்று நடத்தினர். இவர்கள் இங்கிலாந்தில் நிகழ்த்தப்பட்ட வானொலி ஒலிபரப்புதலைத் தங்களது ஒலிபரப்புதலுக்கு முன்மாதிரியாகக் கொண்டு செயல்பட்டனர். 1924ஆம் ஆண்டு மே மாதம் 16ஆம் நாளில் 'மதராஸ் பிரெசிடென்ஸி ரேடியோ கிளப்' என்ற அமைப்பு அன்றைய சென்னை நகரில் தொடங்கப்பட்டது. ஸி.வி.கிருஷ்ணசாமி செட்டியார் என்பவரும் அவரது நண்பர்கள் சிலரும் இந்த அமைப்பின் வழியே வானொலி ஒலிபரப்புதலை மேற்கொண்டனர். அகில இந்திய வானொலி நிலையங்களின் ஒலிபரப்பு சென்னை மாகாணத்தில் 1930களில் நிறுவப்பட்டபோது அவைகளின் வளர்ச்சிப் பணிகளுக்குத் தேவையான ஆலோசனைகளை வழங்கிய நபர்களுள் ஸிவிகிருஷ்ணசாமி செட்டியார் குறிப்பிடத்தக்கவர். அன்றைய சென்னை மாநகரத்தின் எழும்பூர் பகுதியில் 'ஹாலோவேஸ் ஜார்டன்' (Holloways Garden) என்ற பகுதியிலிருந்து இந்த மதராஸ் பிரெசிடென்ஸி ரேடியோ கிளப்பின் வானொலி ஒலிபரப்புதல் நிகழ்த்தப்பட்டது. 8. கிலோ மீட்டர்

பிரிட்டிஷ் இந்தியாவில் 1920களில் பம்பாய், கல்கத்தா, மதராஸ் ஆகிய நகரங்களில் அமெச்சூர் வானொலி நபர்கள் சிலரின் முயற்சியால் 'ரேடியோ கிளப்' அமைப்புகள் செயல்பட்டன. இங்கிலாந்தில் உயர்கல்வி கற்றுத் திரும்பிய பலர் இத்தகைய ரேடியோ கிளப் அமைப்புகளின் வழியே ஒலிபரப்புதல் தொழிலை ஏற்று நடத்தினர்.

சுற்றளவில் இதன் நிகழ்ச்சிகளைக் கேட்க முடிந்தது. ஒவ்வொரு நாளும் மாலை நேரத்தில் இசையும் பிரசங்கங்களும் நிகழ்ச்சி வகைமைகளாக ஒலிபரப்பப்பட்டன. 1927ஆம் ஆண்டு வரையில் நிகழ்த்தப்பட்டு வந்த மதராஸ் பிரெசிடென்ஸி ரேடியோ கிளப்பின் வானொலி ஒலிபரப்பு பின்னர் சென்னை மாநகராட்சியிடம் ஒப்படைக்கப்பட்டது. அரசிடம் உரிமம் பெற்ற சென்னை மாநகராட்சி அமைப்பானது. வானொலி ஒலிபரப்புதல் தொழிலை மேற்கொண்டது. வெகுசனங்கள் வானொலி நிகழ்ச்சிகளைக் கேட்பதற்காக மெரினா கடற்கரை, ராபின்சன் பூங்கா, பிப்பிள்ஸ் பார்க், உயர்நீதிமன்றம் சார்ந்த பகுதிகளில் ஆறு ஒலிபெருக்கிக் கருவிகள் நிறுவப்பட்டன. மாநகராட்சிப் பள்ளிகளிலும் வானொலிப்பெட்டிகள் வைக்கப்பட்டன. 1938ஆம் வருடத்தில் பிரிட்டிஷ் இந்திய அரசினரால் முறையான வானொலி ஒலிபரப்புதல் தொடங்கும் வரையில் சென்னை மாநகராட்சியின் வானொலி ஒலிபரப்புதல் நடைபெற்று வந்தது.

இந்திய மாகாணங்களில் வாழ்ந்த மக்கள் தொகையினை அடிப்படையாகக் கொண்டு, அதற்கேற்றவாறு வானொலி நிலையங்கள் நிறுவும் இடங்களைப் பிரிட்டிஷ் இந்திய அரசினர் தெரிவு செய்தனர். 1930களில் பிரிட்டிஷ் இந்தியாவில் டில்லி, பெஷாவர், லாஹீர், லக்னௌ, மதராஸ், திருச்சிராப்பள்ளி, டாக்கா ஆகிய நகரங்களில் அகில இந்திய வானொலியின் ஒலிபரப்பு நிலையங்கள் நிறுவப்பட்டன.

இந்தியச்சூழலில் வானொலி ஒலிபரப்புதல் நிகழ்த்தப்படுவதற்கு இங்கிலாந்தில் நடைமுறையிலிருந்த வானொலி உரிமக்கட்டணம் செலுத்தும்முறை பின்பற்றப்பட்டது. வெளிநாடுகளிலிருந்த வானொலிப்பெட்டிகள் இறக்குமதி செய்யப்பட்டன. இந்திய வியாபாரிகள் அவற்றை வாங்கி விற்பனை செய்தபோது குறிப்பிட்ட அளவிலான சுங்கவரி மத்திய அரசினருக்குக் கிடைத்தது. மேலும் வானொலிப்பெட்டிகளை வீட்டில் வைத்திருந்த வெகுசனங்கள் ஒவ்வொரு வருடமும் உரிமக்கட்டணங்களை அஞ்சல் அலுவலகங்களில் செலுத்தினர். 1938ஆம் வருடத்தில் இந்தியச்சூழலில் வானொலி வைத்திருந்தவர்கள் அரசுக்குச் செலுத்தவேண்டிய தொகை 10 ரூபாயாக இருந்தது. வானொலிப்பெட்டிகளின் வழியே பெறப்பட்ட வருமானத்திலிருந்து வானொலி நிலையங்கள் நடத்தப்படுவதற்கான மானியத்தொகைகளை மத்திய அரசினர் வழங்கி வந்தனர்.

பிரித்தானியக் காலனித்துவத்தின் வழியாக பல்வேறு அறிவியல் புத்தாக்கங்கள் நிறுவனமயமான அமைப்புகளாக இந்தியச்சூழலில் வந்து சேர்ந்தன. அவற்றுள் வானொலி ஊடகம் குறிப்பிடத்தக்க ஒன்றாகும். 1920களில் பிரிட்டிஷ் இந்திய அரசால் மத்திய ஒலிபரப்பு இலாகா தொடங்கப்பட்டு அதன் மூலமாக நாடெங்கிலும் பல்வேறு மாகாணங்களில் அகில இந்திய வானொலி நிலையங்கள் நிறுவப்பட்டன.

### அகில இந்திய வானொலி ஒலிபரப்புகள்

பிரித்தானியக் காலனித்துவத்தின் வழியாக பல்வேறு அறிவியல் புத்தாக்கங்கள் நிறுவனமயமான அமைப்புகளாக இந்தியச்சூழலில் வந்து சேர்ந்தன. அவற்றுள் வானொலி ஊடகம் குறிப்பிடத்தக்க ஒன்றாகும். 1920களில் பிரிட்டிஷ் இந்திய அரசால் மத்திய ஒலிபரப்பு இலாகா தொடங்கப்பட்டு அதன் மூலமாக நாடெங்கிலும் பல்வேறு மாகாணங்களில் அகில இந்திய வானொலி நிலையங்கள் நிறுவப்பட்டன. 1927ஆம் ஆண்டு ஜூலை 23ஆம் நாள் பம்பாயில் முதல் அகில இந்திய வானொலி நிலையம் லார்ட் இர்வின் பிரபுவால் தொடங்கப்பட்டது. அதே வருடத்தில் ஆகஸ்ட் மாதம் 26ஆம் நாளில் கல்கத்தாவில் அகில இந்திய வானொலி நிலையம் நிறுவப்பட்டது. அதனை அன்றைய வங்காள ஆளுநர் ஸர். ஸ்டான்லி ஜாக்ஸன் திறந்து வைத்தார்.

### சென்னை மாகாணத்தில் வானொலி ஒலிபரப்பு

பிரித்தானியக் காலனித்துவத்தில் 1920-30களில் பம்பாய், கல்கத்தா, டில்லி ஆகிய நகரங்களில் அகில இந்திய வானொலி நிலையங்கள் நிறுவப்பட்டன. இதன் அடுத்த கட்டமாக 1938ஆம் வருடத்தில் மதராஸிலும் 1939ஆம் வருடத்தில் திருச்சிராப்பள்ளியிலும் அகில இந்திய வானொலி நிலையங்கள் தொடங்கப்பட்டன. இந்நிலையங்கள் நிறுவப்பட பிரிட்டிஷ் இந்திய அரசினர் மேற்கொண்ட முயற்சிகள் பற்றி எம்.எம்.

டிமெல்லோ என்ற அதிகாரி பின்வருமாறு குறிப்பிடுகிறார்.

'ஜுன் மாதம் 16ஆம் தேதியன்று சென்னை மாகாணத்தில் அகில இந்திய ரேடியோவின் முதலாவது ஒலிபரப்பு நிலையம் ஸ்தாபனம் ஆகப்போகிறது. அது காரணமாக அன்றைக்கு இந்தியாவில் ஒலிபரப்பின் வளர்ச்சி ஒரு பருவம் தாண்டி விடும் என்றே சொல்லலாம். சென்னை நிலையத்தின் ஸ்டுடியோவும் நிர்வாகக் கட்டடமும் எழும்பூரில் இருக்கிறது. இது தவிர இன்னும் இரண்டு ஒலிபரப்பு நிலையங்களும் இருக்கின்றன. ஒன்று சென்னை நகருக்குள் தெற்கே ஆறு மைல்களுக்கு அப்பாலுள்ள கிண்டியில் கவர்ன்மென்ட் ஹவுஸுக்கு சமீபத்தில் அமைக்கப்பட்டிருக்கிறது. அது 25 கிலோ வாட் மத்திம அலை ஒலிபரப்பு. திருச்சிராப்பள்ளியில் ஸ்தாபிக்கப்போகும் இரண்டாவது ஒலிபரப்பு நிலையம் இந்த வருஷக் கடைசியில் திறக்கப்படும். 5 கிலோ வாட் மத்திம அலை நிலையம் அங்கே ஸ்தாபிக்கப்பட்டு வருகிறது. கட்டுமான வேலை வெகுதுரிதமாகவே நடந்து வருகிறது.' (வானொலி 1938:1:1:4)

மதராஸில் தமிழ் மொழிக்கு முக்கியத்துவம் கொடுக்கப்பட்டு ஒரு அலைவரிசையும், தெலுங்கு, கன்னடம், மலையாளம் போன்ற மொழிகளுக்கு முக்கியத்துவம் அளிக்கப்பட்டு மற்றொரு வானொலி அலைவரிசையும் தொடங்கப்பட்டன. பல்வேறு பண்பாட்டுக் களங்களில் நிகழ்ச்சி வகைமைகள் தயாரித்து ஒலிபரப்பப்பட்டன.

1938ஆம் வருடம் ஜுன் மாதம் 16ஆம் நாளில் மதராஸில் அகில இந்திய வானொலி நிலையம் தொடங்கப்பட்டது. எழும்பூர் பகுதியில் மார்ஷல் சாலையில் அமைந்த இந்நிலையத்தை லார்டு எர்ஸ்கின் (Lord Erskine) தொடங்கி வைத்தார். 1939ஆம் வருடம் மே மாதம் 16ஆம் நாளன்று திருச்சிராப்பள்ளியில் அகில இந்திய வானொலி நிலையம் தொடங்கப்பட்டது.

மதராஸில் தமிழ் மொழிக்கு முக்கியத்துவம் கொடுக்கப்பட்டு ஒரு அலைவரிசையும், தெலுங்கு கன்னடம், மலையாளம் போன்ற மொழிகளுக்கு முக்கியத்துவம் அளிக்கப்பட்டு மற்றொரு வானொலி அலைவரிசையும் தொடங்கப்பட்டன. பல்வேறு பண்பாட்டுக் களங்களில் நிகழ்ச்சி வகைமைகள் தயாரித்து ஒலிபரப்பப்பட்டன. 1938ஆம் வருடத்தில் மாலை நேரம் 5.30மணி முதல் இரவு 10.30 வரையில் வானொலி ஒலிபரப்புதல் நிகழ்த்தப்பட்டது. இதன் பயன் நகர்ப்புறம் மட்டுமல்லாது கிராமப்புற வெகுசனங்களையும் அடையும் வகையில் அமைய வேண்டுமென அரசினர் விரும்பினர். அதனை உணர்த்தும் வகையில் பின்வரும் ஸிராஜகோபாலாச்சாரியின் கூற்று அமைந்துள்ளது.

'இந்த ஆகாசவாணி (வானொலி) அமைப்பை நாம் நல்ல வழியில் உபயோகித்துக் கொண்டால், பெரும்பயன்கள் அடையலாம். இந்த ஆகாசவாணிப் பாட்டையும், பேச்சையும், வேடிக்கையையும் ஊரார் எல்லோரும் அனுபவிக்குமாறு கிராமங்களிலும் பிடித்து ஒலிப்பெருக்கி வைத்து நல்ல தருமம் செய்யலாம். இம்மாதிரி ஒவ்வொரு ஊரிலும், கள்ளுக்கடைக்குப் பதில் மாலை சங்கீதமும், புராணமும், பஜனையும் ஆகாசவாணி மூலம் நடத்தலாம்.' (வானொலி 1938:1:2:2)

தமிழ்ச்சூழலில் இசை, நடனம், புராணம் போன்றவைகள் நிறுவனமயமான கோயில்கள், மடங்கள் போன்றவைகளால் ஆதரிக்கப்பட்டு பல்வேறு காலங்களாக அழியாமல் வளர்ந்து வந்தன. இத்தகைய வடிவங்களை ஆதரித்து வளர்க்கின்ற நிறுவனமாக நவீன வானொலி ஒலிபரப்பு செயல்பட வேண்டியதன் அவசியத்தை மேற்கண்ட ஸிராஜகோபாலாச்சாரியின் கருத்தியல் நமக்கு உணர்த்துகிறது. அரசு நிறுவனமான வானொலி நிலையங்களும் மேற்கண்ட கலைவகைமைகளை வளர்த்தெடுக்கும் கோயில்களாகச் செயல்பட்டன.

திருச்சிராப்பள்ளி வானொலி நிலையம் தமிழ் மொழிக்கு முக்கியத்துவம் கொடுக்கும் வகையிலும் கிராமப்புற வெகுசனங்களிடம் வானொலி ஒலிபரப்பின் பயனைக் கொண்டு சேர்க்கும் தன்மைக்காகவும் நிறுவப்பட்டது. மதராஸ் வானொலியில் தமிழ், தெலுங்கு, கன்னடம், மலையாளம், ஆங்கிலம் என்று பன்மொழிகளில் நிகழ்ச்சி வகைமைகள் தயாரித்து ஒலிபரப்பப்பட்டன. ஆனால் இவற்றுக்கு மாற்றாகத் திருச்சிராப்பள்ளியில்

தமிழ்மொழியில் மட்டும் நிகழ்ச்சிகள் அமைத்து ஒலிபரப்பப்பட்டன. இந்த வானொலி நிலையத்தின் சிறப்பைப் பற்றி உவேசாமிநாத ஐயர் பின்வருமாறு குறிப்பிடுகிறார்.

'திருச்சிராப்பள்ளி சிறந்த சிவஸ்தலம். இதைச்சூழலைத் திருவானைக்கா, திருக்கற்குடி, முக்தீச்சுரம் முதலிய சிவன் ஸ்தலங்கள் உள்ளன. இதற்கருகிலேதான் வைணவர்கள் கோயிலென்று கொண்டாடும் முதல் திருப்பதியாகிய ஸ்ரீரங்கம் இருக்கின்றது. அருணகிரி நாதருக்கு முருகக்கடவுள் அருளிச் செய்த வயலூரென்னும் சுப்ரமணிய ஸ்தலம் இதனருகே உள்ளது. தமிழ்நாட்டின் மத்திய ஸ்தானத்தில் திருச்சிராப்பள்ளி இருக்கின்றது. இந்த திருச்சிராப்பள்ளி தெய்வங்களுக்கு உறைவிடமாகவும் பழைய சோழ ராஜதானியோடு சம்பந்தப்பட்டதாகவும் தமிழகத்துக்கும் சிற்பத்துக்கும் பெருமை தருவதாகவும் அமைந்திருக்கிறது. இத்தகைய இடத்தில் அமைக்கப்பெறும் ரேடியோ ஸ்தாபனம் தமிழ்நாட்டினருக்குத் தெய்வ நம்பிக்கையையும், உலகியலறிவையும் தமிழன்பையும் கலைச்சுவையையும் உண்டாக்கும் நல்லுரைகளைப் பரப்பி நன்மையே விளைவிக்கும் என்று நம்புகிறேன். இந்த நிலையம் மேன்மேலும் சிறப்புற்று விளங்க வேண்டுமென்று இறைவன் திருவருளைச் சிந்திக்கிறேன்.' (வானொலி 1939:1:24:2)

திருச்சிராப்பள்ளி வானொலி நிலையம் நிறுவப்பட்டமை பற்றிய உவேசா.வின் மேற்கண்ட கூற்றின் வழியே, தமிழ்ச்சூழலில் உருப்பெற்ற நவீன வானொலி ஒலிபரப்பு ஏற்கனவே மரபு ரீதியாக வெகுசனங்களிடமிருந்த தெய்வ நம்பிக்கை மற்றும் கலைகளின் மீதான ஈடுபாட்டை வளர்க்கும் வகையில் அமையவேண்டும் என்ற கருத்தியலை முன்வைக்கிறது. கோயில்கள், மடங்கள் போன்றவைகளைப் போன்று நிறுவனமயமான வானொலி நிலையங்கள் செயல்படவேண்டியதன் அவசியத்தையும் உணர்த்துகிறது.

மதராஸ் மற்றும் திருச்சிராப்பள்ளி வானொலி நிலையங்கள் பல்வேறு பண்பாட்டுக் களங்களில் அமைத்து வழங்கிய நிகழ்ச்சி வகைமைகளை மூன்று வகைகளில் நாம் பார்க்கலாம். அவை பேச்சு, நிகழ்த்தல் மற்றும் இசை என்பனவாகும்.

அறிவிப்புகள், செய்தியறிக்கைகள், பேட்டி, உரை, விமர்சனம், வருணனை, காலட்சேபம், விவாதம், கற்பித்தல் விளக்கங்கள், நாடகங்கள், ஐரோப்பிய இசை, இந்திய இசை (ஹிந்துஸ்தானி கர்நாடக இசை, நாட்டுப்புற இசை, திரைப்பட இசை) போன்றவைகள் நிகழ்ச்சி வகைமைகளாக இடம்பெற்றன. இவ்வகைமைகளில் சமகாலத் தமிழ்ச்சூழலில் மரபு வழியில் இயங்கி வந்த வெகுசனங்களிடம் புகழ்பெற்ற பல்துறைசார் ஆளுமைகள் பங்கேற்பாளர்களாகப் பயன்படுத்தப்பட்டனர்.

மேடைப்பேச்சு, சங்கீதக்கச்சேரி, நாடகங்கள், சினிமா, ஊடகம் போன்றவைகள் வளர்வதற்கும் அத்துறைகளில் பல்வேறு ஆளுமைகள் உருப்பெறவும் தமிழ்ச்சூழலில் அகில இந்திய வானொலி நிலையங்கள் பெருமளவு பங்காற்றியுள்ளன.

20ஆம் நூற்றாண்டின் தொடக்கத்தில் உருப்பெற்ற மதராஸ், திருச்சிராப்பள்ளி வானொலி நிலையங்கள் பல்வேறு படைப்பாக்க முயற்சிகள் முன்னெடுக்கப்பட மிகப்பெரிய பங்களிப்புகளை வழங்கியுள்ளன. அன்றைய தமிழ்ச் சூழலில் புகழ்பெற்ற பல தமிழ் இலக்கியப் படைப்பாளுமைகளில் பலர் வானொலி நிகழ்ச்சி வகைமைகளின் பங்கேற்பாளர்களாக இயங்கத் தெரிவு செய்யப்பட்டுள்ளனர். 1938 முதல் 1940 வரையில் தமிழ் இலக்கியம் சார்ந்த நிகழ்ச்சிகளில் பங்குபெற்றவர்கள் குறித்த விவரம் பின்வருமாறு.

அன்றைய தமிழ்ச் சூழலில் புகழ்பெற்ற பல தமிழ் இலக்கியப் படைப்பாளுமைகளில் பலர் வானொலி நிகழ்ச்சி வகைமைகளின் பங்கேற்பாளர்களாக இயங்கத் தெரிவு செய்யப்பட்டுள்ளனர்.

ரா.கிருஷ்ணமூர்த்தி, ஸிராஜகோபாலாச்சாரி, வி.எம்.கோதைநாயகி அம்மாள், வ.ராமசாமி அய்யங்கார், சங்கு சுப்ரமணியம், ஸி.ஆர். ஸ்ரீனிவாசன், டி.எஸ்.சொக்கலிங்கம், கேசுவாமிநாதன், எஸ்.வையாபுரிப்பிள்ளை, பம்மல் சம்பந்த முதலியார் டிகே.சிதம்பரநாத முதலியார், நபிச்சமூர்த்தி, உவே.சாமிநாத ஐயர், நாமக்கல் ராமலிங்கம் பிள்ளை, கொத்தமங்கலம்

எஸ்.எம்.சுப்ரமண்யம், புதுமைப்பித்தன், குபராஜகோபாலன், நவாப் டிஎஸ்ராஜமாணிக்கம், க.நா.சுப்ரமண்யன், என்.சிவராமன், தி. ஜ. ரங்கநாதன், எஸ்.டி. யோகி, நாராயணஸ்வாமி பிள்ளை, டி. ஐயம்பெருமாள் கோனார், பண்டிதமணி எம். கதிரேசன் செட்டியார், கேஎஸ். வெங்கடரமணி, நமு. வேங்கடசாமி நாட்டார், ரா.பி. சேதுப்பிள்ளை, சி.சு. செல்லப்பா, ஸிஎம். ராமச்சந்திரன் செட்டியார், மு. வரதராசன், குஹப்ரியை, ஜகவீரபாண்டியன், ஏ. ஸ்ரீனிவாசராகவன் போன்றோராவர்.

தமிழ்ச்சூழலில் 1920கள் முதல் 1940கள் வரையிலான வானொலி ஊடகத்தின் உருவாக்கம் மற்றும் செயல்பாடுகளைக் குறித்த புரிதல்கள் பின்வருமாறு அமைகின்றன. கி.பி.19ஆம் நூற்றாண்டுகளில் தொழில்வள்ம் மிகுந்த மேலை நாடுகளில் வானொலி உருவாக்கம் நடைபெற்றது. 1920களில் இங்கிலாந்திலும், அமெரிக்காவிலும் தொழில்முறையிலான வானொலி ஒலிபரப்பு உருப்பெற்றது.

பிரித்தானியக் காலனித்துவத்தின் விளைவாகத் தமிழ்ச்சூழலுக்கு வந்த பல்வேறு புத்தாக்கங்களுள் வானொலி ஊடகமும் ஒன்றாகும். இந்த வானொலி ஊடகம் வெகுசனங்களின் சமகாலப் புழக்கத்தில் பல்வேறு பண்பாட்டு நிகழ்வுகளை ஏற்படுத்தின.

1924ஆம் வருடத்தில் தொடங்கப்பட்ட 'மதராஸ் பிரெசிடென்ஸி ரேடியோ கிளப்' அமைப்பும் அதற்கு வித்திட்ட ஸிவிகிருஷ்ணசாமிச் செட்டியாரும் தமிழ்ச்சூழலில் வானொலி ஒலிபரப்பு உருப்பெற குறிப்பிடத்தக்க பங்களிப்பைச் செய்துள்ளனர்.

1938, 39களில் தொடங்கப்பட்ட மதராஸ், திருச்சிராப்பள்ளி அகில இந்திய வானொலி நிலையங்கள் பல்வேறு கலை வடிவங்களை வளர்த்தெடுத்த கோயில்களாகச் செயல்பட்டுள்ளன. இது மட்டுமல்லாது தமிழிலக்கியம் சார்ந்த நவீன படைப்பாளுமைகள், படைப்பாக்கங்கள் உருப்பெறவும் பங்காற்றியுள்ளன.

வெகுசனங்களின் வானொலி கேட்கும் ஆர்வமும் ஈடுபாடும் வானொலி ஒலிபரப்பு வளர்வதற்கான முக்கியக் காரணிகளாக அமைந்தன. மேடைப்பேச்சு, சங்கீதக் கச்சேரிகள், நாடகங்கள், சினிமா ஊடகம் போன்றவைகள் வளர்வதற்கும் அந்தத் துறைகளில் பல்வேறு ஆளுமைகள் உருப்பெறவும்



# ‘அறியப்படாத தமிழகம்’ குழந்தை இலக்கிய முயற்சிகள்...

கமலாலயன்

தமிழில் ‘குழந்தை இலக்கியம்’ பற்றிய சிந்தனைகள் பலராலும், பல சமயங்களில் பல்வேறு காரணங்களுக்காக முன்வைக்கப்பட்டுள்ளன. சமீப காலமாகப் பலரின் ஆழ்ந்த கவனத்திற்குரிய துறையாக இது மாறிவிட்டது. முதன்முதலாகத் தமிழில் எழுதப்பட்ட குழந்தை இலக்கிய நூல் தொடங்கி இன்று வரை வெளியாகியிருக்கிற நூல்கள், பத்திரிகைகள் வாயிலாக வெளியான பல்வகைப் படைப்புகள் பற்றியெல்லாம் முழுமையாக ஓர் ஆய்வு மேற்கொள்ளப்பட்டால்தான் நமது பாதையில் பதிந்த சுவடுகளின் ஆழமும் - அகலமும் தெரியவரும். இங்கு அத்தகைய ஆய்வுக்கு இடமோ - அவகாசமோ இல்லை. பொதுவான சில விவரங்களை இங்கு பதிவு செய்வதே இக்கட்டுரையின் இலக்கு.

தமிழ்நாடு அரசு, ‘குழந்தை இலக்கிய நூற்றொகை’ என்ற வரிசையில், ஒரு குறிப்பிட்ட காலம் வரை வெளிவந்திருக்கிற நூல்களின் பெயர்கள், ஆசிரியர்கள் -பதிப்பாளர்கள் - பதிப்பு ஆண்டு போன்ற விவரங்களைத் தொகுத்து ஆவணமாக்கி வந்துள்ளது. இவ்வரிசையிலுள்ள பல நூல்கள் தமிழாசிரியர்களாக இருந்துவந்தவர்களால் ‘குழந்தைகளுக்காக’ எழுதப்பட்டவை. பாடநூல்கள், துணைப்பாட நூல்கள் என்ற வகையிலும் இத்தகைய நூல்கள் வெளிவந்திருக்கின்றன. இவ்வகையான வெளியீடுகள் குறித்துப் பொதுவாக நல்ல அபிப்பிராயம் நிலவவில்லை என்றுதான் சொல்ல வேண்டும். ‘அறிவுரைகள்’ வழங்குகிற உபதேசத் தொகுப்புகள் இவை என்று சிலர் குறிப்பிடுகிறார்கள். கல்வி நிலையங்களில் பாடநூல் - துணைப்பாடநூல் விற்பனை நோக்கத்திற்காகவும், நூலக ஆணைக்காகவுமே தயாரிக்கப்பட்ட வெறும் குப்பைகள் என்று கூட இவற்றைப் பற்றி எழுதப்பட்ட மதிப்பீடுகளை வாசித்ததுண்டு.

இக்கூற்று முழுமையும் சரியா? என் கருத்தில் முற்றிலும் இம்மதிப்பீடு சரி என்று தோன்றவில்லை. ‘சிறுவர்களுக்காக - மாணவர்களுக்காக - குழந்தைகளுக்காக’ என்று விதவிதமான வடிவங்களில், வெவ்வேறு பொருள்கள் குறித்து இன்றளவும் வெளியாகிக் கொண்டிருக்கிற எல்லா வகைப் புத்தகங்களையுமே இப்படி ஒற்றை வரியில் நிராகரிப்பதில் சில பிரச்சினைகள் இருக்கின்றன.

நவீன தமிழ்ப் படைப்புலகத்தில், வாசிப்பவர்கள் பலராலும் கொண்டாடப்படுகிற ஒரு சிறந்த படைப்பைக்கூட, வேறு சிலர் ‘இதில் அப்படியென்ன இருக்கிறதென்று எல்லாரும் தலைமேல் தூக்கிவைத்துக் கொண்டாடுகிறீர்கள்?’ என்று நிராகரித்து விடுவதைக் காண்கிறோம். இந்த அணுகுமுறை சரியானதுதானா?

பல்லாயிரக்கணக்கில் வெளியாகி வந்திருக்கிற, ‘குழந்தை இலக்கியம்’ என்ற வகைப்பாட்டில் அடக்கப்பட்டிருக்கிற எல்லாப் புத்தகங்களும் தரமானவைதான் என்று யாராவது சொன்னால் அதை நாம் ஏற்றுக்கொள்வோமா? நிச்சயமாக மாட்டோம். ஆனால், ‘தமிழில் இதுவரை உருப்படியான குழந்தை இலக்கிய நூல் ஒன்றுகூட வரவில்லை’ என்கிற மாதிரியான அபிப்பிராயத்தை யாரோ ஒருவர் போகிற போக்கில் எப்போதோ பதிவு செய்து விட்டுப் போயிருக்கிறார். அதை பின்வரும் விமர்சகர்கள், கட்டுரையாளர்கள் அப்படியே திரும்பத் திரும்பப் பதிவு செய்து வருகிறார்கள். இதை விவாதிக்காமலேயே ஏற்கிறோமே?

நமது சூழலில், ‘குழந்தைகளுக்குக் கிடைத்து வந்திருக்கிற பல புத்தகங்கள் திறமைக் குறைவான வகையில எழுதப்பட்டவையாக இருக்கின்றன, உன்னதமான பிறநாட்டு குழந்தை இலக்கிய நூல்களுடன் ஒப்பிடுகையில்



புத்தம் பேசது ஆசிரியர் குழுவில் ஒருவர். நூலகம் சார்ந்து கடந்த 25 ஆண்டுகளுக்கு மேலாகப் பணியாற்றி வருபவர். அறிவொளி மற்றும் எழுத்தாளர் சங்கங்களில் முன்னணித் தலைவர்களில் ஒருவராக இயங்கி வருபவர். சிறுகதை எழுத்தாளர் மற்றும் மொழிபெயர்ப்பாளர். தற்போது திருவள்ளுவர் மாவட்டத்தில் குழந்தைத் தொழிலாளர்கள் மீட்புப்பணியில் தீவிரமாக செயல்பட்டு வருபவர்.

இவற்றில் ஒன்றுமேயில்லை' என்று கூறுவதில் உண்மையுண்டு. ஆனால் அவற்றை எழுதியவர்கள், பதிப்பித்தவர்கள், பதிப்பிக்கப்பட்ட காலச்சூழல், சமூகம் இந்நூல்களை எதிர்கொண்ட விதம், மாணவர்கள் - குழந்தைகள் இவற்றை வாசிக்கையில் அடைந்த வாசிப்பனுபவம் - இவை குறித்து எவ்வகையான ஆய்வும் மேற்கொள்ளாமல் பொத்தாம் பொதுவில் இதுவரை வந்திருக்கிற அனைத்தையும் நிராகரிப்பது சரியாக இராது என்பது என் கருத்து.

தமிழ்வாணனின் 'கல்கண்டு' இதழும், அவரே நடத்தியவை உட்பட அணில், டமாரம், ஜிங்லி போன்ற இதழ்களும் சிறுவர்களுக்கான படைப்புகளில் பலவற்றைத் தொடர்களாக வெளியிட்டு வந்தவை. 'கண்ணன்' இதழின் பங்களிப்பு தமிழ்க் குழந்தை இலக்கியத்தில் ஒரு பிரதான இடம்பெறத்தக்க வகையிலமைந்ததாகும்.

'கண்ணன்' இதழின் ஆசிரியரான ஆர். வெங்கட்ராமன் (ஆர்வி) 22 ஆண்டு காலம் தொடர்ந்து பணியாற்றியவர். அந்த இதழின் மூலம்

காந்தியத் தத்துவங்களில் மனமொன்றி ஈடுபட்டு களப்பணியாற்றி வருபவராகவே மா.பா. குருசாமி அறியப்பட்டிருக்கிறார். ஆனால், 'பொன்மாரி' என்ற பெயரில் அவர் எழுதிய தொடரை இன்றும் என்னால் மறக்க முடியவில்லை.

உந்துதல் பெற்று பிரபலமானவர்கள் பலர் உண்டு. டாக்டர் பூவண்ணன், 'ரேவதி' (ஈ.எஸ். ஹரிகரன்), 'பொன்மாரி' மா.பா. குருசாமி, கமலவேலன், 'அழகி' (அழ. கிருஷ்ணமூர்த்தி), குறிஞ்சிப்பாடி, ஞான. வைத்தியனாதன், 'இளையவன்', என். ராமகிருஷ்ணா, பி.வி. கிரி என்று ஏராளமான பெயர்களை நினைவுகூர முடியும். பூவண்ணனின் பல நாவல்கள் கண்ணனில் தொடராக வந்தவையே.

காந்தியத் தத்துவங்களில் மனமொன்றி ஈடுபட்டு களப்பணியாற்றி வருபவராகவே மா.பா. குருசாமி அறியப்பட்டிருக்கிறார். ஆனால், 'பொன்மாரி' என்ற பெயரில் அவர் எழுதிய தொடரை இன்றும் என்னால் மறக்க முடியவில்லை. 'அழகி'யின் 'விடுதலை வேண்டி' என்ற குறுநாவல், விடுதலைப் போரின் ஓர் அத்தியாயத்தை மையமாகக் கொண்டது. 'ஆர்வி'யின் 'ஒரு நாள்

பள்ளிக்கூட நூலகங்களுக்கு 1960களில் வந்த புத்தகங்களுள் 'பூரம்' பதிப்பகம் வெளியிட்ட நான்கு நூல்கள் என் நினைவிற்கு வருகின்றன. தேசியத் தலைவர்களின் வரலாற்று விவரங்களைச் சித்திரக் கதைகளாக்கியிருந்தார்கள். நேதாஜி சுபாஷ் சந்திரபோஸ் உள்ளிட்ட தலைவர்களின் கதைகள். ஓவியர் 'ரெஸாக்'கின் கை வண்ணத்தில், கையடக்கமான ஒரு வித்தியாச வடிவில் வந்த அப்புத்தகங்கள் அன்று எத்தகைய உத்வேகத்தை மாணவர்களிடையே ஏற்படுத்தியவை என்பது எனக்கு நன்றாக நினைவிருக்கிறது. குழந்தைக் கவிஞர் அழ. வள்ளியப்பாவின் பாடல்கள், கவிமணி தேசிக விநாயகம் பிள்ளையின் பாடற் தொகுதி, பாவேந்தர் பாரதிதாசனின் 'தலைவாரிப் பூச்சூட்டி உன்னை' போன்ற சிறுவர் இலக்கியப் பாடல்கள் - இவை வெவ்வேறு அளவுகளில், வெவ்வேறு வயதுப் பிரிவுக் குழந்தைகளிடத்தில் தாக்கம் விளைவித்தவையே.

போதுமா?' 'நாவல் கண்ணனில் தொடங்கிய போது அந்த இதழின் மேலட்டைப்படமும், முதல் அத்தியாயமும் ஏற்படுத்திய விறுவிறுப்பும், வாசிப்பனுபவமும் நேற்று நடந்தாற் போன்று நினைவிலிருப்பவை.'

கதைகள் மட்டுமல்லாமல், 'நமது ரெயில்' என்ற தொடரின் மூலம் இந்திய ரயில்வே துறை பற்றியும் - ரயில் வண்டித் தொடரின் பயணம் - ரயில் நிலையங்களில் 'சிக்னல்' அமைப்புகள், முன்பெல்லாம் ஒரு மூங்கில் வளையத்தில் ஒரு சிறு தோல் பையில் வைத்து ஒவ்வொரு நிலையத்திலும் ஒப்படைக்கப்படும் சாவி - போன்ற பல அந்தக்கால அம்சங்கள் பற்றியும் 'கண்ணன்' மாணவப்பருவத்தில் பல தகவல்களைப் பதிவு செய்தது. 'புகைப்படம் எடுக்கலாம்' (என். இராமகிருஷ்ணாவின் இந்தத் தொடரில் மிகச் சிறந்த புகைப்படக் கலைஞரான அவரது படங்களும் - புகைப்படக் கலை பற்றிய அவரது அனுபவப் பிழிவும் இடம்பெற்றன.) 'டிரான்சிஸ்டர் ரேடியோ' போன்ற தொழில்நுட்பங்கள் பற்றிய கட்டுரைத் தொடர்களும் கண்ணனில் இடம் பெற்றன.

பாடநூல்களின் சுமை குறித்து இன்று நாம் பலரும் புலம்பிக் கொண்டிருக்கிறோம். ஆனால், மகாகவி பாரதியின் 'தம்பியான பரலி. சு. நெல்லையப்பர் எழுதி 'கல்கி'யில் வெளியான ஒரு கவிதை ஏறத்தாழ நாற்பதாண்டுகள் கழித்து இன்றைக்கு வாசித்தாலும் வியப்பில் ஆழ்த்துகிறதே!

விகடன், கல்கி உள்ளிட்ட வார இதழ்களில் அறுபதுகளில் இடம்பெற்ற 'பாலர் வண்ணமலர்'ப் பக்கங்கள் அன்றைய இளம் சிறுவர்களான இன்றைய முதிர்ந்த படைப்பாளிகளுக்கு நிச்சயம் நினைவிருக்கக் கூடியவையே.

'கண்ணன்' வெளியிட்ட தீபாவளி மலர்கள் - அளவிலும் சரி, அவற்றின் பொருளடக்கத்திலும் சரி - கனமானவை. இரண்டே ரூபாய் விலையில் அப்படி ஒரு மலர்க்கதம்பத்தை அதற்குப் பிறகு வேறு எந்த இதழும் வெளியிட்டதாகத் (நானறிந்தவரை) தெரியவில்லை. 'கண்ணன் கழகம்' என்றொரு குழந்தைகள் அமைப்பையே அன்று அவ்விதழை மையமாக வைத்து நடத்தியதும், பலப்பல ஊர்களைச் சேர்ந்தவர்களான வாசகர்களிடையே 'பேனா நட்புப்பாலம் அமைத்ததும் கண்ணன் இதழின் சாதனைகளுள் சில.

பிற்பாடு, எழுபதுகளில் 'மத்தாப்பு' மூலம் இவ்வகையான தாக்கத்தை ஏற்படுத்தினார். 'விசிட்டர்' அனந்தகிருஷ்ணன். 'மகிழ்ச்சிக் கண்ணன்' என்ற புனைபெயரில் அவர் நடத்திய 'மத்தாப்பு' மூலம் 1970இல் பள்ளி நாட்களில் சிறுகதை எழுதத் துவங்கியவரே இக்கட்டுரையாசிரியர். 'துக்ளக்' இதழுக்கு முன்னோடியாகக் 'கிண்டல்' இதழை வெளியிட்டவர் அனந்தகிருஷ்ணன். பின்னால் 'துக்ளக்'கில் பணியாற்றி 'விசிட்டர்' கட்டுரைகள் மூலம் பிரபலமானவர். 'விசிட்டர்', 'விசிட்டர்லென்ஸ்' இதழ்களையும் நடத்தினார். அகால மரணமடைந்த தனது தம்பியின் நினைவாக அவர் நடத்திய 'கோபாலர் பண்ணை' மூலம் 'நீலக்கடிதங்கள்' போன்ற சில சிறுவர் நூல்களையும் வெளியிட்டவர் அனந்தகிருஷ்ணன். 'முல்லைத் தீவ்' என்று அவர் எழுதிய தொடரும், அவினாசி முருகேசனின் 'அன்பு மலர்கள்' தொடரும் மத்தாப்பு இதழில் வெளியானவையே.

ஏறத்தாழ இதே காலகட்டத்தில் புதுவையிலிருந்து 'அணில்' இதழை மறுபடி வெளியிட்டார் கோவேந்தன். கோகுலம், சுட்டி விகடன், பூந்தளிர் - என நிறைய இதழ்கள் வெளியாகின. 'கண்ணன்' 1971இல் நின்றுபோன பிறகு ஏற்பட்ட ஒரு வெற்றிடம் இன்னமும் காலியாகத்தான் இருக்கிறது.

புலவர் குழந்தையின் 'தீரன் சின்னமலை' நூலைக் கோவை மாவட்டத்திலுள்ள எங்கள் மூதாதையர்

புலவர் குழந்தையின் 'தீரன் சின்னமலை' நூலைக் கோவை மாவட்டத்திலுள்ள எங்கள் மூதாதையர் கிராமமான சிலக்காம்பட்டியில், ஒரு கோடை விடுமுறையின்போது பள்ளிக்கூட மாணவனாக வாசித்தேன். அதுவரை அறியப்படாதிருந்த ஒரு வீர காவியத்தை - விடுதலைப் போரின் வரலாற்றில், இன்றளவும் உரிய இடம்பெறாமல் போய்விட்ட ஒரு மாவீரனின் கதையை அறிமுகம் செய்தது அந்தத் துணைப்பாட நூல்தான்.

கிராமமான சிலககாம்பட்டியில், ஒரு கோடை விடுமுறையின்போது பள்ளிக்கூட மாணவனாக வாசித்தேன். அதுவரை அறியப்படாதிருந்த ஒரு வீர காவியத்தை - விடுதலைப் போரின் வரலாற்றில், இன்றளவும் உரிய இடம்பெறாமல் போய்விட்ட ஒரு மாவீரனின் கதையை அறிமுகம் செய்தது அந்தத் துணைப்பாட நூல்தான். 'குமாவூண் புலிகள்' என்ற ஜிம் கார்பெட் நூலின் தமிழ்மொழி பெயர்ப்பைப் படித்து நான் பரவசமடைந்ததும் இதேபோன்ற கோடை விடுமுறை நாளில்தான்!

விடுதலைக்கு முன்பும், பின்னரும் சோவியத் வெளியீடுகள் மூலம் அறிமுகமான பெரிய பெரிய வண்ணப் புத்தகங்களின் வாசிப்பு அனுபவத்தை இன்றுள்ள குழந்தைகள் பெறுவதற்குப் 'புத்தகப் பூங்கொத்து' போன்ற திட்டங்கள் ஓரளவு வாய்ப்பளிக்கின்றன. எனினும் 'சிலந்தியும் ஈயும்' 'நவரத்னமாலை' 'சிரிக்க சிந்திக்க' போன்ற NBT சோவியத் பட நூல்கள், பிரேம்சந்த் போன்றோரின் வாழ்க்கை வரலாற்று நூல்கள் (ஆர். சூடாமணி தமிழில் மொழிபெயர்த்திருக்கிறார் - பிரேம்சந்த் நூலை!) மணிவாசகர் நூலகம் - பழநியப்பா பிரதர்ஸ் வெளியிட்ட 'நாட்டுக்கு உழைத்த நல்லவர் வரிசை' முதலிய தேசியத் தலைவர்களின் வாழ்க்கை வரலாற்று நூல்கள் - இவையெல்லாம் நினைவில் நிற்கக் கூடியவை. எம்.வி. வெங்கட்ராம் போலும் படைப்பாளிகளெல்லாம் இந்த வரிசையில் நூல்கள் எழுதியிருக்கிறார்கள்.

'கல்வி' ஒரு புறம் இருக்கட்டும், அடிப்படை எழுத்தறிவு பெறுவதற்கே விடுதலைக்குப்பின் அறுபது ஆண்டுகளுக்கு மேலாகியும் காத்திருந்து வாழ நிற்கிற ஒரு சமூகம் இந்தியச் சமூகம். தமிழ்நாட்டின் நிலையும் 'பரவாயில்லை'தானே தவிர பெருமிதப்பட்டு விட முடியாது. தந்தை பெரியார், ஜோதிபாபூலே, அண்ணல் அம்பேத்கர், அயோத்திதாச பண்டிதர் இன்னபிற அறிஞர்களின் விடாமுயற்சியால் ஓரளவிற்கு எழுத்துவாசனை கிடைக்கப் பெற்ற சமூகம் நம்முடையது.

இதிலிருந்துதான் குழந்தை இலக்கியம் உள்ளிட்ட எல்லாவகை இலக்கியப் பயிர்களும் விளைந்து வளர்ந்து பெரிதாகியிருக்கின்றன. ரொம்பச் செழிப்பான பயிர்கள் என்று இவற்றை முழுமையாகப் போற்ற முடியாது என்பதென்னவோ உண்மைதான். ஆனால் வெற்றுப் பதர்கள் என்று புறங்கையால் ஒதுக்கி விடக்கூடியவை அல்ல என்பதுவும் உண்மைதானே!

'காய்தல் உவத்தலற்ற' விரிவான ஓர் ஆய்வு மேற்கொண்டு இவற்றை நாம் மதிப்பீடு செய்து கொள்வன கொள்வதும், அல்லாதவற்றை விலக்குவதும் செய்வோம். அதுதான் சரியான அணுகுமுறையாக அமையும்!

# நாட்டார் வழக்காற்றியல் முன்னோடிகள் சிலரும் கவனிக்க வேண்டிய அவர்களின் பங்களிப்பும்

ஆ. தனஞ்செயன்

பொதுவாக நாட்டார் வழக்காற்றியல் என்னும் கல்விப்புலம், மேற்கத்திய நாடுகளில் - அதாவது, ஐரோப்பிய நாடுகள் மற்றும் அமெரிக்காவில், ஒரு செறிவான முறையியலையும், அரசியல் கோட்பாட்டுப் பின்புலத்தையும் கொண்டு வளர்ச்சியுற்றது போல், தமிழகத்தில் தோன்றி வளர்ச்சிப் பெற்றது என்று துணிந்து கூற முடியாது. ஏறக்குறைய 1980 ஆம் ஆண்டுகளில்தான் நாட்டார் வழக்காற்றியலை, இலக்கியப் புலத்திலிருந்து வேறுபடுத்தி, சமூக அறிவியல் சார்ந்த கல்விப்புலமாக அணுகும் கண்ணோட்டம் கல்வி நிறுவனங்களின் பின்புலத்தில் அறிஞர்களால் தோற்றுவிக்கப்பட்டது. அதிலும்கூட, இந்தக் கல்விப்புலத்திற்கு 'நாட்டுப்புறவியல்', 'நாட்டார் வழக்காற்றியல்' - இவற்றில் எது சரியான கலைச் சொல் என்ற விவாதத்திலேயே நீண்ட நாட்கள் ஓடிவிட்டன. வழக்காற்று வடிவம் அல்லது அதனைப் பற்றிப் படிக்கும் கல்விப்புலத்திற்கு எது சரியான கலைச் சொல்லாக்கமாக இருக்க முடியும் என்பதில் மேற்குலக நாடுகளின் வழக்காற்றியல் துறை சார்ந்த அறிஞர்களிடையேயும் தீவிரமான விவாதங்கள் நடைபெற்றுள்ளன. ஆனால், அவை மேலோட்டமான சொற்பொருள் சார்ந்த கருத்து மாறுபாடு என்ற அளவில் மட்டும் நின்று போனதல்ல. ஆழமான கல்விப் புலத் தேடலும், அரசியல் ரீதியிலான கருத்தியலும் அவ்விவாதங்களில் முதன்மை பெற்றன. அதனால்தான் மேற்கத்திய நாடுகளின் பல்வேறு மொழிகளில் நாட்டார் வழக்காற்றியல் (Folkloristics) என்பது தனித்ததொரு கல்விப்புலமாகப் பல ஆண்டுகளுக்கு முன்னரே நிறுவனப்படுத்தப்பட்டது. ஆனால், இந்தியாவிலோ அது மிகவும் தாமதமாக நிகழ்ந்தது.

நாட்டார் வழக்காற்றியல் கல்விப்புலம் இங்கே தாமதமாக வித்தூன்றப்பட்டுத் தோன்றியது என்றாலும், அதனை நம் முன்னோர்கள் தம்மியல்பாகச் செய்தார்கள் என்று சொல்ல முடியாது. வாய்மொழி வழக்காறுகள் உள்ளிட்ட நம்முடைய பலவகையான பண்பாட்டுப் படைப்புகளையும் அவற்றின் அழகியல் கூறுகளையும் எடைபோட்டு மதிப்பீடு செய்து, அவற்றினை மரியாதையோடும் பெருமையோடும் திரும்பிப் பார்த்த கண்ணோட்டம் என்பது தன்னளவில் நம்மிடம் தோன்றி வளர்ந்ததில்லை. ஏனெனில், நமது மக்கள் மரபுகளை நம்முடைய முன்னோடித் தமிழ் அறிஞர்கள், 'இழிசினர் வழக்காறு'களாகவே அணுகினர். எனவே, பிற தேசத்தவர், அந்நிய மொழியினர் அல்லது வேறு பண்பாட்டைச் சேர்ந்தவர்களான தன்னார்வலர்களோ, பண்பாட்டுவியலரோ தத்தம் சுய உந்துதலால் நம்முடைய கலைச் செல்வங்களின் தரமறிந்து, அவற்றின் பெருமையை நமக்கே உணர்த்தினர் என்பதே வரலாறு.

கடந்த நூற்றாண்டு முதற்கொண்டு, வாய்மொழி வழக்காறுகளின்பால் ஓர் அக்கறை காட்டும் மனப்பாங்கு முளைத்து, அது ஒரு கல்விப்புலமாக வளர்ந்திருக்கிறது என்றால், அதற்கு அடித்தளம் போட்டுக் கொடுத்தது அந்நியப் பண்பாட்டினர் என்றால் அது முற்றிலும் உண்மையேயாகும். அதே சமயத்தில் மக்கள் மரபுகள் பற்றிய சேகரிப்பு, தொகுப்பு, விளக்கம் என்னும் அடிப்படையில் வெளிநாட்டவர்கள் காட்டிய ஈடுபாட்டிற்குக் காலனியமும், சமயம் பரப்பும் நோக்கமும் பின்னணியாக இருந்தன என்பதையும் மறுப்பதற்கில்லை.

இந்தியாவில் நாட்டார் வழக்காற்றியல் தோன்றி வளர்ந்த வரலாற்றினை ஐந்து



பாளையங்கோட்டையில் உள்ள தூய சவேரியார் கல்லூரியின் நாட்டார் வழக்காற்றியல் துறையில் பேராசிரியராகப் பணியாற்றி வருகிறார். படைப்பிலக்கியம் மற்றும் ஆய்வு நூல்கள் பல எழுதி வெளியிட்டுள்ளார். இவரின் சில நூல்கள்; குலக்குறியியலும் மீனவர் வழக்காறுகளும், நாட்டுப்புறப்பாடல் களஞ்சியம், விளிம்புநிலை மக்கள் வழக்காறுகள் – இன வரைவியல் ஆய்வு, தமிழ் கதைப்பாடல்கள்: பனுவலும் நிகழ்பனுவலும்.

கட்டங்களாகப் பிரித்து அணுகுவார்கள். நான்காம் கட்டமானது, இரண்டாம் உலகப் போரைத் தொடர்ந்து ஏற்பட்டது. நாட்டார் வழக்காற்று ஆய்வு நடவடிக்கைகள் குறிப்பிடத்தக்க அளவில் இக்கட்டத்தில் வளர்ச்சியுற்றன. தேசிய விடுதலை இயக்கம், நாட்டார் மரபுகளின்பால் ஒரு புதிய மரியாதையை ஏற்படுத்தியது. ஆர்வத்தைத் தூண்டியது. இந்தியாவின் வெவ்வேறு பகுதிகளில் முன்னோர் தோற்றம் பற்றிய தேடலும், தூய பண்பாட்டு மரபினை முன்வைக்கும் விருப்பமும் தேசிய விடுதலைப் போராட்டத்தோடு ஒருங்கிணைத்து வெளிப்பட்டது. பாரம்பரியம் மற்றும் தீவிர இன மற்றும் தேசிய உணர்வை ஒருங்கிணைந்த வார்ப்பு வடிவத்தினை நாட்டார் வழக்காற்றியல் ஆய்வு பெற்றது. (Stuart H. Blackburn, A.K. Ramanujan, 1986:7)/

வாய்மொழிப் பாடல், கதை முதலிய வழக்காறுகளை, 20ஆம் நூற்றாண்டின் முற்பகுதியில், துய்ப்பனுபவப் பார்வையோடு அணுகிச் சேகரித்து தொகுத்து, செம்மையாக்கம் செய்து அறிஞர்கள் சிலர் நூல்களாக வெளியிட்டார்கள். அத்தகைய நூல்கள் வெறும் தொகுப்புகளாக மட்டுமல்லாமல், ரசனை அனுபவத்தோடு கூடிய விளக்கக் கட்டுரைகளைக் கொண்டனவாகவும் அமைந்தன. இவ்வாறு தொடக்க நிலையில் வாய்மொழி வழக்காறுகளைத் தொகுத்து அச்சிட்டு நூலாக்கம் செய்து வெளிக் கொணர்ந்தவர்களுள் பரவலாக அறியப்பட்டோரும் அறியப்படாதோரும் அடங்குவர்.

ஒரு வகையில் இலக்கிய ரசனையை முதன்மைப்படுத்தி எழுத்திலக்கியங்களுக்கு இணையாக வாய்மொழிப் பாடல்களை வியாக்கியானம் செய்வதற்கு வாய்ப்பிருக்கிறது என்னும் வகையில் வாய்மொழிப் பாடல்கள் முதலிய வழக்காறுகளைத் தொகுத்தும், அவை பற்றிய கட்டுரைகளையும் நூல்களையும் எழுதி வெளியிட்டவர்களில் பின்வரும் அறிஞர்கள் குறிப்பிடத்தக்கவர்கள். கி.வா. ஜகந்நாதன், மு. அருணாசலம், பெ.தூரன், தி.நா. சுப்பிரமணியம், ரா. அய்யாசாமி மதுரை முதலியார், அ.மு. பரமசிவானந்தம், நா. வானமாமலை, மு.வை. அரவிந்தன், செ. அன்னகாமு, ஆறு. அழகப்பன், த. இராசராம், செப. கணபதி, க. கிருட்டிணசாமி, மா. வரதராசன், தி. சதாசிவ ஐயர் (இலங்கை), வ.மு. இராமலிங்கம்... என்று தொடங்கி நீளும் பெயர்ப் பட்டியலில், இன்றைய காலக்கட்டம் வரையில் நாட்டார் வழக்காற்றியலைப் பகுதி நேர, முழு நேர ஆய்வுத் தளமாக ஏற்றுக் கொண்டு செயல்பட்டுவரும் அறிஞர்கள் பலரின் பெயர்களும் அடங்குகின்றன.

நாட்டார் வழக்காறுகளைச் சேகரித்து வகைப்படுத்தி நூலாக வெளியிட்டவர்கள், அவற்றைக் குறித்து இதழ்களில் கட்டுரைகள் எழுதியவர்கள், எம்.ஏ.எம்ஃபில், பிஎச்டி முதலிய பட்டங்களைப் பெறுவதற்காக ஆய்வேடுகள் தயாரித்தவர்கள், தனி வரைவு நூல்கள் எழுதியோர் என்று பல்வேறு நோக்கங்களை முன்வைத்து எழுதியவர்கள் உட்பட பல்வேறு அறிஞர்கள் நாட்டார் வழக்காற்றியல் வரலாற்றில் பதிவு பெற்றிருக்கிறார்கள். ஒரு சிலர் கவனம் பெறாமலும் விடுபட்டிருக்கலாம். நாட்டார் வழக்காற்றியல் கல்விப்புலத்தில் இதுவரையில் வெளிவந்த நூல்கள் பற்றிய 'ஆய்வடங்கல்' என்னும் தொகுப்பு எதுவும் அப்பழுக்கற்ற முறையில், தயாரிக்கப்பட்டு வெளிவந்ததாகத் தெரியவில்லை. எனவே, நாட்டார் வழக்காற்றியல் கல்விப்புலத்தில் வெவ்வேறு கருத்துநிலைகளில் பங்களிப்புகளை வழங்கியோரில் எவர் எவரெல்லாம் உரிய இடம் கொடுக்கப்பட்டு அங்கீகாரம் அளிக்கப்பட்டுள்ளனர். எவரெவரெல்லாம் உரிய அங்கீகாரம் இல்லாமல் இருட்டடிப்புச் செய்யப்பட்டுள்ளனர் அல்லது

நாம் அறியத் தவறியிருக்கிறோம் என்று புலனாய்வு செய்வது நமக்கு நோக்கமல்ல.

இருபதாம் நூற்றாண்டில் காலனி ஆட்சிக் காலத்தில் எழுத்தறிவு பரவல் பெற்ற நிலையில் வெகுமக்கள் பண்பாட்டுச் சூழலில், தமிழ் இலக்கியம், ஊடகவியல் என்னும் துறைகள் சார்ந்த பின்புலத்தில் செயல்பட்ட நமது முன்னோடிகளான அறிஞர்கள் சிலர் இருபதாம் நூற்றாண்டின் முற்பகுதியில் வாய்மொழி வழக்காறுகளைத் தொகுத்தல், பதிப்பித்தல், ஆராய்தல் என்பன போன்ற முயற்சியில் தங்களைப் பிணைத்துக்கொண்டு செயல்பட்டனர். இவர்களுடைய அப்பணியை ஒட்டுமொத்தமாக 'முன்னோடிகள்' அல்லது 'முன்னோடிப் பணிகள்' என்று பொதுவாகக் குறிப்பிட்டுச் சொல்வதே வழக்கமாக இருக்கிறது. ஆனால், நாட்டார் வழக்காற்றியலில் அவர்களுடைய தனித்த பங்களிப்புகள் எவை எத்தன்மை உடையவை என்பதைக் கவனிக்கவும் கணிக்கவும் நாம் தவறியிருக்கிறோம். மொழி, இலக்கியம், பண்பாடு, தேசியம் என்னும் கருத்தியல் தளங்களில் வேரூன்றியவர்களாகவே அவர்களை நாம் அணுக வேண்டும். அத்தகைய முன்னோடிகளில் ஒரு சிலரை மட்டும் அவர்தம் வாய்மொழிப் பாடல்கள் பற்றிய நூல்களின் வாயிலாக, அவர்களுடைய பங்களிப்பை மதிப்பிடுவோம்.

#### வாய்மொழி இலக்கியம் : எழுத்திலக்கியத்திற்கு இணையானது

எழுத்திலக்கிய அறிஞராகவும், பத்திரிகை யாளராகவும் (கலைமகள் ஆசிரியர்) பரவலாக அறியப்பட்டவர் கி.வா.ஜகந்நாதன். ஆயினும் தமிழ் வாய்மொழி இலக்கிய வரலாற்றில் அவருக்கென்று ஒரு தனித்த இடம் இருக்கிறது. அது குறித்து விமர்சனமும் இருக்கிறது. வாய்மொழி வழக்காறுகளை அவர் பெயரிட்டு அழைத்த விதமும், வாய்மொழிப் பாடல்களுக்கே உரிய இயல்பான பேச்சு வழக்குக் கூறுகள் உள்ளிட்டவற்றை அகற்றிச் செம்மைப்படுத்திப் பதிப்பித்து நூல்களை (தே.லூர்து, 1990:143) வெளியிட்டமையும் நாட்டார் வழக்காற்றியலாளர்களால் விமர்சனத்திற்கு ஆளாயின. 'கற்பித வருணனை'யாளராகவும் சொல்லப்பட்டார். (தே லூர்து, 1990:143) வாய்மொழி வழக்காறுகளின் இயல்பான தோற்றத்தை - வடிவச் செறிவைச் சிதைப்பது என்பது எப்போதும் நாட்டார் வழக்காற்றியலின் நெறிமுறைக்குப் புறம்பான ஒன்று. அவ்வகையில் வாய்மொழிப் பாடல்களை, அவற்றின் இயல்பான வடிவத்தில் அல்லாமல் சொற்களைத் திருத்திச் செம்மைப்படுத்திய நிலையில் நாட்டார் பாடல்களைக் கஞ்சியிலும் இன்பம் (1949,1967), குழந்தை உலகம் (1952), மச்சு வீடு (1952), நாடோடி இலக்கியம் (1944) என்பன உள்ளிட்ட தலைப்புகளில் கி.வா. ஜகந்நாதன் பாடல்கள் அடங்கிய தொகுப்புகளாகவும், கட்டுரை நூல்களாகவும் வெளியிட்டார். ஆனால், இந்நூல்களில் ஓர் இலக்கியவாதி என்ற முறையில் அன்றைய வெகுமக்கள் பண்பாட்டுச் சூழல் முன்வைத்த தேவையை எதிர்கொண்ட அவருடைய நல்ல நோக்கங்களைப் பார்க்கிறோம். பிற்காலத்தில் நாட்டார் வழக்காற்றியல் தனி ஒரு கல்விப்புலமாக வளர்ந்த நிலையில், அவருடைய நோக்கங்களை எடைபோடும்போது, அவற்றில் முன்னோடித் தன்மைமிக்க சில அழுத்தமான கருத்துகள் நமக்குச் சாதகமாகத் தோன்றுகின்றன. அவை,

(அ) எழுத்திலக்கியத்திற்கு இணையாக, வாய்மொழி இலக்கியம் பல்வேறு இலக்கியக் கூறுகளையும் நயமும் பெற்றுத் திகழ்கிறது.

(ஆ) ஒரு நாட்டுக்குரிய பண்புக்கூறுகளைப் பிரதிபலிக்கும் ஆதாரங்களாக வாய்மொழி மரபுகளை அணுகுதல்.

(இ) எழுத்திலக்கியம் எவ்வாறு ஒரு நாட்டின் பண்பாட்டினைப் பிரதிபலிக்கின்றதோ அவ்வாறே வாய்மொழி இலக்கியமும் அப்பண்பாட்டினைப் பிரதிபலிக்க வல்லது.

(ஈ) நம்மிடையே நாட்டார் வழக்காறு என்றாலே கடந்த காலம் பற்றியது என்னும் ஒரு கருத்து

எழுத்திலக்கிய அறிஞராகவும், பத்திரிகையாளராகவும் (கலைமகள் ஆசிரியர்) பரவலாக அறியப்பட்டவர் கி.வா. ஜகந்நாதன். ஆயினும் தமிழ் வாய்மொழி இலக்கிய வரலாற்றில் அவருக்கென்று ஒரு தனித்த இடம் இருக்கிறது. அது குறித்து விமர்சனமும் இருக்கிறது.

உண்டு. ஆனால், நாட்டார் வழக்காறு என்பது சமகாலத் தன்மையும் உடையது என்பது. உலகளவில் நாட்டார் வழக்காற்றியல் அறிஞர்கள் தத்தம் உற்றுநோக்கல் அறிவின் அடிப்படையில் முன்வைத்த கருத்து. இக்கருத்தை ஒட்டிய ஓர் அணுகுமுறையையும் கூட கி.வா.ஜவிடம் பார்க்க முடிகிறது.

பொதுவாகத் தமிழ் எழுத்திலக்கிய அறிஞர்கள் பலரிடம் ஒரு குறிப்பிட்ட கருத்தில் மட்டும் இணக்கமான நிலை நிலவியது. அதாவது, 'எழுத்து மொழியாலமைந்த செம்மொழிக் கவிதைகள் முதலியவை மட்டுமே நுட்பமும் செறிவும் மிக்கவை; பாமர மக்களின் பாடல்களான வாய்மொழிக் கவிதைகளோ திட்பநுட்பமற்றவை; எழுத்திலக்கியத்திற்குத் தகுதி அவற்றிற்குக் கிடையாது' என்று இரண்டையும் ஒப்பிட்டு நோக்கிய தீர்மானமான ஒரு முடிவு என்பது, தமிழறிஞர்களிடம் பரவலாகக் காணப்பட்டது. மேலும் வாய்மொழி இலக்கியங்கள் பற்றி 'இழிசினர் வழக்குகள்' என்று இழித்துப் புறந்தள்ளும் அணுகுமுறையும்கூட அவர்களிடம் காணப்பட்டது. சாதிய, பொருளியல் ஏற்றத்தாழ்வு சார்ந்த கண்ணோட்டமும், எழுத்தறிவுடையோர் - எழுத்தறிவற்றோர் என்று பேதப்படுத்திப் பார்த்த வேறுபாட்டு நிலையும் மேற்கண்ட ஒரு சார்பான அணுகுமுறைக்குக் காரணங்களாக அமைந்தன.

இத்தகைய சமூக - பண்பாட்டுப் பின்புலத்தில் வாய்மொழி வழக்காறுகளைக் கி.வா. ஜகந்நாதன் அணுகிய விதம், ஓர் அறிவார்ந்த நிலையைப் பிரதிபலித்தது. எழுத்திலக்கியத்திற்கு இணையாக நுட்பமும் செறிவுமிக்கதாய் வாய்மொழி இலக்கியம் திகழ்கிறது என்பது அவரது தீர்க்கமான முடிவு. 'ஒரு தேசத்திற்கே உரிய மண் சார்ந்த மரபுகளை அல்லது நாட்டின் பண்புக் கூறுகளை உட்செறித்துக் கொண்டிருப்பவை வாய்மொழிப் பாடல்கள்' என்று ஜெர்மனி நாட்டின் மக்கள் பாடல்களை முன்வைத்து ஜோஹான் காட்ஃபரீட் வோன் ஹெர்டர் என்ற கவிஞர் கூறினார். ஏறக்குறைய இக்கருத்தினை எதிரொலிக்கும் வகையில் கி.வா.ஜ.வின் கருத்து அமைந்தது : "நாடோடிப் பாடல்களில் ஈடுபட ஈடுபட அவற்றில் நம்முடைய நாட்டுக்கே உரிய பண்பு எவ்வளவு தெளிவாகப் புலனாகிறது என்பதை உணர்கிறேன்" (கி.வா.ஜகந்நாதன், 1952:1)

'இலக்கியம், சமுதாயத்தைப் பிரதிபலிக்கிறது' என்பது அனைவரும் ஏற்றுக்கொண்ட கருத்து. ஆனால், வாய்மொழி இலக்கியம், எழுத்திலக்கியத்தைப் போலவே சமூகத்தையோ பண்பாட்டையோ வெளிப்படுத்துகிறது என்றால், அதனை அவ்வளவு எளிதாக எழுத்திலக்கியவாதிகள் ஏற்றுக் கொள்ளமாட்டார்கள். ஆனால், கி.வா.ஜவைப் பொறுத்தவரையில் பண்பாட்டைப் பிரதிபலிக்கும் சான்றுகளாக எழுத்திலக்கியங்களுக்கு இணையாக நாட்டார் இலக்கியத்தையும் கருதும் அணுகுமுறையாளராகத் தோன்றுகிறார். அவர் கூறுகிறார் : "பாரத நாட்டுக்குரிய சிறப்புப் பண்பு இருக்க வேண்டும். சால்பு என்றும், கல்ச்சர் (Culture) என்றும் பலவாறு சொல்லுகிற சரக்கு, இந்த நாட்டுக்கென்றே தனிவகையில் அமைந்திருக்கிறது. அது உன்னதமான இலக்கியங்களிலும் மணக்கும், பாமர மக்களின் பாட்டிலும் மணக்கும்" (கி.வா. ஜகந்நாதன், 1952:2) இவ்வாறு பண்பாட்டினைப் பிரதிபலிக்கும் ஆதாரங்களாக வாய்மொழி வழக்காறுகளை ஏற்றுக் கொள்ளும் கி.வா.ஜ. அவ்வாய்மொழி வழக்காறுகளுக்குச் சமகாலத் தன்மை உண்டு என்பதைப் புரிந்து கொண்டவராகவும் தோன்றுகிறார்.

**கல்விப்புலம் உருவாக விழைந்தவர்**

இந்தப் பின்புலத்தின் தொடர்ச்சியாக அணுகுவதற்கு உரிய கருத்துக்களை முன் வைத்தவர் தமிழறிஞரான மு.அருணாசலம் ஆவார். தமிழ் இலக்கிய வரலாறு - நூற்றாண்டு முறை மற்றும் இலக்கியம் பற்றிய அவருடைய நூல் வரிசையாக முழு முதல் அறிஞராகவே பார்க்கப்படுவர். ஆனால், 'காற்றிலே மிதந்த கவிதை', 'தாலாட்டு இலக்கியம்' , 'யான் பெற்ற இன்பம்' 'Tamil Ballad Poetry' ஆகிய ஒரு சில நூல்களையே நாட்டார் வழக்காறுகளை மையமாகக் கொண்டு எழுதியிருப்பினும் வாய்மொழி வழக்காறுகள், நாட்டார் பண்பாடு போன்றவை குறித்து அவர் முன்வைக்கும் கருத்துக்கள், நாட்டார் வழக்காற்றியல் தொடர்பான தொடக்க நிலை அணுகுமுறைகளையும் அவற்றின் தனித்தன்மைகளையும் அறிந்து கொள்ள நமக்கு உதவும்.

உவே. சாமிநாத அய்யர், ஞானியார் சுவாமிகள், திரு.வி.க, டி.கே.சி முதலிய தமிழறிஞர்களோடு தொடர்பு கொண்டவராகவும் வையாபுரிப்

பிள்ளையிடம் அணுக்கமானவராகவும் விளங்கிய நிலையில் தமிழ் இலக்கிய ஆய்வில் தீவிரமாக ஈடுபட்டவர் மு. அருணாசலம். அக்காலத்தில் (1935-1944) இலக்கிய இலக்கண உண்மைகளைக் காண்பதைவிட இலக்கிய இன்பம் நுகர்வதிலேயே அவருடைய உள்ளம் பெரிதும் ஈடுபட்டிருந்தது. (மு. அருணாசலம், 1977:3). அதன் விளைவாக உருவான கட்டுரைகளுள் ஒரு பகுதி வாய்மொழிப் பாடல்கள் பற்றியவை. அக்கட்டுரைகளில் 'எழுத்திலக்கியத்திற்கு இணையாக வாய்மொழிப் பாடல்கள் அழகியல் கூறுகளைக் கொண்டவை' என்று நயம் பாராட்டும் நோக்கம் அவருடைய அணுகுமுறையில் பிரதானமாக இடம்பெறுகிறது. வாய்மொழிப் பாடல்களில் இலக்கிய நயம் தேடும் வகையில் அவர் எழுதியுள்ள கட்டுரைகள், ஏனையோர் எழுத்துக்களிலிருந்து வேறுபட்டவை.

தஞ்சாவூர் மாவட்டத்தைச் சேர்ந்தவரான அவர், அங்கு நிலவிய வேளாண்மைத் தொழிலின் இயல்புகள், அத்தொழில் சார்ந்து வாழும் உழுகுடி மக்களின் சமூக - பொருளியல் வாழ்நிலைகள் ஆகியவற்றை நன்கு உற்றுநோக்கிய அனுபவத்தைத் தமது கட்டுரைகளில் புலப்படுத்துகிறார். ஒருவகையில் ஒருசில வாய்மொழி வழக்காற்று வடிவங்கள் பயிலக்கூடிய இயற்கையான சூழல்கள் பற்றிய அறிதலை அவர் வெளிப்படுத்தினாலும், அச்சூழல் சார்ந்த தரவுகளைக் கொண்டு வாய்மொழிப் பாடல்களை வியாக்கியானம் செய்யும் முறையியல் எதுவும் அவரிடம் காணப்படவில்லை. மாறாக, தான் உற்றுநோக்கிய மனித நடத்தைகள், உயிரினச் செயல்பாடுகள், குழந்தைகளின் மொழி மற்றும் ஏனைய நடத்தைகள், உழுது பயிரிட்ட வயல்வெளிகள், உழுகுடிகளின் யதார்த்தமான வாழ்வியல் உள்ளிட்ட அம்சங்களில் ஏதேனும் ஒன்றினை மையமாகக் கொண்டு, ஒரு கருத்தியல் பின்புலத்தை விவரித்துக் காட்டுகிறார். பின்னர், அதனில் குறிப்பிட்ட வாய்மொழிப் பாடலின் கண்ணிகளையோ அடிகளையோ பொருத்திய நிலையில், அதன் செயல்பாடு, அது வகிக்கும் முக்கியத்துவம், அதன் சொற்பொருள் நயம் அல்லது இலக்கியப் பண்புகள் போன்றவற்றை நமக்கு விளக்கிச் சொல்லுகிறார். இத்தகைய ஒரு பாணியையே அவருடைய கட்டுரைகளில் பார்க்க முடிகிறது. இவ்வாறு, ஒரு பின்புலத்தை அல்லது சூழலை விவரித்துவிட்டு, அதனில் ஒரு குறிப்பிட்ட வாய்மொழிப் பாடலை எடுத்தாளுகை (Application) செய்வதை ஒருவகை நாட்டார் வழக்காற்றியமாகவே (Folklorism)அணுக வேண்டும். இவ்வாறு சொல்வதற்கு ஒரு காரணமிருக்கிறது.

பண்டைய இலக்கியப் படைப்பாளிகள் முதல் இருபதாம்நூற்றாண்டில் வாழ்ந்த பாரதியார் வரையில் பலவகையான வாய்மொழிப் பாடல் வடிவங்களில் ஈடுபாடு காட்டியதையும், அவற்றைத் தத்தம் பாடல்களில் எடுத்தாண்டதையும் மு. அருணாசலம் நினைவு கூர்கிறார் (1977:6). 'பண்டைய நூலாசிரியர்கள் வாய்மொழிப் பாடல்களை அனுபவித்திருக்கிறார்கள்' என்று கூறும்போது, அவற்றிற்கு மேலான இலக்கியத் தகுதி உண்டு என்பதையும் அவற்றில் நம் மனதைச் செலுத்தி ரசிப்பதற்கு உரியவை என்பதையும் மறைமுகமாக வலியுறுத்துகிறார்.

வாய்மொழிப் பாடல்கள் பற்றி மு. அருணாசலம் முன்வைக்கும் சில கருத்துக்களை மதிப்பிடும் நிலையில், நாட்டார் வழக்காற்றியலரான நமக்கு அக்காலச் சூழலை ஒட்டிப் பார்க்கையில், அவை பொருத்தமானவையாகத் தோன்றுகின்றன. நாட்டார் வழக்காற்றியல் புலம் தொடர்பான கலைச் சொற்களைத் தமிழில் உருவாக்கிக் கையாளுவதில் நமது ஆய்வாளர்களிடையே எப்போதும் சமநிலையான அணுகுமுறை இருந்ததில்லை. தர்க்க ஒழுங்கின்றி மனம் போன போக்கில் கையாளுவார்கள். எடுத்துக்காட்டாக வாய்மொழிப் பாடலைப் பொறுத்தவரையில் 'நாடோடிப் பாடல்', 'நாட்டுப்பாடல்', 'நாட்டுப்புறப் பாடல்', 'பாமரர் பாடல்' என்று பலவாறாகப் பெயரிட்டு அழைத்த நிலையில் மு. அருணாசலம் அவர்கள் தொடக்கக் காலத்திலேயே காரணத் தெளிவோடு 'வாய்மொழிப் பாடல்' என்பதே பொருத்தமானது என்று கையாளத் தொடங்கினார். "இவை தலைமுறை தலைமுறையாக ஒருவரிடமிருந்து மற்றவருக்கு வாய்மொழியாகவும் கேள்வி மூலமாகவுமே கிடைத்து வந்திருக்கின்றன. ஆகவே, மற்றெல்லாப் பெயர்களையும் விட, வாய்மொழிப் பாடல் என்ற பெயரே இவ்வகைப் பாடல்களுக்கு மிகப் பொருத்தமுடையதாகும்" (1977:5) நாட்டார் வழக்காறுகளின் பால் ஆர்வம் காட்டிய முன்னோடிகளாக விளங்கிய தமிழறிஞர்களிடையே கலைச் சொல்லோடு இணைத்துப் பொருள் வரையறை செய்வதில் மு. அருணாசலம் மட்டுமே

சமூக அறிவியல் புல அறிஞர்களுக்கு அண்மித்து வருகிறார் என்பது நமது துணிபு.

வாய்மொழிப் பாடலை மையமாகக் கொண்டு அருணாசலம் ஆங்காங்கு முன்வைத்துள்ள வேறு சில கருத்துக்கள், நமக்கு மாறுபாடானவையாகத் தோன்றினும், அவற்றை இங்கு நிரல்படுத்துவது அவசியமானதே.

1. வாய்மொழிப் பாடல்கள்தாம் 'உண்மையான உள்ளப் பண்பாட்டைப் பிரதிபலிக்கும் பாடல்கள்' (ப.4)

2. வாய்மொழிப் பாடல்களைப் பகுப்பாய்வு செய்வதைவிட, அவற்றில் பொதிந்திருக்கும் நயங்களை வெளிப்படுத்தி இன்பம் காண்பதே அவருடைய பிரதான நோக்கம். 'எனது ஆராய்ச்சியில் இலக்கிய இலக்கண உண்மைகளைக் காண்பதைவிட இலக்கிய இன்பம் நுகர்வதிலேயே என் உள்ளம் பெரிதும் ஈடுபட்டிருந்தது'. 'இது வாய்மொழிப் பாடல்களின் அனுபவத்தை வெளியிடும் கட்டுரைகளைக் கொண்டது.' 'இவ்வகை இலக்கியத்திலும் உள்ள சுவையைத் தேர்ந்து உணரும் உணர்வை ஊட்டியவர் டி.கே.சி. என்று சொல்வது மிகை' (ப. 3)

3. மு.அவின் பார்வையில் வாய்மொழிப் பாடலின் இயல்புகள் : "இப்பாடல்களை யார் எந்தக் காலத்தில் செய்தார் என்பது சொல்ல முடியாது. நெடுங்காலமாக இவை வாய்மொழியாகவும் செவியாறலாகவுமே தொடர்ந்து வழங்கி வந்திருக்கின்றன. இவற்றிலே இலக்கண வழுவிருக்கலாம், யாப்பிலக்கணத்துக்கு இவை ஒத்து வராமலிருக்கலாம். சொன்னதையே திருப்பித் திருப்பிச் சொல்லும் தன்மையும் இவற்றில் இருக்கலாம். ஆயினும், மக்கள் உள்ளத்தைத் தம்பால் ஈர்க்கும் அரிய பண்பை இவை பெற்றிருக்கின்றன. சொல்ல வந்த கருத்தை நேர்முகமாக எளிய முறையிலே சொல்லுகின்றன. பலமுறை திருப்பித் திருப்பும் சொல்லுகின்றன. இதிலேயே ஒரு நயமிருக்கிறது. அழகிருக்கிறது, உயிர் இருக்கிறது. இது காரணமாகத்தான் இவ்வளவு நீண்ட காலமாக இவை கல்வியறிவில்லாத பாமர மக்கள் தம் உள்ளத்திலும் சொல்லிலும் மட்டும் ஒலித்துக்கொண்டு நின்று நிலவி வந்திருக்கின்றன." (ப.8)

4. எழுத்தில் அமைந்த கவிதைகளில் காணப்படும் கவிச்சுவைக்கு இணையானதாக வாய்மொழிப் பாடல்களின் கவிச்சுவை அமைந்துள்ளது என்று கூறுவதன் வாயிலாக அவ்விரண்டையும் இணையானவைகளாக அணுகுகிறார். 'இப்பாடல்களிலே காணும் கவிச்சுவை எவ்வளவோ இன்பம் விளைவிப்பதாக இருக்கிறது. இவ்வின்பம், புத்தக வடிவிலுள்ள வேறு கவிதைகளைப் பயிலுவதனால் பிறக்கும் இன்பத்துக்கு எவ்வகையிலும் குறைந்ததன்று.' (ப.10)

5. "நம் நாட்டிலே பாமர மக்களும் பெரும் பகுதியினர். அவர்களுடைய உள்ளத்தையும் வாழ்க்கையையும் உணர்வதற்கு அவர்களுடைய பாடல்களைப் பயிலுவதும் தக்க துணையாகும். கற்றோர் இவற்றைப் புறக்கணித்து வருகின்றமையால், இன்று இவை மறைந்து வருகின்றன. இவற்றை மறையாமற் காப்பது எல்லோருடைய கடமையுமாகும். தமிழரின் இலக்கியச் செல்வத்திலே இப்பாடல்களுக்கு முதன்மையான இடமுண்டு. எத்தனையோ இலக்கியங்களும் இலக்கணங்களும் அழிந்து போயின என்று தமிழிலக்கியத்தின் சரித்திரம் நமக்கு உணர்த்துகிறது. வாய்மொழிப் பாடல்களிலே பெரும்பகுதி அவ்வாறே மறைந்துவிட்டது. மறைந்தவை போக, எஞ்சியுள்ள சிலவற்றையேனும் போற்றுதல் தமிழ்மொழிக்குத் தமிழர் இன்று எளிதிலே செய்யத்தக்க சிறந்த தொண்டு" (ப.50)

6. பத்திரிகைகள் உள்ளிட்ட ஊடகங்களால் தோற்றுவிக்கப்பட்ட ஓர் ஊடகச் சூழல் என்பது அவருக்கு உவப்பானதாக இல்லை. பத்திரிகைகள் முதலிய ஊடகங்களின் செய்திகளால் உருவாக்கப்படும் வெகுசனப் பண்பாட்டினை அவர் ஏற்றுக் கொள்ளவில்லை. தமிழ்ப் பண்பாட்டிற்கு எதிரானதாகவே அணுகுகிறார். "உண்மையான தமிழருடைய உள்ளப் பண்பாட்டைப் பிரதிபலிக்கும் பாடல்கள் யாவும் மறைந்து போலியான கூத்துக்கள் மலிந்து போயிருப்பது தமிழ் மக்களுக்குப் பெருமையல்ல. எதிர்காலத்தில் வாய்மொழிப் பாடல் - நாட்டுப்புறப் பாடல் என ஒன்று இருக்கப் போவதில்லை என்றாலும்

பொருந்தும். தினசரிப் பத்திரிகையாலும், மாத இதழ்களாலும், பஸ் வசதியாலும், ரேடியோ சினிமா முதலியவற்றாலும் உண்மைப் பண்பாட்டைப் புலப்படுத்தும் செய்திகள் அடியோடு மறைந்து போலிகளே இன்று முதலிடம் பெற்று வருகின்றன. தமிழினம் என்ற பெயருக்கே பெருத்த சீர்கேடு (ப. 4)

'எழுத்திலக்கியத்திற்கு இணையானது, ஏட்டுக் கவிதையின் கவிச்சுவைக்கு இணையான கவிச்சுவையைக் கொண்டது எழுத்திலக்கியங்களைப் போலவே பண்பாட்டினைப் பிரதிபலிக்கவல்லது' - என்பன போன்ற கருத்துக்களின் அடிப்படையில் வாய்மொழி இலக்கியம் குறித்த அணுகுமுறையில் கி.வா. ஜகந்நாதனோடு மு. அருணாசலம் இணையொத்தவராகத் தோன்றினாலும் முன்னவரிலிருந்து சற்று வேறுபடவும் செய்கிறார். வாய்மொழி இலக்கியங்களைச் சேகரித்துத் தொகுத்து அவற்றைப் பகுப்பாய்வுக்கு உட்படுத்த வேண்டிய ஆய்வுப் புலம். தமிழில் தோன்றவில்லையே என்று ஏறக்குறைய 1940களில் சென்னைப் பல்கலைக்கழக ஆய்வாளராக விளங்கியபோதே உணர்ந்து கொண்டவராக இருந்திருக்கிறார். ஆங்கில மொழிப் பரிச்சயம் மிக்கவராதலால், அம்மொழியில் 'நாட்டார் வழக்காற்றியல்' ஒரு தனிக் கல்விப்புலமாக வடிவங் கொண்டு வந்திருப்பதை அறிய முற்பட்டபோது அவர் வெளிப்படுத்திய கூற்று : "ஆங்கில இலக்கியம் பயின்றவர்கள் ஆங்கில மொழியிலே இத்தகைய இலக்கியத்தை விரிவாய்த் தொகுத்து ஆராய்ந்து பாராட்டி வைத்திருப்பதைக் கண்டபோது, தமிழில் வாய்மொழிப் பாடல்களே இல்லை, அதனால் தமிழிலக்கியத்திலே இப்படியொரு தனிப்பிரிவுக்கும் இடமில்லை என்று முடிவு செய்ய நேர்ந்தது." (ப.6)

> கி.வா. ஜகந்நாதனோடு மு. அருணாசலம் இணையொத்தவராகத் தோன்றினாலும் முன்னவரிலிருந்து சற்று வேறுபடவும் செய்கிறார். வாய்மொழி இலக்கியங்களைச் சேகரித்துத் தொகுத்து அவற்றைப் பகுப்பாய்வுக்கு உட்படுத்த வேண்டிய ஆய்வுப் புலம் தமிழில் தோன்றவில்லையே என்று ஏறக்குறைய 1940களில் சென்னைப் பல்கலைக்கழக ஆய்வாளராக விளங்கியபோதே உணர்ந்து கொண்டவராக இருந்திருக்கிறார்.

### எழுத்து வடிவ வழக்காறுகள் பதிப்பு

#### ஆறுமுகப் பெருமாள் நாடாரின் பங்களிப்பு

வாய்மொழியும் எழுத்துமொழியும் இணைமரபுகளாகச் செயல்பட்ட நிலையில், வாய்மொழியாக வழங்கி வந்த வழக்காறுகளில் குறிப்பிட்ட வடிவங்களை ஏட்டில் பதிவு செய்து வைக்கும் வழக்கம் தமிழ்ச் சமூகத்தில் நடைமுறையில் இருந்திருக்கிறது. கதைப்பாடல்களைச் சடங்கியல் நிகழ்த்துதல் சூழல்களில் பாடக்கூடிய கதைப்பாடகர்கள், ஓலைச் சுவடியில் எழுதப்பட்ட கதைகளைக் கையில் வைத்திருப்பது மரபாக இருந்தது. இன்றும் - குறிப்பாக வில்லிசைக் கதைப்பாடகர்கள், காகிதச் சுவடியில் எழுதப்பட்ட கதைப் பனுவலை நிகழ்த்துதலின்போது கையாளுவதைக் காண்கிறோம். மற்றொரு நிலையில் பனுவலை அச்சிட்டு விநியோகிக்கும் அச்சு ஊடக முறை நடைமுறைக்கு வந்த பிறகு வாய்மொழி மரபுகளைத் தொகுத்து நூல்களாக வெளியிடும் மரபு தோன்றியது. கதைப்பாடல், ஒப்பாரிப் பாடல், சிந்து வடிவங்கள் என்று சிலவகை வடிவங்கள் அச்சில் வெளிவரத் தொடங்கின. இவற்றுள் கதைப் பாடல், தனி ஒரு ஆசிரியர் பெயரால் வெளியிடப்பட்டது. முன்னோடி கதைப்பாடலாசிரியராக ஏட்டில் பெயரைக் கொண்டு அடையாளப்படுத்தப்பட்டவர் புகழேந்திப் புலவர். பெரிய எழுத்துக் கதைப் பாடல்நூல்களில் அவருடைய பெயர் தவறாமல் இடம் பெற்றது. ஆசிரியர் பெயர் குறிப்பிடப்படாமல், கதைப்பாடல்களும், ஏனைய வழக்காற்று வடிவங்களும் நூல்களாகப் பதிப்பிடப்பட்டன. இத்தகைய நூல்கள் ஓரளவு எழுத்தறிவு உடைய 'நாட்டார் புலவர்கள்' (கிராமியப் புலவர்கள் அல்லது பாடகர்கள்) எழுதியவை என்று சொல்லப்படுகிறது. அதாவது, வாய்மொழி மரபை நகல் செய்து எழுதும் ஒரு வகை பாணி, அச்சு ஊடகச் சூழலின் காரணமாக நடைமுறைக்கு வந்து, பரவலடைந்தது. அச்சிடப்பட்ட நூல்களை வாங்கிப் படிக்கும் வாசகர் திரள் ஒரு பக்கம் பெருகிய நிலையில், மறுபுறம் அவற்றைத் தத்தம் நிகழ்த்துதல் தொழிலுக்குப் பயன்படுத்தும் நாட்டார் கலைஞர்களின் தேவையையும் நிறைவு செய்வனவாக அமைந்தன. இக்கலைஞர்கள் இரண்டு வகையினராக

அடங்குவர். ஒரு குழுவினர் தொழில்முறைக் கலைஞர்கள், மற்றொரு பிரிவினர் தொழில்முறை சாராத கலைஞர்கள். முன்னதற்கு உதாரணம் - வில்லிசைக் கலைஞர்கள். பின்னதற்கு உதாரணம் - ஊர்களில் நடைபெறும் காமன் விழாவில் ரதி - மன்மதன் புலம்பலைப் பாடக் கூடியவர்கள். இன்று ஏறக்குறைய அருகி மறைந்துவிட்ட 'இலாவணி' என்னும் நிகழ்த்துதல் மரபு ஒரு கட்டத்தில் அச்சு ஊடகத்தின் வழியாகவும் பரவியது என்பது நாம் அறியத்தக்க செய்தியாகும். அச்சிடப்பட்ட ரதி - மன்மதன் புலம்பலை வாசித்து 'வாய்மொழி நிகழ்த்துதல் புலமை' பெற்று, மன்மதன் கோயில்களில் நடைபெற்ற காமன் தகன விழாவில் இலாவணிப் பாடகர்கள் தங்கள் நிகழ்த்துதல்களை நடத்தினர்.

இங்கு வாய்மொழி மரபு, எழுத்து, அச்சு ஊடகம் ஆகியவை சங்கமிக்கும் ஒரு தருணம் ஏற்படுத்தப்பட்டுள்ளது. இது இன்றும் தொடரும் ஒரு படிமுறையாகவே உள்ளது. இது வெகுமக்கள் பண்பாட்டின் விளைவாகும். இந்தப் படிமுறையில் முறைமுகாமாகச் செயல்படுவது நாட்டார் வழக்காற்றியம் (Folklorism) ஆகும். (1) வழக்காற்றினை அதன் இயல்பான சூழலுக்கு அப்பால் எடுத்துச் சென்று வெகுமக்கள் மத்தியில் முன்னதற்கு நேரெதிரான சூழலில் கையாளுவது, (2) அவ்வழக்காற்றின் வடிவத்தை மாற்றாமல் வேறு உள்ளடக்கத்தை இட்டு நிரப்பிக் கையாளுவது, (3) குறிப்பிட்ட வழக்காற்றினைப் போலவே புதிதாக நகல் முறையில் படைத்துப் பயன்படுத்துவது போன்ற மூன்று முறைகளும் நாட்டார் வழக்காற்றியத்தின் வகைகளாகும். இம் மூன்று முறைகளும் தமிழ்ப் பண்பாட்டுச் சூழலில் நடைமுறையில் நூற்றாண்டுக் காலமாக இருப்பவை என்றே சொல்லலாம். அச்சு ஊடகம் அறிமுகத்திற்குப் பின்னால் நாட்டார் வழக்காற்றியம் என்ற படிமுறை சற்றுத் தீவிர நிலையை அடைந்தது என்றும் கூறலாம்.

இவ்வாறு வெகுமக்கள் பண்பாட்டுத் தளத்தில் வாய்மொழி வழக்காறுகள் படிநிலை மாற்றத்திற்கு உட்படுத்தப்பட்டு, அதன் வாயிலாக அவற்றை எழுத்தறிவு பெற்றவர்கள் வாசிப்பது, நாட்டார் நிகழ்த்து கலைஞர்கள் மரபான நிகழ்த்துகை சூழலில் கதைப்பாடல்களை நிகழ்த்துவது, என்பனவற்றின் வாயிலாக ஏற்பட்ட தேவையைப் பூர்த்தி செய்யும் வண்ணம் 'வாய்மொழிப் பனுவல்களை' வெளியிடுவதற்குப் பதிப்பாசிரியர்கள் பலர் முன்வந்தனர். அவர்களுடைய முயற்சிக்குச் செயல்வடிவம் கொடுக்கும் வகையில் பல பதிப்பகங்களும் முன்வந்தன. இந்தச் சூழ்நிலையில் ஏட்டு வடிவில் இருந்த கதைப்பாடல்களைப் பல ஊர்களுக்குச் சென்று தேடிக் கண்டுபிடித்து அவற்றைச் செம்மைப்படுத்தித் தம்முடைய சொந்த செலவிலோ, பதிப்பாளர்களின் உதவியாலோ கதைப்பாடல் உட்பட பல்வேறு வகை நூல்களை அச்சிட்டு விநியோகித்தவர் ஆறுமுகப் பெருமாள் நாடார். ஆனால், பரவலான கவனிப்பினைப் பெறாதவராகத் திகழ்ந்தவர்.

**ஆறுமுகப் பெருமாள் நாடார் : ஏடு தேடி அலைந்தவர்**

ஆறுமுகப் பெருமாள் நாடார் அவர்களின் கதைப்பாடல் சுவடிப் பதிப்புப் பற்றிய பங்களிப்பினைக் குறித்து முதன் முதலில் வெளியுலகின் கவனத்திற்குக் கொண்டு வந்தவர் பேராசிரியர் அகா. பெருமாள் அவர்கள். "ஏடு தேடி அலைந்த நாடார்" (ஆறுமுகப் பெருமாள் நாடார்) என்னும் தலைப்பில் அவர் எழுதிய கட்டுரை முதற்கண் உயிர்மெய் இதழில் வெளிவந்தது. பின்னர் அவருடைய கட்டுரைத் தொகுப்பிலும் இடம்பெற்றுள்ளது. (2008:9-22)

கன்னியாகுமரி மாவட்டம் அகஸ்தீஸ்வரத்தைச் சேர்ந்த குமாரசாமி நாடாரின் மகன் ஆறுமுகப் பெருமாள் (1909-1983). தொடக்க நிலைப் பள்ளிக் கல்வி பெற்றவர். ஊர் ஊராகச் சென்று வைத்தியம் செய்து வந்த உன்னங்குளம் வைத்தியர் ஒருவர் அகஸ்தீஸ்வரத்திற்கு அடிக்கடி வருவார். அப்போதெல்லாம் நாடாரின் வீட்டுத் திண்ணையில் மருந்துக் கடையைப் பரப்பி வைத்துக் கொள்வது வழக்கம். அப்போது அவருக்கு அறிமுகமாகிய இளைஞர் ஆறுமுகப் பெருமாள் வைத்தியரின் உதவியாளராகவே மாறினார். உன்னங்குளம் வைத்தியரிடம் மருத்துவத்தையும் மருத்துவ ஏடுகளைப் படித்தறியும் கலையையும் பயின்று, பின்னர் முழு நேர வைத்தியராகத் தொழில் செய்யத் தொடங்கினார். தம்முடைய வீட்டிலேயே பலவகை மருந்துகளைத் தயாரித்து வியாபாரத்தில் ஈடுபட்டதோடல்லாமல், வைத்தியம் தொடர்பான ஓலைச் சுவடிகளைச் சேகரித்து அவற்றைப் பிரதி செய்து ஏனைய வைத்தியர்களுக்கும் விற்பனை

செய்தார். இந்நிலையில்தான் அவருடைய ஆர்வம், 'வில்லிசை ஏடுகள்' எனப்பட்ட கதைப்பாடல் ஏடுகளைத் திரட்டும் வகையில் மடைமாற்றம் பெற்றது.

ஏற்கனவே மருத்துவம், வர்மம், இலக்கியம், சோதிடம், வாய்மொழி மரபு, மாட்டு வாதடம், மந்திரவாதம், சிலம்பம் என்று பல்வேறு துறைகள் சார்ந்த ஏடுகளுக்குக் கன்னியாகுமரி மாவட்டம் பிரசித்திப் பெற்றிருந்தமையால், அவ்வட்டாரத்தையே பிறப்பிடமாகக் கொண்ட ஆறுமுகப் பெருமாள் நாடார், அவற்றில் ஆழ்ந்த ஈடுபாடு காட்டினார். 1940-45ஆம் ஆண்டுகளில் வில்லிசை ஏடுகளை முதன்மையாகச் சேகரித்தார். கிடைத்த ஏடுகளில் அரியனவற்றைப் பனை ஓலைகளில் பிரதி செய்து கொண்டார். இவ்வாறு தாம் சேகரித்தவற்றைப் பதிப்பித்து வெளியிடுவதில் 1952ஆம் ஆண்டு 1979ஆம் ஆண்டு வரையிலான காலக்கட்டத்தில் தீவிரமாகத் தம்மை ஈடுபடுத்திக் கொண்டார். அவ்வகையில் பதினெட்டு வில்லிசைப் பாடல்களையும், இருபத்தியொரு சிறு நூல்களையும் வெளியிட்டார். வில்லிசை நூல்களில் சுமார் ஏழு நூல்கள் மறுவெளியீடுகளாக வந்தன.

### வில்லிசை நிகழ்த்துகையில் ஏடுகள்

தமிழகத்தில் தென்மாவட்டங்களுக்கே உரிய வில்லிசை நிகழ்த்துகை என்பது அதன் நிகழ்த்துமுறை அடிப்படையில் காலந்தோறும் மாற்றங்களை ஏற்றுக் கொள்ளும் இயல்பினை அக்கலை குறித்து ஆராய்ந்த ஆராய்ச்சியாளர்கள் முன்வைத்துள்ளனர். வில்லிசைக் கலைஞர்கள் நிகழ்த்துதலின் போது கதைப்பாடலின் நிலைத்த பனுவல் எனப்படும் ஏட்டுப் பிரதியைத் தம் கையில் வைத்திருப்பது வழக்கம். ஆனால், ஏட்டைப் பார்த்துப் ப்டிப்பது என்பது நாம் பார்த்திராதது. ஏறக்குறைய நாற்பது ஆண்டுகளுக்கு முன்னர், ஏட்டைப் படித்தவாறு கதைப்பாடலை நிகழ்த்துவது வில்லிசை மரபாக இருந்திருக்கிறது. இதற்கு முன்னதாக மற்றொரு நிகழ்த்துதல் மரபு கடைப்பிடிக்கப்பட்டு வந்தது என்றும், அகா. பெருமாள் கூறுகிறார். அதாவது நாட்டார் தெய்வக் கோயிலில் கொடைவிழா நடைபெறும்போது, தொடர்புடைய தெய்வம் பற்றிய கதைப்பாடலின் ஏட்டுப் பிரதியைப் பார்த்து ஒருவர் படிப்பார். இவருக்கு 'வலம்பாடி' என்று பெயர். இந்த வலம்பாடி குறிப்பிட்ட கதைப் பகுதியைப் படித்துச்சொன்னதைத் தொடர்ந்து, வில்லிசைப் புலவர் விளக்கமாக அக்கதைப் பகுதியை நிகழ்த்துவார். இந்நிகழ்த்துதல் முறை, ஏறக்குறைய அறுபது ஆண்டுகளுக்கு முன்னர் -அதாவது 1950ஆம் ஆண்டுகள் வரையில் வழக்கத்தில் இருந்தது. இத்தகைய வலம்பாடிகளுக்கு இயைந்த முறையில் கதைப்பாடல்களைப் பதிப்பித்து வெளியிடும் நடைமுறை ஏறகுறைய 1923இல் தொடங்கியது. வில்லிசைக் கலைஞர்களுக்குப் பயன்படும் முறையில், எழுத்துப் பயிற்சி உடைய வல்லுனர்கள் கதைப்பாடல் நூல்களைப் பதிப்பிக்கும் மரபின் தொடர்ச்சியாகவும் தனித்தன்மைமிக்க ஆளுமையாகவும் திகழ்ந்தவர் ஆறுமுகப் பெருமாள் நாடார்.

### நாடாரின் முன்னோடிகள்

ஆறுமுகப் பெருமாள் நாடார் தம்முடைய பதிப்புப்பணியைத் தொடங்குவதற்கு முன்னர், வில்லிசைக் கதைப்பாடல்களைப் பதிப்பித்த முன்னோடிகளும் இருந்தனர். மலையாள மகாகவி உள்ளூர் பரமேசுவர அய்யர், பத்மநாபபுரத்தில் நீதிபதியாக இருந்தபோது, மலையாள மொழியில் இருந்த தமிழ்க் கதைப்பாடல்களைத் தொகுத்தளித்தார். இவருடைய உதவி பெற்று, இராமானுஜம் என்பர் நீலிக்கதையை ஆங்கில முகவுரையுடன் பதிப்பித்தார். அவ்வாறே, வில்லிசைக் கதைகள் பலவற்றை நூல் வடிவில் கொணர்ந்தவர்களுள் மு. ஆறுமுக நாடார், ராஜா தம்பையா நாடார், சீனிவாச நாடார், பிச்சாண்டி நாடார், மு. பெருமாள் நாடார், முத்தையா பிள்ளை, பாலசுப்பிரமணிய நாடார் ஆகியோர் குறிப்பிடத்தக்கவர்கள். கதைப்பாடல் நூல்களை வெளியிட்ட பதிப்பகங்களில் சங்கு கணேசனின் 'சங்குநூலகம்' நினைவுகூரத்தக்கது. ஏனெனில், அந்நூலகம், வில்லிசை நூல்களின் பதிப்பாசிரியர்களுக்கு அக்காலத்திலேயே காப்புரிமை அளித்திருந்தது.

### வலம்பாடிகளின் ஆசான்

வில்லிசைக் கலைஞர்களையே மையமாகக் கொண்டு கதைப்பாடல்களைத் தொகுப்புகளாக வெளியிட்டுவந்த பதிப்புச் சூழலில், வைத்தியரான ஆறுமுகப் பெருமாள் நாடார் நுழைந்தது சற்றே தற்செயலானது. வில்லிசைப் புலவர்களில் பலர், ஏட்டுச் சுவடிகளின் அரிய சொற்களின்பொருள்

மற்றும் கதைகள் பற்றிய அய்யங்களைத் தீரத்துக் கொள்ளும் பொருட்டு ஆறுமுகப் பெருமாள் நாடாரை அணுகத் தொடங்கினர். அவ்வகையில், வில்லிசை நிகழ்த்துதலில் பாடலைப் படிக்கக்கூடிய வலம்பாடிகளின் அய்யங்களைத் தீர்த்து வைக்கக்கூடிய முறைசாரா ஆசானாகச் செயல்பட்டார். பின்னர் வில்லிசைக் கலைஞர்களின் வேண்டுகோளுக்கு இணங்க, சுவடிகளிலிருந்த கதைப்பாடல்களைப் பதிப்பிக்கத் தொடங்கினார். அதனை "ஆறுமுகப் பெருமாள் நாடார் ஆகிய என்னை வில்லிசைப் புலவர்கள் மிகவும் கேட்டுக் கொண்டதற்கிணங்கவும் ஏடுகளைப் படித்துப் புரிந்துகொள்ள முடியாத பெண்புலவர்களுக்காகவும் இதைப் பதிப்பித்தேன்" என்று சுடலைமாடன் கதை விற்பாட்டு நூலின் முன்னுரையில் தாமே குறிப்பிடுகிறார்.

ஏனைய விற்பாடல் கதை நூல்களின் பதிப்பாசிரியர்களிலிருந்து ஆறுமுகப் பெருமாள் நாடார் வேறுபட்டவர். தாமே நூல்களை வெளியிட்டாலும் மற்றவர்களிடம் இருந்தாற் போன்ற வியாபார நோக்கம் அவரிடம் பிரதானமாகக் காணப்படவில்லை. நூல்களை உரிய சில புத்தக விற்பனையாளர்களின் மூலமாகத் தகுந்த கழிவுடன் தமது நூல்களை விநியோகம் செய்வதில் அக்கறை காட்டியவர். நூல்களைப் பெறுவதற்கு "ஆறுமுகப் பெருமாள் நாடார் வைத்தியர். அகத்தீசுவரம் - 627 701. குமரி மாவட்டம்" என்ற முகவரியில் தன்னை அணுகுமாறு ஒவ்வொரு நூலின் கடைசிப் பக்கத்திலும், நூல்களின் பட்டியலோடு அறிவிப்பு வெளியிட்டிருந்தார். வேறு புத்தகக் கடைகளின் பெயர்களும் குறிப்பிடப்பட்டிருந்தன. அவர் வெளியிட்ட நூல்களில் அதிக விலை குறிப்பிடப்பட்டிருந்த நூல்களாக '27 சில்லறைக் கட்டடம்' (ரூ. 3.55), 'முத்தாரம்மன் விற்கவிதை' (ரூ. 3.50), 'சுடலைமாடசுவாமி விற்கவிதை' (ரூ. 3.00) ஆகியவையே இடம்பெற்றிருந்தன. ஏனையவை ஒரு ரூபாய், இரண்டு ரூபாய் என்று விலையிடப்பட்டவை (இசக்கியம்மன் விற்கவிதை, 1978:60)

### பதிப்பித்த நூல்கள்

சுடலைமாட சாமி கதை (1949, 1952) முதல் வள்ளியம்மன் கதை ஈறாகப் பதினெட்டு வில்லிசைக் கதைப் பாடல்களைப் பதிப்பித்துள்ளார். பிற துறை நூல்கள் என்னும் வகையில் சுமார் இருபத்தொருநூல்கள், சிறு வெளியீடுகளாக வெளிவந்துள்ளன. 'சென்று திசைவென்ற பெருமாள் நாடார்' என்பவர் பெயரில் வெளிவந்த அய்யா வைகுண்டரின் "அகிலத்திரட்டு" (1967) உண்மையில் ஆறுமுகப் பெருமாள் நாடாரின் அரிய உழைப்பில் உருவான தொகுப்புதான். ஆனால் அவர் பெயரில் அந்நூல் வெளிவரவில்லை என்று குறிப்பிடுகிறார் அகா. பெருமாள். அய்யா வைகுண்டரின் ஆன்மிகக் கருத்துக்களைக் கொண்ட அகிலத் திரட்டு நூலின் பிரதிகளை, நெல்லை மாவட்டம் உடன்குடி மற்றும் கன்னியாகுமரி மாவட்டத்தைச் சேர்ந்த சந்தையடி தாமரைக்குளம், அகஸ்தீசுவரம் ஆகிய ஊர்களிலிருந்து திரட்டியவற்றையும் வாய்மொழிப் பிரதிகளையும் கொண்டு ஒப்பிட்டு நோக்கி ஆறுமுகப் பெருமாள் நாடார் உருவாக்கிய தொகுப்புதான் அகிலத்திரட்டு. (அகா. பெருமாள், 2008;17-18)

### பதிப்பின் தனித்தன்மைகள்

பெரும்பாலும் வில்லிசைக் கலைஞர்களுக்காவே கதைப்பாடல் ஏடுகளைப் பதிப்பித்தவராதலால், ஆறுமுகப் பெருமாள் நாடாரின் பதிப்பு முறையில் காணப்பட்ட சில தனிச்சிறப்புகள் சுட்டிக் காட்டப்பட்டுள்ளன. அவர் பதிப்பித்த நூலில் கதைப்பாடலின் சுருக்கம், நூலை அச்சிடும் நோக்கம், பாடலை எழுதியவரின் பெயர், ஊர், காலம் முதலிய விவரங்கள் இடம்பெற்றிருக்கும். அவ்வாறே நூல் அமைக்கப்பட்டிருக்கும் யாப்பு வடிவங்களான விருத்தம், தரு வெண்பா, சிந்து, கண்ணி போன்றவற்றை அடையாளம் கண்டு, அவற்றை முறையே அந்தந்தப் பா வடிவத்திற்கு மேல் குறிப்பிடும் வழக்கத்தையும் பின்பற்றினர். கொலை முதலியவற்றால் அகால மரணமடைந்தவர். வரம் பெற்றுத் தெய்வமாகிக் கோயில் கொண்டு, வில்லிசைப் பாடலிலும் இடம்பெறுவாரானால், அத்தகைய தகவல்களையும் நூலில் இடம்பெறச்செய்வார். வில்லிசைக் கதைப்பாடகர்கள் பயன்கொள்ளத்தக்க முறையில், மூலக்கதையைச் சுருக்காமல் விரிவாகக் கதையை நூலில் கொடுப்பது நாடாரின் வழக்கம். ஏனையோர் பதிப்புகளில் மூலக்கதைகள் மிகச் சுருக்கமாக இடம் பெற்றிருந்தமையால், வில்லிசைக் கலைஞர்கள் ஆறுமுகப் பெருமாள் நாடாரின் கதைப்பாடல் நூல்களையே பெரிதும் நாடினார். ஏடுகளைப் பதிப்பிப்பதற்கு முன்னால், ஒரு கதையின் பல்வேறு பிரதிகளை ஒப்பிட்டு நோக்கி முடிவு

காணும் அணுகுமுறையைப் பின்பற்றினார். இதற்கு உதாரணம் முத்தாரம்மன் கதை. இக்கதையைப் பதிப்பிப்பதற்காக அவர் ஏழு ஏடுகளை ஒப்பிட்டு நோக்கினார். முத்துப்பட்டன் கதையை நிகழ்த்திய வில்லிசைக் கலைஞர்களும் பதிப்பாசிரியரும் உயர்சாதிப் பார்வையாளரை விரோதித்துக் கொள்ளக் கூடாது என்பதற்காக முத்துப்பட்டனைப் போலவே சக்கிலியரான வாலப் பகடையின் மகள்களைப் பிராமணர்களாகச் சித்திரித்துக் கதையைத் திரித்தனர். இந்தத் திரிபு வடிவக் கதைப்பாடலை ஏற்காத ஆறுமுகப் பெருமாள். புன்னார் குளத்தில் கிடைத்த மூல ஏட்டினையே பதிப்பித்து வெளியிட்டார் (2008:16-17).

அவர் பதிப்பித்த வில்லிசைக் கதைப்பாடல் நூல்களின் தலைப்புகளில் நாம் கண்ட ஒரு தனித்துவமான அம்சம் "கவிதை" என்ற சொல்லாட்சியாகும். "வில்லுப்பாட்டு", "வில்லிசைப் பாடல்" என்று வில்லிசை நிகழ்ச்சியில் கையாளப்படும் கதைப்பாடலைப் பரவலாகக் குறிப்பிடுவர். ஆனால், ஆறுமுகப் பெருமாள் நாடார் தாம் பதிப்பித்த நூல்களுக்கு "விற்கவிதை" என்னும் சொல்லாட்சியையே கையாளுகிறார். "முத்தாரம்மன் விற்கவிதை" , "சுடலை மாடசுவாமி விற்கவிதை", "இசக்கியம்மன் விற்கவிதை" என்பன உதாரணங்கள்.

இவ்வாறு நிகழ்த்துதல் கலைஞர்களான வில்லிசைப் பாடகர்கள் பயனடையும் வகையில் பல இடங்களில் தேடிச் சேகரித்த ஏட்டுச் சுவடிகளிலிருந்த கதைப்பாடல்கள் என்ற நிலைத்த பனுவல்களைப் பதிப்பித்து அரும் பணியாற்றிய ஆறுமுகப் பெருமாள் நாடாரின் பங்களிப்பு என்றும் நினைவு கூரத்தக்கதாகும்.

அறிஞர்கள் கி.வா.ஜகந்நாதன், மு. அருணாசலம் போன்றவர்கள். "வாய்மொழி இலக்கியம்" எழுத்திலக்கியத்திற்கு இணையானது என்று கூறும் கொள்கையைத் தமிழ் உலகம் ஏற்றுக் கொள்ளும் என்பது உறுதி. அப்படியானால் பல தமிழ் இலக்கிய ஓலைச்சுவடிகளைப் பதிப்பித்து வளம் சேர்த்த தமிழறிஞர்கள் சி.வை. தாமோதரம்பிள்ளை, உ.வே. சாமிநாதஅய்யர் போன்ற பெயர்கள் அடங்கிய பட்டியலில் கு. ஆறுமுகப் பெருமாள் நாடாரின் பெயரும் இடம்பெறுவது நிச்சயமாகிவிட்டது.

**துணைநூற்பட்டியல்**


அருணாசலம் .மு. 1977. காற்றிலே மிதந்த கவிதை, திருச்சிற்றம்பலம் : காந்தி வித்தியாலயம்.

சண்முகசுந்தரம் அ. 1980, நாட்டுப்புற இலக்கிய வரலாறு, சிதம்பரம் : மணிவாசகர் பதிப்பகம்

பெருமாள் அகா. 2008, வாழ்க்கையை நகர்த்தும் கலைஞன், சென்னை : முத்துப் பதிப்பகம்

லூர்து .தே. 1990, தமிழ்நாட்டார் வழக்காற்றுத் தொகுப்புகள் - ஒரு மதிப்பீடு, ஆறு. இராமநாதன்

(பதி) நாட்டுப்புறவியல் ஆய்வு முறைகள், தஞ்சாவூர், தமிழ்ப் பல்கலைக்கழகம்.

Blackburn, Stuart H. and Ramanujan, A.K. 1986. Another Harmony, Delhi : Oxford university press.




# சீவக சிந்தாமணி – அறியப்படாத முன்னோடிப் பதிப்புகள்

திருத்தக்கதேவர் இயற்றிய சீவக சிந்தாமணியை நச்சினார்க்கினியர் உரையுடன் முழுமையாகப் பதிப்பித்தவர் என்ற பெருமை உவே. சாமிநாதையருக்கு உரியது. 1887இல் வெளியிட்ட முதல் பதிப்பினைத் தொடர்ந்து 1907இல் இரண்டாம் பதிப்பினை வெளியிட்டார். முதல் பதிப்பு வெளியான பின்னர் புதிதாகக் கிடைத்த 17 ஏட்டுப்பிரதிகளைக் கொண்டு ஆராய்ந்ததன் விளைவாக "மூலமுதலியன அடைந்த திருத்தங்கள் பல". மேலும் "அரும்பத அகராதிமுதலியன என்னும் பகுதியும், பிறவும் இப்பதிப்பில் நூதனமாக சேர்க்கப்பெற்றவை".

1887இல் வெளியான முதற்பதிப்புக்கு எழுந்த கண்டனங்கள் குறித்தோ, தம் பதிப்புக்கு முன்னர் வெளியான பதிப்புகள் குறித்தோ இரண்டாம் பதிப்பின் பதிப்புரை எதுவும் பேசவில்லை.

உவேசா. வின் வாழ்விலும் தமிழ்ப்பதிப்பு வரலாற்றிலும் முக்கிய நிகழ்வாகக் கருதப்படும் இப்பதிப்பு வெளிவருவதற்கு முன்பே சீவகசிந்தாமணிக்கு இரண்டு பதிப்புகள் வெளிவந்தன.

1. 1864இல் ரெவ. பவர் என்பவர் சீவக சிந்தாமணியின் நாமகள் இலம்பகத்தை நச்சினார்க்கினியர் உரையுடன் பதிப்பித்தார். இப்பதிப்பினைக்குறித்து பேராசிரியர் வையாபுரிப்பிள்ளை எழுதியுள்ளார்.

2. மற்றொரு பதிப்பு அரங்கசாமிப்பிள்ளையின் பதிப்பு. இப்பதிப்பு குறித்த விரிவான தகவல்கள் இதுவரைப் பதிவாகவில்லை. அதற்குக் காரணம் அந்நூல் அறிஞர்களின் பார்வைக்கு கிடைக்காமல் இருந்தமையே. அறிஞர் மயிலை சீனி. வேங்கடசாமியின் சேகரிப்பில் இருந்த அந்நூலின் ஒரு படி தற்பொழுது உலகத்தமிழாராய்ச்சி நிறுவன நூலகத்தில் உள்ளது.


சீவக சிந்தாமணி.
அரங்கசாமிபிள்ளை

உவேசா. சீவகசிந்தாமணியை வெளியிடுவதற்கு நான்கு ஆண்டுகளுக்கு முன்னர் வெளியான பதிப்பாகும் இது.

1883இல் சென்னை அஷ்டலக்ஷிமிவிலாச அச்சுக்கூடத்தில் பதிப்பிக்கப்பட்ட அந்நூல் திருத்தக்க மாமுனிவர் செய்த பஞ்சகாவியங்களுளொன்றாகிய சீவகசிந்தாமணி (முதற்பாகம்) என்ற பெயரில் வெளியானது. பதுமையார் இலம்பகம்வரையுள்ள முதல் ஐந்து இயல்களின் மூலம் மட்டும் பதிப்பிக்கப்பட்டுள்ள இந்நூலில் முகவுரையோ பதிப்புரையோ இடம்பெறவில்லை. முகவுரைக்கான குறிப்புகளை சபாபதிமுதலியார் இயற்றிய சாற்றுக்கவியில் காணமுடிகிறது.

ஆருகத நெறிச் சார்பின் முற்றிய
திருத்தக்க மாமுனி யருத்தியிற் கிளந்தது
சச்சந்த னென்னுங் கொற்றவ னரிதிற்
பெறுமக வென்னும் மறுவறு குணத்திற்
சீவக சாமி சிந்தா மணிநூ
லின்னிகழ் ஞான்றுதொட் டந்நிலை பிறழா
தியாண்டு மியங்கிக் காண்டக விருப்பான்
பின்ன ருரையுடன் பிறங்கப் பொறித்து
முன்ன ரன்னதன் மூல பாடந்
தனைப்பதித் தளிக்குதூ மெனத்தொடங் கிப்பல
பிரதிக ளைக்கொண் டுரைமுறை யிணங்க

பதிப்பிக்கப்பட்டதாக குறிப்பிடுகிறது. மேலும் இந்நூலில் சென்னை இராஜதானி வித்தியாசாலைத் தமிழ்ப் பண்டிதராயிருந்த ம-ள-ள-ஸ்ரீ சீனிவாசராகவாச்சாரியர், சருவகலாசாலைத் தமிழ் தலைமைப் புலவர் கோமளபுரம் ம-ள-ள-ஸ்ரீ இராஜகோபால பிள்ளை, திரிசிரபுரம் வித்துவான் ம-ள-ள-ஸ்ரீ, மீனாட்சி சுந்தரம்பிள்ளை மாணாக்கரி லொருவராகிய ம-ள-ள-ஸ்ரீ வேங்கடசுப்பு பிள்ளை ஆகியோரின் சாற்றுக்கவிகளும் இடம்பெற்றுள்ளன.

இந்நூலில் இடம்பெற்றுள்ள அரும்பதப் பொருள் என்னும் பகுதி குறிப்பிட்டுச்சொல்லவேண்டிய பகுதியாகும். அகர வரிசையில் சொற்கள் கொடுக்கப்பட்டுள்ளன.

உவேசா. பதிப்பித்த சீவகசிந்தாமணி முதல்பதிப்பில் இப்பகுதி இடம்பெறவில்லை இரண்டாம் பதிப்பில் விரிவாக இடம்பெற்றுள்ளன.

பாடவியல் நோக்கில் அரங்கசாமிப்பிள்ளை பதிப்பினையும் உ.வே.சா. பதிப்பினையும் ஒப்பு நோக்கவேண்டிய தேவையுள்ளது.

அரங்கசாமிப் பிள்ளைப் பதிப்பின்படி முதல் ஐந்து இலம்பகங்களின் பாடல் எண்ணிக்கை 1406 ஆகும். உ.வேசா. வின் பதிப்பில் 1411 பாடல்கள் இடம்பெற்றுள்ளன. பதிகம் மற்றும் நாமகள் இலம்பகம் ஆகியவற்றில் இரு பதிப்புகளிலும் பெரிய அளவிலான வேறுபாடில்லை. எண்ணிக்கையும் ஒன்றாகவே உள்ளன. பாடல்களின் வைப்புமுறையில் ஒரு இடத்தில் முன்பின்னாக மாற்றியுள்ளனர்.

கோவிந்தையார் இலம்பகத்தில் உள்ள "சேட்டிளம்" எனத்தொடங்கும் பாடலை உவேசா. மிகைப்பாடலாகக் கொண்டுள்ளார். நச்சினார்க்கினியரின் உரை அதற்குக் காரணமாகும். சில பாடல்களை நான்கடிப்பாடலாக அரங்கசாமிப்பிள்ளை கொள்ள, உவேசா. இரண்டு இரண்டடிப் பாடல்களாகக் கொள்கிறார்.

முழுமையான பதிப்பாக அமையாவிட்டாலும் மூலபாட ஆய்விற்கு இப்பதிப்பு பெருந்துணையாக அமையும். உ.வே.சா. வின் திருந்திய இரண்டாம் பதிப்பும்(1907), அரங்கசாமிப்பிள்ளையின் முதல் பதிப்பும்(1883) ஏறக்குறைய சமநிலையில் உள்ளதை அறிய முடிகிறது.

மேலும் முதல்பதிப்பில் எழுந்த கண்டனங்களைத் தொடர்ந்து இரண்டாம் பதிப்பிற்கு இந்நூலை உ.வே.சா. பயன்படுத்தியிருப்பாரோ என்ற ஐயத்தைக் கிளப்புகிறது. அதற்கு இரண்டு காரணங்களைக் கூற முடியும்

1. உ.வே.சா. வின் முதல்பதிப்பில் இடம்பெறாத அருஞ்சொற் பொருள் அகராதி இப்பதிப்பைப் பார்த்ததன் விளைவாகவே இரண்டாம் பதிப்பில் கொடுக்கப்பட்டுள்ளது.

2. முதல் பதிப்பில் இடம்பெற்றுள்ள சில தவறான பாடங்கள் இரண்டாம் பதிப்பில் திருத்தப்பட்டுள்ளன. அத்திருத்தப்பட்ட பாடங்கள் சில அரங்கசாமிப் பிள்ளையின் பாடத்தோடு ஒத்துச் செல்கின்றன.

இதையெல்லாம் நோக்கும்போது வையாபுரிப்பிள்ளை குறிப்பிடும் சீவக சிந்தாமணியைப் பதிப்பிக்க அவர் காலத்தில் அவரைவிட திறமையானவர்கள் இருந்தார்கள் என்ற கூற்று உறுதிப்படுகிறது.

**குறிப்பு:**

1887இல் உ.வே.சா.வால் பதிப்பிக்கப்பட்ட சீவகசிந்தாமணியில் காணப்பட்ட பிழைகளைப் பட்டியலிட்டு "உ.வே. சாமிநாதையரின் சீவசிந்தாமணியுரைப் பிழைகள்" என்னும் நூல் வெளிவந்துள்ளது. இப்பொழுது யாரால் வெளியிடப்பட்டது என்ற, குறிப்புகளின்றி ரோஜா முத்தையா ஆராய்ச்சி நூலகத்தில் அந்நூல் காணக்கிடைக்கிறது.

தகவல் உதவி
அ. சதீஷ்

# சமயக் கண்டன நூல் – மிலேச்ச மத விகற்பம்

மிலேச்ச மதம் என்று யாழ்ப்பாண சைவப்பிரகாச சமாசியர்களுள் ஒருவராய் இருந்த நீர்வேலிச் சங்கரபண்டிதர் ஆகிய இந்நூலாசிரியர் குறிப்பிடும் மதங்கள் யூதமதம், கிறித்துவ மதம், இஸ்லாம் மதம் ஆகியனவாகும்.

மிலேச்ச மதங்கள் என்று குறிப்பிடப்படும் இம்மதங்கள் உருவான வரலாற்றனைச் சுருக்கமாகக் கொடுத்து பின்னர் அம்மதமானது எவ்வாறு பல்வேறு பிரிவுகளாக மாறின என்பதை விளக்கும் இவ்வாசிரியர் அம்மதங்கள் எல்லாம் மனித சமூகத்திற்கு எதிரானவை என்ற தூஷணத்தை முன்வைக்கிறார். அம்மதங்கள் உருவான வரலாற்றை அறிந்தாலே மக்கள் அவற்றில் ஈடுபடமாட்டார்கள் எனக் கூறுகின்றார்.


மிலேச்ச மத விகற்பம்.

சங்கரபண்டிதர்

செய்தது.

சிவப்பிரகாசபிள்ளையால்

"முற்காலத்திலே உலோகாயதம், பௌத்தம், ஆருகதம், மீமாஞ்சகம் முதலிய அசற்சமயங்கள் சைவ சமயத்தோடு பகைத்து, மிக ஓங்கி வளர்ந்து பெருகினவாயினும். சில நாட்களுக்குள்ளே அவையெல்லாம் நிலைகெட்டுச் சுருங்கி மறையச், சைவ சமயமே விளங்கி வழங்கி வந்தது.

இக்காலத்திலே, அந்த அசற் சமயங்களெல்லாந் திரண்டு ஒரு வடிவெடுத்தாற் போன்ற மிலேச்ச மதமென்றும் அசற்சமயமானது. முளைத்து வந்து, மிக ஓங்கி வளர்ந்து சைவ சமய ஞானத்தை மூடிப் பேரிருள்போல எங்குஞ் சூழ்ந்து கேடு செய்து வருகின்றது. ஆதலால் இவ்விருளிலே யாவரும் அமிழ்ந்தி நரகத்தில் வீழாது விலகிக் கொள்ளும் பொருட்டு, இந்த மிலேச்ச மதம் முளைத்து விகற்பித்து வகையை ஒரு நூலாகச் செய்து காட்டுகிறோம் என்று கூறுகின்றார்."

ஆக சைவத்திற்கு இருந்த நெருக்கடியான நிலை சைவப் புலமையாளர்களை இத்தகைய நூல்களை எழுதத் தூண்டியுள்ளது.

தகவல் உதவி
அ. சதீஷ்

# சமயக் கண்டன நூல் – தூஷணத் திக்காரம்

தத்துவ போதகர் என அழைக்கப்பட்ட ராபர்ட்-டி-நொபிலி அவர்களால் எழுதப் பெற்றது இந்நூல். 17ஆம் நூற்றாண்டின் தொடக்கத்தில் இந்தியாவிற்கு வந்த இப்பாதிரியார் தமிழ், சமஸ்கிருதம் முதலான இந்திய மொழிகளைக் கற்றுத் தேர்ந்தார். இவர் எழுதிய பல தமிழ் நூல்களிலொன்று தூஷணத் திக்காரம்.

தூத்துக்குடி தமிழ் இலக்கியக் கழகத்தால் 1984இல் பதிப்பிக்கப்பட்ட இந்நூல் 1640களில் எழுதப்பட்டது என அறிய முடிகிறது. எந்த ஆண்டு இயற்றப்பட்டது என்பதை உறுதியாக அறிய முடியவில்லை.

கிறித்துவ மதத்திற்கு எதிராக 17ஆம் நூற்றாண்டில் தமிழகத்தில் பெரும் முனைப்புடன் சைவ, வைணவ மதங்கள் இயங்கின. பல்வேறு கண்டனங்கள் முன் வைக்கப்பட்டன. அவற்றுள் சில நூல்களாகவும் சில வாய்மொழி மரபாகவும் பரப்பப்பட்டன. கிறித்துவர்களின் வேதம் குறித்தும், கடவுள் குறித்தும், அவர்களின் ஒழுக்கம் குறித்தும் பல்வேறு தூஷணங்கள் தமிழகத்தில் எழுந்தன. அத்தகைய தூஷணங்களையெல்லாம் தொகுத்து பன்னிரண்டு பிரிவாக வகைப்படுத்துகிறார் தத்துவ போதகர். பின்னர் ஒவ்வொன்றினையும் உலக வழக்கு காட்டியும், பிற சமய மேற்கோள் காட்டியும், தம்முடைய வேதத்தை மேற்கோள் காட்டியும் அந்த தூஷணங்களையெல்லாம் மறுத்து கிறித்துவ மதமே மேலான மதம் என நிறுவுகின்றார்.

கிறித்துவம் இந்தியச் சமூகத்தின் சாதிய அமைப்பு முறையை எவ்வாறு உள்வாங்கியது என்பது குறித்தும், அன்றைய சைவ வைணவ சமயங்களின் நிலை எவ்வாறு இருந்தன என்பது குறித்தும், உரைநடையின் உருவாக்கம் குறித்தும் அறிய உதவும் ஆவணமாக இந்நூல் விளங்குகிறது

தகவல் உதவி
அ. சதீஷ்

# என் நோக்கில் ஆனந்த குமார சுவாமி பல் நோக்கிற்குரிய பாங்காளன்



கலாகேசரி
ஆ. தம்பித்துரை எழுதிய 'கலாயோகி ஆனந்த கெ. குமாரசாமி' (1971) எனும் நூலிலிருந்து இக்கட்டுரை தரப்பட்டுள்ளது.

கலைக்குரிசில் ஆனந்தக் குமாரசுவாமியின் பல் துறைப்பட்ட கலைத்திறனை பல்வேறு அறிஞர்கள் பல்வேறு நிலையில் பல்வேறு கோணங்களில் இருந்து ஆராய்ந்து தத்தம் முடிபுகளைத் தெரிவித்துள்ளனர். யானும் யான் பெற்ற அறிவு ஆற்றல் அனுபவத்திற்கு ஏற்க அவரை என் கண்கொண்டு நோக்க விழைகிறேன்.

**பிறப்பு, வளர்ப்பு, படிப்பு, மறைவு**
சேர் முத்துக்குமாரசுவாமி என்ற ஈழத் தமிழ் மகனுக்கும் எலிசபெத் கிளேபிபி என்ற ஆங்கிலப் பெண்மணிக்கும் 22.8.1877இல் ஈழத்தில் பிறந்த ஆனந்தக் குமாரசுவாமி அவர்கள் 9.9.1947இல் அமெரிக்காவில் தனது 70ஆம் அகவையில் நிலமிசை நிறைவாழ்வு வாழ்ந்து நீடுபுகழ் நிலைநாட்டி இவ்வுலக வாழ்வை நீத்தார்.

ஆனந்தக் குமாரசுவாமி அவர்கள் பிறந்தது ஈழத்தில், பயின்றது இலண்டனில், சுற்றிப் பார்வையிட்டது உலகின் பல நாடுகளை. இறுதியில் தன் வாழ்வின் பெரும்பகுதியைக் கழித்து உயிர் துறந்ததும் அமெரிக்க நாட்டிலேயாகும்.

**உலகிற்கு இனியவர்**
பிறப்பால் தந்தை வழியால் தமிழனாகவும் தாய் வழியால் ஆங்கிலேயனாகவும் விளங்கிய ஆனந்தக் குமாரசுவாமி அவர்கள், தான் பெற்ற உலகம் வியக்கும் பல்துறை அறிவினால் - கலை. உணர்வினால் உலகின் பொதுவுடைமையாக - ஆம்! உலகின் பொதுச் சொத்தாக விளங்கினார். "தம்மின் தம் மக்கள் அறிவுடைமை மாநிலத்து மன்னுயிர்க்கெல்லாம் இனிது" என்ற வள்ளுவர் கூற்று இவரைப் பொறுத்தவரை மிகப் பொருத்தமுடைய கூற்றாகத் திகழ்கின்றது.

**துறைகள் அனைத்திலும் துலங்கியவர்**
இலங்கையில் தனது 26ஆம் அகவையில் மண் இயல் ஆய்வாளராக (Geologist) தன் பணியைத் தொடங்கிய ஆனந்த குமாரசுவாமி அவர்கள் 'தொரநயிற்' (Thoranite) என்ற ஒரு தாதுப் பொருளைக் கண்டுபிடித்து இதற்காக 'டாக்டர்' பட்டமும் பெற்று தன் அறிவியல் அறிவை நிலைநாட்டினார். பின்பு இதே ஆனந்தக் குமாரசுவாமி அவர்கள் அரசியல் மெய்விளக்க வல்லுனராகவும், பல்வேறு சமயங்களின் மெய் விளக்கங்களை ஒப்புநோக்கி அவற்றின் முருகியல் பண்புகளிலே தோய்ந்தவராகவும் உலகக் கலைகளை குறிப்பாக இந்தியக் கலைகளை மிக விரிந்த அடிப்படையில் ஆராய்ந்து அவற்றின் நுண் பொருளை உலகம் வியக்கும் முறையில் எடுத்து விளக்கிய கலைக்குரிசிலாக விளங்கினார். பிறப்பால் கிழக்கையும் மேற்கையும் இணைத்த இப்பெருமகன் வாழந்து காட்டிய வாழ்வும், ஆற்றிய வளமான பணியும் உலகை ஒன்றுபடுத்தும் ஒப்பற்ற தன்மை உடையதாகவே விளங்கின.

**பன்மொழிப் புலமையுடன் பல நூறு நூல்கள் எழுதியவர்.**
ஆங்கிலம், பிரெஞ்சு, வடமொழி, தமிழ், இலத்தீன், சிங்களம், இத்தாலி, பாளி, பாரசீகம், கிரேக்கம் என ஏறக்குறைய உலகின் பதினான்கு மொழிகளிலே தேர்ச்சி பெற்று விளங்கிய ஆனந்த குமாரசுவாமி அவர்கள் தனது 18ஆம் வயதிலேயே கட்டுரைகள் வரையத் தொடங்கிவிட்டார். யாம் அறிந்த வரையில் அவர் எழுதிய முக்கியத்துவம் வாய்ந்த முதற் கட்டுரை 'டொவரோ மேட்டின் நில அமைப்பு, (Geology of Doverrow

Hill) என்பதேயாகும். 1895ஆம் ஆண்டு தொட்டு 1947ஆம் ஆண்டு வரை அதாவது அவர் இறக்கும் வரை ஏறக்குறைய 500 வெளியீடுகளை அவர் வெளியிட்டுள்ளார். அவரின் இறுதி வெளியீடு Time & Eternity (காலமும் முடிவற்றிருத்தலும்) எனும் நூல் எனக் கருதப்படுகிறது. அவர் எழுதிய நூல்கள் எண்ணிக்கையிலும் எடுத்தாளப்பட்ட எண்ணங்களிலும் ஏற்றம் பெற்று விளங்குகின்றன.

### கலைக் களஞ்சியத்தில் இடம் பெற்ற கலைஞர்

பிரித்தானிய கலைக் களஞ்சியத்திற்கும் அமெரிக்கத் தேசிய கலைக் களஞ்சியத்திற்கும் பல நாட்டுக் கலைகள் பற்றிக் கட்டுரைகள் வரைந்த ஆனந்தக் குமாரசுவாமி அவர்கள் இந்திய மொழிகளிலே தோன்றித் திரிபு பெற்ற ஆங்கிலச் சொற்களையும் வெப்சரின் (Webster) அனைத்துலக அகர வரிசையிற் பதிப்பித்தார். அத்துடன் நந்திகேசுவரரின் நாட்டிய நூலையும் இருக்கு, அதர்வண வேதங்களின் முக்கிய பகுதிகளையும் வடமொழியில் இருந்து ஆங்கிலத்தில் மொழி பெயர்த்தார்.

### ஆக்கி அளித்த அரிய நூல்கள்

அவர் ஆக்கி அளித்த பல நூல்களுள் ஒரு சில இங்கு வருமாறு 1. இந்தியக் கைப்பணியாளர்கள், 2. கலையும் சுதேசியமும், 3. வீட்டிற்குரிய கைப்பணிகளும், கலைகளும், 4. இந்தியத் தாதுப் படிமங்கள், 5. இந்தியத் தேசியத் தத்துவ விளக்கம், 6. இராயபுத்திர ஓவியங்கள், 7. இந்து மதமும் புத்த மதமும், 8. இடைக்காலச் சிங்களக் கலைகள், 9. இந்திய இந்தோனேசியக் கலைகள், 10. சிவநடனம், 11. இந்தியாவினதும் இலங்கையினதும் கலைகளும் சித்திரவேலைகளும். இறுதியில் குறிக்கப்பட்ட நான்கு நூல்களில் அவர் தெரிவிக்கும் ஆழ்ந்தகன்ற கருத்துக்கள் இன்றைய சூழ்நிலையில் இந்தியாவுக்கும் இலங்கைக்கும் குறிப்பாகத் தமிழருக்கும் மிகப் பயனுடையதாக இருப்பதினால் அவற்றில் ஒரு சிலவற்றை இங்கு எடுத்து விளக்கல் எனது நோக்கமாகும்.

### 'சிவ நடனத்தின்' சிறப்பு

ஆனந்த குமாரசுவாமி அவர்கள் வரைந்த நூல்களுள் 'சிவநடனம்' என்பது முதன்மை வாய்ந்த நூல்களுள் ஒன்றாகும். இந்தியாவில் எழுந்த மதங்களின் தத்துவங்களை விளக்குவதோடு இந்தியக் கலைகளையும் அவற்றின் உட்பொருளையும் அழகுற இந்நூல் விளக்குகிறது. 14 கட்டுரைகள் கொண்டுள்ள இந்நூலில் 'சிவநடனம்' பற்றி வரையப்பட்டுள்ள 12 1/2 பக்கங்கள் கொண்ட கட்டுரை பொதுவாகச் சிந்தனையாளருக்கு நல் விருந்தாகவும் சிவநெறிதழுவி நிற்கும் செந்தமிழ் மக்களுக்கு சிந்தை நிறைவையும் உவகைப் பெருக்கையும் தரும் கட்டுரையாக மிளிர்கிறது.

'தேன்புக்க தண்பணை சூழ்தில்லைச்
சிற்றம்பலவன்
தான்புக்கு நட்டம் பயிலும் அது என் ஏடி'

என்ற திருவாசகத்தின் திருச்சாழல் பாடலின் முதல் இரண்டு வரிகளைப் பின்வரும் முறையில் "The Lord of Thillai's Court a mystic dance performs; What's that my dear?" என்ற மொழிபெயர்ப்புத் தலைப்புடன் தொடங்கும் இக்கட்டுரையில் நூலாசிரியர் பல வடமொழி நூல்களின் மேற்கோள்களை எடுத்தாள்வதோடு சிதம்பரமும் மணிக்கோவை, திருமூலர் திருமந்திரம், உண்மை விளக்கம், சிவஞான சித்தியார், திருவருட்பயன் முதலிய தமிழ் நூல்களிற் இருந்து மேற்கோள்களை ஆங்கிலத்தில் மொழிபெயர்த்து சிவநடன மெய் விளக்கத்தை ஆழ்ந்த ஆய்வுத் திறத்துடன் உலக மாந்தர்க்கு விளக்கும்போது எம் மெய்சிலிர்க்கிறது. நம் உள்ளத்தில் உவகை உணர்ச்சி பொங்கி வழிகிறது. உண்மையில் தமிழனின் பெருமையை - அவன் சார்ந்த சமயத்தின் அளப்பரிய உண்மைகளை உலகத்தவருக்கு விள்க்கியதனால் தமிழனின் நன்றிக்கு அவர் என்றும் உரியவர் ஆகியுள்ளார். அவர் தன் நூலில் நடராசா வடிவின் நலன்பற்றி கூறிய முக்கிய பகுதிகளை வாசகர்கள் சுவைத்து மகிழும் முறையில் அதனின் தமிழ் ஆக்கத்தினை இங்கு தருவோம்.

### நடராசா வடிவின் நலங்கள்

"நடராசா வடிவின் நலங்கள் அளப்பரியன. இத்தகையதொரு சிறந்த வடிவத்தினை இந்நாளில் எத்தகைய பெருங்கலைஞனும் கூட கருதியுணர்ந்து படைத்தல் இயலாது. இது வெறும் கவிதையன்று, அறிவியல் நலமும் அமைந்தது. இத்திருவுருவம் பக்தர்களுக்கும், பாமர மக்களுக்கும், அறிவியல் அறிஞர்களுக்கும் மெய்விளக்க அறிஞர்களுக்கும் எல்லாம், பெருவியப்பையும் பேரீடுபாட்டையும் விளைத்து மகிழ்வித்து வருகின்றது. காலமும் இடமும் கடந்து, எல்லா நாடு, மொழி, சமயம் சார்ந்த மக்களாலும் போற்றப்படத்தக்கதாய்த் திகழ்கின்றது. இத்தகைய அரும்பெருஞ் சிறப்புக்கள் மிக்க இத்திருவுருவத்தினை முதன்முதற் கருத்திற் படைத்து உதவிய அருட்பெருஞ் சான்றோர்கள் ஆகிய கலைஞர்களின் நுண்மாண்நுழைபுலம் சாலவும் வியந்து போற்றுதற்குரியது. எனவே

எத்தனையோ பல தலைமுறைகளாக நடராசர் வடிவம் மக்களின் உள்ளங்களையெல்லாம் கவர்ந்து நின்று வழிபடப்பெற்று வருதலில் வியப்பு ஒன்றும் இல்லை. எவ்வளவோ ஐயப்பாடுகள் கொள்ளுவதிலும் எத்தனையோ பல குறைபாடுகளைக் காண்பதிலுமே பழகிப் பயின்றுள்ள நாமும்கூட நடராசரை வழிபட்டுத்தான் வருகின்றோம். இக் காரணங்களாற் போலும் தில்லை நடராசனின் திருவடிவத்தை அன்று கண்டுகளித்த அப்பர் அடிகளும்

"குனித்த புருவமும் கொவ்வைச்
செவ்வாயில் குமிழ் சிரிப்பும்

பனித்த சடையும் பவளம் போல்
மேனியில் பால் வெண்நீறும்

இனித்த முடைய எடுத்த
பொற்பாதமும் காணப்பெற்றால்

மனித்தப் பிறவியும் வேண்டுவதே
இம்மாநிலத்தே"

என்று பாடிப் பேரின்ப நிலை
எய்தினார் போலும்.

### திராவிடரின் சிற்பத்திறன்

மேலும் 'இந்திய இந்தோனேசியக் கலைகள்' என்ற அவரின் மற்றைய விரிந்த ஆய்வு நூலில் திராவிடரின் சிற்பத்திறன் பற்றி அவர் செப்பும் செம்மொழிகள் எமக்கு பெருமித உணர்ச்சியையும் பேர் உவகையையும் தருகின்றன. அவர் நூலிற் காணப்படும் சில முக்கிய பகுதிகள் இங்கு தரப்படுகின்றன:- "பொலன்னறுவை சிவன் கோவிலுக்குப் பக்கத்திற் கண்டெடுக்கப்பட்ட செப்புத் திருவுருவங்களான சுந்தரமூர்த்தி அடிகள், மாணிக்கவாசக அடிகள் என்னும் சிவநெறியடியார்களினது திருவுருவங்கள் தென் இந்தியாவில் உள்ள இவ்வடியார்களுடைய உருவங்களிலுஞ் சிறந்தனவாகும். ஆயினும் இவ்வுருவங்கள் யாவும் திராவிட சிற்ப முறையிலே அமைந்துள்ளன" (பக்கம் 167). மற்றும் இதே நூலில் பக்கம் 8ல் "இந்தியக் கலையும் அறிவுச் சீர்மையும் திராவிடர்களினதும் ஆரியர்களினதும் சேர்ந்த விவேகத்தின் பயனாகவே தோன்றியனவாம்" என்றும் கூறுகின்றார். மேலும் இதே நூலில் பக்கம் 5ல் உருவ வழிபாடும் யாகத்துக்கு வேறாகிய பூசைமுறையும் என்ற இவ்விரண்டினது வளர்ச்சியில் திராவிடப் பண்புகளே பெரும்பாலும் தொடர்புற்றிருத்தல் வேண்டும்" என்றும் கூறிச் செல்வதை நாம் காணக்கூடியதாக இருக்கிறது.

### விபுலானந்த அடிகளும் ஆனந்த குமாரசுவாமியும்

முத்தமிழ் வித்தகர் விபுலானந்த அடிகள்கூட தனது யாழ் நூலில் 'பேரி யாழ்' என்ற பகுதியில் திரு.ஆனந்தக் குமாரசுவாமி அவர்கள் தமிழிசை மரபைப் பற்றிக் கொண்டிருந்த கருத்தைப் பின்வருமாறு கூறுகின்றார். "அமராவதி நகரில் உள்ள சிலப்பதிகார காலத்துக் கல்லோவியம் எழில் மிக்க நரம்புகளுள்ள யாழின் உருவத்தை நமக்குக் காட்டுகிறது. இவ்வோவியத்தின் நிழற் படத்தினைக் கண்ணுற்ற திரு. ஆனந்த குமாரசாமி என்னும் ஈழநாட்டுப் பேரறிஞர் பழமையான இக்கருவி சிலப்பதிகாரத்தின் காலத்திலும் அதற்கு முன்னும் பின்னும் தமிழ்நாட்டிலே வழங்கி வந்தது என்பதையும் மிகப் பழமையான இசை மரபு ஒன்று தமிழகத்தில் இருந்து இறந்தது என்பதையும் உலகிலுள்ள பேரறிஞர்கட்கு வெளியிட்டார்."

### இந்தியாவை வெறுக்கும் சிங்கள இனம்

ஆதியில் நில அமைப்பில் இந்தியாவுடன் இலங்கை ஒன்றாயிருந்தது. காலப்போக்கில் கடல் இந்தியாவை இலங்கையினின்று பிரித்தபோதும் வரலாற்றுக் காலத்து முன்பேயே இந்தியாவுக்கும் இலங்கைக்குமிடையில் பிரிக்க முடியாத பிணைப்பு இருந்தது. இதை நில அமைப்பியல் ஆய்வாளரும், புவியியல் ஆய்வாளரும் வரலாற்று ஆசிரியர்களும் ஏற்று உள்ளனர். பண்டைய தமிழர்க் காலம் தொட்டு நாவலர் காலம் வரை இந்தியாவுக்கும் இலங்கைக்கும் உள்ள உறவு மிக நெருங்கிய குடும்ப உறவு போலத் தான் விளங்கியது. குறிப்பாக வட இலங்கைத் தமிழர்களுக்கும் தென்னகத் தமிழர்களுக்கும் இடையில் நிலவிய உறவு மிகமிக நெருக்கமானது. மற்றும் சிங்கள இனத்தின் வரலாற்றைப் பார்க்கும்போதுகூட அவர்களின் இனத்தின் தோற்றத்திற்குக் காரணமான முதலில் இலங்கைக்கு வந்த விஜயன் காலம் தொட்டுப் பாண்டிய மதுரையில் இருந்து தனக்கும் தன் தோழர்களுக்கும் பெண்களைக் கொண்டு வந்து மணம் செய்து சிங்கள இனத்தைத் தோற்றுவித்த 2500 ஆண்டுகளுக்கு முன்பேயே இந்தியாவுக்கும் இலங்கைக்குமிடையில் பிரிக்க முடியாதளவு இரத்தம், மொழி, கலை, பண்பாடு, சமயத் தொடர்புகள் இருந்தும், இன்று சிங்கள மக்களிடையே குறிப்பாக அவர்களின் தலைவர்களிடை இந்தியாவின் மீது வெறுப்பு, சிறப்பாக தமிழ்நாட்டின் மீது வெறுப்பு காட்டுத் தீ போல் பரவி வருகிறது.

### சிங்கள இனத்தின் தோற்றம்

தமது இனத்தின் தோற்றத்திற்கு காரணமாய் இருந்த தந்தை வழி முன்னோரையும் தாய்வழி மூதாதையரையும் வெறுத்து மறுக்கும் அளவிற்கு எதுவித பொருளுமற்ற சிங்கள இனவெறி தோன்றியுள்ளது. இந்தியாவுக்கும் இலங்கைக்கும் உள்ள இணைப்பு - தொடர்பு முற்றாகத் துண்டிக்கப்பட வேண்டும் என்று கூக்குரல் இடும் இவர்கள் முன்கூறியபடி தம் முன்னோரைத் துறப்பதோடு தமது புத்த சமயந் தோன்றுவதற்குக் காரணமாய் இருந்த புத்தர் யார்? அப்புத்த மதத்தைப் பரப்பிய மகிந்தன் யார்? சங்கமித்தை யார்? அவர்கள் வழிபடும் பத்தினித் தெய்வமாகிய தமிழச்சி கண்ணகி யார்? அவர்களின் மொழி வாழ்வும் வளமும் பெறத் துணை புரிந்த வடமொழி, பாலி, தமிழ் முதலிய மொழிகளெல்லாம் எங்கிருந்து தோனறி இங்கு பரவின என்பதைக்கூட மறந்து விட்டார்கள்.

அத்துடன் தங்கள் வசதிக்காகத் தங்களின் இனவெறிக்கு முழு உருவம் கொடுப்பதற்குப் புதிய வரலாறு என்ற பெயரில் அறிஞர்கள் எள்ளி நகையாடத்தக்க முறையில் கட்டுக்கதைகள் எழுதத் தொடங்கியுள்ளார்கள். உண்மைக்கு என்றும் அழிவில்லை என்பதை அவர்கள் உணரார் போலும்.

இவ்வினவெறி பிடித்த சிங்கள மக்களுக்குச் சாட்டை அடிகொடுப்பது போல் அவர்களின் அறியாமையை அகற்றி அறிவுக்கண்ணைத் திறப்பதுபோல் ஆனந்தக் குமாரசுவாமி அவர்கள் 'Arts and crafts of India and Ceylon' (இந்திய இலங்கைக் கலைகள் சிற்பங்கள்) என்ற தன் நூலின் முன்னுரையில் 'Ceylon from the Stand Point of ethnology and Culture is an integral Part of India' (மக்கள் இன இயலைப் பொறுத்தவரையும் பண்பாட்டைப் பொறுத்தவரையும் இந்தியாவின் பிரிக்க முடியாத அங்கமாகவே இலங்கை விளங்குகிறது) என்று கூறியுள்ளார்.

இதே ஆனந்த குமாரசுவாமி அவர்கள் தூபாராமடகோபாவைப் பற்றிப் பின்வருமாறு கூறுகிறார். "It is a rectangular brick temple in Dravidian style" (திராவிட சிற்ப அமைப்பில் செங்கட்டியினால் அமைக்கப்பட்ட நீண்ட சதுரக் கோயிலே தூபராம் டகோபாவாகும்.)

"இடைக்காலச் சிங்களக் கலைகள்" என்ற நூலில் அவர் இடித்துரைக்கும் உண்மைகள் சிங்கள அறிஞர் தம் உச்சி மீது வைத்து உவந்து போற்றும் இப்பெருமகன் தனது 'இடைக்காலச் சிங்களக் கலைகள்' (Mediaeval Sinhalese Art) என்ற நூலில் அத்தியாயம் ஒன்றில் "In any case it is clear that, according to the legends, the sinhalese cannot be of Pure Aryan blood as the first settlers married either the aborigines, or the women from southern india and there has been a very large amount of Tamil blood introduced at many subsequent periods, (எப்படிப் பார்த்தாலும் புராணக் கதைகளின்படி, சிங்கள மக்கள் முழுக்க ஆரிய மரபினர் அல்லர் என்பதும் முதலிற் குடியேறிய மக்கள், பழங்குடி மக்களையோ தென் இந்தியாவில் இருந்து கொண்டுவந்த பெண்களையோ மணந்தனர் என்பதும் தெளிவாகும். அத்துடன் பின்வந்த காலங்களில் இடையிடையே பெருமளவு தமிழ் இரத்தம் புகுத்தப்பட்டும் வந்துள்ளது.)

### இந்தியாமீது அன்பில்லையெனில் இலங்கைக்கு வாழ்வில்லை

இப்பெருங்கலைஞர் தன் நூலின் மேற்குறித்த அதே அத்தியாயத்தில் மற்றொரு பகுதியில் கூறும் பின்வரும் கருத்தும் சிங்கள மக்களின் ஆழ்ந்த சிந்தனைக்குரியது.

"The arts, however can only be saved in the long run by the people themselves. How are the people to be saved? How shall they be re-energised and re-inspired, how become once more socially constructive. how learn to re-express the national emotion in literature and art? The answer is by love of India there is scarecely any part of sinhalese life or religion or art which is quite comprehensible without reference to India. The Sinhalese themselves are Indians. The greatness of their civilization dates from the wave of Indian influences that reached Ceylon through Asokas missionaries. The air and soil in which the nation has grown and borne good fruit are Indian. How should another soil and atmosphere be suited to it now."

(எவ்வாறாயினும் கலைகளைக் காப்பவர் மக்களே. ஆனால் மக்களைக் காப்பது எப்படி? அவர்களை எவ்வாறு ஊக்கி உயிர் அளிப்பது? மீண்டும் அவர்கள் சமூகத்தில் ஆக்கபூர்வமான செயல்களை ஆற்றச்செய்வது எப்படி? தேசிய உணர்வை இலக்கியத்திலும் கலைகளிலும் புகுத்துவது எங்ஙனம்? இவற்றிற்கெல்லாம் விடை ஒன்றே ஒன்றுதான். அதுதான் இந்தியாமீது

அன்பு செலுத்துவதாகும். இந்தியாவோடு தொடர்புபடுத்தாமல் தனித்தியங்கக்கூடிய சிங்கள வாழ்க்கையோ சமயமோ கலையோ இல்லை யென்றே கூறலாம். சிங்களவர் கூட இந்தியரே. அவர்களது நாகரிகப் பெருமை இந்தியச் செல்வாக்குகளில் இருந்தே பெறப்பட்டதாகும். இது இலங்கைக்கு அசோகன் மூலம் வந்தது. இத்தேசம் வளர்ந்து பயன் கொடுத்த காற்றும் மண்ணும் இந்திய இனத்ததே. இப்பொழுது மட்டும் இதற்கு வேறிடத்து மண்ணும் சூழலும் எவ்விதம் பொருந்தும்.)

**கண்டிய சிங்களவர் யார்?**

மற்றும் தன் நூலில் அத்தியாயம் மூன்றில் பக்கங்கள் 61, 62 (Craftsman) தோற்றத்தைப் பற்றி பின்வருமாறு குறிப்பிடுகிறார்.

"At first sight it seems strange to suppose that many of them (craftsman) were of Indian origin, yet this is a point on which no doubt can be entertained - The craftsman thus from time to time imported from south indian very soon become part and parcel of the Kandyan Sinhalese people & Buddhist by faith - something of the Hindu Dravidian element being lost and Buddhist Aryan element acquired."

(பெரும்பான்மையான சிற்பிகள் இந்தியாவில் இருந்தே தோன்றியவர்கள் என்று கூறும்போது முதலில் அது புதுமையாகவே தோன்றும். எனினும் இவ்வுண்மை பற்றி எதுவித ஐயமும் கொள்ளத் தேவையில்லை. காலத்திற்குக் காலம் தென் இந்தியாவில் இருந்து இறக்குமதி செய்யப்பட்ட சிற்பிகளே பிரிக்க முடியாதளவு கண்டிய சிங்களவராக மாறியதோடு புத்த மதத்தையும் தழுவினர். இதனால் திராவிட இந்துப் பண்பு இழக்கப்பட்டு புத்த ஆரியப் பண்பு ஏற்றுக்கொள்ளப்பட்டது.)

கண்டிய சிற்பிகளின் தோற்றத்தைப் பற்றிய முழு விபரங்களையும் அறிய விரும்புவோர் மேற்குறித்த நூலின் அத்தியாயம் 3ஐ ஊன்றிப் படிக்கின் உண்மைகள் பலவற்றை உணர்வர். விரிவஞ்சி அவற்றை இங்கு விரிக்கவில்லை. எனினும் இறுதியாகத் தன் நூலின் முன்னுரையில் பந்தி 1இல் சிங்களக் கலை பற்றி அவர் கூறும் கருத்தினை இங்கு நினைவுபடுத்தல் சாலவும் பொருத்தமுடையது எனக் கருதுவாம். அவர் கூறுவதாவது

"Sinhalese art is essentially indian but possesses this special interest that is in many ways of an earlier character, and more truly Hindu. though Buddhist in intention - than any indian art surviving on the main land so late as the beginning of the 19th century.

(சிங்களக் கலை அதன் அடிப்படையில் இந்தியக்கலையையே ஒத்திருக்கிறது. அதிலும் குறிப்பாக 19ம் நூற்றாண்டின் தொடக்கம் வரை இந்தியக் கண்டத்தில் நிலவி வரும் மற்றைய இந்தியக் கலைகளைக் காட்டினும் இக்கலைகள் மிகப் பழைமையானதாகவும் புத்த சமய நோக்கை அடிப்படையாகக் கொண்டிருப்பினும் உண்மையில் அவை இந்துமுறைக் கோட்பாட்டையே தழுவி இருக்கின்றன.)

**தமிழனின் பெருமையைத் தரணிக்கு உயர்த்தியவர்**

இவ்விதம் ஆனந்த குமாரசுவாமி அவர்கள் தனது நூல்கள் பலவற்றுள் குறிப்பாக ஈழத்துக் கலைகள் பற்றி, தான் வரைந்த கட்டுரைகளில், நூல்களில் எல்லாம் இந்தியாவுக்கும் இலங்கைக்குமிடையில் உள்ள பிரிக்க முடியாத பிணைப்பை - தமிழரின் தனிச் சிறப்பை சிற்பத்திறனை ஓவியர்களின் ஒப்பிலாத் தன்மையெல்லாம் உள்ளத்தில் ஊற்றெடுக்கும் உணர்ச்சிப் பெருக்கோடு ஆனால் நடுநிலை பிறழாத நிலையில் கூறுகின்ற பொழுது தமிழர்களாகிய நாம் இன்றைய இழிநிலையையும் அன்றைய பெருநிலையையும் நினைந்து ஏக்க முறுவதையும் தவிர்க்க முடியாதன்றோ?

**தாய்மொழிக் கல்வியை நாடினார்**

இவ்விதம் உலக மொழியை பல கற்று உலகம் வியக்கும் முறையில் உலகக் கலைகளை ஆராய்ந்த ஆனந்த குமாரசாமி அவர்கள் எம்மவர் எம் தாய்மொழியை மறந்து ஆங்கில மொழிக்கு அடிமையாவதை அறவே வெறுத்தார் என்பதற்கு அவரின் பின்வரும் சிந்தனையைத் தூண்டும் கருத்துச் சான்றாக அமைகிறது.

"A single generation of English education suffices to break the threads of radiation and to create a non descript and supreficial being deprived of

all roots - a sort of intellectual pariah who does not belong to the east or the west, the past or the future.

(எந்த வித அடிவேரும் அற்ற மேலெழுந்த நிலையில் என்னவென்று குறிப்பிட முடியாத பழமைத் தொடர்பு முற்றாக அறுக்கப்பட்ட மனிதனை ஒரு தலைமுறை ஆங்கிலக் கல்வி உருவாக்கிவிடும். இவ்விதம் தோற்றுவிக்கப்படும் அறிவாளி கிழக்கிற்கோ, மேற்கிற்கோ, பழமைக்கோ வருங்காலத்திற்கோ தேவைப்படாத வெறுத்து ஒதுக்கப்படுபவனாகவே காட்சியளிப்பான்.)

## தன்னைத் தமிழனாக ஏற்கும்படி வேண்டிய தலைமகன்

ஆனந்தக் குமாரசாமி அவர்கள் தன் ஒப்பிலாக் கலை அறிவினால் உலகப் புகழை ஈட்டினாலும் அவர் தன்னை ஓர் இந்தியனாக, குறிப்பாகத் தமிழனாகவே கருதி வாழ்வதில் விடுதல் அறியாவிருப்புக் கொண்டிருந்தார் என்பதற்கு அவரின் பின்வரும் கூற்று தக்கதோர் சான்றாய் அமைகிறது. 1906ஆம் ஆண்டு யூன் மாதத்தில் யாழ்ப்பாண மக்களால் அவருக்கு அளிக்கப்பட்ட வரவேற்பில் அவர் கூறிய உள்ளமுருக்கும் சொற்றொடர்கள் இதோ :

"என்னுடைய பெரு விருப்பம் நீங்கள் என்னை உங்களில் ஒருவனாக ஏற்றுக்கொள்ள வேண்டும் என்பதே. ஆகையால் நீங்கள் என்னை ஒரு தமிழனாகவும் நண்பனாகவும் ஏற்று இருப்பதற்காக உங்களுக்கு எனது நன்றியைத் தெரிவிக்கின்றேன். நான்கு ஆண்டுகளுக்கு முன் நான் இலங்கைக்கு மூன்றாவது முறையாக வந்த பொழுது ஆங்கிலேயனாக வந்தேன். இப்பொழுது நான் இந்தியத் தாயின் புதல்வனாக மறுபிறப்பு எடுத்து ஒரு குழந்தை தன் பெற்றோரிடன் செல்கின்ற மாதிரி உங்களிடம் வந்துள்ளேன். என் வாழ்நாளின் பெரும் பாகத்தை இங்கிலாந்திற் கழித்த போதிலும் இங்கு வந்ததற்குப் பின் எங்கள் பண்பாட்டின் சிறப்பை உணர்ந்துள்ளேன். ஆகையால் எங்களிற் பலர் மேல் நாட்டு நாகரித்தைப் பின்பற்றுவதனால் ஏற்படும் தீமைகளை உணர்ந்து அதை நீக்க என்னால் ஆன முயற்சிகளைச் செய்து வருகிறேன். 30 ஆண்டுகளுக்கு முன் தமிழர் தலைவராக விளங்கிய என் தந்தையாரும் மேல் நாட்டாரைப் போலவே வாழ்ந்து வந்தார்.

அக்காலத்தில் அது ஒரு தேவையாக இருந்திருக்கலாம் அவர் நெடுங்காலம் வாழ்ந்திருந்தால் மேல்நாட்ட நாகரிகத்தைக் கண்மூடித்தனமாகப் பின்பற்றுவதன் பிழைகளை எனது மைத்துனர் திருவாளர் இராமநாதன், அருணாசலம் போல் உணர்ந்து சீர்திருத்த இயக்கத்தில் இறங்கியிருப்பார். ஆகையால் அவருடைய மகன் இச்சீர்திருத்த வேலையைச் செய்து வருவது பொருத்தமே. எனது தாயாரைப் பொறுத்தவரையில் தாம் என் தகப்பனாரை மணந்த தன் பயனாக ஆங்கிலேயருக்கும் தமிழருக்கும் இடையில் நல்லுறவு ஏற்படவேண்டும் என்பதே அவருடைய விருப்பம். நான் இப்போது செய்து வரும் வேலைக்கு அவருடைய முழு வாழ்த்தும் உண்டு. இந்தியாவில் கடந்த 3000 ஆண்டு வரலாற்றை நமது சமயம் மெய் விளக்க நூல், கலைகள் முதலியவற்றை விளக்கும் வரலாற்றை ஆராயும் பொழுது இதில் காணப்படுவதிலும் சிறந்த இலட்சியங்களை வேறெங்கும் காணமுடியாது என்னும் முடிவுக்கு வந்துள்ளேன்."

## எம் கடன் என்ன?

இவ்விதம் இந்தியா நாட்டின் மீதும் தன் தந்தை வழி இனமாம் தமிழ் இனத்தின் மீதும் மாறாத அன்பு பூண்டு "என்னுடைய பெருவிருப்பம் நீங்கள் என்னை உங்களில் ஒருவனாக ஏற்றுக்கொள்ள வேண்டும் என்பதே! ஆகையால் நீங்கள் என்னை ஒரு தமிழனாகவும் நண்பனாகவும் ஏற்றிருப்பதற்காக உங்களுக்கு நன்றியைத் தெரிவிக்கிறேன்" என்று எம்மவரைக் கெஞ்சி - கொஞ்சும் மொழியில் எம் கண்களில் நீர் பெருகும் முறையில் வேண்டுகோள் விடுத்த அப்பெருமகன் இன்று எம்மிடையே இல்லாவிடினும் அவர் நினைவை என்றும் போற்றும் முறையில் அவரை எம்மவர் ஆக்கி, அவர் ஆக்கி அளித்த அரும்பெரும் நூல்களை அருந்தமிழில் மொழிபெயர்த்து எம் இனத்தின் ஈடேற்றத்திற்கும் எம் உயிரனைய மொழியின் வாழ்வுக்கும் வளத்திற்கும் வழி வகுப்போமாக.

தகவல் உதவி

ஜ. சிவகுமார்

# இராசநாயகம், செ. முதலியார் (1870 – 1940)

தென்புலோலியூர் மு. கணபதிப் பிள்ளை வெளியிட்ட 'ஈழ நாட்டின் தமிழ்ச் சுடர் மணிகள்' (1967) எனும் நூலிலிருந்து இக்குறிப்பு தரப்பட்டுள்ளது.

யாழ்ப்பாணத்தைச் சார்ந்த நவாலியூரிலே, அரசாங்கக் கட்ட வேலைத் திணைக் களத்திலே எழுதுவினைஞராகக் கடமையாற்றிக் கொண்டிருந்த செல்லப்பா பிள்ளை என்பாருக்குப் புதல்வராக, 1870ஆம் ஆண்டு ஒற்றோபர் மாதம் 22ஆம் தேதியன்று இவர் தோன்றினார்.

இளமையிலே தமிழையும், ஆங்கிலத்தையும் நன்கு கற்றபின், கொழும்பிலுள்ள அர்ச். தோமாசுக் கல்லூரியிலே சேர்ந்து கல்வி பயின்றார். கல்லூரிப் படிப்பு முடிந்ததும் 1889ஆம் ஆண்டிலே இலங்கை அரசாங்க சேவையில் எழுதுவினைஞராகச் சேர்ந்தார். சேர்ந்தவர், நீதிமன்றங்களிலே பேச்சு மொழிபெயர்ப்பாளராகவே மிகுதியுங் கடமையாற்றிக் கொண்டிருந்தார். இவரது நுண்ணறிவினையும் தொழில் வன்மையையுங் கண்ட அரசினர், 1920ஆம் ஆண்டிலே உயர்நீதிமன்றத்து மூன்றாம் துணைப் பதிவாளராக இவரை நியமித்து, 'முதலியார்' என்னும் சிறப்புப் பட்டத்தையும் இவருக்கு அளித்தனர்.

1923ஆம் ஆண்டு செத்தெம்பர் மாதம் 1ஆம் தேதியன்று இவரை நாட்டாட்சிச் சேவை (Civil Service) பதவிக்கு உயர்த்தி, யாழ்ப்பாணக் கச்சேரியில் அதிகார உத்தியோகத்தருள் ஒருவராகவும் நியமித்தனர். இவர் யாழ்ப்பாணத்திலிருந்தபொழுது நாடகக் கலையினை வளர்ப்பதில் மிகுந்த ஊக்கங் காட்டினார். 1929ஆம் ஆண்டு ஏப்ரல் மாதத்தில் அரசாங்க சேவையிலிருந்து இவர் இளைப்பாறிக் கொண்டார்.

மொழிபெயர்ப்பாளராக நியமிக்கப்பட்ட காலந்தொடங்கி, ஓய்வு வேளைகளிலெல்லாம், முதலியாரவர்கள் இலங்கையின் வரலாற்றாராய்ச்சியிலே ஈடுபட்டிருந்தார்கள். யாழ்ப்பாண வரலாறு பற்றிய ஆராய்ச்சியையே இவர் தமது வாழ்க்கையின் குறிக்கோளாகக் கொண்டிருந்தார். பிற மொழியாளரும் யாழ்ப்பாணத்தின் பழம் பெருமைகளை உணர்ந்து கொள்ளுதல் வேண்டுமெனக் கருதிப் 'பண்டைக்கால யாழ்ப்பாணம்' (Ancient Jaffna) என்ற பெயருடன் சிறந்த வரலற்றாராய்ச்சி நூலொன்றினை ஆங்கிலத்தில் இயற்றினார். 'யாழ்ப்பாண வரலாறு' விரிவாகவும் தெளிவாகவும் அவர்களாலேயே தமிழிலும் எழுதப்பட்டு, இரண்டு பகுதிகளாக வெளியிடப்பட்டுள்ளது. முதலியாரவர்கள் இலங்கையின் பழைய திருக்கோயில்களுள் ஒன்றாகிய 'கதிர்காமம்' பற்றியும் ஒரு நூலினை ஆங்கிலத்தில் எழுதி வெளியிட்டார்கள். முதலியாரவர்கள் அயராதுழைத்துத் தொகுத்து வந்த 'தமிழ்நூற் பெயரகராதி' சிறப்பாகக் குறிப்பிடப்பட வேண்டியதொன்றாகும்.

அவ்வகராதியிலே வரலாற்றுக்கெட்டிய காலந் தொடங்கித் தமிழ் மொழியில் வெளிவந்த நூல்களின் பெயர்கள் - நூலாசிரியர்களின் பெயர்கள் - அந்த நூல்களை வெளியிட்ட அச்சகங்களின் பெயர்கள் - பதிப்பித்தவர்களின் பெயர்கள் - பதிப்பித்த ஆண்டு விவரங்கள் ஆகிய இவை யாவும் நிரன்முறையிலே தொகுக்கப்பட்டிருந்தன. ஏறக்குறைய 35,000 நூல்களைப்பற்றிய விவரங்கள் இந்நூலிலே தொகுக்கப்பட்டிருந்தன எனத் தெரிகின்றது. இங்ஙனமாகத் தொகுக்கப்பட்ட அகராதியானது, சென்னை நூல்நிலையக் கழகத்தாரிடம், அவர்களது வேண்டுகோளின்படி அனுப்பப்பட்டதாக அறியக் கிடக்கின்றது. இதுவரை வெளிவந்ததாகத் தெரியவில்லை.

அரசாங்க சேவையிலிருந்து முதலியாரவர்கள் இளைப்பாறிக் கொண்டபின், இங்கிலாந்துக்குச் சென்று பிரித்தானிய அரும்பொருட் காட்சிச் சாலையில் கிடைத்த பழைய யாழ்ப்பாண வரலாறுகளாகிய கைலாய மாலை, யாழ்ப்பாண வைபவ மாலை ஆகிய இரு நூல்களையும் பார்த்துப் படியெடுத்துக்கொண்டு வந்தார்கள். 'கைலாய மாலை'யின் பதிப்பொன்று முதலியாரவர்கள் முன்னுரையுடன் கூடியதாய், சென்னை செ.வெ. ஜம்புலிங்கம் பிள்ளையவர்களால் வெளியிடப்பட்டுள்ளது. 'யாழ்ப்பாண வைபவமாலை'யானது பல குறிப்புக்களுடன் இலங்கைக் கல்வித் திணைக்களத்தினர் வெளியிட்டு வந்த 'வித்தியா சமாச்சாரப் பத்திரிகை'யிலே தொடர்ந்து வெளியிடப்பட்டு வந்தது. இதனை விரிவான ஆராய்ச்சிக் குறிப்புகளுடன் திரு. குல. சபாநாதன் அவர்கள் (1949) வெளியிட்டுள்ளார்கள். முதலியார் இராசநாயகம் அவர்கள் 'யாழ்ப்பாண வைபவமாலை'யின் ஆங்கிலத்திலும் மொழிபெயர்த்துள்ளார்கள். அது இன்னும் வெளியிடப்படவில்லை. இதன் ஆங்கில மொழிபெயர்ப்பொன்று சி. பிறிற்றோ (C. Britto) அவர்களால் (1899) வெளியிடப்பட்டுள்ளது.

கொழும்பு அரும்பொருட் காட்சிச்சாலை (Colombo Musuem) மேற்பார்வையாளர் குழுவில் முதலியாரவர்களும் ஓர் உறுப்பினராகவிருந்து தமிழ்ப் பகுதி வளர்ச்சிக்காகப் பல தொண்டுகள் புரிந்துகொண்டிருந்தார். வேத்தியல் ஆசியச் சங்கத்தின் (R.A.S.C) உறுப்பினராக விளங்கியும் தமிழர் வரலாற்றாய்ச்சிக்குத் தம்மாலியன்ற சிறப்பு அளித்து வந்தார். இலங்கை வானொலி நிலையத் தமிழ்ப் பிரிவின் ஆலோசனைக் குழுவில் உறுப்பினராக விளங்கி, நிகழ்ச்சிகளைச் செம்மையும் சிறப்பும் சார ஒலிபரப்புவதற்கான வழிவகைகளை ஏற்படுத்தி அமைப்பித்தார்கள். வரலாற்றுத் தொல்லேட்டாராய்ச்சி ஆணைக் கழகத்தின் (Historical Manuecripts Commission) உறுப்பினராகவும் விளங்கி, பழைய இலங்கை மன்னர்களின் தமிழ்க் கடிதங்களைத் தொகுத்துச் செப்பனிட்டு, வெளியிடப்படும் வண்ணம் செய்தவரும் இவரேயாவர்.

இவர் பதிப்பித்த நூல்கள் : 1. கதிரை நாண்மணிமாலை - 1938. 2. Historical Manuscripts Commission - Bulletin. No. 3 Tamil Documents in the Archives - Selected and Translated, 1937.

இவர் இயற்றி வெளியிட்ட நூல்கள் : ஆங்கிலம் : 1. Ancient Jaffna - 1926 2. Katragama 1930. தமிழ் : 1. யாழ்ப்பாணச் சரித்திரம் - 1933. 2. யாழ்ப்பாணச் சரித்திரம் - ஆங்கிலேயர் காலம் - 1934.

தகவல் உதவி

ஜ. சிவகுமார்

# ஸ்ரீ மத். கோ. வடிவேலு செட்டியாரவர்கள் அபிப்பிராயம்



கோ. வடிவேலு செட்டியார்

ஸ்ரீமத் உ.மா. துரைசாமிப்பிள்ளையவர்கள் எழுதிய "திருவருட் பிரகாசவள்ளலாரென்னும் சிதம்பரம் இராமலிங்க சுவாமிகளின் சரித்திரமும், அருட்பா ஆராய்ச்சியும்" என்னும் தலைப்பினையுடைய கையெழுத்துக் காகிதப் பிரதியை யான் முற்றும் படித்துப் பார்த்தேன். இக்காகிதக் கையொழுத்துப் பிரதி வடிவப் புத்தகம் இருபது பகுதியாகப் பிரிக்கப்பட்டு எழுதப்பட்டிருக்கின்றது. இப்புத்தகத்தைப் படிப்பவர்கள் திருவருட் பிரசாச வள்ளலாரென்னும் ஸ்ரீமத். இராமலிங்கசுவாமிகளவர்களது திருவுள்ளக் கிடக்கையை மிக வெளிதாக அறிந்து கொள்ளுதல் கூடும். க்ஷ சுவாமிகளவர்கள் திருவாய் மலர்ந்தருளியுள்ள திருவருட்பாவை ஊன்றிப்படியாது குறை கூறுகின்றவர்க்கு இஃது உய்யு நெறிகாட்டும் ஓர் உத்தம நூலாம் என்பது க்ஷ பிள்ளையவர்கள் பல வருடகாலம் ஆராய்ந் தெடுத்தெழுதியுள்ள அருட்பாக்களின் மேற்கோள்களால் தெள்ளிதின் விளங்குவதாம். க்ஷ பிள்ளையவர்கள் எழுதிய இப்புத்தகத்தை ஊன்றிப் படிப்பவர்கள் சாதி சமயவழக்குப் பேசி வாதிடுவதொழிந்து, எல்லாம் சிவமயமேயென்னும் துணிபுடையவராய், வான்பார்க்கும் பைங்கூழ்போல் ஈசனருளொன்றையே நோக்கியிருப்பரென்பது எனது அபிப்பிராயம். க்ஷ பிள்ளையவர்கள் செவ்விய நடையில் பன்னூலாராய்ச்சி செய்து, தக்க மேற்கோள்களுடன் அருட்பாவின் பொருட் செறிவினை நம்மனோர் கண்டுய்ய எழுதித்தந்த இப்புத்தகமானது தமிழுலகத்தில் என்றும் பூரணச்சந்திரன்போல் விளங்குமாறு எல்லாம் வல்ல இறைவன் அருள் புரிவாராக.

வேதாந்த சங்கம்,
சிந்தாதிரிப்பேட்டை.
இங்ஙனம்
கோ.வ.

குறிப்பு: திருவாளர் உ.மா. துரைசாமிப் பிள்ளை அவர்கள் இயற்றிய சிதம்பரம் 'இராமலிங்க சுவாமிகளின் சரித்திரமும் அருட்பா ஆராய்ச்சியும்' எனும் நூலுக்கு திரு. கோ. வடிவேலு செட்டியாரவர்கள் எழுதிய முன்னுரை.

தகவல் உதவி
கமலாலயன்

# பதிப்புரை

சக்தி வை. கோவிந்தன்

சக்திகாரியாலயம் தமிழ் நாட்டில் தோன்றி, பதினெட்டு வருஷங்களாகின்றன. இந்தப் பதினெட்டு வருஷங்களில் பல நூல்களை வெளியிடும் பாக்கியத்தை அடைந்திருக்கிறது. நூல்களை வெளியிடும் பாக்கியத்தை அடைந்தது மட்டுமல்ல; தமிழ் மக்கள் வானளாவப் புகழும் பாக்கியத்தையும் அடைந்தது.

சக்தி காரியாலயம் தோன்றிய காலம் முதலே தமிழ்ப் புத்தக வெளியீட்டுத் துறையில் பல புதிய முறைகளைப் புரட்சிகரமான முறைகளைப் புகுத்தியது. மலிவான விலையில் அரிய விஷயங்களை, சாதாரணமாக எழுதப்படிக்கத் தெரிந்தவரும் புரிந்து கொள்ளும்படியாகவும் கண்ணைக் கவரும்படியான முறையிலும் வெளியிட்டது. கடந்த ஏழு வருடங்களில் சக்தி காரியாலயம் தன் பணியைத் தொடர்ந்து செய்ய முடியவில்லை. ஆதலால் என் நண்பர்களிடம் (அவர்கள் வெளியீட்டாளர்கள்) 'மலிவு விலையில் புத்தகங்களை வெளியிட்டால் மக்கள் நிறைய புத்தகங்களை வாங்குவார்கள். அப்படி வாங்கும் புத்தகங்களைக் கண்டிப்பாகப் படிப்பார்கள். அப்படி வாங்கும் புத்தகங்களைக் கண்டிப்பாகப் படிப்பார்கள். படிக்கப் படிக்க அதிகப் புத்தகங்கள் தேவைப்படும். நிறையப் புத்தகங்கள் அச்சிட்டால் மலிவு விலையில் விற்கலாம். தொழிலிலும் ஓரளவு லாபம் கிடைக்கும் என்று சொல்லிப் பார்த்தேன். அதற்கு அவர்கள் 'ஆயிரம் பிரதிகள் விற்க இரண்டு வருஷங்கள் ஆகின்றன. தமிழ் மக்கள் புத்தகம் வாங்குவதில் ஆர்வம் கொள்ளவில்லை' என்று சமாதானம் கூறினார்கள். சிலர், 'உங்களுக்குப் புத்தகத்தின் மேல் உள்ள ஆசையால் சொல்லுகிறார்கள். அதிகப் பிரதிகள் அச்சிட்டுக் குறைந்த விலையில் விற்றாலும் புத்தகம் வாங்கும் பழக்கம் உடையவர்கள்தான் வாங்குவார்கள். ஆதலால் முயற்சி வெற்றி அடையாது' என்று சொன்னார்கள். இவர்கள்தான் இப்படி என்றால் தொழில் அதிபர் பலரைக் கண்டேன். அவர்களிடம் சொல்லிப் பார்த்தேன். அவர்களால் நான் சொன்ன விஷயத்தைப் புரிந்து கொள்ளக்கூட முடியவில்லை.

1957ஆம் வருஷம் பிறந்தது. நானே இந்தக் காரியத்தைச் சக்தி காரியாலயம் மூலமாகச் செய்யத் துணிவு கொண்டேன். அந்தத் துணிவில் பிறந்த குழந்தைதான் மகாகவி பாரதியார் கவிதைகள். வெளியிட்ட நாலைந்து நாட்களில் அச்சிட்ட அத்தனை பிரதிகளையும் தமிழ் மக்கள் தங்கள் உரிமையாக்கிக் கொண்டார்கள்.

தமிழ் மக்களின் கவிதை ஆசை அப்படி. உலகத்திலேயே தமிழ்நாடு ஒன்றில்தான் பதினையாயிரம் பிரதிகள் கவிதை நூல்கள் ஐந்தே நாட்களில் விற்க முடியும் என்பதை நினைக்கும் பொழுது என் உடம்பு புல்லரிக்கிறது. இதை எழுதும்போதுகூட ஒரு தமிழ் மகன் பாரதியார் கவிதை எப்பொழுது வரும் என்று கேட்கிறார். இரண்டாம் பதிப்புப் பற்றித்தான்.

மகாகவி பாரதியார் கவிதைகள் வெளிவந்ததும் என் பதிப்பாள நண்பர் ஒருவர் 'மகாகவி பாரதியார் கவிதை'களில் மக்களுக்கு ரொம்பவும் பிரியம். ஆதலால் உடனே விற்றுத் தீர்ந்தது. குறள் அப்படி விற்காது. வை.கோ.வின் கையைக் கடிக்கப் போகிறது' என்று சொன்னாராம்.

குறள் வந்துவிட்டது. 15000 பிரதிகள்தான் அச்சிட்டிருக்கிறோம். 17000 பிரதிகளுக்கு அச்சிடும் முன்பாகவே பதிவு செய்து கொண்டிருக்கிறார்கள் தமிழ் மக்கள்.

தமிழ் மக்களின் ஆதரவு இருக்கும்பொழுது, 'உச்சிமீது வான் இடிந்து வீழுகின்ற போதினும் அச்சமில்லை, அச்சமில்லை அச்சமென்பதில்லையே' என்று நிமிர்ந்து நிற்காமல் நான் வேறு என்ன செய்ய முடியும்.

உலகத்துக்கு அறிவு வழங்கிய ஒப்பற்ற தமிழ் மகன் திருவள்ளுவரின் திருக்குறள் உங்கள் கையில் இருக்கிறது. இந்த அரிய நூல் உங்கள் கையில் இருப்பதற்கு எத்தனை பேர் உதவியிருக்கிறார்கள் தெரியுமா?

இந்த நூலை வெளியிடுவதில் நாங்கள் கேட்கும்போதெல்லாம் யோசனைகள் சொல்லிய வித்வான் திரு. மு. சண்முகம்பிள்ளை அவர்களை நான் மறக்க முடியுமா? அவருக்கு என் நன்றி.

மற்றும் இரவு, பகல், மழை, வெய்யில் - இன்புளுயன்ஸாவையும் 'தூ' எனத் தள்ளிவிட்டு குறள் வேலையே குறியாக இருந்த என் நண்பர் சு.வீர. வீரப்பன் அவர்களுக்கு நன்றி தெரிவிக்க வேண்டுமா? காரியம் செய்த பெருமையில் அவருக்கும் பங்கு உண்டல்லவா! ஆதலால் நான் நன்றி தெரிவிக்க வேண்டியதில்லை.

சிறிது காலத்தில் இந்த நூலை அச்சிட்டுக் கொடுத்த 'சுதேசமித்திரன்' காரியாலயத்தாருக்கு நன்றி; நன்றி.

சென்னை - 6
3. 7. 57
வை. கோவிந்தன்
உரிமையாளன்: சக்தி காரியாலயம்

தகவல் உதவி
கமலாலயன்

# பதிப்புரை

## ப.லெட்சுமணன்

## ப. சிதம்பரம்

"ஆசைபற்றி"ச் சில காரியங்கள் செய்வதுண்டு. அவற்றுள் ஒன்று 'இலக்கியச் சிந்தனை' அமைப்பு. இந்த அமைப்பைச் செயல்படுத்துவதில் இந்தச் சிரமம் இருந்தது. அந்த இடர்ப்பாடு இருந்தது என்றெல்லாம் சொல்ல முடியாது. ஏனெனில், எந்தவிதமான சிரமமும் இல்லை என்பதுதான் உண்மை. ஐம்பது பேர் சேர்ந்து செய்தால் இன்னும் சிறப்பாக இருக்கும். ஐம்பது பேரைத் தேடி அரவணைத்துச் செயல்படும் அவகாசம் இல்லை. ஆகவே நாங்கள் இருவரும், சில நண்பர்களின் குறைவற்ற உதவியுடன், அமைப்பாளராக இருந்து வருகிறோம்.

சம்பிரதாயமாக எழுதும் பதிப்புரையாக இருப்பின் இத்துடன் முடித்துக் கொள்ளலாம். ஆனால் சில விஷயங்களைச் சொல்ல வேண்டியிருக்கிறது.

மனிதர்கள் கூடுவது, கூடிப் பேசுவது எல்லாம் அபிப்பிராயங்களை உருவாக்குவதற்கேயாகும். அபிப்பிராயங்களின் எண்ணிக்கையும் அதிகரிக்கு வேண்டும். தரமும் உயர வேண்டும். ("இது என்னுடைய அபிப்பிராயம், எடுத்துக் கொள் அல்லது தள்ளிவிடு" என்ற வகை அபிப்பிராயங்களை இங்கு குறிப்பிடவில்லை. அவை அபிப்பிராயங்கள் அல்ல, அகங்காரத் தெறிப்புக்கள்; பலவீனத்தின் பிரதிபலிப்பு நான்கு பேர் சேரும் இடத்தில் நான்கு கருத்துக்கள் இருக்கலாம். தங்களுடன் கொண்டு வந்த கருத்துக்களில் சிலர் மேலும் உறுதியடையலாம். சில கருத்துக்கள் மாறும், சில கைவிடப்படும். யாருக்குமே அதுவரை தோன்றாத கருத்துக்கள், இரண்டு அபிப்பிராயங்களின் மோதலினால், தோன்றலாம்.

இலக்கியக் கூட்டங்களின் பொறுப்பு கொஞ்சம் அதிகமான பொறுப்பு. இக்கூட்டங்களுக்கு வருபவர்கள் அறிவு ஜீவிகள். ஆனால் அபிப்பிராயங்களை உருவாக்கவேண்டிய இலக்கியக் கூட்டங்கள் அபிப்பிராய பேதங்களை உருவாக்க வேண்டிய இலக்கியக் கூட்டங்கள் அபிப்பிராய பேதங்களைத் தாம் வளர்த்து வருகின்றன. பிரிந்து இருப்பதே பேதம்; சேரும் இடத்திலும் பேதமா? மாறுபட்ட ஓர் அமைப்பைக் காண வேண்டும் என்று எங்களுக்குத் தோன்றியது.

ஓர் எழுத்தாளன் மற்றொரு சமகால எழுத்தாளனைப் பாராட்ட வேண்டும் என்று திருபி.எஸ்ராமய்யா சொன்ன ஒரு சொல்,

இன்று மாதச் சிறுகதைகளின் மதிப்புரையாக, நகைச்சுவை கலந்த விமர்சனமாக, இதயம் கனிந்த பாராட்டாக, இலக்கியச் சிந்தனையாக வளர்ந்திருக்கிறது.

தமிழ் எழுத்தாளர் என்றால் தமிழ் எழுத்தையே நம்பியவர் என்ற நிலை மாறி வருகிறது. இன்னும் அப்படி நம்பி வாழ்பவரைப் பற்றிச் சொல்ல நெஞ்சு பொருமுகிறது. தமிழ் எழுத்தாளர்களைப் பற்றி யாராவது ஒரு சமூக பொருளாதார ஆய்வு செய்ய முற்பட்டால் அதற்கு ஒரு முன்னிலை அறிக்கை தயாரிக்கத் தேவையான விஷயஞானம் எங்களுக்கு உண்டு. தமிழ்நாட்டின் அறிவு ஜீவிகள் குறிப்பாக எழுத்தாளர்கள், ஆசிரியர்கள் வாழும் இடங்களைத் தேடிப் போய்ப் பார்த்தால் வாழ்க்கையோடு வலக்கையால் போராடும் அவர்கள் இடக்கை மேல் தலை வைத்து உறங்கும் உண்மை தெரியும். சுதந்திரமும் இல்லை. சுகவாசமும் இல்லை.

மன்னர்கள் இல்லாத காலத்தில் மக்கள்தாம் கலைஞர்களின் புரவலர். எண்ணச் சிலிர்ப்பினை உணர இயலாத மேட்டுக் குடியினரின் உதவிச் சிந்தையோ, அரசின் நமத்துப் போன விதிகளுக்குட்பட்ட சலுகையோ இலக்கியம் வளர்க்கப் போதாது. அப்படி வளரும் இலக்கியத்தில் மேட்டுக்குடி மனப்பான்மை அல்லது அரசியல் அடிமைத்தனம் தான் மிகுந்து காணப்படும். 18, 19வது நூற்றாண்டுகளின் சுதந்திர உணர்வைப் பற்றிப் பேசுபவர்கள், யாரையோ அல்லது எதையோ சார்ந்தே காரியங்கள் செய்வது என்பதைத் தவிர்க்க வேண்டும். தரமான இலக்கியம் வளர வேண்டுமெனில் மனிதர்கள் சாதாரண மனிதர்கள் கூட்டம் கூட்டமாக இயங்க வேண்டும். இயக்கம் நடத்த வேண்டும்.

இந்தச் சிறுகதைத் தொகுதியைப் பிரசுரிப்பதற்கு ஒரு நியாய வாதம் வேண்டுமல்லவா? யாரோ ஒரு தனி மனிதனின் வாழ்க்கை மதிப்புகள் இந்நூலில் தூக்கலாக நின்று உறுத்தா. இதில் இடம் பெற்றுள்ள கதைகள், அவற்றின் ஆசிரியர்களின் வாழ்க்கை மதிப்புகளையும், அவற்றைத் தேர்ந்தெடுத்தவர்களின் வாழ்க்கை மதிப்புகளையும் பிரதிபலிக்கின்றன. வாழ்க்கையைச் சில கணங்கள் உறைந்துவிடச் செய்து, அந்த உறைநிலையைக் கண்ணுக்குப் புலப்படும்படி உணர்வைத் தொடும்படிச் சித்தரிக்கமுடியுமானால் எப்படியிருக்குமோ, அப்படி ஓர் அனுபவம் இந்த நூலை முழுக்கப் படித்து முடித்த பிறகு ஏற்படும். இது புதுமையோ என்னவோ தெரியாது. இது தான் இந்த நூலுக்கான நியாயவாதம்.

பின்வரும் இலக்கியத்துக்கு இலக்கணம் வகுப்பதுபோல் முன்னுரை எழுதியுள்ள திரு. ம. அனந்தநாராயணன், மேலுறை வண்ணச் சித்திரத்தை வரைந்த ஓவியர் திரு.நா. கிருஷ்ணமூர்த்தி; விரும்பி வேலை செய்த மெட்ரோபாலிடன் அச்சகத்தின் உரிமையாளர், தொழிலாளர், சிறிய பெரிய உதவிகளை மகிழ்ச்சியுடன் செய்த நண்பர்கள், இந்நூலை வாங்கிப் படிக்கும் வாசகர்கள் எல்லாருக்கும் எங்கள் அன்பு நிறைந்த நன்றி.

தகவல் உதவி
கமலாலயன்

தமிழ்ச் சூழலில் மறக்கப்பட்ட ஆளுமைகளையும் தொகுக்கப்படாத ஆவணங்களையும் கவனப்படுத்தப்படாத பனுவல்களின் பரிமாணங்களையும் ஆவணப்படுத்தும் முயற்சியே 'அறியப்படாத தமிழ் உலகம்' எனும் மலர். இம்மலர் தமிழியல் வரலாற்றின் மௌனங்களின் மீதான தர்க்கபூர்வமான விமர்சனமாகவும் புதிய வரலாறெழுதியலுக்கான ஆவணமாகவும் அமைந்துள்ளது.





9 789381 908068 01